# பாவேந்தர் பாரதிதாசன்
# நூற்றாண்டு விழா மலர் 1991



பாரதிதாசன் பல்கலைக்கழகம்
திருச்சிராப்பள்ளி

# பாவேந்தர் பாரதிதாசன்
# நூற்றாண்டு விழா மலர் 1991






பாரதிதாசன் பல்கலைக்கழகம்
திருச்சிராப்பள்ளி

# பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி.

## பாரதிதாசன் நூற்றாண்டு விழா வழிப்படுத்தும் குழு

*தலைவர்*

**முனைவர் ச. முத்துக்குமரன்**
*(துணைவேந்தர்)*

*உறுப்பினர்கள்*

**முனைவர் சி. பாலசுப்பிரமணியன்**
*(துணைவேந்தர், தமிழ்ப் பல்கலைக்கழகம்)*

**முனைவர் ஔவை நடராசன்**
*(அரசு செயலர், தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத்துறை)*

**முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம்**
*(திருச்சி)*

**கவிஞர் பா. மன்னர்மன்னன்**
*(புதுவை)*

**திரு. வி.ஆர். தீனதயாளு**
*(சென்னை)*

**முனைவர் தி. முத்துக்கண்ணப்பர்**
*(சென்னை)*

**முனைவர் (திருமதி) பிரேமா நந்தகுமார்**
*(திருவரங்கம்)*

**முனைவர் கா. செல்லப்பன்**
*(ஆங்கிலத் துறைத் தலைவர், பாரதிதாசன் பல்கலைக்கழகம்)*

**திரு. இரா. முத்துக்குமாரசாமி**
*(சென்னை)*

**முனைவர் கோ. சத்தியசீலன்**
*(முதல்வர், உருமு தனலட்சுமி கல்லூரி, திருச்சி)*

*உறுப்பினர்—செயலர்*

**முனைவர் மா. இராமலிங்கம்** *(எழில்முதல்வன்)*
தமிழியல் துறைத் தலைவர், பாரதிதாசன் பல்கலைக்கழகம்.

# மலர் வெளியீட்டுக் குழு

தலைவர்

**முனைவர் ச. முத்துக்குமரன்**
துணைவேந்தர்

அமைப்பாளர்

**பேராசிரியர் தி.சி. சண்முகசுந்தரம்**
பதிவாளர்

பதிப்பாசிரியர்

**முனைவர் மா. இராமலிங்கம்**
தமிழியல் துறைத் தலைவர்

உதவியாளர்

**முனைவர் அ. ஆலிஸ்**
விரிவுரையாளர், தமிழியல் துறை.

# பொருளடக்கம்

## ☐ திறனாய்வுக் கட்டுரைகள்

☐ **பிறபொருள் குறித்த கட்டுரைகள்**

## ☐ கவிதைகள்

**ஓவியர்கள்**

திரு. பி. பெருமாள், திரு . கே. சங்கரன், திரு. சு. முருகேசன், திரு. சீ. அரங்கராசன், திரு. பா.இராமன், திரு. ஆர். வரதராசன், திரு. ஏ. இராசேந்திரன், திரு. சு. கௌ. வித்யாசங்கர் ஸ்தபதி, திரு. ந. மனோகரன் ஆகியோர்.

**கட்டுரைத் தலைப்புக்களை வரைந்தவர்**

திரு. தனராசு, ஓவியக்கல்லூரி மாணவர், ஓவியக்கல்லூரி, கும்பகோணம்.

# முன்னுரை



முனைவர் ச. முத்துக்குமரன்
துணைவேந்தர்

கடந்த ஓராண்டுக் காலமாகத் தமிழ் நாட்டின் சிற்றூர் பேரூர்களிலெல்லாம் பாவேந்தர் பாரதிதாசனின் நூற்றாண்டு விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருவதை நாமறிவோம். கவிஞரது நினைவைப் போற்றும் வகையில் நாட்டிலுள்ள பல்வேறு இலக்கிய அமைப்புகள், பொதுமன்றங்கள், நிறுவனங்கள், கல்வி நிலையங்கள் விழாக்கள் எடுத்தன; கருத்தரங்குகளை நடத்தின; சிறப்பு நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்தன.

கவிஞரின் திருப்பெயரால் அமைந்த பல்கலைக்கழகத்தில் நூற்றாண்டு விழா சிறப்புற நடக்க வேண்டும் என்னும் அவாவில் தொடக்கத்திலேயே முத்தமிழ்க் காவலர் திரு. கி.ஆ.பெ. விசுவநாதம் உள்ளிட்ட பன்னிருவர் கொண்ட ஒரு வழிப்படுத்தும் குழு அமைக்கப்பட்டது. தமிழியல்துறைத் தலைவர் முனைவர் மா. இராமலிங்கம் (எழில் முதல்வன்) உறுப்பினர்-செயலராக இருந்து செயல்பட்டார். தமிழக அரசு பல்கலைக் கழகத்தோடு இணைந்து நூற்றாண்டுத் தொடக்க விழாவைப் பல்கலைக்கழக வளாகத்தில் தொடங்கிவைத்தது குறிப்பிடத்தக்கதாகும்.

விழாவின் சிறப்பு நிகழ்ச்சியாகப் பல்கலைக்கழக வளாகத்தில் வெண்கலத்தாலான பாவேந்தரின் திருஉருவச்சிலை தமிழக அரசின் முன்னாள் முதல்வர் முத்தமிழ் அறிஞர் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. முன்னாள் கல்வி அமைச்சர் மாண்புமிகு க. அன்பழகன் அவர்கள் தலைமையேற்றார்கள். அந்நிகழ்ச்சியில் கவிஞர் பலருக்கு விழாவரங்கில் தமிழக அரசு ‘பாவேந்தர் விருது’ வழங்கிச் சிறப்புச் செய்தது.






திரு. வே. கார்த்திகேயன்
ஆளுநரின் ஆலோசகர்

## வாழ்த்துச் செய்தி

தமிழ்ச் சமுதாயம் விழிப்படைய புதுமையான, புரட்சியான கருத்துக்களை எளிய, இனிய அதே நேரத்தில் ஆற்றல் மிக்க சொற்களால் அழகுறப் பாடியவர் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன். அதனால்தான் அவரது பாடல்கள் மக்கள் நெஞ்சங்களில் இடம் பெற்று, இறவாத் தன்மையுடன் விளங்குகின்றன.

பாரதிதாசன் பல்கலைக்கழகம், பாவேந்தரின் நினைவைப் பசுமையாகப் போற்றும் வகையில், நூற்றாண்டு நினைவு மலர் ஒன்று வெளிக் கொணர்வது அறிந்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன். மலர் கருத்துப் பேழையாக விளங்கிட எனது நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை
*28-2-1991*

வே. கார்த்திகேயன்
ஆளுநரின் ஆலோசகர்





**முனைவர் மு. தமிழ்க்குடிமகன்**
சட்டப்பேரவைத் தலைவர்
தமிழ்நாடு சட்டமன்றப் பேரவை

## வாழ்த்துச் செய்தி

தன் உணர்வாலும், ஒளிமிக்க கவிதைகளாலும் நல்ல தமிழ் நெஞ்சங்களைத் தன்பால் ஈர்த்து நிற்கும் பாவேந்தர்க்கு நூற்றாண்டு விழா கொண்டாடப்படும் இந்நேரத்தில் அவர் பெயரால் அமைந்த பாரதிதாசன் பல்கலைக்கழகம் சிறந்த கட்டுரைகளைத் தொகுத்து மலர் ஒன்றினை வெளியிடவிருப்பது காலத்தால் செய்யும் பணியாகும். எத்தனையோ காலமாகியும் பாவேந்தரின் பல்வேறு வகையான சிறப்புக் கூறுகள் இன்னும் எல்லாத் தமிழ் மக்களுக்கும் உணர்த்தப்படவில்லையோ எனும் ஆதங்கம் உள்ளது. அந்த ஆதங்கத்தைப் போக்கவும், தமிழக மக்களெல்லாம் பாவேந்தரை நெஞ்சில் தாங்கிப் போற்றவும் முயற்சிகளை மேற்கொள்ளும் பல்கலைக்கழகத்தையும் குறிப்பாகத் தமிழ்த்துறையையும் பாராட்டி வாழ்த்துகின்றேன்.

பாவேந்தர்க்கு விழா எடுத்து அவரது நூல்களில் நயம் காணுவது ஒன்றே பணி என்று அமைந்துவிடாமல் எல்லார்க்கும் எல்லாம் என்று இருப்பதான இடம் நோக்கி இந்த வையம் நகரவும் பாவேந்தருடைய கொள்கைகளும், கோட்பாடுகளும் வலுவாகச் செயற்படுத்தப்படவும் உரிய முயற்சிகளை எடுக்க வேண்டுகின்றேன்.

**மு. தமிழ்க்குடிமகன்**
சட்டப்பேரவைத் தலைவர்
தமிழ்நாடு சட்டமன்றப் பேரவை

சென்னை.
*1-8-1990*

# வாழ்த்துச் செய்தி



**பேராசிரியர் க. அன்பழகன்**
*முன்னைக் கல்வி அமைச்சர்*
*தமிழக அரசு*

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற புரட்சிக் கவிஞர் பாவேந்தர் அவர்களின் நூற்றாண்டு விழாவினைச் சீரோங்க நடத்திவரும் பாரதிதாசன் பல்கலைக்கழகம், நூற்றாண்டு விழா மலர் ஒன்று வெளியிடவிருப்பது விழைதகு கடமையாகும்.

புதுவை மண்ணில் வாழ்ந்து — பிரெஞ்சு நாடு வழங்கிய புதிய சிந்தனையில் தோர்ந்து, புதுமை எண்ணங்கள் மலரும் சோலையாகத் திகழ்ந்த விடுதலைக் கவிஞர் பாரதியாருடன் பழகி, அவரது பாராட்டையும் பெற்றுக் கவிதையுலகில் மறுமலர்ச்சி விளைவித்த தனிப்பெருமை வாய்ந்த கவிஞர் பாவேந்தர்.

கனகசுப்புரத்தினமாகக் கவிதை எழுதத் தலைப்பட்டு, பக்தியுணர்விலும் தேசிய—காந்திய ஆர்வத்திலும் கவிதை பலபடைத்து, அது வீழ்ச்சியுற்ற தமிழ் மக்களுக்கு எழுச்சியூட்டுவதற்கு ஏற்றவை அல்ல என்று தெளிந்து, மக்களை எண்ணி மக்களுக் காகவே கவிதை இயற்ற உறுதி மேற்கொண்ட தனிச் சிறப்புடையவர் பாவேந்தர்.

மக்களை எண்ண முற்பட்ட கவிஞருக்கு அவர்களை வாழ்விக்கவும், அவர்தம் எண்ணப்போக்கில் தகுந்த மாற்றம் விளைவித்திடவும் ஏற்புடைய கொள்கை தந்தை பெரியாரின் தன்மானப் பகுத்தறிவு இயக்கக் கொள்கைகளே என்னும் தெளிவும் துணிவும் பிறந்தது.

உணர்ந்த உண்மையை உலகோர் உணரச் சொல்லும் வல்லமை வாய்ந்தவராதலின் பகுத்தறிவுச் சிந்தனையைப் பலபட விவரித்திடுவதும், மக்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டுவதும், தமிழுணர்வைத் தழைக்க வைப்பதுமே அவரது கவிதைத் தொண்டின் குறிக்கோள் ஆயிற்று.

பயனிலாப் பழமையைப் பாராட்டுவதை நிறுத்தி அறிவுக்கு மதிப்பளிக்கும் புதுமையைப் பாடுவாரானார். சமுதாயக் கேட்டுக்கு ஏதுவான சாதி வேற்றுமையை, மதவழிப் பகைமையை, மத மூடநம்பிக்கைகளை, தெய்வத்தின் பெயரில் வளர்க்கப் பட்ட முறைகேடுகளைக் கண்டனம் செய்யவும் புதியதோர் உலகம் படைக்க, பொதுவுடைமை நெறி மலர, மானுடம் உரிமை வாழ்வு பெற, பெண்ணுரிமை ஏற்கப்பட அவற்றின் சிறப்பையும் பயனையும் விளக்கிட முனைந்தார். 'பாரதிதாசன் கவிதைகள்' முதன் முதலாக வெளிவந்தபோதே அவரது கவிதையின் அருமையையும் கருத்தின் வலிமையையும் நாடறிந்தது எனலாம். அதுமுதல் அவரது கவிதைகள், கருத்தூட்டும் கட்டுரைகள், நாடகங்கள், நகைச்சுவைக் குறிப்புக்கள் யாவும் மக்களின் வரவேற்பைப் பெற்றன. அவரைப் புரட்சிக் கவிஞர் என நாடு போற்றியது.

பாவேந்தரின் கருத்துக்களை ஏற்காதாரும் அவரது புலமையை வியக்கலானார்கள். முதுபெரும் புலவர்கள் பலர், முதலில் எதிர்ப்புத் தெரிவிக்கும் நோக்கினராயினும் பின்னர் வளைந்தனர், வரவேற்றனர்.

தமிழுணர்வு தழைத்து ஓங்கியது!
பிறமொழி மேலாண்மை தகர்ந்தது!
பெண்ணடிமை நிலை மாற்றத்துக்கு வழி பிறந்தது!
சாதியின் ஆதிக்கப் பிடி தளர்ந்தது!
சமயவெறி வழிவிட சன்மார்க்கம் பேசும்நிலை வளர்ந்தது!
மூட நம்பிக்கையின் முடை நாற்றம் குறைந்தது!
தொழிலாளியின் உரிமைக்குரல் வலிவு பெற்றது!

வடலூர் வள்ளலாரும் — பாரதியாரும் இறைப்பற்று உணர்வுடனேயே தொடங்கி வைத்த சீர்திருத்தம், பாவேந்தரின் பகுத்தறிவுப் பாட்டையில் முழுமை பெற்றது. இயற்கையின் எழிலைக் கற்பனை நலஞ்சிறக்கப் பாடினார் 'அழகின் சிரிப்பு' என்னுந் தலைப்பில். அதில் காணப்படும் வருணனையும், உவமைகளும் வேறொரு கவிதையில் காண்பது அரிது.

தாய்மொழியாம் தமிழை, அதன் சிறப்பை, அமிழ்து அமிழ்து எனத் தொடர்ந்து உரைத்தாலே அமிழ்தும் தமிழாகும் அருமையை, அது நம்முயிர்ப் பொருளாவதை, உயிரினும் மேலாவதை உணர்வில் கலந்திட வைத்தார். என்றுமுளதென்தமிழை இயம்பி, ஏற்றிப்போற்றி இசை கொண்ட பாவலராவார் பலராயினும், தமிழரின் உயிராவதை உணர்த்தியவர், அறிவினில் உறைவதைத் தெளிவாக்கியவர் பாவேந்தர். அவரது மொழிப் பற்று — பிறவகைப் பற்று எவற்றினும் மேலோங்கி நிற்பதைக் காணலாம்.

எம்முள்ளும் ஒரு பாவேந்தர் உண்டென்று, இன உணர்வுள்ள கவிஞர்களெல்லாம் பெருமை கொள்ளும் பெருஞ்சிறப்புக்குரியவர் பாவேந்தர். அவரைப் பெற்றதால் நாம் பெற்ற பேறு விளங்க 'மலர்' — அறிவு மணம் பரப்புவதாக விளங்கட்டும் என விழைகிறேன். பாவேந்தர் புகழ் எந்நாளும் நிலைக்கட்டும்! அவர் எண்ணம் ஈடேறும் நாள் விரையட்டும்!

தமிழ் மொழியுந் தமிழினமும் வாழவைக்கும் நோக்கில்
அமிழ்த மொழிக் கவிதைமழை பொழிந்திட்ட கொண்டல்
பகுத்தறிவுச் சிந்தனையால் ''ஏறு! நீ! முன்னேறு''! என்றுரைத்த
அறிவுலக ஏந்தல் பாவேந்தர் புகழ் நீடு வாழ்க!
என வாழ்த்துரைக்கின்றேன்.
இன மொழி வாழ்விற்கும் முன்னேற்றத்துக்கும் பணிபுரியப்
பாவேந்தர் புகழ் போற்றும் இந்நாளில்
உறுதி கொள்வோம்! சூளுரைப்போம்!
செயற்படுவோம்! வெற்றி காண்போம்!
என உமை வேண்டுகின்றேன்! வணக்கம்.

க. அன்பழகன்
முன்னைக் கல்வி அமைச்சர்
தமிழக அரசு.

*சென்னை*
***16-1-1991***



# வாழ்த்து



திருமுருக. கிருபானந்த வாரியார்

*(நேரிசை வெண்பா)*

பாவேந்தர் பார்புகழும் பாரதி தாசனார்
மூவேந்தர் போற்றுமுயர் மூதறிஞர்—நாவேந்தும்
நல்லநூற் றாண்டுவிழா நானிலத்தில் ஓங்கியருட்
செல்வமுடன் வாழி செழித்து.

—திருமுருக கிருபானந்த வாரியார்

தருமபுரி
*6-4-1990*

# നിങ്ങൾക്ക്
# നഷ്ടങ്ങൾ

# புத்துயிர் அளித்த புரட்சிக் கவிஞர்

- முல்லை முத்தையா

* 'பாவேந்தர் பாரதிதாசன் நூற்றாண்டு விழாக் காலம்' என்னும் செய்தி எங்கும் பரவுகிறது. தமிழ் உள்ளங்கள் பூரிக்கின்றன.

* இத்தகைய புகழ் பாரதிக்குப்பின் எந்தக் கவிஞருக்கும் உண்டோ?

* பாரதிதாசனாக - புரட்சிக் கவிஞராக வாழ்ந்தபோது, அவருடன் நெருங்கிப் பழகியவர்கள், சொற்பொழிவைச் செவிமடுத்தவர்கள், தங்கள் நூல்களுக்கு அணிந்துரை பெற்றவர்கள், கவியரங்கை ரசித்தவர்கள், சில காலம் சீடர்களாக இருந்தவர்கள் அது ஒரு 'பொற்காலம்' என்று களிப்படைகின்றனர்.

* இப்பொழுது உச்சியில் பரந்து விரிந்துள்ள இப்புகழ்க் கொடி, இப்படிப் பட்டொளி வீசிப் பறக்கும் என எவரும் எண்ணிக் கூட பார்த்திருக்க மாட்டார்கள்.

* பாவேந்தரோ அன்றும் சரி, புகழ் சேர்ந்த பின்னரும் கூட அதைப் பொருட்படுத்தியதே இல்லை. அதேபோல, எதிர்ப்பு அலைகள் எழுந்தபோதும், இலட்சியம் செய்ததில்லை. தொடர்ந்து எழுதுவதிலேயே கவனம் செலுத்தினார். அதையே தம் குறிக்கோளாகக் கொண்டு இயங்கினார்.

* 39ஆண்டுகளுக்குமுன் ரங்கூனில் நான் இருந்தபோது எட்டணா விலையுள்ள "பாரதிதாசன் கவிதைகள்" என்னும் சிறு நூலைப் படித்தேன். 'சஞ்சீவி பர்வதத்தின் சாரலி'ல்

> வாழ்கின்றார் முப்பத்து முக்கோடி மக்கள் என்றால்
> சூழ்கின்ற பேதமும் அந்தத் தொகை இருக்கும்.
> ஆகையால் எல்லாரும் அங்கே தனித்தனிதான்
> . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
> பேதம் வளர்க்கப் பெரும் பெரும் புராணங்கள்
> சாதிச் சண்டை வளர்க்கத்தக்க இதிகாசங்கள்!

இந்த வரிகள் முதலில் என்னை ஈர்த்தன!

பாவேந்தர் நூல்களை மட்டுமே வெளியிடுவதற்கென 'முல்லைப்பதிப்பக'த்தை 1944-இல் தொடங்கி, பளிங்குப் படிமங்களாக எழில் மிகு பதிப்புகளாக (மன்னர் மன்னன் புகழ்ந்து கூறியது போல்) வெளியிட்டேன்.

பாவேந்தரைக் காப்பாளராகக் கொண்டு 'முல்லை' மாத இதழை வெளிக் கொணர்ந்தேன்.

இராமலிங்கம் பிள்ளைக்குத் தேசிய முத்திரையோடு தேசியவாதிகளின் ஆதரவும் கிடைத்தது. தேசிகவிநாயகம் பிள்ளைக்குப் பழைய பண்பாட்டிலிருந்து விலகிச் செல்ல விரும்பாத மிதவாதிகளின் ஆதரவு கிடைத்தது.

ச.து. சுப்பிரமணிய யோகியாருக்கு இலக்கிய நயத்தை விரும்பிய ஒரு சிலரின் ஆதரவு இருந்தது.

ஏனைய மூன்று கவிஞர்களும் அடியெடுத்து வைக்கத் துணியாத புதிய துறையில் பாரதிதாசன் துணிந்து சென்றார். அதனால், அவருக்கு நாத்திகக் கவிஞர், பிரசாரக் கவிஞர், சுயமரியாதைக் கவிஞர் என்று பட்டம் சூட்டி எதிர்ப்புத் தெரிவித்தனர். ஆனாலும், அவர் உறுதி தளரவில்லை.

இளைஞர்கள், பகுத்தறிவுக் கொள்கையில் பற்றுள்ளோர் ஏராளமானவர்கள் பாரதிதாசனைப் பின்பற்றத் தொடங்கினர்.

அந்தச் சமயம், திரு. சின்ன அண்ணாமலை தமிழ்ப் பண்ணை மூலமாக நாமக்கல் கவிஞரின் நூல்களை வெளியிட்டுக் கொண்டிருந்தார்.

திரு. அ.வெ.நடராஜன் புதுமைப் பதிப்பகத்தின் மூலம் கவிமணியின் நூல்களை வெளியிட்டார்.

திரு. வி.ஆர்.எம்.செட்டியார் ஸ்டார் பிரசுரத்தின் மூலம் ச.து.சு. யோகியாரின் நூல்களை வெளியிட்டார். அந்த நான்கு கவிஞரின் நூல்களையும் வெளியிட்டோர் செட்டிநாட்டவரே! மற்றும் சிலர் பாரதிதாசனை எந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தனரோ அப்படியே என்னையும் பார்க்கத் தொடங்கினர்.

பாரதிதாசனைப் பின்பற்றிப் பாடுவோர் தொகை பாரதிதாசன் பரம்பரை என்ற பெயரில் உருவாகத் தொடங்கி வளர்ந்து வருகிறது.

பாரதியாருக்குப் பிறகு வாழ்ந்த கவிஞர்களில் பாரதிதாசனுக்கு உண்டான பெருமையும் சிறப்பும் வேறு எந்தக் கவிஞருக்கும் ஏற்படவில்லை. தம் வாழ்நாளிலேயே அந்தப் புகழைக் கண்டவர் பாரதிதாசன்.

அவர் மறைந்த பிறகும் அந்தப் புகழ் தழைத்து ஓங்கி, ஆண்டுதோறும் அரசு விழா நடத்தி, பரிசுகளும் விருதுகளும் வழங்கி, கௌரவிக்கக்கூடிய நிலை உண்டாகி இருப்பதைக் காண தமிழ் நெஞ்சங்கள் எல்லாம் உவகை கொள்ளுகின்றன.

பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை 1945இல் எனக்கு எழுதிய கடிதத்தில்,

"... ஒரு பரம்பரையை உண்டு பண்ணக்கூடிய வல்லமை உடையதாக இருத்தல் வேண்டும். ஒரு மனிதனுடைய தனியளவில் நின்று விட்டால் போதாது; பொதுமக்கள் அதை அங்கீகரித்தல் வேண்டும். அப்பொழுதுதான் அது நீடித்த பயனைத் தரவல்லது. பாரதிதாசனுடைய புரட்சி புதுமையாக உள்ளது. ஆற்றல் வாய்ந்தது. இவ்விரண்டு ஆற்றல்களும் நன்றாகப் புலப்படுகின்றன. இப்புரட்சியால் உண்டாகும் விளைவை எதிர்காலம்தான் மதிப்பிடுதல் வேண்டும்" என்று குறிப்பிட்டிருந்தார்.

அதன்பின் சில ஆண்டுகளிலேயே பாரதிதாசனைப் பொதுமக்கள் அங்கீகரித்ததோடு ஒரு பரம்பரையே உருவாகியுள்ள வல்லமையையும் கண்டோம். ஆனால், வையாபுரிப்பிள்ளை அதைக் காணாமல் மறைந்து விட்டார்.

தமிழ்நாட்டில் மட்டும் அல்லாமல் கடல் கடந்தும், தமிழ் பேசும் தமிழர்கள் வாழும் மாநிலங்களில் எல்லாம் பாவேந்தர் புகழ் பரவியது.

"....இந்நாட்டில் உண்மைத் தமிழர் தலையெடுக்கும் காலத்தில் இவருக்கு உருவச்சிலை எடுப்பர்" என சொல்லின் செல்வர் ரா.பி. சேதுப்பிள்ளை அவர்கள் 1945இல் எனக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்கள்.

அந்தச் சொல்லின் செல்வரின் சொல் தீர்க்கதரிசனமாகியது!

அறிஞர் அண்ணா அவர்கள் முதல் அமைச்சராக வீற்றிருந்து ஆட்சி புரிந்தபோது, 1968இல் உலகத் தமிழ் மாநாட்டில் பாரதிதாசனுக்கு உருவச்சிலை கடற்கரையில் நிறுவிப் பெருமைப் படுத்தினார்.

பாவேந்தர் நேர்மையான உள்ளம் கொண்டவர்; அவருக்குச் சூழ்ச்சி தெரியாது; உண்மையையே எப்பொழுதும் பேசுவார்; மற்றவர்களிடமும் உண்மையை மிகவும் எதிர் பார்ப்பார். ஆரவாரம் செய்பவர்களையும், பொய் பேசுபவர்களையும் அவர் அறவே வெறுப்பார்.

மேடையிலும், தனிப்பட்டவர்களிடமும் பேசும்பொழுது, தமக்குச் சரி எனத்தோன்றுவதை, ஒளிவு மறைவின்றி உறுதியாக - உரமாகப் பேசும் வல்லமை உடையவர்.

குழந்தை உள்ளம் நிரம்பியவர்; யாரிடம் பேசினாலும் மிகுந்த உரிமையோடு பேசுவார். ஆண்-பெண் இருபாலாரிடத்தும் மிகவும் கலகலப்பாகவும் வாஞ்சையோடும் பேசக் கூடியவர்.

அழகான பொருள்களையும், இயற்கைக் காட்சிகளையும் ஆவலோடு பார்த்து ரசிப்பார்.

நல்ல உடை உடுத்திக் கொள்வதில் பிரியம் உடையவர். ஜிப்பா அணிந்து கொள்வார். 'ஷெர்வானி' என்னும் நீண்ட அங்கியைப் போட்டுக் கொண்டு அவர் பவனி வந்தால் அது கண்கொள்ளாக் காட்சியாகும். உல்லன் அல்லது பட்டுச்சால்வை அல்லது கம்பளிச் சால்வை போர்த்திக் கொண்டே அவர் வெளியே புறப்படுவார்.

ஒருமுறை பாவேந்தர் அணிந்திருந்த 'ஷெர்வானி' மீது நான் ஆசைப்பட்டேன். உடனே கடைக்கு என்னைக் கூட்டிக்கொண்டு போய் பழுப்பு நிறத்தில் துணி எடுத்து தெரிந்த தையற்காரரிடம் கொடுத்துத் தைக்கும்படி கூறினார்; பிறகு என்னை அணிந்து கொள்ளச் சொல்லி அதைப் பார்த்து மகிழ்ந்தார். அந்த நினைவு இன்றும் கூட என் உள்ளத்தில் பசுமையாகப் பதிந்துள்ளது.

சோர்வு என்பதே கவிஞரிடம் இல்லை; நாளை என்பது இல்லை; எதையும் அப்பொழுதே நிறைவேற்ற வேண்டும் என்ற துடிப்பு அதிகம். எப்பொழுதும் உற்சாகமாகவே காணப்படுவார்; எதற்கும் கவலைப்படமாட்டார்; அச்சம் என்பதே அவரிடம் இல்லை.

சத்தான-சுவையான உணவை விரும்பி உண்பார். சுவைமிக்க உணவு இல்லையானால் முகம் சுளிப்பார். தெரிந்த நண்பர்கள் விட்டுக்குப் போகும்போது தமக்கு விருப்பமான பதார்த்தங் களைத் தயாரிக்கச் சொல்லி ஆசையோடு மகிழ்ச்சி ததும்பச் சாப்பிடுவார். மேலும் அப்போது, அருகில் இருப்போரிடம் அந்தப் பதார்த்தங்களின் குணங்களை விவரிக்க முற்படுவார்.

தம் அருகில் பலர் இருப்பதை எப்பொழுதும் அவர் விரும்புவார்; ஆனால் அதிகமாகப் பேசமாட்டார்; பேசும்பொழுது மெதுவாகவும் இனிமையாகவும் பேசுவார்.

இலக்கணம், இலக்கியம், கவிதை பற்றி விளக்கம் கேட்டால் உடனே தெளிவாக உவமான உவமேயங்களோடு, சலிப்படையாமல் விளக்கிக் கூறுவார். அவர் கூறுவதைப் புரிந்து கொள்ளாதவர்களைப் பார்த்து ஏளனமாகச் சிரிப்பார். அந்தச் சிரிப்பிலும் ஒரு கவர்ச்சி காணப்படும்.

கவிஞர் வாழ்நாளில் அவரைக் காணாதவர்கள் மிகவும் குறைவு. எளிதில் அவரைக் காணலாம்; பேசலாம்; பழகலாம்.

திடீரென கவிஞருக்குக் கோபம் உண்டாகும் சந்தர்ப்பங்களும் உண்டு. என்றாலும் அந்தக் கோபம் உள்ளத்தில் நிலைத்து நின்று வேறுபடுத்தி விடுவதில்லை. 'நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமே சீரொழுகு சான்றோர் சினம்' என்னும் முதுமொழி அவருக்குப் பொருந்தும்.

கவிஞருடைய கோபத்துக்கு இலக்காகாதவர்கள் அவருடன் நெருங்கிப் பழகாதவர்களே! சில சமயங்களில் அவருடைய கோபமானது அனுதாபமாக மாறி விடுவதும் உண்டு. அது பிறவியில் கவிஞருக்கு உண்டான இயல்பு போலும்.

எதிலும் அவர் போக்கும் இயல்பும் தனிச் சிறப்புடையன. அதனால்தான் அவர் புரட்சிக் கவிஞராய், பாரோர் புகழும் பாவேந்தராய்த் திகழ்ந்தார்.

ஒரே இடத்தில் வெகு நேரம் உட்கார்ந்து கொண்டிருக்க விரும்ப மாட்டார். பலர் சூழ, வெளியே போய் வருவதில் அவருக்குப் பிரியம் அதிகம்.

சில சமயங்களில், அருகில் இருப்போரைப் பார்த்து, "எல்லோரும் வெளியே போய் வருவோமா" என்று கேட்பார் . 'சரி' என்றதும் எழுந்து எங்கேனும் சிறிது தூரம் செல்வதும், சில கடைகளில் நுழைந்து எதையாவது வாங்குவதும், பிறகு திரும்பி வருவதும் வழக்கம்.

சினிமா, நாடகம் மற்றும் பல நிகழ்ச்சிகளுக்குப் போக விரும்புவார். உடனே உடை மாற்றிக் கொண்டு எல்லோருக்கும் முதலில் புறப்படத் தயாராக நிற்பவர் கவிஞர்தான்; மற்றவர்களும் உடன் வருவதற்காகக் காத்துக் கொண்டும், சிறு பிள்ளையைப் போல் மகிழ்ச்சி ததும்ப உலாவிக் கொண்டும் இருப்பார்.

பாரதியாரைப் பற்றிச் சுவையான நிகழ்ச்சிகளைக் கவிஞர் கூறும்போது மணிக்கணக்கில் ரசித்துக் கொண்டிருக்கலாம். அவ்வாறு பலமுறை கேட்டு ரசித்தவர்கள் பலர். எவ்வளவு முறை கேட்ட போதிலும் சலிப்புத் தோன்றாது. அவ்வளவு ரசனையோடு அழகாகக் கூறுவார். அடிக்கடி விரும்பிக் கேட்டவர் பலரில் நானும் ஒருவன்;

புதுமைப்பித்தன், நாரணதுரைக்கண்ணன், அப்பாத்துரையார், கொத்தமங்கலம் சுப்பு, டி.கே.சண்முகம், தி.ஜ.ர. முதலானோர் பாவேந்தரைக் காண முல்லைப்பதிப்பகத்துக்கு வருவார்கள். பாரதியாரைப் பற்றி ஆவலோடு விசாரிப்பார்கள். பாவேந்தரின் பாடல்களைப் பாடும்படி கேட்டு இன்புறுவர்.

பாரதியார் பாடல்களையும் தம்முடைய பாடல்களையும் பாவேந்தர் பாடினால் மெய்மறந்து கேட்டுக் கொண்டிருக்கத் தோன்றும். அவருடைய குரலில் இனிமையும் கம்பீரமும் நயமும் கலந்து இன்பமூட்டும். பலமுறை கேட்டு, ரசித்து மகிழ்ந்தோர் பலர். (அவற்றை எல்லாம் ஒலி நாடாவில் பதிவு செய்து வைக்க வில்லையே என்ற குறை இப்பொழுது உண்டாகிறது).

படர்ந்த நெற்றி; நீண்ட கழுத்து ; உயர்ந்த வெற்றித் தோள்கள்; கூர்மையான ஆனால் அமைதியான பார்வை; கட்டுக்கோப்பான உடல் அமைப்பு; மொத்த உருவமே வனப்பாகத் தோன்றும்.

எப்படி அவர் கவிதைக்கு இணை கூறமுடியாதோ, அப்படியே அவருடைய கம்பீரமான தோற்றமும் இணை கூறமுடியாதது.

பாவேந்தர் வெளியே புறப்பட்டு விட்டால், மன்னரைப் போல அவருடைய தோற்றமும் நடையும் கம்பீரமாக இருக்கும். தெரிந்தவர்கள் நின்று வணக்கம் கூறுவார்கள்; தெரியாதவர்கள் நின்று பார்த்து 'யார்?' என அருகில் இருப்போரிடம் விசாரிப்பார்கள். அத்தகைய தோற்றப் பொலிவு மிக்கவர். விரைவாக நடந்து செல்வார்; சில சமயங்களில் அவருடன் செல்வோர் பின்தொடர்ந்து ஓட நேரிடுவதும் உண்டு.

தினமும் முகச்சவரம் செய்து கொண்டு முகம் மழுமழுப்பாக இருக்கும்; தினமும் சோப்புத் தேய்த்துக் குளிப்பார்; தலைக்குத் தேங்காய் எண்ணெய் தடவி வாரி விட்டுக் கொள்வார்; முகத்துக்குப் பவுடர், நறுமணம் பூசிக் கொள்ள விரும்புவார். நரை, திரை, மூப்பு அவரைப் பலகாலம் அண்டியதே இல்லை. உள்ளம் எப்பொழுதும் இளமையாகவே இருக்கும்.

பெரும்பாலும் குப்புறப் படுத்துக்கொண்டே கவிதை எழுதுவார். சில சமயங்களில் உட்கார்ந்து எழுதுவதும் உண்டு.

அவர் இயற்றிய கவிதைகளை அவ்வப்போது துணைவியார் பழநி அம்மாள் அவர்களிடம் படித்துக் காண்பிப்பார். அம்மையார் கூறும் திருத்தங்களை ஏற்பதும் உண்டு.

"உங்களைக் காணும்போது பாவேந்தர் நினைவு தோன்றுகிறது" என்று கவிஞர் கோவேந்தன் புன்னகையோடு கூறுவார்.

மற்றும் பேராசிரியர்கள், எழுத்தாளர்கள், புலவர்கள், கவிஞர்கள் மற்றும் வாசகர்கள் என்னைக் காணும்போதெல்லாம் பாவேந்தரைப் பற்றியும் அவர் கூறியவற்றையும் மிக ஆவலோடு கேட்பார்கள். மகிழ்ச்சி நிறைந்த அந்தப் பசுமையான நினைவுகளையும் அவருடைய பேச்சுக் களையும் நினைவு கூர்ந்து அவர்களுக்குக் கூறி மகிழ்வதோடு நானும் இன்புறுவேன்.

"காந்தியடிகளின் எழுபதாவது பிறந்த நாள் விழாவில் டாக்டர் இராதாகிருஷ்ணன் பதிப்பித்து வெளியிட்ட நூலை முன்மாதிரியாகக் கொண்டு அது போன்ற ஒரு நூலை பாரதிதாசனைப் பற்றி "புரட்சிக்கவிஞர்" என்ற நூலை திரு.முல்லை 1946இல் உருவாக்கினார். அதன் விளைவாக மாறுபட்ட அரசியற் கொள்கை யுடையவர்களிடமும் பாரதிதாசனைப் பற்றித் தெரிவிக்கும் வாய்ப்பும், பாரதிதாசனைப் பற்றி அவர்களுடைய கருத்துக்களைத் தமிழ் மக்களுக்கு அறிவிக்கும் பேறும் ஏற்பட்டன.

நாவலர் சோமசுந்தர பாரதியார்; மறைமலையடிகள், திரு.வி.க. ஆகிய பேறறிஞர்களுடன் பாரதிதாசனுக்கு த் தொடர்பு ஏற்படுத்தியவர் முல்லை முத்தையா அவர்கள்தான்.

1948இல் சென்னையில் சர்வகட்சி மாநாடு ஒன்றைக் கூட்டி, பாரதிதாசனுக்கு நிதி கொடுக்க ஆக்கம் தேடியவரும் இவரே.

அப்போது பாரதிதாசனுடைய நூல்களை அறிஞர் பலருக்கு அனுப்பினார் முல்லை முத்தையா. அதன்மூலம் நாடெங்கும் அவரை அறிமுகப்படுத்தினார்.

18.2.1946இல் முல்லை முத்தையா அவர்களுக்குப் பேராசிரியர் நாவலர் சோமசுந்தர பாரதியார் எழுதிய பின்வரும் கடிதமும் இங்கே குறிப்பிடத்தக்கது." இவ்வாறு அறிஞர் 'சோமலெ' அவர்கள் எழுதியுள்ளார்.

தமிழ்வாணர், திரு.முத்தையா அவர்கட்கு

முல்லைப் பதிப்பகம்-சென்னை.

அன்புடையீர்,

நலம். தாம் அனுப்பிய கவி பாரதிதாசன் இயற்றிய செய்யுட் புத்தகங்கள் வந்தன. புத்துவகை தந்தன; 'குடும்ப விளக்கு' முதற்பகுதி உதவுக. இதுவரை இவர் கவிகளைப் படித்து மகிழாமைக்கு மிகவும் வருந்துகிறேன். எல்லாம் நல்லனவாயினும் "அழகின் சிரிப்பு" என்னை அவருக்கு ஆளாக்கிவிட்டது.

மாடப்புறாவும் மடக்கிளியும் மானும் வானும்
ஏடவிழ் பூ யாரோ டிருமலையும்-ஆடலையும்
பாரதிரத் தம் கதையைப் பண்களியப் பாடவிடும்
பாரதிதாசன் புலமைப் பண்பு.

பசுமலை
18.2.1946

அன்பன்,
ச.சோ.பாரதி

* * *



# கவிஞர் அப்பா: என் சில நினைவுகள்

பொற்செல்வி இளமுருகு

பல ஆண்டுகளுக்கு முன் கவிஞர் அப்பா அவர்கட்குப் பேரறிஞர் அண்ணா அவர்கள் ரூபாய் இருபத்தைந்தாயிரம் நிதி திரட்டிக் கொடுத்தார்கள். அறிஞர் அண்ணாவின் நண்பர் சலகண்டபுரம் கண்ணன் அவர்கள் என்னிடம் வந்து "புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கட்குப் பணமுடிப்புக் கொடுக்கப்போகிறோம் உங்கள் பங்கிற்கு இயன்ற வெண் பொற்காசுகள் கொடுங்களேன்" என்று கேட்டார். நான் ரூபாய் இருபத்தைந்து கொடுத்தேன். அக்காலத்தில் என் மாத ஊதியமே ரூபாய் இருபத்தைந்துதான்.

கவிஞர் அப்பாவின் கவிதைகளை முதலில் தொகுத்து வெளியிட்டவர் காலஞ்சென்ற திருமதி குஞ்சிதம் குருசாமி பி.ஏ.பி.டி. அவர்கள் ஆவார்.

கவிஞர் அப்பாவின் கவிதைகள் மகளிரின் நெஞ்சில் அழியா ஓவியமாக நிலைத்தன. மகளிர் சீர்திருத்தப்பாடல்களுள் இளங்குழந்தை திருமணத்தின் கொடுமை, பொருந்தாமணத்தின் வேதனை, இளம் விதவைகளின் கண்ணீர்க் காவியங்கள், காதல் மணத்தின் சிறப்புகள், கலப்பு மணம், சாதி ஒழிப்புகள், பெண்கல்வியின் இன்றியமையாமை முதலியன பேசப்படுதல் குறிப்பிடத்தக்கது. மேலும் கல்வி இல்லாப் பெண் இருண்டவீடாகவும், கல்வி பெற்ற பெண் குடும்ப விளக்காகவும் ஒளிவிடுவதையும் கண்ட அக்காலப் பெண்கள் பலர் கவிஞரின் சீர்திருத்தக்கொள்கைகளை வாழ்க்கை இலட்சியமாக்கிக் கொண்டார்கள். அப்படிப்பட்ட பெண்களில் நானும் ஒருத்தியாவேன்.

கானாடுகாத்தான் இன்பமாளிகையின் தந்தை திரு.வைசு.சண்முகம் மஞ்சுளாபாய் அம்மையாரிடமிருந்து ஒரு தந்தி எனக்கு வந்தது. நான் கானாடுகாத்தான் இன்பமாளிகையில் கவிஞர் அப்பாவைக் கண்டேன், பெருமைப்பட்டேன்.

கரூர் அம்பிகா திரைஅரங்கில் சீர்திருத்த மாநாடு நடைபெற்றது.மாநாடு ஏற்பாடு செய்தவர் காலஞ்சென்ற காக்காவாடி இரத்தினம் அவர்கள். கவிஞர் அப்பா மாநாட்டின் தலைவர். வைசு. மஞ்சுளாபாய் அம்மையார் கவிஞர் அப்பாவின் பாடல்களை இசையோடு பாடினார். மாநாட்டுத் தீர்மானம் ஒன்றை நான் வழிமொழிந்து பேச வேண்டுமென்றார்கள். தீர்மானம் கலப்பு மணத்தைப் பற்றியது. முன்மொழிந்து பேசியவர் காலஞ்சென்ற திருமதி.சிவகாமி சாமிசிதம்பரனார். இவ்வம்மையார் விதவையாகி பின் கைம்மை கலப்பு மணம் புரிந்துகொண்டவர். வழிமொழிந்து பேசும் எனக்கோ திருமணமே ஆகவில்லை; அன்று சாதி ஒழிப்புப் பிரச்சாரம் தீவிரமாகப் பேசப்பட்டகாலம். நான் வழிமொழிந்து "பேச்சும் செயலும் ஒன்றாக இருப்பதையே கவிஞர் அப்பா கடமையாகக் கருதுவார்கள்; அதன் வழியில் நான் கலப்புமணமே புரிந்துகொள்வேன்" என்று அன்று கூறியதோடு அப்படியே திருமணம் செய்துகொண்டவள்.

என்னை மூத்தமகள் என்றும் என் துணைவர் இளமுருகு பொற்செல்வி அவர்களை மூத்த மருமகன் என்றும் கவிஞர் அப்பா அவர்கள் பூரிப்புடன் கூறுவார்கள்.

1950ஆம் ஆண்டு பெரியகுளத்தில் சமூகநீதி உரிமை மாநாடு நடத்த அறிஞர் அண்ணா அவர்களிடம் ஆலோசனை கேட்க காஞ்சி சென்றோம். அன்று தமிழகத்தில் சக்கரவர்த்தி இராசகோபால ஆச்சாரியார் முதல்வராக இருந்தார். அவர் கம்யூனல் ஜி ஓவைக் குழி தோண்டிப் புதைக்கும் முயற்சியில் ஈடுபட்டார். அறிஞர் அண்ணா அவர்கள் எங்களிடம் சர்வகட்சித் தோழர்களையும் அழைத்து மாநாடு நடத்தச்சொன்னார்கள். அதன்படியே சமூகஉரிமை நீதி மாநாட்டை நடத்தினோம். பெரியகுளத்தில் வெற்றி கண்டது சமூகம்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் மாநாட்டில் "காலஞ்சென்ற அஞ்சாநெஞ்சன் பட்டுக்கோட்டை அழகிரியின் செயல்பாட்டுத் திறனைத் தம்பி இளமுருகுவிடமும் தங்கை பொற்செல்வியிடமும் கண்டு களிப்படைகிறேன்" என்று கூறினார்கள். கவிஞர் அப்பாவும் அதையே அடிக்கடி சொல்வார்கள்.

1956ஆம் ஆண்டு குழித்தலையில் தமிழ் ஆட்சிமொழி மாநாட்டை நாங்கள் நடத்தினோம். கவிஞர் அப்பாவிடம் இசைவு கேட்காமலேயே மாநாட்டுத் தலைவர் பாவேந்தர் அப்பா என்று அறிவித்தோம். மாநாட்டுத் திறப்பாளர் அருட்டிரு தவத்திரு அடிகளார்; தமிழ்க் கொடி ஏற்றுபவர் திருமிகு.ப.ஜீவானந்தம்; மாநாட்டுச் சிறப்புச் சொற்பொழிவாளர்களாக மொழிக்காவலர் தேவநேயப்பாவாணர், கவிஞர் சுத்தானந்தபாரதியார், பொருளாதாரமேதை ப.நடராசன், டாக்டர் இராசமாணிக்கனார் என்று திட்டமிட்டிருந்தோம். மேலும் தமிழ்ப்பெருமக்கள் பலர் மாநாட்டில் கலந்து கொண்டனர். மாநாட்டின் சுவரொட்டியைக் கவிஞர் அப்பாவிடம் காண்பிப்பதற்குப் பாண்டிச்சேரிக்கு எடுத்துச் சென்றேன். சுவரொட்டியைப் பார்த்ததும் அப்பா வாய்விட்டு ச் சிரித்து என் முதுகில் தட்டிக்கொடுத்து "நீ தான் நல்ல தமிழச்சி" என்று பாராட்டினார்கள். அன்று மாலையே என்னுடன் குழித்தலைக்குப் புறப்பட்டு விட்டார்கள். "நன்கொடைச் சீட்டு கொண்டு வந்திருக்கிறாயா?" என்று கேட்டார்கள். "கொண்டுவந்திருக்கிறேன்" என்றேன். கடலூர் சென்று திரு.தாமோதரன் அவரது இளவல் முதலியவர்களிடம் ரூபாய் 500 பெற்றார்கள். ரயில்மூலம் குழித்தலை வந்து சேர்ந்தோம்.

மாநாட்டு மேடையில் அருட்டிரு. அடிகளார் அவர்கள் பழம்பெருமைகளையும் அன்றைய தமிழக அவல நிலையினையும் கூறிக் கண்கலங்கினார்; உடன் கவிஞர் அப்பா அவர்கள் "கவலைப்படாதீர்கள் பெருமை பெற்றுவிடுவோம்" என்று தேற்றினார். அவையே தமிழுணர்வால் உணர்ச்சி கொண்டெழுந்தது என்பது மறக்க முடியாத காட்சி.

அன்றைய காங்கிரசு அரசு "இராவணகாவியம்" நூலுக்குத் தடைவிதித்திருந்தது. திரு.நன்னியூர் நாவரசன் அவர்களும் திரு. கவிஞர். சுரதா அவர்களும் தடையை நீக்க வேண்டுமென்று ஒரு தீர்மானம் எழுதிக்கொடுத்தார்கள் மாநாட்டில் கவிஞர் அப்பாவிடம். "எவண்டா தடைபோடுவது அதற்கு ஏண்டா பிச்சைக்காரத் தீர்மானம்?" என்று தாளைக் கோபமாகக்கிழித்து எரிந்துவிட்டு "இராவணகாவியத்தை வாங்கிப்படியுங்கள்" என்றார். மாநாடு முடிந்து ஒரு வாரம் குழித்தலையில் எங்கள் வீட்டில் தங்கி இருந்தார்கள். நான் பள்ளிக்குச் செல்லுமுன் அப்பாவிற்கு வேண்டியதைச் செய்து வைப்பேன். நான் சமையல் செய்யும் போது அடிக்கடி கூப்பிடுவார்கள். தனக்குப்பிடித்தமான உணவுவகைகளைச் செய்திடுமாறு கூறுவார்கள். என் துணைவரும் நானும் சைவம். பக்கத்து வீட்டாரிடம் அப்பாவிற்கு வேண்டிய அசைவ உணவுகளைச் சமைக்கச் சொல்லி அப்பாவிற்குக் கொடுப்போம். மீன் குழம்பும் ஆப்பமும், இடியாப்பமும், நெய், முந்திரிப்பருப்புடன் கூடிய ரவா உப்புமாவும் தேன்குழலும், மெதுவடையும் தேங்காய்ச்சட்டினியும் கவிஞர் அப்பா விரும்பி உண்ணும் உணவாகும்.

எதைப்பற்றியும் கவலைப்படாத அப்பா உயர்வான எண்ணங்கள், நல்ல சிந்தனைகள் கொண்டவர் மட்டுமன்றி யாவரும் நம்மவர் என்ற எண்ணமும் உடையவர்கள்.

"மாதர் தம் உரிமை மறப்பது மாண்பா? மாதர் முன்னேற்றத்தால் மகிழ்வது மாண்பா ஆய்ந்து பார்" என்ற பாடலைத் தந்தார்.

ஆடை அணிகலன் ஆசைக்கு
வாசமலர் தேடுவதும், ஆடவர்க்குச் சேவித்
திருப்பதும், அஞ்சுவதும், நாணுவதும்
ஆமையைப்போல் கெஞ்சுவதும் இருக்கும்
மகளிர்குலம், மானிடர் கூட்டத்தில்
வலிவற்ற ஓர் பகுதி

என்று கவிஞர் அப்பாவின் சொல்லை ஏற்று ஏறுநடையே போட்டு வருவதனால் அப்பா என் மீது அன்பு வைத்தார்கள்.

கவிஞர் அப்பாவின் நினைவு பெண்ணுலகம் அன்னையாகவும் ஆசானாகவும், என்றும் ஆருயிர்காக்கும் பாதுகாப்பு உடையதாகவும் வேண்டுமென்பதே. அதையே என் மூச்சாக ஏற்று வாழ்கிறேன்.

ஒருவனும் ஒருத்தியும் மனம் உவந்திடில் அதுவே வாழ்வு என்றார்.

காதல் அடைதல் உயிரியற்கை - அது
கட்டில் அகப்படும் தன்மையதோ? அடி
சாதல் அடைவதும் காதலிலே

என்றார், விதவை மணத்தை வலியுறுத்திய அப்பா.

ஆடவரின் காதலிக்கும் பெண்கள் கூட்டம்
அடைகின்ற காதலுக்கும் மாற்ற முண்டோ?
பேடகன்ற அன்றிலைப்போல் மனைவி செத்தால்
பெருங்கிழவன் காதல் செயப்பெண் கேட்கின்றான்
வாடாத பூப்போன்ற மங்கை நல்லாள்
மணவாளன் இறந்தால் பின் மணத்தல் தீதோ?
பாடாத தேனீக்கள், உலவாத் தென்றல்
பசியாத நல்வயிறு பார்த்ததுண்டோ

என்று கவிஞர் அப்பா கேட்டார் நீதியை.

அது மட்டுமா " வேரில் பழுத்த பலா கோரிக்கை அற்றுக்கிடக்குதே" என்று வருந்தினார்.

கவிஞர் அப்பாவின் சீர்திருத்த நெறியை நிறைவேற்றிடத் தக்கபடி இன்று தமிழக அரசு விதவையைத் திருமணம் செய்து கொள்ளும் தம்பதிகளுக்கு ரூ.5000-உம் அரசில் வேலைவாய்ப்பும் கொடுத்து உதவுகிறது. காதல் திருமணத்திற்கும், கலப்புத் திருமணத்திற்கும் பணமுடிப்பும் அரசில் வேலைவாய்ப்பும் கொடுத்து உதவுகிறது. இன்றய தமிழகப் பெண்கள் பாவேந்தர் கருத்துப்படி வாணிபம் செய்யவும் வானூர்தி ஓட்டவும் முன் வந்துள்ளனர். அதற்கும் அரசு உதவுகின்றது.

"சாணிக்குப் பொட்டிட்டுச் சாமி" என்று கும்பிட்ட காலம்போய், தீண்டாமையை ஒழித்த வைக்கம் வீராங்கனை ஈ.வே.ரா. நாகம்மை; தென்னாப்பிரிக்காவில் காந்தியடிகளோடு நிற வெறியை ஒழிக்கச் சிறைக் கோட்டம் சென்ற வீரத்தமிழச்சி தில்லையாடி வள்ளியம்மை; பெண்குலத்தின் எடுத்துக் காட்டான டாக்டர். தர்மாம்பாள்; தியாக மறத்தி மூவலூர் இராமாமிர்தம் அம்மையார்; தமிழகத்திலேயே முதல் முதல் டாக்டர் பட்டம் பெற்றுச் சாதியை ஒழிக்கப் பெண்குலத்தையே இழிவுபடுத்திய பொட்டறுப்புச் சட்டத்தைச் சட்டமன்றத்திற்குக் கொண்டு வந்து நிறைவேற்றிய டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி; தனித்தமிழ் வித்தகி நீலாம்பிகை திருவரங்கனார் போன்றவர்கள் பெண்குலம் தொடர்பான பொதுப்பணி உணர்வோடு வாழ்ந்த காலத்தில் கவிஞர் அப்பாவும் வாழ்ந்து உணர்ச்சிக் கவிதைகளைப் பாடினார்.

கவிஞர் அப்பாவின் கவிகளின் வடிவில்தான் தெரசா பல்கலைக்கழகத்தின் துணை வேந்தராக "சண்டே அப்சர்வேர்" ஆங்கில ஏட்டின் ஆசிரியர் திரு.பி.பாலசுப்பிரமணியத்தின் மகளார் திருமதி.இராசஇராசேசுவரி அம்மையார் வரமுடிந்தது. கவிஞர் அப்பாவின் கவிதை நூல்களைப் பாலர்பள்ளி முதல் பல்கலைக்கழகம் வரை இடம் பெறச் செய்ய வேண்டும். ஒவ்வொரு வீட்டிலும் பாவேந்தரின் நூல்கள் இருக்கவேண்டும். கவிஞர் அப்பா எண்ணியதுபோல பெயர்களைத் தம் குழந்தைகளுக்குத் தமிழ்ப்பெயராகச் சூட்டவேண்டும். மேலும், கவிஞர் அப்பாவின் பெயரைத் தாங்கியுள்ள பாரதிதாசனார் பல்கலைக்கழகம் பாவேந்தர் சிந்தனைகளை இம் மலர்வடிவில் பரப்பி நாட்டிற்குச் செய்யும் பெரும் பணி பாராட்டுக்குரியது.

"இங்குள்ள தமிழர் ஒன்றாதல் கண்டு எங்கோ மறைந்தார் எங்கள் பகைவர்" என்ற கவிதை வரிகளையும், "எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத தமிழென்று சங்கே முழங்கு" என்ற வரிகளையும் ஒவ்வொரு தமிழரும் வாழ்வில் கடைப்பிடித்தால் தமிழ் வளம் பெறும்; தமிழர்கள் வாழ்வுபெறுவார்கள் என்பது உறுதி.

பாவேந்தரின் நூற்றாண்டில் இந்த உறுதியைத் தமிழினம் பெறுமென்று நம்புவோம்.

சிறப்படைவோம் - செம்மைபெற்று வாழ்வோம்.

* * *

# பாவேந்தர் வீட்டு வேலைக்காரி பட்டம்மாள்

கவிஞர் பொன்னடியான்

துன்பம் பிறர்க்கு; நல் இன்பம் தமக்கெனும்
துட்ட மனோ பாவம்;
அன்பினை மாய்க்கும் அறங்குலைக்கும்; நல்
ஆக்கந்தனைக் கெடுக்கும்;
வன்புக்கெல்லாம் அதுவே துணையாய்விடும்
வறுமையெல்லாம் சேர்க்கும்;
"இன்பம் எல்லார்க்கும்!" என்றே சொல்லிப் பேரிகை
எங்கும் முழக்கிடுவாய்!

என்று பாட்டு முழக்கமிட்டவர் பாவேந்தர் பாரதிதாசனார் ! இந்த முழக்கத்திற்கொப்பவும் வாழ்நாளெல்லாம் வாழ்ந்து காட்டியவர் அவர். ஏழை எளிய மக்களின் துயரங் கண்ட போதெல்லாம், இரங்கினார்; மனம் வருந்தினார்; இயன்ற வகையிலெல்லாம் அவர்களுக்கு உதவினார்.

அவரின் 'பாரதிதாசன் பிக்சர்ஸ்' படநிறுவனம் தொடங்கப்பெற்ற போது, அந்நிறுவனத்தில் பணியாற்ற பலர் இருந்தனர். சமையலுக்கு தாயாரம்மா, வீட்டு வேலைக்கு பட்டம்மா, அலுவலக உதவிப் பணிக்கு மாணிக்கம், கிருஷ்ண மூர்த்தி, அசனல்லி என்று இப்படி நீளும் அந்தப் பட்டியல்.

பாவேந்தருக்கு என்று கறுப்பு நிறக் காரும் இருந்தது (எலிகண்ட் பியட்). அதற்கென்று ஒரு காரோட்டியும் உண்டு. பட நிறுவன மேற்பார்வைக்கென்று புரட்சிக் கவிஞரின் இரண்டாவது மாப்பிள்ளை திரு. தண்டபாணி அப்போது பொறுப்பாளராகப் பணியாற்றிக்கொண்டிருந்தார். இவைபற்றி எல்லாம் ஒரு துளியும் அறியாத, அறிய வாய்ப்பில்லாத சிலர், தலையும் தெரியாமல், வாலும் தெரியாமல் பாவேந்தரின் இறுதிக்கால வாழ்க்கையை ப் பற்றி எழுதி வருகின்றனர்; பேசி வருகின்றனர்.

அவர் அநாதையாக, தன்னந்தனியராக, சோற்றுக்கும், துணிக்கும் கூட வழியில்லாத பஞ்சைப் பராரியராக வாழ்ந்ததாகப் பல கட்டுக்கதைகளைக் கட்டிவிட்டுக் கொண்டிருக் கின்றனர்.

'பாண்டியன் பரிசு' படநிறுவனப்பணிகள் தொடங்கிச் செயற்பட்டிருந்தபோது, இவ்வாறு பல வசதிகளோடு பாவேந்தர் வாழ்ந்தார். புவுஞ்சூர் ஜமீனின் பேரில்லத்தில் வாழ்ந்தார். அந்த

நிறுவனப் பணிகள் தடைப்பட்டபோது, வீண் செலவுகளைக் குறைக்கும் நோக்கோடு பின்புற வீட்டிற்குக் குடியேறினோம். ஆட்களின் எண்ணிக்கையைக் குறைத்துக் கொண்டோம்- அவ்வளவே!

சரி, பாவேந்தர் வீட்டு வேலைக்காரி பட்டம்மாள் கதைக்கு வருவோம்:

தேனாம்பேட்டை ஆலையம்மன் கோவில் பக்கத்தில் உள்ள, இப்போது குடிசைமாற்று வாரியக் கட்டிடங்கள் உள்ள பகுதியிலிருந்து வேலைக்கு வந்துகொண்டிருந்தாள் பட்டம்மாள். ஏறக்குறைய 45இலிருந்து 50 வயது இருக்கலாம். நாங்களும் பாவேந்தரும் பட்டம்மாள் என்ற அவள் பெயரைச் சுருக்கி "பட்டு - பட்டு" என்றுதான் அழைப்போம். படிப்பறிவு இல்லாத பட்டம்மாள், வாழ்க்கை அறிவை நிரம்பப் பெற்றவள். பட்டம்மாவைப் போன்ற நல்ல வேலைக்காரிகள் அப்போது சென்னையில் கிடைக்கத்தான் செய்தார்கள்.

புரட்சிக் கவிஞரின் குணங்களைப் பல்லாண்டு அறிந்திருந்ததைப் போன்று அவள் செயல்பட்ட பாங்கு, எங்களை வியப்பில் ஆழ்த்தும்! பாவேந்தரும் அவ்வப்போது பட்டம்மாள் வாயிலாக நாட்டு நடப்புகளை-விலைவாசிகளை, அவள் குடும்பச் செய்திகளை அறிந்து கொள்ளும் அந்த அரிய காட்சிகள் இன்றும் என் நெஞ்சில் பசுமையாக நிழலாடிக் கொண்டிருக்கின்றன.

பட்டம்மாளின் வறுமை வயப்பட்ட வாழ்க்கை கவிஞரின் இதயந்தொட்ட வாழ்க்கையாகும். அவளின் நான்கு பிள்ளைகள், சம்பாதிக்கும் சிறிய வருமானத்தையும் குடித்துத் தீர்த்துவிட்டு, குடும்பச் சுமையாக நிற்கும் கணவன், சாக்கடை ஓடும் வாய்க்கால் ஓரம் புறம்போக்கு நிலத்தில் கட்டப்பட்ட சிறிய குடிசை இவைகளுக்குச் சொந்தக்காரியான பட்டம்மாளின் வாழ்க்கைக்கதை கவிஞரின் மனத்தினைப் பெரிதும் பாதித்த கதையாகும்.

ஒரு நாள் உடல்நிலை சரியில்லா நிலையிலும் வேலைக்கு வந்த பட்டம்மாள், வேலை முடிந்து வீட்டுக்கு செல்லும்போது, மழை பிடித்துக் கொள்கிறது! நடு முற்றத்தில், சோபாவில் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்த பாவேந்தர், பட்டம்மாள் செல்வதைப் பார்த்து விடுகிறார். உடனே பதைப்புடன் அவர், "பட்டம்மா இங்கே வா... மழை பலமாகப் பிடித்துக் கொண்டது. உனக்கு உடம்பு வேற சரியில்லை. கொஞ்சம் இருந்து போ. அல்லது குடையாவது வாங்கிக்கொண்டுபோ." என்று அன்புடன் கூறுகிறார். பட்டம்மாள் போன்ற வேலைக்காரிகள் மழையில் நனைவதைப்பற்றி எல்லாம் கவலைப்படாத மனிதர்கள் வாழும் சென்னையில், கவ லைப்பட்ட கவிஞரின் கருணை மனத்தின் செயல்கள் எங்கள் கண்களைத் திறக்க வைத்த செயல்களாகும்.

பட்டம்மாள் தன் மூத்த மகன் திருமண வேலைகளில் ஈடுபட்டுள்ளாள் . அதுபற்றி எல்லாம் பாவேந்தர் அவ்வப்போது கேட்டுத் தெரிந்து கொள்கிறார். ஒரு நாள் வேலைக்கு வந்த பட்டம்மாள் முற்றத்தின் சோபாவில் உட்கார்ந்திருந்த பாவேந்தரைப் பார்த்ததும் ஓவெனக் கதறி அழ ஆரம்பித்து விடுகிறாள். "ஏ... என்ன நடந்தது? அழாமச் சொல்லு" என்று பாவேந்தர் கேட்கிறார். "அய்யா! எம் பையன் திருமணத்திற்குச் சேர்த்து வைத்திருந்த பணத்தையும், கல்யா ணத்துக்கு வேண்டிய சாமான்களையும் என் குடிசையில் புகுந்து எவனோ திருடிக்கிட்டுப் போயிட்டான்யா. முகூர்த்த நாளும் நெருங்கிக்கிட்டு இருக்கு என்ன செய்யறதுண்ணே புரியலீங்கையா?" என்று புலம்புகிறாள். அதிர்ச்சி அடைந்த பாவேந்தர் சிறிது நேரம் அமைதியாகிவிடுகிறார். பிறது அவள் துயர் துடைக்க நினைத்த பாவேந்தர் , "நீ ஒண்ணுக்கும் கவலைப்படாதே. நடந்தது நடந்துடிச்சு. இனி நடக்கப்போறத கவனி ". என்று ஆறுதல் கூறிவிட்டு தன் அறைக்குச் சென்று பட்டம்மாள் எதிர்பாரா அளவு பணத்தை எடுத்துவந்து அவளிடம் கொடுத்து, "திருமணச் செலவுக்கு இத வச்சுக்கோ அந்தத் திருமணத்த இதோ...

இங்கேயே வச்சுக்க" என்று முடிப்பதற்குள் பட்டம்மாளின் முகமெல்லாம் பற்களாகிவிடுகின்றன. அவள் அழுகை ஆனந்தமாகிவிடுகின்றது. அந்த ஏழைப்பெண் எதிர்பாரா உதவி, இந்த உதவி. பாவேந்தருக்கு நன்றி கூறும் வழியறியாது தவிக்கிறாள். அந்தத் தவிப்பு இன்றும் என் மனக்கண்களில் அழகோவியமாக நிழலாடுகிறது!

பட்டமாளின் மகன் திருமணம், பாவேந்தர்விரும்பியபடியே எளிமையாக, ஆனால் சிறப்பாக பாவேந்தர் இல்லத்திலேயே நடந்து முடிகிறது-அவர் வாழ்த்துதலோடு!

தன்வீட்டு வேலைக்காரி ஏழை பட்டம்மாளின் வாழ்வில், முகத்தில் மட்டுமா சிரிப்பைக் காணவிரும்பினார் பாவேந்தர்? இல்லை - இவ்வுலகின் அனைத்து ஏழை மனிதர் வாழ்விலும் காண விரும்பிய கருணை மனமன்றோ அவர் கவிதை மனம்!

* * *



# ஒளியின் உள்ளொளி நீ ஆனாய்!



கவிஞர் திருமதி சௌந்தரா கைலாசம்

1. நாட்டிலே பற்றுக் கொண்டு
   நயமிகும் கவிதை கோடி
   தீட்டிய பார திக்குத்
   தெரிந்தது, கேட்டான் உன்றன்
   பாட்டினை! சக்தி தாசன்
   பரவச மாகிப் போனான்!
   போட்டனன் சபாஷ்! உள்ளம்
   பூரித்த படியு னக்கே!

2. பார்வையின் பரிமாற் றத்தில்
   பாரதி பேரைக் காக்கும்
   சீர்மிகும் சீடன் ஆனாய்;
   தினமவன் வழியில் போனாய்!
   யாரெழுந் தெதிர்த்த போதும்
   அச்சமோ சிறிது மின்றிப்
   போரிடும் மறவ னாகிப்
   பூண்டனை வெற்றி மாலை!

3. பக்தியில் திளைத்த அந்த
   பாரதி, சக்தி என்னும்
   நித்தியப் பொருளி னுக்கு
   நிகரிலாத் தாசன் ஆனான்!
   சக்தியின் தாச னுக்குத்
   தாசனாய் மாறி வாழ்வுக்(கு)
   ஒத்தது கண்டே நாட்டிற்(கு)
   உழைத்தனை நாளும் நீயே!

4. உலகினில் புலவ ரென்போர்
   ஒளித்தசெந் தமிழ்த்தாய் தன்னைப்
   பலர்முனே தேரில் ஏற்றிப்
   பாருங்கள் இவள்தா னுங்கள்
   குலத்தினைக் கெடுக்கும் மூடக்
   கொள்கையை வேர றுத்து
   விலக்குவாள் அன்பால் என்று
   விளக்கிய கவிஞன் நீயே!

5. எளிமையின் கோலத் தாலே
   இங்குளார் நாவி லெல்லாம்
   களிநடம் புரியச் செய்தாய்
   கவிதையாம் தாயை! துன்ப
   உளிநடம் புரிந்தி ருந்த
   ஒரு நிலை மாற்றி, இன்ப
   ஒளிநடம் புரியச் செய்தாய்!
   ஒளியினுள் ளொளிநீ ஆனாய்!

6. அஞ்சிய நெஞ்சை யெல்லாம்
   அழைத்துநீ அருக மர்த்திக்
   கொஞ்சிடும் கவிதை யோடு
   குலவிட வைத்தாய்; ஆர்வம்
   மிஞ்சிய தாலே எங்கும்
   விளைந்தது கவிதை! வெற்றுப்
   புஞ்சையை நஞ்சை யாக்கிப்
   புதுமைகள் செய்தாய்! வாழி!



* * *

# பாவேந்தர்
# என் தந்தையின் நண்பர்

**சிவ கண்ணப்பா**

பாவேந்தர் ஓர் பிறவிக் கவிஞர். பாரதிதாசன் என்ற சொல்லுக்கும் பாவேந்தர் என்ற சொல்லுக்கும் ஒரு தனி ஆற்றல் இருக்கிறது. இந்த இரு சொற்களும் இன்றைய தமிழினத்தின் தாரக மந்திரச் சொல்லாக விளங்குகின்றன.

பாவேந்தர் என் தந்தையின் நண்பர். என் தந்தையின் பெயர் சிவகுருநாதன். என் தந்தையாரை அந்த நாளில் எல்லோரும் "அட்டை கிளாஸ் வாத்தியார்" என்றுதான் அழைப்பார்கள். தொடர்ந்து இருபது ஆண்டுகள் முதல் வகுப்பு ஆசிரியராக இருந்ததால் அவரிடம் படித்த மாணவர்கள் இன்றும் கூட என்னைப் பார்த்தால் "நீங்கள் அட்டை கிளாஸ் வாத்தியார் மகன்தானே" என்பார்கள். மக்களிடம் நன் மதிப்பைப் பெற்ற என் தந்தையாரும் பாவேந்தரும் பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது எந்த நட்பு முறையில் பழகினார்களோ அதேபோல் வாழ்க்கை முழுவதும் நட்பு முறையில் பழகி வந்தனர்.

கலவைக் கல்லூரியிலே இருவரும் தமிழ்ப் பிரிவில் (Cours Normal) பயின்றனர். அந்த நாளில் ஆசிரியர்களை உருவாக்குவதற்கென்றே ஏற்படுத்தப்பட்டது Cours Normal என்ற தமிழ் வகுப்பு. இவ்வகுப்பில் தமிழ் இலக்கியம், பிரெஞ்சு மொழி, கணக்கு ஆகிய பாடங்களோடு போதனா முறைக் கல்வியும் பயிற்றுவிக்கப்பட்டது. தமிழ் இலக்கியம் கற்பித்தவர் பங்காரு பத்தர் என்ற பேரறிஞர். பங்காரு பத்தர் மாணவர் என்றாலே ஒரு தனி மரியாதை உண்டு. ஆசிரியராக அடி எடுத்து வைக்கும்போதே பாவேந்தரும் என் தந்தையாரும் அந்த மரியாதையைப் பெற்றுவிட்டனர். என் தந்தையார் புகழ் பெறுவதற்கு இதுவே காரணமான அமைந்தது. ஆனால் பாவேந்தருக்கோ இப்பெருமையோடு மகாவித்வான் சாரம் பு. அ. பெரியசாமி பிள்ளையின் மாணவர் என்பதும் மகாகவி பாரதியாரின் நண்பர் என்பதும் பெருமை சேர்ப்பனவாக இருந்தன. இந்த வேறுபாடுகளுக்கிடையிலும் பொறாமை காரணமாக மனஸ்தாபமோ, கருத்து வேறுபாடோ இவர்களுக்கிடையில் எந்தச் சந்தர்ப்பத்திலும் ஏற்பட்டதில்லை.

'மாதாகோவில் வீதியில் உள்ள இன்றைய வ.உ.சி. மேல்நிலைப்பள்ளி 65 ஆண்டுகளுக்கு முன் இரண்டாவது தொடக்கப் பள்ளி என்று அழைக்கப்பட்டது. இந்தப் பள்ளியில்தான் நான் முதன் முதல் படிக்கத் தொடங்கினேன். பாவேந்தரும் அப்பொழுது இந்தப் பள்ளியின் ஆசிரியராக இருந்தார். நான் அவரைப் பாவேந்தராக அந்த நாளில் பார்க்கவில்லை. என் தந்தையின் நண்பர் என்ற அளவில்தான் அவரோடு பழகினேன். அவர் பெயர் என்ன என்பது கூட எனக்குத் தெரியாது.

மகாத்மா காந்தி வீதியும், அம்பலத்தாடு ஐயர் மடத்து வீதியும் சந்திக்கும் முனையில் எங்கள் வீடு இருந்தது. தமிழாசிரியர்கள் பலரும் என் தந்தையைப் பார்க்க வருவார்கள். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் துரைசாமி பண்டிதர், நாராயணசாமி பண்டிதர், கனக

சுப்புரத்தினம் என்ற பாரதிதாசன் ஆகியோர். இவர்களில் துரைசாமி பண்டிதருக்கும் பாவேந்தருக்கும் அடிக்கடி கருத்துப் போர்கள் நடக்கும். இவர்கள் இருவரையும் சமாதானப் படுத்துவது என் தந்தையாரின் வேலை.

பாவேந்தர் எங்கள் வீட்டுக்கு வரும்போது அரைக்கைச் சட்டை போட்டு வந்ததாக நினைவு. ஷர்ட்டாகவும் இல்லை. வலது தோளில் அங்கவஸ்திரம் இருக்கும். கால்களில் அந்தக் காலத்தில் 'பந்தோபுள்' (pantoufle) என்ற மிதியடியை அணிந்திருப்பார். இந்த மிதியடி அணிந்தால் இதற்கு ஒரு தனி மதிப்பு உண்டு. துரைசாமி பண்டிதர் காலில் கட்டை அணிந்திருப்பார்.

துரைசாமி பண்டிதர் வயதில் மூத்தவர். பாவேந்தர் இளையவர். இருவருக்கும் வித்வக் காய்ச்சல் அதிகம்தான். ஆனால் துரைசாமி பண்டிதர் காலமானதும் பாவேந்தர் மகிழவில்லை. என் தந்தையாரை நாடி வந்தார். "சிவகுரு! பண்டிதர் போயிட்டார். நாம் அவருக்கு நினைவுக் கடன் எடுக்க வேண்டும்" என்று கண்கலங்கக் கூறினார். 16ஆவது நாள் என்று நினைக்கிறேன். பாவேந்தர் தலைமையிலேயே தமிழாசிரியர்கள் ஒன்றுபட்டு நினைவுக் கடன் கூட்டம் நடத்தினர். கவிஞன் உள்ளம் எவ்வளவு உயர்ந்த உள்ளம் என்பதற்கு இஃதோர் எடுத்துக்காட்டு.

பிரெஞ்சு நாட்டில் பள்ளிக் கூடங்களில் மதச்சார்பற்ற கல்வி வழங்கப்பட வேண்டும் என்று சட்டம் கொண்டு வந்தவர் ஜுல்ஸ் ஃபெர்ரி (Jules Ferry) என்ற கல்வி அமைச்சர். இவரின் நூற்றாண்டு விழா புதுவையில் கொண்டாடப்பட்டது. இந்த விழா ஆசிரியர்கள் சார்பில் 2-வது தொடக்கப்பள்ளி கட்டடத்தில் கொண்டாடப்பட்டது.

இந்த விழாவில் நாடகத்தை எழுதித் தயாரித்தவர் என் தந்தையார். பாடல்கள் எழுதியவர் பாவேந்தர். எங்கள் வீட்டில் ஒத்திகை நடந்தது. பாவேந்தர் எங்கள் வீட்டுக்கு வந்தார். அங்கு நின்றிருந்த என்னைப் பார்த்து "உனக்குப் பாடத் தெரியுமாடா" என்று கேட்டார். அப்பொழுது எனக்கு வயது 20. பாடத் தெரியும் என்றேன். உடனே தாளை எடுத்து எழுதினார். என்னிடம் கொடுத்து "நான் பாடிக் காட்டுகிறேன். நீயும் பாடு" என்றார்.

அந்தப் பாடல் பின்வருமாறு:

கூவாயோ கருங்குயிலே யாரும் ஒன்றென்றே
கூவாயோ கருங்குயிலே!
ஏவலர் இந்தியர்கள் இரண்டாம் தொகுதி என்றார்
இக்குறை நீங்கிற்றென்றே இனிதாய் நன்றே
(கூவாயோ கருங்குயிலே)

இவ்வளவுதான் பாட்டு. அவர் பாட நானும் உடன் பாடினேன். நான் நன்றாகப் பாடினேன் போலும். அவருக்கு மிகுந்த மகிழ்ச்சி.

"சிவகுரு, உன் மகன் நல்லா பாடறான். அவன் மாமாவைப் போல இருப்பான் போலிருக்கு" என்று என் தந்தையாரிடம் சொல்லி மகிழ்ந்தார். அவர் என் மாமா என்று குறிப்பிட்டது அந்த நாளில் நாடகத்தில் புகழ்பெற்று இருந்த மதுரை எம்.ஜி. பைரவ சுந்தரம் பிள்ளை அவர்களை. அவர் தம் மகிழ்ச்சியை வெளிப்படுத்தும்போது அவர் முகத்தில் புன்முறுவல் கண்டேன். இந்தப் புன்முறுவலை அவர் ஒருவரிடம்தான் நான் பலமுறை கண்டு இருக்கிறேனே தவிர வேறு யாரிடமும் நான் பார்த்ததில்லை. எந்த நடிகரிடமும் அதைக் கண்டதில்லை. அழகின் சிரிப்பைக் கண்ட அவரிடம்தான் அந்தச் சிரிப்பின் அழகைக் காண முடியும். இந்தப் பாட்டு அந்த நாடகத்தில் சேர்க்கப்பட்டது.

"பாவேந்தர் கோபக்காரர். யாரும் அவரோடு நெருங்கிப் பழக முடியாது" என்று சொல்வார்கள். இதை அப்படியே என்னால் ஏற்றுக் கொள்ள முடியாது. தன் கொள்கையை வலியுறுத்தும்போது குரலை உயர்த்திப் பேசுவார். அவ்வளவுதான். புதிதாக பார்ப்பவர்களுக்குச் சண்டை போடுவது போல் இருக்கும். தன் கருத்தை நிலை நாட்டுவதற்கு அவர் காட்டும் ஆதாரங்களை அவ்வளவு எளிதில் மறுத்துவிட முடியாது. தன் கருத்துக்குத் தவறு என்று பட்டதை நண்பராக இருந்தாலும் சுட்டிக்காட்டத் தவறமாட்டார். இதனை ஒரு போதனாமுறைக் கூட்டத்தில் நான் கண்டிருக்கிறேன்.

*1943*ஆம் ஆண்டு வாக்கில் திங்கள் தோறும் போதனாமுறைக் கூட்டம் நடைபெறும். ஒரு முறை என் தந்தையார் தலைமை தாங்கப் பாவேந்தர் பேசினார். கால அட்டவணை வகுப்பதில் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. என் தந்தையார் அரசாங்கக் கருத்தை ஆதரித்துப் பேசினார். பாவேந்தர் ஒத்துக்கொள்ளவில்லை. "அவன் சொல்றதை ஏற்றுக்கொள்வதற்கு இந்தக் கூட்டம் ஏன்? ஒரு சுற்றுக்கடிதம் அனுப்பினால் செய்துவிட்டுப் போகிறோம். இந்தக் கால அட்டவணையை ஏற்க முடியாது. நாம் முடிவு செய்வதைத்தான் அரசு ஏற்க வேண்டும்" என்று வேகமாகப் பேசினார். கருத்து வாக்குக்கு விடப்பட்டது. பாவேந்தர் கருத்தே வெற்றி பெற்றது. என் தந்தையார் அவருக்கு நண்பர் மாத்திரம் இல்லை. இருவரும் ஒரே பள்ளியில் அப்பொழுது பணியாற்றிக் கொண்டிருந்தனர். இருந்தாலும் கொள்கை என்று வந்துவிட்டால் அவர் விட்மாட்டார் என்பதை அந்தக் கூட்டத்தில் கலந்துகொண்ட நானே நேரில் பார்த்தேன்.

பாவேந்தர் ஒரு கவிஞர் மட்டுமல்ல. தமிழாசிரியர்கள் தன்மானத்தோடு வாழ வேண்டும் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தவர். பாவேந்தரும் என் தந்தையாரும் புதுவைத் தமிழாசிரியர்களுக்கு ஒரு சிறந்த இடத்தைத் தேடி வைத்துவிட்டுச் சென்றனர். ஆம்; அவர்கள் இருவரும் மாணவர்களாகவும் பெருமையாக வாழ்ந்தனர்.மறைந்தும் அவர்கள் பெருமை எங்கும் பேசப்படுகிறது. பங்காரு பத்தர் போட்ட விதை நல்ல விதை.

* * *

# பாவேந்தர் புகழ் வாழ்க:

பாவலர் ப.எழில்வாணன்

பகுத்தறிவுச் சுளையெடுத்துத் தமிழின் சாற்றைப்
 பார்சுவைக்கப் பாக்கனிகள் படைத்த வல்லோர்!
வகுத்தநெறி கொள்கையெல்லாம் கடமை யெல்லாம்
 வாழ்வெல்லாம் தமிழுக்கே என்று வாழ்ந்தோர்!
தொகுத்தளித்த கருத்தெல்லாம் வீரம் மானம்
 தொண்டாகும்! தூயதமிழ் மாட்சிக் கென்றார்!
நகைத்தெழுந்தால் பகைநடுங்கும்! அவர்தாம் எங்கள்
 நற்றமிழின் தேனூற்று! பாவேந் தர்!காண்!

தமிழ்காத்த நல்லரிமா! தமிழர் வீட்டில்
 தணலாகக் குளிராக விளங்கி நாளும்
தமிழ்த்தாயை வளர்த்துவந்த புலிமா! நாட்டில்
 தமிழ்க்கேடு புரிந்தவரைத் தூக்கிச் சென்றே
தமிழ்க்கடலுள் மூழ்கடித்த புயலாம்! இன்றும்
 தண்ணிலவாய் வெண்கதிராய் விளங்கு கின்ற
தமிழ்வேந்தர் பாவேந்தர் புகழும் வாழ்க!
 தமிழுள்ள நாளெல்லாம் புகழாய் வாழ்வார்!



# பகைவரை மயக்கிய பாவேந்தர்

முனைவர் சுந்தர சண்முகனார்

## 1. வாழ்க்கைக் குறிப்புகள்:

பாவேந்தர் பாரதிதாசனாரைப் பற்றிக் கட்டுரை எழுதுபவர்கள், அவருடைய பாடல்களில் உள்ள சிறப்பை எடுத்துக்காட்டியே கட்டுரை எழுதுவார்கள். அவரோடு பல்லாண்டு காலம் நெருங்கிப் பழகிய யான், அவர் தொடர்பான வாழ்க்கைக் குறிப்புகள் இரண்டினை மட்டும் இவண் தருகிறேன்.

### 1.1. பகையின் தோற்றம்:

*1942*-ஆம் ஆண்டு கோடை விடுமுறை நாளில் நடந்த நிகழ்ச்சி ஒன்று முதலில் தரப்பெறும். அப்போது யான் மயிலம் கல்லூரியில் விரிவுரையாளனாகப் பணியாற்றிக்கொண்டிருந்தேன். விடுமுறையில் யான் புதுச்சேரிக்கு வந்திருந்தேன். ஒருநாள் புதுச்சேரியைச் சார்ந்த உப்பளம் என்னும் ஊரில் பாரதிதாசனார் தலைமையில் யான் சொற்பொழிவாற்றினேன். ஐயா அவர்கள் முடிவுரையில் என்னைத் தாறுமாறாகத் தாக்கிப் பேசிவிட்டார்கள். நான் பதில் கொடுக்க உடனே எழுந்தேன். என்னை மு.த. வேலாயுதனார் என்பவர் தடுத்து அமரச் செய்துவிட்டார். இளைஞனாகையால் ஐயாவின் மேல் யான் பெரும்பகை கொண்டிருந்தேன்.

#### 1.1.1. காரிருளில் மின்னல்:

*1942*-கோடை விடுமுறையில் இந்தப் பிணக்கு ஏற்பட்டது. விடுமுறை முடிந்ததும் மயிலம் தமிழ்க் கல்லூரிக்குப் பணியாற்றச் சென்றேன். காலையில் கல்லூரி வகுப்பு தொடங்குவதற்கு முன்பு, ஆசிரியர்களும் மாணாக்கர்களும் ஓரிடத்தில் வரிசையாக நின்று கூட்டுக் குழு வழிபாட்டுப் பாடல்கள் பாடிய பின்னரே வகுப்புக்குச் செல்வது வழக்கம். குழு வழிபாட்டில் முதலில் கடவுள் வணக்கப் பாடலும் அடுத்துத் தமிழ் வாழ்த்துப் பாடலும் பாடப்பெறும். தமிழ் வாழ்த்தாகச் சுப்பிரமணிய பாரதியார் பாடல்கள், சுந்தரம் பிள்ளையின் மனோன்மணிய பாடல்கள், கவியரசு வெங்கடாசலம் பிள்ளையின் பாடல்கள் முதலியவை மாறிமாறிப் பாடப்படும். மாணாக்கர் இருவர் பாடுவர். முதல் நாள் மாலையே, மறுநாள் காலை பாடப்போகும் பாடல்களை என்னிடம் அறிவித்து ஒப்புதல் பெறவேண்டும். அவ்வாறு தணிக்கை செய்யும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப் பட்டிருந்தது.

இந்த நிலையில், சில நாட்களில், பாரதிதாசனின் தமிழ் வாழ்த்துப்பாடலைப் பாடுவதற்கு என்னிடம் ஒப்புதல் கேட்பர். அவன் பாடலைக் பாடக்கூடாது. அவன் நாத்திகன். அவன் பாடலைப் பாடவே கூடாது என்று கண்டிப்பாக நான் மறுத்து விடுவது வழக்கம்.

ஒருநாள் சொற்பொழிவிற்காக நான் வெளியூர் சென்றிருந்தேன். மறுநாள் காலை வகுப்பு தொடங்குவதற்கு முன் வந்து சேரவேண்டும் எனக் குறிவைத்து விரைவாகக் கல்லூரிக்கு வந்துவிட்டேன். நான் கல்லூரிக்குள் நுழையும் போது குழு வழிபாடு நடந்து கொண்டிருந்தது. பாடல்கள் என்னால் தணிக்கை செய்யப்படவில்லை. நான் வந்தபோது இறைவணக்கப் பாடல் பாடிக் கொண்டிருந்தனர்; அடுத்துத் தமிழ் வாழ்த்துப் பாடல் பாடினர். அந்தத்தமிழ் வாழ்த்துப் பாடலைக் கேட்டதும் யான் மெய்மறந்து போனேன். மயிர்க்கூச்செறிந்து மகிழ்ச்சியில் திளைத்தேன். அந்தப் பாடல், பாவேந்தர் பாரதிதாசனார் இயற்றியதும், இப்போது புதுவை மாநில அரசால் இறைவணக்கப் பாடலாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றுக் கூட்டங்களில் பாடப்படுவதுமாகிய 'வாழ்வினில் செம்மையைச் செய்பவள் நீயே' என்று தொடங்கும் பாடல்தான். அப்பாடல் முழுவதும் வருமாறு:-

வாழ்வினில் செம்மையைச் செய்பவள் நீயே
மாண்புகள் நீயே என் தமிழ்த் தாயே
வீழ்வாரை வீழாது காப்பவள் நீயே
வீரரின் வீரமும் வெற்றியும் நீயே
தாழ்ந்திடும் நிலையினில் உனைவிடுப் பேனோ
தமிழன் எந்நாளும் தலை குனி வேனோ
சூழ்ந்தின்பம் நல்கிடும் பைந்தமிழ் அன்னாய்
தோன்றுடல் நீ; உயிர் நான் மறப்பேனோ
செந்தமிழே உயிரே நறுந்தேனே
செயலினை மூச்சினை உனக்களித்தேனே
நைந்தாயெனில் நைந்து போகும் என் வாழ்வு
நன்னிலை உனக்கெனில் எனக்கும் தானே
முந்தைய நாளினில் அறிவும் இலாது
மொய்த்த நன் மனிதராம் புதுப்புனல் மீது
செந்தாமரைக் காடு பூத்தது போலே
செழித்த என் தமிழே ஒளியே வாழி!

இந்தப் பாடலைக் கேட்ட பின்னர், பாவேந்தர் மீது எனக்கிருந்த பகையுணர்வு சிறிது சிறிதாகக் குறைந்து பின்னர் அறவே மறைந்தது. அவர்பால் எனக்கு ஒரு வகைப் பற்று ஏற்பட்டது. கார் இருளில் மின்னல் போலப் பகைமையிடையே இந்தப் பற்று ஏற்பட்டது. ஆனால், மின்னல் போல் மறைந்து விடாமல் இன்று வரையும் நீடித்து நிலைத்திருக்கின்றது. பகைவனை மயக்கிப் பகை மாற்றிய சிறப்புப் பாடலாகும் இது. இந்தப் பாடல் ஒன்றே கவிஞரின் புகழுக்குச் சான்று பகரப் போதுமே! அவரது தமிழ்ப்பற்றை என்னென்று வியப்பது!

*12. நாட்டுப் பற்று:*

பாவேந்தர் என்னிடம் கூறிய மிகவும் சுவையான செய்தி ஒன்று உள்ளது. இதை நான் கூட்டங்களில் கூடக் கூறியிருக்கிறேன். அதாவது:

பிரெஞ்சுக்காரர் புதுச்சேரியை ஆண்டு கொண்டிருந்தபோது, (பிரிட்டிஷ்) இந்தியாவில் விடுதலைப் போராட்டம் மிடுக்காக நடந்து கொண்டிருந்தது. அத்தகைய போராட்டம் புதுச்சேரியில் நடக்காதபடி பிரெஞ்சுக்கார ஆட்சியினர் கண்காணித்து வந்தனர். குறிப்பாக, அரசு ஊழியர்கள் கதர் உடையும் காந்தி குல்லாவும் அணியக்கூடாது என்பது கடுமையான ஆணையாகும்.

ஆனால், பிரெஞ்சு அரசுக் கல்வித்துறையில் பணியாற்றிக் கொண்டிருந்த நம் கவிஞர் கதராடையும் காந்தி குல்லாவும் அணிவாராம். பிரெஞ்சுக்காரக் கல்வித்துறைத் தலைவர் விடுமுறையான ஒரு நாளில் தமது வீட்டில் ஆசிரியர் கூட்டம் நடத்த ஏற்பாடு செய்திருந்தாராம். குறிப்பிட்ட பகுதியில் உள்ள ஆசிரியர்கள் அனைவரும் கட்டாயம் கூட்டத்திற்கு வர வேண்டுமாம்.

அவ்வாறே ஆசிரியர்கள், குறித்த நாளில் துறைத் தலைவரின் வீட்டில் சென்று அமர்ந்திருந்தனராம். அப்போது, கவிஞர் கதராடையும் காந்தி குல்லாவும் அணிந்து கொண்டு போய் ஆசிரியர்களுடன் அமர்ந்தாராம். ஆசிரியர்கள் சுப்புரத்தினம் என்னும் இயற்பெயருடைய கவிஞரைப் பார்த்து, டேய் சுப்புரத்தினம்! இந்த உடையுடன் இங்கே இருக்காதே - போய் வேறு உடை உடுத்திக் கொண்டு வா - அல்லது வீட்டுக்குப் போய்விடு - துரை (கல்வித்துறைத் தலைவர்) வந்து பார்த்தால் உன்னைத் தொலைத்து விடுவான் - உன் வேலைக்கே சீட்டுக் கிழித்து விடுவான் - எழுந்து போ போ - என்று வற்புறுத்தினார்களாம்.

ஆனால் கவிஞர் சிறிதும் அசைந்து கொடுக்கவில்லையாம்; துரை வந்து பார்க்கட்டும் - எனக்குச் சீட்டுக் கிழிக்கட்டும் - நான் எதற்கும் தயார் என்று கூறினாராம். மீண்டும் ஆசிரியர்கள் கேட்டுக் கொண்டும் கவிஞர் நகராமல் ஒரே உறுதியுடன் இருந்து விட்டாராம்.

பின்னர் சிறிது நேரத்தில் பிரெஞ்சுக்காரத் தலைவர் ஆசிரியர்கள் அமர்ந்திருந்த கூட்டத்துக்கு வந்தாராம். வந்ததும் கவிஞர் சுப்புரத்தினத்தை நெடு நேரம் ஏற இறங்கக் கவனித்துப் பார்த்தாராம்; பிறகு அவ்விடத்தினின்றும் அகன்று உள்ளே சென்றாராம்.

தலைவர் உள்ளே சென்றதும் ஆசிரியர்கள் மிகவும் அஞ்சி, கவிஞரை நோக்கி, டேய் சுப்புரத்தினம்! பார்த்தாயா? துரை எதற்கு உள்ளே போயிருக்கிறான் தெரியுமா? உனக்கு 'டிஸ்மிஸ்' ஆர்டர் எழுதிக் கொண்டு வரத்தான் போயிருக்கிறான். இனிமேலாவது எழுந்து போய்விடு - உன்னை மன்னித்தாலும் மன்னிப்பான். இல்லாவிடின் உன்னோடு எங்களுக்கும் ஏதாவது தொல்லை நேரிடலாம் என்று சொல்லிப் பார்த்தார்களாம். அப்போதும் கவிஞர் எழுந்து செல்லாமல் ('ஆணி அடித்துக் கொண்டும்', 'வேர் பாய்ந்தும்') அதே இடத்தில் அமர்ந்திருந்தாராம்.

சிறிது நேரத்தில் துரை, தம் மனைவியை அழைத்துக் கொண்டு வந்து கவிஞரைச் சுட்டிக்காட்டிப் பின்வருமாறு கூறினாராம்: 'இதோ பார் இவரை! கதர் ஆடையும் கதர் குல்லாவும் அணியக் கூடாது; அணிந்தால் வேலை போய்விடும் என்று நாம் விதி செய்துள்ளோம். அப்படியிருந்தும், இவர் எதற்கும் அஞ்சாமல் கதர் உடையுடன் என் எதிரிலேயே வந்திருக்கிறார். இவருடைய உறுதியான துணிவையும் நாட்டுப் பற்றையும் பார்! இப்படியொரு நாட்டுப் பற்றுடையவர் இருப்பார் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை' என்று தம் மனைவியிடம் கூறிக் கவிஞரை மெச்சினாராம். அதன் பிறகுதாம் ஆசிரியர்கள் அச்சம் நீங்கி மூச்சு விட்டார்களாம்.

இங்கே நாம், கவிஞரின் உறுதியான நாட்டுப்பற்றைப் பெரிதும் வியப்பதா? அல்லது கல்வித்துறைத் தலைவரின் பெருந்தன்மையைப் பற்றிப் பெரிதும் வியப்பதா? ஒன்றும் புரியவில்லையே; சரி இருவரையுமே வியப்போம். இச்செய்தியைக் கவிஞர் என்னிடம் நேரில் கூறியபோது நான் அவரை மிகவும் பாராட்டினேன்.

பகைவனாயிருந்த என்னைப் பணியவைத்தாற் போலவே, பிரெஞ்சுக்காரக் கல்வித்துறைத் தலைவரையும் வியப்படையச் செய்துவிட்ட பாவேந்தர் பாரதிதாசனாரின் புகழ் என்றென்றும் வாழ்க.

* * *

# பாவேந்தர் வழி போற்றுவோம்

புலவர் நாகி

இராசாதி இராசர்களின்
புகழ்பாடி வாழ்ந்தவர்கள்
நாட்டில்பல கவிஞருண்டு,
நலமேவும் மங்கையர்கள்
பாதாதி கேசம்வரை
பாடியவர் வாழ்ந்ததுண்டு,

இராப்போதில் நடக்கின்ற
பாடங்கள் பற்பலவும்
நவிலுவதில் சமர்த்தருண்டு,
நாலுமறை ஆறுவகை
சாத்திர புராணங்கள்
நாடோறும் சொன்னதுண்டு,

இராப்பாதி போனாலும்
நமக்கில்லை யுணவென்று
நலிந்தவர்கள் வாழ்வுதம்மை,
நயமாரச் சொல்கின்ற
நலமார வைக்கின்ற
நற்கவியிலாத நிலையில்,

திராவிடர்கள் வாழ்கின்ற
திருநாட்டின் தோன்றலெனத்
தீரர்பா ரதிதாசனார்
தோன்றியே மூடமதைத்
தோற்றோடச் செய்ததனால்
துள்ளியவர் வழிபோற்றுவோம்.

# பாவேந்தரும் நானும்

பேரா. இராம. இராமநாதன்

மக்களுடைய வாழ்க்கையில் எத்தனையோ நிகழ்ச்சிகள் நடைபெற்று மீட்டுவம் பெறுகின்ற போது மகிழ்ச்சியையும் வியப்பையும் தோற்றுவிக்கின்றது. பத்தாண்டுகள் பாவேந்தர் பாரதிதாசனாருடன் பழகிய அந்த நாட்களை நான் மீண்டும் எண்ணிப் பார்க்கச் செய்த பாரதிதாசன் பல்கலைக்கழகத்தினரை நன்றியுடன் நினைக்கிறேன்.

பாண்டிச்சேரி, 95, பெருமாள் கோவில் தெரு - ஓட்டுவீடு, முன்புறத்தில் பசுமாடு ஒன்று வைக்கோல் மேய்ந்து கொண்டிருந்தது. அருகில் தலையில் முண்டாசுடன் நல்ல கட்டுடல் வாய்ந்த ஐந்தடி மனிதர் பசுவினைத் தடவிக் கொடுத்து நிற்கிறார். சிவந்த உடல், நல்ல பருமன், அகன்ற நெற்றியில் கட்டையான புருவம், உயர்ந்த நாசி, ஆழ்ந்தகன்ற கூரிய விழிகள், அகன்ற காதுடன் நிமிர்ந்த பார்வை இந்த வடிவத்தின் சொந்தக்காரர்தான் நான் 1950இல் கண்ட புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்.

புரட்சிக் கவிஞரை நினைத்தாலே ஒரு புறம் பெருமிதம், மறுபுறம் அச்சம். நான் அவரைச் சந்தித்த நாட்களை, நினைத்துப் பார்க்கிறேன். 1953ஆம் ஆண்டு இலயோலாக் கல்லூரியில் முன்னிலை வகுப்பு மாணவன் நான். சென்னைப் பல்கலைக்கழகப் பேச்சுப் போட்டியில் "பாரதிதாசன் பாடல்களில் இயற்கை" என்ற தலைப்பில் பேசுவதற்கு "அழகின் சிரிப்பு" நூலை வாங்குவதற்குப் பாரி நிலையம் சென்றேன். மாடியில் புத்தகத்தை வாங்கும்போது, "தம்பி! இங்கு வா" என்ற கரகரப்பான குரலைக் கேட்டு நிமிர்ந்து பார்த்தேன். கவிஞர் பாரதிதாசன் என் கண் முன்! அப்படியே அவரின் காலில் வீழ்ந்த என்னைத் தூக்கி நிறுத்தி, என்னை வாழ்த்தினார்கள். வாழ்த்தியதோடு மட்டுமல்லாமல் உடன் அவர்கள் தங்கியிருந்த திரு. முல்லை முத்தையா அவர்கள் வீட்டிற்கும் அழைத்துச் சென்று உணவு தந்து பாராட்டிப் பேசினார்கள். அன்று தொடங்கிய அந்தப் பெரு நட்பு கவிஞரின் இறுதி நாள் வரை தொடர்ந்தது.

சென்னைக் கல்லூரிகளின் பேச்சுப் போட்டியில் முதல்வனாக வெற்றிபெற்று இலங்கைச் சொற்போருக்குப் புறப்பட்டேன். அந்த வழியனுப்பு வாழ்த்துக் கூட்டத்திற்குப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் தலைமை ஏற்றார்கள். அவ்விழாவில் என்னைப் பாராட்டிப் பேசியவர்களில் கலைவாணர் என்.எஸ்.கே., நடிகவேள் எம்.ஆர்.ராதா, எங்கள் தமிழ்த்துறைத் தலைவர் வளவன்பாண்டியனார் குறிப்பிடத்தகுந்தோர் ஆவர். அந்த விழாவில் தலைமையுரை யாற்றிய புரட்சிக் கவிஞர், என்னை அறிமுகப்படுத்தும்போது, " தோழர் இராம. இராமநாதன் என் பிள்ளை, நான் வளர்க்கும் மகவு, இன்று போட்டியில் வெற்றிபெற்று இலங்கை செல்லும் செய்தி எனக்குப் பேருவகையைத் தருகிறது. தோழர் இராம. இராமநாதன் அவர்கள் இன்று முதல் 'கதிரவன் என்றே அழைக்கப் பெறுதல் வேண்டும்', தமிழுக்கு ஞாயிறாக விளங்கும் ஆற்றல் அவருக்குண்டு" என்று என்னைக் கதிரவன் ஆக்கியவர் புரட்சிக் கவிஞரே.

புரட்சிக் கவிஞர் அவர்களுக்குச் சில அழுத்தமான பண்புகள் உண்டு. அவற்றுள் ஒன்று கண்டிப்பாக நடந்து கொள்வது. சொல்லியவாறு நடக்காவிட்டால் கடிதக் கணைகள் பறக்கும். 1955 இல் நடைபெற்ற நிகழ்ச்சி. காரைக்குடியில் திருக்குறள் விழா. புரட்சிக் கவிஞரும் நானும் பாண்டியில் இருந்து காரைக்குடிக்கு வருகிறோம். வருகிற வழியில் அரிமழத்தில் எங்கள் வீட்டில் தங்கிவிட்டு மாலையில் காரைக்குடிக்கு வந்தோம். புரட்சிக் கவிஞருக்கு ஆட்டிறைச்சி உணவை விட, மீன் உணவின்பால் மெத்த விருப்பம். அன்று இரவு சமையல் ஆள் முத்தையா மீன் உணவை நன்றாகச் சமைத்திருந்தான். அந்த உணவின் சிறப்பைக் கவிஞர் பாராட்டியவாறு, "அந்த சமையல்காரரை, எனக்கு, பாண்டிக்கு அனுப்பி விடு" என்று எனக்கு உத்தரவிட்டார்கள். மறுநாள் அது தொடர்பாகக் கடிதமும் வந்தது. அன்று மாலையே சமையல் ஆளைப் பாண்டிக்கு அனுப்பிவிட்டேன். அவன் போய்ச் சேர்வதற்குள் புரட்சிக் கவிஞருக்குப் பொறுமையில்லை. கடிதக் கணை வருகிறது. அன்புள்ள இராமநாதனோ, தோழர் கதிரவனோ, கடிதத்தில் காணோம். புரட்சிக் கவிஞரின் கோபம் கண்ணை மறைக்க, கடிதம் இப்படித் தொடங்குகிறது.

56-55

இன்னும் வரவில்லை சமையல்காரர். பிறர் காரியம் எவ்வளவு முக்கியமானதாயிருந்தாலும் அது பற்றி உங்கட்குக் கவலை இருப்பதில்லை.

ஆனால் என்னால் உங்கட்கு ஆகவேண்டியதாயிருந்தால் அதில் அதிகக் கவலை கொள்ளுகிறீர்கள்.

பாரதிதாசன்

திருக்குறள் கழகத் தலைவர்கட்கும் இதுபற்றி எழுதவேண்டியதாயிற்று.

மறுநாள் காலையில் மற்றொரு கடிதம் மன்னர் மன்னனிடம் இருந்து வருகிறது.

அன்புடையீர் !

சமையல் ஆள் முத்தையா இங்கு வந்து வேலை பார்க்கிறான். நலம்.

பிற பின்.

8.6.55 மன்னர் மன்னன்

கவிஞர் என்பால் பேரன்புடையவர்கள் என்பதால் என்னிடம் மிகுதியும் சினம் கொள்வார்கள். உடனே சினம் தணிந்து அளவுக்கு மேற்பட்ட அன்பும் காட்டுவார்கள்.

நான் இன்று ஒரு தமிழாசிரியனாக இருப்பதற்குப் புரட்சிக் கவிஞர்தான் ஒரு காரணம். சென்னை இலயோலாக் கல்லூரியின் தமிழ்ப் பேரவை தொடக்க விழாவிற்கு வருகைதந்த கவிஞர், அந்த விழாவில் பேசிய என்னைப் பாராட்டியதுடன், "நீ தமிழ் எம்.ஏ., படிக்க வேண்டும். அண்ணாமலையில் நண்பர் சிதம்பர நாதனுக்கு ஒரு கடிதம் தருகிறேன்" என்று ஆணையிட்டதோடு அங்கேயே வெள்ளைத்தாளில் ஒரு கடிதத்தையும் எழுதித்தந்தார்கள். அக்கடிதமே என் உயிர் மூச்சாயிற்று. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நுழையவும், தகைசால் பேராசிரியர் டாக்டர் அ. சிதம்பரநாதனார் அவர்களின் அன்பைப் பெறவும் துணை செய்தது.

நான் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பயின்ற காலத்தில் சிதம்பரத்திற்குப் பலமுறைகள் புரட்சிக் கவிஞர் அவர்கள் வந்ததுண்டு. ஒவ்வொரு முறையும், அவர்கள் நான்

மாணவனாய்த் தங்கியிருந்த என் விடுதி அறையில் தான் வந்து தங்கிப் பெருமைப்படுத்துவார்கள். பல்கலைக்கழகத்தில் விருந்தினர் விடுதி இருந்தும், பல்கலைக்கழகப் பதிவாளர் டி.டி.மீனாட்சி சுந்தரம் அவர்கள் புரட்சிக் கவிஞரின் நெருங்கிய நண்பராய் இருந்தும், கவிஞர் அவர்கள் என் விடுதியில், என்னுடன் சில நாட்கள் தங்குவது என்பது அவர்தம் நட்பின் திறத்தை எடுத்துக் காட்டுவதாகும். ஒவ்வொரு முறையும் நான் பழகும் நண்பர்கள் பற்றியும், தமிழ் வகுப்புகளின் தரம் பற்றியும், தமிழ் மொழியின் வளர்ச்சி பற்றியும் நீண்ட நேரம் உரையாடுவார்கள். ஒருமுறை அண்ணாமலைப் பல்கலைக்கழக மாணவர்களை ஓவியம் வரையுமாறும், அவற்றை என்னிடம் கொடுக்குமாறும், அவ்வாறு கொடுத்தால், அவற்றிற்கு ஏற்ற கவிதைகளை எழுதித் தம் "குயில்" இதழில் வெளியிடுவதாக அறிவித்தார்கள்.

அ.நகர்.

தோழர்களே! 6.8.56

படம் எழுதுங்கள். கவிதை புனையும் கருத்துப்பட எழுதி எனக்கு அனுப்புதற்குத் தோழர் கதிரவனிடம் கொடுங்கள். கவிதை மதத்தைக் குறித்ததாக இருத்தல் கூடாது. படத்திற்கேற்பக் கவிதை எழுதிப்படத்துடன் வெளியிட விருப்பம். இந்தச் செய்தி அண்ணாமலைப் பல்கலைக் கழக ஓவியர்கட்கு மட்டும்தான்.

படத்தின் அளவு பாரதிதாசன்.

1/8 'கிரௌன்' அளவு.

முகவரி: கதிரவன், 15,கம்பர் விடுதி.

மிகப் பெரும் கல்வியாளர்களும், தலைவர்களும் புரட்சிக் கவிஞரிடம் பெரு மதிப்பினைப் புலப்படுத்திய செய்திகள் என் நினைவில் நிழலாடுகின்றன. அத்தகைய நிகழ்ச்சிகளில் ஒன்றை மட்டும் இங்கே குறிப்பிடவிரும்புகின்றேன். 1960ஆம் ஆண்டு நான் அப்பொழுது எம்.லிட்., பட்டத்திற்காகப் பேராசிரியர் சொல்லின் செல்வர் ரா.பி. சேதுப்பிள்ளை அவர்களிடம் ஆய்வு மாணவனாக இருந்தேன். அன்று திங்கட் கிழமை, காலை 11 மணி அளவில் பேராசிரியர் எங்கட்கு ஆய்வு நெறிமுறைகள் பற்றி வகுப்பு ஒன்றினை நடத்திக் கொண்டிருந்தார்கள். திடீரென்று ஒரு கரகரப்பான குரல் - அளவிற்கு அதிகமாக அதிகாரத்தோடு கேட்டது. "யாரு, சேதுவா! அங்கே" புயல்போல் உள்ளே நுழைந்தார் புரட்சிக் கவிஞர். இயல்பாகவே, யாராவது பேராசியர் சேதுப்பிள்ளையைப் பார்க்க வேண்டுமென்றால், முன் கூட்டியே, வெளியே காப்பாளரிடம் அனுமதி பெற்றுப் பேராசிரியர் குறிப்பிடும் நேரத்தில்தான் பார்ப்பது வழக்கம். புரட்சிக் கவிஞருக்கு அதிலெல்லாம் நம்பிக்கை கிடையாது. அதுமட்டுமல்ல, அவ்வாறு உள்ளே புயலாய் நுழைந்த புரட்சிக் கவிஞரைப் பார்த்தவுடன், பேராசிரியர் சேதுப்பிள்ளை படபடப்புடன் எழுந்து நின்று, தன் இருக்கையைக் காட்டி அவர்களை அமர்த்திய பாங்கு, இன்றும் என் கண்மன் பசுமையாய் உள்ளது. "ஐயா, இராமனாதனிடம் சொல்லி இருந்தால், நானே தங்களை வந்து பார்ப்பேனே? ஏன் இவ்வளவு தூரம் தொல்லை?" என்று பேராசிரியர் கூறிய மொழிகள் அவரின் பெருந்தன்மையையும், புரட்சிக் கவிஞர்பால் அவருக்கிருந்த பெருமதிப்பையும் காட்டியது. கவிஞர் என்னை ஒருமுறை பார்த்துவிட்டு "சேது, நம்ம லட்சுமணசாமியைப் பார்க்க வந்தேன். நீயும்வா" என்று ஆணை பிறப்பித்துவிட்டு, என் கையைப் பிடித்து அழைத்துச் சென்றார்கள். பேராசிரியருக்கு நடுக்கம். துணைவேந்தரை யாரும் அலுவல் இல்லாமல் பார்ப்பது வழக்கம் இல்லை. புரட்சிக் கவிஞரின் செயலைத் தட்ட முடியாத பேராசிரியர் அவர்கள், கவிஞரின் பின்னால் பலி ஆடு போல நடந்து சென்ற காட்சியை நான் உணர முடிந்தது. முதல் மாடியில் உள்ள துணைவேந்தரைக் காணும் மரபு முறைகளை எல்லாம்

ஒதுக்கிவிட்டு, நேரே கவிஞர் அவர்கள் அறைக்குள் நுழைந்தவாறே "யாரு, லட்சுமணசாமி இருக்காரா?" என்று கேட்க, துணைவேந்தரின் உதவியாளர்கள் ஒன்றும் பேச இயலாது நிற்க, துணைவேந்தரே, அந்த தள்ளாத வயதில் தன்னிருக்கையிலிருந்து எழுந்து வெளியே வந்து, கவிஞரைப் பார்த்தவுடன் இருகைகளையும் கூப்பி, வணங்கி "ஐயா, வாருங்கள்; மகிழ்ச்சி ; இங்கே அமருங்கள்; நான் என்ன செய்ய வேண்டும், சொல்லுங்கள்" என்று பணிவன்புடன் கூறியதுடன், பணியாளர்களை அனுப்பிப் பருகுதற்குச் சுவைநீர் கொண்டுவருமாறு பணித்தார்கள். பேராசிரியரும், நானும் பேசாப் பொம்மைகளாய் அங்கே அமர்ந்து இக்காட்சியை வாழ்வில் முதல் முறையாகக் கண்டோம். கவிஞர் கட்டளை பிறப்பிக்கின்றார். "உனக்குக் கொடுக்கும்படி ஒரு நம்பர்'-யாரு, கண்ணதாசனிடம் கொடுத்தேன், வந்ததா?" என்றார்கள். முதலும் முடிவும் தெரியாத இந்தச் செய்திக்குத் துணைவேந்தர் தலையாட்டியதோடு, "என்ன செய்ய வேண்டும்? விபரமாகச் சொல்லுங்கள் ஐயா" என்று அன்புடன் கூறினார்கள். "நம்ம பையன், மெடிக்கல் சீட் வேணுமாம். உன்னிடம் சொல்லி இருக்கிறேன். கொடுக்க வேண்டியது நீ தான்" என்றார். பல்கலைக்கழகத் துணைவேந்தர் பரபரப்புடன் ஒன்றும் செய்ய இயலாதவராய், ஆனாலும் "அந்தப் பையன் நம்பர் என்ன? என்று கேட்டார்கள். உடனே கவிஞர் தம் சட்டப்பையிலிருந்து ஒரு சீட்டை எடுத்துக் கொடுத்தார்கள். எழுந்துநின்றவாறே, "அப்போ, நான் வரேன், நாளைக்கு விபரத்தைக் கதிரவனிடம் சொன்னால் போதும்" என்று ஆணை பிறப்பித்துவிட்டுப் புறப்பட்டுவிட்டார். மறுநாள் காலை 11 மணி அளவில் என்னை அழைப்பதாகத் துணைவேந்தர் அலுவலகப் பணியாள் வந்தார். இரண்டாவது முறையாகத் துணைவேந்தரைக் காணச் சென்ற எனக்கு அச்சம் ஒருபுறம், கவிஞரின் ஆணை மறுபுறம் ஆட்டிப்படைத்தது. துணைவேந்தரின் உதவியாளர் என்னிடம் ஒருதாளைக் காட்டி, கவிஞர் பாரதிதாசனார் கொடுத்த எண் எந்தவிதப் பரிந்துரையுமின்றி, தேர்வு செய்யப்பட்டுவிட்டது; உடனே இந்த செய்தியைக் கவிஞர் அவர்களிடம் தெரிவி என்று பணித்தார்கள். செய்தி தெரிவித்த தகவலைத் துணைவேந்தர் பிற்பகலுக்குள் அறிதல் நலம் என்றும் கூறினார்கள். இந்த இனிப்பான செய்தியைக் கவிஞரிடம் தெரிவித்துப் பிற்பகலில் துணைவேந்தருக்குக் கவிஞரின் நன்றியையும் தெரிவித்தேன்.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார் வெறும் பொருளுக்குத் தலை வணங்குபவர் அல்லர், அன்பு ஒன்றே அவரை ஆட்டிப்படைக்க வல்லது என்பது எளிதில் விளங்கும். தம்மால் மதிக்கப்படும் உயிர் நண்பர்களுக்குக் கவிஞர் தன் உயர் நிலைதனை மறந்து, தன்னையும் வருத்திக்கொண்டு தொண்டாற்றும் தகைமை உடையவர். அன்னாருடன் நான் பழகிய பத்தாண்டுகளில் பெற்ற பட்டறிவினை "விரிக்கின் அகலும் தொகுப்பின் எஞ்சும்". அளவிலாப் புகழும் ஆற்றலும் மிக்கு விளங்கிய பாவேந்தரின் பெருமைகள் எண்ணிப் போற்றத்தக்கவையாகும்.

* * *

# எண்ணத்திரையில் வண்ணக்குயில்

**பாவலர் மணிசித்தன்**

"திருவள்ளுவர், கம்பர் முதலிய பெரும் புலவர்கள் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தோமில்லையே" என்று ஏங்கிய தமிழறிஞர்கள் பலர் இருந்தனர்.

"ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒருமுறையே ஒரு கவிஞன் தோன்றுகிறான்" என்றார் ஓர் அறிஞர்.

அதனால், எல்லோருக்கும் பெருங்கவிஞர்கள் வாழ்ந்த காலத்தில் வாழும் பேறு கிட்டுவது இயலாத தொன்றேயாம்.

பாவேந்தர் சொன்னார்: "பாரதியாருடன் தொடர்பு கொண்டிருந்த பத்தாண்டுகள் மட்டுமே தாம் வாழ்ந்த காலம்" என்று!

பாரதியாரும் பாவேந்தரும் ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒருமுறை தோன்றும் கவிஞர்களே! அவர்கள் யுகத்தில் வாழ்ந்தவர்கள் நாம் - என்கிற பெருமை நமக்குண்டு.

"பாவேந்தர் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தோம்" என்கிற பெருமை மட்டுமல்ல; அவரிடம் படித்துப் பழகித் தொண்டு பூண்டொழுகிய பெருமையும் எனக்குண்டு.

அந்த வண்ணக் குயிலிடம் பயின்ற காலத்தில் நடந்த சில செய்திகளை இன்று எண்ணத் திரையில் கொண்டுவர முயல்கின்றேன். சிலவற்றை இங்குப் படைக்கின்றேன்.

படி:

1935. யான் நன்னூல் யாப்பருங்கலக் காரிகை முதலிய நூல்களைப் பாவேந்தரிடம் பாடங் கேட்டுக் கொண்டிருந்தபோது ஒரு பாடல் எழுதி அதைப் பாவேந்தரிடம் காட்டினேன்.

அதை ப் படித்த கவிஞர் "முதலில் நன்றாய்ப் படி; பிறகு பாட்டெழுதலாம்" என்று அறிவுரை தந்தார்.

இப்போது வெளிவரும் பிழைமலிந்த பாடல்களைக் கண்டால் அவர் உள்ளம் என்ன பாடுபடுமோ!

"தமிழ்க் கவிஞர்கள் பெருகுதல் வேண்டும்; எண்ணங்களைக் கவிதையால் அமைத்தல் வேண்டும்" என்று எண்ணியவர் பாவேந்தர்.

'குயில்' இதழ் நடந்து கொண்டிருந்தபோது நானும் அதில் பங்கு கொண்டேன். அந்நாளில் மதுரைப் பக்கத்தைச் சேர்ந்த ஓர் இளைஞர் தாமெழுதிய சில பாடல்களைக் கொண்டு வந்து கொடுத்து அவைகளைக் குயிலில் வெளியிட வேண்டுமென்றார் அப்பாடல்களைப்

பாவேந்தரிடம் காட்டியபோது அவர் அதில் ஒன்றைக் கூட வெளியிட அனுமதிக்கவில்லை. ஏன்? அவைகள் பிழை மலிந்தனவாக இருந்தமையே காரணம்.

அந்த இளைஞன் அப்போது குயில் இதழின் அமைச்சராக இருந்த திரு . தண்டபாணியாரை நெருக்கலானார். தண்டபாணியார் என்னிடம் "கவிஞரிடம் சொல்லிப் பாருங்கள்" என்றார்.

கவிஞரிடம் எப்படியாவது அவன் பாட்டொன்றை வெளியிட அனுமதி கேட்டேன்.

அதற்குப் பாவேந்தர், "கூடாது; ஆரம்ப இலக்கணமே தெரியவில்லை இவனுக்கு; இவனெல்லாம் பாட்டெழுத வந்துவிட்டான் " என்றார்.

" ஒரு பாடலையாவது நீங்கள் திருத்திக் கொடுங்கள்; போடலாம் " என்றேன்.

"திருத்தினால் அது என் பாட்டாகிவிடும்" என்று பதிலிறுத்தார்.

"தமிழ்க்கவிஞர்கள் பெருகுதல் வேண்டும், அவர்கள் இலக்கிய இலக்கணங்களை நன்கு கற்றுக் கவிபாட வேண்டும்; தமிழின் அழகு இலக்கணத்தில் தான் உள்ளது" என்று கருதியது அவர் திருவுள்ளம்.

'பாவேந்தர் பரம்பரை' அறிய வேண்டிய செய்திதானே இது!

## நாட்டுப்பற்று:

செல்வி (மிஸ்) மேயோ என்னும் ஆங்கில நாட்டு மாதொருத்தி பாரத நாட்டைச் சுற்றிப் பார்க்க வந்தாள்.

பாரத நாட்டின் பண்பாடுகளையும், இலக்கியங்களையும் மேலைநாடுகளில் சுவாமி விவேகானந்தர் தம் உரைகளின் மூலம் விளக்கியதைக் கேட்டவள் அவள் - என்று தெரிகிறது.

மிஸ். மேயோ பாரத நாட்டைச் சுற்றிப் பார்த்துவிட்டு, இங்குள்ள மக்களின் கீழான நடைமுறைகளை எல்லாம் தொகுத்து "இதுதான் இந்தியா" என்றொரு நூல் எழுதியிருந்தாள்.

கேரள நாட்டில் அந்நாளில் நடைபெற்றுக் கொண்டிருந்த சில அநாகரிகச் செயல்களையும், நாட்டின் ஏனைய பகுதிகளில் நடைபெறும் விரும்பத் தகாத நிகழ்ச்சிகளையும் அவள் சுட்டிக் காட்டியிருந்தாள்.

இந்திய நாட்டை " ஒரு குப்பை மேடு" என்று தன் நூலை முடித்திருந்தாள்.

அப்போதைய அகில இந்திய காங்கிரஸ் இயக்கம் அவள் கூற்றை மறுத்தது.

மிஸ். மேயோவின் கூற்றை அப்படியே ஏற்றுக் கொண்டு, "அவள் எழுதியவை அனைத்தும் உண்மையே" என்று ஒருவர் எழுதினார். அவரே கோவை அறிஞர் ஏ. அய்யாமுத்து அவர்கள். அய்யாமுத்து நல்ல சிந்தனையாளர்.

"அவள் குறிப்பிட்டுள்ள அநாகரிகச் செயல்கள் இங்கு உளவே; உண்மையைத்தானே எழுதியிருக்கிறாள்" என்பது அவர் நூலின் கருத்து. அந்நூலின் பெயர் "மேயோ கூற்று மெய்யா-பொய்யா?" என்பது. இந்நிலையில், நம் பாவேந்தர் ஒரு சிறு நூல் எழுதினார். அது "மேயோ ஒரு பன்றி" என்பது. அந்நூல் இப்போது கிடைக்கவில்லை.

அந்நூலின் சுருங்கிய கருத்து: "இந்தியா ஒரு நந்தவனம்; அதன் அழகை அவள் முற்றும் உணர்ந்தாள் அல்லள். பூஞ்சோலையைப் பெருக்கிக் கொட்டுகிற எருக்குழியையே (குறைகளையே) அவள் நந்தவனம் என்று கருதிவிட்டாள்.

குப்பை கூளங்களே அவள் கண்களில் பட்டுள்ளன.

நமது நாட்டில் பார்க்க வேண்டிய இடங்களை - படிக்க வேண்டிய நூல்களை - பண்பாட்டை - அவள் கண்டு கேட்டு அறியவில்லை.

குப்பை கூளத்தை - சாக்கடையைத் தேடிச் சீய்க்கும் குணம் பன்றிக்குத்தானே உண்டு." என்பது.

பாரத நாட்டை ஒருவர் குறைத்துப் பேசுவதைக் கேட்கப் பொறாதவர் நம் பாவேந்தர் என்பது இதனால் விளங்குகிறதல்லவா?

## அச்சில் வளைவு:

புதுவை மாநில விடுதலைக்கு முன் 1955இல் நடந்த முதல் தேர்தலில் அப்போது இங்கு நிறுவப்பட்டிருந்த அரசியல் அமைப்பாகிய 'சனநாயக மக்கள் முன்னணி'யின் சார்பில் பாவேந்தர் சட்டசபைக்குப் போட்டியிட்டு வென்றார்.

அவர் சார்ந்திருந்த மக்கள் முன்னணி அமைப்பு எதிர்க்கட்சியாயிற்று.

பொது உடைமை இயக்கத் தலைவர் வ.சுப்பையா அவர்கள் எதிர்க்கட்சித் தலைவரானார். பாவேந்தர் துணைத்தலைவரானார்.

அந்நாளில் தேர்தல் கூட்டங்களில் பாவேந்தர் பேசிய பேச்சுக்கள் புதுமையும் நகைச்சுவையும் அமைந்த எழிலுரைகளாக அமைந்தன.

ஒரு கூட்டத்தில் அவர் பேசியதன் சுருக்கம்: ".... எங்கும் கொலை,கொள்ளை, பசி, பட்டினி, வேலையில்லாத் திண்டாட்டம்' ஏன் இப்படி?

"அச்சில் வளைவு" என்றார்.

"அச்சில் வளைவு " என்பதற்கு அவர் தந்த விளக்கம்: "சிலர் மயிலம் விழாவுக்காக ஒரு கட்டை வண்டியில் ஏறிப் பயணம் செய்தனர்.

வண்டி ஆடி அசைந்து செல்கிறது. 'கடக்' , 'கடக்' என்ற ஒலி இடையறாது கேட்கிறது. வண்டியில் உட்கார முடியவில்லை. குலுக்கித் தள்ளுகிறது. இந்த அல்லலுக்குக் காரணம் அவர்களுக்குப் புரியவில்லை. தொடர்ந்து இடர்ப்படுகின்றனர்.

காரணம் என்ன? "அச்சில் வளைவு"

வண்டியின் அச்சில் வளைவு: வண்டி எப்படி ஒழுங்காகச் செல்லும்?

அது போல அரசாங்கத்தின் அச்சில் வளைவு. மக்களின் துன்ப நிலைக்கு அதுவே காரணம்.

அச்சில் வளைவிருந்தால் அதை நிமிர்த்த வேண்டும்; அல்லது மாற்றியமைக்க வேண்டும்.

"கோல் வளைந்தால் குடிகளுக்குத் துன்பம் தானே !" அதை நீங்கள் தான் நிமிர்த்த வேண்டும்.

உங்கள் வாழ்க்கைப் பயணம் சீராக வேண்டுமென்றால் "அச்சு வளைவை நிமிர்த்துங்கள்; அல்லது மாற்றி அமையுங்கள்" என்பதாம்.

தேர்தல் பிரச்சாரம் கூட இலக்கிய நயத்தோடு அமைந்துள்ளதன்றோ?

## கற்பு:

*1940 என்று நினைவு.*

கவிஞர் புதுவைச் சிவம் தலைமையில் நாங்கள் சிலர் சேர்ந்து "தமிழ் மன்றம்" என்றொரு இலக்கிய அமைப்பை நிறுவித் திங்கள் தோறும் இலக்கியச் சொற்பொழிவுகள் நடத்தி வந்தோம்.

ஒரு திங்களில் நடந்த கூட்டத்திற்குப் பாவேந்தர் தலைமை ஏற்றார். புதுவைப் புலவர் மு.த.வேலாயுதனார் 'கண்ணகி' என்ற தலைப்பில் பேசினார்.

அவர் பேச்சில், "பெண் தன் கற்பைக் காத்துக் கொண்டால் மட்டும் போதாது. பிறர் நெஞ்சு புகாமலும் தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும்" என்றார்.

அவ்வளவில் பாவேந்தர் "முடிஞ்சிதா" (முடிந்ததா?) என்றார்.

"இதோ முடித்து விடுகிறேன்" என்று சொல்லிச் சில மணித் துளிகளில் பேச்சை முடித்துக் கொண்டார் மு.த.வே.

பாவேந்தர் பேசத் தொடங்கினார்.

"இவன் - நான் துடுக்கனாயிருப்பேன்; நீ அடக்க முடையவளா இருக்கவேணும்" என்கிறான்.

"எங்க, நம்ம மாதிரி இவளும் தொடங்கிவிடப்போறாளோண்ணு இவனுக்குப் பயம்: என்னென்னமோ சட்டம் பேசறான். இவன்களுக்குப் புலவர்களும் உடந்தை! பாட்டிலே எழுதி வச்சுட்டாங்க.

இலக்கியங்களிலே பாருங்க - அரசிக்குக் காவல் - கூன், குருடு, நொண்டி, முடம் இப்படி அங்கஈனமானவர்களை வைப்பான்.

அரசனுக்கு எல்லா வேலைகளுக்கும் பணிப்பெண்கள்; அதுவும் இளம்பெண்கள்; சும்மாவா இருப்பான்? இது அரசநீதி.

கற்பு என்பது கல்வி, ஒழுக்கம்; அது ஆணுக்கும் பெண்ணுக்கும் பொது.

இவளை, அவன் நெனச்சிக்கிட்டிருந்தா - பாவம், அவள் என்ன பண்ணுவாள்? புதுசா சிந்தியுங்க!

தில்லித் துருக்கர், பெண்களுக்கு முகத்திரை இட்டு வெளியில் விட்டார்கள். இவனுங்க எவ்வளவு தப்புப் பண்ணி இருந்தா அவனுங்க அப்படி செஞ்சியிருப்பானுங்க?

ஆண், பெண் இருவரும் ஒழுக்கமுடையவர்களாயிருந்தா எல்லாம் சரியாப் போகும்." என்று முடித்தார்.

## மேள தாளத்துடன் பிறந்த பாடல்:

*1936 என்று நினைவு.*

ஒரு ஞாயிற்றுக் கிழமை.

பாவேந்தர் இருந்த செங்குந்தர் வீதி பங்களா வீட்டிற்கு எதிரே உள்ள தெருவிற்கு "காந்தீன் வீதி" என்று பெயர்.

அதில் ஒரு காலி ஓட்டுவீடு; மிகப் பழைய வீடு அது.

"அந்த வீட்டில் பாவேந்தர் இருக்கிறார்" என்று பங்களா வீட்டில் சொன்னார்கள். நான் என் நண்பர் தனசேகரனாருடன் அவ்வீட்டிற்குச் சென்றேன்.

காலை 10 மணி இருக்கும்.

அவ்வீட்டில் புதுவையில் அந்நாளில் புகழ்பெற்று விளங்கிய தம்பியப்பன் என்கிற நாதசுரக்காரர் தம் இசைக்கருவிகளுடன் வீற்றிருக்கிறார். அவருக்குத் துணையாக ஒரு தவில்காரர் (பெயர் முனிசாமி என்ற நினைவு) அமர்ந்திருக்கிறார், பாவேந்தர் அவர்களுடன் உரையாடிக் கொண்டிருக்கிறார்.

சிறிது நேரத்தில் தம்பியப்பன் நாதசுரம் வாசிக்கத் தொடங்குகிறார். அக்காலத்தில் இசை மேதையாக விளங்கிய எம்.கே.தியாகராஜ பாகவதர் பாடிப் பிரபலமாயிருந்த பாடல்.

"பூமியில் மானிட ஜென்ம மடைந்து மோர்" என்று தொடங்கும் சிந்து பைரவிப் பாடல் அதை 'அசோக் குமார்' என்ற திரைப்படத்தில் அவர் பாடியிருந்தார்.

அப்பாடலைத் தம்பியப்பன் நாதசுரத்தில் வழங்கலானார். பாவேந்தர் கரும்பலகையில் அந்த இசைக்கேற்ப பாடல் எழுதத் தொடங்கினார்.

அப்பாடல்களில் ஒன்றை மட்டும் குறிப்பிடுகிறேன்.

அது,

வாழ்வினில் செம்மையைச் செய்பவள் நீயே
மாண்புகள் நீயே என்தமிழ்த் தாயே
வீழ்வாரை வீழாது காப்பவள் நீயே
வீரரின் வீரமும் வெற்றியும் நீயே!

என்னும் தமிழ்த்தாய் வணக்கப்பாடல்.

இப்பாடலை அன்று பாவேந்தர் எழுதி முடிக்க ஒரு மணி நேரத்திற்கு மேலாயிற்று.

பாடலை எழுதி முடித்த பின்னர், தம்பியப்பனை அடக்கி வாசிக்கச் சொல்லித் தானும் அவ்விசைக் கேற்பப் பாடலானார்.

பாடல் சிறப்பாக அமைந்து விட்டதில் கவிஞருக்குப் பெருமகிழ்ச்சி.

பேசும்படங்களுக்குப் பாட்டெழுதுபவர்கள் இசைக்கேற்ப எழுதுவர் என்பது நாமறிந்த ஒன்று.

கவிஞர் படங்களுக்குப் பாடல்கள் எழுதிப் பழக்கப்பட்டவர் ஆதலின் இவ்வுத்தியைக் கையாண்டார் போலும்!

மேளதாளத்தோடு உருவான அப்பாடல் இன்று புதுவை அரசின் இறைவணக்கப் பாடலாக அமைந்து வீறு பெற்றுள்ளது.

என் ஆசானின் வரலாற்றுச் சுவடியில் சில பொன்னேடுகள் இவை. விரிப்பிற் பெருகுமாதலின் இவ்வளவில் அமைகின்றேன்.

வாழ்க பாவேந்தர் நாமம்!



.........................பெண் ஆண் என்ற
இரண்டுருளை யால்நடக்கும் இன்பவாழ்க்கை

- பாரதிதாசன்

ஓவியம்: கே. சங்கரன்

# நெஞ்சைத் தொட்ட பாராட்டு

**சீனி. விசுவநாதன்**

இந்த இருபதாம் நூற்றாண்டு தமிழக வரலாற்றில் தனித்த சிறப்புக்குரிய நூற்றாண்டாகக் கருதப்படுகின்றது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றி, இலக்கியத்துறை மற்றும் சமூகத் துறைகளில் பாடுபட்டு, அவற்றின் முன்னேற்றத்திற்காக உழைத்து மக்களின் நெஞ்சங்களிலே குடிகொண்ட பெருமக்களுக்கெல்லாம் நூற்றாண்டு விழாக் கொண்டாடுகின்ற பெருமை இந்த இருபதாம் நூற்றாண்டிற்கு வாய்த்திருக்கின்றது அல்லவோ?

பல்வேறு துறைகளில் தம் முத்திரைகளைப் பதித்த சாதனைகளைப் படைத்த-பெருமக்களின் நூற்றாண்டு விழாக்களைச் சீரும் சிறப்புமாகக் கொண்டாடி, அப்பெருமக்களை நினைவூட்டுகிற இந்த இருபதாம் நூற்றாண்டில் வாழும் நாமும் ஒருவகையில் கொடுத்து வைத்தவர்கள்தாம்! அந்த வகையில் நாம் பெருமையடையத்தான் வேண்டும்.

'தம் புகழ் நிறுவித் தாம் மாய்ந்த' பெருமக்களின் வரிசையில் இதுவேளை நூற்றாண்டு விழாக் காணும் பாவேந்தர் பாரதிதாசன் அவர்களும் இடம் பெறுகிறார்.

தமிழ் நாட்டைப் பொறுத்த அளவில் மட்டுமில்லை-தமிழ் அறிந்த, தமிழ்மக்கள் வாழும் தேசம் எங்கும் பாரதிதாசன் அவர்களைத் தெரியாதவர்கள் இருக்க முடியாது. பாரதிதாசன் அவர்களைப் "பாவேந்தர்" எனப் போற்றிப் புகழ்வதில் தனி இன்பம் கண்டனர், தமிழ் இலக்கிய உலகினர்!

தமிழ்மொழிக்கும், தமிழ் மக்களுக்கும் பாரதிதாசன் ஆற்றியுள்ள தொண்டுகளை அறிஞர் உலகம் பாராட்டி மகிழ்கின்றது; புகழ் மாலைகள் சூட்டிப் பெருமிதம் கொள்கின்றது.

இன்றைய தமிழகத்தில் 'பாரதிதாசன் பரம்பரை' என்று ஒரு பரம்பரையே உருவாகியுள்ளது.

'தமிழுக்குத் தொண்டு செய்வோன் சாவதில்லை' என்று வாய் மணக்க-நெஞ்சு இனிக்கப் பாடியவர் பாரதிதாசன் என்பதை நாம் அறிவோம். இப்படி அவர் பாடிய பாடல் வரிகளுக்கு அவரே இலக்கியமாகத் திகழ்கிறார்; பாரதி பெயரோடு இந்த நிலவுலகில் நாளும் வாழ்கிறார்.

பாரதிதாசன் - பாரதிமேல் கொண்ட அளவற்ற பற்றின் காரணமாகத் தாமே சூட்டிக் கொண்ட பெயர்; புனைபெயர். ஆனால் தாமே விரும்பிச் சூட்டிக் கொண்ட பெயரைப் புனைபெயராகவே அவர் கருதினாரில்லை. "நான் பாரதிதாசன் என்று பெயர் வைத்துக் கொண்டிருப்பதில் பிழை ஒன்றும் இல்லை என்றும் கருதுகிறேன்" என்று பெருமையாக, வெளிப்படையாகக் கூறியவருங்கூட.

சுப்புரத்தினம் என்பதே இயற்பெயர்; பெற்றோர் இட்ட பெயர். ஆயின், பற்றின் காரணமாக வைத்துக்கொண்ட பெயரே இன்று நிலைத்து விட்டது.

பாரதிக்குத் தாசனாகவே மாறிய பெருமையும் கவிஞர் ஒருவருக்கே வாய்த்தது.

பல எதிர்ப்புகள் ஏற்பட்ட போதும், பெயரை மாற்றிக் கொள்ளப் பலர் வற்புறுத்திய சமயங்களிலும் எதிர்ப்புகளைக் கண்டு மருளாமல், ஏசல்களைக் கேட்டுத் துவளாமல், தமக்குத் தாமே விரும்பி ஏற்றுக் கொண்ட பெயரை இறுதிக் காலம் வரை மாற்றிக் கொள்ளாமல் வாழ்ந்த பெருமைக்குரிய மாமனிதர் பாவேந்தர்!

சொல்லப்போனால், பெற்றோர் தமக்கு இட்ட 'சுப்புரத்தினம்' என்ற பெயரைத் 'தியாகம்' செய்துவிட்டு, பாரதியின் கொள்கைகளால் கவரப்பட்டு, அவருடைய தொடர்பினால் எளிய நடையில் பாமர மக்களுக்கும் புரியும்வகையில் அவர்களுக்காகப் பாடல் எழுதும் முறையைக் கைக்கொண்டு வாழ்நாள் முழுவதும் பாரதிக்குத் தாசனாகவே வாழ்ந்தார் பாவேந்தர்! ஆம்; பாரதியின் ஏக வாரிசாகவே அவர் விளங்கினார்.

பாரதிக்குத் தாசன் என்று அவர் தம்மை அழைத்துக் கொண்டபோதிலும், பாரதியைப் புதுச்சேரியில் சந்திப்பதற்கு முன்னமேயே சுப்புரத்தினம் கவிஞராகவே விளங்கியவர்தாம்.

ஒரு கவிஞரை மற்றொரு கவிஞர் மதித்தார், பெருமைப்பட வாழ்ந்தார் என்பது ஒருபுறமிருக்க, பாரதி-பாரதிதாசன் இருவர்க்கும் சில வாழ்வுப் பொருத்தங்களும் சந்தர்ப்ப வசத்தால் ஒத்திருக்கக் காணலாம்.

ஆரம்ப நாளில் பாரதிக்கு வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புக்கள் எழுதிய பலரும், பாரதியின் பிறந்த நாளை 1882 நவம்பர் 11 என்றே குறித்தனர். பிற்பாடுதான் பாரதியின் பிறந்த நாள் 1882 டிசம்பர் 11 என்பது தெளிவாக்கப்பட்டது.

பாரதிக்குத் தாசனாக மாறியவரான சுப்புரத்தினத்தின் பிறந்த நாளும் அவருடைய நூல்களிலே இரண்டு விதமாகக் குறிப்பிட்டுள்ள விந்தையைத் காணலாம்.

1938இல் வெளிப்பட்ட " பாரதிதாசன் கவிதைகள்" நூலிலே கவிஞரின் பிறந்த தேதியாக 17.4.1891 என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

தற்போதைய பதிப்புகளில் எல்லாம், கவிஞருடைய பிறந்த நாளாக 29.4.1891 என்றே திருத்தமும் பெற்றுள்ள செய்தியையும் பார்க்கிறோம்.

பாரதிக்கு மாதத்தைக் குறிப்பிடும்போது பிழை நேர்ந்துவிட்டது; பாரதிதாசனுக்கோ தேதியைக் குறிப்பிடுவதில் பிழை நேர்ந்திருக்கிறது.

பாரதியும் புகழ்பெற்ற ஆங்கிலக் கவிஞரான ஷெல்லியின் கருத்துக்களால் கவரப்பட்டு, தமக்கு 'ஷெல்லிதாஸ்'என்று புனைபெயர் சூட்டிக் கொண்டவர்தாமே.

பாரதியின் தந்தையாரான சின்னசாமி ஐயர் அந்தக் காலத்தில், ஏழைகள் மீது கொண்ட இரக்கத்தாலும், நம்மவர் தொழில் முயற்சியில் அக்கறை கொண்டதாலும் எட்டயபுரத்தில் பருத்தி இயந்திர மனைச் சாலையை ஏற்படுத்தியதும், பின்னர் பற்பல வணிக முயற்சிகளில் ஈடுபட்டும் ஊணர் செய்த சதியாலே ஓங்கி நின்ற செல்வம் அனைத்தையும் இழந்தார் என்றும் பாரதியின் சரிதம் சொல்லுகின்றது.

பாரதிதாசனின் தகப்பனார் கனகசபை முதலியார் பெரிய வணிகராகப் புதுவையில் வள வாழ்வு வாழ்ந்தவர் என்றும், அவர் ஒரு சமயம் பிரெஞ்சு நாட்டுக்குக் கப்பலில் சரக்கு ஏற்றி அனுப்பினார் என்றும், அப்படி சரக்கு ஏற்றிச் சென்ற கப்பல் கவிழ்ந்து போனதால், வளமான வாழ்வு குன்றி விட்டது என்றும் பாரதிதாசன் வாழ்க்கை வரலாறு தகவல் தெரிவிக்கின்றது.

இப்படி வாழ்விலும் தாழ்விலும் இருபெருங் கவிஞர்களுடைய குடும்பத்தவர்களிடையே ஒற்றுமை நிலவுகின்றது. இப்படி இன்னும் எத்தனையோ இருக்கலாம். அவை தனித்த ஆய்வுக்குரியன.

பாரதியைப் பல வகைகளிலும் தம்முடைய வழிகாட்டியாகக் கொண்ட பாரதிதாசன் அவர்களை-தம்முடைய ஆசானான பாரதி புகழைப் பரப்பி வந்த பாரதிதாசன் அவர்களை நான் சந்திப்பேன் என்றோ, அவருடைய பாராட்டுதல்களைப் பெறுவேன் என்றோ கனவிலும் கருதாத நிலையில், சந்தர்ப்ப வசத்தால் அவருடன் தொடர்பு கொண்டவன், நான்.

சந்தர்ப்பவசம் என்று சொல்லுவதை விட, தற்செயலான சம்பவம் என்று சொல்லுவதுதான் பொருத்தமாக இருக்கும்.

அப்போது, சென்னை வாழ்க்கை எனக்கு அமைந்துங்கூடப் பாவேந்தரைப் பார்த்தறியாதவன், நான். ஆனால், பள்ளி நாட்களில், பாடநூல்களில் 'தமிழ்ச் செய்யுள்' பகுதியில், இடம் பெற்றிருந்த பாவேந்தரின் சில பாடல்களைப் படிக்க நேர்ந்ததுண்டு; சிறிதளவே நூல்களிலும், தமிழ் 'நோட்ஸ்' களிலும் தரப்பட்டிருந்த வாழ்க்கைச் சுருக்கத்தைப் படித்ததும் உண்டு; அந்த நாளில் திரைப்படங்களில் ஒலித்த பாடல்களைக் கேட்டுப் பரவசப்பட்டதுமுண்டு; கவிஞரின் 'வளையாபதி', 'பொன்முடி' ஆகிய திரைப்பட வசனங்களை ரசித்ததும் உண்டு.

பின்னாளில், நான் மேற்கொண்ட பாரதிப் பணியால்தான் பாவேந்தருடன் எனக்குத் தொடர்பு ஏற்பட்டது. அதுவும், நானே எதிர்பார்க்காத நிலையில்! ஆர்வத்தின் காரணமாக நான் ஈடுபட்ட 'அந்த நாள்' பாரதிப் பணிகளால் நூற்றாண்டு கண்ட அறிஞர்கள் பலருடையவுமான தொடர்பு எனக்குக் கிட்டும் என்பதை அப்போது அறிந்தேன் இல்லை.

முதல் முயற்சியே எனக்கு வெற்றியைத் தேடித்தந்தது. அறிஞர் பலருடைய தொடர்பு அந்த நாளில் எனக்குக் கிட்டியதை நான் என் வாழ்வில் மறக்கவே முடியாது. அதை நினைக்கும் போதெல்லாம் என் நெஞ்சம் இனிக்கவே செய்கிறது.

என் நெஞ்சில் இன்றும் பசுமையாக இருக்கிறது - நான் பாவேந்தரைச் சந்தித்த நிகழ்ச்சி. அதை மீண்டும் நினைத்துப் பார்க்கிறேன்; பெருமையாக இருக்கிறது.

1962ஆம் ஆண்டு டிசம்பர் 11ஆம் நாளை மகாகவி பாரதியின் எண்பத்தோராவது பிறந்த நாளாகக் கோலாகலமாகக் கொண்டாட அன்றைய தமிழக அரசு முடிவு செய்தது. பாரதியின் நூற்றாண்டு விழாக் கொண்டாட்ட முயற்சிக்கு, 1962 விழாவே கால்கோள் விழா ஆகும் என்பதும் இங்கே நினைவுகூர்தற் குரியதாகும்.

பாரதிக்கு அரசுச் சார்பில் மிகச் சிறப்பாக விழா நடத்தப் பெறப் போகிற செய்தியை அறிந்த நான், என் அளவில், கவியரசருக்குப் புகழ் அஞ்சலி செலுத்துமுகத்தான் அவரைப் பற்றிப் பல்வேறு கோணங்களில் தமிழ்மக்களுக்குப் புலப்படுத்தும் பொருட்டாக ' இராமர் கடலணை கட்டுவதற்குச் சிறியதோர் அணிலும் துணையாற்றியதுபோல' நூல் ஒன்றைத் தொகுத்து வெளியிடக் கருதினேன்.

மகாகவி பாரதி பற்றிய அறிஞர் பெருமக்கள் கருத்துரைகளை ஒன்றுதிரட்டி, தொகுப்பு நூல் பணி முயற்சியிலும் ஈடுபட்டேன். எனவே, யார் யாரிடம் என்னென்ன கட்டுரைகள் பெறுவது, எந்தெந்தப் பழைய இதழ்களினின்றும் கட்டுரைகள் தொகுப்பது, ஆரம்ப காலங்களில் வெளிப்பட்ட நூல்களின்றும் பாரதி தொடர்பான கவிதை-கட்டுரைகளில் எதையெதைச் சேர்ப்பது என்பது பற்றி முடிவெடுக்கப் பட்டியல் ஒன்றைத் தயார் செய்து கொண்டேன்.

நான் தயார் செய்திருந்த கட்டுரையாளர் வரிசைப்பட்டியல் மகாகவி பாரதியின் குடும்பத்தவர், நண்பர்கள், புகழ் பரப்பியோர்-என இப்படியாக நீண்டு வளர்ந்திருந்தது.

தொகுப்பு நூலில் இடம்பெற வேண்டிய கட்டுரைகளும், கவிதைகளும் தெரிந்தெடுக்கப் பட்டவுடன், சம்பந்தப்பட்டவர்களுடன் அவற்றிற்கான அனுமதி பெறக் கடிதத் தொடர்பு கொள்ளலானேன்.

அந்த வகையில், பாரதியின் கவிதா மண்டலத்தைச் சேர்ந்த பாவேந்தர் பாரதிதாசன் அவர்களிடமும், முன்னர் நூலொன்றில் வெளியான கட்டுரையைப் பிரசுரம் செய்துகொள்ள வேண்டி, அனுமதி கோரி 23.9.1962இல் கடிதம் எழுதினேன்.

அதுசமயம், பாரதிதாசன் அவர்கள் சென்னை தியாகராய நகர் 10, இராமன் தெருவில் குடியேறி இருந்தார். 'பாண்டியன் பரிசு' காவியத்தைத் திரைப்படமாக்கும் முயற்சியை மேற்கொண்டு, "பாரதிதாசன் பிக்சர்ஸ்" என்ற திரைப்பட நிறுவனத்தை நிறுவி, அதனால் பல இன்னல்களை அடைந்திருந்த நேரம் அது; மற்றும் 'குயில்' பத்திரிகை வெளிவருவதும் நின்றிருந்த நேரமும்கூட. இதனிடையே "ஆனந்த விகடன்" வாரப் பத்திரிகையில் தொடராக வெளிவர இருந்த பாரதி தொடர் கட்டுரைகளும் ஏதோ மனத் தாங்கல் காரணமாக வெளிவராமல் தடைப்பட்டுப்போன சமயமாகவும் அது அமைந்திருந்தது.

இச் செய்திகளை யெல்லாம் நான் அப்போது அதிகம் அறிந்திட இயலாத நிலையில், அவரிடம் கட்டுரைக்காக அனுமதியைப் பெறவேண்டும் என்கிற 'ஆசை' காரணமாகவே கடிதம் எழுதினேன்.

அதாவது, பாரதிதாசன் பல்வகை முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு, அவை வெற்றி பெறாத நிலையில் மட்டுமல்ல அவற்றால் இன்னல்களும் அடைந்து, மன நிம்மதியை இழந்திருந்த நேரத்தில்தான், பாவேந்தருக்குக் கடிதம் எழுதினேன்-கட்டுரைக்கான அனுமதி கேட்டு.

மனநிம்மதியை இழந்து, தொல்லைகளுக்கு உட்பட்ட வேறு யாராகிலும் இருந்தாலும், சூழ்நிலை காரணமாகக் கடிதத்தைப் பொருட்டாகக் கருதியிருக்க மாட்டார்கள்.

ஆனால், பாரதிதாசன் அவர்களோ....

கவிஞர் அவர். அதுவும் பாரதி வழி வந்தவர். அதனால், துன்பம் நெருங்கி வந்தபோதும் சோர்வு கொள்ளாத மனத்திண்மையுடன் நடந்துகொண்டார், அவர்.

என் கடிதம் கவிஞர்பிரான் கைக்குக் கிடைத்ததும், சற்றும் காலத்தாழ்ச்சி செய்யாமல், என்னை முன்பின் அறியாத நிலையிலும், நான் மேற்கொண்ட பாரதிப் பணியை முன்னிட்டு, தம்முடைய 'நெருக்கடி' நிலையை மறந்து, தம்முடைய புதல்வரான மன்னர் மன்னன் அவர்களைக் கொண்டு , பதில் எழுதச் செய்திருந்தார். இச் செயல் என்னைப் பிரமிக்க வைத்தது. தவிர, கடிதத்தில் கண்ட செய்தியோ எனக்கு இன்ப அதிர்ச்சியையே அளித்தது.

நான் பாவேந்தரிடம் கட்டுரைக்கான அனுமதியை மட்டுமே வழங்கக் கேட்டிருந்தேன். ஆனால், கடிதச் செய்தியோ "கவிஞரையே நேரில் சந்தித்துப் புதிய கவிதையோ, கட்டுரையோ பெற்றுக் கொள்ளும்படி" தெரிவித்தது.

என்னுடைய 23.9.62 நாளிட்ட கடிதத்திற்கு 25.9.62 நாளன்று கடிதம் கிடைத்த மறு தினமே திரு. மன்னர் மன்னன் மூலம் பதில் எழுதச் செய்திருந்தார், பாவேந்தர்.

அவர் அக்கடிதத்தில்,

சென்னை 17.

25.9.62.

அன்பீர்,

உங்களின் கடிதம் கிடைத்தது.

பாரதியாரைப் பற்றிய புதுப்புதுச் சுவைதரும் செய்திகளுடன் கவிஞர் வழங்க இருக்கிறார்.

அப்படி யிருக்க முன்னர் பல்லாண்டுகட்கு முன்பே எழுதப்பட்ட கட்டுரையை மீண்டும் பதிப்பிக்க வேண்டாமே!

உங்கட்கு இதுவரை வந்துள்ள கட்டுரைத் தொகுதியோடு நீங்கள் நேரில் வந்தால், புதிய கவிதையோ கட்டுரையோ கவிஞரிடம் பெற்றுக் கொள்ளலாம்.......

நேரில் கவிஞரைச் சந்திப்பது நலம் பயக்கும். பிற பின்.

சு. மன்னர் மன்னன்.

என்று குறிப்பிட்டிருந்தார்.

நானும் கடிதம் கிடைத்தவுடனேயே-அதாவது 26.9.62 அன்றே-கவிஞருக்கு வசதிப்படும் நாளில் சந்திக்க ஆவல் உள்ளவனாக இருக்கிறேன் என்பதாகத் தெரிவித்துக் கடிதம் எழுதினேன்.

என்னுடைய மறுமொழிக் கடிதம் கிடைத்த நாளன்றே திரு. மன்னர் மன்னன் அவர்கள்,

27.9.62

அன்பீர்,

28.9.62 பிற்பகல் 3 மணிக்குப் பின்னரோ, 29.9.62 காலை 10 மணிக்குப் பின்னரோ எந்த நேரத்திலும் கவிஞர் அவர்களைக் காணலாம்.

கையெழுத்துப் படிகள் தொகுப்புடன் வருக.

சு. மன்னர் மன்னன்

என்று பதில் கடிதம் எழுதியிருந்தார்.

திரு. மன்னர் மன்னன் அவர்களின் கடிதத்தில் கண்டிருந்தபடி, நானும் 29.9.62 அன்று காலை சுமார் 11 மணி அளவுக்குக் கவிஞர் பெருமானைக் காணச் சென்றேன்-மனத்தில் இனம் புரியாத இன்பம்!

நான் சென்றபோது, இல்லத்தின் முன்புறத்தில், திரு. மன்னர் மன்னன் இருந்தார். என்னை இன்னாரென்று அவரிடம் அறிமுகப்படுத்திக் கொண்டேன். அவர் என்னைப் புரிந்து கொண்டு, கவிஞர் உள்ளே இருப்பதாகத் தெரிவித்தார். நானும் உள்ளே சென்றேன். கவிஞர் என்னை

மிக்க அன்புடன் வரவேற்றார். நான் வந்த காரணம் யாதெனக் கவிஞர் வினவ, நான் கையோடு எடுத்துச் சென்றிருந்த திரு. மன்னர் மன்னன் எழுதிய கடிதக் கொத்துக்களைக் காண்பித்தேன்.

கடிதங்களைப் பார்த்த அளவிலேயே "ஓ, நூல் தொகுப்புக்குக் கட்டுரை கேட்டவரா, நீங்கள்?" என்று என்னைப் புரிந்து கொண்டார், கவிஞர்.

பின்னர் கவிஞர் தமக்கே உரித்தான புன்னகையுடன் என்னிடம் ஆமாம்; நீங்கள் என் பழைய கட்டுரையைப் பதிப்பிக்க ஏன் ஆசைப்படுகிறீர்கள்? ஐயரைப் பற்றி எழுத நிறைய செய்திகள் இருக்கத் திரும்பவும் முன் எப்போதோ எழுதியதை வெளியிடுவதில் என்ன பயன்? ஐயரைப் பற்றி இன்னமும் தமிழ்மக்கள் அறிந்துகொள்ள வேண்டிய சேதிகள் பல உள்ளனவே! அப்படி இருக்க, நீங்கள் கேட்டிருந்த கட்டுரையை வெளியிட வேண்டிய அவசியமில்லை" என்றார்.

நானும் அவருடைய விளக்கத்தைக் கேட்டு அசந்து போனேன். காரணம், அடிநாளில் நான் மகாகவி பாரதிப் பள்ளியில் மாணவன் நிலையில் இருந்தமையே; அன்றைய நாளில் பாரதியைப்பற்றி ஆழமாக அறியாதவன் நான்.

"ஐயா, தங்களுக்குப் பல பணிகள், தங்கள் பணிகளுக்கு இடையூறு செய்யக்கூடாது என்ற காரணத்தால்தான், நான் தாங்கள் முன்னம் எழுதிய கட்டுரையை வெளியிட்டுக் கொள்ள அனுமதி கோரினேன்" என்று பதில் கூறினேன்.

ஆனால், கவிஞரோ, "புதிய கட்டுரையே தருகிறேன். தங்கள் நூல் தொகுப்பில் யார் யார் எழுதிய என்னென்ன கட்டுரைகளைச் சேர்த்திருக்கிறீர்கள்? நான் இப்படி கேட்கக் காரணம், நூல் ஐயருக்குப் பெருமை சேர்ப்பதாகவும் ஐயருடைய நெருங்கிய நண்பர்களின் கட்டுரைகள் விடுபட்டுப் போகக்கூடாது என்பதற்காகவுந்தான்!" என்றார்.

நானும் என் தொகுப்பு நூலுக்கான கட்டுரைகளை அப்போதுதான் சேகரித்துக் கொண்டிருப்பதாகவும், கட்டுரை ஆசிரியர்களின் பெயர்ப்பட்டியல் இதுதான் எனவும் சொல்லி, நான் கொண்டு சென்றிருந்த குறிப்பு புத்தகத்தைக் காண்பித்தேன்.

கட்டுரை-கவிதை ஆசிரியர்களின் பெயர்ப் பட்டியலைப் பார்த்தார் கவிஞர்; "இவ்வளவு பெயர்களா?" என்று வியந்தார்.

"இத்தனை பேர்களிடமும் கேட்டிருக்கிறேன். இவர்களில் எத்தனை பேர் ஒப்புதல் அளிக்கிறார்களோ தெரியவில்லை" என்றேன், நான்.

"ஐயருடன் நெருங்கிப் பழகியவர்களின் கருத்துரைகளும், அவரைப் பற்றித் தெரிந்தவர்களின் கட்டுரைகளும் விட்டுப் போகாமல் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று எனக்கு அறிவுரைகளை அன்புரைகளாகப் புகன்றார், கவிஞர்.

நானும் கட்டுரைகளுக்கான ஒப்புதலைப் பெற என்னாலான முயற்சிகளை மேற்கொள்வதாக உறுதியளித்தேன்.

"முயற்சி வெல்க" என்று வாழ்த்துரை வழங்கினார், கவிஞர்.

"சாதனை செய்க, பராசக்தி" என்று பாரதி 'பாஞ்சாலி சபதம்' காவியத்தில் பாடிய வரிகளே அப்போது என் செவிகளில் ஒலித்தன.

முதல் சந்திப்பிலேயே முதன் முதலாகக்கண்ட போதிலேயே கவிஞர் என்னைத் தம் அன்பால் பிணைத்துக் கொண்டு விட்டார்.

தம்முடைய புதிய கட்டுரையை அக்டோபர் 15ஆம் தேதிக்கு மேல் தருவதாகச் சொன்னார் கவிஞர்.

நானும் கட்டுரைகள் சேகரிப்பது, அச்சுக்கு ஏற்பாடு செய்வது, கடிதம் எழுதுவது என்று இன்னவிதமான பணிகளில் ஈடுபட்டு இருந்த காரணத்தால், நான் கவிஞரை அக்டோபர் 25ஆம் தேதிதான் சந்திக்க முடிந்தது.

இரண்டாம் முறையாக, நான் கவிஞரைச் சந்தித்தேன். அவரும் பாரதியைப் பற்றிய கட்டுரையை என்னிடம் தந்து, கட்டுரையைப் படிக்கவும் சொன்னார்.

கட்டுரையைப்படித்த எனக்கு என்னவோ, குறிப்பிட்ட அந்தக் கட்டுரையை என் நூலில் சேர்க்க மனமொப்பவில்லை. பிரச்சினைகள் கொண்ட கட்டுரையாக அது இருந்தது.

நான் தேடித்தொகுத்த கட்டுரைகள், கவிதைகள் ஆகியனவற்றிலிருந்து கவிஞரின் கட்டுரை முற்றிலும் வேறுபட்டதாக அமைந்திருந்தது.

எனக்கு இன்று நினைத்தால் கூடப் புல்லரிக்கின்றது.

நான் கட்டுரையைப் படித்ததும் சற்று உணர்ச்சி வசப்பட்டு, "ஐயா, தங்கள் கட்டுரை பல பிரச்சினைகளைக் கிளப்பி விடும் தொனியில் உள்ளது. உங்களின் இந்தக் கட்டுரையை வெளியிட்டு, நான் என் நூலைப் பிரச்சினைக்குரிய-விவாதத்துக்குரிய நூலாக ஆக்கிக் கொள்ள விரும்பவில்லை. தயவுசெய்து, நான் இப்படி சொல்வதற்காக என்மீது வருத்தப்படாதீர்கள்!" என்றேன்.

நான் இப்படி சொன்னவுடன் மறுகணம் என்னைக் கவிஞர் ஏதோதோ கடிந்து கொள்வார் என்றே எதிர்பார்த்தேன். ஆனால், அவரோ, உணர்ச்சி வசப்படாமல், கோபமே கொள்ளாமல், மிக அமைதியாக "அப்படியானால் தங்கள் தொகுப்பிலுள்ள கட்டுரைகளை நான் பார்த்து விடுகிறேன். கொண்டு வாருங்கள்" என்றார்.

பெரிய மனிதர் என்றால் பெருந்தன்மையால் அமைய வேண்டும் என்பதை நான் நூல்களில் படித்திருக்கிறேன். ஆனால் கவிஞரிடம் பெருந்தன்மையை அன்றைய தினம் நேரிடையாகக் கண்டேன்.

என் நண்பர்கள் மூலமாகக் கேள்விப்பட்ட பாவேந்தரை நான் அன்றைய தினம் காணவில்லை. குணம் என்ற குன்றேறி நின்ற பாவேந்தரை - பொறுமையின் சின்னமாக விளங்கிய பாவேந்தரை-நான் கண்டேன்.

பொறுமைதான் உன்றன் உடைமை! அதைப்
போற்றலே கடமை

எனப் பாடி அருளிய பாவேந்தரே அன்று எனக்குக் காட்சியளித்தார்.

என்மேல் சினம் கொள்ளாமல், பொறுமையுடன் கவிஞர் பதில் உரைத்த பாங்கை நான் இன்றும் நினைத்துப் பார்க்கிறேன். அன்று அவர் காட்டிய பொறுமைப் பண்பு என்னை மெய் சிலிர்க்கச் செய்து விட்டது.

எனக்கும் கவிஞர் தெரிவித்த கருத்து சரியெனத் தோன்றியதால், அவர் தெரிவித்த யோசனையை ஏற்றுக்கொண்டேன். நூல் அச்சில் இருப்பதால் கொஞ்சநாள் கழித்து, அச்சிட்ட பிரதிகளுடன் வருவதாகச் சொல்லி, அவசியம் கட்டுரை தர வேண்டும் என்று அவரிடம் கேட்டுக் கொண்டேன். அவரும் உடன்பட்டார். நானும் என் வீடு திரும்பினேன்.

சரிபாதி நூல் அச்சானதும், அச்சிடப்பட்ட கட்டுரைத் தொகுப்புகளை எடுத்துச் சென்று கவிஞரிடம் காண்பித்தேன். முதல் முறை அவர் என்னிடம் தெரிவித்திருந்த யோசனையின் பேரில், விடுபடாமல் அவசியம் சேர்க்கப்படவேண்டும் என்று சொன்னவர்களின் எழுத்தோவியங்களும் நூலில் இருப்பதைக் கண்டார். மேலெழுந்த வாரியாகப் பார்க்கும் பொழுதே அவர் முகம் பிரகாசிப்பதை உணர்ந்தேன்.

சற்று நேரம் கழித்து, "இவை என்னிடம் இருக்கட்டும். இரு தினங்களில் கட்டுரையைத் தந்து விடுகிறேன். இப்போதே நாள் கடந்துவிட்டதே. நூலை முடிக்க முடியுமா" என்று என்னிடம் கனிவுடன் கவிஞர் விசாரித்தார்.

நானும் "எப்படியும் குறித்த தினத்தில் நூலை முடித்து விடுவேன். தாங்கள் அருள்கூர்ந்து இரண்டு தினங்களில் கட்டுரை தரின் நன்று" என்று அவரிடம் கேட்டுக் கொண்டேன்.

"இரண்டு தினங்களில் தங்களுக்கான கட்டுரை காத்திருக்கும். இது உறுதி" என்றார். இது நடந்தது 20.11.62 இல்.

22.11.62 அன்றைய தினம் நான் கட்டுரையைப் பெறக் கவிஞரிடம் செல்ல வேண்டிய நாள். 'கவிஞருக்குப் பணிகள் இருக்கும். எங்கே கட்டுரையை எழுதி வைத்திருக்கப் போகிறார்' என்ற நினைப்பில் நான் ஒருநாள் தள்ளி 23.11.62 அன்று சென்றேன்; கவிஞரைக் கண்டேன்.

என்னைக் கண்டதும் கவிஞர் "நேற்றே உங்களுக்கான கட்டுரையை முடித்து விட்டேன். நீங்கள்தான் ஒருநாள் தாமதம்" என்றார்.

நாணத்தால் என் தலை கவிழ்ந்தது.

சற்று நேரம் மௌனம்.

பின்னர் கவிஞரே "இதோ கட்டுரை. பெற்றுக் கொள்ளுங்கள்" என்று சொல்லி, என்னிடம் கட்டுரைப்பிரதியைத் தந்தார்; படிக்கவும் சொன்னார். கட்டுரையைப் படித்துப் பார்த்து என் மகிழ்ச்சியைத் தெரிவித்தேன்.

என் நூலுக்காக - என் வேண்டுகோளுக்கு மதிப்பளித்துக் கவிஞர் எழுதிய கட்டுரைதான் "பாரதி பட்டினி நோன்பு" என்பது.

கட்டுரையை நான் நூலில் சேர்ப்பதாகச் சொன்னவுடன் கவிஞர் தம் கட்டுரைப் பிரதியை என்னிடமிருந்து பெற்றுக் கொண்டு, பிரதியின் இறுதியில் கட்டுரைக்கான வெளியீட்டு உரிமை பற்றித் தெளிவாகப் பின்வருமாறு குறிப்பிட்டெழுதினார்.

திரு உடையவர் (விசுவநாதம்)

மேகலைப் பதிப்பகம்

"பாரதி பட்டினி நோன்பு" என்னும் இக் கட்டுரையைத் தாங்கள் வெளியிட விருக்கும் பாரதி கட்டுரைத் தொகுப்பில் வெளியிட்டுக் கொள்க. வெளியிடுவது தவிரக் கட்டுரையின் உரிமை ஆசிரியர்க்கே.

23-11-62 பாரதிதாசன்.

கட்டுரையைப் பெற்றுக் கொண்ட நான் என் நன்றியைத் தெரிவித்துக் கொண்டு. நேரே அச்சகம் சென்று கட்டுரையை அச்சுக்குக் கொடுத்துவிட்டேன்.

1961-63 ஆம் ஆண்டுகளில் நான் 'மேகலைப் பதிப்பகம்' என்பதாக நூல் வெளியீட்டு நிறுவனத்தை நிறுவி இருந்தேன்; அந்தப் பதிப்பகத்தின் சார்பில், 1962 டிசம்பர் 11 ஆம் நாள் "தமிழகம் தந்த மகாகவி" என்ற பெயரில் நூல் வெளிப்பட்டது.

நூலின் பிரதியைக் கவிஞரிடம் கொடுக்கப் பாவேந்தர் இல்லம் சென்றேன். அவர் அன்று தனியாக இருந்தார். நூலைப் பெற்றுக் கொண்டபோது அவரடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. என்னைப் பெரிதும் பாராட்டினார். பாரதியின் இன் கவிகளைப் போலே நூல் சிறப்பாக அமைந்துள்ளது என்று புகழ்ந்தார். அவருடைய புகழ்மொழிகளைப் பாரதி போற்றியதாகவே கருதி மகிழ்ந்து, அவரிடமிருந்து பிரியா விடை பெற்று இல்லம் திரும்பினேன்.

இப்படியாக, நான் நான்கு முறை கவிஞரைச் சந்தித்து இருக்கிறேன். என் சந்திப்பெல்லாம் குறிப்பிட்ட சில நாள் எல்லைக்குள் அடங்கும் என்றாலும், அந்த இனிய நாட்கள் பசுமையாக என் நெஞ்சில் நிலைத்திருக்கின்றன.

பசுமை நிறைந்த நினைவுகள் நெஞ்சில் கனல் மணக்கும் பூக்களாய் நிலைபெறும் வகையில், ஒருநாள் நான் சற்றும் எதிர் பாராத நிலையில் கவிஞரிடமிருந்து என் பெயருக்குக் கடிதம் ஒன்று வந்தது. நூலில் ஏதேனும் பிழையோ-இல்லை, அவர் கட்டுரையில் ஏதேனும் தவறு நேர்ந்து விட்டதோ என்று ஒருவிதத் தவிப்பில் கடிதத்தைப் படித்துப் பார்த்தேன்.

கடித உறையைப் பெற்றபோது எனக்கேற்பட்ட தவிப்பு மறைந்து, என் மனம் கடிதத்தைப் படித்து முடித்ததும் இன்பத்தில் ஆழ்ந்தது.

என் நூலான 'தமிழகம் தந்த மகாகவி'யைக் கவிஞர் தம் கடிதத்தில் மனம் விட்டுப் பாராட்டி இருந்தார். நான் நூலைக் கொடுத்தபோது என்னை வாழ்த்தியதோடு அவர் மனம் திருப்தியடையவில்லை போலும்! எங்கே தாம்வாழ்த்திய வாழ்த்துரை காற்றோடு கலந்து விடப் போகிறதோ என எண்ணி விட்டார் போலும்! எனவே, தம் பாராட்டு மொழிகளைப் பாவேந்தர் எழுத்தோவியமாகவே தீட்டி அனுப்பி விட்டார்.

பாவேந்தர் எனக்கு எழுதிய-நெஞ்சைத்தொட்ட பாராட்டுக் கடிதம் இதுதான்.

சென்னை 17,
9.1.63.

"தமிழகம் தந்த மகாகவி"

பாரதியாருடன் இருந்தவர்களும், பாரதியாரைப் பற்றி நன்கு தெரிந்தவர்களும் - பாரதியைப் பற்றி இந்நூலில் எழுதியுள்ளார் கள். இதுவரைக்கும் வெளிவராத கருத்துக்களும் இந்நூலில் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

எல்லாவற்றையும் விட இந் நூல் பற்றி எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு காரணம், இதுவரைக்கும் கண்டறியாத அழகிய நூல் அமைப்பு முறைதான். மிக நல்ல தாள்! கண்ணுக்கினிமை தரும் அச்சு! நூலை அச்சிட்டவர் செலவைப் பெரிதென எண்ண-வில்லை. அவர் வாழ்க!

பாரதிதாசன்.

மகாகவி பாரதியால் "புலவன்" என்று பாராட்டுப் புகழ்மொழிகளைப் பெற்ற பாவேந்தர் பாரதிதாசன் அவர்களே என்னை வாழ்த்தி, என்னுடைய பாரதிப் பணிகளுக்கு உரமூட்டி உற்சாகம் அளித்துப் பாராட்டினார் என்றால், இதைவிடப் பெருமை வேறு எனக்கு உண்டோ?

பாவேந்தரின் நூற்றாண்டு விழாக் கொண்டாட்ட த்ருணத்தில் என் சந்திப்புக்களை நன்றியுடன் நினைவுகூர்கிறேன்.

* * *

# பாவேந்தர் பாரதிதாசனார் பற்றிய நினைவுகள்

புலவர் மு. மதிவாணனார்.

பாவேந்தர் பாரதிதாசனார் அவர்கள் புதுவைப் பக்கமுள்ள ஊரான வளவனூரில் பொங்கல் விழா ஒன்றில் பங்குகொள்ள அழைக்கப்பட்டிருந்தார். அவ்விழா நாளில் சென்னையிலிருந்து வந்த ஒரு படக் கம்பெனியார் பாவேந்தர் அவர்களை வலுக்கட்டாயமாகச் சென்னைக்கு அழைத்ததால், அவ்விழாவினுக்கு அண்ணன் கவிஞர் வாணிதாசன் அவர்களையும் எம்மையும் அனுப்பி, அவ்விழாவினைச் சிறப்பித்து வருமாறு கூறிச் சென்றார்கள்.

அவ்வூர்ப் பொங்கல் விழாவில் நாங்கள் கலந்துகொண்டோம். பாவேந்தரின் அழகின் சிரிப்பு உவமை நயங்களைப் பற்றி கவிஞர் வாணிதாசன் அவர்கள் பேசி மக்களை மகிழ்வித்தார்.

நான் பாவேந்தரின் எதிர்பாராத முத்தம் காப்பியத்தில் வருகின்ற முத்து என்பானின் அழகு அமைப்பு நயங்களை எடுத்துப் பேசும்போது, ஆடவர்கட்கு அழகு கொடுப்பது மீசையின் அமைப்பாகும். தடித்த மீசை, முறுக்கு மீசை, அடர்ந்த மீசை, படர்ந்த மீசை, குறுமீசை இப்படி பல்வகையாய் அழகு கொடுப்பன. அந்த வகையில் எதிர்பாராத முத்தம் காவியத்தலைவனை வர்ணிக்கும் முன் பாவேந்தர் அவர்களின் மீசையை ஒரு முறை எண்ணிப் பார்த்து மீசையின் நயத்தையே பேசவே தலைப்பட்டேன்.

"பாவேந்தர் மீசை"

பாரதில், பாரதி கூரது முறுக்கு மீசையை நறுக்கி வைத்த மக்கள் கவிஞன், மாஏறுவின் முகத்தில் உட்கார நினைத்த கருந்தும்பி அதுவோ?

சத்தமின்றி சுத்தித்திரிந்த கருவண்ணத்தும்பி - மூக்கடியில்

தொத்திக் கொண்டு முத்தமிட்டது போல் பாவேந்தரின் அரை மீசை, ஆகா!

இங்கு கருமீசைக்கு கருந்தும்பியின் நிறமே உவமையாகக் கூறப்பட்டது. அப்படிப்பட்ட கவிஞன் எதிர்பாராத முத்தத்தின் காவிய கதாநாயகன் முத்துவின் மீசையை வர்ணிக்கின்ற போது அவன் மீசை.

"கிளிக்கழுத்து செவ்வரிபோல் அரும்பு மீசை" என்று அழகாகக் கூறியுள்ளார்கள். அங்கு எவ்வளவு அழகு படுத்திக் கூறினாலும், அந்த அணியிலே உருவகம் மாறுபட்டிருப்பதை இங்கு உங்களுக்கு விளக்கக் கடமைப்பட்டிருக்கிறேன்.

முத்துவின் அரும்பு மீசை நிறமோ கருப்பு, கிளியின் கழுத்தில் இருக்கும் செவ்வரி நிறமோ சிகப்பு. இதனால் அணியின் நிறம் மாறுபடுவதால் இங்கு நிறம் குற்றமென்றே கூற வேண்டும். இவ்வுவமையை உருவாகத்தான் கொள்ள வேண்டுமே தவிர நிறத்திற்கு இயைபாகக் கொள்ளக் கூடாது.

இப்படிப்பட்ட மயக்கமுள்ள பல பாடல்களுக்குப் பாவேந்தர் அவர்கள் தம் நூல்களிலேயே அடிக்குறிப்பு எழுதிக் காட்டுவார்கள். இந்நூலில் அடிக்குறிப்பு இல்லாததால் இம் மாறுபாட்டு அணியைக் கண்டு மயங்க வேண்டி இருக்கிறது. இதனை இங்குள்ள மாணாக்கர்கள் இதுபோன்ற பாடல்கள் பாவேந்தர் அவர்களின் பாடல்களில் நிறைய வர்ணனைகளும் உவமான உவமேயங்களும் காட்டப்பட்டிருப்பதால், நன்கு உணர்ந்து, நன்கு ஆழ்ந்து படித்து, புரிந்து கொள்வது இன்றியமையாத ஒன்றாகும் என்று பேசி பல பல அணிகளின் திறத்தைப் பாராட்டியும் முடித்தேன்.

இச்செய்தியினைப் பாவேந்தர் அவர்களிடத்தில் கவிஞர் வாணிதாசன் அவர்கள் மதிவாணன் வளவனூர் கட்டத்தில் தங்கள் எதிர்பாராத முத்தத்தை எடுத்துக் கொண்டு பேசியபோது, அதிலே வருகின்ற வரிகளில் ஒன்றின் அணியைக் கூறி அவ்வணி பிழையாக இருக்கிறது என்று பேசி முடித்திருக்கிறார். எனவே இது போன்ற பாடல்களைப் பொதுமக்களின் முன்னிலையில் பேசிக் காட்டியது எனக்கு ஏதோ குற்றமாகத் தென்பட்டது என்று பாவேந்தரிடம் கூறிய செய்தியை, என்னிடம் பாவேந்தர் நேரடியாகக் கேட்கவில்லை. சென்னையில் அவரை ஒரு கூட்டத்தில் பேச அழைத்திருந்த போது என்னையும் பாட அழைத்து இருந்தார்கள். அப்பொழுது பாவேந்தரின் பாடல் ஒன்றைப் பாடி முடித்தேன். அப்பாடல் இசையைக் கேட்டு இரசித்தவர் "நீ நன்றாகத்தான் பாடுகிறாய், என் புத்தகத்தை நன்றாகவும் ஆய்ந்து படித்திருக்கிறாய், அதைக் குறையும் கூறி இருக்கின்றாய்" என்றார்கள்.

இதைக் கேட்ட நான் ஒன்றுமே புரியாது, கூட்டம் முடிந்ததும் தங்கும் விடுதியில் வந்து தங்கியிருந்த பொழுது "ஐயா தாங்கள் மேடையில் ஏதோ சொன்னீர்களே என்ன" என்று கேட்டேன்.

"ஆமாம், வளவனூர் பொங்கல் விழாவில் எதிர்பாராத முத்தத்தை எடுத்துக் கொண்டு பேசிய பொழுது, அதில் ஒரு உருவகப்பிழை என்று ஒன்றைக் கூறினாயாமே என்ன?" என்றார்கள்.

"ஆமய்யா! தாங்கள் எமக்கு தண்டி இலக்கணம் கூறும்போது கவிதைகள் எழுத அணிகள் சிறப்பாக இருக்க வேண்டும், அணிகளை உருவகமாக உருவகிக்கும்போது மாறுபடாமல் கூற வேண்டும். அத்தகைய வகையில் முத்துப்போல் பல் என்றுதான் இருக்க வேண்டுமே தவிர, பவளம் போல் பல் என்பது அணி பிழையாகும்" என்று கூறியதைக் கேட்ட நான், தங்கள் எதிர்பாராத முத்தத்தில் முத்துவை வர்ணிக்கும்போது, (முத்துவின் மீசையை வர்ணிக்கும் போது) "கிளிக்கழுத்து செவ்வரிபோல் அரும்பு மீசை" என்று கிளிக்கழுத்துச் சிகப்பிற்கு அரும்புமீசை கருப்பு நிறத்தை உருவகப்படுத்தியிருப்பது அணிக்குற்றம் என்ற போதிலும் இதை உருவாகக் கொள்ள வேண்டும் என்று குறிப்பிட்டேன்" என்றேன்.

இதைக் கேட்டதும் பாவேந்தர் அவர்கள் புன்னகையுடன், "என் பாடலுக்கு நீ பேசியது சிறப்பே தவிர, குற்றம் ஒன்றுமில்லையே! இதைத் தப்பாகக் கருதிய வாணிதாசனுக்கு விளக்கமாக ஒரு கடிதம் எழுது" என்றார்கள்.

நானும் ஒரு கடிதத்தை எழுதி விட்டு, நாங்கள் இருவருமாக சென்னை அப்பாசாமிச் செட்டியார் நிறுவனம் மண்ணடிக்கு வந்து சேர்ந்தோம். பாவேந்தர் அவர்கள் சென்னை வருந்தோறும் அப்பாசாமிச் செட்டியார் பிளாக் மேக்கர்ஸ் மாடியில்தான் தங்குவார்கள். அங்கு வந்திருக்கும் செய்தியை எப்படியோ அறிந்த அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் வீ. உலகஊழியனும், கவிஞர் கண்ணதாசன் அவர்களும் அங்கு வந்து பாவேந்தரைச் சந்தித்தார்கள்.

வந்தவர்களைக் கண்ட பாவேந்தர் அவர்களை மிகவும் வரவேற்று காணவந்த செய்தி என்னவென்று கேட்டார்கள். மறுமொழியாக வீ. உலகஊழியன் அவர்கள் கண்ணதாசன் தங்கள் "சேர தாண்டவம்" நூலை ஆராய்ந்து தற்போது "ஆட்டனத்தியும் ஆதிமந்தியும்" என்ற ஒரு குறுங்காவியத்தை இயற்றி, முல்லை திங்கள் இதழ்களில் வெளியிட்டிருக்கிறார். அதைத் தற்போது திரைப்படமாக எடுக்க எண்ணியே தங்களை வந்து சந்திக்க வந்தோம் என்றார்.

அதற்குப் பாவேந்தர் நான் என்ன செய்ய வேண்டும் என்றார்கள்.

அதற்கு உடன் கவிஞர் கண்ணதாசன் அவர்கள், தாங்கள் ஆய்ந்து எழுதிய " சேர தாண்டவத்தின்" காலவரையறைகள் குறிப்பிடவில்லையே. அதன் காலம் என்னவாக இருக்கலாம் என்று கேட்டு அறியவே தங்களிடம் வந்தோம் என்றார்கள்.

இதற்குப் பாவேந்தர் அவர்கள், அவன் காலம் கி.மு.55 - கி.பி.85 என்றும் வைத்துக் கொள்ளேன் என்றார்கள்.

இதற்கு ஆதாரம் என்ன என்று கண்ணதாசன் கேட்டார்.

"வெங்காய ஆதாரம்! இதற்கு நான் தான் ஆதாரம்! ஏம்பா நீ படித்தவன்தானே, இது சம்பந்தமாக நூலைத் தேடிப் பார்த்து எழுதேன்" என்று கர்ஜித்தார். அதன் பிறகே மன்னாதி மன்னன் என்ற திரைப்படத்தைக் கற்பனை கலந்து வெளியிட்டதாகக் கண்ணதாசன் பிற்காலத்தில் என்னிடம் கூறினார். இவர்கள் சந்தித்த காலம் 1957 ஏப்ரல் 4ஆம் தேதி என்று எனது டைரியில் எழுதப்பட்டிருப்பதை இங்கு நினைவு படுத்துகிறேன்.

## பாவேந்தருடன் இருந்து களித்த நினைவுகள்:

பாவேந்தர் அவர்கள் புதுவையில் இருக்கும் பொழுது மாலைப் பொழுதில் கடற்கரைக்குச் சென்று உலாவுவது வழக்கம். புதுவைக் கடற்கரைச் சாலைப்புறத்தில் உட்காருவதற்குச் சிமிண்ட் வார்ப்பு இருக்கைகள் போடப்பட்டிருக்கும். அவ்விருக்கையில் அமர்ந்து நிலா தோன்றும் காட்சியைப் பாவேந்தர் கண்டு களித்துக் கொண்டிருந்தார்.

அன்றொரு நாள் முழு நிலா தோன்றும் நாளிரவு இருக்கையில் அமர்ந்து கடலைப் பருப்பை வாங்கித் தின்று கொண்டிருந்தார்கள். நான் பக்கத்தில் இருந்தேன்.

"ஏம்பா, தம்பி! அதோ தோன்றும் நிலவு, விரிபனையிலே பட்டு காட்சியளிக்கின்றது! இதை மூன்று சொல்லில் எப்படி உருவகப்படுத்தலாம் சொல்" என்றார்.

நான் கொஞ்சம் தயக்கத்துடன்,

"மட்டையெலாம் வைர ஒளித் தோற்றம்" என்றேன்.

உடன் சிங்காசனத்தில் இருந்தவாறு, தம்மக்களை மன்னன் வாரி அணைப்பது போல் என்னைத் தூக்கி நிறுத்தி, "உனக்குக் கொடுக்கத்தான் தெரியும் என்று நினைச்சேன். நீ மிடுக்காகப் பாடுவாய் என்பதையும் இப்போ கண்டு களிச்சேன். இப்படிதான் சுருக்கமாக வார்த்தைகளில் அமைக்கணும்" என்று கூறி மகிழ்ந்தார்கள்.

பாவேந்தருடன் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழக விழா ஒன்றில் கலந்துகொண்டு கும்பகோணம் கூட்டத்திற்குச் செல்வதற்காகச் சிதம்பரத்தில் இரயில் ஏறினோம். இரயில் புறப்பட்டு வல்லம்படுகை இரயில்வே நிலையத்தில் வந்து நின்றது. அப்போது அங்கு

கொள்ளிடம் படுகையில் பச்சை வாழைகளைப் பயிரிட்டு அதற்குக் குழிவெட்டி அதில் வாழைத்தார்கள் தொங்க விடப்பட்டிருக்கும் காட்சியைக் கண்ணாரக் கண்ட பாவேந்தர் அவர்கள் - அதில் ஒரு வாழைத்தார் ஐந்தாறு சீப்புகளுடன் நீண்டு வாழைப்பூ தண்டில் தொங்கியதைக் கண்டவர் "இது உமக்கு எப்படி தெரிகிறது" என்றார். "நான் விழித்தேன்".

"இது ஒரு ஆனைக்குட்டி மேட்டில் நின்று பள்ளத்தில் நீர் குடிக்க தன் தும்பிக்கையை வளைத்து நீட்டுவதுபோல் இல்லையா" என்றார்.

அடடா! கவிஞர்கள் காணும் காட்சியெல்லாம் ஒன்றுக்கு மற்றொன்று உருவகமாகக் கண்ணில் பட்டு உவகை மகிழ்ச்சியாகப் பலர் அறிய கவிதையாக அளிக்கின்ற செய்தி, அப்பொழுதுதான் கண்டு களித்தேன்.

அதைப் போலவே சென்னை கிண்டியில் நடைபெறும் குதிரைப் பந்தயம் காணப் பாவேந்தருடன் சென்றிருந்தேன். ஒருவருக்கொருவர் குதிரைகள் முந்தியும் பிந்தியும் ஓடுவதைக் கண்டு ஆரவாரம் செய்து கொண்டிருந்தார்கள்.

இதைக் கண்டு களித்த பாவேந்தர் அவர்கள் என்னைப் பார்த்து "அதோ முந்திக் கொண்டு ஓடும் குதிரையைப் பார்க்கின்றாய், அதை எப்படிப் பாடலாம்" என்றார்கள்.

'எனக்கு புலப்படவில்லை' என்றேன்.

புரியலையா!

மொந்தம்பூ வாழை
மோத்தை நீண்டதுபோல்
பந்தயத்தில் முந்திய
குதிரை முகம் நீண்டது.

இதைக் கண்ட மாத்திரத்திலேயே பாவேந்தர் அவர்கள் பாடினார்கள். அதைக் கேட்டு வியந்தேன்.

* * *

# பாவேந்தர் பாரதிதாசனுடன் பழகிய நாட்கள்...

புலவர் நதி

கிழக்கு மருதூர் கு. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள், நம் பாவேந்தருக்கு மிகவும் நெருங்கிய நண்பர்.

அவர்தான், பாவேந்தர் இயற்றிய "சஞ்சீவி பர்வதத்தின் சாரல்" என்ற சிறு நூலை என்னிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னார். அடுத்து பாவேந்தரின் "புரட்சிக் கவி" என்ற நூலையும் கொடுத்துப் படிக்கச் சொன்னார். இவ்விரண்டு நூற்களும் என்னைப் பாரதிதாசன் அவர்கள்- பால் அன்பு வெறியும், பக்தி நெறியும் கொள்ளச் செய்தன.

1942ஆம் ஆண்டில் நான் மயிலம் சிவஞானபால்ய சுவாமிகள் தமிழ்க் கல்லூரியில் பிரிலிமினரி முதலாண்டு படித்துக் கொண்டிருந்தேன். அச் சமயத்தில் 5-10-42இல் புதுவை சென்று கவிஞர் அவர்களைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தேன். காலை 10 மணிக்குத் தொடங்கிய பேச்சுவார்த்தை 12 மணி வரையில் நீடித்து விட்டது.

உடனே, கவிஞரின் துணைவியார் (பிற்காலத்தில் என்னை ஊட்டி வளர்த்த அன்னையார்) வந்து உணவு உண்ண அழைத்தார்கள். நான் தயங்கினேன். உன்னையுந்தாம்பா என்றார்கள். கவிஞரும் என்னை நோக்கி, ஏண்டா! கால் கை கழுவிக் கொண்டு வா என்றார். நீ என்ன, சைவமா? அசைவமா? என்றார்.

அந்தக் காலத்தில், எனக்குக் கவிஞரைப் பற்றி நன்கு தெரியாத காரணத்தால், அவர் தமிழ்க் கவிஞராயிற்றே, சைவமாகத்தான் இருப்பார் என்று எண்ணி நான் அசைவ உணவு சாப்பிடுபவன் என்றால், எங்கே என்மீது அருவறுப்புக் கொள்வாரோ என்று நினைத்து சைவ உணவுதான் உண்பேன் என்று ஒரு பொய்யைச் சொன்னேன்.

பொய்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்குமெனின்

என்ற வள்ளுவத்தை, நான் கூறிய பொய்மைக்குக் காரணமாகக் கொண்டு நியாயப்படுத்திக் கொண்டேன்.

இருவருக்கும் அன்னையார் உணவு பரிமாறினார்கள். கவிஞரின் இலையில் 'வெஞ்சினை மீன்' வறுவல் வடை வடையாக மூன்று துண்டுகள் வந்து இறங்கின.

என் மனமோ பதைத்தது. அதன் மணமோ மூக்கைத் துளைத்தது.

தாமதமின்றி நான், கவிஞரிடம், நானும் அசைவ உணவுதான் உண்பேன். உங்களைச் சைவ உணவு சாப்பிடுபவர் என்று கருதிப் பொய் சொல்லிவிட்டேன் என்றேன்.

கவிஞர் சிரித்துக் கொண்டே, துணைவியாரைப் பார்த்து, ம். . . . நடக்கட்டும் என்றார். குறிப்புணர்ந்த அன்னையாரும், புன்முறுவலுடன் உள்ளே சென்று, மீன் வறுவல் எடுத்து வந்து என் இலையில் வைத்தார்கள்.

"பொய் சொல்லக் கூடாது; பொய் சொன்னதால் உனக்கு விருப்பமான மீன் வறுவலை இழந்துவிடப் பார்த்தாயே. பொய் சொன்ன வாய்க்குப் போசனம் கிடைக்காது என்பது இதுதான். இனிமேல் எதற்குமே பொய் சொல்லாதே. எனக்குப் பிடிக்காது" என்று அறிவுரை கூறினார்.

நான் அவருக்கு உறவுக்காரப் பையன் என்பதை அவரே கண்டுபிடித்து, உனக்கு விடுமுறை விடும்பொழுதெல்லாம் இங்கு வந்துவிடு. நான் இல்லாவிட்டாலும் 'அம்மா' உனக்குச் சோறு போடுவார்கள் என்று கூறி, துணைவியாரை நோக்கி "இவன் வேறு யாருமில்லை; நம்ம சொந்தக்காரப் பையன்தான். போக்குவரத்து குறைந்து விட்டதால் சொந்தம் மறைந்துவிட்டது" என்று கூறினார். என்னிடம் 5 உரூபாக்கள் தந்து ஊருக்குப் போய்வா. நல்லா படி என்று அனுப்பினார்.

பொய்யில் தொடங்கிய அறிமுகமும் தொடர்பும் இறுதி வரையில் உண்மைப் பாதையிலேயே தொடர்ந்து சென்றது.

1942இல் தொடங்கிய கவிஞரின் தொடர்பு 1959 வரையில் நீடித்தது. அதன் பின்னர் அவர் சென்னை சென்றுவிட்டதால் தொடர்பு நின்றுவிட்டது.

அப்பொழுது நான் புதுவை பெத்திசெமினரி உயர்நிலைப்பள்ளியில் தலைமைத் தமிழாசிரியனாக-டாக்டர் சுந்தர சண்முகனாரின் இடத்தில்-பணிபுரிந்தேன். எனக்கு என் ஆசிரியப் பணி முக்கியமன்று. அடிக்கடி விடுமுறை எடுத்துக் கொண்டும் பள்ளி வேலையை விட்டுவிட்டும் கவிஞருடனேயே-அவர் நிழலாகவே-தொடர்ந்து நாடெங்கும் செல்வேன். கவிஞருக்குத் தமிழகமெங்கும் வணக்கமும், மரியாதையும் செலுத்தினார்கள் மக்கள். பெரிய செல்வந்தர்களும், அரசு அதிகாரிகளும் கவிஞரிடம் அச்சமும் அன்பும் உடையவர்களாகவும், மதிப்பு உடையவர்களாகவும் இருந்தார்கள்.

பாரதியாரின் மனைவியார் தள்ளாத வயதுடையவராகத் திருச்சியில் வாழ்ந்து வந்தபோது கவிஞர் அடிக்கடி சென்று பார்த்து உடல் நலம் விசாரித்துவிட்டுப் பண உதவியும், திருச்சி திருலோக சீத்தாராம் (கவிஞரின் மாணவபக்தர்) என்பவர் வாயிலாக மருத்துவ வசதியும் செய்து வந்தார். (சீத்தாராம் 'சிவாஜி' பத்திரிகையின் ஆசிரியர்.)

ஒருமுறை மாலையில் நானும் கவிஞருடன் அந்த அம்மையார் வீட்டுக்குச் சென்றேன். பாழடைந்த ஓட்டு-ஓட்டை-வீடு. முற்றத்தில் ஒரு மூலையில் இருட்டில் காலொடிந்த பழைய கட்டிலில் ஒரு துணி மூட்டை கிடந்தது.

அந்த மூட்டையின் பக்கத்தில் கவிஞர் உட்கார்ந்தார். உடம்பு எப்படியிருக்குது? என்றார்.

கவிஞர் யாரிடம் பேசுகின்றார்? அங்கு யாரும் இல்லையே. துணிமூட்டையிடம் பேசுகிறாரா? என்று நான் திகைத்துக் கொஞ்சம் தொலைவில் நின்றேன்.

யாரது? சுப்புரத்தினமா? என்று அந்தத் துணி மூட்டை வினவியது!

ஆமாம். உடம்பு தேவலையா? திருலோக சீத்தாராமிடம் போன மாதம் பணங் கொடுத்து டாக்டரை அழைத்து வந்து காட்டச் சொன்னேனே, காட்டினானா? என்றார் கவிஞர்.

அதற்குள், கவிஞரின் குரல் கேட்டுச் சமையலறையிலிருந்து ஒரு அம்மா வந்து, வாங்கண்ணா; சீத்தாராம் வரவேயில்லண்ணா என்று சொன்னார்கள்.

சரி, சரி. அவனைப் போய்ப் பேசிக்கிறேன் என்று சொல்லிவிட்டு, என்னிடமிருந்த பணப்பையைப் பிடுங்கிப் பணத்தையெல்லாம் எடுத்து அந்தத் துணி மூட்டையிடம் கையில் கொடுத்துவிட்டு. நான் போய் சீத்தாராமனை அனுப்பி வைக்கிறேன் என்று சொல்லிக் கிளம்பினார். நானும் அவரைப் பின் தொடர்ந்தேன்.

வெளியில் வந்ததும் , அந்தக் கிழவி யார் தெரியுமாடா? என்றார். நான், எந்தக் கிழவி? நீங்கள் பேசினது கிழவியிடந்தானா? அது என்னமோ அழுக்குத் துணி மூட்டை என்று நினைத்தேன் என்றேன் கிண்டலாக.

அந்தக் கிழவிதாண்டா பாரதியாரின் மனைவி. அந்தப் பெண் அவருடைய பெண் தங்கம்மா பாரதி என்றார்.

திரும்பி வருவதற்கு வண்டிக்குக் காசில்லை. எதிர்பாரத வகையில் திருலோக சீத்தாராம் வந்து மாட்டினார். அவரிடம் 50 உரூபாக்கள் வாங்கிக் கொண்டு, திருச்சி ஜங்ஷனில் உள்ள ஓட்டல் அசோகாவில் போய்த் தங்கினோம்.

சிறிது நேரம் கவிஞருடன் பேசியிருந்து விட்டு அவருக்கு உணவுக்கு ஏற்பாடு செய்துவிட்டு நான் விடை பெற்றுச் சென்று, முத்தமிழ்க் காவலர் திரு.கி.ஆ.பெ.விசுவநாதனார் இல்லஞ் சென்று உணவருந்தி அங்கேயே படுத்துவிட்டேன். அப்பொழுது நான், அவருடைய "தமிழர் நாடு" இதழில் துணையாசிரியனாக இருந்தேன்.

மேலும், உறையூரிலுள்ள சேஷய்யங்கார் நினைவுப் பள்ளியில் தமிழாசிரியனாகப் பணி புரிந்து கொண்டே, பகுதி நேரத் துணையாசிரியனாக விசுவநாதனாரிடம் வேலை பார்த்து வந்தேன்.

கவிஞரும், முத்தமிழ்க் காவலரும் எனக்கு இரண்டு கண்கள் போன்றவர்கள்.

அந்தச் சமயத்தில் 1952இல்தான் கவிஞருக்கு முத்தமிழ்க் காவலரின் முயற்சியால் மணிவிழா சிறப்பாக நடந்தேறியது.

நானும் மணிவிழாக் குழுவில் ஒரு செயலாளனாகப் பணிபுரிந்தேன்.

கவிஞருடன் பல ஊர்களுக்குச் சென்று, அவர்க்குப் பின் நானும் பொதுக் கூட்டத்திலோ, இலக்கிய மன்றங்களிலோ பேசியிருக்கிறேன்.

அதுபோலவே, முத்தமிழ்க் காவலரும் என்னைத் தம்முடன் பல ஊர்களுக்கு அழைத்துச் சென்று பல கூட்டங்களில் பேச வைத்திருக்கின்றார்.

முத்தமிழ்க் காவலர் அவர்கள் என்னிடம் அளவற்ற அன்பும், அனுதாபமும், ஈவிரக்கமும் வைத்திருந்தார். அவரால் நானடைந்த நன்மைகள் மிகுதி. தம்முடைய பிள்ளையாகவே என்னை நடத்தினார். என்னைச் சிறுபையனென்று எண்ணாமல், புலவரய்யா, புலவரய்யா என்றே அழைப்பார்.

கவிஞர் என்னிடம் கோபம் கொண்டால், முண்டக் கலப்பை என்று திட்டுவார். காதில் வாங்கிக் கொள்ள மாட்டேன். சமயங்களில் நானும் அவரை எதிர்த்துப் பேசி மிரட்டுகின்ற இயல்புள்ளவன். கவிஞரிடம் கோபமாக ஒருவன் எதிர்த்துப் பேசினான் என்றால், அவன், நான் ஒருவனாகத்தான் இருக்க முடியும்.

என்னைத் தனியே ஓட்டலில் இருக்கச் செய்து விட்டுக் கவிஞர் யாருடனாவது எங்கோ சென்று விடுவார் சில நேரங்களில். அப்போது சாப்பாட்டு நேரமாக இருக்கும். பசியோ வயிற்றைக் கிள்ளும். கவிஞரோ வரமாட்டார். நேரங்கடந்து வருவார். வந்ததும் சாப்பிட்டாயாடா? என்பார். இல்லை என்பேன். சாப்பிட வேண்டிய நேரத்தில் சாப்பிட வேண்டியது தானே என்பார். நீங்கள் இல்லாமல் நான் மட்டும் எப்படிச் சாப்பிடுவேன்? என்பேன். பணப்பை உன் கையில் தாண்டா இருக்குது. சாப்பிடாமல்கூடப் பூதம் காப்பது போலப் பத்திரப்படுத்தி வைத்திருக்கவா உன்னிடம் கொடுத்தேன் பணத்த? என்பார்.

முத்தமிழ்க் காவலர் என்னை வெளியூருக்கு அழைத்துச் சென்றால், என் கூடவே அவரும் இருப்பார். அல்லது அவர் கூடவே என்னை இருக்கச் செய்வார். அவர் சைவர். நான் அசைவன். இருந்தாலும் என் பக்கத்தில் அவர் அமர்ந்து சாப்பிட்டால்தான் அவருக்கு மன அமைதியுண்டாகும். எனக்கும் மனம் பெருமிதமடையும்.

பாவேந்தர் நூற்றாண்டு விழாவையொட்டிக் கடந்த கால நிகழ்ச்சிகளை நினைத்துப் பார்க்கவும், பொது மக்களிடம் எடுத்துக் கூறவுமான வாய்ப்பினை அளித்த, திருச்சி பாவேந்தர் பல்கலைக்கழகத்தின் பாவேந்தர் நூற்றாண்டு விழாக் குழுவினர் அனைவருக்கும் நன்றி செலுத்தி இக்கட்டுரையை இனிதே முடிக்கின்றேன்.

* * *

# பாரதிக்கு ஈடு கொடுக்க வல்ல பாவேந்தர்

முகவை இராஜமாணிக்கம்

பாவேந்தரோடு பழகியவன்; பாவேந்தர் பாடல்களைப் பாடக் கேட்டவன்; பரமகலைப் பிரியரும், பழஞ் சின்னங்கள், சிற்பங்கள், சித்திர ஓவியங்கள் பலவற்றை விலை கொடுத்து வாங்கிச் சேகரித்து வைத்தவரும், பாவேந்தரிடம் மிகவும் அன்பும், மதிப்பும் கொண்டு விளங்கியவருமான புதுவைப் பிரமுகர் அன்பர் திருமுடி சேதுராமன் அவர்கள் சிங்கார மாளிகையிலே சந்தித்த பாவேந்தருடன் உரையாடி மகிழ்ந்தவன், நான்.

பிரெஞ்சு ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு, பாரதத்துடன் ஒன்றிணைந்த பிரதேசமாக அமைந்த பின்னர், புதுவை சட்டமன்றத் தேர்தலில் பழம் பெருந் தேச பக்தரும், பொதுவுடைமை வீரருமான தோழர் வி. சுப்பையாவின் தலைமையில் அமைந்த தேர்தல் அணியில், யானைச் சின்னத்தில், தேர்தலுக்கு நின்ற பாவேந்தருக்குத் தேர்தல் பணிபுரிந்து பாவேந்தர் வெற்றி பெற்றதைக் கண்டு மகிழ்ந்தவன் நான்.

'புதுவை நகர் - வீதி ஒழுங்குடையது, ஆனால் நீதி ஒழுங்கில்லை' என்ற துடிப்பினால், புதுவை அரசியலில் ஈடுபாடு கொள்ளாமல் ஒதுங்கி, இணையற்ற தமிழ்ப் பணியில் இறுதிவரை மூழ்கி, எண்ணற்ற கவிதை முத்துக்களையும், இலக்கியப் படைப்புக்களையும், தமிழுலகுக்கு அள்ளி அள்ளித் தந்துவிட்டுச் சென்ற பாவேந்தரின் பசுமையான உணர்வுகளை நெஞ்சில் கொண்டவன், நான்.

அவர் நிறுவிய 'உலகத் தமிழ்க் கவிஞர் மன்றம்', இன்று சென்னையில் 'தமிழ்க் கவிஞர் மன்ற'மாக உருவெடுத்து, பல்வேறு தமிழிலக்கியப் பணிகளோடு 'கடற்கரைத் தமிழ்க் கவியரங்கத்தைப்' பல்லாண்டுகளாக, இளங்கவிஞர்களுக்குக், கவிதை உணர்வு ஊட்டப் பெரிதும் உதவும் வகையில், பாவேந்தர் பரமசீடனான கவிஞர் பொன்னடியான் உந்துதலில், இடைவிடாது திங்கள்தோறும் முதல் ஞாயிறு மாலையில், சென்னைக் கடற்கரையில் - திருவள்ளுவர் சிலைக்குப் பின்புறமுள்ள மணற்பரப்பில் நடத்தி வரும் தமிழ்க் கவிதைப் பணியில் பங்குகொள்பவன் - என்ற முறையிலும், பாவேந்தரின் கவிதைகளில் ஊறித்திளைப்பவன் என்ற பாங்கிலும், அவரது அருங்கவிகள் சிலவற்றையும், அவரது வாழ்க்கைக் கூறுகள் சிலவற்றையும் நினைவு கொள்ளும் வகையில், ஈடும் எடுப்புமிலா இருபதாம் நூற்றாண்டுக் கவிஞன் பாரதிதாசன் நூற்றாண்டு விழா மலருக்கு வழங்குவதில் பெருமையடைகின்றேன்.

### பாவேந்தர் பாடிய முதல் பாட்டு :

'பாட்டுக்கொரு புலவன்' பாரதி - எட்டையபுரத்தில், 1882 டிசம்பர் 11இல் பிறந்து, 40 ஆண்டுகளே வாழ்ந்து, சென்னையில் 1921 செப்டம்பர் 11இல் மறைந்தவர். அந்த தேசிய மகாகவி பாரதியின் நாட்டுப் பணிக்கும், பாட்டுத் தொழிலுக்கும் வாரிசாக வந்த பாரதிதாசன் புதுவையில், 1891 ஏப்ரல் 29இல் பிறந்து, சென்னையில் 1964இல் மறைந்தவர்.

பிரெஞ்சு, தமிழ் மொழிகளில் நல்ல பயிற்சி; 16 வயதில் தமிழ்ப் புலமைத் தேர்வு; 18 வயதில் கல்லூரியில் முதல் மாணவராகத் தேர்வு. புதுவை அரசினர் கல்லூரித் தமிழாசிரியனாகப் பணி. 30 வயதில் திருமணம். அத்திருமண விழாவில், புதுவை வந்து தங்க நேர்ந்த பாரதியாருடன் சந்திப்பு நிகழ்கிறது.

'சுப்புரத்தினம் கவிபாட வல்லவன்' என்று கண்டு கொண்ட பாரதி - 'பாடு' எனக் கட்டளையிடுகிறார். அவர் பாடிய முதல் பாட்டு 'பாரதியின் கவிதா மண்டலத்தைச் சேர்ந்த கனகசுப்புரத்தினம் பாடியது' என வெளி வந்தது.

எங்கெங்கும் காணினும் சக்தியடா - தம்பி
ஏழுகடல் அவள் வண்ணமடா! - அங்குத்
தங்கும் வெளியினிற் கோடியண்டம் - அந்தத்
தாயின் கைப்பந்தென ஓடுமடா......

பத்து ஆண்டுகளுக்கு மேல் பாரதியாருடன் பழகியவர்; இயல், இசை, நாடகத்தில் ஆர்வம் உள்ளவர்; பாடுவார், நடிப்பார்; கதர்ப்பாட்டு, சுப்பிரமணியர் துதியமுது கீர்த்தனைகள் எழுதினார்.

### தேசபக்திப் பாக்கள் :

1930இல் அவர் எழுதிய 'கதர் இராட்டினப்பாட்டு' வெளிவந்தது. [விலை - 1.25 அணா (8 பைசா]. வெளியிட்டவர் - காசியிலிருந்து வந்து, புதுவையில் மிட்டாய்க் கடை வைத்திருந்த இளைஞர் ஈ. லக்ஷ்மண பிரசாத்.

சின்ன இராட்டின நூலிழைப்பாய் - அதில்
தீட்டின்றி நெய்த உடை உடுப்பாய் - வரும்
அன்னியர் நூலைத் தலைகவிழ்ப்போம் அதற்
கப்புறம் என்னைக் கலந்திடுவாய்.....

### சிங்காரச் சுவைப் பாட்டில் - 'கதர்' பற்றி எழுதிய பாடல் :

இன்னல் செய்தார்க்கும் இடர் செய்திடாமல்
இராட்டினம் சுற்றென்று சொல்லும் - எங்கள்
ஏதமில் காந்தியடிகள் அறச் செயல் வெல்லும்;
கன்னலடா எங்கள் காந்தியடிகள் சொல்
கழறுகிறேன் அதைக் கேளே - 'நீவிர்
கதரணிவீர்' உங்கள் பகைவரின் வேரங்குத்தூளே.
கதரணிவீர் என்றுரைத்த காந்தியண்ணல் ஆணை
கருதிடுவீர் அது உமக்கு நாரதனார் வீணை!
கதரணிவீர் எனும் அடிகள் காந்தியின் வாய்க் குமுதம்;
கருதிடுவீர் அது நமது வாழ்வினுக்கோர் அமுதம்.
வீணையும் பஞ்சில் விரல்பொருந்த
விடுதலை நீர் காண்பீர்.

1921இல் காரைக்காலில் தமிழாசிரியனாக இருந்தபோது, அவர் நூற்ற நூலின் இழையை முறுக்கி, தனது முதல் பெண் சரசுவதி பாப்பாவுக்கு, அரைஞாண் கயிறு அணியும்படி, தன் மனைவி பழனியம்மாளிடம் கூறினார்.

**பாரத தேவி வாழ்த்து :**

*பொன்னிறக் கதிர்விளை நன்செயிற் புத்தொளி*
*வடிவமர் அன்னாய்! நின்னெழில் வாழ்க!*
*அறமெனும் வயிரக் குலிசத் தோளுடை*
*அன்னை நீ வாழ்க! அன்னை நீ வாழ்கவே!*

**சுக்கா மிளகா சுதந்திரம்!**

*தச்சன் கூடுதான் உனக்குச் சதமோ!*
*அக்கா அக்கா என்று நீ அழைத்தாய்!*
*அக்கா உனக்கு வந்து கொடுக்கச்*
*சுக்கா மிளகா சுதந்திரம்? கிளியே!*

**அமைத்திடுக திட்டம் :**

நல்லதோர் திட்டம் அமைத்தல் நம் கடன்
அல்லன் அனைத்தும் அழித்தல் நம் கடன்
செல்வம் நாட்டிற் சேர்ப்பது நம் கடன்
செந்தமிழ் காத்தல் சிறந்த கடன் நமக்கு.

தேவியை வாழ்த்தி, சுதந்திரத்தின் அருமை உணர்த்தி, திட்டத்தின் அவசியம் பற்றிப் பாடியுள்ளார்.

புரட்சிப் பாக்கள் :

போரின்றி உலகம் நிம்மதியாக வாழ, பாசிச யுத்த வெறியர்களை வீழ்த்திய காவியப் போரில், சோவியத் நாடு இரண்டாம் உலகப் போரில் நிகழ்த்திய தேசபக்த வீரச்சமரில், இரண்டு கோடி மக்களைக் காவு கொடுத்து, வெற்றிவாகை சூடிய சோவியத் நாட்டு வீரர்களையும், வீராங்கனைகளையும் எடைபோடத் தெரியாத பாசிச இட்லரின் உன்மத்தத்தையும், உருசிய நாட்டின் ஒப்பற்ற சமுதாய அமைப்பையும் வியந்து, 1945இல் பாடிய பாவேந்தர் பாரதிதாசனாரின் கருத்தாழமிக்க, எழுச்சி நிறைந்த பின்வரும் பாடல்

மக்கள் வாழ்வின் மதிப்பு இன்னதென
ஒக்க வாழும் உறுதி இதுவென
முதிய பெரிய முழுநிலத்திற்கும்
புதியதாகப் புகட்டிய உருசியம்!
உருசிய நாட்டின் உடைமையைக் கடமையை
மக்கள் தொகையால் வகுத்தே, வகுத்ததை
உடலில் வைத்தே உயிரினால் காக்கும்
உருசியம் என்பதை இட்லர் உணர்கிலான்!

தேச பக்த உணர்வின் ஆவேசத்தையும் சமாதானத் தாகத்தையும் வெளிப்படுத்தும் வரிகளாகும்.

* * *

# இவை நடக்கட்டும்

முனைவர் கவிஞர் வல்லம் வேங்கடபதி

உதடும் உள்ளமும் ஒன்றா கட்டும்
உண்மை உடன்கலந்(து) உறவா டட்டும்
எண்ணம் பூப்போல் எழில்துலங் கட்டும்
வண்ண நறுமண தேன் வழியட்டும்
சொல்லும் செயலும் சேர்ந்திருக் கட்டும்
சொர்க்க வாசலின் சுடர்விளங் கட்டும்
அக்கம் பக்கம் அருகணை யட்டும்
ஆதர வாகி அரவணைக் கட்டும்
கண்பார் வைகள் காதலா கட்டும்
காவிய போதைகள் கரைமீ றட்டும்
கவலைத் துயர்கள் கண்மூ டட்டும்
கற்பனைச் சுகங்கள் கலைவள ரட்டும்
தாலாட் டாகத் தமிழ்மா றட்டும்
தாய்ப்பால் பாற்கடல் அமுதா கட்டும்
நடைஒவ் வொன்றும் தடைதகர்க் கட்டும்
நால்திசை எல்லைகள் நமதா கட்டும்
வழங்கும் கைகள் வளர்ந்தோங் கட்டும்
வாழ்த்தும் வணக்கமும் வரவேற் கட்டும்
காலம் நமது கால்வழிப் படட்டும்
கடவுள் வாழ்க்கை கண்மல ரட்டும்!



# பாவேந்தரால் பெற்ற பாட்டுத் திறன்

பட்டுக்கோட்டை இராசேந்திரன்

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரின் நூற்றாண்டு இது!

"பாட்டால் பரமனைத் தொழலாம்" - என்றிருந்த நிலையை மாற்றி, "அதுமட்டுமல்ல; பாட்டால் பாமரனின் இதயத்தையும் தொடலாம்" என்றாக்கிய முதல் பெருமை தேசியகவி பாரதி, புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார் இருவருக்கு மட்டுமே உண்டு. அதாவது அப்படியொரு நிலையைத் துவக்கி வைத்த இருபதாம் நூற்றாண்டுப் பெருமையாளர்கள் இவர்கள்!

தேசியகவி பாரதியின் பாட்டைச் சுவைத்திருக்கிறேன்: அவரைக் காணும் பேறு என்னுடைய தாத்தாவுக்குக் கிடைத்திருந்தது. ஆனால், புரட்சிக் கவிஞரை மட்டுமன்றி, அவருடைய அத்தனை நடவடிக்கைகளையும் அருகிருந்து காணும் பேறு; அவருடைய அற்புதக் கவிதைகளை அவரே இசை நயம் - ஒலி நயத்தோடு பாடுவதைப் பக்கமிருந்தே கேட்டு ரசிக்கும் பேறு; அவர் எழுதிய கற்பனை வேகக் கவிதைகளை உடனுக்குடன் எடுத்தெழுதும் பேறு எனக்குக் கிடைத்திருந்தது!

அது மட்டுமல்ல; கற்பனையின் கட்டுப்பாடற்ற வேகத்தால் எப்போதாவது ஏற்படும் கவிதை நெருடல்களை அந்தப் புரட்சிக் கனலிடம் சுட்டிக்காட்டிச் சூடு படாமல் தப்பியதும் உண்டு நான்.

'இதெல்லாம் எப்படிச் சாத்தியம்? ஒருவேளை அந்தக் கவிச் சிங்கத்தின் குடும்பத்தில் இவனும் ஒருவனோ!' என்ற வியப்புக்குச் சிலர் ஆளாகலாம்.

இப்படியோர் ஐயப்பாடு எழுமானால் 'ஆம்' என்று சம்மதிக்கவோ, 'இல்லை' என்று மறுக்கவோ இயலாத நிலை எனக்கு!

ஆம்; 1950களில், புரட்சிக் கவிஞர் அவர்களின் நிழலில் இருந்த குருகுலச் சிறப்பினன் நான். அவர் இரண்டாவது முறையாகப் புதுவையிலிருந்து தொடங்கி நடத்திய 'குயில்' வார ஏட்டில், பாவேந்தர் ஆசிரியர்; நான் துணை ஆசிரியர்.

அவரது புதல்வர், டாக்டர் மன்னர் மன்னன் அவர்கள், தந்தையாருடன் பிணங்கி விலகியிருந்த வேளை அது; அதனால்தானோ என்னவோ, என்னைப் பிள்ளைப் பாசத்தோடு வைத்திருந்தார் புரட்சிக் கவிஞர். சுயலாபம் கருதி, நான் அவரை விலகும் வேளையில், பெற்ற மகனே பெற்றோர்பால் வந்திணைந்தார்! பொருத்தம்தானே?

செத்துப் பிழைப்பது என்பார்களே? அப்படியோர் நிலைமை எனக்கு மட்டுமல்ல; என் தமிழாசானின் 'குயில்' ஏட்டிற்கும் ஏற்பட்டதுண்டு. பேரறிஞர் அண்ணா அவர்கள் பொற்கிழி வழங்கிட, அந்தத் தெம்பே ஆதாரமாக முதன்முதல் குயில் ஏடு 1946 டிசம்பரில் இசைக்கத்

தொடங்கியது; அதன் இரண்டாவது இசையரங்கம் புதுக்கோட்டையிலிருந்து 25-6-1947இல் தொடங்கியது. பிறகு 1-9-47 முதல் 15-8-48 வரை புதுவையிலிருந்தே விட்டுவிட்டு இசைப் பந்தி. அதன்பின் அரசே 'குயிலு'க்குத் தடை விதித்துவிட்டது. பாவேந்தரின் 'குயில்' மூன்றாம் பிறவி எடுத்தது, 1-6-58இல். வார இதழாக 7-2-61 வரை புதுவையில் பாடிப் பறந்து கொண்டிருந்த 'குயில்', 15-4-1962இல் சென்னைக்குப் பறந்து வந்து சிக்கலுக்கு ஆளாகியது. 1-8-1962 உடன் அடியோடு நின்று போயிற்று. இது 'குயிலி'ன் கதை!

1958 முதல், இரண்டாம் முறையாகப் புதுவையிலிருந்து 'குயில்' வாரந்தோறும் இசைக்கத் தொடங்கியது என்றேனல்லவா? அதன் விலை 13 காசுகள் மட்டுமே! அப்போதுதான் நான் அதன் துணையாசிரியன். திரு.மா. தண்டபாணி அவர்கள் 'குயில்' அலுவலக அமைச்சர்; அதாவது - நிர்வாகி.

உடன் பிறப்பாக அக்காள் யாரும் இல்லாத நான், புரட்சிக் கவிஞரின் புதல்வியார் வசந்தா அவர்களை "அக்கா, அக்கா" என்றே வாய் நிறைய அன்போடு அழைப்பேன்; அவர்களின் கணவரே திரு.மா. தண்டபாணி. அவரை நான் அழைக்கும் முறை "மாப்பிள்ளை".

தமிழ் நிலத்தில் தமிழான பயிர் விளைச்சல் குறைவு
தமிழ் நிலத்தில் அயல்மொழியாம் களைவிளைச்சல் மிகுதி
தமிழ் நிலத்தில் தமிழ்க் கொள்கை எனும் விளைச்சல் குறைவு
தமிழ் நிலத்தில் அயற்கொள்கைக் களைவிளைச்சல் மிகுதி...

....1-6-1958இல் வெளியான இரண்டாவது குயிலின் முதல் பக்கக் கவிதை பாவேந்தரால் இப்படித் தொடங்கப்பட்டிருந்தது.

புதுவை மகாத்மா காந்தி வீதியிலிருந்த 'பழனியம்மாள் அச்சகம்' தான் 'குயிலகம்'. அதாவது 'குயில்' ஏட்டின் அலுவலகம். அங்கேதான் எனக்குத் தங்கல்.

பட்டுக்கோட்டையிலிருந்து பாவேந்தர் நிழலுக்குப் போய்ச் சேர்ந்தது; ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து குளிப்பது; ஐந்தரைக்கெல்லாம் வரும் மோர்க்கார அம்மாளிடம் தயிர் வாங்கிக் கொண்டு, 95, பெருமாள் கோயில் வீதியில் உள்ள பாவேந்தர் இல்லத்திற்குச் செல்லுவது; அந்தச் கருக்கலிலேயே அயர்வற்ற மிடுக்கோடு ஈஸிச்சேரில் அமர்ந்திருக்கும் பாவேந்தரிடம் நன்னூல் அல்லது யாப்பருங்கலக் காரிகை கற்பது; முதல்நாள் கற்றுத் தந்ததை மறுநாள் போய் ஒப்பிப்பது. அதிகமான பாடம் நடந்துவிடும்போது, மறுநாள் போய் அதைச் சொல்ல இயலாத நிலையில் - மோர்க்கார ஆயா நேரங்கழித்து வந்தாள் என்று பழிபோட்டுவிட்டுத் தப்புவது; பாவேந்தரின் பேரன் பாண்டியனுக்கும், பேத்தி தமிழ்ச் செல்வத்திற்கும் பாலபாடம் பயிற்றுவிப்பது; 'குயிலகத்'தில் -புரூப் படி.. இதைக் காப்பி எடு...அஞ்சலகம் போய்வா...கவிஞரிடம் போய் கையெழுத்து வாங்கி வா...என்பது போலெல்லாம் மாப்பிள்ளை கனிவோடு இடும் பணிகளை முகங்கோணாமல் நிறைவேற்றுவது, மாலை நேரத்தில் பாவேந்தர் குயிலகத்திற்கு வந்து வெளி வராண்டாவில் நாற்காலியைப் போடச் சொல்லி அமர்ந்திருக்கும்போது 'எப்போது, எப்படி அந்த எரிமலை வெடிக்குமோ' என்கிற அச்சத்தோடு உள்ளே உள்ளப் பதைப்புடன் உட்கார்ந்து கிடப்பது; கைரிக்ஷாவில் அவர் வீட்டுக்குக் கிளம்பியதும், எல்லோரோடும் பெருமூச்செறிவது; பாவேந்தர் வராத மாலை வேளைகளில் வரும் இலக்கிய அன்பர்களோடு விவாதித்துக் களிப்பது; என்றாவது சாப்பாட்டு வேளையில் பாவேந்தர் இல்லம் செல்லும்போது ஐயாவும், அம்மாளும், அக்காளும், மாப்பிள்ளையும் காட்டும் பரிவான உபசரிப்பில் திளைப்பது; புரட்சிக் கவிஞரின் ஏற்பாட்டின்படி, ஒரு நாள் விட்டு ஒருநாள் திரு. சுப்பிரமணியபிள்ளை என்பாரிடம் குயிலகத்திலேயே கர்நாடக இசைப் பயிற்சி பெறுவது.....

-அடடா! இப்போதும் பசுமை மாறாத நினைவுகள் அவை! மேற்கண்ட ஒவ்வொரு சங்கதியும் ஒவ்வொரு கட்டுரையாக எழுதும் அளவிற்குப் பெரியவை-அரியவை-எண்ணியெண்ணி மகிழ்வதற்கு உரியவை!

திருவாளர்கள் - வாணிதாசன், கு. சிவப்பிரகாசம், துரை மாணிக்கம், ஆ. அழகன், சித்தன், வித்துவான் பா.முத்து, வித்துவான் வை. மாணிக்கசாமி, தமிழவேள், தமிழ்க் கோவன், நாவரசு, சி.ஏ. முகிலன், மூர்த்தி, இ. பட்டாபிராமன், தமிழன்பன், புலவர் தொல்காப்பியன், பாளை இளமாறன், முருகுசுந்தரம், பேராசிரியர் ந. இராமநாதன், வீ.கு. சிவா, அரிமதி தென்னகன், வித்துவான் தெ. செயராமன், உ.வே. பாலு, நல்லியக்கோடன், முதுகண்ணன், புலவர் பட்டுக்கோட்டை மணிவண்ணன் (வா. சக்காராம்), செல்வா, பாவலர் பாலசுந்தரம், காரை பாரதி, திருவையாறு தமிழ்த்துளி, மதுக்கூர் கா. சம்பத், முருகுவண்ணன், ப.தா. இராசேந்திரன், புலவர் வி.பொ. பழனிவேலன், ஆ.சுந்தரேசன், தென்கச்சி கோ. சுவாமிநாதன்-என்றிப்படி அந்நாளிலேயே எனக்கு நட்பினராகக் கிடைத்த அறிஞர்கள், கவிஞர்கள், புலவர்கள், ஆற்றலாளர்கள் பட்டியலையே தனியொரு கட்டுரையாக வெளியிடலாம்.

அவர்களெல்லாம் ‘குயிலு’க்காக எழுதியனுப்பும் கவிதைகள்-அல்லது எடுத்து வரும் கவிதைகளைப் பாவேந்தரிடம் எடுத்துச் செல்வேன் நான்; அவை யாவும் பாவேந்தரால் ஆழ்ந்து படிக்கப்படும். தேவைப்படும் திருத்தங்களைச் செய்தபின்-‘போடலாம்’ என்றெழுதி என்னிடம் கொடுப்பார் அவர்.

மிகச் சரியாக யார் எழுதியிருந்தாலும் சரி; "அற்புதமா எழுதியிருக்கான் பார்" என்று மனம் திறந்து பாராட்டுவது அவர் குணம். அதேபோலத் தப்புந் தவறுமாக எழுதுவோரை, நேரில் அழைத்துச் சிலமுறை திருத்த முயல்வதும்-அது முடியாதபோது "இதெல்லாம் உனக்குச் சரிப்பட்டு வராது; வேற வேலையிருந்தா பார்" என்று நேரிலேயே கூறிவிடுவதும் அவர் இயல்பு.

கவிதை எழுதும் ஆசை என்னில் பிறந்தபோது, அதைப் பாவேந்தரிடம் நேரில் தெரிவிக்க அஞ்சினேன். அதனால், நான் ஒரு காரியம் செய்தேன். ‘புரட்சிக் கவிஞரிடம் நீ போய் இவ்வளவு காலமாகியும், ‘குயில்’ ஏட்டில் உன் கவிதை ஒன்றையும் காணோமே-ஏன்? என்று என் தந்தையாரை எனக்கு எழுத வைத்தேன். அந்தக் கடிதத்தை எடுத்துப் போய் பாவேந்தரிடம் காட்டினேன்.

அதைப் பார்த்ததும் ‘நீயும் குயிலில் எழுது’ என்று உடனே அவர் சொல்லிவிடுவார் என்பது என் எண்ணம்.

ஆனால் அங்கே நடந்ததோ வேறாக இருந்தது!

"இந்தக் கடிதத்திற்கு நானே பதில் எழுதித் தருகிறேன்; உன் தந்தையாருக்கு அனுப்பு" என்று கூறிவிட்டார் பாவேந்தர்.

‘அன்புள்ள இலக்குவனார்க்கு,

வணக்கம். நலம்; நலமே வளர்க.

இராசேந்திரனுக்குத் தாங்கள் எழுதிய கடிதத்தைக் கண்ணுற்றேன். கவிதை எழுத அடிப்படையாகிய இலக்கணம் கற்பித்து வருகிறேன்; அதன்பின் அவன் எழுதுவான். இலக்கணம் இன்றிக் கவிதை எழுதுவதோ நோக்கம்? தவறு. பிற, பின்.

பாரதிதாசன்

இவ்வாறு உடனேயே ஒரு கடிதமும் எழுதி என்னிடமே கொடுத்து அதை என் தந்தையாருக்கு அனுப்பவும் செய்தார், அவர்.

அதற்கடுத்த இரண்டு மாதம் கழித்தே-ஒரு நாள் மற்றவர்கள் கவிதைகளை அச்சிட அனுமதி பெறச் சென்றபோது "நீயும் தான் ஒரு கவிதை எழுதி எடுத்தாயேன்பா" என்ற உத்தரவு எனக்குக் கிடைத்தது. விடுவேனா?

புரட்சிக் கவிஞர் அவர்கள், சந்தப் பாடல்களே அதிகம் எழுதிவந்த நேரம் அது; ஆகவே நானும் ஒரு சந்தப் பாடலை மறுநாளே எழுதிப்போய்க் கொடுத்தேன்.

அந்திமங்கும் நேரத்திலே
ஆற்றங்கரை ஓரத்திலே
வந்தவன்என் மேலே கண்ணைப் போட்டான்-உன்
வெல்லஇதழ் தாடிஎன்று கேட்டான்!
போதுமென நான் எட்டிப்
போய்நின்றேன் கைகொட்டி
ஏதிது புதுப்பழக்கம் என்றான் ஒரே
எட்டில் வந்தென் கிட்டத்திலே நின்றான்!. . .

-இப்படித் தொடங்கி நான் நடத்தியிருந்த அந்தப் பாடலை, நண்பர்களிடமெல்லாம் காட்டினேன்' அவர்களெல்லாம் பாராட்டினார்கள். ஆனால், கவிஞர் என்ன செய்தார் தெரியுமோ?

"இந்த வயசுல உனக்கு இப்பிடித்தான் எழுதவரும்; வேற எதுனா-தமிழைப் பத்தி . . . நாட்டைப் பத்தி . . . ஏழை எளிய மக்களோட இன்னல்களை நீக்கற வகையைப் பத்தி எழுதேன்பா? இதை வையி; பின்னாலே போட்டுக்கலாம்" என்று சொல்லித் திருப்பிக் கொடுத்துவிட்டார்.

நான் விடவில்லை!

தமிழைப் பற்றி என்று முதன்முதல் சொன்னாரல்லவா? ஆகவே, தமிழைப் பற்றிய அவர் எழுத்தோவியங்களையெல்லாம் ஒன்று விடாமல் படித்தேன். இரவெல்லாம் கண்விழித்து ஏழு அறுசீர் விருத்தங்கள் எழுதிப் போய், மறுநாள் காலையிலேயே பாவேந்தரிடம் காட்டினேன். ஏழில் நான்கு மட்டுமே பிழைத்துக் கொண்டன!

-இவ்வாறு தொடங்கிய அந்த என் அறுசீர் விருத்தப்பா, 12-8-58 'குயில்' ஏட்டில் முதன் முதலாக இடம் பெற்றது. அதன்பின் 'குயில்' என் பாட்டைத் தொடர்ந்து பாடிடலாயிற்று.

மல்லிகை மணத்தை உண்டு
மகிழ்வொடும் தாவித் தாவி
முல்லையைத் தழுவிப் பின்னர்
முன்வரும் தென்றற் காற்றும்;
சில்லென நிலாபா ரெங்கும்
சிந்திடும் ஒளியும்; ஏதும்
எல்லையே இல்லா எங்கள்
எழிற்றமிழ்க் கீடோ சொல்வீர்!..

இவ்வாறாக இலக்கண இறக்கை முளைத்த பின்னர், பாவேந்தரிடம் பிரியா விடை பெற்றுத் தனிப் பறவையாக நான் சென்னை மாநகருக்கு வந்து விட்டேன். பிறகு அடுத்த சில மாதங்களிலேயே பாவேந்தர் அவர்களும், 'பாண்டியன் பரிசு' திரைப்பட நிமித்தம் சென்னைக்கு வந்து சேர்ந்தார்.

அப்போது நான், சென்னையில், பாலு சகோதரர்கள் நடத்திவந்த 'கலை', 'திருவள்ளுவன்' ஆகிய ஏடுகளின் துணையாசிரியன்.

ஒருநாள், என் அலுவலக முகவரிக்கு ஓர் அஞ்சலட்டை வந்து சேர்ந்தது. புரட்சிக் கவிஞரே தம் கைப்பட எழுதியிருந்தார்—

'தோழர் இராசேந்திரனுக்கு,

எனது சென்னை வருகை தெரிந்திருக்கும்! அழைத்தால் தான்
வருவீரோ! பின்னால் இருக்கிறது முகவரி. எதிர்பார்க்கிறேன்.

பாரதிதாசன்

--இவ்வளவுதான் கடிதம். அன்று மாலையே போய்ச் சேர்ந்தேன்.

*21-4-1964*இல் அந்த புரட்சிக் குயிலின் குரல் அடங்குகிறவரை, பழைய அன்பைப் பழுதின்றிப் பெற்ற பெருமை என்னுடையது!

அவரால் பெற்ற தமிழ் இலக்கண மரபுவழி நின்று நான் யாத்த கவிதைகளை *1981*இல் 'பொழுது புலர்ந்தது' என்ற பெயரில் தொகுத்து நூலாக வெளியிட்டேன். தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித்துறை, சிறந்த நூலுக்கான முதல் பரிசை அதற்களித்தது. அன்றைக்கு-இதற்காக என்னை வாழ்த்த அந்தப் புதுவைக் குயில் இல்லையே என்று மனம் கலங்கினேன். அந்தச் செய்தியை அம்மாவுக்கு (பழனியம்மாள்) எழுதி ஆறுதல் பெற்றேன்.

'பொழுது புலர்ந்தது' என்ற என்னுடைய கவிதை நூலுக்குப் பாவேந்தரின் புதல்வியார், திருமதி. வசந்தா அவர்கள் 'நீடிய நல்வாழ்வு வாழ்க' என்ற தலைப்பிலும், அவரது கணவர் திரு.மா. தண்டபாணி (மாப்பிள்ளை) அவர்கள் 'வளர்க தமிழ்த் தொண்டு' என்ற தலைப்பிலும், புரட்சிக் கவிஞரின் புதல்வர் திரு. மன்னர் மன்னன் அவர்கள் 'இவர் பணி வெல்க!' என்ற தலைப்பிலுமாக முன்னுரைகள் எழுதித் தந்து என்னை மகிழ்வித்தனர். அவற்றால் சிறப்பு விருது பெற்றாற் போல் பெருமிதம் கொண்டேன் நான்.

அந்த என் நூலுக்கு உவமைக் கவிஞர் சுரதா அவர்கள் எழுதிய எண்சீர் விருத்த அணிந்துரைக் கவிதையொன்றில்-

பொழுது(நன்கு) புலர்ந்ததெனும் நூலை, அந்திப்
பொழுதில்நான் வாசித்தேன்; இந்த நூலை
எழுதியவர் என் நண்பர் பட்டுக் கோட்டை
இராசேந்திரன் எனும் கவிஞர்; பாவின் வேந்தர்
குழுவினிலே இடம்பெற்ற கவிஞர்; மூடக்
கொள்கையினைக் கண்டிக்கும் எங்கள் கூட்டம்,
முழுநிலவின் அருகில் உள்ள விண்மீன் கூட்டம்;
மூத்தவன்நான்; இளைஞரிவர்; கெட்டிக் காரர்!...

என்றெல்லாம் எழுதி என்னைச் சிறப்பித்திருந்தார்.

என் ஆசான் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாருக்கு நூற்றாண்டு விழாக் காணும் இந்நாளில் எனக்குள்ள ஒரே வருத்தம்-'நாமெழுதிய முதலாவது புதினத்திற்கு முன்னாள் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களின் மேலான மதிப்புரையைப் பெற்ற நமக்கு, நாமெழுதிய முதலாவது கவிதை நூலைப் பாவேந்தருக்குக் காணிக்கையாக்கத்தான் முடிந்ததே தவிர, அவர்தம் திருக்கரத்தால் ஓர் அணிந்துரை பெற முடியாமல் போய்விட்டதே' என்பதுதான்.

* * *

# புதுவையிலே பூத்த புரட்சி மலர்

தில்ரூபா ஏ.பி. சண்முகம்

வளர்ந்திட்ட தாய்த்தமிழ் வளர்த்திட்ட திருமகன்
வாழ்நாள் முழுவதும் தேன்தமிழ் செழிக்க
தளர்வின்றி உழைத்தவன் தமிழாக ஆனவன்
தாசனாம் பாரதிக்கு நேசனாம் நமக்கெலாம்

ஆம்! என்னைப்போன்ற சாதாரணமானவர்களுக்குத் தன்னோடு நெருங்கிப் பழக வாய்ப்பளித்து, அன்பால் அணைத்துக் கொண்டார் என்றால் அந்தத் தாய் உள்ளத்தைப் பற்றி எழுத வார்த்தைகளே இல்லை.

அந்தப் பா மன்னனுக்கு நூற்றாண்டு விழா நடக்கும் இந்த நேரத்தில் நாமும் அதில் கலந்து கொள்ளுகிறோம் என்று எண்ணும்போது, நெஞ்சம் நிமிர்ந்து நிற்கிறது. மகிழ்ச்சி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறது.

அந்தப் புரட்சிக் கவிஞருடன் பழகி, அவருடன் உரையாடி, பக்கத்தில் அமர்ந்து உணவருந்தி மகிழ்ந்த நாட்களை எல்லாம் நினைத்துப் பார்க்கும்போது இந்தப் பிறவியின் பயனைப் பெற்றோம் என்று பூரிப்படையத் தோன்றுகிறது.

நாடகத்துறையில் அழியாப் புகழ் பெற்ற டி.கே.எஸ். நாடகக் குழுவில் 1941இல் இருந்து நடிகனாகப் பணியாற்றினேன்.

டி.கே.எஸ். சகோதரர்கள் மீது பாவேந்தருக்கு தனியான பற்றுதல் இருந்தது. அதுபோலவே அவர்களுக்கும் பாவேந்தர் மீது தனிப்பட்ட மரியாதையும், பாசமும் இருந்தது. காரணம் 1937இல் "பாலாமணி" அல்லது "பக்காத் திருடன்" என்ற சினிமாப் படத்துக்குக் கதை-வசனம்-பாடல்கள் அனைத்தையும் எழுதியவர் பாவேந்தர். அந்தப் படத்தில் அண்ணாச்சிமார்கள் திரு. டி.கே. சங்கரன், திரு. டி.கே. முத்துச்சாமி, திரு. டி.கே. சண்முகம், திரு. டி.கே.பகவதி நால்வருமே நடித்திருக்கிறார்கள். எனவே இவர்களுக்கிடையே ஏற்பட்ட தொடர்பு எத்தகையது என்பதை விளக்க வேண்டுமா என்ன?

பாவேந்தர் பெயரில் பல்கலைக்கழகம் அமைந்திருக்கும் திருச்சி மாநகரிலே 1945ஆம் வருடம் டி.கே.எஸ். குழுவின் நாடகம் தேவர் மன்றத்தில் நடந்து கொண்டிருந்தது. அப்போதுதான் நான் அவரை முதன்முதலாக நேரில் கண்டேன்.

அவருடைய நூல்களைப் படித்து, அவரைப் பற்றிக் கேள்விப்பட்டு எப்போது நேரில் பார்க்கும் பாக்கியம் கிடைக்கும் என்று ஏங்கிக் கொண்டிருந்த நேரத்தில், "ராஜா பர்த்ருஹரி" என்ற நாடகத்திற்குத் தலைமைவகித்து, நடிகர்களையும் நாடகத்தையும் பாராட்டிப் பேசினார்கள்.

நாடகம் முடிந்ததும் பாவேந்தரோடு சண்முக அண்ணாச்சியும் பகவதி அண்ணாச்சியும் உரையாடிக் கொண்டிருந்தார்கள். திராவிட இயக்கத்தைச் சேர்ந்த நடிகர்களும் மற்றவர்களுமாகச் சூழ்ந்துகொண்டு உரையாடல்கள் மீது கவனத்தையும், பாவேந்தர் உருவத்தின் மீது கண்களையும் பதித்து ரசித்துக் கொண்டிருந்தோம். அவரைப் பற்றி -

> "பாரதிதாசன் முகத்திலே அமைதி தவழாது;
> அதற்குப் பதிலாகப் புரட்சி வாடை வீசும்.
> கோப ஜ்வாலை வீசும். திரு.வி.க., ஆண்மையில்
> பெண்மை காணுவது போலக் காண முடியாது;
>
> அவரது முகத்திலே மீசை கறுத்து முருக்கேறியிருக்கும். அவருடைய முகத்திலே யோகத்தின் சின்னங்களைக் காண முடியாது. தியாகத்தின் தழும்புகளைக் காணலாம்"

என்ற பேரறிஞர் அண்ணா அவர்கள் சொன்னது நூற்றுக்கு நூறு சரியே என்பதை உணர்ந்தோம். சண்முக அண்ணாச்சி கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் தங்கு தடையின்றி பதில் வந்தது. அதுவும் கேலியும், கிண்டலும் கலந்து வந்தது. நாங்களெல்லாம் தமிழ்த்தேனைச் சுவைத்து நின்றோம். தமிழிசை இயக்கம் உச்சகட்டத்தில் இருந்த நேரம். அது சம்பந்தமாக ஒரு கேள்வியை சண்முக அண்ணாச்சி கேட்டார். "கச்சேரி களை கட்டற மாதிரி தமிழில் பாடல்கள் இல்லை என்று எழுதியும், பேசியும் வருகிறார்களே?" என்றதும்;

"எவஞ் சொன்னா? தன்னைப் பெத்த தாய்க்குக் கட்டிக்கிறதுக்கு சேலை இல்லைன்னு எவனாவது சொல்வானா?" என்று பாவேந்தர் பளீரென்று அறைந்தது போல் கூறிய இந்தப் பதில், கூடியிருந்த எங்களை ஒரு குலுக்குக் குலுக்கி விட்டது. ஆஹா. எப்படிப்பட்ட பதில்? இந்த மாதிரி பதிலை இவரைத் தவிர எவரால் சொல்ல முடியும்? என்று மகிழ்ச்சியில் திளைத்தோம். பாவேந்தர் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டார்கள். நாங்களும் வணக்கம் கூறி வழியனுப்பி வைத்தோம்.

ஆண்டுகள் பல உருண்டோடி விட்ட பிறகு *1948*இல் தமிழகத்தின் தலைநகரமாம் சென்னையில் நாடகம் நடத்திக் கொண்டிருந்த நேரத்தில் அடிக்கடி பாவேந்தர் நாடகம் பார்க்க வருவார்கள். நாடகம் முடிந்ததும் மக்கள் எல்லாம் கலைந்து சென்று விடுவார்கள். அவர் மட்டும் அதே நாற்காலியில் உட்கார்ந்திருப்பார். பக்கத்தில் சிகரெட் துண்டுகள் சிறிய மலை போல் குவிந்திருக்கும். திராவிட இயக்கத்தைச் சேர்ந்த நடிகர்கள் எல்லோரும் அவரிடம் வந்து வணக்கம் கூறி நிற்போம். சண்முகம் அண்ணாச்சியும், பகவதி அண்ணாச்சியும் வந்து உரையாடுவார்கள். அரசியல், சமுதாயம், மொழி இப்படிப் பல பிரச்சினைகளைப் பற்றிப் பேசி விட்டு விடைபெற்றுக் கொள்வார்கள். எங்களுக்கும் செவிக்கு விருந்து கிடைத்த மகிழ்ச்சியில் இருப்போம்.

ஔவையார் நாடகத்தை இசைத்தட்டு எடுக்க, எச்.எம்.வி. கம்பெனியார் முடிவு செய்து ஏறக்குறைய நாலைந்து இசைத்தட்டுகள் எடுக்கப்பட்டன. இது சம்பந்தமாக அந்தக் கம்பெனிக்குப் போன சமயத்தில் இனிய செய்தி ஒன்று கேள்விப்பட்டோம்.

> **துன்பம் நேர்கையில் யாழெடுத்து நீ**
> **இன்பம் சேர்க்க மாட்டாயா? - கண்ணே**

என்ற பாடலையும்,

வெண்ணிலாவும் வானும் போல
வீரனும் கூர் வாளும் போல

என்ற பாடலையும்

இசைத்தட்டு எடுக்க எச்.எம்.வி. கம்பெனியார் முடிவு செய்திருப்பதாகவும், இசையரசு எம்.எம்.தண்டபாணிதேசிகர் பாடுவதாகவும் அதற்கான ஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருந்தது என்பதே அச்செய்தி. தண்டபாணிதேசிகர் எனக்கு மானசீகமான குரு ஆவார். ஏகலைவனைப் போல் அவர் பாடல்களைக் கேட்டு மயங்கி அவரையே குருவாக எண்ணி சங்கீதம் பயின்றேன். அந்தக் காலத்தில் தமிழிசை இயக்கத்துக்கு உயிர் கொடுக்கும் வகையில் தமிழ்ப்பாடல்களைக் கச்சேரிகளில் பாடிய பெருமை, ஏழிசை மன்னர் திரு. எம்.கே. தியாகராஜபாகவதர், திரு. சிதம்பரம்ஜெயராமன், இசையரசு திரு. எம்.எம்.தண்டபாணி தேசிகர், திருவாரூர் டி.வி. நமச்சிவாயம் ஆகியோரையே சாரும்.

அதிலும் குறிப்பாக இசையரசு எம்.எம்.தண்டபாணி தேசிகர் பாடிய இசைத்தட்டுகள் அதிகம் விற்பனையாகி இசைத்தட்டுக் கம்பெனிகளுக்கு நல்ல வகையில் பொருளை ஈட்டித்தரும்.

எனவே பாவேந்தரின் இரண்டு பாடல்களும் தமிழ்நாடு முழுவதும் ஒலிக்கப்போகிறது. தமிழரின் நெஞ்சமெல்லாம் மகிழ்ச்சியடையப் போகின்றது என்று எண்ணிய எங்களுக்கு, உடனே ஏமாற்றம் தரும் செய்தியும் வந்தது.

அதாவது இசைத்தட்டு எடுக்கும் முயற்சி கைவிடப்பட்டது என்பதேயாகும்.

காரணம் தெரியாமல் பதறிப்போனோம். காரணம் என்ன என்பதும் பிறகு தெரிந்தது.

யாரோ சதிகாரர்கள் பாவேந்தரிடம் சென்று, "தண்டபாணி தேசிகர் கச்சேரிகளில் உங்கள் பாட்டைப் பாடுவதனால்தான் உங்களுக்குப் பேரும் புகழும் வருகிறது என்று சொல்கிறார்" என்று கலகத்தை மூட்டி விட்டார்கள்.

கேட்க வேண்டுமா என்ன! கவிச் சிங்கத்துக்கு வந்தது கோபம். சென்னைக்கு வரும் வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். சென்னைக்கும் வந்தாயிற்று.

சொல்லி வைத்தாற்போல பாவேந்தர் காரில் சென்று கொண்டிருக்கும்போது எதிரே தண்டபாணி தேசதேசிகரும் காரில் வந்து கொண்டிருந்ததைப் பார்த்து, டிரைவரிடம்;

"ஏம்பா, இவனே! காரை நிறுத்து, யாரது தேசிகர் மாதிரி தெரியுது;" என்று சொன்னதும் கார் நின்றது.

தண்டபாணி தேசிகரும் பாவேந்தர் காரில் இருப்பதைப் பார்த்து, காரிலிருந்து இறங்கி வந்து வணக்கம் சொல்லி முடிப்பதற்குள், பாவேந்தர் காரின் கதவைத் திறந்து நின்றபடி, வணக்கம் இருக்கட்டும். கச்சேரியிலே நீ என் பாட்டை பாடறதனாலேதான் எனக்குப் பேரும் புகழும் வருதுன்னு சொன்னியாமே? இந்தா பாரு இனிமே நீ என் பாட்டெ பாடக்கூடாது. மீறி பாடினே....

காரின் கதவு "படார்.." என்று சாத்தப்பட்டது. கார் 'விர்'ரென்று புறப்பட்டு விட்டது.

தேசிகரின் பதிலுக்காகவா அவர் காத்துக் கொண்டிருப்பார். தேசிகரும் ஒன்றும் புரியாமல் கவலையுடன் புறப்பட்டு விட்டார்.

இசைத்தட்டு வெளியில் வராமலிருக்க யாரோ செய்த சூழ்ச்சி வெற்றிகரமாக முடிந்தது.

தமிழனுக்குப் பெரிய இழப்பு; திராவிட இயக்கத்தவருக்குப் பெரிய ஏமாற்றம். தண்டபாணி தேசிகர் பாடி அந்த இசைத்தட்டு வெளிவந்திருந்தால் பாவேந்தருடைய பாடல்கள் அனைத்தும் தொடர்ந்து இசைத்தட்டாக வந்திருக்கும். அந்த ஆசையில் மண் விழுந்தது.

*1950* பிப்ரவரி மாதக்கடைசியில் டி.கே.எஸ். நாடகக்குழு கலைக்கப்பட்டது. நடிப்புத் துறையை விடுத்து தில்ரூபா இசைக்கருவியில் தீவிர கவனம் செலுத்தினேன். நல்ல தேர்ச்சி பெற்ற பிறகு *1951*ஆம் ஆண்டு அக்டோபர் *13*ஆம் தேதி சக்தி நாடக சபாவில் சேர்ந்தேன். ஓய்வு நேரத்தைத் தமிழ் கீர்த்தனைகள் எழுதுவதில் செலவழித்தேன். "இரு நதிகள்" என்னும் புதிய நாடகத்துக்கு ஒரு பாடல் எழுதி இசையமைத்தேன். இதையறிந்த நண்பர் ஏ.கே.சுந்தரம் என்ற நடிகர் (பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்) அண்ணே! இசைக் குழுவில் தில்ரூபா வாசிக்கிறீர்கள். பாடல் அருமையாக எழுதுகிறீர்களே! நானும் பாடல் எழுதுகிறேன். சில சமயம் சரியா வருது. சில சமயம் சரியா வருவதில்லை என்று சொல்லி என்னிடம் நெருங்கிப் பழகினார். அதுமுதல் நாங்கள் இருவரும் இணைபிரியா நண்பர்களானோம்.

டி.கே. எஸ். குழுவிலிருந்தபோது பாவேந்தரிடம் உள்ள தொடர்பினை அவரிடம் பேசும்போதெல்லாம் சொல்லுவேன். அவருக்கு அளவில்லா மகிழ்ச்சி.

சக்தி நாடக சபா விழுப்புரத்தில் நாடகம் நடத்திக் கொண்டிருக்கும்போது பாண்டிச்சேரிக்கு நாடகக்குழு போவதாக முடிவு எடுக்கப்பட்டது.

பாடும் வேந்தன் வசிக்கும் பாண்டிக்குக் போவதை அறிந்து எங்களிருவருக்கும் பேரானந்தம் ஏற்பட்டது. பட்டுக்கோட்டையார், பாவேந்தர் மீது பாடல் எழுதி அவரிடமே பாடிக்காட்ட வேண்டும் என்றார்.

புதுவைக் கவிஞன் கவிதையிலே - இன்பம்
பொங்கி வழியுதடா . . .

(புதுவை. . .)

என்ற பல்லவியை எழுதி என்னிடம் காட்டினார்.

"மிக நன்றாக இருக்கிறது. தொடர்ந்து எழுதுங்கள்" என்றேன். புதுவைக்குப் போக வேண்டிய நாளும் நெருங்கிக்கொண்டே வந்தது.

அண்ணே, பல்லவிக்கு மேல் எழுத ஓடவில்லை. நீங்களாவது எழுதி சீக்கிரம் இசையமையுங்கள் என்றார்.

அ.ப.

புதுமைக் கருத்துக்கள் பொதிந்திருக்கும் - அந்த
புரட்சிக் கவிஞன் பாடலிலே . . .

(புதுவை...)

சரணம்

மண்ணடிமை மாய்க்கும் மக்கள் கவியாம்

பெண்ணடிமை போக்கும் பிறவிக் கவியாம்
கண்ணிமை போல் தமிழைக் கருதிடுவார் உண்மைக்
கருத்தினை உரைக்கும் காவலனாம்

(புதுவை...)

என்று நான் எழுதி முடித்து பீம்பளாஸ் ராகத்தில் ஆதிதாளத்தில் இசையமைத்துப் பாடினேன். பட்டுக்கோட்டையாருக்கு எல்லையில்லா மகிழ்ச்சி.

குறித்த நாளன்று நாடகக்குழுவினர் அனைவரும் பாண்டிச்சேரிக்குச் சென்றோம். நானும் பட்டுக்கோட்டையாரும் கவிமன்னன் வாழும் ஆலயம் நோக்கி நடந்தோம்.

இல்லம் சென்றதும் முதலில் மன்னர்மன்னனைத்தான் கண்டோம். வணக்கம் கூறி தந்தையாரைப் பார்க்க வந்தோம் என்றதும் மாடிக்குச் சென்று அனுமதி பெற்று வந்து விட்டார்.

மாடிக்குச் சென்றோம். வணங்கி நின்றோம். நல்ல நாடகக்குழுவாக இருந்ததே. எப்படி இந்த நிலை ஏற்பட்டது? நீங்களிருவரும் என்ன பண்றீங்க? என்று கேட்டார்கள்.

"இவர் நடிகராக இருக்கிறார். பெயர் கல்யாணசுந்தரம். நான் தில்ரூபா என்ற வாத்தியம் வாசிக்கிறேன்" என்றேன்.

உடனே பட்டுக்கோட்டையார் "இவரும் நடிகர்தான். டி.கே.எஸ். நாடகக்குழுவில் இருந்தார்" என்றதும்,

"ஏம்பா! அங்கே இருந்த திராவிட இயக்கத் தோழர்கள் எல்லாம் என்ன பண்றாங்க? "என்று மிகப் பரிவுடன் கேட்டுவிட்டு "வாழ்க, வாழ்கவே என்ற திராவிட நாட்டுப்பண்ணை மிக நன்றாகப் பாடினார்களே, உனக்குத் தெரிந்தால் பாடு" என்றார்கள்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் காஞ்சி திராவிட நடிக கழகத்தார் சார்பில் முதன்முதலாக சந்திரோதயம் என்ற நாடகத்தை எழுதி நடித்தார்கள். நாடகம் துவங்குமுன் பாடும் பாடலாக இதைத்தான் வைத்திருந்தார்கள். 1943இல் ஈரோட்டில் டி.கே. எஸ். நாடகக் குழு நாடகம் நடத்திக் கொண்டிருந்தபோது விடுமுறை நாளன்று மேற்படி நாடகத்தை எங்கள் தியேட்டரிலேயே பெரியார் தலைமையில் அண்ணா அவர்கள் நடத்தினார்கள். அண்ணாவின் நடிப்பைக் காணும் பெரும்பேறு எங்களுக்கெல்லாம் கிடைத்தது. அந்தக் குழுவினரோடு எங்கள் குழுவினரும் சேர்ந்து 20-11--1943 அன்று புகைப்படம் எடுத்துக் கொண்டோம்.

மோகன ராகத்தில் மட்டும் பாடிய திராவிட நாட்டுப் பண்ணை நடிகர் டி.பி. சங்கர நாராயணன் என்பவர் பிலகரி, சாரங்கா, கரகரப்பிரியா, இந்தோளம், பூபாளம் என்று பல ராகங்களில் ராகம்ாலிகையாக அமைத்திருந்தார். பாவேந்தரிடமும் பாடிக் காட்டிப் பாராட்டுப் பெற்றார்கள்.

கடைசி நான்கு அடிகளை மத்தியமாவதி ராகத்தில் நான் இசையமைத்தேன். பாவேந்தர் கட்டளையை ஏற்றுப் பாடினேன். உளம் பூரித்துப் போனார்கள். "பராசக்தி" படத்திலே இந்தப் பாட்டைப் போடறாங்க. நான் சென்னைக்குப் போகும்போது நீயும் வா. இதே மெட்டுகளை வச்சுக்கச் சொல்றே ன்" என்றார்கள். உங்கள் மீது நாங்கள் ரெண்டுபேரும் ஒரு பாட்டு எழுதியிருக்கோம். அய்யா கேக்கணும் என்றேன்;

அதற்கும் அனுமதி கிடைத்தது; பாடினேன்.

பாடி முடித்தவுடன் சொன்னார்கள்:

கண்ணிமை போல் தமிழைக் கருதிடுவாருன்னு பாடினே. 'காத்திடுவார்'-ன்னு வச்சுக்கோ. கண்ணை இமை காக்கிறதுதானே தவிர, கருதுறதில்லை என்று திருத்தினார்கள். எங்களுக்கும் அப்போதுதான் விபரம் புரிந்தது.

பிறகு 'இசையமுது' நூலையும் ஒரு கத்தை வெள்ளைத்தாளையும் கொடுத்து, இதிலே உள்ள பாட்டுக்கெல்லாம் இசையமைத்து சுரப்படுத்து. அடுத்த பதிப்பிலே உன் பேரைப் போட்டு வெளியிடலாம் என்றார்கள். தினசரியும் இரண்டு மூன்று பாடல்களுக்கு இசையமைத்துப் பாடிக் காட்டுவேன். ஒப்புதல் அளித்து மேலும் ஊக்குவிப்பார்கள்.

போகும்போதெல்லாம் நானும் பட்டுக்கோட்டையாரும் சேர்ந்துதான் போவோம். பெரும்பாலும் மாலையில்தான் போவோம். எங்களுக்குச் சிற்றுண்டியாக பச்சைப்பயிர், காராமணி, கடலைப்பருப்பு முதலிய பயிர்வகைகள் வேகவைத்துள்ளதும், காபியும் கிடைக்கும்.

ஒருநாள் 'தில்ரூபா' வாத்தியத்தைப் பாவேந்தர் வீட்டுக்குக் கொண்டுபோய், 'துன்பம் நேர்கையில்' பாடலை வாசித்துக் காட்டினேன். பேருவகையடைந்தார்கள்.

சென்னையிலும், சேலத்திலும் சினிமா சம்பந்தமான வேலைகளுக்காகப் போய்விடுவார்கள். மன்னர் மன்னனிடம் விபரம் கேட்டுத் தெரிந்து கொள்வோம்.

இந்த நிலையில் நாடகத்துக்கு வருவாய் குறைந்தது. திண்டிவனம் புறப்பட வேண்டியதாயிற்று. நான் குழுவிலிருந்து விலகி 6-8-1952-இல் சென்னை வந்தேன். 29-8-1952-ஆம் தேதி பாவேந்தர் சென்னை வருகிறார். சந்திக்க வேண்டிய இடம் குறித்து மன்னர் மன்னனிடமிருந்து கடிதம் வந்தது. அவ்வாறே சந்தித்தேன். "இரத்தக் கண்ணீர்" படத்திற்கு திரு.பி.ஏ. பெருமாள் கம்பெனி வீட்டில் நடந்த ஒத்திகைக்கு வாசித்துக் கொண்டிருந்தேன். பாட்டு பாவேந்தருடையது.

பெண்களே உலகப் பெண்களே...

என்ற பாடலுக்கு சிதம்பரம் ஜெயராமன் இசையமைத்தார். ஒத்திகை நடந்து கொண்டிருக்கும்போது பாவேந்தர் வந்து கவனித்துக் கொண்டிருந்தவர், பாட்டின் ஊடே, "இதோ இந்த தில்ரூபாவை வாசிக்கச் சொல்லு" என்று சொன்னதும் எல்லோரும் என்னையே பார்த்தார்கள்.

"பாண்டியன் பரிசு" படம் எடுக்க சென்னை வந்த பாவேந்தர் தியாகராய நகரில் இராமன் தெருவில் 10-ஆம் எண் வீட்டை வாடகைக்கு எடுத்து வேலைகளைக் கவனித்து வந்தார்கள். மிகப் பெரிய வீடு அது. படத்துக்கு டைரக்டர் முருகதாசா, நடன டைரக்டர் நடராஜ்-சகுந்தலா, தினமும் இவர்களோடு படம் சம்பந்தமாக உரையாடுவார்கள். கவிஞர் பொன்னடியான் பாவேந்தர் எழுதியதெல்லாம் சரிபடிவம் எடுக்கும் வேலையில் தீவிரமாக ஈடுபட்டுக் கொண்டிருப்பார்.

நான் தினசரியும் பாவேந்தரைக் காணச் சென்று விடுவேன். காலையிலிருந்து இரவு வரை இருந்துவிட்டு வீடு திரும்புவேன்.

ஒரு சமயம் எட்டுக்கிரகங்கள் ஒன்றுசேரும் சம்பவம் மிகைப்படுத்தப்பட்ட நேரம். இதைப் பற்றிப் பரபரப்பாகவும் பேசப்பட்டது. அன்று மக்கள் நடமாட்டம் குறைவாகவே இருந்தது. காய்கறி மார்க்கெட்டுகள், இறைச்சிக்கடைகள் எல்லாம்கூட சரியாக இயங்கவில்லை. அதற்கு

முந்தினநாள் இரவு 8-00 மணி வரை பாவேந்தரிடம் இருந்துவிட்டு விடைபெற்றுக் கொண்டோம். அப்போது, ஏம்பா, நாளைக்குத்தானே இந்த எட்டுக் கிரகம் ஒண்ணு சேருதுண்ணு சொல்லி மக்களைக் குழப்பி விட்டுக்கிட்டு இருக்கிறானுங்க" என்றார்கள்.

ஆமாங்கய்யா. மார்க்கெட், கடைகள், எல்லாமே நாளைக்கு மூடித்தான் இருக்குமாம். பஸ் போக்குவரத்துக்கூட சரியானபடி இருக்குமாங்கிறது சந்தேகம் என்றேன்.

என்ன பைத்தியக்காரத்தனம்? இந்த இருபதாம் நூற்றாண்டிலேயும் இப்படி இருக்கிறாங்களே. சரி போயிட்டு நீங்களெல்லாம் காலையிலே வாங்கண்ணு விடை கொடுத்தார்கள்.

மறுநாள் காலை, நண்பர் அமிர்தலிங்கம், நான் இன்னும் பல நண்பர்கள் எல்லோரும் அய்யாவின் இருப்பிடம் வந்தோம்.

ஏம்பா, இன்னிக்கி கவிச்சிக் கடை ஒண்ணும் இருக்காதா? என்றார்கள்.

ஆமாங்கய்யா, யாரும் கறி, மீன் எதுவுமே சாப்பிடக்கூடாதுன்னு வேறே சொன்னாங்க என்றேன். ஏம்பா, முஸ்லீம் சகோதரர்கள் இதையெல்லாம் சட்டபண்ண மாட்டாங்களே! ஏம்பா இவனே...என்றதும் டிரைவர் வந்தார். பாண்டியன் பரிசு படத்துக்கு ஏற்பாடு செய்திருந்த ஸ்டண்டு மாஸ்டரை அழைத்து, இந்தாப்பா, நீயும் கூடப்போ. முஸ்லீம் சகோதரர்கள் இருக்கும் பகுதிக்குக் காரை எடுத்துப் போய் கறி, மீன், கோழி எது கிடைச்சாலும் வாங்கிப் போட்டுட்டு வா என்றார்கள். உடனே நான் மீர்சாகிப் பேட்டை மார்க்கெட்டை நினைவுபடுத்தினேன். "சென்னை நகரம் பூராவும் தேடி, எத்தனை நாழிகையானாலும் பரவாயில்லை. கறி, மீனோடதான் நீ வரணும்" என்று மறுபடியும் அழுத்தமாக அவருக்கு ஆணையிட்டார்கள்.

பியட் கார் புறப்பட்டது. ஒரு மணி நேரத்துக்குப் பிறகு கறி, மீன், கோழி இவைகளுடன் கார் வீட்டு முன் வந்து நின்றது.

கிடைச்சுதா? சீக்கிரமா எல்லாம் தயாராகட்டும். இன்னிக்கி இதையெல்லாம் தின்னக்கூடாதுன்கிறானுங்களே! நாமெல்லோரும் தின்போம். அதனாலே என்ன ஆகப் போறோம்கிறதையும் பார்ப்போம் என்று ஐயா சொன்னதும் சிரிப்பொலி வீட்டை நிரப்பியது.

காலமெல்லாம் மூடப்பழக்கவழக்கத்தைச் சாடும் முத்தமிழ்க் கவிஞருடன் பகுத்தறிவு இயக்கத்தைச் சேர்ந்த எங்களுக்கு இப்படியொரு வாய்ப்புக் கிடைத்தது என்றால் அதைப் பெரும்பேறு என்றுதான் சொல்ல வேண்டும்.

படம் சம்பந்தப்பட்ட வேலைகள் பந்தயக் குதிரை வேகத்தில் இருந்தது. நடைவேகத்தில் தள்ளாடியது. இந்தியத் திருநாட்டின் மீது சீனன் படையெடுத்த நேரம். "பாரதப் பாசறை" என்ற நாடகத்தை நடத்த ஏற்பாடுகள் நடந்தது. 25-3-1963 அன்று நாடகத் துவக்க விழா நடந்தது. பாடல்களுக்கு இசையமைக்கும் பொறுப்பை எனக்கு அளித்தார்கள்.

சீன நாட்டிற்கேற்பட்ட ஒரு நோய், சூயென்லாய்; சீர்பட்டு வருகின்றாள் உலகத்தாய், குரைத்ததந்நாய்.

-இப்படி நரம்புகளையெல்லாம் முறுக்கேற்றி விடும் பாடல்கள். இன்னொரு பாடல் -

> சென்றதடா அமைதி நோக்கி உலகம் அட
> சீனாக்காரா ஏண்டா இந்தக் கலகம்
> நன்றாய் நீ திருந்த வேண்டும்

ஞாலம் உன்னை மதிக்க வேண்டும் -
ஒன்றாய்ச் சேர்ந்து வாழவேண்டும்
ஒழுக்கம் கெட்டால் என்ன வேண்டும் - சென்றதடா

என்ற பாடல்.

இப்பாடல்களுக்கெல்லாம் இசையமைத்துப் பாடினேன். மனநிறைவு கொண்டார்கள்.

பியட் காரை விற்றபிறகு பெரும்பாலும் ஆட்டோ ரிக்ஷாவில்தான் பிரயாணம் செய்தார்கள்.

ஆட்டோவைக் கொண்டு வா என்றார்கள். கொண்டு வந்தேன். இருவரும் நேரே கோட்டைக்குச் சென்றோம். காங்கிரஸ் ஆட்சி இருந்த நேரம் அமைச்சர் பூவராகனைப் பார்க்கப் போகிறோம் என்ற விபரத்தையும், "பாரதப் பாசறை" நாடகத்தைச் சென்னையில் அரங்கேற்றிய பிறகு அரசின் சார்பாக ஒவ்வொரு மாவட்டத்தின் தலைநகரிலும் நடத்த அமைச்சர் ஒப்புதல் அளித்திருப்பதாக ஐயா சொன்னார்கள். கோட்டைக்குள் நுழைந்ததும் அமைச்சரின் வாயிற்காப்போன் உள்ளே போனவன் உடனே வந்து அய்யாவையும், என்னையும் அழைத்துக்கொண்டு போனான். அய்யாவைக் கண்டதும் அமைச்சர் எழுந்து வணக்கம் கூறி அமரச் சொன்னார்கள். நாடகத்தைத் தமிழ்நாடு பூராவும் நடத்த உறுதியளித்தார்கள். நாடகத்துக்கு இசையை இவர்தான் அமைக்கிறார் என்று என்னையும் அறிமுகப்படுத்தினார்கள். விடைபெற்றுக் கொண்டு ஸ்டான்லி ஆஸ்பத்திரியில் மாரடைப்பு ஏற்பட்டு சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்த எழுத்தாளர் அருண் அவர்களைப் பார்க்கப் போனோம். பாவேந்தரைக் கண்டதும் அருண் படுக்கையிலிருந்து எழுந்து வணக்கம் கூறிவிட்டுக் கண்ணீர்விட்டு அழுதார்.

கவலைப்படாதே. நீ நலம் பெற்று விடுவாய், என்று ஆறுதல் மொழிகளைச் சொன்னார்கள். பிறகு 'பாரதியார் வாழ்க்கை வரலாற்றை' மத்திய அரசு சினிமா எடுப்பது பற்றியும், அதற்குக் கதை-வசனம்-பாடல்கள் எழுத பாவேந்தரை அமைச்சர் கோபாலரெட்டி அவர்கள் கேட்டுக் கொண்டது பற்றியும் மற்றும் 'பாரதப் பாசறை' நாடகம் பற்றிய உரையாடலையும் முடித்துக் கொண்டு புறப்பட்டோம்.

மவுண்ட்ரோடு வந்ததும் தற்போது அண்ணா சிலை இருக்கும் இடத்தில் ஓரமாக ஆட்டோ ரிக்ஷாவை நிறுத்தச் சொன்னார்கள். திருவல்லிக்கேணி போகும் வாலாஜாபாத் ரோட்டில், தர்பார் ஓட்டலைத் தாண்டி ஒரு பலகாரக் கடை. அந்தக் கடையைக் காட்டி சில பலகாரங்களைச் சொல்லி இவைகளை வாங்கி வா என்றார்கள். அவர் சொன்ன பலகாரங்களையெல்லாம் வாங்கி வந்து ஆட்டோவில் ஏறிக்கொண்டேன். உடனே சொன்னார்கள். "பழனியம்மாளுக்கு இவைகள் மிகவும் பிடித்தமானவை. எனவேதான் இந்தப் பலகாரங்களை வாங்கச் சொன்னேன்" என்றார்கள். ஆஹா! வள்ளுவரும் வாசுகியும் மறுபிறவி எடுத்துப் பிறந்தார்களோ! இந்தப் பாமன்னன் எழுதிய "குடும்ப விளக்கில்" வயது முதிர்ந்தோர் பேசும் ஊடல் பேச்சு, முதிர்ந்தோர் காதல் பேச்சு இவைகள் எல்லாம் சொந்த அனுபவத்தின் காரணமாக எழுந்த உணர்வுகளோ என்று புன்சிரிப்புடன் கேள்வியை எழுப்பிக் கொண்டே என் சிந்தனை ஓடிக்கொண்டிருந்தது. தி. நகர் 10, இராமன் தெரு, வீட்டுக்கு வந்ததும் நிறுத்து! என்றார்கள். ஆட்டோ நின்றது. என் சிந்தனை ஓட்டத்தைத்தான் நிறுத்தச் சொன்னார்களோ என்று எண்ணிய நான் திடுக்கிட்டு இறங்கி அய்யாவை வீட்டிலே விட்டுவிட்டு விடைபெற்றுக் கொண்டு என் இல்லம் நோக்கிப் புறப்பட்டேன். பஸ்ஸுக்குத் தேவையான பணத்தையும் எனக்குக் கொடுத்து அனுப்பினார்கள்..

மாலை நேரம் ஒரு நாள் பாவேந்தரைக் காண்பதற்குத் தியாகராய நகருக்குப் போனேன். பாண்டி பஜாரைத் தாண்டி வாணிமகாலுக்குத் திரும்பும் பாதைக்கு, எதிர்ப்பாதையில் பாவேந்தர் நின்று கொண்டிருந்தார்கள். ஆச்சரியத்தில் மூழ்கியவனாய், வணக்கம் சொல்லிவிட்டு, அய்யா இங்கே நிற்கிறீர்களே என்று கேட்டேன்.

'கோவை செல்ல வேண்டும். ஜி.டி.நாயுடு நடத்தும் ஒரு விழாவுக்குத் தலைமை ஏற்கிறேன். ஆட்டோவைக் கூப்பிடு" என்றார்கள்.

அய்யா அவர்கள் ஆட்டோவுக்காக இங்கு ஏன் வரவேண்டும்? யாரிடமாவது சொல்லி வீட்டுக்கே கொண்டு வரச் சொல்லியிருக்கலாமே என்று என்னுள்ளத்தில் பல கேள்விகளை எனக்கு நானே கேட்டுக்கொண்டு ஆட்டோவைக் கொண்டு வந்தேன். இருவரும் ஏறிக் கொண்டோம். சென்ட்ரல் இரயிலடிக்குப் போனோம். கொஞ்சம் முன்னதாகவே போனதால் பிளாட்பாரத்தில் அய்யாவிடமிருந்த விரிப்பை விரித்து உட்கார்ந்து கொண்டோம்.

புற்றிலிருந்து கிளம்பும் ஈசலென மக்கள் நடமாடிக் கொண்டிருந்தார்கள். எனக்கு வியப்பு அதிகமாகிக் கொண்டே இருந்தது. ஒருவராவது இந்தப் பாமன்னனை அறிந்தவர்களாகவே தெரியவில்லை. எவருமே கண்டுகொள்ளவில்லை.

யார் பார்த்தாலென்ன, பாராதிருந்தாலென்ன, நாங்களிருவரும் வசதியாக உட்கார்ந்-திருந்தோம். அறிவுச் சுரங்கத்திலிருந்து வந்த வார்த்தைகள் செவிக்கும் அறிவுக்கும் விருந்தாக அமைந்தது. இரயில் பிளாட்பாரத்துக்கு வந்து கொண்டிருந்தது. நான் எழுந்து அய்யாவுக்கு இடம் பிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டேன்.

மூன்றாம் வகுப்பு டிக்கெட்தான் எடுக்கப்பட்டது. வண்டி நின்றதும் இடம் பிடிக்கும் பொருட்டு உள்ளே சென்றேன். ஆனால் என் முயற்சி பலிக்கவில்லை. காரணம், போர்ட்டர்கள் பணம் பெற்று இடத்தைப் பிடித்துக் கொடுப்பார்களே! அந்த முறையில் எல்லோரும் நிறைந்து விட்டார்கள்!

அய்யாவை அழைத்துக் கொண்டு, பெட்டியில் ஏறினோம். அங்கிருந்த மக்களில் யாராவது இந்தப் பெருந்தகையை அடையாளம் கண்டு தங்களது இருக்கையை அவருக்குக் கொடுக்க முன்வருவார்களா என்று எதிர்பார்த்தேன்.

அய்யகோ! என்னவென்று சொல்வேன் என்னுள்ளம் பட்ட வேதனையை. காலமெல்லாம் தமிழ், தமிழ், தமிழ் என்றும், தமிழன் என்றும், வாழ்ந்த அந்த அஞ்சாநெஞ்சம் படைத்த அடலேறு, கழிவறைக்குப் பக்கத்தில் கொஞ்சம் காலியாக இருந்த இடத்தில் விரிப்பை விரித்து பெட்டியை தலைக்கு வைத்துக்கொள்ளும் வகையில் உட்கார்ந்து கொண்டார்கள்.

கடைசி நேரத்தில் பொருளாதார நெருக்கடி அந்தக் கவித்தெய்வத்துக்கு ஏற்பட்டதால் மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்ய வேண்டியதாயிற்று. ஒரு சமயம் எழும்பூர் இரயிலடியில் சந்தித்தபோது பாண்டிச்சேரி போவதற்காக இரண்டாவது வகுப்புப் பெட்டியில் அமர்ந்து கொண்டு, சாத்துக்குடி சாப்பிட்டுக்கொண்டே அளவளாவியதும், எனக்கும் சில சுளைகளைக் கொடுத்ததையெல்லாம் எண்ணியவாறே பக்கத்தில் அமர்ந்திருந்தேன். புகைவண்டி புறப்படும் நேரம் நெருங்கியது. கீழே இறங்கினேன்.

புகையைக் கக்கிக்கொண்டே புகைவண்டி புறப்பட்டது. கையை அசைத்துக் காட்டி ஐயாவை வழியனுப்பினேன். கண்களில் நீர் தாரை தாரையாக வழிந்து கொண்டே இருந்தது. என்னை யாரும் கவனித்தார்களோ என்னவோ எனக்குத் தெரியாது. பாவேந்தரையே கவனிக்காத மக்கள்

என்னையா கவனித்துப் பார்க்கப் போகிறார்கள்? புகைவண்டி கொஞ்சம் கொஞ்சமாக மறைந்தது. அது போகும் ஒலியும் குறைந்தது. ஆனால் என்னுள்ளத்தில் உள்ள சோகச்சுமை குறையவில்லை.

சோர்வுடன் சோகச் சுமையைத் தாங்கிக் கொண்டே தள்ளாடி நடந்து வந்து பஸ் ஏறி வீடு வந்தேன். இரவெல்லாம் தூக்கம் வரவில்லை.

புதுவையில் பூத்த புரட்சிமலரே! உனது மணம் தமிழகம் பூராவும், ஏன்? தமிழன் எங்கெங்கு இருக்கிறானோ அங்கெல்லாம் வீசிக் கொண்டிருக்கிறது. உனது மணத்தை மாற்றாரும் நுகர்ந்து மகிழ்ந்தார்கள். என்னைப் போன்ற எளியவர்கள் உன் பக்கத்திலேயே இருந்து மணத்தை மனமார நுகர்ந்தோம். மலரை ரசித்தோம். நாங்கள் பாக்கியசாலிகள். அந்தப் பாக்கியம் இனிக் கிடைக்குமா?

* * *

# தமிழ்க்கவி பாரதிதாசன்

முனைவர் பொன்.சௌரிராசன்

பாரதிதாசனார், சிதம்பரம் கீழ மூங்கிலடி காந்திக் குடில் சார்பாக, *1952*இல் நிகழ்ந்த பொங்கல் திருநாளில் சிறப்பு விருந்தினராக, சொற்பொழிவாளராகக் கலந்துகொண்டு சிறப்பித்தார், அப்பொழுது அங்கு விருந்தினர் அமைச்சனாகப் பொறுப்பேற்றிருந்த நிலையில் அவரோடு மூன்று நாட்கள் நெருங்கிப் பழகும் பேறு பெற்றேன். இரவில் நெடுநேரம் தமிழ்மொழி பற்றியும் தமிழ் இலக்கியம் பற்றியும் ஆர்வத்தோடு அவர் கூறுவதைக் கேட்கும் சூழல் எனக்கு வாய்த்தது. அப்போது அவர் கூறியன பல. அவற்றுள் இரண்டு இன்னும் என் நினைவில் பசுமையாகப் பதிந்துள்ளன.

ஒன்று, சங்கத் தமிழ்ப் புலவர்தம் இயற்கை ஈடுபாட்டையும் நுண்மாண் நுழைபுலத்தையும் வியந்து வியந்து காட்டாகப் பாடல் சிலவற்றை அவர் எடுத்துரைத்ததில் "கொல்லன் அழிசி" எனும் புலவர், தலைவன் இரவுக்குறி வந்துழி தோழி சிறைப்புறமாகக் கூறிய கூற்றில் நொச்சிப்பூ பற்றி உரைத்த செய்தி.

"தலைவி, தலைவன் வருகைக்காக இரவில் நெடுநேரம் உறங்காமல் காத்திருக்கிறாள். மிக விழிப்போடு தலைவன் வரும் ஓசை ஏதேனும் கேட்கிறதா என்று ஆர்வத்தோடு காத்துக் கொண்டிருக்கிறாள். தலைவியின் விழிப்புணர்வையும் இரவின் நீண்ட நேரத்தையும் குறிக்கத் தக்க இயற்கை நிகழ்ச்சி ஒன்றினை 'அழிசி' தம் இயற்கைக் காட்சி அனுபவத்திலிருந்து குறிப்பிடுவது, எண்ணி எண்ணி வியக்கத்தக்கது.

"தலைவி காத்திருக்கும் வீட்டின் புறத்தே ஏழில் குன்று உள்ளது. அதன்மேல் நொச்சி வளர்ந்து உள்ளது. அந்நொச்சிக் கொம்புகள் நீல வண்ணச் சிறுமலர்களை உதிர்க்கின்றன. அந்தச் சிறிய மென்மையான மலரின் ஓசையைக் கூட கேட்டவாறு தலைவன் வருகைக்காக நாங்கள் காத்திருந்தோட் என்கிறாள் தோழி, இதுதான் அந்தப் பாட்டு."

பாரதிதாசனார் இந்தச் செய்தியைச் சொல்லிவிட்டு, "நொச்சிப்பூ எப்போது மலரும் தெரியுமா?" என்று ஒரு வினாவை எழுப்புகிறார். எனக்கு எப்படித் தெரியும். பதிலொன்றும் கூறாமல் அவரைப் பார்த்தபடியே உட்கார்ந்திருந்தேன். "நள்ளிரவில் அதாவது பன்னிரண்டு மணிக்கு நொச்சிப் பூ மலரும். இந்த இயற்கை உண்மையைச் சங்க காலப் புலவன் எவ்வளவு நுட்பமாக உணர்ந்து கொண்டு உள்ளான். கண்ணினும் செவியினும் நுட்பமான புலக் காட்சி உடையவர்கள் நம் புலவர்கள்" என்று குறிப்பிட்டு அந்தப் பாடலை,

கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ் சலமே
எம்மி லயல தேழி லும்பர்

மயிலடி யிலைய மாக்குர னொச்சி
அணிமிகு மென்சொம் பூழ்த்த
மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே

(குறுந்தொகை: பாடல் 138)

தனக்கேயுரிய இனிய குரலில் உருக்கமாகப் பாடிக்காட்டினார்.

இன்னொரு செய்தி. தமிழகத்தில் பொதுவுடைமைக் கட்சியார் ஆட்சியில் அமர்வது பற்றியது அது: 'ஓடப்பராயிருக்கும் ஏழையப்பர் உதையப்பர் ஆகிவிட்டால் எல்லோரும் ஒப்பப்பர் ஆகிவிடுவர்' என்று அவர் பாடிய உலகப்பன்பாடலையும் சித்திரச் சோலைகளே உமைத்திருத்த இப்பாரினிலே எத்தனைத் தோழர்கள் இரத்தத்தைச் சிந்தினரோ உங்கள் வேரினிலே' எனும் பாடலையும் எண்ணிப் பொதுவுடைமை பற்றி அவரோடு பேசிய போது அவர் கூறிய செய்தி.

"பொதுவுடைமையைப் போற்றுகிறேன், ஆனால் இங்குள்ள இந்திய, தமிழகப் பொதுவுடைமைக் கட்சிக்காரர்கள் தாய்மொழிக்கு, தமிழ் மொழிக்குச் சிறப்பும் வாழ்வும் தருவார்களா என்பது என் ஐயம். எனவே அந்தக் கட்சியார் தமிழக ஆட்சியில் அமர்வதில் எனக்கு ஆர்வம் இல்லை" என்று உரைத்தார்.

அந்த இரண்டு மூன்று நாட்களில் அவரோடு பழகி உணர்ந்தது அவர் உள்ளம் தமிழுக்கே முதன்மையும் பெருமையும் தருகிறது என்பதேயாகும்.

கவிதைபாடுதல், இளமையிலேயே இயற்கையிலேயே அவர்பால் அமைந்து விட்டது. அந்தக் கவிதை உணர்வு தமிழுக்கே வாய்த்த பக்தியைப் பாடுபொருளாகக் கொண்டு சந்தப் பாக்கள் வண்ணத்தில் துவக்கத்தில் வடிவுபெறலாயிற்று. அடுத்த கட்டம் பாரதியாரை அவர் சந்தித்தபின் அவர்பால் எழுந்த தேசிய உணர்வைப் பாடுபொருளாகக் கொண்ட காலம். அதனை ஒட்டி பொதுவுடைமைக் கொள்கை அவர் பாடல் பொருளாயிற்று எனலாம். பின்னர் தந்தை பெரியார் செல்வாக்கு அவரைச் சமுதாயச் சீர்திருத்தக் கவிஞராக உருவாக்கியது. இப்படிக் கவிஞர் பாரதிதாசனாரின் பாடுபொருள்கள், பாவடிவங்கள் காலப்போக்கில் மாறியும் மருவியும் அமைந்ததாலும் அவற்றுளெல்லாம் இடையறாது இயங்கும் அடிநாதமாகத் தமிழ் உணர்வு அமைந்திருந்ததை அவர் கவிதையை முறையாக, முழுமையாகக் கற்றவர் அனைவரும் எடுத்துரைத்துள்ளனர்.

அவர், உயிர்,உடல், உறவு அனைத்துக்கும் மேலாகத் தமிழை உணர்ந்தார் என்பதற்குக் காட்டுக்கள் பல எடுத்துக்காட்டலாம். ஒரு தாய் ஆணையிட்டு உறுதி கூறும் பொழுது தனக்கு மிக நெருக்கமான குழந்தையின் தலையில் அடித்துக் கூறுவாள். இப்படியே, ஒரு மகன் தாயின் மேல் ஆணையிட்டு உரைப்பான். பாண்டியன் நெடுஞ்செழியன் போல, கற்புக்கரசி கண்ணகிபோல அடுக்கு ஆணை பல கூறும் நிலையும் தமிழ் இலக்கியத்தில் உள. அத்தகு அடுக்கு ஆணை ஒன்று பாரதிதாசனாரின் இசையமுது தொகுதியிலே இடம் பெற்றுள்ளது.

ஈன்றாள் பசிகாண்பாள் ஆயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை (குறள் 656)

என்று தாயினும், ஒழுக்கத்திற்கு முதன்மை கொடுத்தார் திருவள்ளுவர். பாரதிதாசனாரோ தாயினும் தமிழுக்கு முதன்மை தருகிறார்.

அடுக்கு ஆணைகளுள் முதலாக அமைவதும் முடிவாக அமைவதும் உயர்வானதாக இருத்தல் இயல்பு. முதலில் அமைவது உணர்வின் நெருக்கத்தையும் இறுதியில் அமைவது உயர்வின் பெருக்கத்தையும் குறிப்பதாக அமையும். பாரதிதாசனார் அடுக்கு ஆணையில் முதலில் தாய்

வருகிறாள். அடுத்துத் தந்தை வருகிறான். பின்னர் தமிழகம் வருகிறது. முறையே உயிர், உடல், உறவு போலக் குறிக்கப்பெறுகிறது. இவர் இவற்றுக்கெல்லாம் மேலே, இறுதியாகத் தமிழ்மேல் ஆணையிடுகிறார். தாய் எனச் சொன்னவர், அடையின்றி தந்தை எனச் சொன்னவர், தமிழகம் என்று வெறுமனே சொன்னவர், தமிழைச் சொல்லும் போதோ 'என் தமிழ்' என்கிறார்.'தூய என் தமிழ்' என்கிறார். இதனால் தமிழின்பால் அவர் கொண்ட ஆர்வத்தையும் தமிழுக்கு அவர் தந்த ஏற்றத்தையும் உணரலாம்.

தாயின்மேல் ஆணை தந்தைமேல் ஆணை
தமிழக மேல் ஆணை
தூயஎன் தமிழ்மேல் ஆணையிட் டேநான்
தோழரே! உரைக்கின்றேன்.
தமிழரின் மேன்மையை இகழ்ந்த வனைஎன்
தாய்தடுத் தாலும்விடேன்
எமைநந்து வாயென எதிரிகள் கோடி
இட்டழைத் தாலும்தொடேன்.

என்பதே அந்தப் பாடல். எனவே தமிழில் பல கவிஞர்கள் தோன்றியிருந்தாலும் தமிழைப் பல கவிஞர்கள் பாடியிருந்தாலும் தமிழில், தமிழைப் பாரதிதாசன் போல் உணர்வோடு, உருக்கத்தோடு உயர்வோடு பல்வேறு ஒலிஅமைப்போடு எண்ணற்ற இலக்கிய வடிவில் பாடிய கவிஞன் இதுவரை எவரும் இல்லை. எனவே "தமிழ்க்கவி" பாரதிதாசன் என்பதே அவருக்கு மிகப் பொருந்திய சிறப்பாகும்.

* * *



பாரடா உனது மானிடப் பரப்பை!
பாரடா உன்னுடன் பிறந்த பட்டாளம்!

- பாரதிதாசன்

ஓவியம்: பி. பெருமாள்

# பாவேந்தரைச் சந்தித்தேன்

## நினைவு மலர்கள்

கதர் அ.வை.குப்புசாமி

பெரியவர் பாரதிதாசன் ஐயா அவர்களை (ஒரு அரிய,பெரிய பாவிற்கு வேந்தரை) நான் முழுமை எய்தாத நிலையில் பலமுறை சந்திக்கவும் மும்முறை கண்டு பேசி மகிழவும் வாய்ப்பினைப் பெற்றமைக்கு நான் மிக்க பெருமிதம் அடைகிறேன். நான் சர்வோதய சங்க கதர்க் கடையில் கடலூரில் 35 ஆண்டுகள் பணியில் மேலாளராக இருந்தேன். இதற்கிடையில் என் கடை எதிரில் உள்ள அமரர் அ.சே.கணேசன் அவர்கள் (தந்தை பெரியாருக்கு மிகவும் நெருக்கமானவர்) இல்லத்திற்குப் பெரியாரும் வந்துள்ளார். நான் ஐயா அவர்களுடனும், உரையாடி மகிழ்ந்துள்ளேன். சர்ச்சையும் செய்துள்ளேன்.

மேற்படி இல்லத்திற்குப் புதுவை பாவேந்தர் வந்து இருக்கும் சமயம் நான் கண்டு உரையாடுவதுண்டு. ஒரு சமயம் "பாரதியார் அவர்களின் கவிதையைக் காட்டிலும் தங்கள் கவிதை மிக்கோங்கியுள்ளதாகப் பல நண்பர்கள் கூறுகிறார்களே" எனக் கேட்டேன். பாவேந்தர் அவர்கள் புகைக்கும் சுருட்டை எடுத்து விட்டு "பாரதியார் அவர்கள் இந்திய விடுதலைக்கு எழுதினார்கள்", "நான் தமிழர்கள் விடுதலைக்கு எழுதுகிறேன்." எனக் கூறினார்கள்.

மற்றொரு சமயம் ஐயா அவர்களின் இல்லத்திற்குச் சென்றேன். அவர்களின் விசாலமான கருத்துப்போன்று மிக விசாலமான வெளித்தாழ்வாரத்தில்(கொரட்டில்) நீண்ட விசுப் பலகையில் புகைத்த வண்ணம், சிந்தனையோடும் மேனோக்கிலும் அமர்ந்திருந்தார்கள். சென்றேன், நின்றேன், வணங்கினேன். கம்பீரமான பார்வையில் பார்த்து உம்! வாருங்கள்! உட்காருங்கள் எனக் கூறினார்கள். சற்றுத்தள்ளி, பக்கத்தில் அமர்ந்தேன். "என்ன விஷயம்?" என்றார்கள். கடலூரிலே பாரதியார் விழாவுக்குத் தாங்கள் தலைமை தாங்கி நடத்தித் தரவேண்டுமெனச் சொன்னேன். "எந்த தேதி?" என்றார்கள். "செப்டம்பர் 11" எனக் கூறினேன். "அந்தத் தேதியில் நான் வெளியூர் போவதில்லை," என்று அழுத்தமாகக் கூறினார்கள். நான் மலைத்தேன். உடன் அவர்கள் "வேறு தேதி சொல், வருகிறேன்" என்றார். "வேறு தேதியில் செய்வது எனக்கு அவ்வளவு சரியாகப் படவில்லை" எனக் கூறினேன். "அது உங்களுக்கு முடியாது. இது எனக்கு முடியாது. அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்" என முடித்தார்கள்.

பாவேந்தர் அச்சக இடத்தை எங்கள் சர்வோதய சங்கத்திற்கு வாடகைக்குக் கேட்டு முடிக்கச் சென்றிருந்தேன். சில காரணங்களால் அது நடைபெறவில்லை. இந்த மும்முறைகளிலும் அவரிடத்தில் நான் கண்டது நறுக்குத் தெரித்த பேச்சு (curt and right). ஒரு வேந்தனுக்குரிய தொனிமட்டுமன்றி தேவையில்லாத உரையாடலையும் அவர் தவிர்த்ததைக் கண்டேன். மேலும் மகன் திரு. மன்னர்மன்னன், மகள் அமுதவல்லி, பேரன் செல்வம் இவர்களுடன் குடும்ப நண்பர்களாகவே பழகி வருகிறேன். இதுவும் பெருமையே.

புதுவை மக்கள் தலைவர் திரு.வி.சுப்பையா அவர்களுடன் நெருங்கிய தொடர்புண்டு. குடும்ப நண்பர். அவருடன் பேசும் சமயம் எல்லாம் பாவேந்தரைப்பற்றிப் பாராட்டாமல் இருக்கமாட்டார்கள் என்பதையும் நான் கூற கடமைப்பட்டுள்ளேன்.

* * *

# மலரும் நினைவுகள்

தியாகி பி. எஸ். வசந்தன்

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடும் இத்தருணத்தில் என் நெஞ்சில் நீங்காத நினைவுகளாகிவிட்ட 'நான் அவர்களோடு பழகிய காலக் கட்டங்களை' மீண்டும் நினைத்துப் பார்க்கிறேன். "குன்றென நிமிர்ந்து நில்! நன்றது கருது!! நினைப்பது முடியும்!!!" என்ற பாரதியின் சொல்லோவியத்திற்கு இலக்கணமாய் வாழ்ந்து காட்டியவர் பாவேந்தர். தம் வாழ்நாளிலேயே தமக்கும், தம் கவிதைகளுக்கும் பேரும், புகழும், பாராட்டும் கண்டவர் பாரதிதாசனார். இந்த நூற்றாண்டின் சிறந்த கவிஞருள் ஒருவரான பாவேந்தரோடு நான் கொண்டிருந்த தொடர்பினைப் பற்றிச் சுருக்கமாகக் கூற விழைகிறேன்.

1941ஆம் ஆண்டுவாக்கில் நண்பரும், தியாகியும், கவிஞருமான முகவை இராஜமாணிக்கம் அவர்களால் நடத்தப்பட்டுவந்த 'புதுமலர்' என்ற இதழின் மூலம் பாரதிதாசனாரின் கவிதை எனக்கு அறிமுகமாகியது.

நான் 1942இல் 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தில் ஈடுபட்டு பெல்லாரி (அலிப்புரம் கேம்ப்) சிறையில் இருந்தபோது, அங்கு எங்களோடு சிறையில் இருந்த பள்ளிகொண்டான் தியாகி ஆச்சாரியார் என்பவர் பாரதிதாசனாரின் பாடல்களைப் பாடியவிதமே நான் பாரதி-தாசனாரின் பாடல்களைப் படிக்கவும், பாடிப்பார்க்கவும் பேரார்வம் கொள்வதற்குக் காரணமாயிருந்தது என்றால் அஃது மிகையாகாது.

1945 ஜூன் மாதவாக்கில் நானும், பாரதிதாசனாரின் பாடல்களை நான் பாடக் கேட்டு அதன் மூலம் அவரிடத்திலே ஆர்வம் கொண்ட நண்பர்களுமாகச் சேர்ந்து, இராஜபாளையத்தில் பாரதிதாசனாருக்குப் பாராட்டு மற்றும் பணமுடிப்புத்தரும் விழா ஒன்றுக்கு ஏற்பாடு செய்தோம். உள்ளூர் உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் சுப்பிரமணிய ஐயர் தலைமையில் நடைபெற்ற இவ்விழாவில் உயர்திருவாளர்கள் சி. என். அண்ணாத்துரையார், பாவலர் பாலசுந்தரனார் ஆகியோர் கலந்து கொண்டு கவிஞருக்குப் பாராட்டுரை வழங்கினர் என்பது குறிப்பிடத்தக்கது. இந்தப் பாராட்டு விழாவின்போதுதான் நானும் பாரதிதாசனாரும் ஒருவருக்கொருவர் அறிமுகமாகிக் கொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது.

பாரதிதாசனாரின் பாடல்கள் படித்தவர், பாமரர் வேறுபாடின்றி அனைவரையும் கவரக் கூடியதாய் இருக்கிறது என்பதை 1951-டிசம்பரில் திருவில்லிபுத்தூரில் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்றே தெளிவுபடுத்தியது. அன்று அங்கு தாழ்த்தப்பட்டோர் (ஹரிஜன்) மாநாடு ஒன்று நடைபெற்றுக் கொண்டிருந்தது. பொதுவுடைமைக் கட்சித் தோழியர் மதுரை ஜானகியம்மாள், எம்.ஆர்.அப்பன், கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணன் ஆகியோர் கலந்து கொண்டு பேச இருந்தனர். மாநாட்டு நிகழ்ச்சி தொடங்குவதற்கு முன் மேடையில் பாடகர்

இருவர் பாடிக் கொண்டிருந்தனர். இந்த நேரத்தில் கலைவாணர் என்.எஸ்.கே. தம் இரஷ்ய நாட்டுச் சுற்றுப் பயணத்தை முடித்துக் கொண்டு நேரடியாகத் திருவில்லிபுத்தூர் வந்து மேடையை நோக்கி வந்து கொண்டிருந்தார். அப்போது கூடியிருந்த மக்கள் கூட்டம் அவரை நோக்கி உற்சாக ஆரவாரம் செய்ய ஆரம்பித்தது. ஆரவாரம் மேலும் மேலும் அதிகமாகியதே தவிர குறைவதற்கோ, நிற்பதற்கோ வழியைக் காணோம். பாடகர்களின் பாட்டோ, பலரின் வேண்டுகோளோ மக்கள் கூட்டத்தை அமைதிப்படுத்த இயலவில்லை. இந்த இக்கட்டான சூழ்நிலையில் நான் வேகமாக மேடையேறி ஒலிபெருக்கியின் முன் சென்று, பாவேந்தரின் 'பேரன்பு கொண்டோரே! பெரியோரே!' எனும் பில்கணீயப் பாடலையும், 'உலகப்பன்' பாட்டையும் 'நடிப்போடும்' 'நயத்தோடும்' பாடிய விதத்தில் கூட்டத்தினரிடமிருந்து உற்சாகமான கைத்தட்டலுடன் கூடிய அமோக வரவேற்பு எழுந்தது. அதனைத் தொடர்ந்து அமைதியும் திரும்பியது. மாநாடு தொடர்ந்து நன்றாக நடந்து முடிந்தது. பாவேந்தரின் பாட்டமைப்புக்கும், அதன் பொருள்நயத்திற்கும், அதனைப் பாடிய எனக்கும் கிடைத்த இவ்வெற்றி கண்டு அங்கிருந்தோர் அனைவரும் திகைத்துப் போயினர். எம்.ஆர். அப்பன் அவர்கள் எனது இச்செயலைப் பெரிதும் பாராட்டி மகிழ்ந்தார். இதனைத் தொடர்ந்து பொதுவுடைமைக் கட்சிக் கூட்டங்கள், விவசாயத் தொழிலாளர் சங்க மாநாடுகள், இலக்கியக் கூட்டங்கள் போன்றவற்றில் பாரதிதாசனாரின் பாடல்களைப் பாடிவந்தேன்.

இதற்கெல்லாம் சிகரம் வைத்ததுபோல 1953இல் பாரதிதாசனாரின் வீட்டில் இருக்கும்போது அவரே வியக்கும் வண்ணம் அவரது பாடல்களை நான் பாடிக்காட்டியபோது அவரது உள்ளம் பூரித்துப் புளகாங்கிதம் அடைந்ததை என்னால் மறக்க இயலாது.

பாரதிதாசனார் திருக்குறளுக்குப் புது உரை எழுதியிருந்தார். அவ்வப்போது திருக்குறள் விளக்கக் கூட்டங்களிலும் கலந்து கொண்டார். ஒருமுறை மதுரையிலும் யு.சி. உயர்நிலைப் பள்ளியில் பாரதிதாசனாரின் திருக்குறள் விளக்க வகுப்பு நடைபெற்றது. 110 வயதிற்கு மேல் வாழ்ந்து பல்கலைச் செல்வர் ஜோதிவளையாபதிசுவாமிகள் தலைமையில் இவ்வகுப்புகள் நடைபெற்றன. தமிழன்பர்கள் பலர் இதில் கலந்து கொண்டனர்.

1953இல் பாவேந்தரும், நானும் ஒருவாரம் மதுரையில் என்னுடைய சகோதரர் தியாகி தனுஷ்கோடி ராஜா வீட்டில் தங்கியிருந்தோம். இந்த நாட்களில் மாலை நேரங்களில், கவிஞரும் நானும் வைகை ஆற்று மணலில் அமர்ந்து பல விஷயங்களைப் பற்றி வெகுநேரம் பேசிக் கொண்டிருந்திருக்கிறோம். இந்தக் காலக் கட்டத்தில்தான் எங்களுக்கிடையே நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. அப்போது கவிஞர் தாம் எழுதிய திருக்குறள் புது உரையை என்னிடம் ஒப்படைத்துப் புத்தகமாக வெளிக்கொணரப் பெரிதும் விரும்பினார்.

கவிஞர் புலால் உண்பதில் பெருவிருப்பமுடையவர். ஆனால் நானோ தீவிர சைவம். அதனால் எங்களுக்கிடையே உணவு விஷயத்தில் அடிக்கடி கருத்து மோதல்கள் நிகழும். சீவகாருண்ய சங்கத்தினனான என்னைக் கவிஞர் அடிக்கடி கேலியும் கிண்டலும் செய்வது வழக்கம்.

புதுவையில் 1953இல் ஜூன் மாதத்தில் ஒரு நாள் கவிஞரது வீட்டு மாடியில் நிலவொளியில் அமர்ந்து சுற்றுக்கட்டைச் சுவரில் கை வைத்துப் பேசிக் கொண்டிருந்தபோது கருந்தேள் ஒன்று கவிஞரின் கைப்பக்கமாய் வர, அதை நான் கையால் தட்டிவிட்டு அப்புறப்படுத்த, கவிஞர் ஏனப்பா! கையால் தட்டி விட்டாய் என்று கேட்க, நான் அதற்குப் பதிலாக 'நான் சீவகாருண்யம் உடையவன் அல்லவா! அதனால் அது என்னை ஒன்றும் செய்யாது' என்று கூறக் கவிஞர் சிரித்து மகிழ்ந்தார்.

மறுநாள் புதுவைக்குப் பக்கத்துச் சிற்றூர் ஒன்றில் கவிஞர் தலைமையில் ஒரு திருமணம். பாவேந்தரும் நானும் அச்சிற்றூரை நோக்கிப் புறப்பட்டோம். செல்லும் வழியில், உள்ள வேறொரு சிற்றூரைச் சேர்ந்த கவிஞரின் அன்பர் ஒருவர் வேண்டிக்கொண்டதற்கு இணங்க அவரது வீட்டில் காலைச் சிற்றுண்டி உண்ணச் சென்றோம். நெருக்கமான ஓலை வேய்ந்த குடில்களுக்கிடையே அந்த அன்பரது வீடு அமைந்திருந்தது. அதிலும் அன்பரது வீட்டு வாயிலில் அமைந்த முன்பகுதி மேற்கூரையும் எதிர்வீட்டு மேற்கூரையும் மிகவும் தாழ்ந்தும், ஒன்றையொன்று உறவாடுமளவிற்கு நெருங்கியுமிருந்தன. மிகவும் குறுகலான இவ்வழியைக் கடந்துதான் அன்பரின் வீட்டிற்குள் செல்ல வேண்டும். நேராகவோ, குனியாமலோ செல்ல முடியாத சூழ்நிலை. நான் குனிந்து கொண்டே முன்னால் சென்றுவிட்டேன். புரட்சிக் கவிஞர் இந்த இடத்தை எப்படிக் கடக்கிறார் என்று பார்த்தேன். ஒரு கணம்தான், பாரதி சொன்ன நிமிர்ந்த நன்னடையும், நேர்கொண்ட பார்வையும், புவியில் யார்க்கும் அஞ்சாநெறிகளும், நிமிர்ந்த ஞானச் செருக்கும் கொண்ட நம் கவிஞர் கைகளைப் புறத்தே கட்டிக் கொண்டு பக்கவாட்டால் நடந்து குறுகலான அவ்வழியைக் கடந்தாரே பார்க்க வேண்டும்! கவிஞரின் இச்செயலைக் கண்டு பூரித்துப் போனேன்!'

முன்னாள் முதல்வர்கள் பி.எஸ். குமாரசாமி ராஜா, கலைஞர் கருணாநிதி போன்ற அனைத்து முதலமைச்சர்களும் பாவேந்தரிடத்திலும் அவரது பாடல்களிலும் மிகுந்த பற்றும், ஈடுபாடும் உடையவர்கள் என்பதில் ஐயமில்லை. பாரதிதாசனாரது திருக்குறள் உரை இன்றுவரை வெளிவராமலிருக்கிறது. இதைத் தமிழக அரசு மேற்கொள்ள ஆவன செய்தால், தமிழகத்திற்குப் பெரும் பரிசொன்று கிடைப்பதாகும்.

* * *

# புதுமைப் புலவன் பாவேந்தன்

கவிஞர் கோ. மோகனரங்கன்



புதுவைப் புலவன் மதுரத் தமிழில்
புயலைப் படைத்துச் சிரித்தான்!
விதியின் முதுகும் சதியின் தலையும்
விரலில் நெருக்கி முறித்தான்!
புதுமைப் பொழிலில் புவனம் உலவப்
பொழுதும் மணத்தை விரித்தான்!
பதுமை எனவே பணிந்து கிடக்கும்
பயத்தை எழுத்தில் எரித்தான்!

பருத்த உடம்பும் சிறுத்த மனமும்
பதறித் திருந்தத் தொடுத்தான்!
திருட்டும் புரட்டும் மருட்டும் கயமை
சிதைக்கக் கொடுவாள் எடுத்தான்!
வருத்தம் உரைத்தும் திருத்தம் உரைத்தும்
வணங்கி வரவே விடுத்தான்!
கருத்துப் பயணம் செழித்து நடக்கக்
கவிதை விமானம் கொடுத்தான்!

எட்டுத் திசையும் ஒளியை எழுப்பி
இருளை அழித்த கதிரோன்!
முட்டும் திரையின் முளைத்த தடையின்
முனைகள் உடைத்த மதியோன்!
கொட்டு முழக்கில் கொடுமை விழுந்த
குரலை ஒலித்த புதியோன்!
கட்டும் கவிதைக் கடலில் கடமைக்
கலத்தைச் செலுத்தும் முதியோன்!

* * *




புலவர் த. முருகேசனார்

உலகில் காணப்படும் மொழிகளுள் தமிழ்மொழி தொன்மையும், வளமையும், செம்மையும் வாய்ந்த மொழியாகும். மனித சமுதாயத்தின் நாகரிகத்தையும் பண்பாட்டையும் விளக்குவது மொழியேயாகும். தமிழ்மொழியின் பெருமையையும் உண்மையையும் விளக்க பல்வேறு இலக்கிய இலக்கண நூல்கள் நமக்குச் சான்றாய் அமைந்துள்ளன. தமிழின் தனித்தன்மையை நிலைநாட்டிய மறைமலை அடிகளார் போன்றவர்கள் தமிழ் மொழியைப் போற்றிக் காத்து வளர்த்து வந்தனர். ஆயினும் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் தமிழ் வேறு, அவர் வேறு என்று பிரித்தறியாவண்ணம் வாழ்ந்தார். தமிழைத்தன் உடலாக, உயிராக, உணவாக, மூச்சாக, அன்னையாக எண்ணி வாழ்ந்த பெருமகனார் அவர்களுடன் பழகும் பேற்றினை எண்ணிப் பெருமிதம் அடைகிறேன்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் எனக்குத் தமிழ் அறிவையும், தமிழ் உணர்வையும் ஊட்டிய சோமசுந்தர பாரதியார், சிதம்பர நாதனார், வேங்கடசாமி நாட்டார், கா.சு.பிள்ளை, பண்டிதமணி போன்ற தமிழ்ச் சான்றோர்களை நினைவு கூர்கிறேன்.

நான் பணியாற்றிய இராமசாமிச் செட்டியார் உயர்நிலைப்பள்ளியில் இளங்கோ மன்றம் என்ற அமைப்பை ஏற்படுத்தி அதன் மூலமாக மாணவர்களுக்குத் தமிழ்ப் பற்று, தமிழ் உணர்வு, பேச்சாற்றல் வளர தமிழகத்திலுள்ள தமிழ்ச் சான்றோர்களை அழைத்துப் பேசச் செய்தோம். அந்த வகையில்தான் பாவேந்தர் அவர்களைப் பேச அழைத்தோம். எங்களிடமிருந்த தமிழ்ப் பற்றினைக் கண்டு பாவேந்தர் அவர்கள் என் இல்லத்திற்கு விருந்துண்ண அழைத்த போது மறுப்பின்றி வந்தார்கள். அன்று முதல் என் உடன் பிறவாச் சகோதரர் போல் பழகி வந்தார்கள். சிதம்பரம் வந்தால் என் இல்லத்திற்கு வந்து பார்த்துப் பேசாமல் உண்ணாமல் செல்ல மாட்டார்கள். நான் இல்லையென்றாலும் வரும் வரை காத்திருந்து பேசி விட்டுத்தான் செல்வார்கள். இப்பொழுது நினைத்தாலும் அவர்களுடைய அந்த அன்பும், பண்பும் என் உள்ளத்தை நெகிழ்விக்கின்றன.

புலவர்கள் புலமைக்காய்ச்சலும் அழுக்காறும் உடையவர்கள். பிறரின் அறிவுத்திறன் கண்டு பாராட்ட மனம் இல்லாதவர்கள் என்ற சூழ்நிலையில் புரட்சிக் கவிஞரின் பாடலைக் கண்டு குறை கூறத் தொடங்கினரேயன்றி பாராட்டுபவர் இல்லை. அவரது கவிதையைப் பாடி அவர்தம் புகழ்பாடுவதைக் கண்டு பொறாமைப்பட்டார்கள். "தெள்ளு தமிழில் இசைத்தேனைப் பிழிந்து எடுத்துத் தின்னும் தமிழ் மறவர்யாம்" என்ற பாடலில் தேனைத் தின்பதாகக் குறிப்பிட்டுள்ளதைத் தேனைத் தின்பதுதான் புரட்சிக் கவிஞரின் வழக்கமோ என்று மேடைகளிலும் இழித்தும் பழித்தும் பேசினார்கள். இந்நிகழ்ச்சியினால் மனம் வருந்திய நிலையில் நான் இருந்தபோது பாவேந்தர் அவர்கள் இல்லத்திற்கு வந்திருந்தார்கள்.

அவர்களிடம் தாங்கள் இயற்றிய பாடலில் இந்த வரிகளை மேடையிலும் தனித்தும் புலவர்கள் பழித்துப் பேசியதைக் கூறி வருந்தினேன். அதற்கு அவர்கள் சிரித்துக் கொண்டே நீ ஆப்பம் தின்றதுண்டா? எனக் கேட்டார்கள். தின்றதுண்டு எனக் கூறினேன். எப்படித் தின்பாய்? எனக் கேட்டார்கள். அதற்கு நான் ஆப்பத்தில் தேங்காய்ப் பாலை ஊற்றித் தின்பேன் என்று கூறினேன். மீண்டும் அவர்கள் தேங்காய்ப் பாலையா தின்பாய்? எனக் கேட்டார்கள். இல்லை ஆப்பத்தில் தேங்காய்ப்பலை ஊற்றித்தான் தின்பேன் என்று கூறினேன். அந்த பொருளில்தான் நானும் தமிழாகிய பலாவில் இசையாகிய தேனைப் பிழிந்து எடுத்து ஊற்றித் தின்னும் மறவர் குலம் யாம் என்று விளக்கங் கூறினார். அவர்தம் விளக்கங்கேட்டு மெய்சிலிர்த்தேன்.

இதுபோன்று மற்றொரு நிகழ்ச்சி. 'மாடுகளும் வழக்கத்தால் செக்கைச் சுற்றும்; மடையர்களும் இயற்றிடுவார் கடவுட்பாடல்' என்று பாவேந்தர் இயற்றிய பாடலின் வரிகளைக் காட்டி என்னுடன் பணியாற்றும் தமிழ் ஆசிரியர்கள் தேவாரம், திருவாசகம் பாடிய அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், பெரியபுராணம் பாடிய சேக்கிழார் போன்றவர்கள் மடையர்களா? இவ்வாறு பாடுவதால் தான் புரட்சிக்கவியா? என்று வினவினார்கள். அவர்கள் எழுப்பிய வினாவிற்கு விடையளிக்க முடியாது வீட்டிற்கு வந்தேன். சில நாள் கழித்து பாவேந்தர் என் இல்லத்திற்கு வந்து உணவருந்திக் கொண்டிருக்கும்போது என்னுடன் பணியாற்றிய சக தமிழாசியர்கள் எழுப்பிய அந்த வினாவை அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர் சிறிது கோபத்துடன் எந்த மடையன் சொன்னான்? என்று என்னைத் திருப்பிக் கேட்டார்கள். நீங்கள் எல்லாம் தமிழாசிரியர்கள் தானே? தமிழை முறையாகக் கற்றவர்கள் தானே? 'உம் ' என்னும் இடைச்சொல் எவ்வெப் பொருளில் வரும்? என்று கேட்டார். எண்ணும்மை, முற்றும்மை, சிறப்பும்மை என்று நான் சொல்லத் தொடங்கியதும், போதும்; இப்பொழுது அந்த வரிகளைப் பாடு என்று கூறினார். கடவுளைப் பற்றிப் பாடுபவன் மடையன் என்று பாடவில்லை. அறிஞர்களேயன்றி முட்டாள்களாலும் கடவுளைப் பற்றிப் பாட முடியும் என்றுதான் பாடினேன் என்று கூறினார். புரட்சிக் கவிஞரின் புலமைத் திறத்தையும், மதிநுட்பத்தையும் எண்ணி வியந்தேன். மீண்டும் புரட்சிக் கவியைப் பார்த்து மடையர்களால் எப்படிக் கடவுளை பற்றிப் பாட முடியும் என்று அச்சத்தோடு வினவினேன். நான் பாடியிருக்கிறேனே என்று கூறி முருகனைப் பற்றி அவர் இயற்றிய பாடலை இசையோடு பாடினார்கள். அருகிலிருந்த என் மனைவி, மக்கள் அனைவரும் பாடல் கேட்டு மகிழ்ந்தோம். இத்தகைய பாடலை இயற்றிய தங்களை எப்படி முட்டாள் என்று கூற முடியும் எனக் கேட்டேன். அதற்கு அவர் தாம் முட்டாளாக இருந்தபோது பாடிய பாடல் என்று கூறினார். எனக்கு அந்த விளக்கம் புரியவில்லை என்பதால் அதெப்படி என்று கேட்டேன். கடவுளைப் பற்றிப் பாடுவதற்குப் பேரறிவு தேவையில்லை. முருகனைப் பற்றி பாட வேண்டுமானால் பார்வதி பரமசிவத்தின் மகன் என்றும் கணபதியின் தம்பி என்றும், வள்ளி தெய்வானை கணவன் என்றும், பன்னிரு விழிகளும், பன்னிரு கைகளும், மயில் வாகனம் வைத்து எவரும் பாடலாம். ஆனால் ஒரு சோலையைப் பற்றி, மலை பற்றி, பூவைப் பற்றி, பழத்தைப் பற்றிப் பாட வேண்டுமானால் அதனைப் பற்றி நன்கு அறிந்து உணர்ந்து சிந்தித்துப் பாடவேண்டும் என்று கூறினார்கள். இவ்வாறு பல சுவையான நிகழ்ச்சிகள் புரட்சிக் கவிஞருடன் பழகிய போது ஏற்பட்டுள்ளதை நினைத்து மகிழ்கிறேன்.

* * *

# நெஞ்சில் நிறைந்த பாவேந்தர்

கலையபழகன்

பாவேந்தர்:

"ஆண்டநாள் ஆண்டு மாண்ட செந்தமிழ்ப் பாண்டியன் மீண்டும் பிறந்து" வந்ததுபோலப் புதுவை மண்ணில் தோன்றிப் புரட்சிப் பாவலராக - கவிதை உலகில் முடிசூடா மன்னராகத் தன்னிகரற்று விளங்கியவர் பாவேந்தர் பாரதிதாசன் அவர்கள்.

"நல்லுயிர், உடம்பு, செந்தமிழ் மூன்றும் நான்...! நான்...! நான்...!" என்று தமிழுலகுக்குத் தம்மை அடையாளம் காட்டியவர் அவர்.

செந்தமிழே! உயிரே! நறுந்தேனே! - என்
செயலினை மூச்சினை உனக்களித்தேனே! - நீ
நைந்தாய் எனில் நைந்து போகுமென் வாழ்வு,
நன்னிலை உனக்கெனில் எனக்குந் தானே!

எனத் தமிழ் காத்து வாழ்ந்தவர், தமிழை வாழவைத்தவர் அவரே. அவரால் தமிழும், தமிழகமும் பெற்ற நன்மைகள் அளவிடற்கரியன.

ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய் வாழ்கின்றோம்..!
சேமமுற வேண்டுமெனில் தெரு வெல்லாம்
தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்!

எனத் தமிழர்களைத் தட்டியெழுப்பிப் புதுநெறி காட்டிய புலவன் பாரதிக்குத் துணை நின்று தாய்த்தமிழுக்குத் தொண்டியற்றி வாழ்ந்தவர் அவர்.

அதுமட்டுமன்றித் "தொண்டு செய்க! தமிழுக்குத் துறைதோறும், துறைதோறும் துடித்தெழுந்தே.." எனவும், "செயல் செய்க! தமிழுக்குத் துறை தோறும் துறைதோறும் சீறிவந்தே.." எனவும் பலவகையாகத் தமிழ் மக்களை ஊக்குவித்து வந்தவர் அப்பெருமகனார்.

அவனொரு செந்தமிழ்த்தேனீ! சிந்துக்குத் தந்தை!
கொழிக்கும் கவிதைக்குயில்! நாட்டைக்
கவிழ்க்கும் , பகையைக் கவிழ்க்கும் கவிமுரசு!
நீடுதுயில் நீக்கப் பாடிவந்த நிலா!

காடு கமழும் கற்பூரச் சொற்கோ!

கற்பனை ஊற்றாம்! கதையின் புதையல்!

என்றெல்லாம் பாரதியாரைப் பாராட்டிப் பாடினார் அவர். அத்தகைய பாராட்டுக்கு அவரும் மிகமிகப் பொருத்தமானவரே என்பதை அவருடன் பழகியோர் அனைவரும் அறிவர்.

### என் ஆசிரியர் சுப்புரத்தினம்:

பிரெஞ்சுக்காரர் ஆட்சியிலிந்த புதுவை மாநிலப் பள்ளிகளில் ஆசிரியராகப் பணியாற்றிய அவர்தம் பணிக்காலத்தில் இறுதிப் பகுதியில் அவருக்கு மாணவனாகும் வாய்ப்பும் அவர் தம் ஓய்வுக்குப் பின்னர், அவரோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பும் எனக்குக் கிட்டின. அக்காலத்தை இன்று நினைத்தாலும், "அந்த வாழ்வுதான், இனி எந்த நாள் வரும்" என்ற ஏக்கமே என் நெஞ்சில் நிறைந்து விடும்.

நான் ஏழாம் வகுப்புக்கு மாறிச்சென்றபோது, அவர் வேறு பள்ளியிலிருந்து மாறுதலாகி எங்கட்குத் தமிழ்ப் பாடம் நடத்த வந்தார். அப்போது அவர் ஆசிரியர் சுப்புரத்தினம் என்பது மட்டுமே தெரியும். முதல் முதலாக வகுப்புக்கு வந்தபோது அவரது எடுத்த தோற்றம், மிடுக்கு நடை, எரிகொள் கண்கள் எங்கட்கு அச்சத்தையே தந்தன. எனினும், சில நாட்களிலேயே அவர் பாடம் நடத்தும் பாங்கினைக் கண்டு, அவரைப் போலவே, "ஏறுபோற் பீடுநடை" போட வேண்டும் என்ற உந்துதல் என்னுள் தோன்றியது.

ஆசிரியர் சுப்புரத்தினத்தின் பாடவேளை என்றாலே வகுப்பில் அமைதி நிலவும். வகுப்புக்கு வந்ததும் இரண்டொரு மணித்துளிகள் பின்புறமாகக் கைகளைக் கட்டியபடி உலவுவார். திடீரெனக் கரும்பலகையில் வெண்கட்டியால் ஓர் அழகிய ஓவியத்தை ஒரு நொடியில் வரைவார். அதுவே அன்றைய பாடவிளக்கமாக அமையும். செய்யுளானாலும், பாடமானாலும் ஓவியத்தைக் கண்டே தெளிவுபெறுவோம். ஒருமுறை "முயல் சிங்கத்தைக் கொன்ற" கதைப்பாடலுக்கு ஒரு கிணறும், அதை எட்டிப் பார்க்கும் சிங்கமும், அருகில் சிறுமுயலும் வரைந்து காட்டி, ஒரே பாடவேளையில் அத்தகைய செய்யுள்களும் மனத்தில் பதியுமாறு நடத்தினார். அந்தக் காட்சி இன்றும் என் உள்ளத்தில் பசுமையாகப் பதிந்து நிற்கிறது.

ஒருநாள் இலக்கணப் பாடம் - வேற்றுமைகள். ஒரு நீண்ட சொற்றொடரைக் கரும்பலகையில் எழுதிக்காட்டினார். விளியும் மற்ற ஏழு வேற்றுமையுருபுகளும் பெற்ற சொற்கள் எளிமையாக அமைந்திருந்தன. உருபுகளையும், சொற்களையும் வேற்றுமைப்பொருளையும் எளிதாக விளக்கிக் காட்டினார். இலக்கணப் பகுதி விளங்கிய போதிலும் அவர் எழுதிக் காட்டிய தொடர் ஓவியக் காட்சிபோல் என் மனதில் பதியாமல் மறைந்து போனது என் கவனக்குறைவே போலும். பின்னர் நான் பண்டிதம் பயிலுங்கால், காரகம் என்ற வேற்றுமைக்கு, "இந்திரன், தாமரையைக் கரத்தாற் கொய்திறைவற்குத் தந்திருங்குன்றத்தினீங்கி விண்மேற் படர்ந்தான்" என்ற பிரயோக விவேகத் தொடரைப் படிக்க நேர்ந்தபோது என் ஆசிரியரின் எளிமையான பாடப் பயிற்றுமுறையின் அருமையையுணர்ந்து வியந்தேன்.

### பாரதிதாசனாக அறிமுகம்:

அக்காலத்தில் லட்சுமண பிரசாத் என்ற புத்தக வணிகர் பாரதியாரின் புதிய ஆத்திச்சூடி, முரசு, பாப்பா பாட்டு, சுப்புரத்தினத்தின் மயிலம் சுப்பிரமணியர் துதியமுது, கதர் இராட்டினப் பாட்டு முதலிய சிறுநூல்களை விற்பார். அவை அந்நாளைய காலணா, அரையணா, ஒரணா (இன்றைய 2 பைசா, 3 பைசா, 6 பைசா) விலையில் விற்பார். நான் அவற்றை வாங்கிப் படிப்பது

வழக்கம். அப்போது என் தந்தையார் மறைவால், எட்டாம் வகுப்பிலேயே என் படிப்பு தடைபட்டது. அதனால் தனித்த முறையில் படிக்கவேண்டும் என்ற ஆர்வமே அதற்குக் காரணம். என் ஆசிரியர் நூல் எழுதுவார். சிறந்த கவிஞர் என நான் தெரிந்துகொள்ள அவை துணை செய்தன.

கற்பகப் பொதும்பரிடைக் குயில் பாடும்
கலாப மயில் ஓடியங்கு நடமாடும் - உயர்
நற்றருக்கள் வாசமலர் உட்குடைந்து தேனினங்கள்
பொற்பொடியைச் சூறையிடும் அற்புதங்கொள் வான்மயிலம்
சுற்றிவருவார் குடியிலுதிப் பேனோ! - உனைச்
சுப்புரத்தினம் தமிழில் துதிப்பேனோ!

எனச் சுப்பிரமணியர் துதியமுதில் வரும் வருணனை வளம் பொருந்திய அடிகள் அவர் பெருமையை விளக்குவனவாக அமைந்தது மட்டுமன்றி எனக்குத் தமிழார்வத்தையும் தூண்டின.

அடுத்தடுத்து "லிபர்ட்டி" அச்சகத்தில் வெளியான இசையமுது, குடும்பவிளக்கு ஆகியவற்றின் முதல் தொகுதிகளும், ஈரோடு குடியரசு வெளியீடான பாரதிதாசன் கவிதைகளும் அவரைப் பாரதிதாசனாக நான் அறிந்து கொள்ளச் செய்தது மட்டுமன்றி என் தமிழ்ப் பயிற்சிக்கும் அடிப்படையாயின. ஆனால் அவர்தம் ஓய்வுக்குப் பின் தம் நூல்களின் வெளியீடுகள் காரணமாகவும், திரைப்படங்கட்கு உரையாடல் எழுதுதல் காரணமாகவும் அடிக்கடி வெளியூர் செல்ல நேர்ந்ததாலும், நான் அச்சகத்தில் வேலைக்குச் சேர்ந்ததாலும் அவர்தம் தொடர்பு தடைப்பட்டது.

எனினும், தந்தை பெரியாரால் விதையூன்றப் பெற்ற பகுத்தறிவுப் பயிரை அழிக்க முற்பட்ட களைகளை அழித்துக் கவிதை நீர்ப்பாய்ச்சித் தழைத்தோங்கச் செய்தமையால் புரட்சிக் கவிஞராய்ப் புகழொளி பரப்பிய பாவேந்தர் புதுவையில் "குயில்" வெளியிடத்தொடங்கியபோது மீண்டும் எனக்குத் தொடர்பு ஏற்பட்டது. இடைப்பட்ட நாட்களில் அச்சுத்தொழில் கற்றதும், ஓய்வு நேரங்களில் தமிழ் பயின்று மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பண்டிதம் தேறியதும் அவர்தம் தொண்டிற்குத் துணைநிற்கும் வாய்ப்பினைத் தந்தன.

### வற்றாக் கவிதை வளம் :

கருத்தூற்று மலையூற்றாய்ப் பெருக்கெடுத்தோடியதையும், ஒருத்தர் தயையில்லாமல் ஊரறியும் தமிழில் வற்றாக் கவிதை வளங்கொழிக்கப் பாடியதையும், நேரில் கண்டு கண்டு களிகூர்ந்தவன் நான். "தூக்கத்தில பிதற்ற நேர்ந்தால் தூயதமிழ் வாழ்த்த என் வாய்!" என்று தம் ஆவலை வெளிப்படுத்தித் தம் வாழ்நாள் முழுவதும் அதைச் செயற்படுத்தி வந்தவர் பாவேந்தர்.

கன்னற் பொருள்தரும் தமிழே! நீ ஓர்
பூக்காடு, நானோர் தும்பி

என அவர் கூறியது ஒட்பமும், நுட்பமும் வாய்ந்த உண்மைக் கருத்தாகும். அவர் தும்பியாகித் தமிழின் இனிமையைக் குழைத்துக் கவிதையாக வடித்துத் தந்தது நம் காலத்தில் நடந்த - நாம் பெருமைப்படத்தக்க புதுமையாகும்.

அநீதியிலே இனமுல்லை சிலிர்க்கச் செந்நெல்
அடிதொடரும் மடைப்புனலும் சிலிர்க்க என்றன்

சிந்தை உடல் அணுஒவ்வொன்றும் சிலிர்க்கச்

செல்வம்ஒன்று வரும் அதன்பேர் தென்றற்காற்று

எனத் தென்றலைப் பாராட்டிப் பாடுவார். அதுபோலவே, படித்து மகிழும் தமிழ்மக்களின் சிந்தை, உடல், அணு ஒவ்வொன்றையும் சிலிர்க்கச் செய்வன அவர்தம் படைப்புகள் எனில், அது மிகைபடக்கூறுவதாகாது, உண்மை!

"குயில்" கிழமை இதழ் வெளியான காலங்களில் பாவேந்தர் உள்ளத்தில் - உணர்வில் கருவாகி உருவாகிய கவிதைகள் பல்லாயிரக்கணக்கானவை. அவற்றுள் பல இயல்பாகவே ஊற்றெடுத்துப் பெருகி வருவன. சில அவர் காணும் நிகழ்ச்சியாலோ, கேட்கும் செய்தியாலோ கவிதையாக மலர்வன. சான்றுக்கு ஒன்று. பாவேந்தர், அச்சகத்தின் வெளிக்குறட்டில் நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். மழை பெய்துவிட்டிருந்த நேரம். தெருவில் நீர் பெருகி ஓடிக் கொண்டிருந்தது. கணவரும் மனைவியுமாகச் சென்றனர் இருவர். தெருவின் திருப்பத்தில் சாக்கடை வழுக்கிவிட அந்த அம்மையார் விழப்போன சமயம் அவர் கணவர் தம் இருகையாலும் அவரைத் தாங்கிப் பிடித்தார். அக்காட்சியைக் கண்ட பாவேந்தர், "இச்..! இச்..! ஐயோ!" என இரக்கம் காட்டினார். பின் அலுவலக அறைக்குள் சென்றவர் சற்றுநேரத்தில் வந்து என்னிடம் ஒரு தாளைத் தந்து, "இதைப் போட்டுக்கொள்" என்றார் (அச்சு அடிக்கக் கொடு என்பது அதன் பொருள்). அதிலிருந்த கவிதையைக் கண்டதும் எனக்கு வியப்பினும் வியப்பே!

வழுக்கியது குளத்துப்படி வந்தணைத்தான் அதேநொடி!

மழையும் பயிரும் அவனும் நானும்

மறப்ப தென்றால் அது எப்படி

என்பது அதிலிருந்த கவிதை.

## நான் பெற்ற பேறு:

பாவேந்தரின் இரண்டாம் மகள் வேனில் திருமணம் பட்டாம்பாக்கத்தில் நடந்தது. மணமகன் தண்டபாணி என் நெருங்கிய உறவினர். பட்டாம்பாக்கம் என் தாய்வழிப்பாட்டனார் ஊர். நான் அடிக்கடி அங்குச் சென்று வருவது வழக்கம். போகும்போது பாவேந்தரிடம் சொல்லிவிட்டுச் செல்வேன். அப்போது "வளையாபதி" என்ற திரைப்படத்திற்கு அவர் உரையாடல் எழுதியிருந்தார். படம் வெளியாகிய சமயம் அதைக் காணச் சென்ற நான் ஓரிடத்தில் திடுக்கிட்டுப் போனேன். வளையாபதியின் மனைவி தம் மகனைப் பற்றி அவரிடம் குறை கூறுகிறார், "அழகன் பள்ளிக்குப் போடா என்றால் பட்டாம்பாக்கம் போகிறேன் என்கிறான்!" என்று. இது எனக்கு வசையா பாராட்டா!.

ஒருமுறை,

சாவு நிச்சயம்! சாவு நிச்சயம்! - இதைக்

கூவு தம்பி கூவு!

என்று ஒரு கவிதையை எழுதியிருந்தார். நான் அவரிடம் "என்ன இப்படி எழுதியிருக்கிறீர்களே! இது அனைவர்க்கும் தெரிந்ததுதானே!" என்று கேட்டேன். அவர் என்னைக் கடிந்து கொள்பவர்போல் "உனக்கு தெரிந்தது அவ்வளவுதான்!" என்றார். நான் அஞ்சி அதற்குமேல் ஒன்றும் பேசாமல் இருந்தேன். சிலநொடிகளுக்குப் பின் அவரே,

தமிழுக்குத் தொண்டு செய்வோன் சாவதில்லை!

தமிழ்க்கவிஞன் பாரதிதான் செத்த துண்டோ!

என்று (ஆவேசமாகக்) கேட்டார். நான் அசந்து விட்டேன்.

## முதுமையும் பிரிவும் :

முதியோர் காதலை எழுதிய பாவேந்தர் முதுமையின் கொடுமையை இரங்கும் வகையில் விளக்குவார். "இனி நினைந்திரக்க மாகின்று" என்றானே சங்கப் புலவன், அது எவ்வளவு கொடிது!

முன்பு தைத்த சட்டைக்கு
  மூன்றில் ஒன்றுதான் உடம்பு!
முன் புதைத்த மூங்கில்தான்
  என் என்பு!

என்று பாடியவர் தாம்மட்டும்,

தேக்கு மரந்தனையே - செதுக்கிச்
செய்த உடம்பினரா" கவே

இருந்தது வியப்புக்குரியதே! சொந்தமாகத் திரைப்படம் எடுக்க வேண்டும் என்ற நோக்கோடு சென்னை சென்றவர்க்கு அந்நோக்கம் நிறைவேறாதது பேரிழப்பாயிற்று. அதுவே, தன்னேரில்லாத் தனிப்பெரும் பாவலரைத் தமிழகம் இழந்து நிற்பதற்கும் ஒரு காரணமாக அமைந்து விட்டது.

தமிழுக்குத் தொண்டு செய்வோர்
சாவதில்லை

என்ற அவர் குரல் என் காதுகளில் ஒலித்துக்கொண்டிருக்கிறது. அவர் என் நெஞ்சில் நிறைந்து நிற்கிறார். அதுமட்டுமல்ல; நூற்றாண்டு விழா கொண்டாடுவதன் மூலம் தமிழ் மக்கள் அனைவருடைய நெஞ்சிலும் நிறைந்து நிற்கிறார் என்பதும் மகிழ்ச்சியான செய்தியாகும்.

எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழ்என்று சங்கே முழங்கு!

* * *

# பாரதிதாசன் பாட்டு

பாவலர் கன்னல்

அரிமாவின் நோக்கைப்போல் நடையி ருக்கும்!
அதற்குள்ளே குறிக்கோளின் விடையி ருக்கும்!
விரிவானின் மழைமேகம் களைவ தைப்போல்
விடியலுக்குச் சொற்களெல்லாம் அணிவ குக்கும்!
சிரிக்கின்ற உணர்ச்சிப்பெண் குடியி ருந்து
சீரெல்லாம் மாந்தநேயம் எட்டிப் பார்க்கும்!
நரியைப்போல் பிறர்வாழ்வைக் கெடுத்தே ஏற்றம்
நடத்துகின்றார் முன்னேற்றம் கிழிந்து போகும்!

எதுகையுடன் மோனைகளும் ஆட்டம் போடும்!
எங்கிருந்தோ அணிகளெல்லாம் வந்து சேரும்!
மதுநிகர்க்கும் உவமைப்பெண் கைக ளாட்டி
மகிழ்ச்சியினை வெளிப்படுத்தும்! கருத்துக் கன்னி
புதுப்பாதை இவன்போட நடந்து போவாள்!
புரட்சித்தீ பாட்டெங்கும் பற்றிக் கொள்ளும்!
பொதுவுடைமைக் கொள்கைகளே பூக்கும்! நெஞ்சில்
புதுச்சேரி பாவேந்தன் வடித்த பாட்டில்

தண்ணிலவுப் பாட்டுநடை கூன்வி ழுந்த
தமிழர்களின் முதுகுகளை நிமிர வைக்கும்!
பெண்கள் நலம் காப்பதற்கே அணிதி ரட்டும்!
பெரியாரின் குறிக்கோளை நெஞ்சில் தூவும்!
கண்களைப்போல் விளங்குகின்ற கல்வி வேண்டி
கவிஞன்குரல் பாட்டெங்கும் வலியு றுத்தும்!
மண்ணுக்குள் வாழ்கின்ற சாதி நோயை
மாய்ப்பதற்கு மருந்துகளைத் தோற்று விக்கும்!

உண்மைகளின் ஊர்வலங்கள் நடக்கும் பாட்டில்
உலகத்தின் பொய்வேடம் களைந்து போகும்!
வெண்ணிலவுப் பாட்டுக்கள் தமிழைப் பாடி
வீதியெங்கும் வெறியாட்டை நடத்தி வைக்கும்!
மண்மூடிப் போனாலும் தமிழை மட்டும்
மறையாமல் காப்பதற்கு வகைமை செய்யும்!
எண்ணங்கள் தூய்மையுறத் துவைத்துப் போடும்!
ஏமாற்றம் தலைகுனிந்து நாணி நிற்கும்!

* * *

# புரட்சிக் கவிஞர் - என் நினைவில்

பேரா. தி. சி. சண்முகசுந்தரம்

நிமிர்ந்த நடை, கூரிய கருவிழிகளின் நேர் கொண்ட பார்வை, கருத்த மேனி, திடமான தோள்கள், அஞ்சா நெஞ்சம் முதலிய அனைத்தும் ஒருங்கே அமையப்பெற்ற உருவமே புரட்சிக் கவிஞர் பாரதிதாசன். அவர் புதுவை ஈன்ற தவப்புதல்வர் ஆவார். 'அரவிந்தர்' என்ற ஞானியின் ஒளி தோன்றிய புதுவையில் அடைக்கலம் புகுந்த பாரதியின் வழிவந்த 'தாசனே' நம் ஒப்பற்ற கவிஞர் பாரதிதாசன்.

ஒப்பிலாக் கவிஞர் பாரதிதாசன் அவர்களை முதன் முதலாக நான் கண்டு களியுற்ற நாள் எனது வாழ்வில் மறக்க முடியாத நாள். 1956-57இல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் நான் எம்.ஏ. பட்ட வகுப்பில் பயின்று கொண்டிருந்தபோது கவிஞர் அவர்கள் எனது சிறிய தந்தையாரைப் பார்க்க வந்திருந்தார். அப்போது என் சிறிய தந்தை கவிஞர் பெருமகனாருக்கு என்னை அறிமுகப்படுத்தினார். கவிஞர் தமக்கே உரிய பாணியில் சிம்மக் குரலில் "அழருங்கள் தம்பி, ஆங்கில இலக்கியம் படிக்கின்றீர்களா?" என வினவினார். "மிக்க மகிழ்ச்சி" என்று கூறி இலக்கியம் படித்தல் என்பதே நல்லதொரு பேறு என்றும் குறிப்பிட்டார்.

கவிஞர் பெருமானது கருத்துக் குவியல்களை நான் சிறு வயது முதலே அவ்வப்போது படிப்பதுண்டு. அவரது 'வெண்ணிலாவும் வானும் போல வீரனும் கூர்வாளும் போல' என்ற பாடலும், 'தமிழுக்கு அமுதென்று பேர்' என்ற பாடலும் 'புதியதோர் உலகம் செய்வோம்; கெட்ட போரிடும் உலகத்தை வேரொடும் சாய்ப்போம்' என்ற பாடலும் என்னை மிகவும் கவர்ந்தவை.

எனது சிறிய தந்தையார், மறைந்த பெரியவர் திரு. தி.சு. மீனாட்சிசுந்தரம் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பதிவாளராகப் பணியாற்றிய காலத்தில் கவிஞரின் நெருங்கிய நண்பராக விளங்கினார்கள். நண்பர் என்று கூறுவதை விடவும் கவிஞர் அவர்கள் எனது சிறிய தந்தையாரின் 'ஆசான்' என்று சொல்வதே பொருந்தும். அவரை இலக்கிய வழியில் ஈடுபடுத்திய பலரில் கவிஞர் பெருமானும் குறிப்பிடத்தக்க ஒருவராவார். அது மட்டுமல்ல; பாரதிதாசன் எனது சிறிய தந்தையாரின் 'நண்பர், போதகர் மற்றும் வழிகாட்டி' என்றே சொல்லலாம்.

பல ஆண்டுகளுக்கு முன்னர் எனது சிறிய தந்தையார் தனது முதல் துணைவியார் சகுந்தலா அம்மையார் அவர்களை இழந்த நிலையில் ஆற்றொணாத் துக்கத்தில் ஆழ்ந்திருந்தார். எல்லாவற்றையும் இழந்துவிட்டதைப் போன்ற கையறுநிலையில் வாழ்ந்து கொண்டிருந்தார். அந்நிலையில் அவரது நண்பர்கள், உறவினர்கள் அனைவரும் அவரை மறுமணம் செய்து கொள்ளுமாறு அறிவுறுத்தினர்; அவரோ அதை ஏற்க மனமில்லாதிருந்தார். என்ன செய்வதென்று அறியாத நிலையில் தமது ஆசானாகிய பாரதிதாசன் அவர்களுக்குக் கடிதம் ஒன்று எழுதினார். அம் மடலில் தம் உயிரினும் மேலான மனைவி சகுந்தலா அம்மையார் இறந்த பின்

அந்த அம்மையாரின் நினைவைப் போற்றும் வகையில் தான் மலர் ஒன்று தொகுக்க விருப்பதாகவும், அதற்குக் கவிதை ஒன்றினை வடித்து அனுப்புமாறும் கேட்டதோடு தன் உறவினர்கள் தன்னை மறுமணம் செய்துகொள்ள வற்புறுத்துதல் குறித்து கவிஞரின் ஆலோசனையையும் அறிவுரையையும் கேட்டிருந்தார். அதற்குக் கவிஞர் அவர்கள் எழுதிய பதில், ஒரு சிறிய கவிதையே. 'மீனாட்சி சுந்தரனே! கேள்' என்னும் தலைப்பில் கவிதை வாயிலாக எழுதப்பட்டிருந்தது அக் கடிதம். அக் கவிதை 'காதலனுக்குத் தேறுதல்' என்ற தலைப்பில் பாரதிதாசனின் 'காதல் நினைவுகள்' என்னும் நூலில் இடம்பெற்றுள்ளது. இந்த நாற்பத்து மூன்று வரிப் பாடலின் இறுதிப் பகுதியில் கவிஞருடைய ஆழ்ந்த சிந்தனையுடன் கூடிய அறிவுரையைக் காணலாம். அக் கவிதையின் சிறு பகுதியைக் காண்போமாக:

தூயோனே, மீனாட்சிசுந்தரனே, என் தோழா
ஆண்டு நூறாகநல் லன்பு நுகர்ந்திடினும்
ஈண்டுத் தெவிட்டாத இன்பச் சகுந்தலைதான்,
இங்குன்னைத் துன்பம் இறுகத் தழுவவிட்டுத்
திங்கள் இருபதுக்குள் சென்று மறைந்துவிட்டாள்
அந்தோ உனக்கார் ஓர் ஆறுதலைச் செய்திடுவார்?
சிந்து கண்ணீருக்குத் தேறுதலைச் செய்பவர் யார்?

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

தோழனே, மீனாட்சி சுந்தரனே, ஒன்றுகேள்:-
யாழின் மொழியும், இசைவண்டு நேர்விழியும்,
கோத்தமுத்துப் பற்கள் குலுங்கும் சிரிப்பழகும்
வாய்த்த நல்வஞ்சி மற்றொருத்தி இங்குள்ளாள்,
தேடுகின்றாள் உன்னை! நீ தேடந்தப் பொன்னை! ஏன்?
வாடுகின்றாய்? ஏன் உன் மலர்விழியை வாட்டுகின்றாய்?

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

அன்னவளால் உன்றன் அருங்குறைகள் தீர்ந்துவிடும்;
முன்னர் எழுந்திருநீ முழுநிலவு காண்பதுபோல்
அன்னவளைக் கண்டு நிலைமை அறிவிப்பாய்!
புன்னகையால் ஒப்பம் புகல்வாள்: பிறகுகேள்
இந்நாட்டின் முன்னேற்றம் உன்னி உழைக்கின்ற
நன்றோர் நண்ணும் சுயமரியா தைக்காரர்
காட்டும் நெறியே கடிமணத்தை நீ முடிப்பாய்
மீட்டும் சகுந்தலையை எண்ணியுளம் வேகாதே!
அவ்வழகே இவ்வழகும்! அம்மயில்தான் இம்மயிலும்!
செவ்வையுற இன்பத் திருவிழா வைத்தொடங்கு!
நீயும் புதுமனையும் நீடூழி வாழியவே
வாயார வாழ்த்துகின்றேன் நான் !

புரட்சிக் கவிஞரின் நட்பு எனது சிறிய தந்தையாருக்குக் கிடைத்த பெரும் பேறு ஆகும். அதனினும் மேலானது அவரது வேண்டுகோளுக்கிணங்கக் கவிஞரிடமிருந்து கவிதை வரப்பெற்றமை எனலாம். அந்த வழித்தோன்றலில் வந்த எனக்குப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பெயரிலமைந்த பல்கலைக்கழகத்திலேயே பதிவாளராகப் பணிபுரியும் வாய்ப்புக் கிட்டியது எனது பேறு என்றே கருதுகிறேன். அந்தப் புரட்சிக் கவிஞரின் புகழ் திக்கெட்டும் மேலும் மேலும் பரவுக! அன்னாரின் புரட்சிக் கருத்துக்கள் உலகெங்கும் பரவுக! அவர் திருப்பெயர் வாழ்க!

* * *

# பாவேந்தரின் பாதையில்.....

டாக்டர் நா. மகாலிங்கம்

பாவேந்தர் பாரதிதாசன் தமிழ் இலக்கியத் துறையிலும் சமுதாயத்துறையிலும் அழிக்க முடியாத அடையாளங்களை விட்டுச் சென்ற ஒரு மாபெரும் மக்கள் கவிஞர்.

இலக்கியத் துறையில் கவிதை, நாடகம், இசைப்பாடல், திரைப்படம், கட்டுரை இவ்வாறு எல்லா இலக்கிய வடிவங்களிலும் தமது சிந்தனைகளை வெளிப்படுத்தியவர்.

1964இல் பொள்ளாச்சியில் நடந்த இலக்கிய விழாவில் பாவேந்தர் கலந்து கொண்டு தமது குருநாதர் மகாகவி பாரதியைப்பற்றி வானளாவப் புகழ்ந்து பேசியது, இன்றும் எனது நெஞ்சில் பசுமையாக உள்ளது.

ஏறக்குறைய முக்கால் நூற்றாண்டுக் காலம் நம்மில் ஒருவராக நடமாடியவர் பாவேந்தர். அவர் மறைந்து இன்றைக்கு கால் நூற்றாண்டுக் காலம் ஆகின்றது.

கவிஞர்கள் இறப்பதில்லை, அவர்கள் நிரந்தரமானவர்கள். அவர்களின் பூதஉடல்தான் மறைகிறது. ஆனால் அவர்களின் கவிதைகள் அவர்களை வாழ்வாங்கு வாழ்வித்துக் கொண்டே இருக்கும் என்பது சத்திய வாக்கு.

பாவேந்தரின் கவிதைகள் அத்தகைய சாகாவரம்பெற்ற கவிதைகள் என்றால் அது மிகையல்ல.

## பாவேந்தரின் வாழ்க்கைப் பணி :

18 வயதிலேயே புலவர் பட்டம் பெற்று ஆசிரியர் பணிக்குச் சென்று 58 வயதுவரை சுமார் 40 ஆண்டுகள் ஆசிரியர் பணியினைச் செய்து வந்தார். இவ்வாறு, பாவேந்தர் தொழில் ரீதியில் வாழ்வதற்கென்று ஒரு வருமானத்தை மிக இளமைக் காலத்திலேயே தேடிக் கொண்டார்.

20 வயது பாவேந்தரும் 28 வயது பாரதியும் புதுவையில் வேணுநாய்க்கர் வீட்டுத் திருமண விழாவில் முதன் முதலாகச் சந்தித்துக் கொண்டபோது, குரு தன் சீடனையும், சீடன் தனது குருநாதரையும் ஒருவருக்குள் ஒருவர் கண்டு கொண்டனர். அப்போதுதான் கவிராஜனாக விளங்கிய பாரதி, தமது "வந்தே மாதரம்" கவிதை ஒன்றைப் பாவேந்தர் பாடக் கேட்டு மகிழ்கின்றார். அடுத்து, பாவேந்தரும் தமது சொந்தப் பாடல் ஒன்றை பாரதியாருக்குப் பாடிக் காட்டினார். அந்தப் பாடல்தான்:

எங்கெங்கு காணினும் சக்தியடா
ஏழுகடல் அவள் வண்ணமடா

என்ற அமர கவிதையாகும். பாடலைக் கேட்ட பாரதியே வியந்துபோனார்.

## பாவேந்தரின் இருவேறு தலைவர்கள் :

பாவேந்தர் 73 ஆண்டுகள் நிறைவாழ்வு வாழ்ந்தவர். இதில் முன் பகுதி 35 வயதுவரை தேசியகவி பாரதியையும், பின்பகுதி 37 ஆண்டுகள் தந்தை பெரியாரையும் பாவேந்தர் பின்பற்றியதை அவருடைய வாழ்க்கையை அளந்து கணக்கிட்டால் தெரிந்து கொள்ள முடியும்.

முன்பகுதியாகிய 35 வயதினைப் பின்பகுதி வயதோடு ஒப்பிட்டால் சில உண்மைகளை நாம் உணர்ந்துகொள்ள உதவும். நாம் பொதுவாக முதல் பகுதி வயதைத்தான் துடிப்பும் துணிச்சலும் மிக்க பகுதியென்போம். இளமையில் உள்ள உத்வேகம் பின்னர் எதிலும் நிதானமாக மாறிவிடுகிறது.

புதுவையில் வாழ்ந்த அரவிந்தரின் வாழ்க்கையே இதற்கு ஆதாரம். அவர், லண்டன் சென்று ஐ.சி.எஸ். படிப்பில் தேறிய முதல் இந்தியர். இலத்தீன் மொழியில் லாகவமாகக் கவிதை எழுதும் ஆற்றலைப் பெற்றவர். இந்திய விடுதலைக்காக 'குத்தீட்டியும் கேடயமும்' என்ற பலாத்கார இயக்கத்தோடு தொடர்பு வைத்திருந்தவர். இதெல்லாம் அரவிந்தரின் முன்பகுதி வாழ்க்கை.

ஆனால் அவருடைய வாழ்க்கையின் பின்பகுதியில் நாம் அவரை மாபெரும் அருளாளராகக் காணுகின்றோம்.

பாவேந்தர் வாழ்க்கையில் இந்த இயல்பான விதிமுறைக்கு, சற்றே விதிவிலக்கு தரவேண்டிய-தாக உள்ளது.

சாந்தமும் நிதானமும் நிறைந்து காணப்பட வேண்டிய பாவேந்தரின் பிற்பகுதி வாழ்க்கையில் தான், தீவிரமும் நாத்திகமும் இடம் பெற்றுள்ளன.

தீவிரத்தின் காரணமாக இன உணர்ச்சிக் கவிதைகளை அனல் பறக்கப் பாடினார். அதேபோல கடவுள் மறுப்புக் கொள்கையைக் கண்ணை மூடிக்கொண்டு பிரச்சாரம் செய்து வந்தார்.

பாவேந்தரின் முற்பகுதிப் படைப்புகளில் 'சிறுவர் சிறுமியர் தேசிய கீதம்', 'தொண்டர் நடைப் பாட்டு', 'கதர் இராட்டினப் பாட்டு', 'ஸ்ரீ மயிலம் சுப்ரமணியர் துதியமுது', 'தியாகப்பிரம்மம் தியாகராஜர் கீர்த்தனைகளின் தமிழாக்கம்' ஆகிய படைப்புகள் பாவேந்தரைப் பாரம்பரிய மரபுகளுக்கு மதிப்பளிக்கக்கூடியவராகவே வெளிக்காட்டி வந்தன.

## ஆன்மீகமும் தேசியமும் :

பாவேந்தரின் குடும்ப வாழ்க்கையின் வரலாற்றை அனுகிப் பார்த்தால் பாவேந்தரின் தந்தை கனகசபையார் வடலூர் வள்ளற்பெருமானிடம் மிகுந்த ஈடுபாடும் கடிதத் தொடர்பும் கொண்டவராக இருந்திருக்கின்றார்.

உயர்திரு பாலகிருஷ்ணபிள்ளை பதிப்பித்த திருஅருட்பா 5ஆம் திருமுறையில் வள்ளற் பெருமான் 1867இல் நடத்தி வந்த "சன்மார்க்க விவேக விருத்தி" என்ற மாதப் பத்திரிகைக்கு நிதி உதவியவர்களின் பட்டியலில் பாவேந்தரின் தந்தையார் பெயரும் இருப்பதைக் காணலாம்.

வள்ளற்பெருமானிடத்தில் அளவற்ற பக்தியும் ஈடுபாடும் கொண்டு விளங்கிய கனகசபை-யாரின் குமாரனாகிய பாவேந்தர், தந்தையைப் போலவே இறை நாட்டம் கொண்டவராகத்தான் வளர்ந்து வந்தார்.

அதனால்தான் இளமைக் காலத்தில் தேசியத்திலும், ஆன்மீகத்திலும் ஈடுபாடு கொண்டவ-ராக விளங்கினார்.

பாவேந்தர் தேசியத்தில் நின்று கொண்டே பாரதிபோல தமிழ்நாட்டைப் போற்றியும் பெருமைப்படுத்தியும் சிறப்பித்திருக்க முடியும். இன உணர்வில் நின்றுதான், தமிழ் நாட்டைப் போற்ற முடியும் என்று பாவேந்தர் கருதிவிட்டார்.

> பாரதநாடு பழம்பெரும் நாடு
> நீரதன் புதல்வர் இந்நினைவகற்றாதீர்

என்று தேசியம் பேசிய பாரதி, தேசியத்தில் நின்றுகொண்டுதான்

> தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற - எங்கள்
> தாயென்று கும்பிடடி பாப்பா

என்றும் பாடினார்.

இதேபோல ஆன்மீகத்தில் நின்றுதான் நமது பண்பாட்டில் மண்டிக் கிடந்த மூடப் பழக்க வழக்கங்களையும் ஜாதிப் பிரிவுகளையும் பாரதியும் அதற்குமுன்பு வள்ளலாரும் சாடினார்கள்.

> சாதியும் மதமும் சமயமும் பொய்யென
> ஆதியில் உணர்த்திய அருட்பெருஞ்ஜோதி

என்று அருட்கவியாக விளங்கிய வள்ளலார் ஆன்மீகத்தில் நின்றுகொண்டுதான் பாடினார்.

> சாதிகள் இல்லையடி பாப்பா - குலத்
> தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்
> தெய்வம் நமக்குத் துணை பாப்பா — ஒரு
> தீங்கு வரமாட்டாது பாப்பா

என்று மகாகவி பாரதியும் இதே கண்ணோட்டத்தில் ஆன்மீகத்தில் நின்றுதான் பேசினார்.

"மதமான பேய் பிடியாதிருக்க வேண்டும்" என்று பாடிய வள்ளலார் நாத்திகராவில்லை. "பெருநெறி பிடித்து ஒழுக வேண்டும்" என்று ஒரு இறைநெறியைத்தான் நமக்கு வழங்கினார்.

இதேபோல,

> ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று தேடி
> அலையும் அறிவிலிகாள்

என்று பாடிய பாரதி, தன்னை ஒரு பகுத்தறிவாதியாக அறிவிக்கவில்லை. "அறிவொன்றே தெய்வம்" என்று, பேரருள் நெறியொன்றில் நம்பிக்கை வைத்த பின்புதான் அவ்வாறு பேசினார்.

இதே போலத்தான் பாவேந்தரும் "எங்கெங்கு காணினும் சக்தியடா" என்று தொடங்கினார். ஆனால் கடைசிக் காலம்வரை அதேபோல தொடராமல் விட்டுவிட்டார்.

கவிஞன் எல்லைகளைக் கடந்த விசாலமானதைத்தான் காணவேண்டும். இறைசக்தி ஒன்று தான் எல்லை கடந்து நிற்கும் பேராற்றல். இந்த இலட்சியத்தை நோக்கிய யாத்திரையைத்தான் கவிஞன் மேற்கொள்ள வேண்டும். குறுகிய எல்லைக்குள் சிக்கிக்கொண்டால் தேக்கநிலை ஏற்பட்டுவிடும்.

தேசியம், ஆன்மீகம் ஆகிய இரண்டும் அத்தகைய மாபெரும் மகத்தான சக்திகள். நம்முடைய வரலாற்று ரீதியான அந்த மரபை, வலிந்து மீறி, தேசியத்திற்குப் பதிலாக இன உணர்விலும் ஆன்மீகத்திற்குப் பதிலாக நாத்திகத்திலும் பாவேந்தர் நம்பிக்கை வைத்துவிடுகின்றார்.

வாழையடி வாழையென வந்த நமது வணக்கத்திற்குரிய ஞானிகள், சித்தர்கள், அருட்கவிகள், தேசிய கவிகள் ஆகியோரின் வரிசைக்கு மேலும் வலிவும் பொலிவும் சேர்த்திருக்க வேண்டிய பாவேந்தர், நேர் முரண்பட்ட எதிர் திசையில் தடம் மாறிவிட்டது பற்றி விரிவான ஆய்வுகள் வெளி வரவேண்டும் என்பதுதான் எனது ஆசை.

பௌராணிகர்களை எதிர்க்கும் இன உணர்வு, கடவுளை மறுக்கும் நாத்திகம் ஆகிய இரண்டிலும் தீவிரமாக ஈடுபட்டுப் பிரச்சாரம் செய்து வந்த பாவேந்தர், இவைகளுடன் 1938இல் இந்தி எதிர்ப்பையும் சேர்த்துக்கொண்டார். இவ்வாறு பாவேந்தர் அமைத்த மூன்று களங்களும் எதிர்மறைக் களங்களாகும்.

## ஆங்கில எதிர்ப்பும் இந்தி எதிர்ப்பும் :

மகாகவி பாரதி தமது சுய சரிதையைக் கவிதையாகவே வடித்தார். முடிப்பதற்குள் மரணமடைந்து விட்டார். அதில்

> கம்பன் என்றொரு மானிடன் வாழ்ந்ததும்
> காளி தாசன் கவிதை புனைந்ததும்
> உம்பர் வானத்துக் கோளையும் மீனையும்
> ஓர்ந்து அளந்ததோர் பாஸ்கரன் மாட்சியும்
> அன்ன யாவும் அறிந்திலர் பாரதத்து
> ஆங்கிலம் பயில் பள்ளியுள் போகுநர்

என்று ஆங்கில மொழிக் கல்வியினால் தனக்கு ஏற்பட்ட கேடுகளை எல்லாம் சொல்லிச் சொல்லி பாரதியார் ஆத்திரப்பட்டுப் பேசியுள்ளார்.

> செலவு தந்தைக்கோர் ஆயிரம் சென்றது
> தீது எனக்குப் பல்லாயிரம் சேர்ந்தன
> நலம்ஓர் எட்டு ணையும் கண்டிலேன் இதை
> நாற்பதாயிரம் கோயிலில் சொல்லுவேன்

என்றார்.

இப்படியெல்லாம் தேசியகவி பாரதி ஆங்கில மொழியை, ஆங்கிலேயருடைய ஆதிக்கத்தை, ஆங்கில நாட்டின் நாகரிகத்தை மிகக் கடுமையாகச் சாடினார். சுருக்கமாகச் சொன்னால் ஆங்கிலக் கல்வியைப் "பேடிக் கல்வி" என்றே சாடினார்.

இவ்வாறு தமிழ் உணர்வு ததும்ப வாழ்ந்த தேசிய கவி பாரதியின் சீடனாகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட பாவேந்தர், பாரதி காட்டிய வழியிலேயே மேலும் தீவிரமாகச் சென்றிருப்பாரேயானால், தாய்மொழித் தமிழ் இயக்கம் இன்றைக்கு மிக வலிமை வாய்ந்த ஒரு இயக்கமாக உருவாகி இருக்கும்.

ஆங்கில மோகத்திலிருந்து தமிழ்க் குழந்தைகளை விடுவிக்கும் காரியத்தின் கதிவேகமும் அதிகரித்திருக்கும் என்பதில் ஐயமே இல்லை.

ஆனால் பாவேந்தர் பாதை மாறிவிட்டார். தமிழுக்கு அதிகத் தீங்கு ஏற்படுத்துவது ஆங்கிலம் அல்ல, இந்தி மொழிதான் என்று நம்பினார்.

அதனால்தான் இந்தி மொழி எதிர்ப்புக் கவிதைகளை ஏராளமாக எழுதிக் குவித்தார். 'தமிழியக்கம்' என்ற அவருடைய கவிதை நூலில் அதிகமாக உள்ளவை இந்தி மொழிக்கு எதிராக எழுதப்பட்ட கவிதைகள்தான்.

இந்த அளவிலும் வேகத்திலும் பாரதிபோல ஆங்கில மொழிக்கும் எதிராக இவர் கவிதை எழுதியிருப்பாரேல், வாதத்திற்காகவாவது ஒரு உண்மையை ஒப்புக்கொள்ள முடியும்.

பாரதி காலத்தில் ஆங்கில ஆதிக்கம் மட்டும்தான் இருந்தது. பாவேந்தர் காலத்தில் இந்தி ஆதிக்கமும் சேர்ந்து கொண்டது. ஆகவேதான் இரண்டு மொழிகளையும் எதிர்த்துக் கவிதை எழுதினார் என்று வாதாடவாவது வாய்ப்பு உண்டாகியிருக்கும்.

ஆனால் ஆங்கில எதிர்ப்புக் கவிதையை பாரதியைப் போல அவ்வளவு தீவிரமாக பாவேந்தர் எழுதவில்லை.

அதற்குக் காரணம் என்ன?

இந்தி மொழி வடக்கிந்திய மொழி. சம்ஸ்கிருதமும் வடக்கில் இருந்துவந்த மொழி என்பது பலருடைய கருத்து. அந்த சம்ஸ்கிருத மொழியை ஒரு குறிப்பிட்ட சாராரின் பாஷை என்றும் அவர்கள் வைதிகத்தை - சனாதனதர்மத்தை - பௌராணிகத்தைப் பரப்பி வருபவர்கள் என்றும், இவைகள் அனைத்துமே மூடநம்பிக்கைகளைப் பரப்புபவைகள் என்றும் இவைகளை எதிர்ப்பது தான் பகுத்தறிவு என்றும் பாவேந்தர் கருதி வந்தார்.

இதன் காரணமாகப் பாவேந்தர் இலக்கியவாதிகளுக்கு ஒரு பாதியும் பகுத்தறிவுவாதிகளுக்கு ஒரு பாதியுமாக இருகூறாகி விடுகின்றார்.

இலக்கியவாதிகளின் கண்ணோட்டத்தில் பாவேந்தர் என்றைக்கும் ஒரு படைப்பிலக்கிய கர்த்தாவாகவே பரிமளிக்கின்றார்.

"குடும்ப விளக்கு" கவிதை நூலை அவர் தமிழுக்குக் கொடுத்த கொடை என்றே கூறலாம். அதன் எளிமையும், சந்தக் கட்டும், ஓட்டமும் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விடுகிறது.

பாண்டியன் பரிசு, எதிர்பாராத முத்தம், அழகின் சிரிப்பு, காதல் நினைவுகள் போன்ற படைப்புகள்முழுமையான இலக்கியப் படைப்புகள். பிரச்சாரப் பதிப்புகள் அல்ல.

## பாவேந்தரின் தமிழிசை :

பாவேந்தரின் இலக்கிய வாழ்க்கையில் முன்பின் முரண்பாடு இல்லாமல் ஒன்று இருக்குமானால் - அது பாவேந்தர் தமிழிசைக்கு ஆற்றிய தொண்டுகள்தான்.

தமிழ் இசைக்குப் பாதகம் ஏற்படுத்திய முயற்சிகள் இன்று நேற்றல்ல, தேவார மூவர் காலத்திலேயே இந்தக் கேடு இருந்ததைத் தெரிந்து கொள்ள முடிகிறது. அதனால்தான் சம்பந்தர் தன்னைப் பற்றிக் கூறுகிற போதெல்லாம் 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்' என்றே கூறிவந்தார்.

ஆனால் சிலப்பதிகார காலம் தொட்டே தமிழ் இசை சிறப்பாக இருந்து வந்துள்ளது. தேவார மூவர் காலத்தில் அது சோதனைகளுக்கு உள்ளாகியது. பாரதி காலத்தில் மிகப் பெரிய சோதனையில் சிக்கிக் கிடந்தது.

அதனால்தான் மகாகவி பாரதி இதனைக் கடுமையாகச் சுட்டிக் காட்டி "தமிழ் நாட்டு மக்களுக்கு இரும்புக் காதுகள்தான் இருக்கின்றன, தோல் காதுகள் இல்லை போலும். ஆகவேதான் இந்த புரியாத சங்கீதத்தை கேட்டுக் கொண்டிருக்கின்றனர்" என்று குறிப்பிட்டார்.

தமிழ்நாட்டில் சிலப்பதிகாரக் காலத்திலிருந்து தமிழ் இசைதான் மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெற்று விளங்கி வந்தது.

தமிழ்நாட்டின் வரலாற்றில் மூவேந்தர்களுடைய ஆட்சிக்குப் பிறகு களப்பிரர்கள், பல்லவர்கள், மராட்டியர்கள், விஜயநகர சாம்ராஜ்யத்தின் தெலுங்கர்கள் ஆகியோரின் ஆட்சி களுக்குத் தமிழகம் உட்பட்டது.

இவ்வாறு தமிழகத்தில் தமிழர் அல்லாத ஆட்சிகள் ஏற்பட்டபோது அந்த அரசர்களை மகிழ்விக்கும் பொருட்டு இசை விற்பன்னர்கள் ஆட்சியாளர்களுடைய மொழியில் பாடல்களை இசைத்து அரசர்களை மகிழ்வித்தார்கள்.

அதன் காரணமாகத் தமிழ் இசைவாணர்கள் சொந்த தமிழ் இசையைக் கைவிட வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு ஆளானார்கள்.

அவ்வகையில்தான் நம்முடைய தமிழ் நாட்டில் இந்துஸ்தானி இசை, தெலுங்கு இசை ஆகிய பிறமொழி இசைகள் இங்கே பரவும்படி நேர்ந்தது.

இவற்றில் தெலுங்கு இசைதான் தமிழ் நாட்டில் மிகவும் ஆதிக்கம் செலுத்தியது. அதற்குக் காரணம் தெலுங்கு இசையில் தியாகப் பிரம்மம் தியாகையர் அவர்கள் அற்புதமான மெட்டுக்-களையும், கீர்த்தனைகளையும் பக்திப் பாடல்களாக உருவாக்கிக் கொடுத்தார்.

தமிழ் நாட்டு இசை நேயர்களுக்கு தெலுங்கு இசையின் தியாகப் பிரம்மம் கொடுத்த புதுப்புது இராகங்கள், தமிழ் இசையை விரும்பியவர்களுக்கு மிகவும் கவர்ச்சியை ஊட்டின.

அதன் காரணமாகப் பாடப்பட்ட பாடல்கள் புரியாதவைகளாக இருந்தாலும் அதில் உள்ள இசைக்குத் தங்களைப் பறிகொடுத்து விட்டனர்.

இந்தச் சூழ்நிலையில்தான் தமிழ் இசை தனது சிறப்பை இழந்து சிதலமடைந்தது.

தமிழ் இசைக்கு ஏற்பட்ட இந்த அவல நிலையை உணர்ந்தே செட்டிநாட்டு அரசர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் தமிழ் இசைக்கு ஒரு செவிலித் தாயாக இருந்து காப்பாற்ற முன்வந்தார்.

இத்தமிழ் இசை இயக்கத்துக்குத் தீவிர ஆதரவை வழங்கி வந்தவர் பாவேந்தர். அண்ணாமலை நகரில் நடந்த முதல் தமிழ் இசை மாநாட்டிற்கே அவர் தலைமைதாங்கினார்.

தமிழ் நாட்டில் நடைபெறும் இசை நிகழ்ச்சிகளில் தமிழ்ப் பாடல்களைத்தான் பாட வேண்டும் என்பதைப் பாரதி போலவே பாவேந்தரும் ஆவேசமாகப் பேசி வந்தார். அதற்குத் தீவிர எதிர்ப்பு ஏற்படத்தான் செய்தது. இன்றைக்கும் பாவேந்தர் ஆசைப்பட்ட தமிழ் இசை இயக்கம் முழு வெற்றி பெற்றுவிட்டதென்று கூற முடியவில்லை.

தமிழ் இசையைப் பாவேந்தர் தீவிரமாக ஆதரித்தாரென்றால், அதற்காக இவர் செய்த தொண்டு மிகச் சிறந்ததாகும். தெலுங்கு மொழியில் மிக உயர்வாகக் கருதப்படும் தியாகராஜர் கீர்த்தனைகளை அட்சரம் பிசகாமல் மொழியாக்கம் செய்து, அவற்றை சோசலிஷ்ட் தியாகி

எஸ்.ஆர்.சுப்ரமணியம் அவர்களின் மேற்பார்வையில் நடந்து வந்த 'பாரதி கவிதா மண்டலம்' என்ற இதழில் தொடர்ந்து வெளியிட்டு வந்தார்.

பாவேந்தர் தனித் தமிழ் இசைக்கென்றே "இசையமுது" என்று இரண்டு தொகுதிகளை வெளியிட்டார். அனைத்தும் இசைப்பாடல்கள். அவைகளில் பல்லவி, அனுபல்லவி, சரணம் ஆகியவற்றை எடுப்பு, உடனெடுப்பு, தொடுப்பு என்றும் தமிழ்ப் படுத்தித் தந்துள்ளார்.

இவ்வாறு தமிழ் இசைக்குப் பாவேந்தர் ஆற்றிய தொண்டு முன்னுக்குப் பின் முரண்பாடற்ற தொண்டாகும். தமிழ் இசை தோன்றியது முதல் ஆன்மீகத்தைச் சார்ந்தேதான் அது வளர்ந்து வந்துள்ளது.

பிற்பகுதி வாழ்வில் பகுத்தறிவுவாதியாக விளங்கிய பாவேந்தர்கூட, தமிழ் இசை வளர்ச்சிக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டபோது, இந்தப் பாரம்பரிய மரபுக்குப் பாதிப்பு ஏற்படுத்தாதவாறு தமது இசைப்பாடல்களை வெளியிட்டு வந்தார். இதனைப் பார்க்கையில், ஆன்மீகத் தமிழ் இசை அநேகமாக பாவேந்தரையே கொள்ளை கொண்டு விட்டதோ என எண்ணத் தோன்றுகிறது.

* * *

# புரட்சியின் விதைகள்...

கவிஞர் கே.சி.எஸ். அருணாசலம்



1. புத்துலகச் சாளரத்தைத் திறந்து வைத்து
   பூங்காற்றைத் தமிழ்நெஞ்சில் உலவச் செய்தான்
   இத்தரையில் நடக்கின்ற புதுமை எல்லாம்
   ஏற்றிவந்து தமிழ்க்கவியில் இறக்கி வைத்தான்
   முத்திறைத்து கரையதனை முத்தம் கொஞ்சும்
   முக்கடல்போல் கவிதையிடி முழக்க மிட்டான்
   சித்திரையில் சுட்டெரிக்கும் வெய்யில் போல
   தீமைகளைப் புழுங்கவைத்த செம்மல் ஆனான்!

2. தவங்கிடந்து வரம்பெற்றுத் துள்ளித் துள்ளித்
   தாவிவரும் இனிமைமிகு தமிழின் சொற்கள்
   இவனுடைய எழுதுகோல் மையில் மூழ்கி
   என்றென்றும் சிரஞ்சீவி ஆவ தற்கு
   கவிதைகளின் வடிவாகிக் காட்சி தந்து
   கருப்பூரம் சந்தனம்போல் மணம் பரப்பும்
   நவயுகத்தின் வாசலுக்குத் தீப மாகும்
   நாட்டவர்தம் மனத்துள்ளே வீரம் ஊட்டும்!

3. பூவேந்தி வந்தஇள வேனில் போல
   புதுமைபல தமிழுக்குக் கூட்டி வைத்து
   தூவாமல் தூவுகிற மல்லி கைபோல்
   சொற்பெய்து நம்நெஞ்சைச் சொக்க வைத்தான்!
   பாவேந்த னாகஅவன் மிக்கு யர்ந்தான்
   பாரதிக்குத் தாசனெனத் தோள்கள் தட்டி
   நாவாற அவன்பெருமை போற்றி இந்த
   நாட்டிலொரு புரட்சிக்கு விதைகள் இட்டான்!

* * *



# எல்லா விளக்கும் விளக்காமோ?

முனைவர் அவ்வை நடராசன்

பழமொழிகளையே சொல்லிக் கொண்டிருப்பவர்கள் நாம். நமக்கு ஒரு புதுமொழியை - பொன் மொழியை - பொருண் மொழியாக வழங்கியவர் பாவேந்தர். "நல்ல குடும்பம் ஒரு பல்கலைக்கழகம்" என்பது பலரும் அறிந்த அப் பயன் நிறைந்த மொழி.

'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்றுதான் திருவள்ளுவரும் கூறினார். ஆயினும் இல்லத்திலிருந்து வாழ்வதெல்லாம் வாழ்க்கையாகுமா? ஆவதில்லையே? வாழ்கின்ற வாழ்க்கையில் பழிப்புடைய வாழ்க்கையும் காணப்படுகின்றதே! எனவேதான் 'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்று தொடங்கிய வள்ளுவர், 'பிறன் பழிப்பது இல்லாயின் நன்று' என்ற ஒரு துணை விளக்கமும் சேர்த்தார்.

பிறன் பழிப்பது இல்லாமை வேண்டும் என்று சொல்லவில்லை. இல்லாயின் 'நன்று' என்று நயம்படக் கூறுகின்றார். பழியுடைய வாழ்க்கையோ பழியற்ற வாழ்க்கையோ - இப்போதே ஆராயாதே! வாழ்வைத் தொடங்கு; அல்லவை தேயும்; நல்லவை பெருகும் என்று நம்பிக்கையுணர்வோடு வாழ்க்கைக் களத்தில் ஈடுபடச் செய்கின்றார். பின்னரே செயற்பால இவை; விடற்பால இவை என்ற தெளிவுரைகளைத் தொடர்கிறார்.

திருவள்ளுவர் வகுத்த நெறியில் புதியதொரு வாழ்க்கை விளக்கினை - குடும்ப விளக்கினைப் படைத்தார் பாவேந்தர்.

நல்ல குடும்பத்தின் ஒருநாள் வாழ்க்கை ஓவியமாக்கப்படுகின்றது. தூரிகை கொண்டு திரைகளில் தீட்டப்பெறும் ஓவியங்கள் புறக் காட்சிகளைத் தான் புலப்படுத்தும். சொல்லெனும் தூரிகை கொண்டு தம் உள்ளக் கிழிகளில் பாவலர் வரைகின்ற ஓவியங்களோ உணர்வுகளையும் படமாக்குவன.

மணமகளின் குடித்தனப் பாங்கினைக் கண்டு மகிழ்ந்த ஒரு தலைவன் தலைவியின் நெஞ்சப்பாங்கினைப் பாராட்டுவதைக் குறுந்தொகைப் புலவர் எடுத்துக் காட்டினார். அதுபோலவே, பாவேந்தரும் குடும்பத் தலைவியாரின் சமையல் திறம் பேசுகின்றார்.

குடும்பத் தலைவி அடுக்களையில் சமைத்துக் கொண்டிருக்கிறாள்.எதிரே ஒரு தட்டில் - பொரியல் பூனைக் கண் போலப் பொலிகின்றது; சுவை மணக்கிறது. இது புறக்காட்சி. தலைவியின் உள்ளத்து உணர்வுகளைக் கவிஞர் இப்போது காண்கின்றார். பொரியல் இவ்வளவு நன்றாக இருக்கின்றதே; சிறிய பிள்ளை இதனை இருந்து அருந்துமோ என்று அவள் மனம் வினவுகிறது.

இருந்தந்தச் சிறிய பிள்ளை
இச்சென்றுச் சப்புக் கொட்டி
அருந்தியே மகிழ்ந்த தைப்போல்

அவள் காதில் ஓசை கேட்கிறது.

ஏதோ கடமைக்குச் சமைக்கவில்லை. சமைத்த கறிகள் தோறும் உண்பவர்களை யல்லவா அவள் காண்கின்றாள்! பல்லில்லாதவர் உதட்டால் மெல்லத் தின்னும்படி முருங்கைக் காயைச் சமைத்து வைத்தாள் என்று கூறினார். 'அடிசிற்கினியாளே! என்று திருவள்ளுவர் தம் மனைவியை அழைத்ததாகச் சொல்வார்கள். இப்படிக் குடும்ப விளக்கின் ஒவ்வொரு காட்சியும் நம் நினைவில் நிற்கும் நீர்மை படைத்தவை.

வெகுளும் வேளைகளில் வெடிபட முழங்கும் பாவேந்தர் உரிய இடங்களில் மென்மையும் மேன்மையும் விளங்கப் பாடுவதும் அவருடைய தனி இயல்பு.

மூடத்தனத்தைத் தீதென்றால், முட்ட வரும் மாடுகளைத் திருத்திப் பூட்டிய புரட்சிக் கவியரசர், பெண்மையின் மென்மையைப் பேசும்போது, மூடத் தனத்தின் முடை நாற்றம் வீசுகின்ற காடு மணக்க வரும் கற்பூரப் பெட்டகமாய், வேண்டாத சாதியிருட்டு வெளுப்பதற்குத் தூண்டா விளக்காய்த் துலங்கும் திறத்தை நெகிழ்ந்து பாடுகின்றார்.

இங்ஙனம், பாட்டுத் திறத்தினால் நம்மைப் பண்படுத்தும் பாவேந்தர் தாம் படைத்த பாடல்களில் ஒன்று சமய மறுப்புக் கோட்பாட்டினையும் குறிப்பாக விளக்குகின்றது.

'வீடு' என்றால் எல்லோருக்கும் குடியிருக்கும் வீடுதான் நினைவுக்கு வரும். சமயச் சார்பினரோ, பாச வீட்டினை - பாசத்திலிருந்து விடுபடுவதையே 'வீடு' என்று கொள்வர். அறம் - பொருள்- இன்பம் இம்மூன்றும் விட்டதே பேரின்ப வீடு என்பர். வெயில், மழைத் துன்பங்களில் இருந்து வீடு நம்மை விடுவிக்கின்றது. அவ்வாறே ஆணவப் பிடிப்பிலிருந்து, பாசத் தளையிலிருந்து, நல்வினை - தீவினை என்னும் விலங்கிலிருந்து நம்மை விடுவிப்பது வீடு என்பது சமய நூல் துணிபு! இது பாவேந்தருக்கு உடன்பாடாகுமா?

அதிர்ந்திடும் இளமைப் போதில்
ஆவன அறங்கள் செய்து
முதிர்ந்திடும் பருவந் தன்னில்
மக்கட்கு முடியைச் சூட்டி
எதிர்ந்திடும் துன்பம் ஏதும்
இல்லாமல் மக்கள் பேரர்
வதிந்திடல் கண்டு நெஞ்சு
மகிழ்வதே வாழ்வின் வீடு!

என்பதன் வாயிலாக, வாழ்விற்கு வேறாக வீடென வேறொன்றும் வேண்டா - இதுவே வாழ்வின் வீடு, என்று விளக்கும் புரட்சித்திறம் பாவேந்தரின் இயல்பு.

வாழ்கின்ற வாழ்க்கையில் இடர்ப்பாடுகள் எதிர்ப்படல் ஆகாது. எதிராகக் காக்க வேண்டும். நம்முடைய வாழ்க்கை மட்டுமல்ல - எதிர்வரும் தலைமுறையும் தடையின்றி வாழ, வழி வகுக்க வேண்டும் என்ற தொலைநோக்குடைய வாழ்க்கைப் பாங்கினை எளிய நடையில் - இனிய தமிழில்

பாவேந்தர் பாடினார். வீட்டு வாழ்க்கைக்கு மட்டுமன்று - நாட்டு வாழ்க்கைக்கும் வழிகாட்டும் நல்லுரை இது!

எல்லா விளக்கும் விளக்கல்ல - பாவேந்தர்
குடும்ப விளக்கே விளக்கு

என்று நாம் பாடி மகிழலாம்.

* * *

# இந்நூற்றாண்டு கண்ட புரட்சிக் கவிஞர்

கவிக் கொண்டல் மா. செங்குட்டுவன்

பாரதிக்குத் தாசனெனும் பெயரைப் பூண்டோன்;
பாத்தமிழைப் பாமரரும் சுவைக்கச் செய்தோன்;
பேரெதிர்ப்பைத் தாங்கிநின்ற பெரியா ருக்குப்
பெருந்தொண்டன் ஆனதிலே பெருமை கொண்டோன்;
யாரெதிர்த்த போதிலுமே நாத்தி கத்தை
யாத்திட்டான் கவிதைகளாய் நாடு போற்ற!
பேரெழுச்சி கொண்டார்கள் தமிழ மக்கள்;
பேரொளியாய் இலக்கியத்தில் ஒளிர்ந்தான் வாழி!

வீழ்ச்சியுறு தமிழகத்தில் எழுச்சி காண
விசையேற்றும் பாடல்களை வடித்துத் தந்தோன்;
சூழ்ச்சிகளை, வஞ்சகத்தைத் தூள்தூ ளாக்கும்
துப்பாக்கி வெடிமருந்தைப் பாட்டில் வைத்தோன்;
வாழ்நாளில் பொற்கிழியும் புகழும் பெற்ற
மாக்கவிஞன் இவனேதான் இந்நூற் றாண்டில்!
பாழ்நிலத்தில் பசுந்தளிரைக் கண்டாற் போலப்
பாவேந்தன் தனைக்கண்டார் தமிழ கத்தார்!

தன்மான இயக்கத்தார் கண்ட தாகூர்;
தமிழ்நாட்டின் ஷெல்லியெனும் புகழைப் பெற்றோன்!
தன்பெருமை யுணராத தமிழர் மண்ணின்
சரித்திரத்தில் இவன்பாவால் புரட்சி கண்டோம்!
பன்னூறு தலைமுறைக்கும் இவன்பேர் சொல்லும்
பரம்பரையே உருவாகி வளரக் கண்டோம்;
பொன்னுக்கும் பொருளுக்கும் அடிமை யாகாப்
புத்துலகப் பெரும்புரட்சிக் கவிஞன் வாழ்க!

* * *






முனைவர் சாலை இளந்திரையன்

சுப்புரத்தினப் புரட்சிக் கவிஞன் தமிழர்களாகிய நம்முடைய கவிஞன் என்பது மட்டுமே அல்ல நமக்குப் பெருமை; சொற்களைக் கூட்டிச் சேர்ப்பதிலும் அதன் மூலம், படிப்போர் நெஞ்சில் ஒரு சுவைக்கனிவை ஏற்றுவதிலும் தன்னிகரற்ற ஒரு தெளிசொல் பாவலனாக இவன் விளங்குகிறான் என்பதில் நமக்குக் கிடைத்த பெரிய பெருமை. அழகைப் பாடிவருகின்ற கவிஞன், அழகு கொலுவிருக்கும் இடங்களுக்கு ஒரு பட்டியல் தந்துவிட்டு, - 'தொட்ட இடம் எலாம் கண்ணில் தட்டுப்பட்டாள்' என்று ஒரு முத்தாய்ப்பு வைக்கிறான். கண் கொண்டு தொட்டுப் பார்க்கிற பொருள்கள், நிகழ்வுகள் அனைத்திலும் அழகு மிளிர்கிறது என்பது இதன் பொருள். இதே உண்மை சுப்புரத்தினக் கவிஞன் பாட்டிலக்கியம் முழுமைக்கும் பொருந்துகிறது. அவனுடைய பாடல்களிலே எது ஒன்றைக் கண்ணாலும், காதாலும், கருத்தாலும் தொட்டுவிட்டாலும், அங்கே ஓர் இன்சுவை மின்சாரம் எழுந்து படர்கிறது!

## சீர்மிகு சிட்டுப் பாட்டு :

ஏற்றப்பாட்டு என்பது நாட்டுப்புற மக்கள் இசைத்து மகிழும் ஒரு சிட்டுப் பாட்டு. சின்னஞ்சிறு இரண்டு இரண்டு அடிகளால் ஒரு கருத்தை முற்றுவிக்கும் மிகு சுருக்கப் பாட்டு அது. அந்தச் சிற்றடிகளால் நடக்கும் புரட்சிக் கவிஞனின் ஏற்றப்பாட்டு, அந்த நாட்டுப்புற மரபு தவறாமலும், ஒவ்வோர் அடியிலும் இன்பத்தைக் கொட்டி வைக்கும் ஏற்றம் குறையாமலும் நடக்கிறது. இரண்டு பகுதிகளாக, 200 அடிகளில் அமைந்த ஒரு கரும்புத் துண்டு, கருத்துத்துண்டு இந்த ஏற்றப்பாட்டு. முதல் பகுதியில், ஓர் அண்ணன் தன் தம்பியிடம் பேசுகிறான்; இரண்டாவது பகுதியில், ஒரு காளை தன் இதயம் கவர்ந்தவளோடு பேசுகிறான். இந்த உறவு நெருக்கத்துக்கு உயர்வு பெருக்கிடும் முறையிலேயே எழுந்து நடந்து உயர்ந்து முடிகிறது ஏற்றப் பாட்டு.

விடிஇருட்டு அவிழும் முன்பே தன் பணியைத் தொடங்கிவிட்டான் ஏற்றக்காரன். சிறிது நேரத்துக்கெல்லாம் புதிய ஒளியோடு கீழ்வானிலே மேலே ஏறுகிறது கதிரவன். அந்த இனிய காட்சியைக் கண்ணால் தொட்டுக் கருத்திலே வாங்கியதும் ஏற்றக்காரன் நெஞ்சிலே இனிய நினைவு குமிழிடுகிறது; அவனுடைய உணர்வு பாட்டாகக் குதிபோடுகிறது!

> மாங்கனியும் நீதான் - அந்த
> வானம் என்னும் தோப்பில்!
> நீங்கும் பனி என்றே - இங்கு
> நீ சிரித்து வந்தாய்!

இப்படி எழுகிறது அந்தப் பாட்டு. அடுத்த வரியிலேயே, "முந்திய கருக்கல் எந்த மூலையிலும்

இல்லை!" என்று உவகையில் ஓங்குகிறான் ஏற்றக்காரன். உடனேயே, கீழே சால்பிடித்து நீர் இறைத்துக் கொண்டு நிற்கிற தம்பியின் நினைவு இதயத்தில் படர்கிறது. இனிய நினைவுகள் உண்டாகும்போது இனிய உறவுகளின் நினைவும் கூடவே ஒட்டிக் கொண்டு எழுவது இயல்பு அல்லவா? அவனுக்கு அன்புரையும் அறிவுரையுமாகப் பொங்கிவருகிறது ஏற்றக்காரனின் பாட்டு.

### வீர முன்னோர்கள் :

எடுத்த எடுப்பிலேயே கடமைகளை நினைவூட்டி அறிவுரைகளைக் குவித்தால் இளைய நெஞ்சம் ஆர்வம் கொள்ளாது. ஆகையால், தங்கள் நாட்டையும் அதன் பெருமைகளையும் ஓங்கிய சொற்களால் வருணிக்கிறான் இந்த நாட்டுப்புறப் பாவலன்; அதாவது, ஏற்றப்பாட்டுக்காரனின் இதயத்துக்குள்ளே கூடுவிட்டுக் கூடு பாய்ந்துள்ள நமது சுப்புரத்தினக் கவிஞன்...

'நன்மையுள்ள நாடு, தெற்குவள நாடு, மூன்றரசர் நாடு' என்றெல்லாம் தென்னகத்தை, தங்கள் தாயகத்தை, தன் தம்பிக்கு அறிமுகம் செய்து வைக்கிறான் இக்கவிஞன், அதனை ஆட்சி புரிந்தவர்களாகிய நமது முன்னோர்களின் நிலை எப்படி? அதையும் தொடுத்துச் சொல்லுகிறான். அந்தச் சொற்களிலே சேர, சோழ, பாண்டியர்களின் போர்க்கள வீரம் போற்றி உரைக்கப்படுகிறது. அவர்கள் எல்லாம் இப்போது இல்லை, அவர்களின் ஆட்சியும் இல்லை என்பதைக் கவிஞன் நினைவிலே கொள்கிறான். ஆனாலும் "ஒன்று பழுத்தால் இரண்டு தளிர்க்கும் உறுதியை எண்ணாமல், ஓகோ நித்தம் அநித்தியம் என்றே ஓலம் இடுவேனோ?" என்னும் மானுட நம்பிக்கை வீறுடன்,

> மாண்டுவிட்டால் என்ன? - அவர்
> வழிவந்தவர் நாமே!

என்று மகிழ்ச்சி பூக்கிறான் கவிஞன். இந்த மகிழ்ச்சியிலேயே, - உடல் நலத்துக்குத் தேவையான கசப்பு மருந்தை இனிப்புத் தடவிக் குழந்தையின் வாயில் இடுவது போல, - மூவரசர் வழிவந்த இற்றைத் தமிழர்களாகிய நம்முடைய கடமையையும் இனிமையாக நினைவூட்டிவிடுகிறான். 'அவர் (மூவேந்தர்) வழிவந்தவர் நாமே' என்று சொல்லும்போது, அவர்களால் வரும் பெருமைக்கு உரிமை உள்ளவர்களாகிய நாம், அவர்கள் நிகழ்த்திய வீரத்தையும் புகழ்ச் செயல்களையும் நிகழ்த்த வேண்டிய கடமையும் உடையவர்கள் என்னும் நினைவு ஊற்றும் அந்த அடிகளிலேயே உள்ளிருந்து ஊறி உயர்கிறது.

### நாகரிக நாடு :

வழிவழிப் பெருமையைக் காத்து வளர்க்க வேண்டிய கடமையை நினைவூட்டியதும், - 'அதை இந்த இளைஞன் அசைபோட்டுக்கொண்டு இருக்கட்டும், நாம் அவன் இதயத்தை மேலும் எழுச்சிகொள்ளச் செய்வோம்' என்று நினைத்தவன் போல,- அந்த நாட்டின் இயற்கை வளங்களையும் செயற்கை நலங்களையும் அடுக்குகிறான் கவிஞன். அந்த அடுக்குகளின் ஊடே ஒரு பெரிய கருத்து பின்னிப் பிணைந்து மின்னல் முகம் காட்டுகிறது: 'நன்மையுள்ள நாடு' என்று தனது நாட்டை அறிமுகம் செய்து தொடங்கிய கவிஞன், - இங்கே,

> நாகரிக நாடு - நம்
> நல்ல பெரு நாடு!

என்று உவகை பொங்குகிறான். அதன் மூலம், மேன்மை மிக்க தமிழ் நெஞ்சத்தை ஒருமுறை தொட்டுக் காட்டுகிறான்.

தமிழர்கள் வீரத்தை மதிப்பவர்கள்; ஈகையை ஏற்றெடுத்துப் போற்றுகிறவர்கள்; இவைகளால் ஏற்படும் புகழே மனிதன் தேடிக்கொள்ளக் கூடிய அழியாத செல்வம் என்ற கருத்து உடையவர்கள். ஆனாலும், வீரத்தின் பேராலோ ஈகையின் பேராலோ பண்புக் குறைவுகள் ஏற்பட்டு விடவே கூடாது என்பதில் இணையற்ற அக்கறை கொண்டவர்கள் தமிழர்கள். பரம்பரை பரம்பரையாக வரும் பேரரசர்கள், சிற்றரசர்கள், குறுநிலமன்னர்கள், வீரமிகு தலைவர்கள் என்று, - பலபேரைச் சுகமான சொற்களால் சொல்லோவியம் செய்து வைத்துள்ள தமிழனின் பழைய இலக்கியம், "முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின் நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்" என்று நாகரிக உணர்வுக்கே தலைமை தருகிறது; அந்த அடிப்படையை எடுத்து உணர்த்தி, "தமக்கென முயலா நோன்தாள் பிறர்க்கென முயலுநர் உண்மையானே... உண்டால் அம்ம இவ்வுலகம்" என்று வரையறுத்து ஒலிக்கிறது. அதாவது, நாகரிகப் பேருணர்வுதான் ஓர் இனத்தின் பெரிய செல்வம் என்பதைக் கண்டு கடைப்பிடித்து உயர்ந்தது தமிழ்இனம். அந்தப் போக்குகள் பெரும் அளவு சரிந்துபோன ஒரு காலக்கட்டத்தில் நின்றுகொண்டு பாட்டிசைக்கும் சுப்புரத்தினக் கவிஞன் அந்தப் பெரிய வரலாற்றை மீட்டு நிலைநாட்டத் துடித்தவன். அதனாலேயே வீரவளம், செல்வவளம், கனிவளம் முதலான பலவற்றைப் பாடிவருகின்ற இக் கவிஞன், "எட்டுத் திசை பாடும் நம் இன்பத் திருநாட்டை" என்று நினைத்த உடனேயே, - அதற்கு இது காரணம் என்று விரல் நீட்டிச் சுட்டிச் சொல்ல விரும்பியவன் போல, - "நாகரிக நாடு-நம் நாடு பெருநாடு" என்று இணைத்துச் சொல்லி வைத்திருக்கிறான்.

### ஒரு செம்மாப்பு :

இங்கே ஓர் இனிய உண்மையை நாம் நெஞ்சிலே கொள்ள வேண்டும். சங்ககாலத்திற்குப் பிறகு சுமார் 2500 ஆண்டுகளாகத் தமிழகம் பல்வேறு புயல்களால் அலைத்துக் குலைத்துச் சிதைத்துப் போடப்பட்டுள்ளது. எதை எடுத்தாலும் அயன்மை கொடிகட்டிப் பறக்கும் வரலாறே இந்த மண்ணின் வரலாறாக மாற்றிப் போடப்பட்டுவிட்டது. வீரர்கள் என்றால் வெளியில் உள்ளவர்கள், - பத்தினிகள் என்றால் வெளியில் உள்ளவர்கள், - கருத்து என்றால் வேதம், உபநிடதம், பகவத்கீதை முதலானவைகளில் சொல்லப்பட்டுள்ள கருத்துக்கள் - இப்படியாக, எது ஒன்றிலும் உள்நாட்டுச் சரக்கு ஒதுக்கப்பட்டு இறக்குமதிச் சரக்கே ஏற்றம் பெற்றிருந்தது; இன்றுவரை அந்த இரவல் வரலாறு நீடித்துக்கொண்டுதான் இருக்கிறது. இந்த நெடும்புயலால் எழுப்பப்பட்ட பெருந்தூசியால் கண்மறைந்து போகாமல், அந்தப் புயலின் ஊடே நின்றுகொண்டே தன்னுடைய தமிழ் முன்னோர்களை, அவர்களின் வண்ணம் வடிவு குன்றாமல் நினைவுகூர்கிறான் இக்கவிஞன்.

இந்த உண்மைக்குள்ளே புதைந்திருக்கிற உயிர்த் தமிழ் உணர்வுகளைத் தமிழர்கள் விளங்கிக் கொள்ள வேண்டும். தமிழ்க் கவிஞர்கள் என்று பேர்போட்டுக் கொண்ட பலரெல்லாம் வேதகாலத்தையும் கிருதயுகத்தையும் மீட்டுக்கொண்டுவர வேண்டும் என்று பறைமுழக்கிக் கொண்டு பவனி வந்த காலத்திலேயே, - இக்கவிஞன், நாகரிகம் மிளிரும் நற்றமிழ் வாழ்க்கை நெறிகளை மீட்டு நிலைநாட்ட வேண்டும் என்று எழுந்துநின்று குரல்கொடுத்திருக்கிறான்; ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தமிழர்களின் மண்டையில் புகுத்தப்பட்ட வெற்றுச்சரக்காம் வேற்றுச் சரக்கை இவன் ஏறெடுத்தும் பார்க்கவில்லை. இது ஏதோ சாதாரண நிகழ்ச்சி என்று நினைத்துவிடக் கூடாது; செல்வாக்கு மிக்க நெடும்பகையை, - கவிஞனே வேறோர் இடத்தில் அறைந்து சொல்லியிருப்பது போல, "என் உடல் மேல் உருள்கின்ற பகைக்குன்றை நான் ஒருவனே உதிர்ப்பேன்!" என்கிற செம்மாப்போடு இங்கே கவிஞன் பேசுகிறான் என்பதை உணரவேண்டும். இந்த உணர்ச்சியோடு அணுகினால்தான் அடுத்து வரும் 100 கண்ணிகள் நம் இதயத்துக்கு ஏற்றம் சேர்க்கும். நாம் முன்பே குறிப்பிட்டுள்ளபடி, தன் இதயம் கவர்ந்த ஏந்திழை ஒருத்தியிடம் ஓர் இளைஞன் பேசுவதாக அமைந்துள்ளது இப்பகுதி.

## பெண்ணுக்கு அறிவுரை :

எடுத்த எடுப்பிலேயே நல்லொழுக்கம், இல்லறம், கல்வி, இன்சொல், பொதுத் தொண்டு, பகுத்தறிவு என்பவைகளைப் போற்றவேண்டும் என்று, - தன்னினும் இளையவளும் தன்னோடு இணைய வேண்டியவளும் ஆகிய அப்பெண்ணுக்கு எடுத்துச் சொல்லுகிறான் இளைஞன். காதல் மணமே நன்மணம் என்னும் கொள்கை தலைசாய்ந்து, ஏற்பாட்டுத் திருமணமே ஏற்ற திருமணம் என்னும் கொள்கை கொடிகட்டிவிட்ட காலத்தில் வாழ்ந்தவன் நமது கவிஞன். அவன் நெஞ்சில் ஒருத்தியின் மீது காதல் ஊறும்போதே, இனிய அந்தக் காதலைப் பணத்தால் அடித்து வீழ்த்திவிடும் படுகொடுமை இங்கே தலைவிரித்து ஆடுவதும் அவன் உள்ளத்தில் பாய்கிறது. ஏற்றப்பாட்டும் எச்சரிக்கைத் தடத்தில் இறங்குகிறது:

சொத்து வரும் என்று - நீ
தோது தவறாதே!
முத்து வரும் என்று - நீ
முறைதவற வேண்டாம்!

அந்த இளம்பெண், சமூகத்தாரின் நடைமுறைகளில் இறங்கித் தன்னைப் புறக்கணித்து வேறொருவனை மணந்து கொள்வாளோ என்கிற அய்யம் எழுந்து, - 'சொத்துக்காகத் தோது தவறி விடாதே, முறைதவறி விடாதே, என்று எச்சரித்த உடனேயே சமூத்தின் வேறுபல கேடுகள் அவன் நெஞ்சில் முகம் காட்டத் தொடங்கிவிடுகின்றன.

பல இளம் பெண்கள், பாட்டுக் கச்சேரி செய்தால் நம்மைப் பலரும் பாராட்டுவார்கள் என்று மயங்கி இருக்கிறார்கள்: இசை பாடுவது என்பதற்கும் அதையே ஒரு தொழிலாக்கி மேடைக் கச்சேரி நடத்துவதற்கும் இடையே உள்ள பாரிய வேறுபாட்டைப் பல பெண்மக்கள் உணர்ந்துகொள்ளவில்லை. அதே போல சினிமாவில் நடிக்கப் போனால் அங்கே செல்வம் செல்வமாகத் திரட்டிக் குவித்துவிடலாம் என்பதையே பல பெண்கள் நினைக்கிறார்கள். அந்தத் திசை நோக்கி நடைஎடுத்துவிட்ட பல சினிமாப் பெண்கள் கேடுகெட்ட ஆடவர்களின் வாடகை வீடுகளாகிப் போவதை அவர்கள் தெரிந்து உணரவில்லை. இவைகளைத், தன் காதலிக்கு எடுத்துக்காட்டுவது போலப் பெண் உலகுக்கே நல்லறிவு கொளுத்துகிறான் அந்த இளைஞன்.

கனியத் தமிழ் பாடு - பெண்ணே
கச்சேரி செய்யாதே!
சினிமாவினில் சேர்ந்து - நீ
தீமை அடையாதே!

அறிவுரைகளாகப் பொழிந்து தள்ளினால் யாருக்கும் அலுப்பு ஏற்படும் அல்லவா? இனிய செய்திகளைக் கேட்கத் துடிக்கும் இளைய நெஞ்சிலே அறிவுரைகளையே அடுக்கி வைப்பதால் வெறுப்பு மிஞ்சிடக் கூடும் அல்லவா? அறிவுரையால் ஏற்பட்ட மன இறுக்கத்தைச் சற்றே நெகிழ்த்த விரும்பிய இளைஞன், அதற்குரிய சரியான ஆயுதமான கிண்டலை அள்ளி நீட்டுகிறான்:

ஆளவந்தார் உண்டு? - பெண்ணே
அய்யோ, பெரும் மண்டு!
நாளும் கையில் மட்டும் - பெண்ணே
நல்ல வருமானம்!
ஆளுக்கென்ன பஞ்சம்? - பெண்ணே

அடிமடியில் லஞ்சம்!
கோளிலே மிடுக்காம் - அவர்
தொழுவதோ வடக்காம்!

*1947*க்குப் பிறகு தமிழகத்திலே நாடாள வந்து, பதவிக்கே அடிமைகளாகிப் போன அனைத்துப் பேரையும் அளாவிய கிண்டல் இது. இதைக் கேட்டு அந்த மங்கை வாய்விட்டே சிரித்திருப்பாள்; குறைந்த அளவு, தன் மெல்லிதழில் ஒரு புன்னகையாவது எடுத்திருப்பாள். இந்த நல்ல சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டு தன்னுடைய காதலை அப்பட்டமாக அவளிடத்தில் வெளியிடுகிறான் இளைஞன். அவள் மீது தனக்குக் காதல் ஏற்பட்ட விதத்தை அவன் சொல்லுவது கண்டதும் காதல் என்ற வகையைச் சார்ந்த நிகழ்ச்சியாகத்தான் தோற்றம் காட்டுகிறது. ஆனால் அதற்குள்ளே அந்த இளைஞன் அள்ளித் தெளிக்கும் அழகியல் உணர்வு எந்த நெஞ்சையும் இனிப்பாக்கி விடுகிறது.

கெண்டை விழியாளே - அடி
கிள்ளை மொழியாளே
கொண்டையிலே பூவும் - உன்
கோணை நெடு வாக்கும்
தண்டையிலே பாட்டும் - உன்
தாழ்அடியில் கூத்தும்
கண்டவுடன் காதல் - நான்
கொண்டேனே உன்மீதில்!

இந்த நான்கு கண்ணிகளில் அவன் பெற்ற கண்ணின்பம், செவிஇன்பம், - அவைகளால் ஏற்பட்ட நினைவின்பம் ஆகியவை வரிகளின் ஊடே மிதந்து மிதந்து மகிழ்ச்சி செய்கின்றன; அவன் கண்டு கேட்டு உணர்ந்து நெகிழ்ந்ததை எவ்வளவு இனிமையாக வெளிப்படுத்துகிறான் என்பதும் அவனுடைய தனித்திறமையாக விளங்குகிறது.

### காலம் உணர்ந்த கவி :

தன்னைப் பற்றிய ஆர்வமும் தன் தோற்றத்தைப் பற்றிய கனிவு சார்ந்த மதிப்பீடும் உடைய அவனை அந்தப் பெண் நிச்சயம் விரும்பியிருப்பாள் என்பதில் அய்யம் இல்லை. ஆனாலும் ஓர் அறிவுக் கவிஞனாகிய கனகசுப்புரத்தினம் அந்த நிகழ்ச்சியை வெறும் உணர்ச்சிச் சுழிப்பாக மட்டும் காட்டி அமைய விரும்பவில்லை; அவள் மீது அவனுக்கு உள்ள ஈடுபாடு ஒரு பெரிய ஆலமாமரத்தின் வேர்களும் கிளைகளும் போல விரிந்து படர்ந்து உறுதிபெற்றது என்பதை உணர்த்தி, ஏற்றப்பாட்டுக்கே புதிய ஏற்றம் சேர்க்க விரும்புகிறான்.

அவன் தன்னுடைய காதல் ஆர்வத்தை வெளிப்படுத்தும் ஒவ்வொரு முறையும் அதிலே ஒரு புதிய நிகழ்ச்சி முகம் அவிழ்த்துப் பொலிவு காட்டுகிறது. அவளை அவன், 'மாற்றுயர்ந்த பொன்னே, மாணிக்கமே, சின்ன வயதாளே, சிரித்த முகத்தாளே, அன்னநடையாளே', என்றெல்லாம் விளிக்கும் ஒவ்வொரு சொற்கூட்டிலும், ஒரு பெரிய இன்ப நினைவு இழையோடுகிறது; அவள் மீது அவனுக்கு எத்தனை பெரிய ஆர்வக்காதல் என்பதை இந்தத் தொடர்களில் ஒவ்வொன்றும், நம் காது வழியாகச் சென்று நம் கருத்தோடு கொஞ்சல் மிழற்றுகிறது. அதற்குப் பிறகு, "தள்ளத் தகுமோடி, நான் தாய்க்குத் தலைப்பிள்ளை; நொள்ளையல்ல பெண்ணே, நான் நொண்டி அல்ல பெண்ணே" என்றெல்லாம் அவன் பேசும் போது, அவர்கள் இருவருக்கும் இடையே உள்ள தொடர்புறவு எழுந்து எழுந்து அலைவீசுகிறது. அத்தகைய ஒரு நெருக்கம் இல்லாவிட்டால் இத்தகைய 'சும்மா' செய்திகளை எல்லாம் எடுத்துப் பேசும் ஒரு இதய மென்மை ஏற்பட்டு இருக்காது அல்லவா?

அப்போதுதான் இந்தத் தமிழகத்தில் வழிவழியாக நின்று நிலவிவரும் ஒரு பெண்மைப் பெரும் பண்பாடு அவன் நினைவிலே மின்னலிடுகிறது: களவு மணங்கள் மலிந்திருந்த சங்ககாலத்திலும் சரி, அந்த இனிய உறவை வெட்டிப்போட்ட இடைக்காலத்தை மீறிக்கொண்டு அங்கங்கே வீரத் தளிர்காட்டும் இந்தக் காலத்திலாயினும் சரி, - ஓர் இளம்பெண், தனது இனிய காதல் தன்னுடைய பெற்றோரின் ஒப்புதலோடு மணமாக மலரவேண்டும் என்றே நினைக்கிறாள். எத்தனைதான் வேகமாக, வீரமாக எழுந்து கொண்டாலும், தன் பெற்றோரும் பெரியோரும் தன் விருப்பத்துக்கு முரண்பட்டு முரண்டு பிடிக்கும்போது, அவர்களுடைய கல்லொத்த நெஞ்சினையும் தன் கண்ணீரால் கரைத்து அவர்களின் ஒப்புதலோடு குடும்பவாழ்வு மேற்கொள்ளவே அந்தக் குளிர் இளம் செல்வி விரும்புகிறாள். (அவர்களை மீறி விடுதலை மேற்கொள்ளுவது என்பது, ஒரு தமிழ்ப் பெண்ணைப் பொறுத்தவரை கடைசி முயற்சியே: கூடியவரை நடைபெறாமல் போக வேண்டிய ஒரு முயற்சியே.) இதை நன்கு அறிந்திருக்கிற நமது ஏற்றக்காரக் காதலன் அவள் மனம் மகிழும் விதமாக, அவளுடைய அம்மா அப்பாவின் உணர்வுகளையும் அவள்முன் கொண்டுவந்து நிறுத்துகிறான்:

> வருத்தம் இல்லை பெண்ணே - என்
> மாமிக்கும் என் மேலே,
> கருத்தும் உண்டு, மாமன் - என்னைக்
> கட்டிக்கொள் ாச் சொல்வான்!

இத்தனை செய்திகளையும் அவள்முன் விரித்துவிரித்துப் பரப்பிய பின், அவளிடம் இனியதான ஓர் எதிரொலியை எதிர்பார்க்கிறான் அந்தக் காளை. அவளோ உள்ளத்தில் விருப்பம் இருந்தும், எங்கோ உலகத்தின் மீது பார்வையைப் படரவிட்டவளாக, அவன் மீதுள்ள காதலைத் திரையிட்டு மூடி வைத்தவளாக ஒருவிதமான இளஞ்சிரிப்போடு நின்றுகொண்டிருக்கிறாள். பேசவில்லை; அவள் நெஞ்சின் எண்ணமும் புறப்பட்டு வெளியே வரவில்லை!

### காதல் படுத்தும் பாடு :

அவள் தன்னை விரும்புகிறாளா இல்லையா என்பதை உறுதி செய்து கொள்ளுமுன் மேலே செல்ல விரும்பவில்லை அவன்.

> ...... நன்னுதல் மடந்தையர்
> மடங்கெழு நோக்கின் மத முகம் திறப்புண்டு,
> இடங்கழி நெஞ்சத்து இளமையானை
> கல்விப் பாகன் கையகப்படாஅது,
> ஒல்கா உள்ளத்து ஓடுமாயினும்,
> ஒழுக்கொடு புணர்ந்த விழுக்குடிப் பிறந்தோர்க்கு
> இழுக்கம் தாராது.......

மாண்புயர் பாண்டிய மன்னர்களைப் பற்றி மதஇருள் பரவிய சிலப்பதிகாரக் காலம் கூடத் திரித்திட முடியாது விரித்திடும் சித்திரம், இது. அந்தப் பரம்பரையிலே வந்தவன்தான் இந்த ஏற்றப்பாட்டுக் காதலன். ஆண்டிருந்த பாண்டியன், சேரன், சோழன் ஆகிய மூவரும் 'மாண்டு விட்டால் என்ன? - அவர் வழிவந்தவர் நாமே!' என்று ஏற்கனவே அறிமுகப்படுத்தியுள்ளான் அல்லவா கவிஞன்? அந்த அடிச்சுவடு மாறாமல், இங்கே எல்லை கடவாமல் நின்று ஏங்குகிறான் அந்த இளைஞன். எதை எதையோ சுற்றி வளைத்து, ஓரளவு நகைப்புக்கு இடமாகக் கூடப் பேசி, அவள் கருத்தை அறிய முயன்றும் வெற்றி கிட்டவில்லை. எனவே கடைசி முயற்சியாக, "கருத்தை உரை கொஞ்சம்" என்று நேரிடையாகவே கேட்டுவிடுகிறான். அப்போது மட்டும்

அசைந்துவிடுவாளா அந்தத் தமிழச்சி? அவனுடைய உள்ளத்தை மேலும் மேலும் சுண்டி இழுக்கும் விதமாக மோடி செய்துகொண்டே,- அவனைப் புறக்கணிப்பது போலக் காட்டிக்கொண்டே, அழகுப் பூங்கொடியாக அவன் முன்னே நிற்கிறாள். அவனால் பொறுக்க முடியவில்லை. "பெண்ணே, கல்லடி உன் நெஞ்சம்!" என்று கழறுகிறான். ஆனாலும் அடுத்த வினாடியே அவன் உள்ளம் படுத்துப் போகிறது. தன்னுடைய கடுஞ்சொற்களைக் கேட்டு அந்தப் பாவை கலங்கிப் போவாளோ என்று மிரளுகிறான். அந்த மிரட்சி ஓடிச்சென்று அவளையே சுற்றி வளைக்கிறது:

பார், இரண்டு சிட்டு - பெண்ணே
பழகும் ஒன்றுபட்டு!

சுற்றுச்சூழல் அனைத்தும் சுகமான காதல்; அதன் ஒரே ஒரு துளிதான் அந்தச் சிட்டுக்காதலர்களின் மொட்டுத் தனி நிகழ்ச்சி. சிட்டுக்களை மட்டும் சுட்டிக் காட்டினாலும், (புணர்தலாகிய) குறிஞ்சியே, உலகெங்கும் விரிந்துகிடக்கிறது என்பதைத்தான், அதன் மூலம் அவள் முன் அள்ளிக் குவிக்கிறான் இளைஞன்.

அவளுக்கு அவன் படும் வேதனை ஒரு தனி இன்பம் அளித்ததோ? இன்னும் தன் சிரிப்பு மலர் வாயால் அவள் சேதி தெரிவிக்கவில்லை; 'அத்தான், உனக்குத்தான் என் உள்ளம்' என்பதற்கான ஒரு சிறிய குறிப்புக் கூட, அவளுடைய பெண்மைக் கட்டுப்பாட்டை மீறி அவள் முகத்தில் முகம் காட்டிடவில்லை. கிட்ட நெருங்க நெருங்க எட்டி எட்டிச் செல்லுவது போலக் காட்டிடும் பெண் கொழுந்துகளின் இந்த ஒட்டாரம்தானே காதல் பயிருக்குப் பாய்கின்ற தெண்ணீர்? அதைப் புரிந்துகொள்ளாமல் இளைஞன் தத்தளிப்பதுதானே, காதலுக்கு, அன்றும் இன்றும் என்றும் சுவைசேர்க்கும் புதுமைக் கவர்ச்சி? பையன் துடித்துப் போகிறான்; "எரிந்ததடி மேனி, பெண்ணே இனிப் பொறுக்க மாட்டேன்!" என்று பதைக்கிறான். அவன் உள்ளம் பூப்பூவாக, அருவிப் புனல்புனலாக, கடலின் அலை அலையாக, தன் எதிர்காலக் கனவுகளை வாரி வீசுகிறது:

பூட்டி வைத்த வீட்டின் - அடி
புது விளக்கும் நீயே.
மாட்டி வைத்த கூட்டில் - அடி
மணிக் கிளியும் நீயே.
போட்டு வைத்த சம்பா - இனிப்
பொங்கி டும்உன் னாலே.
கூட்டி வைத்த வீட்டில் - நல்ல
குடும்ப விளக் காவாய்.

கூண்டு வண்டி கட்டி - நாம்
கூட லூர் அடைந்தால்,
பாண்டியன் குடும்பம் - என்று
பார்த்து மகிழ் வார்கள்.
தாண்டு நடைபோட்டு - நாம்
தக தகென்று போனால்,
மாண்ட நெடுஞ்சோழன் - அவன்
வளர் குடும்பம் என்பார்.

தையல் என்றன் வீட்டில் - நீ
மையல் செய்யும் போதுன்

கை யழகு பார்த்து - நான்
களித்திடுவேன் பெண்ணே.
கையில் விளக்கேந்தி - நீ
கடைசி அறை போவாய்,
பொய் யல்லவே பெண்ணே - மிகப்
பூரிக்கும் என் மேனி!

அதுவரை ஒட்டாரம் காட்டிநின்ற மங்கை, அவனுடைய இதய ஆழத்திலிருந்து ஏக்கச்சுவை நிரம்பி எழுந்து பொங்கிய காதல்ஊற்றைக் கண்டதும், அதற்கு மேலும் தன் உள்ளத்து உணர்ச்சிகளை மறைத்து வைக்க முடியாதவளாகப் பட்டென்று தன் மென்மலர்க் கையால் அவனுடைய கையைத் தொட்டுவிடுகிறாள். அதாவது, 'உனக்கு நானே, எனக்கு நீயே' என்று சொல்லாமல்சொல்லி விடுகிறாள். அவ்வளவுதான்! இன்பஉணர்வு கொத்துக்கொத்தாக எழுந்து அவனைக் குளிர்வித்து விடுகிறது. எரிந்த மேனியனாக ஏங்கிநின்ற அவன், குளிர்ந்த நெஞ்சினனாக நிமிர்ந்து நிற்கிறான்.

பட்டதடி உன்கை - பெண்ணே
பலித்ததடி வாழ்வு!
இட்டது நீ சட்டம் - என்
இன்பப் பெருமாட்டி!

என்று துள்ளிக் குதிக்கவே தொடங்கி விடுகிறான். அவளுடைய அன்பிலே, உலகமே அவனுக்குப் புதுக்காட்சி வழங்குகிறது!

மூடத்தனங்கள் சடைத்துக்கிடக்கும் இந்தத் தமிழ்மண்ணைத் திருத்தி அதனிலே சீர்மைத் தெளிவுகளை ஏற்ற முனையும் ஓர் இளைஞனுக்கு அவனுடைய கொள்கையைத் தெளிந்து ஏற்ற ஒரு காதலி கிடைக்கிறாள்; அவன் ஆயிரமாயிரம் தெம்புகளைப் பெறுகிறான்.அவன் இதயம் வீறுகொண்டு ('பூத்தது மானுடம்') முழங்குகிறது:

மோதுகின்ற காட்டுத்தீயில்
முன்னெழுந்து செல்கிறேன் - என்
முல்லையே, நீ கூடநில்லு,
மூடர்தம்மை வெல்கிறேன்!

இந்த வீறு கமழும் உணர்வைத்தான், தன் காதலியின் இசைவுபெற்று இதய இணைவுகொண்ட நமது ஏற்றப்பாட்டுக் காதலனும் பெற்றிடுகின்றான். அப்படிப்பட்ட ஒரு பெருமித நம்பிக்கைப் பெருந்தளத்தில் ஏற்றப்பாட்டுக் காதலர்களை உயர்த்தி நிறுத்துகிறான் கவிஞன்.

### வியப்பு ஏது? :

சுப்புரத்தினப் புரட்சிக்கவிஞனே சங்ககாலத்திற்குப் பிறகு தமிழர்க்கு வாய்த்த ஒரே கவிஞன் என்று சொன்னோம்; 'ஆமாம் ஆமாம்' என்று அனைவரும் தலையசைத்து ஒப்பும் வண்ணம் இங்கே நிகழ்ச்சிகளை நடத்திக்காட்டுகிறான் கவிஞன்: கடமையை நினைவூட்டும்போதும் சரி, காதலை அள்ளி அணிந்துகொள்ள அவாவிநிற்கும் போதும் சரி, - தமிழ் இளைஞன் கண்ணியம் மாறாத ஒரு கட்டுப்பாட்டில் நிற்கிறான்; ஒரு பெண்ணுடன் நெருங்கிநிற்கும் தனிமை கிடைத்த போதும் தன் நெஞ்சத்தையும் அதன் உணர்ச்சிகளையும் பண்பாட்டுக்கரை அமைந்த முன்னேற்ற முறைமையோடு படரவிடுகிறான். தமிழரின் ஆதிநாள் அமைப்பாகிய இல்லறநெறியையே, - இடைப்பட்ட காலங்களின் மிகைப்பட்ட புண்களுக்கு மருந்திடும் விதமாக மீட்டமைக்க முந்துகிற

போதும் அதிலே ஒரு மென்மைக் கனிவு குமிழியிடுகிறது; வாட்டம் அங்கங்கே முகம் காட்டும் போதும், அது காட்டமாக உருவெடுத்துவிடாமல், - கனிவை, குழைவை, நெகிழ்வை மிகுதிப் படுத்திடவே அது பயனாகி நிற்கிறது. தமிழர்கள் எந்த நிலையிலும் கூட்டறுந்து ஓடிவிடும் காட்டாற்று வெள்ளங்களாகச் செயல்பட்டவர்கள் அல்லர்; கண்ணியத்தோடேயே எதனையும் நிறைவேற்றும் நல்ல இயல்பினர் தமிழர்கள். அவர்களின் கவிஞன், - பல்லாயிரம் ஆண்டு-களுக்கும் பிறகு அவர்களுக்குக் கிடைத்த ஒரே கவிஞன் சுப்புரத்தினப் புரட்சிக்கவிஞன். இந்த வழிவழித் தமிழ் மேன்மையை, எந்த இதயத்தோடும் கொஞ்சிக் குலவி மிஞ்சிய இன்பத்தை வாரிவழங்கும் தகைமையை இந்தக் கவிஞன் சொந்தமாக்கிக் கொண்டு நமக்கெல்லாம் அள்ளித் தருவதிலே வியப்படைய ஒன்றும் இல்லை அல்லவா?

* * *



பொங்கியும் பொலிந்தும் நீண்ட
புதுப்பிடர் மயிர்சி லிர்க்கும்
சிங்கமே! வான வீதி
திருதிரு என எரிக்கும்

மங்காத தணற்பிழம் பே!
மாணிக்கக் குன்றே! தீர்ந்த
தங்கத்தின் தகட்டே! வானத்
தகழியிற் பெருவிளக்கே!"

பாரதிதாசன்.

ஓவியம் : த. முருகேசன்

# பாரத விடுதலைப் போருக்குப் பாவேந்தர் தம் பங்களிப்பு

முனைவர் கி. வேங்கடசுப்பிரமணியன்

விடுதலைப் போராட்டம் வீறுடன் நடைபெற்ற காலகட்டத்தில் தென்னாட்டில் பாரதியும், வட நாட்டில் தாகூரும் தோன்றி எழுச்சிமிகு கவிதைகளின் மூலம் சுதந்திர உணர்வினைத் தூண்டி மக்கள் நெஞ்சில் சுதந்திரக் கனலை மூட்டினர். பாரதி வாழ்ந்த அதே காலகட்டத்தில் தோன்றிய பாரதிதாசனும் விடுதலை இயக்கத்தில் ஈடுபட்டு, இந்திய விடுதலையைக் குறிக்கோளாகக் கொண்டு பல பாடல்களைப் பாடியுள்ளார் என்பதற்குச் சான்றுகள் நிரல்பட நிறைய உள்ளன.

பாவேந்தர் தனிமனித உரிமைகட்காகக் குரல் கொடுத்தவர். அதே நேரத்தில் அவர் தான் ஒரு இந்தியன் என்பதை மறந்ததே இல்லை. மொழியால் தமிழனாக உள்ள ஒருவன் நாட்டால் இந்தியனாக இருக்கமுடியும் என்பதற்கு அவர்தம் வாழ்வே சான்று. தமிழ்மொழிக்கிணை ஏது என இறுமாந்து நிற்கும் தமிழன்னையின் புதல்வன் நிச்சயமாக இந்தியாவின் பெருமைதரு குடிமகனாகவும் இருக்கமுடியும் என்ற நம்பிக்கைக்கு அவர் கவிதைகள் எடுத்துக்காட்டு.

### பாரதிதாசன் ஓர் இந்தியன்:

பிரஞ்சு ஆட்சிக்கு உட்பட்டிருந்த புதுவையில் பிறந்து வளர்ந்த பாரதிதாசன் 1908இல் பாரதி புதுவைக்கு வருவதற்கு முன்பே பாரதியின் பாடல்களைப் படித்து அவற்றின் பொருளை உணர்ந்தார். தன்னை இந்தியன் என்று பெருமிதத்துடன் கூறிக்கொண்டார்.

சுதேச கீதங்களை நான் படித்து வந்தேன்
.... ..... ..... ..... .....
"நான் ஒரு இந்தியன்" என்ற அகம்பாவத் தோடும்
அப்பாடல்களை என்னால் பாட முடிந்தது

என்ற அவர்தம் அடிகள் இதனைப் புலப்படுத்துகின்றன.

### விடுதலைப் போராட்ட வீரர் சுப்புரத்தினம்:

அரவிந்தர் புதுவைக்கு வருவதற்கு முன்பே பாரதிக்கும் அவருக்கும் நெருங்கிய தொடர்பு இருந்து வந்தது. அங்கிருந்து வந்த பாரத மாதாவின் உருவத்தைப் போன்று புதுவையில் உள்ள குயவர் பாளையத்தில் மண்பொம்மைகள் பாரதியின் ஆணைப்படி செய்யப்பட்டன. இவற்றினுள்ளே பிரெஞ்சு நாட்டுக் கைத்துப்பாக்கிகளை வைத்துச் சென்னை முதலிய

இடங்களில் உள்ள புரட்சி வீரர்களுக்குக் கொண்டு சென்று அளித்த துணிச்சல் மிக்கவர் பாவேந்தர். இந்தச் செய்தியினைக் குடும்ப விளக்கில் முதியவர் தம் பேரர்களுக்குச் சொல்லும் பழங்கால நினைவுகளின் மூலமாகப் புலப்படுத்துகிறார்.

பாப்புனைவார் ஓர்நாளில் பாவைபல தந்து சென்னை
போய்ப்புலவர்க் கீயஎனைப் போக்கினார்

பாரதமாதாவின் உருவச்சிலையைச் சென்னைக்கு எடுத்துச் சென்றதையே இந்நிகழ்ச்சி மறைமுகமாகச் சுட்டுகிறது.

### மாடசாமிக்கு உதவி:

ஆஷ் கொலை வழக்கில் தேடப்பட்ட புரட்சி இயக்கத்தைச் சார்ந்த மாடசாமிக்குப் பாவேந்தர், புகலிடம் அளித்தார்: அவர் இந்தோ சீனாவின் தலைநகராகிய சைகோனுக்குத் தப்பிச் செல்ல உதவினார்: ஆங்கிலேயரின் கண்ணில் படாமல்நள்ளிரவில் நடுக்கடலில் கட்டு மரத்தைச் செலுத்திக் காத்திருந்தார்; அவரைக் கப்பலேற்றி வழியனுப்பிவிட்டு இல்லம் திரும்பினார். இந்நிகழ்ச்சியினை

ஆரும் அறியாமல்
அன்பான நண்பரை நான்
சாரும் கடல்தாண்டிச்
சைகோனில் - சேரும் வண்ணம்
செய்ய ஒரு கட்டுமரம்
சென்றேறி னேன் கப்பல்
நட்ட நடுக்கடலில்
ஒன்றரை நாள் - நான் கழித்தே
எட்டுமணி இரவில்
என்வீட்டைக் கிட்டினேன்

என்று குடும்ப விளக்கில் கூறுகிறார்

### பாரதி, அரவிந்தர், மாடசாமிக்கு உதவி செய்தல்:

மாடசாமிக்கு உதவி செய்ததைப் போன்றே வன்முறைக்கு இலக்காகி வருந்திய அரவிந்தருக்கும், பாரதிக்கும் பல்வகையான உதவிகளைச் செய்தார்; அதனால் பல இன்னல்களுக்கு ஆளானார் பாரதிதாசன்.

திலகர் செய்த உரிமைக் கிளர்ச்சியால்
கொலைமுதற் பற்பல குற்றம் சுமந்த
மாசிலா மனத்து மாட சாமியும்
அன்புறு பாரதி அரவிந்தர் முதல்
வன்முறை யுடையவரால் வருந்துவார்க் குதவியும்
பன்முறை புதுவையில் செத்துப் பிழைத்தேன்

என பாரதிதாசன் 'கவிஞரும் காதலும்' என்னும் நூலுக்கு வழங்கிய வாழ்த்துரையில் குறிப்பிட்டுள்ளார்.

### கதர் இயக்கத்தில் நாட்டம் :

இந்திய விடுதலை வரலாற்றில் ஒத்துழையாமை இயக்கம் தோன்றிய காலகட்டத்தில் அந்நியரின் பொருட்கள் புறக்கணிக்கப்பட்டன. காந்தியடிகள் உள்நாட்டில் நெய்யப்பட்ட ஆடைகளையே அணிய வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார். கவிஞர் பெருமானும் காந்தியத்தைக் கடைப்பிடித்துக் கதர் உடுத்தி வாழ்ந்தார். தம்முடைய கையால் நூற்ற நூலிலிருந்தே அரைஞாண் கயிற்றைத் திரித்துத் தம்முடைய தலைமகளுக்கு அணிவித்தார். தம்முடைய துணைவியாரையும் கதர் உடுக்கச் செய்தார். தம்முடைய உயர் அதிகாரி நடத்திய கூட்டத்திற்கும், மற்றவர்கள் கூறியதைப் பொருட்படுத்தாது கதர் ஆடை அணிந்து சென்றார். இவ்வாறு கதர் இயக்கத்தின்பால் அவர் கொண்டிருந்த ஈடுபாட்டையும் கதரின் சிறப்பினையும் அவரது கதர்ப் பாட்டு புலப்படுத்தும்.

### தேச சேவகனின் சுதந்திரப் பாடல்கள்:

*1921-25* காலகட்டத்தில் சைகோன் சின்னையா என்பவரால் புதுவையில் நடத்தப்பட்ட தேசசேவகன் இதழில் தேசிய விடுதலைப் போராட்டப் பாடல்கள் பலவற்றை எழுதினார். தெய்வீகத் தாய்நாடு, தொண்டரைச் சேர்த்தல், சக்திக்கு விண்ணப்பம், பாரத தேவியிடம் குடியர் தம் தெளிவு கூறல், பாரத சமூக மன்றம் (காங்கிரஸ்) சொல்லுகிறது, பாரததேவி தனது மாணவர்களுக்குக் கூறுவது போன்ற பல பாடல்கள் எழுதப்பட்டன.

விடுதலைப் போராட்ட காலத்தில் நாட்டில் அமைக்கப்பட்ட தொண்டர் படையில் சேரும்படியாக

> சேர்வீர் தொண்டர் படைக்கெல்லோரும் - அரைநொடியில் (சே)
> பாரீர் நமக்கு வந்த கேடு! பொறுக்கவில்லை
> வாரீர் இதனை அடியொடு கல்ல எம்மோடு

என்று அழைப்பு விடுக்கிறார். 'பாரததேவி தனது மாணவர்களுக்குக் கூறுவது' என்ற தலைப்பில் தேசசேவகனில் வெளிவந்த பாடலில் பாரதமாதா தன்னுடைய பிள்ளைகளுக்கு,

> செந்தமிழாற் கம்பன்
> சிறந்தானா நேற்றிங்கு
> வந்தவரின் ஆங்கிலத்தில்
> இன்பம் வளர்த்தானா?

என்று வினவுவதாகக் காட்டி அருச்சுனன் போலவும், கண்ணன் போலவும் ஆக விரும்பினால் ஆங்கிலத்தை உம்முடைய சிந்தையிலிருந்து மாய்ப்பீர் என்று அறைகூவல் விடுக்கிறார் கவிஞர். இதனைப் போன்றே 'ஆத்மசக்தி' என்ற இதழிலும் பல தேசியப் பாடல்களைப் பாடியுள்ளார்.

### கதர் இராட்டினப் பாட்டு:

விடுதலை இயக்கத்துக்குத் துணைபுரிவதும், பாரதிதாசனின் தேசிய உணர்வினைப் புலப்படுத்துவதுமான கதர் இராட்டினப் பாட்டு *1930*ஆம் ஆண்டிலே காசிசு. லட்சுமணப்

பிரசாத்தால் வெளியிடப்பட்டது. இந்நூலின் முகவுரையை நோக்கும்போது ஒத்துழையாமையின் தத்துவங்களை விளக்கும் இருபது சிறுசிறு நூல்களைப் பாடியுள்ளமையை அறிய முடிகிறது. இதில் சிறுவர் சிறுமியர் தேசிய கீதம், தொண்டர் படைப்பாட்டு, கதர் இராட்டினப் பாட்டு என்ற மூன்று நூல்களே அறியப்படுகின்றன. ஜன்மபூமியின் சிறப்பு, காந்தியடிகளும் கதரும், சுதந்திரதேவியும் கதரும், தேசத்தாரின் பிரதான வேலை, இராட்டினச் சிறப்பு, அன்னைக்கு ஆடை வளர்க, பாரததேவி வாழ்த்து, ஆகிய தலைப்புகளில் கதர் இராட்டினப் பாட்டைப் பாடியுள்ளார்

ஏதமில் காந்தியடிகள் அறச்செயல்

வெல்லும் - வெல்லும் - வெல்லும்

கன்னலடா எங்கள் காந்தியடிகள் சொல்

கழறுகின்றேன் அதைக் கேளே - நீவிர்

கதரணிவீர் உங்கள் பகைவரின் வேரங்குத்

தூளே - தூளே - தூளே

இராட்டினத்தில் நூலிழைத்து - உடுத்த வேண்டும். இதன் மூலம் சுதந்திரத்தைப் பெற்றுவிடலாம் என்பது கவிஞரின் அசைக்க முடியாத நம்பிக்கை. இதனைச்

சின்ன இராட்டின நூ லிழைப்பாய் - அதில்

தீட்டின்றி நெய்த உடை உடுப்பாய் - வரும்

அந்நியர் நூலைத் தலைகவிழ்ப்பாய் அதற்

கப்புறம் என்னைக் கலந்திடுவாய்

என்ற பாவடிகள் இதனைப் புலப்படுத்தும்.

### சிறுவர், சிறுமியர் தேசிய கீதம்:

கதர் இராட்டினப் பாட்டின் முகப்பு அட்டையின் உட்பக்கத்தில் காணப்படும் குறிப்பிலிருந்து இந்நூலில் நல்ல வர்ண மெட்டுக்களில் அமைந்த தேசீயகீதங்கள், தேசிய விடுகவிகள், தேசியத் தாலாட்டுகள், தேசிய விளையாட்டுப் பாடல்கள், சிட்டுக்குருவிப் பாட்டு, நிலாப்பாட்டு, நாய்ப்பாட்டு, தேசிய கப்பல், தேசியக் கல்யாணப் பாட்டுகள் ஆகியவை கவிஞரால் பாடப் பெற்றிருப்பதை அறியமுடிகிறது.

### தொண்டர் படைப் பாட்டு:

தொண்டர் படைப்பாட்டு என்னும் நூலில் தாய்நாடு, தொண்டரின் எழுச்சி, தொண்டரைக் கூட்டுதல், வீரத்தோள், வீரத் தமிழர், மிதவாதியை எழுப்பல் முதலிய பல விடுதலை இயக்கப் பாடல்கள் பாரதிதாசனாரால் பாடப்பட்டிருப்பதை அறிய முடிகிறது.

### முருகனிடம் பாரதநாட்டின் விடுதலையை வேண்டல்:

பாரதிதாசனார் மயிலம் முருகனின் மீது பாடியுள்ள பாடல் மயிலம் ஸ்ரீ சுப்பிரமணியர் துதியமுது என்பதாகும். இப்பாடலிலும் முருகனிடத்துப் பாரத நாட்டின் விடுதலையைக் குறித்து வேண்டுகிறார்.

ஆழ்கடல் புவிமே லெமக்கினி
தான பாரத பூமியை நீ
அட்ட திக்கும் போற்றும் வண்ணம் ஆக்குவாய் - வானில்
எட்டவே உரிமைக்கொடி தூக்குவாய்

பாரதிதேவியை உலகமனைத்தும் போற்றும்படிச் செய்வாயாக என்று வேண்டுவதிலிருந்து அவரின் சுதந்திர தாகத்தை அறிய முடிகிறது.

### பாரதியின் மறைவு குறித்த பாடலில் சுதந்திர உணர்வு:

*1921*ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் மகாகவி பாரதி மறைந்தபோது அவரது மறைவு குறித்துப் பாவேந்தர் எழுதிய போது அந்நியருக்கு முன்னர் அடிமையாகி வாழ்கின்ற அவலநிலையை இனியும் ஆதரிக்க மாட்டோம்' என்றும், கவிதை உலகில் நீ கனவு கண்ட பாரத நாட்டின் விடுதலையை நாங்கள் கண்டே தீருவோம் என்றும் சபதம் செய்கிறார் பாரதிதாசன்.

இவ்வாறாக இந்திய விடுதலைப் போரில் தன்னை முழு மூச்சுடன் ஈடுபடுத்திக் கொண்ட பாரதிதாசனார் பாரதியின் மறைவிற்குப் பிறகு பல தேசியப் பாடல்களைப் பாடி மக்கள் மனத்தில் சுதந்திரப் பயிரை வளர்த்து வந்துள்ளமையை அறிய முடிகிறது. நூற்றாண்டு விழாக் காணும் இந்நாளிலே அவர் விடுதலைக்கு ஆற்றிய தொண்டினை நாம் மறவாது போற்றுவோமாக.

* *

# பருந்தியே....

க. பொ. இளம்வழுதி

பாரதியாம் பெருங்கோளில் முகிழ்த்து வந்த
பருந்தியே! பழமையெனும் முடவா தத்தின்
சூரணமே! சோர்ந்திருந்த தமிழர் கட்கு
சூடேற்றி பகுத்தறிவு பவனி வந்த
வாரணமே! வரிசையென தமிழன் னைக்கு
வைரமணிக் கவிபடைத்த புரட்சிப் பூவே!
ஈரமனம் பெற்றவனே! இந்நூற் றாண்டின்
ஈடில்லா பெருங்கவியே! இமயம் நீயே!

நிமிராத பெண்களுக்கு நீதி கேட்டு
நெருப்புவிழி திறந்தவனே! நீடு ழைத்தும்
உமியாகிக் கிடந்தவரின் உரிமைச் சங்கை
ஊதியிமை திறந்தவனே! சமயக் கூட்டின்
திமிரோடு நடைபோட்ட மதத்தின் முன்னே
தெளிவுத்தீ வைத்தவனே! சொற்கள் தந்த
தமிழாலே நீயுயர்ந்தாய், தமிழு முன்றன்
தனித்திறந்தா லுயர்ந்த தெனில் தவறுண் டாமோ!

பெரியாரின் சீர்திருத்தப் படையெ டுப்பில்
பீரங்கிப் படைத்தலைமை உனது பாக்கள்!
எரியாத தீக்குச்சிப் புலவர் முன்னே
இரவியென நின்றவன்நீ! குனிந்து நோக்கா
அரிமாநீ! ஆனாலும் அகந்தை கொள்ளா
அறிஞன்நீ! ஆலயத்துள் புழங்கு கின்ற
புரியாத மொழிக்கும்மேல் தமிழே என்று
பொருள்வாதம் செய்திட்ட புலவன் நீயே!

முண்டாசுக் கவிஞனுக்குப் பெருமை சேர்த்த
முத்தான மாணவன்நீ! உன்தாக் கத்தால்
கண்டான கவிபடைக்கும் ஆற்ற லாளர்
கணக்கின்றி தோன்றவழி செய்தாய் என்னே!
கொண்டாடும் நூற்றாண்டில் கொள்கை பற்றி
குவலயத்தில் வாழ்வதற்கே சூளேற் கின்றோம்,
அண்டாது பகையெம்மை, உன்பாப் பாடி
ஆனந்தக் கூத்தாடி வாழ்த்து வோமே!

* * *

# பாவேந்தர் ஒரு கலைச்செல்வம்

நகைச்சுவைச் செல்வன் டி. என். சிவதாணு

பாவேந்தர் பாரதிதாசனுக்கு நூற்றாண்டு விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது என்று கேள்விப்படும்போது மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். நான் மட்டும் அல்ல தமிழ்ச்சமுதாயமே மகிழ்ச்சியடையும் என்பதில் சந்தேகமே இல்லை. அது மட்டும் அல்ல பாவேந்தர் தோன்றிய புனித தமிழ் மண்ணில் பிறந்ததற்காக தமிழ்மகன் ஒவ்வொருவனும் பெருமைப் படவேண்டும்.

நாட்டுப்பற்று, மொழிப்பற்று, சமுதாயச் சீர்திருத்தம், தமிழ் மொழியின் தனிச் சிறப்பு, தமிழர்களின் நல்வாழ்வு, அவர்கள் வாழ்க்கையில் முன்னேற்றம் அடைவதற்கு வழிகள்; சுருங்கச் சொன்னால் அவரது கருத்துக்கள் எல்லாம் உலக சமுதாய வளர்ச்சிக்கு எடுத்துக் காட்டாக இருக்கின்றன என்பதில் ஐயமில்லை. கலைகளின்பால் பாவேந்தர் கொண்டுள்ள பற்று போற்றுதற்குரியது. இயற்கலை எண்ணத்தை எடுத்துச் சொல்கிறது; இசைக்கலை உள்ளத்தை உருக்குகிறது; நாடகக்கலை நடித்துக்காட்டி மக்களை நல்வழிப்படுத்த உபயோகப்படுகிறது.

கண்ணைச் செவியைக் கருத்தைக் கவர்ந்து
எண்ணரிய போதனைகள் ஈவதற்கு நண்ணுமிந்த
நாடகக்கலை யொத்த நற்கலாசார சாலையொன்று
நீடுலகில் உண்டோ நிகழ்த்து.

என்று கவிமணியவர்கள் கூறியதைப் போல நாடகக்கலை ஒரு சிறந்த பல்கலைக்கழகமென்று கருதியதால்

சிறுவயதில் பள்ளியில் நாடகத்தில் சேர்ந்தும்,
நறுந்தமிழை நன்றாய் பயின்றும் திறமையினைப்
பெற்றுயர்ந்த காரணத்தாற் பெட்பார் கவியரசன்
தற்புகழ்தீர் பாரதிதாசன்.

என்று கூறுகிறார் புதுவை கவிஞர் மு. மாணிக்கனார் அவர்கள். ஆகவே சிறு வயதிலிருந்தே நாடகத்தில் நடித்துத் தேர்ச்சி பெற்ற பாவேந்தர், நாடகக்லையின்பால் வைத்துள்ள ஆர்வம் மக்களுக்கு மிகமிக உபயோககரமாக இருந்து வந்திருக்கிறது என்று சொன்னால் மிகையாகாது.

நற்சரிதை நற்கவிதை நல் நடிப்பு
நாட்டினிலே நாடகத்தினில் அமைக்க வேண்டும்

என்றார்.

நாடகம் வெறும் பொழுதுபோக்கு என்று நினைத்து நாடகங்களை எப்படி வேண்டுமானாலும் நடத்தலாம் என்று சொல்பவர்களுக்கு நாடகம் ஒரு தலை சிறந்த கலை. நல்ல முறையில் மக்கள் நல்வாழ்வுக்காக அந்தத் தூய கலையைப் பயன்படுத்த வேண்டும் என்ற நல்லெண்ணம் படைத்தவர் பாவேந்தர். அதன் காரணமாக நாடகங்களை எழுதி வந்திருக்கிறார். அவருடைய கவிதைகளை ஊன்றிப் படிக்கும்போது நாடகச் சுவையை அறியமுடிகிறது. பில்ஹணீயம் என்ற வட மொழிக் கதையை நாடகமாக எழுதி அதற்குப் 'புரட்சிக் கவி' என்று பெயரை வைத்து அதை நாட்டு மக்களுக்கு அளித்து புரட்சிக் கவியானார்.

பேரன்பு கொண்டவரே பெரியோரே என்னை
பெற்ற தாய்மாரே இளஞ்சிங்கங்காள்
நீரோடை நிலங்கிழிக்க நெடுமரங்கள்
நிறைந்து பெருங்காடாகப் பெரு விலங்கு
நேரோடி வாழ்ந்திருக்க பருக்கைக் கல்லின்
நெடுங்குன்றில் பிலஞ்சேர் பாம்புக் கூட்டம்
போராடும் பாழ்நிலத்தை அந்த நாளில்
புதுக்கியவர் யார் அழகு நகருண்டாக்கி
................................................
கற்பிளந்து மலைபிளந்து கனிகள் வெட்டிக்
கருவியெல்லாம் செய்து தந்த கைதான் யார்கை?
பொற்றுகளைக் கடல் முத்தை மணிக் குலத்தை
போய் எடுக்க அடக்கிய மூச்செவரின் மூச்சு
................................................
பலியாகிக் கால்கைகள் உடல்கள் சிந்தும்
பச்சை ரத்தம் பரிமாறி இந்த நாட்டை
சரியாத வருவாயும் உடையதாகத்
தந்ததெவர்? அவரெல்லாம் இந்த நேரம்
எலியாக முயலாக இருக்கின்றார்கள்
ஏமாந்த காலத்தில் ஏற்றங் கொண்டோன்
புலிவேஷம் போடுகின்றான் பொதுமக்கட்குப்
புல்லளவும் மதிப் பேனும் தருகின்றானா?

என்று உழைப்பாளிகளையும், நாட்டு மக்களையும், மதிக்காமல் பொது நலமென்று சொல்லிச் சுயநலத்தை வளர்த்துக் கொண்டிருப்பவர்களுக்குச் சாட்டை அடி கொடுத்துப் புரட்சிக் கவியாகத் திகழ்கிறார்.

எல்லோர்க்கும் தேசம் எல்லோர்க்கும் உடைமை எல்லாம்
எல்லோர்க்கும் எல்லா உரிமைகளும் ஆகுகவே
எல்லோர்க்கும் கல்வி சுகாதாரம் வாய்ந்திடுக
எல்லோர்க்கும் நல்ல இதயம் பொருந்திடுக
வல்லோர்க்கும் மற்றுமுள்ள செல்வர்க்கும் நாட்டுடைய

வாய்ச்சரி, என்னும் மனப்பான்மை போயொழிக
வில்லார்க்கும் நல்ல நுதல் மாதர் எல்லோர்க்கும்
விடுதலையாம் என்றே மணிமுரசம் ஆர்ப்பீரே

இன்று நமது நாடு விடுதலையடைந்து அரை நூற்றாண்டை எட்டப் போகிறது. சோஷலிசம், ஜனநாயகம், எல்லோரும் சமம் என்று அரசியல்வாதிகளால் ஆர்ப்பரிக்கப்படுகிறது. ஆனால் சுதந்திர நாட்டில் அறுபது சத மக்கள் இன்றும் வறுமைக் கோட்டில் வாடுகிறார்கள். கல்வியும் சுகாதாரமும் வசதியுள்ளவர்களுக்கே சொந்தம். பொதுநலம் படைத்த நல்ல இதயம் படைத்தவர்களைக் காண்பது அரிதாக இருக்கிறது. ஜனநாயகம் என்ற பெயரால், பதவிக்காக மக்களைப் பகடைக்காய்களாக உபயோகப்படுத்த நினைப்பவர்களைக் காணமுடிகிறது. செல்வர்கள் மேன்மேலும் செல்வத்தைப் பெருக்க முனைகிறார்கள். ஒரு சுதந்திரநாடு எப்படியிருக்க வேண்டும் என்று "வீரத்தாய்" நாடகம் மூலமாக அன்றே சொல்லியிருக்கிறார். உண்மையான சுதந்திரத்தை விரும்பும் பாவேந்தர் நாட்டு மக்கள் ஒவ்வொரும் சிந்தித்துச் செயல்படவேண்டும் என்கிறார்.

வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று என்ற பொது
மொழியை போற்றுபவன் தமிழன் என்பதை
விருந்தினரை வரவேற்பான். தமிழன் அந்த
விருந்தினர்க்கு நலஞ்செய்வான் தமிழன் சாவா
மருந்தேனும் வந்தவர்கள் பசித் திருக்க
வாயிலிடான் தமிழன்

என்று தமிழ்க் குலத்தின் பெருமையை 'தமிழச்சியின் கத்தி' என்ற நாடகத்தில் எடுத்துரைக்கிறார். தனக்குள்ள திடமான நாட்டுப் பற்றையும் சுதந்திர நாட்டில் மக்கள் மகிழ்ச்சியுடன் ஒற்றுமையாய் வாழ வேண்டும் என்ற தன் எண்ணத்தையும்

திரு நாட்டின் மீதாணை இந்நாட்டின் கண்
மட்டற்ற மகிழ்ச்சியுடன் வாழுகின்ற
மக்கள் மேல் எனக்குள்ள அன்பின் ஆணை

என்று பாண்டியன் பரிசு நாடகத்தில் கூறுகிறார். ஆபாச நகைச்சுவையும், அர்த்தமற்ற சிரிப்புக் காட்சிகளையும் காட்டி அதுதான் சிறந்த நகைச்சுவை என்று எக்காளமிடும் இந்தக் காலத்தில் பாவேந்தர் எழுதிய 'கற்கண்டு' சிந்தித்துச் சிரிக்க வைக்கும் நகைச்சுவை நாடகம் ஆகும். நாட்டியக் கலைக்கு உயர்வு அளிக்கக் கூடிய 'நல்ல தீர்ப்பு' ஒரு நல்ல நாடகம்.

கொலையுலகம் கோணல் உலகமிகத் தாழ்ந்த
புலை உலகம் போக்கினேன் கலையுலகம் சென்றேன்

என்று கூறிய பாரதிதாசன் கலை உலகிற்கு எவ்வளவு சிறப்பைக் கொடுத்திருக்கிறார் என்று எண்ணிக் கலை உலகம் பெருமைப்படக் கடமைப்பட்டுள்ளது.

இன்று உலகில் நடைபெற்று வரும் அமைதியற்ற நிலைமையைப் போக்கி சமாதான நல்வாழ்வு பெற மக்கள் கலை உலகத்தை நன்கு பயன்படுத்த வேண்டும் என்று திடமாகச் சொல்லியிருக்கிறார். கவிச் செல்வமும், கருத்துச் செல்வமும் அத்துடன் கலைச் செல்வமும்

நிறைந்த கவி வேந்தர் பாரதிதாசனார் அவர்கள், தமிழ்ச் சமுதாயத்திற்கு, தமிழ் மொழிவளர்ச்சிக்கு விட்டுச் சென்ற கருத்துக்கள் இளைஞர்களிடையே நன்கு பரவி மக்களிடையே அவருடைய திருநாமம் என்றென்றும் நிலைத்திருக்க வழி செய்ய வேண்டும்.

வானுங் கடலும் மலையும் பரிதியும்
வானுயர் வெண்மதியும் வாழளவும் - ஞாலத்தில்
ஆழ் பாரதிதாசன் ஆக்குங் கவி நூல்கள்
வாழ்க வளமுடன் தான்

என்று வாழ்த்திய புதுவை மாணிக்கம் வழியில் நின்று பாவேந்தரை மறவாமல் இருப்போமாக.

* * *

# புரட்சிக்கனலில் பொதிகைப் புனல்

அ. மா. சாமி

பாவேந்தன் பாரதிதாசனைப் "புரட்சிக் கவிஞர்" என்று போற்றுவதுண்டு; புகழ் ஏற்றுவதுண்டு. அவர் பழமையைச் சாடினார். புதுமையை வரவேற்றுப் பாடினார். இதனால் புதுவைக் குயிலான புதுமைக் குயிலைப் "புரட்சிக் கவிஞர்" என்று உரக்க அழைத்தார்கள் மக்கள்.

பழமையைச் சுட்டெரிக்கும் வளமையான நெருப்பையே "புரட்சி" என்பார்கள்? "கண் மூடிப்பழக்கமெல்லாம் மண் மூடிப்போக" என்றார் அல்லவா, வள்ளலார்? பாவேந்தரும் தணலாக விளங்கியதை அவரது பாடல் வரிகளால் அறிய முடிகிறது. "கொலை வாளினை எடடா மிகு கொடியோர் செயல் அறவே", "வரிப்புலியே வெளியில்வா" என்பவை போன்ற வரிகளில் கவிஞரின் முழுமையான ஆவேசத்தை-புரட்சித் தணலின் பொரிபறக்கும் தீப்பிழம்பை நாம் உணர இயலும்.

ஆனால், புரட்சிக் கவிஞர் கனல் மட்டுமல்ல. அந்த நெருப்பு நெஞ்சத்துள் குளிர் புனலும் குடியிருந்தது. அந்தக் குளிர்ச்சியை அங்கங்கே அவர் நகைச்சுவையாகவும் நக்கலாகவும் வெளியிட்டிருக்கிறார்.

பட்டு மெத்தை தனிலே - மணமே
பரவும் பூக்களின் மேல்
தட்டினில் பட்சணங்கள்-அருந்திச்
சைவத்தை ஆரம்பித்தார்

என்ற வரிகளில், நகைச்சுவை-நக்கல் இரண்டையும் நாம் ஒரு சேரக் காணுகிறோம். இதனை "எள்ளல்" என்று இலக்கியத்துள் கொள்ளல் மரபு.

ஆனால், முழுமையான நகைச்சுவைக் காட்சி ஒன்றைக் கவிஞரின் "குடும்ப விளக்கு" காவியத்தில் காணமுடிகிறது. தனித்த-இனித்த நகைச்சுவைக் காட்சி, இது, இதில் எள்ளல் இல்லை, கிள்ளல் இல்லை.வாய் விட்டுச் சிரிக்கத்தக்க தூய்மையான நகைச்சுவை.

## குடும்பவிளக்கு:

"நல்ல குடும்பம் பல்கலைக் கழகம்" என்று கண்டவர்-கொண்டவர், பாவேந்தர். அதற்கு இலக்கியமாகத் தாமே "குடும்ப விளக்கு" என்ற குறுங்காவியத்தை நறுந்தேனாக அவரே நமக்குப் படைத்து நல்கினார்.

நமது குடும்பங்களில் உள்ள குத்துவிளக்குகளில் திரியிட ஐந்து முகம் இருக்கும். பாவேந்தரின் "குடும்ப விளக்கு" ஐந்து பகுதிகளைக் கொண்டதாக இருக்கிறது.

"ஒரு நாள் நிகழ்ச்சி" என்ற முதற்பகுதியின் முற்பகுதியில் நகைச்சுவை நற்பகுதி இடம் பெற்றுள்ளது.

குடும்ப விளக்கின் தலைவி, குழந்தைகளைப் பள்ளிக்கும், கொண்டவனைக் கடைக்கும் அனுப்பிவிட்டு, வீட்டு வேலைகளைப் பார்த்துக்கொண்டிருந்த வேளையில் மாட்டு வண்டி ஒன்று வீட்டு முன் வந்து நிற்பதைக் கண்டாள். கண்டதும்,

நாத்தியார் வீடு சென்ற
நன்மாமன், மாமி வந்தார்.
பார்த்தனள்; உளம் மகிழ்ந்தாள்
பறந்துபோய்த் தெருவில் நின்று
வாழ்த்திநல் வரவு கூறி
வணக்கத்தைக் கூறி, "என்றன்
நாத்தியார், தங்கள் பேரர்
நலந்தானா மாமி" என்றாள்.

வாசலில் வண்டிவந்து நின்றதும் பாசமிகு குடும்பத்தலைவி யார் வருவது என்று பார்வையைச் செலுத்துகிறாள். மாமன்-மாமி என்று தெரிந்ததும், தெருவுக்குப் பறந்து போய், வாழ்த்துக் கூறி, வணக்கம் சொல்லி, அவர்களை வரவேற்கிறாள். "நன் மாமன், மாமி" வந்தால் எந்தப் பெண்தான் பறந்து போய் வரவேற்கமாட்டாள்!

### கற்கண்டு மருமகள்:

வந்தவர்கள், வீசிய கையும் வெறுங்கையுமாகவா வந்தார்கள்? இல்லை; பின்னே? கவிஞரே கூறுகிறார்:-

வண்டிவிட்டு இறங்கி வந்த
மாமியும், மாம னும், கற்
கண்டுஒத்த மரும கட்குக்
கனியொத்த பதிலுங் கூறிக்
கொண்டுவந் திட்ட பண்டம்
குறையாமல் இறக்கச் சொன்னார்.
வண்டியில் இருந்தவற்றை இறக்கிடுகின்றாள், மங்கை

மாமியாரும், மருமகளும் பாம்பும், கீரியுமாக இருப்பார்கள் என்றுதான் நாம் கேள்விப் பட்டிருக்கிறோம். ஆனால், கவிஞர்கண்ட தலைவியோ "கற்கண்டு ஒத்த மருமகள்".

பழகப் பழகப் பாலும் புளிக்கும் என்பார்கள். கற்கண்டோ வாயிலிட்டுக் கரையக் கரைய இனிக்கக்கூடியது. அப்படிப்பட்ட மருமகள், அவள். எனவேதான், கற்கண்டு ஒத்த மருமகளின் சொல் கண்டு அவளுக்குப் பனியொத்த மொழியில் கனியொத்த பதில் கூறுகிறார்கள், மாமனும் மாமியும்.

### பட்டியல் :

அவர்கள் கூறியபடி. வண்டியில் இருந்த சாமான்களை மருமகள் இறக்கினாள். என்னென்ன சாமான்கள் என்று எண்ணுகிறீர்கள்?

நம்மால் நினைத்துக்கூடப்பார்க்க முடியாது; அவ்வளவு சாமான்கள் ! பாவேந்தர் நீண்ட பட்டியல் போட்டுக்காட்டுகிறார். அதைப் படிக்குமுன் நீங்கள் நெடிய மூச்சு ஒன்று எடுத்துக்கொள்ளுங்கள்: பட்டியல் அவ்வளவு நீளமானது. பாருங்களேன்-

கொஞ்சநாள் முன்வாங்கிட்ட
கும்பகோ ணத்துக் கூசா,
மஞ்சள், குங்குமம், கண்ணாடி,
மைவைத்த தகரப் பெட்டி,
செஞ்சாந்தின் சீசா, செம்பு,
வெற்றிலைச் சீவற் பெட்டி,
இஞ்சியின் மூட்டை ஒன்றே,
எலுமிச்சைச் சிறிய கோணி,
புதியஓர் தவலை நாலு
பொம்மைகள், இரும்புப் பெட்டி,
மிதியடிக் கட்டை, பிள்ளை
விளையாட மரச்சா மான்கள்,
எதற்கும்ஒன் றுக்கு இரண்டாய்
இருக்கட்டும் வீட்டில் என்று
குதிரினில் இருக்கும் நெல்லைக்
குத்திட மரக்குந் தாணி:
தலையணை, மெத்தைக் கட்டு,
சல்லடை, புதுமுறங்கள்,
எலிப்பொறி, தாழும் பாய்கள்,
இப்பக்கம் அகப்படாத
இலுப்பெண்ணெய், கொடுவாய்க் கத்தி
இட்டலி தட்டுக் குண்டான்,
கலப்பட மிலாநல் லெண்ணெய்,
கைத்தடி, செந்தாழம்பூ,
திருமணம் வந்தால் வேண்டும்
செம்மரத் தினில்முக்காலி,
ஒருகாசுக் கொன் று வீதம்
கிடைத்தபச் சரிசி மாங்காய்:
வரும்மாதம் பொங்கல் மாதம்
ஆதலால் விளக்கு மாறு,
பரிசாய்ச் சம்மந்தி தந்த
பாதாளச் சுரடு, தேங்காய்
மூலைக்கு வட்டம் போட்டு
முடித்தமேலுறையும், மற்றும்
மேலுக்கோர், சுருக்குப் பையும்,

விளங்கிடும் குடை, கறுப்புத்

தோலுக்குள் காயி தத்தில்

தூங்கும்மூக்குக்கண் ணாடி

அடேயப்பா! இத்தனை பொருட்களா? இவ்வளவு பொருட்களை ஒரு வண்டி எப்படிக் கொண்டது? கப்பல் அல்லவா வேண்டும்! இத்தனை பொருள் ஏற்றி, இவர்களும் எப்படி வண்டியில் ஏறிக்கொண்டார்கள்?

**அவைக்களம் :**

பட்டியலைப் பார்த்த நமக்கே இந்த ஐயப்பாடு வரத்தான் செய்யும். இத்தனை பொருட்களையும் நேரில் பார்த்த மருமகளுக்கு ஐயம் வராதா? வந்தது. அவள் கேட்டாள்-

இவையெல்லாம் வண்டிக்குள்ளே

இருந்தன என்றால் அந்த

அவைக்களம் தனிலே நீவிர்

எங்குதான் அமர்ந்திருந்தீர்

மருமகளுக்கு அது வண்டியாகத் தெரியவில்லை, ஓர் அவைக்களமாகத் தோன்றுகிறது! அவை என்பது மக்கள் கூடும் சபை அல்லவா? அது பாரவண்டிஅல்ல, கூடு வேய்ந்த பயண வண்டி. மனிதர்கள் அமர்ந்து பயணம் செய்யும் வண்டி, எனவே, அதை அவைக்களமாக்கிவிட்டார், கவிஞர்.

பயண வண்டியிலே இத்தனை பொருட்கள்! பயணிகள் எங்கே அமர்ந்திருந்தார்கள்? "சாமான்களைக் குறைத்துக் கொண்டு, உங்கள் பயணத்தை இனிமையாக்கிக் கொள்ளுங்கள்' என்று புகைவண்டிக்காரர்களும் விளம்பரம் செய்கிறார்களே! எனவேதான், மருமகள் "நீவிர் எங்குதான் அமர்ந்திருந்தீர்" என்று கேட்கிறாள். அவளே தொடர்ந்து

சுவைப்புளி அடைத்து வைத்த

தோண்டியின் உட்புறத்தில்

கவர்ந்துண்ணும் பூச்சிகட்கும்

கால்வைக்க இடமிராதே

என்கிறாள். இப்பொழுது அவளது வினா, வியப்பாக மாறுகிறது!

புளி விளைகிற காலத்தில் மொத்தமாக வாங்கி, கொட்டைநார் நீக்கி சுத்தப்படுத்தி, வெயிலில் உலர்த்தி, மண்பானையில் அடைத்து வைப்பது நமது பாட்டிமார் பழக்கம். பத்து கிலோ புளியைக்கூட ஒரு சிறிய பானைக்குள் திணித்துவிடுவார்கள். "புளி மூட்டை போலஅடைத்துக்கொண்டு போகிறான்!" என்று நாமே கூட சில நேரம் பேருந்துகளில் சொல்வதுண்டு அல்லவா? புளி போல, வண்டிக்குள் சாமான்கள் திணிக்கப்பட்டு இருந்தனவாம்! அதனால்தான், "கரப்பான் பூச்சி கால் வைக்கக்கூட இடமிராதே நீங்கள் எப்படி அமர்ந்திருந்தீர்கள்?" என்று மருமகள் வியப்புடன் வினவினாள்.

**குன்று மேல் குரங்கு :**

அதற்கு மாமியார் பதில் சொல்லுகிறாள்-

இவைகளின் உச்சி மீதில்

குன்று மேல் குரங்கு போல
என்றனைக் குந்த வைத்தார்:
என் தலைநிமிர, வண்டி
மூடிமேல் பொத்தலிட்டார்!

இந்த வரிகளைப் படிக்கும் பொழுதே நம்மை அறியாமலே சிரித்து விடுகிறோம்.

அந்த சாமான்கள் மீது குன்று மேல் குரங்கு போல என்றனைக் குந்தவைத்தார் என்கிறாள், மாமியார்.

வண்டிக்குள் இருந்த பொருட்கள் உறுதியாக ஒரு குன்று அளவு இருக்கும் என்பது பட்டியலைப் படித்தாலே தெரிகிறது! அந்தக் குன்று மீது குரங்கு போல மாமியார் அமர்ந்திருந்தாளாம்!

குன்று மீது அமர்ந்திருக்கும் ஒரு குரங்கை உங்கள் கற்பனைக் கண் முன் கொண்டு வந்து நோக்குங்கால் கால்களை வயிற்றுடன் சேர்த்தும், முதுகை வில் போல வளைத்தும் அந்தக் குரங்கு அமர்ந்திருப்பது உங்கள் மனக் கண்ணுக்குத் தெரிகிறதா? (மனமே ஒரு குரங்குதானே என்பது வேறு பொருள்!)

"கையது கொண்டு மெய்யது பொத்தி" என்று சத்தி முற்றப்புலவர் பாடினாரே, அது போல, கால், கைகளை மடக்கிக்கொண்டு, சாமான்கள் மீது அந்த அம்மையார் அமர்ந்திருக்கிறார். காலை நீட்டவும் இடமில்லை: கையை நீட்டவும் இடமில்லை.

அம்மையார் "அமர்ந்திருந்தார்" என்று சொல்வதே தவறு. "குந்தவைத்தார்" என்றுதான் அவரே கூறுகிறார். தரையில் கால்களை மட்டும் மடக்கி ஊன்றி, கைகளை மடக்கி மார்புடன் சேர்த்துக்கொண்டு, பிட்டி தரையில் படாமல் உட்காருவதைத்தான் "குந்துதல்" என்று கூறுவார்கள். அப்படிக் குந்தியிருப்போரை "ஏண்டா குரங்கு போல உட்கார்ந்திருக்கிறாய்?" என்று கூறுவது வழக்கம். எனவே, இந்த இடத்தில் "குன்று மேல் குரங்கு போல" என்ற உவமையைக் கவிஞர் கையாண்டு இருப்பது மிக அழகாக இருக்கிறது.

**சுவையான உவமைகள்:**

உவமை என்னும் தவலருங் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவர் இதயம்
நீப்பரு மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே

என்பது பழம்பாடல். யாப்பறி புலவர் மட்டுமல்ல; அந்த யாப்பினைப் படிப்போர் கூட மகிழ்ச்சி பூப்பார்கள்.

பாவேந்தரின் பாடல்களில் அருமையான-அழகான உவமைகளை நாம் கண்டு சுவைத்து உவக்க முடியும். "காக்கைக் கழுத்துப் போல் வல்லிருளும் கட்டவிழும்", "ஆதரவு காட்டாமல் ஐய எனை விடுத்தால், பாதரட்சை போலுன்றன் பாதம் தொடர்வதன்றி, வேறு கதியறியேன்" என்பவை போன்ற புதுமையான உவமைகளையும் புதுவைக் கவிஞரிடம் காண முடியும். பாவேந்தரின் அடியானான சுரதா (சுப்புரத்தினதாசன்) கூட "உவமைக் கவிஞர்" என்று உரைக்கப்படுவது இங்கு நினைவுகூரத்தக்கது.

"குடும்ப விளக்கு"க் காவியத்தின் தொடக்கத்திலேயே அழகான உவமைகளை அள்ளித் தெளிக்கிறார்; கவிஞர்.

. . . . " கேள்வியால் அகலும் மடமை போல்
நள்ளிரவு மெதுவாய் நடந்துகொண்டிருந்தது"

"தெளிவிலாக் கருக்கலில் ஒளிபடும் அவள் விழி
குளத்து நீரில் குதிக்கும் கெண்டைமீன்"

"சின்ன மூக்குத் திருகொடு தொங்கும்
பொன்னால் செய்த பொடிமுத்தைப்போல
துளி ஒளி விளக்கு" . . . . .

இவையெல்லாம் சுவைக்கத்தக்க உவமைகள். "குன்று மேல் குரங்கு போல", என்ற உவமையோ சிரித்து மகிழும்படியும் இருக்கிறது.

### கூரை மேல் ஓட்டை :

கால் நீட்ட இடமில்லை; கை நீட்ட இடமில்லை. குன்று மேல் குரங்கு போல் குந்தியிருந்தார் என்றால் . . . . .அது வெட்டவெளி அல்லவே. வில்வண்டி என்று சொல்லப்படும் கூண்டு வண்டி ஆயிற்றே. குன்று போல் குவிந்த சாமான்கள் மீது குரங்கு போலக் குந்திக்கொண்டார் என்றாலும், கூட்டில் தலை இடிக்குமே? நியாயமான கேள்விதான். இதற்குப் பதில்தான்

என் தலை நிமிர, வண்டி
மூடிமேல் பொத்தலிட்டார்!

வண்டியின் மேல் கூரை மீது ஓர் ஓட்டை போடப்பட்டதாம்! அந்த ஓட்டை வழியே மாமியார் தலையை நிமிர்த்திக் கொண்டாராம்! எப்படி இருக்கிறது கதை!

### ஊர் சிரித்தது :

ஒருவர் உட்காரவே வண்டிக்குள் இடமில்லை. குன்று மேல் குரங்கு போலக் குந்திக்கொள்ள வேண்டியிருந்தது. தலை நிமிர வண்டிக்கூரை மீது ஓட்டையும் போட வேண்டி வந்தது. ஆனால், வந்தவர்கள் இருவர் மாமன், மாமியார். மாமியார் வண்டிக்குள்; மாமனார் என்ன செய்தார்? மாமியாரே சொல்லுகிறார்.

உன் மாமன் நடந்து வந்தார்.
ஊரெல்லாம் சிரித்தது" என்றாள்.

படிக்கிற நமக்கே சிரிப்பு வருகிறது. ஊரெல்லாம் சிரித்தால் ஆச்சரியம் இல்லையே! வண்டிக் கூரையில் ஓட்டையிட்டு, அதன் வழியே ஒருவர் - அதுவும் ஒரு பெண் - தலையை நீட்டிக்கொண்டு வருவதைப் பார்த்தால் யார்தான் சிரிக்க மாட்டார்?

### மாமனார் சீற்றம் :

"ஊரெல்லாம் சிரித்தது" என்று மாமியார் சொன்னதும், பக்கத்தில் நின்ற மாமனாருக்குச் சுரீர் என்று கோபம் வந்துவிட்டது! "ஊர் சிரிக்கும்படி செய்துவிட்டார்" என்று ஒரு பெண் சொன்னால், எந்த ஆணுக்கும் கோபம் வரத்தானே செய்யும்?

ஊரெல்லாம் சிரிக்க வைத்தேன்
என்றாளே உன்றன் மாமி!
'யாரெல்லாம் சிரித்து விட்டார்'
என உன்றன் மாமியைக் கேள்

என்றார், மாமனார்: மேலும் அவர்,

ஊரே சிரித்தது என்றாளே: யார்
சிரித்தார் என்று நீயே கேள்

என்று மருகளிடம் அவர் சொல்லுகிறார். மருமகளின் பதிலை எதிர்பாராமல் அவரே தொடர்கிறார்-

பாரம்மா பழுத்த நல்ல
பச்சைவா ழைப்ப ழங்கள்!
நேரிலே இதனை யும்பார்
பசுமாட்டு நெய்யின் மொந்தை.
வண்டியில் எவ்விடத்தில்
வைப்பது? மேன்மை யான
பண்டத்தைப் காப்ப தற்குப்
பக்குவம் தெரிந்தி ருந்தால்
முண்டம்இப் படிச்சொல் வாளா?

மாமன்-மாமி கொண்டு வந்த பொருட்களின் பட்டியல் இங்கே நீளுகிறது. வாழைப் பழமும், பசு நெய்யும் அந்தப் பட்டியலில் சேருகின்றன.

முண்டம் :

ஒரு கையில் வாழைப் பழமும், இன்னொரு கையில் நெய்க்கலயமுமாக மாமனார் வண்டியின் பின்னேயே நடந்து வந்திருக்கிறார். வண்டியில் இடமில்லாததால் மட்டுமல்ல; வண்டிக்குள்ளிருந்த "குன்றின்" இடையில் பசுமையான வாழைப் பழத்தையும், பசுநெய் மொந்தையையும் வைத்தால் என்ன ஆகும்? ஆகவே, அவற்றைக் கையில் பிடித்துக் கொண்டு மாமனார் நடந்து வந்திருக்கிறார். இது மாமியாருக்குத் தெரியவில்லையே! எனவே, 'மேன்மையான பண்டத்தைக் காப்பதற்குப் பக்குவம் தெரிந்திருந்தால் முண்டம் இப்படிச் சொல்வாளா? என்று மனைவியை மாமனார் செல்லமாகக் கடிந்து கொள்ளுகிறார்.

"முண்டம் இப்படிச் சொல்வாளா?" என்ற வரியைப் படிக்கும் பொழுது நமக்கு முந்திக்கொண்டு வருகிறது, சிரிப்பு.

தலையற்ற உடலை "முண்டம்" என்போம். தலையேயில்லாத பொழுது மூளை எப்படியிருக்கும்? எனவே, அறிவிலாரை "முண்டம்" என்று மொழியும் வழக்கம் உண்டாயிற்று. அவ்வழக்குப்படி, மேன்மையான பண்டத்தைக் காப்பதற்குப் பக்குவம் தெரிந்திராத தன் மனைவியை "முண்டம்" என்கிறார் மாமனார்.

இது வசையல்ல; மனைவிமீது அவர் வைத்திருக்கும் வாஞ்சையையே காட்டுகிறது. "வாடி, கழுதை" என்று எத்தனைபேர் மனைவியை ஆசையுடன் அழைக்கிறார்கள்!

பாவேந்தரின் "குடும்பவிளக்கு" முழுவதும் மணியான கருத்துக்கள் ஒன்பான் மணியாக ஒளிவிடுகின்றன என்றாலும், இந்தக் காட்சியில்தான் நாம் வாய்விட்டுச் சிரித்து மகிழக்கூடிய நகைச்சுவையைக் காணுகிறோம். சுவையில் சிறந்தது நகைச்சுவையன்றோ!

* * *



கிளியும் விழிக்க வில்லை
கிட்ட எவரு மில்லை
உள்ளத்தில் அமைதி இல்லை
உறவும் அழைக்க வில்லை
துளிஅன்பு என்மட்டில் பஞ்சமா?-என்
தோழன் தனக்கிரும்பு நெஞ்சமா

- பாரதிதாசன்.

ஓவியம் : சு. கௌ. வித்யா சங்கர் ஸ்தபதி

# இருண்ட வீடு

முனைவர் மா. நன்னன்

முன்னாள் தமிழக முதல்வர் கலைஞர் கருணாநிதியின் தலைமையிலான திராவிட முன்னேற்றக் கழக அரசு ஒப்பற்ற புதுமையாகப் பெண்களுக்குச் சம உரிமையை வழங்கியது. இதனைப் புதுமை என்று சொல்வதிலும் புரட்சி என்று சொல்வதே பொருத்தமாகும் தொல்பழம் காலத்திற்கு முன்னேற்ற ஆண், பெண் வேறுப்பாடுகள் ஓரளவு முளை விடத் தொடங்கியிருக்கின்றன. ஆனாலும் தமிழர் நாகரிகத்தைப் பொருத்தவரையில் சங்க காலம் வரையில் பெண்ணுரிமை தாராளமாக நிலவியதாகவே தெரிகிறது. ஆனால் தமிழகத்தில் இடைக் காலத்திலும், பிற்காலத்திலும் இந்தியாவின் பிற பகுதிகளில் எக்காலத்திலும் பெண்ணுரிமை மறுக்கப்பட்டு வந்திருக்கிறது. பெண்ணுக்குக் கல்வி கூடாது. அவளுக்கு வேதம் படிக்கவோ, வேள்வி செய்யவோ உரிமையில்லை. பெண் வீடுபேற்றிற்கு உரியவள் ஆகாள். சுருங்கச் சொன்னால் பெண் எந்நிலையிலும் தன்னுரிமையுடன் வாழ அனுமதிக்கப்படாதவள் என்றுதான் பிற நாகரிகங்கள் கூறி வந்தன. இளமையில் தந்தைக்கும், மணமான பின் கணவனுக்கும், கணவனுக்குப் பின் மகனுக்கும் அடங்கி அவர்கள் பாதுகாப்பில் வாழ வேண்டியவளே பெண் என்னும் கருத்தும், இந்தியப் பெருநாட்டில் செழித்திருந்தது. எனவே, அந்நாகரிகங்களின் தாக்குதலிலிருந்து தமிழ் நாகரிகத்தைக் காப்பாற்ற வேண்டிய கடப்பாடு தமிழ்ப் புலவர்களுக்கு ஏற்பட்டது. அச்சாயலைச் சங்க இலக்கியங்களிலும், திருக்குறளிலும் பரவலாகக் காண முடிகிறது. அதன் தொடர்ச்சியாகத்தான் பாரதியும், புரட்சிக்கவிஞர் பாரதிதாசனும் பெண்ணுரிமை காக்கப் போராடினர்.

பாரதிதாசன், தந்தை பெரியாரவர்களினுடைய புரட்சிக் கோட்பாட்டினையும், பகுத்தறிவு நெறியையும், தன்மானக் கொள்கையையும் முழுவதுமாக ஏற்றுக்கொண்டு இலக்கியம் படைத்தவராதலால் அவரின் படைப்புகள் இன்று வரையில் நிகரற்றனவாகவே விளங்குகின்றன. குடும்ப ஆட்சி பெண்ணுக்கு உரியது . அவளால்தான் குடி சிறக்கும் என்னும் கொள்கையை அடிப்படையாக வைத்துப் புரட்சிக் கவிஞர் அவ்வகமுடையாளின்-இல்லத்தரசியின் ஏற்றத்தைத் தம் படைப்புகளில் பொதுவாகக் கூறியிருந்தாலும் சிறப்பாக அதனைத் தம் குடும்ப விளக்கிலும், இருண்ட வீட்டிலும் எடுத்து இயம்புகிறார். குடும்ப விளக்கில் உடன்பாட்டுமுகத்தால் பெண் இனத்தின் ஏற்றம் பாடும் அப்பெரும் புலவன் இருண்ட வீட்டில் அதனையே எதிர்மறை-முகத்தால் விளக்கி வற்புறுத்துகிறார். அதை ஒரு கோணத்தில் நோக்கி உணர்வதே இச்சிறு கட்டுரையின் நோக்கமாகும்.

பொதுவாகவே கல்வியில்லா வீட்டில் இருள் சூழும் என்றாலும், அவ்வீடு இருண்ட வீடாக மட்டுமேயன்றி, மருண்டு மாயும் வீடாகவும் ஆகும் என்பதை இருண்ட வீடு நமக்கு எடுத்து இயம்பக் காணலாம். குடும்பத் தலைவிக்குக் கல்வி இல்லாவிட்டால் அவளுக்குப் பொது அறிவும், பிற அறிவும் இல்லாமையோடு இயற்கை அறிவும் மழுங்கிப் பாழ் செய்யும்.

பொதுவாகப் பெண்ணியலில் காணப்படும் ஒழுங்கு, சீர்மை போன்றனவும் அவிந்து போய்விடும். கல்வியில்லாத பெண்ணின் பொறுப்பில் உள்ள குடும்பத்தில் இரவு, பகல் என்றில்லாமல் எந்நேரமும் உறக்கமும் அதன் சார்புமே ஆட்சி செய்யும். அங்கு மூட நம்பிக்கைகளும், குருட்டுப் பழக்கங்களும் பேதமையோடு கைகோர்த்துக்கொண்டு களிநடம் புரியும். பொல்லாங்கை அறிந்தாலும், தீமையை உணர்ந்தாலும் அவற்றிலிருந்து தன்னையோ, தன் குடும்பத்தையோ காக்க முனையும் முனைப்பைக் கூடக் கருகச் செய்துவிடும். அக்குடும்பத்தில் துயில் எழுதல், உறங்குதல் போன்றவற்றிற்கு உரிய நேரங்களும் தலைகீழாகிவிடும் உணவு, குழந்தை வளர்ப்பு, வரவு செலவு, மேற்பார்வை, குடும்ப நிர்வாகம், காவல், பகுத்தறிவு, பொறுப்புணர்ச்சி, ஊக்கம், விழிப்புணர்ச்சி, பொறுமை போன்றன யாவும் எலும்பு கழற்றப்பட்ட உடல்கள் போல் செயலற்றுக் கிடக்கும்.

இத்தகைய இலக்கணம் வாய்ந்த ஒரு குடும்பத்தைப் புரட்சிக் கவிஞர் நமக்கு இருண்ட வீட்டின் வாயிலாக அறிமுகப்படுத்துகிறார். குடும்ப விளக்கின் முதல் பகுதியைப் போலவே இங்கும் ஒருநாள் வாழ்க்கை எடுத்துக்காட்டி விளக்கப்படுகிறது. இப்படைப்பில் வரும் கதை மாந்தர் யாரும் இயற்பெயர் இல்லாமல் குடும்பத்தலைவி, தலைவர், மூத்தவன், குழந்தை, மைத்துனர், கணக்கர் என்றே குறிப்பிடப்படுகின்றனர். வேலைக்காரி, கடிதம் எழுதியவர் ஆகிய ஓரிரு மாந்தர் மட்டும் பெயர் சொல்லி சுட்டப்படுகிறார்கள்.

இருட்டு வீட்டின் குருட்டு மாந்தரை அறிமுகம் செய்ய அவரின் ஒருநாள் வாழ்க்கையை எடுத்துக்காட்டிக் கல்வி, அறிவு போன்றவற்றை வற்புறுத்தும் கவிஞர் அந்நூலில் ஏழு இடங்களில் மணியைக் குறிப்பிட்டு அந்நேரத்தில் அக்குடும்பம் எப்படியிருந்தது என்பதை எடுத்துக் காட்டுவதன் மூலம் அக்குடும்பத்தினரின் இருட்டுத் தன்மையை எடுத்து இயம்புகிறார். காலை 6.30, 8.30, 12.00 மாலை 7, இரவு 10, 12, 1 ஆகிய குறிப்பிட்ட ஏழு நேரங்களில் அக்குடும்பத்தின் நிலையை விளக்குகிறார். இடையில் மைத்துனர் தமது ஊரிலிருந்து வைகறை நான்கு மணிக்குப் புறப்பட்டதையும் இந்நிகழ்ச்சிகளுக்கு இடையில் ராகு கால நேரத்தையும் சுட்டிக் காட்டுகிறார். புரட்சிக் கவிஞர் காலத்தோடு இணைத்துக் காட்டும் காட்சிகளையும், அவற்றால் நாம் கொள்ளத்தகும் கருத்துக்களையும் அம்முறைப்படியே காணலாம்.

### முதற்காட்சி:

காலைக் கதிரவன் கீழ்வானில் எழுந்து கடலின் விளிம்பிலிருந்து பாய்ச்சிய ஒளி இருண்ட வீட்டின் சன்னலின் வழியாக உள் நுழைந்து அங்கே கட்டிலின் மேல் கடும் துயிலில் ஆழ்ந்திருக்கும் மங்கையை எழுப்பியும், அப்பெருமாட்டி விழியைத் திறந்து மீண்டும் உறக்கத்தில் ஆழ்ந்து விடுகிறாள். அவளைப் பொருத்தவரையில் காலை 6.30 மணி என்பது பின்னிரவுதான் போலும்.

### இரண்டாங்காட்சி :

தலைவி பல்லைச் சுரண்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் குடும்பத் தலைவனிடம் சென்று உட்காருகிறாள். அப்போது அண்டை வீட்டுக்காரன் தன் கடமைகளை எல்லாம் முடித்துக்கொண்டு குடையும், செருப்புமாய் வெளியில் செல்வதைக் கண்ட குடும்பத் தலைவன் தன் மனைவியிடம்

> பாரடி அவனை
>
> அதற்குள் வேலையனைத்தும் முடித்துக்
>
> கடைக்குச் செல்லும் கருத்தை

என்றான்.

அந்தக் காட்சியோ, கணவன் கருத்தோ இருட்டுத் தலைவிக்கு வெளிச்சம் தந்ததாகத் தெரியவில்லை.

விடியா மூஞ்சி விடியும் முன்பே
போனால் நீயும் போகவேண்டுமா?

என்று கூறித் தன் குருட்டுத் தன்மையை நிலைநாட்ட விரும்புகிறாளேயன்றி அந்நேரத்திலும் தான் நெடுநேரம் உறங்கிவிட்டதை உணர்ந்ததாகத் தெரியவில்லை. வருந்தும் தன் மூத்த மகனைப் பார்த்து அவன் பசிக்குப் புட்டைத் தின்னச் சொல்லி, விடிந்த பின் வேலைக்காரி வருவாள் அவள் வந்ததும் பாலைக் காய்ச்சித் தரச் சொல்கிறேன். நீ போகலாம் என்று அவனுக்கு ஆறுதல் கூறுகிறாள்.அப்போது மணி என்ன தெரியுமா? 8.30. இருண்ட வீட்டின் தலைவிக்குக் காலை 8.30 மணிக்குக் கூடப் பொழுது விடியவில்லை.

### மூன்றாங்காட்சி :

மூத்த பையன் வாடிய சருகுபோல் பாயில் சுருண்டு கிடக்கிறான். குடும்பத்தலைவர் எலும்பு முறிந்த புலி பாறையில் படுத்துக் கிடப்பது போல் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கிடக்கிறார். வாயில்லாப் பச்சைக் குழந்தை வயிற்று உப்பலால் வருந்தி உயிரை இழுக்க உடன்படாது கிடக்கிறது. வீட்டு நடையில் கணக்கன் நெடுந்தூக்கத்தில் ஆழ்ந்து இருக்கிறான். மற்றைய பணியாளர்கள் மூலையில் குந்தி மாலை நேரத்தின் வருகையை எதிர்பார்த்துக் காத்திருக்கிறார்கள். இப்போது நேரம் என்ன தெரியுமா? காலை 9.00 மணி. காலையிலேயே தூக்கமும், சோம்பலும் அங்கே ஆட்சி செய்கின்றன. குடும்ப நிருவாகம் இந்த அழகில் இருக்கிறது. காலையிலேயே வேலைக்காரர்கள் எல்லாம் வேலையில்லாமல் தூங்கிக்கொண்டும் எப்போது மாலை வரும், நாம் வீட்டிற்குப் போகலாம் என்று எண்ணிக்கொண்டும் இருக்கிறார்கள். குடும்பத் தலைவியோ, கல்லாமை இருளோடு மூட நம்பிக்கை இருளையும் சேர்த்துக் குருட்டுப் பையன் இருட்டறையில் இல்லாத கறுப்புப் பூனையைப் பிடிக்க முயல்வது போல் தன் கைக் குழந்தையின் வயிற்று நோயைத் தீர்க்க இருளன், வேப்பிலை, மாந்திரீகன் என்றவாறு எதை எதையோ எண்ணி மயக்க நிலையில் கிடக்கிறாள்.

### நான்காங் காட்சி :

அவ்வீட்டாரின் உள்ளங்கள் இருண்டு கிடக்கின்றனவே தவிர வீட்டில் வெளிச்சத்துக்குக் குறைவில்லை. பட்டப்பகல் பன்னிரண்டு மணிக்குக் கதிரவன் வெளிச்சமும், வெம்மையும், உச்ச நிலையில் இருக்கின்றன. அப்போது கிழட்டு எலிகள் கூடத் தம் சுற்றமும், நட்பும் புடை சூழ வீடு முழுதும் ஓடி, ஆடிக் கும்மாளம் போடுகின்றன. பூனை மொந்தையில் தலை நுழையாததால் அதைக் கீழே சாய்த்து அதிலிருந்து வெளிப்பட்ட தயிரைக் குடித்துக் கொண்டிருந்தது. வட்டிலில் கிடந்த சோற்றைக் காக்கைகள் கூடி உண்டு மகிழ்கின்றன. காற்று வீசும்பொழு-தெல்லாம் மோட்டு வளையில் இருந்த ஒட்டடை பூமாரி போல் பொழிகிறது. தரையில் கிடந்த ஊமைக் குப்பைகள் 'உம்' என்று மேல் எழும்புகின்றன. விழித்திருக்க வேண்டியவர்கள் உறங்கினால் உறங்கிக் கிடக்க வேண்டிய எலிகளுக்கும், பூனைகளுக்கும் கொண்டாட்டம் தானே. இக்காட்சி அந்த வீட்டின் துப்புரவு, பராமரிப்பு ஆகியவற்றைப் படம் பிடித்துக் காட்டக் காணலாம்.

### அய்ந்தாங்காட்சி :

விருந்தாளியாக வந்த குடும்பத் தலைவியின் அண்ணன் தன் அருமைத்தங்கை தனக்கு உணவு படைக்க வேண்டும் என்ற உணர்வேயில்லாமல் இருப்பதைப் பார்த்து உணவு விடுதிக்குச் சென்று உண்டுவிட்டு வருகிறான். பிறகு குறட்டை விட்டுத் தூங்குகிறான். வேலைக்காரர்கள் பாலைக்

மயக்கமுமாய்ச்சேற்றில் கிடக்கும் எருமைகள் போல் உணர்வற்று மயங்கிக் கிடக்கிறார்கள். காலங்கடந்து எழுவதனால் காலை உணவுக்கு வெளியிலிருந்து பிட்டு, வடை போன்றவற்றை விலைக்கு வாங்க வேண்டியிருக்கிறது. சமையலுக்கும் மற்றவற்றிற்கும் வேலைக்காரர்கள் இருந்தும் வெளியிலிருந்து காசு கொடுத்து உணவு வாங்க வேண்டிய நிலையும், வீட்டிற்கு வந்த விருந்தாளி மீண்டும் வெளியில் போய் உணவு விடுதியில் உண்டு வரவேண்டிய நிலையும் அங்கு நிலவுகின்றன.

அண்டை வீட்டுக்காரன் கடைக்குச் செல்வதைப் பார்த்த பிறகாவது அத்தலைவிக்குப் புத்தி வரவேண்டாமா? தனக்காக வராவிட்டாலும் தன் கணவன் அதைச் சுட்டிக் காட்டிய போதாவது வரவேண்டாமா? தன் குறையை உணர்ந்து கொள்ளாத காரணத்தினால் அதற்குச் சமாதானம் கற்பித்துக் கொள்கிற காரணத்தினால் அத்தலைவி என்றும் திருந்த முடியாதவளாகவே ஆகிவிடுகிறாள்.

அகமனம் உறங்காதிருந்தும், புற மனம் அவ்வீட்டாரை அடக்கி ஆள்கிறது போலும். கள்வன் ஒருவன் வீட்டிற்குள் புகுந்து திருடுகிறான் என்பதைத் தெருவில் கிடக்கும் நாய் தெரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் வீட்டிற்குள் இருக்கும் அக்குருடர்கள் மூவர்க்கும் அதைத் தெரிந்துகொள்ள முடிவதில்லை. இவர்கள் மடமைக்கும், அறியாமைக்கும், பிறகுறைகளுக்கும் எல்லாம் அமைதி கூறி அமைவோராயிற்றே, இவர்களாவது திருந்துவதாவது.

கணக்கர் என்றும், சமையல்காரர் என்றும் பல்வேறு பணியாளர்களை அமர்த்திக் கொண்டிருந்தும் அவர்களைச் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளாமையால் அக்குடும்பம் எவ்வளவு சீரழிகிறது. தாங்கள் உழைக்காவிட்டாலும், பணியாளர்களை உழைக்கவைக்க வேண்டும் என்னும் உணர்வோ, அதற்கு வேண்டிய திறனோ கூட அவர்களிடத்திலேயில்லை. அதனாற்றான் பணியாளர் காலையிலேயே மாலையை எதிர்நோக்கி உட்கார்ந்திருக்க வேண்டிய நிலை இருக்கிறது.

அக்குடும்பத்தினருக்குப் பகலும் இரவும் உறக்கமும், மயக்கமும், குருட்டுச் சிந்தனைகளுமே ஆருயிர் நண்பர்களாக அவர்களோடு இணை பிரியாது கூடி வாழ்கின்றன. அதனாற்றான் அக்குடும்பப் பண்ணையில் வேப்பிலை, மாந்திரீகர், ராகுகாலம், பல்லியின் சொல் போன்ற களைகள் தளராமல் வளர்கின்றன. அக்குடும்பத்தினர் நண்பகலில் சோம்பல் குட்டையில் சுருண்டு கிடக்கின்ற காரணத்தால்தான் இத்தனை வேலைக்காரர்கள் இருந்தாலும் அவ்வீட்டில் பட்டப்பகலிலேயே எலிகளும், பூனைகளும், எக்காளமும், கும்மாளமும் போட்டு வாழமுடிகிறது.

இருண்ட வீட்டின் உச்ச நிகழ்ச்சி என்று ஒன்றைச் சுட்ட வேண்டுமானால் அக்குடும்பத்தில் உள்ள எல்லாரும் விழித்திருக்கும்போது - ஏதோ நடக்கிறது என்னும் அய்யம் அவர்களது உணர்வில் எழுப்பப்பட்ட நிலையில் களவு நடப்பதைச் சுட்டலாம். மேலும் அவர்கள் விழித்தெழுந்து பொய்த் துப்பாக்கியைக் காட்டித் தலைவர் திருடனை அச்சுறுத்தும்போது, மூத்த பையன் அது பொய்த் துப்பாக்கிதானே என்னும் வினாவை எழுப்பிக் கள்வனின் அச்சத்தைப் போக்கிவிடுவதால் அக்கள்வன் அஞ்சாமல் பதறமால் நிதானமாக எல்லாப் பொருளையும் மூட்டை கட்டி எடுத்துக்கொண்டு இது தானே தெருப்பக்கம் போகும் வழி என்று வீட்டுக்காரர்களையே கேட்டுக்கொண்டு வெளியே போய் விடுகிறான். அது வரையில் அடங்கியிருந்த தலைவரின் வீரம் திருடன் தெருவைத் தாண்டிப் போய்விட்டான் என்பதைத் தெரிந்துகொண்ட பிறகு வெளிப்படுகிறது. குடும்பத்தலைவி, மூத்த பையன், பச்சைக்குழந்தை ஆகியவர்கள் அக்குடும்பத்தின் தன்னிகரில்லாத் தலைவனுக்கு முடி சூட்டித் தனிமை அரசு ஆள விட்டுவிட்டு மறைந்து போய்விடுகிறார்கள். கல்வியில்லா வீடு இருண்ட வீடு மட்டுமேயன்றி அது மருண்ட வீடு, அதனால் மாய்ந்த வீடு என்பனவற்றோடு மாந்தரையெல்லாம் மருட்டும் வீடாகவும் அமைந்திருப்பதைப் புரட்சிக் கவிஞர் எடுத்துக்காட்டி அதுவே நம்மைத் தெருட்டும் வீடாகவும் இருக்கும் வண்ணம் படைத்திருக்கிறார்.

* * *



காதல் அடைதல் உயிரியற்கை-அது
கட்டில் அகப்படும் தன்மையதோ?
- பாரதிதாசன்.

ஓவியம் : சீ. அரங்கநாதன்

# பாரதிதாசன் கதைப்பாட்டுக்களில் கருத்தியல் திறனாய்வு

முனைவர் சி. கனகசபாபதி

(1)

பொருளியல் அடித்தளத்தின் மீதுதான் பல வகையான கருத்தியல் மேற்கோப்புகள் (அரசியல், சட்டவியல், தத்துவவியல், அறவியல், கலையியல், இலக்கியவியல் போன்றன) உருவாகின்றன. பொருளியல் அடித்தளமே இந்த மேற்கோப்புகளைச் செயல்படுத்துகிறது. மேலும் கருத்தியல் மேற்கோப்புகளும் ஒன்றையொன்று சார்ந்தும் செயல்படுகின்றன. பொருளியல் அடித்தளத்தைச் சார்ந்து உருவாகும் சமுதாய அமைப்புக்கு ஏற்றபடி கருத்தியல் மேற்கோப்பு தோன்றுகிறது. இவ்வாறு விளக்கிக் கூறப்படும் மார்க்சிய அணுகுமுறையில், பாரதிதாசன் கதைப்பாட்டுக்களில் கருத்தியலைத் திறனாய்வது இந்தக் கட்டுரையின் நோக்கம்.

இருபதுக்களில் புதுச்சேரியில் இந்திய தேசிய இயக்கம் சார்ந்த போராட்டம் பாரதிதாசனைத் தூண்டியது. இதுவே பாரதிதாசனுடைய முதலாவது காலகட்டம். இது காலப்போக்கில் நீடிக்கவில்லை.

இதை அடுத்த நிலையில் பாரதிதாசன் தேசிய இயக்கத்தில் ஒரு வளர்ச்சிக் கட்டமாகத் தோன்றிய தேசிய இன எழுச்சி மலர்ந்து கொண்டிருந்த போது அதில் ஈடுபாடு கொண்டார். தேசிய இன எழுச்சி என்பது மொழி மாநில உணர்ச்சி நிலையில் உருவானதாகும்.

"இந்தியாவில் தேசிய இன நலன்களின் பொதுமைகள் உருவான நிகழ் முறையைப் பிரதிபலித்த தேசிய இன இயக்கங்கள் அதிகரித்ததன் தொடர்பாக முப்பதுக்களின் இறுதிவாக்கில் காங்கிரசின் உள்கட்சிக் கொள்கையில் வட்டார, பிரதேசப் போக்குகள் தீவிரம் அடையத்தொடங்கின. இந்த இயக்கங்கள் ஆகஉயர்ந்த மட்டத்தை எட்டின, தேசியப் பிரதேசங்களான ஆந்திரத்திலும், கருநாடகத்திலும் இந்தப் பிரதேசங்களில் 'ஆந்திர மகாஜனசபா', 'கர்நாடக ஏகீகரண சமசுதே' என்ற முதலாளித்துவ நிறுவனங்கள் செயல் ஆற்றிவந்தன...." (இந்தியாவின் வரலாறு, முதல்பாகம் முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ).

இந்த மேற்கோளிலுள்ள வரலாற்று மதிப்பீட்டில் தமிழ்நாடு குறிக்கப்படவில்லை. தமிழ்நாட்டிலும் முப்பதுக்களில் தேசிய இயக்கத்துடன் தேசிய இன எழுச்சியும் வளர்ந்ததை அறியலாம். இத்தகைய எழுச்சியில் பாரதிதாசன் ஈடுபாடு கொண்டார். அப்போது நிலவிய தேசிய இன எழுச்சியின் போது, முதலாளித்துவச் சார்பான சமுதாயச் சீர்திருத்த இயக்கம் வளர்ந்தது. இதன் தாக்கத்தைப் புதுச்சேரியில் பாரதிதாசன் பெற்றார். இதுவே பாரதிதாசனுடைய இரண்டாவது காலகட்டம். இதைப் பாரதிதாசன் படைத்துள்ள முதல் கவிதைத் தொகுப்பில் காணலாம்.

இதற்குப் பிந்திய நிலையில் பாரதிதாசன் தேசிய இன எழுச்சியை விட்டுவிட்டு, மானிட இனக் கிளர்ச்சி (திராவிட இன இயக்கம்-ஆரிய இனத்துடன் எதிர்ப்பும் அதன் பெயரில் பிராமணசாதி எதிர்ப்பும்) என்பதில் சேர்ந்தார். இதில் தீவிரமாக இருந்தபோது சில கவிதைப் படைப்புக்களை ஆக்கினார். இதுதான் பாரதிதாசனுடைய மூன்றாவது காலகட்டம்.

இந்த மூன்றாவது காலகட்டம் நிகழ்ந்து கொண்டிருந்தபோதே பாரதிதாசன் இரண்டாவது காலகட்டமான தேசிய இன இயக்கத்துடன் தொடர்ந்த ஈடுபாடும் தொடர்பும் மாறாமல் இருந்தார் என்பது குறிப்பிடத் தக்கது. இதையே பாரதிதாசனுடைய நான்காவது காலகட்டம் என்று கூறலாம்.

*(2)*

இவ்வாறு நான்கு காலகட்டங்களையும் பிரித்துக் கொண்டு, ஒவ்வொன்றிலும் படைப்பான பாரதிதாசனுடைய கதைப்பாட்டுக்களில் கருத்தியலைக் கண்டுணர்ந்து பகுத்துப் பார்த்துத் திறனாய்ந்து இனி இங்கே மதிப்பிடலாம்.

பாரதிதாசன் ' தேச பக்தன்' இதழில் எழுதிய சில கவிதைகள், கதர் இராட்டினப் பாடல்கள், 'சுப்பிரமணியர் துதியமுது'வில் சில பாடல்கள் ஆகியவை அவருடைய முதல் காலகட்டத்தைச் சேர்ந்தவை. இவை அவருடைய தேசியக் கருத்தியல் (குறிப்பாக அரசியல் விடுதலை) அமைந்துள்ள பாங்கைக் காட்டும். ஆயினும் இவற்றில் கதைப்பாட்டு ஒன்றுகூட இடம்பெறவில்லை.

பாரதிதாசனின் இரண்டாவது கால கட்டத்துக் கருத்தியல் போக்கைச் 'சஞ்சீவி பர்வதத்தின் சாரலி'ல் பார்க்கலாம். அதிலுள்ள பின்வரும் பகுதி கருத்தியல் திறனாய்வுக்கு உரியது:

> வாழ்கின்றார் முப்பத்து முக்கோடி மக்கள் என்றால்
> சூழ்கின்ற பேதமும் அந்தத் தொகையிருக்கும்.
> . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
> பேதம் வளர்க்கப் பெரும்பெரும் புராணங்கள்
> சாதிச் சண்டை வளர்க்கத் தக்க இதிகாசங்கள்
> காட்டிச் சமூகத்தின் கண்ண வித்துத் தாமுண்ணக்
> கொட்டி அளக்கும் குருக்கள் கணக்கற்றார்.
> . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
> சிந்தனா சக்தி சிறிதுமின்றி மக்களுக்குத்
> தந்தோள் உழைப்பிலே நம்பிக்கை தானுமின்றி
> ஊறும் பகுத்தறிவை இல்லா தொழித்துவிட்டுச்
> சாரமற்ற சக்கையாய்ச் சத்துடம்பைக் குன்றவைத்துப்
> பொற்புள்ள மாந்தர்களைக் கல்லாக்கியே அந்தக்
> கற்கள் கடவுள்களாய்க் காணப்படும் அங்கே
> இந்த நிலையிற் சுதந்திரப் போரெங்கே?
> கொந்தளிப்பில் நல்லதொரு கொள்கை முளைப்பதெங்கே?

இதில் கடைசியில் முடிந்திருக்கும் இரண்டு அடிகளில் முதல்அடி அரசியல் நோக்குள்ள (தேசியக் கருத்தியல்) கருத்தியலைச் சுட்டிக் காட்டுகிறது. 'சுதந்திரப் போரெங்கே?' என்ற வினா உடன்பாட்டு நிலையாகத் தெரியாதது போலிருக்கிறது. இந்த வினாவை எதிர்மறைக் கருத்தைக்

குறிப்பதாக எடுத்துக் கொள்ள முடியாது. இதிலிருந்து புலப்படுவது இந்தியத் தேசியக் கருத்தியல். இது இந்த அடிகளில் இரண்டாவது இடத்தில் அமைகிறது என்று இந்தக் கதைப் பாட்டை உற்றுநோக்கினால் தெரியவரும். கடைசி அடியில் வந்துள்ள 'கொள்கை' என்ற சொல், இவ்விடத்தில் கவிஞர் கருத்தியலைச் சிந்திக்கிறார் என்பதைப் புலப்படுத்துகிறது. சமுதாயத் தத்துவவியலான கருத்தியலே இதில் முதலிடத்தில் உணர்த்தப்பட்டிருப்பது தெரியவருகிறது. இதிலுள்ள சமுதாயத் தத்துவவியலான கருத்தியல் 'சாக்குருவி வேதாந்த தத்துவத்துக்கு' (எல்லாம் மாயை என்ற தத்துவத்துக்கு) எதிர்ப்பட்டது; பகுத்தறிவு என்ற கருத்தியலில் அமைந்திருப்பது. 'ஊறும் பகுத்தறிவை இல்லா தொழித்துவிட்டு' என்ற அடி இதைப் புலப்படுத்துகிறது.

மேலும் இந்த 'சாரல்' கதைப்பாட்டில் மக்களிடையே வேற்றுமைபாராத சமத்துவம் என்ற கருத்தியல் வெளிப்படக் காணலாம். 'சூழ்கின்ற பேதமும் அந்தத் தொகையிருக்கும்', பேதம் வளர்க்கப் பெரும்பெரும் புராணங்கள்' என்ற மேலே எடுத்துக்காட்டிய அடிகள் இதை வெளிப்படுத்துகின்றன.

மூட நம்பிக்கைக்கு எதிரிடையான பகுத்தறிவுக் கருத்தியல் இங்கிலாந்து நாட்டிலிருந்து கேட்பதாகக் கூறப்படுகிறது. பொன் அடைந்து ஒருவன் தான் மட்டும் செல்வனாக வாழ முற்படும் முதலாளித்துவக் கருத்தியல் அமெரிக்க நாட்டிலிருந்து ஒலிப்பதாகச் சொல்லப்படுகிறது. இவ்வாறு பிறநாட்டுத் தாக்கத்தில் கருத்தியல்கள் தமிழ்நாட்டில் ஏற்படுவதைச் 'சாரல்' காட்டுகிறது. இதனால் தேசிய இனக் கருத்தியலின் பிரதிபலிப்பை இதில் காண ஏதுவாகிறது. மேலும் பாரதிதாசனின் 'சாரல்' கதைப்பாட்டு சமுதாயத் தத்துவக் கருத்தியலை வெளிப்படுத்தி வரும்போதே, அதை அழகியல் கண்ணோட்டத்துடன் உணர்த்துவதையும் காணலாம்.

> மூடப்பழக்கம் முடிவற்ற கண்ணுறக்கம்
> ஓடுவதென்றோ? உயர்வதென்றோ? நானறியேன்.
> பாரடி மேற்றிசையில் சூரியன் பாய்கின்றான்.
> சார்ந்த ஒளிதான் தகத்தகா யக்காட்சி.
> மாலைப் பொழுதும் வடிவழகு காட்டுது பார்.
> சாலையிலோர் அன்னத்தைத் தன்பேடு தேடுது பார்."

இங்கே மூடப்பழக்கத்தின் மீது எதிர்ப்புக் கருத்தியல் என்பது பகுத்தறிவுக் கருத்தியலாகப் புலனாவதைக் காணலாம். மாலைக் கதிரவனின் ஒளி இந்தக் கருத்தியலைப் படிமச்சித்திரிப்பில் அழகியல் உணர்வுடன் வெளியிட்டுக் காட்ட அமைந்துள்ளது. சூரிய ஒளி என்பது மூடநம்பிக்கை என்ற அஞ்ஞான இருளை அகற்றும் 'அறிவொளி' என்ற குறியீட்டியல் பொருளைத் தரும் முறையில் படிமச்சித்திரிப்பாக இங்கே விளங்குகிறது.

பாரதிதாசன் கதைப்பாட்டுக்களில் கருத்தியலாக விளக்கம் பெறும் பகுதிகள் அழகியல் உணர்வுடன் இணைந்து படைக்கப்பட்டிருப்பதைக் காண்பது கருத்தியல் திறனாய்வில் விரிவாகப் பார்க்க உரியது. இவ்வாறு பாரதியின் 'பாஞ்சாலி சபதமி'ல் சூரியன் மாலையில் மறைவது குறித்த காட்சி, படிமச் சித்திரிப்பாக 'மாற்றம்' என்ற குறியீட்டியல் பொருளைத் தரும் முறையில் படைப்பாகியிருப்பது கருத்தியல் ஒப்பீட்டுத் திறனாய்வுக்கு உரியது.

காலத்தால் மாறாதவை கருத்தியல்கள் என்ற கண்ணோட்டம் ஒன்று; காலத்தால் மாறும் கருத்தியல்கள் என்ற கண்ணோட்டம் மற்றொன்று. பாரதிதாசன் இவ்விரண்டில் இரண்டாவது கண்ணோட்டம் கொண்ட கவிஞர். 'இராமாயணக் கதையில் சொல்லப்பட்டவை எல்லாம் - புராணிகமான இயற்கை கடந்த நிகழ்ச்சிகள் கூட - என்றைக்கும் நிகழக் கூடியவை - என்றைக்கும் மாறாதவை; எனவே அவற்றை ஏன்? எதற்கு? என்ற கேள்விகளை க் கேட்கக் கூடாது'- என்பது

பழமை சார்ந்த கருத்தியல் கண்ணோட்டம். ஆனால் இராமாயணக் கதையிலும் ஏன், எதற்கு என்ற கேள்விகளைக் கேட்கும் புதிய கருத்தியல் கண்ணோட்டம் கொண்டவராக இருக்கிறார் பாரதிதாசன் என்பது 'சாரல்' கதைப் பாட்டிலிருந்து புலப்படுகிறது. காலத் தொடர்புநிலை காணும் கருத்தியல் கண்ணோட்டத்தில் வரலாற்றுத் தொடர்புநிலை காணும் கருத்தியல் சார்ந்தவர் பாரதிதாசன் என்பதும் 'சாரல்' கதைப்பாட்டிலிருந்து தெரிகிறது. நம்பத் தகாதவெலாம் நம்பவைத்துத் தாங்கள் நலம் சம்பாதிக்கின்ற சரித்திரக்காரர்களால்' என்று 'சாரல்' கதைப்பாட்டில் வரும் இடம் இதை மெய்ப்பிக்கும் சான்று ஆகும்.

'சஞ்சீவி பர்வதத்தின் சாரலி'ல் புராணிக மூடநம்பிக்கையால் பலவீனப்பட்ட குப்பன் என்ற தனி மனிதன், தனது பகுத்தறிவின் ஆற்றலையும் உண்மையையும் அறிந்துகொள்ள ஏதுவாக அமைகிறது அதிலுள்ள மூலிகைக் கற்பனை. முப்பதுக்களின் காலகட்டத்தில் உருவாகிப் பரவி வந்த வானொலியும் திரைப்படமும் சார்ந்த அறிவியல் கற்பனையாகவே 'சாரல்' கதைப்பாட்டில் பாரதிதாசன் படைத்துள்ள மூலிகைக் கற்பனை இடம்பெறுகிறது.

பாரதிதாசனின் 'புரட்சிக் கவி'யில் ஒன்றுக்கு மேற்பட்ட கருத்தியல்கள் இடம் பெறுவதைக் கருத்தியல் திறனாய்வில் காணலாம் . சான்றாக, பாரதிதாசனின் 'புரட்சிக் கவி'யில் நால்வருண அமைப்பைச் சாரும் சமுதாயத் தத்துவக் கருத்தியல் முதன்மை பெற்றிருக்கிறது. 'புரட்சிக் கவி'யில் வரும் வேந்தன் தன்னை மேலான அரச வருணம் என்றும், தன் மகள் இளவரசி அமுதவல்லிக்குத் தமிழ்யாப்பு கற்பிக்க வந்து அவள்மீது கருத்தொருமித்த காதல் கொள்ளும் உதாரனைக் கீழான சூத்திர வருணம் என்றும் கருதி, அந்தக் கவிஞன் மீது குற்றம் சுமத்துவதாக அமைந்துள்ள கதைப்பகுதிதான் இக்கதைப்பாட்டின் கதைப்பின்னலில் தலைமை இடம் பெற்றுள்ளது. இதன் கதைப்பின்னலின் விடுப்புப் பகுதியில் தான் அரசியல் நோக்குள்ள கருத்தியல் (முடியாட்சிக்கு எதிரான குடியாட்சிக் கருத்தியல்) இடம் பெற்றிருக்கக் காணலாம்; இப்படி இடம் பெற்றிருப்பது துணை நிலையில் தான்.

மேலும் சட்டநோக்குள்ள கருத்தியல் மற்றொரு துணைநிலையிலும் 'புரட்சிக் கவி'யில் இடம் பெற்றிருக்கக் காணலாம். அரசன் ஒருவன் மட்டும் தானே தன் அதிகாரத்தால் வழக்கை விசாரணையில்லாமல் தீர்ப்பும் தண்டனையும் தருவது தகாது, இது நாட்டில் மக்கள் சட்டப்படி செல்லாது, நாட்டு மக்களே ஒரு வழக்கைத் தெரிந்து மக்கள் சட்டப்படி விசாரித்து அதற்குத் தக்க தீர்ப்பை வழங்க உரியவர்கள் என்று உதாரன் என்ற கவிஞன் இக்கதைப்பாட்டில் குரல் கொடுக்கிறான். உதாரன் பேச்சிலிருந்து தொழிலாளர் வாழ்க்கை நிலை பற்றித் தெரிய வரும்போது, இதில் சமதருமக் கருத்தியலும் புலப்படுவதை அறிய முடிகிறது.

இத்துடன் குறிப்பாக, 'புரட்சிக் கவி'யில் மூலக் கதையில் வரும் காசுமீரக் கவிஞன் பில்கணனைத் தமிழ்க் கவிஞனாகப் பாரதிதாசன் உருமாற்றியது, மொழி மாநிலச் சார்பான தேசிய இனக்கருத்தியலின் போக்கு என்று அறிந்துகொள்ள ஏதுவாகிறது.

*(3)*

இனி அடுத்து, பாரதிதாசனைக் கருத்தியல் திறனாய்வில் பார்க்கிறபோது, மூன்றாவது காலகட்டத்துக்கு வரலாம்.

'குறிஞ்சித்திட்டு' சாதி அமைப்பை வெளிப்படையாக விளக்குகிறது. ஆரியக் கொள்கை தான் சாதி அமைப்பை ஏற்படுத்தக் காரணம் என்று குறிப்பிடுகிறது. ஆரியச் சமயவாதிகள் தமிழக அரசான குறிஞ்சித் திட்டில் இந்து சமயமும் சடங்குகளும் வருண சாதி வழக்கங்களும் பரவச் செய்திட எல்லா முயற்சிகளையும் செய்கிறார்கள் என்று இந்தக் கதைப்பாட்டு காட்டுகிறது. இதனால் இது மனித இனப் பாகுபாடு சார்ந்த கருத்தியல் நிலை பெற்றது என்று தெரிகிறது.

'எதிர்பாராத முத்தம்' என்ற கதைப்பாட்டில் ஆரியர்களின் கொலை வேள்வியைப் பற்றிய கருத்து அமைந்திருக்கிறது. பொன்னைத் தானமாகப் பெறும் ஆரியரின் வழக்கம் சுட்டப் படுகிறது. இத்துடன் உயிர்க்கொலைக்கு இடம் கொடுக்காத சமயம் சைவம் என்று இதில் காட்டப்படுகிறது. கடைசியில் ஆரியர்கள் தமிழகத்து வாணிகர்களைப் பழிவாங்கினார்கள் என்று கதை முடிக்கப்படுகிறது. இதனால் 'எதிப்பாராத முத்தம்' மனித இனப்பாகுபாட்டுக் கருத்தியலின் அமைப்பில் உருவாகியிருப்பது தெரியவருகிறது.

இதே மூன்றாவது காலகட்டத்தில் 'கடல்மேற்குமிழிகளை'க் காணலாம். இந்தக் கதைப்பாட்டில் திறல் நாட்டில் அரச வருணத்தின் மேல்நிலையும், அதற்கடுத்த அந்தண வருணத்தின் மேல்நிலையும் அமையக் காரணம் ஆரியர் கொள்கை என்று காட்டப்படுகிறது. மனு நூலே இந்தக் கருத்தியலை விதித்ததாகச் சான்று தரப்படுகிறது.

மேலும் 'கடற்மேற் குமிழிகளி'ல் தொழிலாளர் வேலைநிறுத்தமும், சமத்துவக் கோட்பாடும், மக்கள் புரட்சி இயக்கமும் சார்ந்த புதுமையான கருத்தியல் போக்கும் இடம் பெறக் காணலாம். ஆனாலும் இதில் தலைமைக் கதைப்பின்னலில் வரும் ஆரிய திராவிட இன வேற்றுமையான கருத்தியலுடன் இந்தச் சமதருமக் கருத்தியலின் கலப்பு, பொருந்திய கருத்திணைவாகவோ, ஒன்றிய கட்டமைப்பாகவோ இடம்பெறவில்லை.

இந்த மூன்றாவது காலகட்டத்தை மேலும் விரிவாக்கிக் காணம்போது, மனித இனப்பாகுபாடு சார்ந்த கருத்தியல் போக்கு பாரதிதாசனிடம் மிகுதியும் இடம் பெறுவதையும், இத்துடன் தேசிய இனக் கருத்தியலும் ஒருசில படைப்புக்களில் தனித்தும் கலந்தும் வருவதையும் அறியமுடிகிறது.

*(4)*

'பாண்டியன் பரிசு' கருத்தியல் அமைப்பில் நான்காவது காலகட்டத்தைச் சார்ந்தது என்று மதிப்பிட உரியது. கருத்தியல் திறனாய்வில் ஆண்டுக் கணக்கைத் துல்லியமாகப் பிரிக்க முயலும் போது, முன்னும் பின்னுமாகச் சில ஆண்டுகளைப் பகுத்துக் கொள்ள வேண்டிய நிலை ஏற்படலாம்.

'பாண்டியன் பரிசு' கதைப் பாட்டில் பேழை காணாமல் போனது பற்றிய நிகழ்ச்சி ஆய்வுக்கு உரியது. பேழை காணாமல் போனது என்றால், தமிழர் பண்பாடு நடைமுறையில் இல்லாமல் மறைந்து போயிருக்கிறது என்றும், பேழையைத் தேடுதல் என்றால், தமிழர் பண்பாட்டை மீட்பில் நிலைநாட்டுதல் என்றும் குறிப்புப் பொருளாகும். பேழையை இந்தக் கதைப்பாட்டில் ஒரு கவிதைக் குறியீடாக உணர்ந்து கொள்ளலாம். பண்பாடு என்பதுதான் பேழை என்ற குறியீட்டின் குறிப்புப்பொருள். இவ்வாறு 'பாண்டியன் பரிசு'வில் மொழி மாநிலம் சார்ந்த தேசிய இனக்கருத்தியல் பேழை பற்றிய படிமக் கற்பனையில் விளங்குவதை அறியலாம்.

'பாண்டியன் பரிசு'வில் நரிக்கண்ணன் பூதம் பற்றிய மூடநம்பிக்கையை நாட்டு மக்களி-டையே பரப்புவதையும், மக்கள் அதை அறியாமையால் நம்பி அச்சப்படுவதையும் காணும்போது, சீர்திருத்தக் கருத்தியல் நோக்குடன் பாரதிதாசன் படைத்திருப்பது புலப்படுகிறது.

பாரதியின் 'பாஞ்சாலி சபதமி'ல் பாரதியின் கருத்தியலுக்கு ஏற்றபடி தொடர் உருவகம் அமைந்துள்ளது. இதுபோலவே பாரதிதாசனின் கருத்தியலுக்கு ஏற்றபடி 'பாண்டியன் பரிசு'வில் தொடர் உருவகம் பொருந்தியிருப்பதைக் காணலாம்.

'பாண்டியன் பரிசு'வில் கதிர்நாடு தாய் நாட்டைக் குறிப்பிடும் தொடர் உருவகம் என்றும், வேழ நாட்டைப் பகைநாடு என்றும், வேழவேந்தன் அந்நிய அரசன் என்றும், நரிக்கண்ணனை அந்நிய அரசனுக்குத் துணையாக இருப்பவன் - அதிகார பலம் வாய்ந்த மூட வழக்கமான வைதிகத்தைக் குறிக்கும் பாத்திரம் என்றும் தொடர் உருவகப் படுத்தலாம் என்றும் ஆய்ந்து அறியலாம். மனித இன வேற்றுமை பார்க்கிற ஆரிய - திராவிட இனப்பாகுபாட்டின் கருத்தியலுடன் நரிக்கண்ணன் பாத்திரமாக்கப்படவில்லை.

தொகுத்துக் கூறினால், துணைமை நிலையிலுள்ள தேசியக் கருத்தியலும், தேசியக் கருத்தியலுக்கு உடன்பட்ட நிலையில் தேசிய இனக் கருத்தியலும் பாரதிதாசன் கதைப்பாட்டுக்களில் அங்கங்கே சிறப்பாக இடம் பெறக் காணலாம். இவை இரண்டை விடவும், நிலப் பிரபுத்துவ எதிர்ப்பான நிலையில் சமுதாயத் தத்துவவியலான - பகுத்தறிவு சார்பான - கருத்தியல் பாரதிதாசன் கதைப்பாட்டுக்களில் முதன்மை இடத்தில் மிகுதியாக வந்துள்ளதைத் திறனாய்ந்து காணமுடிகிறது.

* * *

# மறுமலர்ச்சிப் பாதையில் பாவேந்தர்...

கு. வெ. கி. ஆசான்

பாவேந்தர் பாரதிதாசனாரின் படைப்புகளில் புதுமைக் கருத்துக்களையும் புரட்சிப் போக்கையும் காண்கிறோம். *1891*இல் பிறந்து *1964*இல் மறைந்தார் எனினும் அவர் இன்னும் வாழ்கிறார். ஏன் அவ்வாறு? அவருடைய பாக்களில் பொதிந்துள்ள எழில் நயம் எக்காலத்தும் மக்களை ஈர்க்கும் என்பது ஒரு புறம் இருக்க, சமுதாய மாற்றமைப்பையும் செம்மையையும் காணவிழைவோருக்கு அவருடைய எண்ணங்கள் இன்றும் வழிகாட்டுகின்றன. எழுச்சியூட்டு-கின்றன. புதியதோர் உலகம்செய்யப் பாதை சமைத்த மானுடப் பாவலருக்குச் சாவேது?

## முற்போக்கு :

மனிதவாழ்வு குறுகியது, மனிதஇனப் பயணம் நெடியது; மாறிவரும் கால இட வண்ணங்களுக்குத் தகப் புதுப்பிறவி எடுத்துப்பொலிவது மாந்த இயல்பு. புற உலகைப் பற்றிய அறிவும், அதற்குத் தக அதன் வளங்களை ஆளும் திறனும் வளர்கின்றன. அறிவும் திறனும் தரும் ஆக்கங்களைச் சமுதாயத்தார் அனைவரும் பெறுவதற்கான சமவாய்ப்புகள் இருக்குமாயின், மனித இனம் அமைதியும் இன்பமும் முன்னேற்றமும் காணும். சமனிய உரிமை நெறியையும் அமைப்பையும் ஆதரிப்போர், பொதுநல முற்போக்காளர்; அவற்றை எதிர்ப்போர் தன்னலம் அல்லது வகுப்புநலம் பேணும் பிற்போக்காளர். பாவேந்தரின் படைப்புகள் முன்னோக்கிய பார்வை கொண்டவை.

## சுவையும் பொருளும்:

இன்பமும் பயனும் தரவல்லதே சிறந்த இலக்கியம் ஆகும். இன்பமே பயன் என ஒரு வகையில் கூறலாம். ஆனால், பொருளற்ற இன்பநாட்டம் சிறுபிள்ளைத்தனமானது, பொறுப்பற்றது, ஆபத்தானது. எடுத்துக் காட்டாக, குழந்தைமுதல் கிழம்வரை பொருள் தெரியாமலேயே இசையின் இனிமையில் இன்பங்காணலாம். ஆனால் பொருள் தெரியாமலேயே இன்பங்காணும் தன்மையையே, மேல்வரிச் சட்டமாக அல்ல, நடைமுறைப் பழக்கமாகக்கூடக் கொள்வது மனிதனின் நலத்திற்கு உகந்ததல்ல. சிறுவர்கள், புரியாத வயதில், இசையின்பத்தோடு அமையலாம்; ஆனால் வளர்ந்தவர்களும் பொருளின் தன்மையைப் புரிந்துகொள்ளும் நாட்டமின்றி இசையின்பத்தோடு நிறைவடைவது கலையுணர்வின் வளர்ச்சிக்குத் துணைசெய்யாது. அதுபோன்றே, சொல்லாட்சி அணிநலன் முதலியன கவிதைக்கு அழகு சேர்க்கலாம். ஆனால் அவ்வழகே போதுமெனச்சொல்லி, கவிதையின் பொருள் அல்லது அஃது ஏந்தியுள்ள செய்தி எத்தன்மையது என்றும் எந்நோக்கினது என்றும் கவலைப்படாமை பொறுப்பற்றதாகும். இதனால் தனிமனிதரும் சமுதாயமும் மூளைச் சலவைக்கு உள்ளாகி, நாளடைவில் தாழ்வடைய ஏதுவாகும்.

## இடைக்காலத்தில் வீழ்ந்த வரலாறு :

தமிழகத்தின் இடைக்கால வரலாறு இந்த உண்மையை நமக்கு உணர்த்துகிறது. கிறித்துவிற்குப் பின் மூன்று நான்காம் நூற்றாண்டுகளில் மெல்ல முளைவிட்டு, ஆறு ஏழாம் நூற்றாண்டுகளில் நல்ல செல்வாக்குடன் வளர்ந்துவிட்ட பல்லவர் ஆட்சியில், வைதிக மத நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்த பண்பாட்டு மேலாதிக்கம் தொடங்கிற்று. பிற்காலச் சோழ பாண்டியர் காலத்திலும், விஜய நகர, நாயக்க, மராத்திய, நவாப்பு ஆட்சியிலும் நீடித்தது. விளைவு என்ன? இடைக் காலத்தில் உலகெங்கும் நடந்தது போலவே தமிழகத்திலும் மத நம்பிக்கை இயல்பான உரிமைச் சிந்தனையை முடமாக்கிற்று. மக்கள் மெய்ம்மையைப் புறக்கணித்துக் கற்பனை தரும் களிப்பில் மூழ்கினர். இதன் காரணமாக வேத இதிகாச புராணக் கதைமாந்தர்கள் கடவுளர் ஆயினர்: சமஸ்கிருதம் 'தேவ பாஷை' யாக உயர்த்தப்பட்டது; தமிழ் 'பைசாச பாஷை' யாகவும், 'நீச பாஷை' யாகவும் தாழ்த்தப்பட்டது. ஸ்மிருதி எனப்படும் வேத மந்திரங்களையும், ஸ்மிருதி எனப்படும் மனுதருமம் முதலிய சாத்திரங்களையும் அறிய முடிந்த 'பிராமணர்' சமுதாயத்தில் மேலிடத்தையும், அவற்றைப் பயிலத் தடைசெய்யப்பட்ட உழைப்பாளிகளான 'சூத்திர-பஞ்சமர்' கீழிடத்தையும் பெற்றனர். சனாதன வைதிக வருண-சாதி ஏற்பாடு இவ்வாறு தமிழையும் தமிழரையும் தாழ்த்திற்று. கல்லாமை, அறியாமை, தன்னம்பிக்கையின்மை, தன்மதிப்பின்மை, மூடநம்பிக்கை முதலிய கேடுகட்கு ஆட்பட்டு, பிணங்கி, பிரிந்து, கலகத்திற்குள்ளாகி அல்லற்படுவதும், வறுமையிலும் பிணியிலும் வாடுவதும் தமிழரின் பொதுவான கதியாயிற்று.

ஆங்கிலேயர் ஆட்சியில் அறிமுகப்படுத்தப்பட்ட புதியகல்வி நிருவாகமுறை, வாழ்க்கைநெறி, அமைப்புகள், வாய்ப்புகள், மதிப்பீடுகள் ஆகியன விழிப்புணர்வையும்உரிமைச் சிந்தனையையும் மனிதநேயச் சமுதாயப் பார்வையையும் மெய்ம்மை நாட்டத்தையும் ஏற்படுத்தின. அதன்பின்பே, வைதிகச் சனாதன மத நம்பிக்கை தளர்ந்தது. அதையொட்டி அமைந்த சமுதாயப் பண்பாட்டு ஆதிக்கம் தணிந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் முகிழ்த்த இவ்விழிப்புணர்வையும் மனிதநேயப் பார்வையையும் முன்னெடுத்துச் சென்ற இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற தமிழ்ப் பாவலராகப் பாரதிதாசனார் திகழ்கிறார். அவருடைய இப்பணியை அய்ரோப்பிய மறுமலர்ச்சியுடனும், அதையொட்டித் தொடர்ந்த வளர்ச்சிப் படிகளுடனும் ஒப்பிட்டுக் காண்பது சுவையும் பயனும் தருவதாகும்.

## அய்ரோப்பாவில் புதிய காலம்:

மறுமலர்ச்சி, (**Renaissance**) எனும் சொல்லின் பெயர்ப்பு. ஃபிரான்சு மூலத்தைக் கொண்ட அவ்வாங்கிலச் சொல்லின் நேர்பொருள் மறுபிறப்பு. தொடக்கத்தில் புதியனகற்றல் எனும் பொருளில் அது பயன்படுத்தப்பட்டது. இடைக்காலம் முழுதும், கி.பி. 5ஆம் நூற்றாண்டு முதல் 15ஆம் நூற்றாண்டு வரை, சுமார் ஆயிரம் ஆண்டுக்காலம், கிறித்துவ இறைநெறி நூல்கள், மற்றும் கிரேக்க அறிஞர் அரிஸ்டாடிலின் படைப்புகள் ஆகியனவற்றை ஒட்டிய சிந்தனைகளையே இறுதியான உண்மைகள் என உறுதியாக நம்பியிருந்த அய்ரோப்பியர்கள், கிறித்துவ ஊழிக்கு முற்பட்ட தொன்மையான கிரேக்க, இலத்தீன் நூல்களை மீண்டும் தீவிரமாகக் கற்பதில் ஆர்வம் காட்டினர். மதவழிப்பட்ட மறுவுலகை நோக்கிய நம்பிக்கையிலும் சடங்கு சம்பிரதாய நடப்புகளிலும் மையங்கொள்ளாமல், மனிதவாழ்வின் மெய்ம்மைகளைப் பற்றிய சிறந்த கற்பனைகளையும் கருத்துக்களையும் ஹோமர், சாக்ரடீஸ், பிளேடோ, அரிஸ்டாடில், யுரிபெடஸ், ஏஸ்கைலஸ், சோஃபகிள்ஸ், அரிஸ்டோபனஸ், ஹெரடோடஸ், துசிடைடஸ், டெமாக்ரிடஸ், ஷெராக்ளிடஸ், எபிகுரஸ் முதலியோரின் கிரேக்க நூல்களிலும், வெர்ஜில், ஹொரேஸ், லிவி முதலியோரின் லத்தீன் படைப்புகளிலும் கண்டனர். இதனால் மரபுவழிச் சமயத் தளையிலிருந்து சிந்தனை விடுபட்டது; பார்வை விரிந்தது; புதிய எண்ணம் பிறந்தது. இதையடுத்து, இப்போக்கின் இயல்பான நீட்டிப்பாக, எதைக் குறித்தும் வினாவெழுப்பும் துணிவும், திறனாய்வு நோக்கும்,

எதையும் உற்றுநோக்கி ஆய்ந்தறியும் விழைவும், புதியன படைக்கும் ஆவலும், மறுவுலகக் கவலையைவிட இவ்வுலக வாழ்வை வளப்படுத்த வேண்டும் என்ற எண்ணமும் எழுந்தன. கலையும் இலக்கியமும் புதிய உருவையும் உள்ளடக்கத்தையும் கொண்டு மிளிர்ந்தன. தாந்தே, பெட்ரார்க், பொகாக்கியோ போன்றோர், பண்டிதர் மொழியாகிய இலத்தீனை விடுத்து, பாமரரின் இத்தாலிய மொழியில் புதுமைகள் படைத்தனர். இதைப் போன்றே ஸ்பானிய மொழியில் சர்வாண்டஸ், ஃபிரான்சு மொழியில் ராபெலஸ், மோலியர், ரசீன், ஆங்கிலத்தில் சாசர், மார்லோ, ஷேக்ஸ்பியர், மில்டன் போன்றவர்கள் சிறந்த பாக்கள், நாடகங்கள், புதினங்கள் முதலியனவற்றைப் படைத்து, மக்களை மகிழ்வித்ததோடு, வாழ்க்கையைச் சமயச் சார்பற்ற புதிய கோணத்திலிருந்து பார்க்கப் பழக்கினர்.

### சமயச் சீர்திருத்தம்:

உரிமை எண்ணம் முகிழ்த்ததன் விளைவாகச் சமயத்துறையில் விழிப்பும், தனித்து முடிவெடுக்கும் நிலையும் தோன்றின. புரோகிதர், குருக்கள், மடாலயத்தலைவர் முதலியோரின் உபதேசம், விளக்கம், சட்டதிட்டம், விதிமுறை, நடப்பு முதலியன திறனாய்வுக்கு உள்ளாயின; அவர்களின் சொல்லைக் கண்மூடிப் பின்பற்றும் நிலைமாறியது. மேற்கு அய்ரோப்பா முழுவதும், இலத்தீன் மொழியில் எழுதப்பட்டிருந்த விவிலியத்திற்கு, மதகுருக்கள் தந்த விளக்கத்தை மட்டுமே இதுவரை மக்கள் அறிந்திருக்க முடிந்தது. ஆனால் இப்பொழுது, தாய் மொழியில் பெயர்க்கப்பட்ட விவிலியத்தின் படிகள், புதியனவாகக் கண்டு தோற்றுவிக்கப்பட்ட அச்சகங்களிலிருந்து பலரின் கைக்கு எட்டின. கிறித்துவ மதத்தலைவர் போப்பாண்டவரும், மதகுருக்களும் தந்த விளக்கங்களும், பின்பற்றிய சடங்குகளும் பரப்பிய கொள்கைகளும் மூலநூலுக்குப் பொருந்துகின்றனவாவெனப் பார்க்கத் தொடங்கினர். இங்கிலாந்தில் வைக்ளிஃப் பொஹிமியா (செகோஸ்லவேகியா)வில் ஜான் ஹஸ், இத்தாலியில் சவனரொலா, ஹாலந்து அறிஞர் எராஸ்மஸ், ஆக்ஸ்போர்டு அறிஞர் தாமஸ்மூர், ஜெர்மனியில் ரவ்ச்லின் முதலியவர்கள் இறைநூலின் (விவிலியத்தின்) மெய்ப்பொருள் தேடலில் முன்னோடிகளாவர். இவர்களைத் தொடர்ந்து மார்டின் லூதர், ஸ்விங்ளி, கால்வின், ஜான் நாக்ஸ் போன்றவர்களின் தலைமையில் சமயச்சீர்திருத்தம் தோன்றிப் பரவியது. போப்பாண்டவரின் தலைமையை மறுத்த கிறித்துவ அமைப்புகள் தோன்றின. சமய நம்பிக்கைகளிலும் நடப்புகளிலும் மாறுதல்கள் ஏற்பட்டன; இவற்றால் சமயப் பூசல்களும் போர்களும் கொடுமைகளும் நிகழ்ந்தன. ஆயினும் நாளடைவில் சமயப்பொறையின் தேவையையும், சமயச் சார்பற்ற அரசுமுறையின் சிறப்பையும் மக்கள் ஏற்றனர்.

### அறிவியல் முன்னேற்றம் :

அறிவின் மலர்ச்சியால் சமயச் சீர்திருத்தம் ஏற்பட்டது போன்றே, பிற துறைகளிலும் முன்னேற்றம் கண்டனர். இங்கிலாந்து நாட்டின் ரோஜர் பேகன், ஃபிரான்சிஸ் பேகன், நியூடன், போலந்து நாட்டின் கோபர்னிகஸ், ஜெர்மனியின் கெப்ளர், இத்தாலியின் கலிலியோ ஆகியோர் அறிவியல் நெறிக்கான பொதுவான அடிப்படைகளை நிறுவியதுடன், இயற்பியல், வானியல் துறைகளில் மனிதனின் பார்வையைச் சரியான வழியில் விரிவடையச் செய்தனர்.

### புதிய நாடுகள், வழிகள்:

பர்தலோமியோடயஸ், கொலம்பஸ், வாஸ்கோடகாமா, மெகல்லன், அமெரிக்கோ வெஸ்புகி, கபாட், ஜேம்ஸ் குக் முதலியவர்களின் புவியியல் கண்டுபிடிப்புகளால் உலகின் பரப்பு, உண்மைத் தன்மை, அதுதரும் நிறைந்த வாய்ப்புகள் ஆகியவற்றை மேற்கு அய்ரோப்பிய நாடுகள் தெரியவந்தன.

### தேசிய நாடுகள்:

புவியியற் கண்டுபிடிப்புகளால் வாணிபவளர்ச்சியும் செல்வப் பெருக்கும் குடியேற்றங்களும் பேராதிக்கமும் ஏற்பட்டன. அவற்றிற்கு முன்பே, இலக்கிய வளர்ச்சியுடனும், பொது நலன்கள் மற்றும் மரபுகளின் அடிப்படையிலும், மொழி உணர்வின் வழியிலும் தேசிய நாடுகள் உருவாயின. இங்கிலாந்து, ஃபிரான்சு, ஸ்பெயின் ஆகியவை அவ்வாறு முதலில் தோன்றின.

### மக்களாட்சி, சமனியம் :

தேசிய நாடுகளில் தொடக்கத்தில் மன்னர்கள் வல்லாட்சி செய்தனர். நிலக்கிழார் (நிலப்பிரபுத்துவ) முறையில் சமுதாய ஏற்றத்தாழ்வுகள் நிலவின. தொடர்ந்த போராட்டங்களின் விளைவாக மக்களாட்சியும் சமுதாயச் சமத்துவமும் நிறுவப் பெற்றன. அடுத்து, பொருளாதாரச் சமனியப் போக்கு வலுப்பெற்றது.

### புதிய நாகரிகத் தாக்கம் :

14ஆம் நூற்றாண்டிலேயே அரும்பி, 15ஆம் நூற்றாண்டில் மொட்டவிழ்ந்து, 17ஆம் நூற்றாண்டிற்குப்பின்னும் மலர்ந்து, அய்ரோப்பா முழுவதும் மணம் பரப்பிக் கொண்டிருந்த மறுமலர்ச்சி இயக்கத்தின் தாக்கத்தால் மனித சமுதாயத்தில் ஏற்பட்ட முன்னேற்றங்களுடன் நவீன வரலாறு தொடங்குவதாலும், அய்ரோப்பிய நாகரிகத்தின் நுழைவால் ஆசிய ஆப்பிரிக்க நாடுகளில் அடிப்படையான பெருமாற்றங்கள் நிகழ்ந்த பொதுவான நடப்பிற்கு ஏற்ப, இந்தியத் துணைக் கண்டத்தை ஆங்கிலேயேர் ஆண்ட காலத்தில் தமிழகமும் முன்னோக்கிய புதிய பாதையில் செல்ல முற்பட்டதாலும், அய்ரோப்பிய மறுமலர்ச்சியைப் பற்றிய பெரும்பான்மைச் செய்கைகளைச் சுருக்கமாகவேனும் கோடுகாட்டி இங்கு நினைவுகொள்ள வேண்டியதாயிற்று. 18ஆம் நூற்றாண்டில் தொடங்கி, இன்னும் தொடரும் இந்தியத் தேசிய இனங்களின் மறுமலர்ச்சி இயக்கம், நவீன அய்ரோப்பிய நாகரித்தின் விழுமிய மதிப்பீடுகளையும் இலக்குகளையும் சாதனைகளையும் தன்வயமாக்கிச் செல்லவேண்டியிருப்பதால், அவற்றைக் கணக்கில் எடுத்துக்கொள்வதன் மூலம், பாரதிதாசன் போன்ற புரட்சிப் படைப்பாளிகளின் பங்களிப்பைச் சரியாகப் புரிந்துகொள்ள முடிகிறது.

### மூடமத நம்பிக்கை :

நாட்டின் செல்வம் அதன் மக்களுக்குரியது. ஆனால் நாட்டையாள்பவர்கள் அதைச் சொந்த நலத்திற்கும் பெருமைக்கும் வலிமைக்கும் களியாட்டத்திற்கும் பயன்படுத்திக்கொள்ளும் முயற்சியில் கொடுங்கோன்மையும், அதைத் தாங்குதற்கான மூட மத நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும் தோன்றுகின்றன. மக்கள் நலம் புறக்கணிக்கப்படுகிறது. அழகியின் வடிவில் வந்த அயலார் ஆதிக்கத்தைக் காண மறந்த குறிஞ்சித் திட்டின் திரைய மன்னன், வேதியக் காதலி வினோதையிடம் கூறுகிறான்:

> சுமைக்கும் அக் கழுதை கட்டும்
> தொடர்பில்லை; அதுபோல் நாட்டார்
> தமக்கும்இந் நாட்டின் செல்வம்
> தனக்குமோர் தொடர்பு மில்லை,
> என்விருப்பந் தான் சட்டம்
> என்அடி மைகள் மக்கள்.

இத்தகு போக்கினால் அரசுகெடும் என்பதையும், அக்கேட்டை மறைப்பதற்கு மூட மதக் கதைகளும் நம்பிக்கைகளும் உருவாக்கப்படும் என்பதையும் தமிழக நிலையைக் காட்டி, குறிஞ்சித்திட்டின் படைத் தலைவன் சேந்தன் எச்சரிக்கிறான்.

... மதமென்றும் கோயி லென்றும்
சிவனென்றும் மாலென்றும் மலரோன் என்றும்
அன்னவரின் மக்கள்என்றும் மனைவி என்றும்
இன்னுமிவர் போல்இரிசன் மாடன் காடன்
சின்னாண்டான் பெரியாண்டான் பிச்சை யாண்டான்
சிவப்பாண்டான் கருப்பாண்டான்வெள்ளை யாண்டான்.

"கருப்பாயி காட்டேரி காளி கூளி
கருமுத்து மாரிஇரங் காளி காய்ச்சல்
பொறுப்பாளிபீனிசத்தாள் கண்நோய் அம்மன்
புரையாளி பிளவையம்மன் தொண்டைப் புற்றாள்
குறிசொல்லி மலைக்கன்னி கொல்லி என்றும்
கூறுமிவர் ஊர்திகளாம் ஆடு மாடு
சிறுத்தைஅரி மாகுரங்கு கோழி காக்கை
சிறுகழுதை பெருச்சாளி கழுகு நாய்பேய்.
"என்றுமவர் அடியார்கள் அடியார்க் காக
இளமனைவி தனையளித்தான். அடியார்க் காகத்
தன்குழந்தை தலையறுத்தான். கல்லில் மோதித்
தலையுடைந்தான். மூக்கறுந்தான். கண்ணிழந்தான்.
மன்னவன்பால் பொதுப்பணத்தை வஞ்சம் செய்து
மாக்கோயில் கட்டினான்என்றும் கூறி
மன்னுபகுத் தறிவழித்து மானம் போக்கி
மறைகாட்டித் தமிழ்நூற்கள் கருத்தை மாற்றி

"தீமைஎலாம் தமிழருக்கே நன்மை எல்லாம்
தங்களுக்கே வறுமைஎலாம் தமிழருக்கே
ஆமந்தச் செல்வமெலாம் தங்களுக்கே
அடிமைநிலை தமிழருக்கே பெருமை எல்லாம்
வாய்மைஅற்ற தங்களுக்கே எனும்நி லைமை
குறிஞ்சியில் குடிபுகுந்து விடக் கூடாதே.

(குறிஞ்சித் திட்டு பக்.145-146)

## புதிய விழிப்பு :

இடைக்காலத்தில் இத்தகு கதைகளும் நம்பிக்கைகளும் மலிந்ததால் வருணமும் சாதியும் நிலைபெற்றன. இருக்கு வேதத்தில் புருஷசூக்தத்தில் விளம்பப்பட்டு, கீதையில் கண்ணனால்

போதிக்கப்டும் வருணைமுறை, ஏகலைவனின் கட்டவிரலைக் குருதட்சனையாகப் பெற்ற துரோணாச்சாரியின் செயலை உள்ளடக்கிய மகாபாரதத்தாலும், சம்புகனின் தலையைக் கொய்த இராமனைத் தெய்வமாகக்காட்டும் இராமாயணத்தாலும் புனிதத்தன்மை பெற்றதுடன், மனுமுதலியோர் எழுதிய தர்மசாத்திரங்களின் வழியே சமுதாயச் சட்டங்களாகவும் வேரூன்றி விட்டன. பல நூற்றாண்டுகள் மக்களைப் பலவகையானும் வாட்டின. ஆனால், ஒரு குலத்திற்கு ஒரு நீதி சாற்றும் இந்து மதச் சமூக ஏற்பாடுகளை வேரோடு கல்லியெறியும் மறுமலர்ச்சி இயக்கம் 19ஆம் நூற்றாண்டில் தோன்றிவிட்ட தென்பதை இராமலிங்க வள்ளலார், பேராசியர் 'மனோன் மணியம்' சுந்தரனார் ஆகியோரின் வாழ்வும் கருத்துக்களும் தெரிவிக்கின்றன. அறிவின் மலர்ச்சியை அணையாத சுடராக ஆக்கிய பெருமை தந்தை பெரியாரின் தன்மதிப்புப் பகுத்தறிவு இயக்கத்திற்கு உண்டு. 1928ஆம் ஆண்டிலிருந்து அதன் ஒப்பரிய பாவலராகத் திகழ்ந்த பாரதிதாசனார் அச் சுடருக்கு ஒளிகூட்டினார்.

வெளிச்சம் பரவியது, இருள் விலகியது, 'ராமாயணம் சொல்லி நாளைக் கழிக்கின்ற ஏமாந்தார் காசுக்கெசமானன்', ஆகிவிட்ட நாட்டின் நிலையை மாற்ற விரும்பி, பகுத்தறிவால் விழிப்புற்ற இளவஞ்சி கேட்கிறாள்.

ராமனெங்கே! ராமன் அருளெங்கே! சஞ்சீவி
மாமலையைத் தூக்குமொரு வல்லமைஎங்கே; இவற்றில்
கொஞ்சமும் உண்மை இருந்தால் நாம் கொத்தவரைப்
பிஞ்சுகள் போல் வாடிப் பிழைப்பதரி தாகி
அடிமையாய் வாழோமே?

(சஞ்சீவி பர்வதத்தின் சாரல்)

அறியாமையால் மடமையும், அதனால் அச்சமும், அதிலிருந்து பிற எல்லாக் கேடுகளும் துன்பங்களும் விளைகின்றன. ஆகையால் செம்மையும் இன்பமும் ஓங்கவேண்டுமெனில் அறிவும், அதற்கு ஆதாரமாக கல்வியும் அனைவருக்கும் வேண்டும். மடைமையில் மக்களை ஆழ்த்தும் வேத புராண இதிகாசக் கதைகளை ஒதுக்கி, உலகின் இயல்பையும், செம்மை நெறியையும் காட்டும் புதியன பயில வேண்டும்.

சிறார்களை நோக்கி நமது கவிஞர் கூறுவார்:

நன்றாய்ப் படியுங்கள்! நாட்டின் குழந்தைகாள்!
..... .... .... ..... ..... .... ......
தின்றதையே தின்று தெவிட்டுதல் இல்லாமல்
அன்றன்று வாழ்விற் புதுமை காணவேண்டும்!
பல்கலை ஆய்ந்து தொழில்பல கற்றும்
பாட்டிற் சுவைகாணும் திறமையும் உற்றும்,
அல்லும் பகலும் இந்நாட்டிற் குழைப்பீர்கள்!"
அறிவுடன் ஆண்மையைக் கூவி அழைப்பீர்கள்!

(இசையமுது)

புலவரை நோக்கி,

புது நூற்கள் புதுக் கருத்தால் பொது வகையால் தரவேண்டும்,

என்பார்

இளந்தமிழனைப் பார்த்து,

பண்டைநலம் புதுப்புலமை பழம்பெருமை
அனைத்தையும் நீ படைப்பாய்

என கூறுவார்.

## பழமைச் சிறப்பு:

அய்ரோப்பிய நாகரிகத்தின் சமூக அரசியல் பொருளாதார பண்பாட்டுச் சிறப்புகளின் தாக்கத்தால் இங்குப் புதிய நோக்குத் தோன்றியதென்பதால், மேலை நாகரிகக் கூறுகள் அனைத்தையும் ஏற்க வேண்டும் என்பது கவிஞரின் கருத்தல்ல. "கையினில் சுக்குடன் மல்லி இருக்கையில் காப்பி எதற்காக?" என அவர் வினவுவார். மேற்கு நாடுகளுடன் போட்டியிட்டு, அவற்றை வெல்லும் அளவிற்குத் தொழிற்துறையில் முன்னேறியுள்ள ஜப்பான், தனது மரபைக் காப்பதில் தனிக் கவனம் உடையது என்பதை நினைவு கூர்க.

வாழ்க்கை நடப்பில் மட்டுமல்லாது, இலக்கியம் பயில்வதிலும் தமிழரின் பண்டை நலத்தைப் பாவேந்தர் பாராட்டுவார்.

நூலைப்படி - சங்கத்மிழ்
நூலைப்படி ...
அறம்படி பொருளைப்படி
அப்படியே இன்பம் படி...
அறப் பொருள்படி அதன்படி
புறப் பொருள்படி நல்லபடி ...

எனக் கவிஞர் கூறுவதைக் கொண்டு, அவரைப் பழமை மீட்பர் (revivalist) எனச் சொல்லிச் சப்புக்கொட்டும் பொருளறியாப் பேதைகள் சிலருண்டு. அவர்கள் மறுமலர்ச்சி இயக்கத்தின் பொதுத் தன்மையையோ, தொன்மைத் தமிழ் நூல்களின் இயல்பையோ அறியாதவர் ஆவர்.

அய்ரோப்பாவின் மறுமலர்ச்சி இயக்கம் தோன்றிய பொழுது அங்கு கிரேக்க, இலத்தீன் தொன்மை இலக்கியங்களில் ஆர்வம் பிறந்தது எனக் கண்டோம். ஏன் தோன்றியது? கிறித்துவ மதகுருக்களும், மடங்களின் தலைவர்களும், மத நூல் அறிவர்களும் விவிலியத்திற்குப் புறம்பானவை மெய்ம்மையல்ல என வாதிட்டு அறிவுக்கு வேலிகட்டி முன்னேற்றத்தைத் தடைப்படுத்தியிருந்தனர். ஆனால் பிளேடோ, வெர்ஜில் முதலியோரின் படைப்புகள் சமயச் சார்பற்ற கருத்துக்களையும் கற்பனைகளையும் இயல்பாகத் தடையின்றி வெளிப்படுத்தியிருந்தன. இக்காரணத்தின் காரணமாகவே அவை பழையனவாக இருந்தும், புதிய ஊழியில் அவற்றிற்கு மரியாதை கிடைத்தது.

இந்தியத் துணைக் கண்டத்தை நோக்கும் பொழுது இங்கிருந்த சமுதாயம் தேக்க நிலையிலிருந்ததையும், மாட்டையும் குரங்கையும் வழிபடும் தாழ்நிலைக்கு மக்கள் மதத்தால் தள்ளப்பட்டிருந்தனர் என்பதையும் கார்ல்மார்க்ஸ் உள்ளிட்ட அறிஞர்கள் கண்டனர். புராண இதிகாச தர்மசாத்திரங்களை உள்ளடக்கிய ஸ்மிருதிகளை ஒதுக்கி, வில்லியம் ஜோன்ஸ், மாக்ஸ்முல்லர் போன்றவர்கள் உலகுக்கு வெளிப்படுத்திய சாகுந்தலம் போன்ற இலக்கியங்களும், வேத உபநிடதங்களும் உயர்ந்தவை எனக் கொண்டாடப்பட்டன. இராஜாராம் மோகன்ராய், தயானந்த சரஸ்வதி போன்றவர்கள் வேதங்களின் தூய்மையின் அடிப்படையில் சமுதாயத்தைத் திருத்த முடியும் என நம்பி இயக்கங்கள் கண்டனர். ஏன், விவேகானந்தர் கூட வேதாந்தத்தின்

பெருமையைக் கூறித்தான் இந்து மதத்தை மாற்றியமைக்க முற்பட்டார். ஆனால் அவருடைய முயற்சியெல்லாம், சமுதாய மாற்றமைப்பு நடவடிக்கைகளுக்கு முட்டுக்கட்டை போடும் சனாதனச் சதுர்வருணியரின் கையைப் பலப்படுத்த இன்று பயன்படக் காண்கிறோம். காரணம் என்ன? வேதவேள்விமரபுகளும் இதிகாச புராண மரபுகளும் பிரிக்க முடியாத அளவு பிணைந்திருக்-கின்றன. அவை பகரும் கதைப்பாத்திரங்களைக் கடவுளராகவும், சடங்கு சம்பிரதாயங்களைப் புனிதமானவையாகவும் கொள்ளும்வரை அறிவுக்கு விடுதலையில்லை.

ஆனால் சங்கத் தமிழ் நூல்கள் அவ்வாறானவை அல்ல. வாழ்க்கைமுறைகளையும் இயற்கையையும் விளக்குமிடத்து அவற்றில் அழகிய கற்பனையுண்டு. ஆனால் அஃது அதீதமானதன்று; இயற்கைக்குப் புறம்பான கற்பனைகள் விதிவிலக்கானவை; ஆனால் வேத புராணங்களில் இயற்கைக்கு மாறானவை விதியாக உள்ளன. மேலும், சங்க இலக்கியங்கள் புனிதமானவையென்ற நம்பிக்கையை யாரும் வற்புறுத்துவதில்லை. ஆகையால் அவற்றால் அறிவுத் தடை ஏற்பட வாய்ப்பில்லை. மாறாக, இந்துமதத்திற்கு ஆதாரமானவை எனப்படும் சுருதிகள் (வேதங்கள்) இறைவெளிப்பாடு எனவன்றோ கொண்டாடப்படுகின்றன! அவற்றை மறுப்பது எதிர்ப்பதும் மத வெறுப்பென்றல்லவா சொல்லப்படுகின்றன.

கன்னட இலக்கிய மேதைகளில் ஒருவரான எம். கோபாலகிருஷ்ண அடிகா இவ்வேற்று-மையை உணரும் வகையில் எழுதியுள்ளார்! "பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிவரை இந்திய அறிவர்களின் மொழியாகச் சமஸ்கிருதம் இருந்தது. ... இந்திய மொழிகள் அனைத்தும் அதை மாதிரியாகக் கொண்டு வளர்ந்தன. தமிழ் மொழியில் தொடக்க முயற்சிகள், வேறுபோக்கில் அமைந்து, மிகக் குறிப்பிடத்தக்க மலர்ச்சியையும் வேறுவகையான வளர்ச்சியின் முன்னோட்டத்தையும் காட்டுகின்றன. ஆனால் அதுவும் சமஸ்கிருதப் படைப்புகளின் அகில இந்திய மாதிரியை விரைவில் பின்பற்றத் தொடங்கிற்று."

தொன்மைச் சங்க நூல்களின் வேறான போக்கு (**on different lines**), வேறுவகையான வளர்ச்சி (**a different development**) என்பனவற்றை அடிகா வெளிப்படையாகச் சுட்டவில்லை எனினும், அவை சமயச் சார்பின்மையும், பிறப்பினடிப்படை ஏற்றத்தாழ்வு கற்பித்து, ஒரு குலத்திற்கு ஒரு நீதி கூறாமையும், கடவுளர் பெயரால் மூடத்தனத்தை வளர்த்துச் சிந்தனையை முடமாக்காமையும், இயற்கையோடியைந்த வாழ்வில் நலம் காண்பதும் ஆகும். தமிழரின் இத்தனிவழி மறைந்து, வேத-புராணிக வடமொழியின் தாக்கத்திற்குச் சுமார் 1500 ஆண்டுகட்கு ஆட்பட்ட காலத்தில் தமிழினம் தனது பண்பாட்டுச் சிறப்பையும் உரிமையையும் இழந்தது. அவற்றை மீட்டெடுக்க இனமுரசு கொட்டிய பிறரைப் போன்றே பாவேந்தரும் சங்கநூல்களின் வழி எழுச்சி கொள்வது இயல்பே ஆகும்.

## மொழியின் வழியே :

மறுமலர்ச்சி இயக்கத்தின் விளைவாகப் பண்பாட்டு இலக்கிய மலர்ச்சிகள் மட்டுமன்றி, மொழிவழித் தேசிய இனவுணர்வும் தோன்றியதைக் கண்டோம். இவ்வரலாற்றுக் கூட்டாய நிகழ்வுக்குப் பாரதிதாசனாரின் படைப்புகள் அடித்தளமாய் அமைகின்றன.

தமிழுயர்ந்தால் தமிழ்நாடு
தானுயரும் அறிவுயரும் அறமும் ஓங்கும்
இமயமலை போலுயர்ந்த
ஒரு நாடும் தன்மொழியில் தாழ்ந்தால் வீழும்

எனத் தமிழியக்கமும்,

வெல்வது வேலன்று? செந்தமிழ் ஒன்றே
நல்லொற்றுமை சேர்க்கும், நன்னெறி சேர்க்கும்,
வல்லமை சேர்க்கும், வாழ்வை யுண்டாக்கும்
வண்டமிழ் நைந்திடில் எது நம்மைக் காக்கும்?

எனத் தேனருவியும் உணர்த்துகின்றன.

அறிவு வளம்பெறவும் உலகுடன் உறவாடவும் பிற மொழி கற்பதை வரவேற்கும் கவிஞர், தமிழைத் தாழ்த்தவும், தமிழரை அடிமை கொள்ளவும் வந்த சமஸ்கிருதம், இந்தி ஆகியவற்றை எதிர்க்கிறார்.

ஆங்கிலத்தைக் கற்கையிலும்
அயல்மொழியைக் கற்கையிலும் எந்த நாளும்
தீங்கனியைச் செந்தமிழைத்
தென்னாட்டின் பொன்னேட்டை உயிராய் கொள்வீர்.

ஏங்கவைக்கும் வடமொழியை இந்தியினை எதிர்த்திடுவீர்
அஞ்சவேண்டாம்" (தமிழியக்கம்)

புறத்தே இருந்துவரும் ஆபத்துக்களைப் போல், அகத்தே இருக்கும் சாதிப்பற்று, மதவெறியாகியவையும் தமிழின் உரிமைக்குத் தடைகள் ஆகும்.

கடவுள்வெறி சமயவெறி கன்னல்நிகர் தமிழுக்கு
நோய் நோய் நோயே!

இடைவந்த சாதி எனும் இடர் ஒழிந்தால் ஆள்பவள்நம்
தாய் தாய் தாயே!
(தமிழியக்கம்)

**நாத்திகர் :**

அரசு ஆட்சி, நீதி நிர்வாகம், கல்வி, தொழில், வாணிகம் முதலிய அனைத்துத் துறைகளிலும் தமிழின் பயன்பாடு முதன்மையும் முழுமையும் பெறவேண்டுமென விரும்பும் பாரதிதாசனார் சமயத்துறையிலும் அவ்வாறே திகழவேண்டுகிறார்.

தெற்கோதும் தேவாரம்,
திருவாய்நன் மொழியான தேனிருக்கச்
செக்காடும் இரைச்சலென
வேதபா ராயணமேன் திருக்கோயில்பால்?

எனக் கேட்கிறார். இதைக் கொண்டு, தமிழை உயர்த்த இறைப்பற்றை ஏற்பவர் கவிஞர் எனத் தவறாகச் செப்புவார் உண்டு. பொதுவுடைமைத் தலைவர் ம. சிங்காரவேலர் தலைமையில் நடந்த மாநாட்டுப்பதிவேட்டில், தன்னையொரு நிரந்தரமான நாத்திகர் எனக் குறித்துக் கையெழுத்திட்ட கவிஞர், அக்கொள்கையை என்றும் கைவிட்டார் அல்லர். இறை நம்பிக்கையாளரை நோக்கித் தாய்மொழியை விடுத்து, வடமொழிக்கு ஏற்றந்தரும் மூடநம்பிக்கைக்கு முழுக்குப்போட வேண்டுகிறார், அவ்வளவே! 'அத்தா துருக்கி' எனும் சிறப்புப் பெற்ற கெமால் பாஷா, மசூதிகளில்

அரேபிய மொழியில் தொழுகை நடத்துவதைவிடுத்து, தாய்மொழி துருக்கியில் நடத்த வற்புறுத்தியதும் இவ்வாறே. துருக்கிய மொழியில் கலந்துவிட்ட அரேபிய, பாரசீகச் சொற்களை நீக்கி அம் மொழியைத் தூய்மைப் படுத்தினாற்றான் துருக்கியர் மூட மத அடிமை மனநிலையிலிருந்து விடுபடுவர் என்பதும் அவருடைய கொள்கையாக இருந்தது என்பது இங்கு நினைவுகூரத்தக்கது.

நீதிபதி வேதநாயகர் தமிழிசைக்குத் தொண்டு செய்ததைக் குறித்து,

மனமே ஈசனின் நாமம் வாழ்த்துவாய் எனும் வேத நாயகன் தன்
இனிதான பாடலைப் போல்,

எனப் பாராட்டுவதைக் கொண்டும்,

ஒன்றே அல்லால் குலமில்லை
ஒருவ னல்லால் தெய்வமில்லை
என்றதோர் தமிழரின் சொல்லை
மறந்ததால் அல்லவா வந்ததித் தொல்லை

என்பதைக் கொண்டும், தமிழிசை, தமிழ்நெறி என்ற பெயரால் ஓர் இறைக் கொள்கைக்கு ஒப்புவார் எனக் கொள்ளலும் தவறு. மொழிக்கு ஏற்றமும் சமுதாயத்தில் ஒற்றுமையும் வேண்டுமென்பதைமறந்து, இசையையோ, இறைப்பற்றையோ போற்றுவது தவறு என இறை நம்பிக்கையாளருக்கு உணர்த்தவே கவிஞர் விரும்புகிறார்.

எம் மதக்கடவுளும் பாரதிதாசனாருக்கு உடன்பாடில்லை; தொண்டு செய்வதே மனிதனை உயர்த்தும் என வலியுறுத்தினார்:

குண்டான் பெருவயிறு கொண்டிருக்கும் ஓர் உருவம்,
ஆறுமுகம், ஐந்து முகம், நாலுமுகம் ஆகுமென்று
கூறுமுகம் யாவும் கடவுளெனக் கூறாதீர்!
இந்துமதம் சொல்லுகின்ற யாதும் கடவுளல்ல;
ஓது நபி காட்டும் ஒலியும் கடவுளல்ல;
எவ் வுருவும் எப் பெயரும் இல்லை கடவுளுக்கே.
அவ்வியமோ பற்றோ கடவுள் அடைவதில்லை,

எனவும்,

தீயும் நீரும் நிலமும் வெளியும் காற்றும்
கலகக் கோயில் உருவமும் கடவுளல்ல

எனவும் கூறிமறுத்துவிட்டு,

உணர்வு தான் கடவு ளென்று நாளும்
வாழ்த்து வாய் மனமே, வாழ்த்து வாய்!

(பாக்கள்-'கடவுளைக் கண்டீர்'-குயில்பாடல்கள்;
தேனருவி- பாடல் 94)

என உறுதிப்படுத்துவார். கவிஞர் சுட்டும் அவ்வுணர்வு எது? "ஊருக்குழைக்கும் உணர்வே கடவுள் ஆம்", என்பது அவர் விளக்கம்.

## அறிவியல் போற்றல்:

தன் மொழியும் அதன்வழி நாடும் இனமும் ஏற்றம் பெற்றே தீரவேண்டும் என விரும்பிய பாவலர், அதைக் கண்மூடித்தனமாகப் போற்ற விரும்பினாரில்லை. இருட்பாதையில் வெறித்தனமாய் ஓடுவதால் வெற்றி கிட்டும் என்பது அவர் கருத்தல்ல. மொழியின் பெருமையைக் கூறவந்த இடத்தும், அதை இறையுடன் கூட்டிக் கதைகட்டிப் பெருமைப்படுத்தும் பழமூடப் போக்கைப் பற்றினார் அல்லர்.

அம்மா என்றழைத்தல், காகா
எனச் சொல்லல், அஃகென் றொன்றைச்
செம்மையிற் சுட்டல் என்னும்
இயற்கையின் செறிவினாலே
இம்மா நிலத்தை ஆண்ட
இயற்றமி ழே என் அன்பே!
சும்மா தான் சொன்னார் உன்னை
ஒருவன்பால் துளிர்த்தாய் என்றே!

(அழகின் சிரிப்பு)

மனித வாழ்வின் இயல்பான போக்கில் தோன்றியது தமிழ். மொழியின் பிறப்பைப் பற்றி அறிவியல் முறையில் அவர் கூறும் வரிகள் நெஞ்சையள்ளும் கொள்ளை யழகுள்ளவை.

முந்திய நாளினில் அறிவும்இ லாது
மொய்த்தநன் மனிதராம் புதுப்புனல் மீது
செந்தாமரைக் காடு பூத்தது போல
செழித்தஎன் தமிழே ஒளியே வாழி!

(இசையமுது)

கல்வியின் பயன், அறிவியல் பார்வையின் தன்மை ஆகியவை செழுமையான சமனியச் சமுதாயப்படைப்பிற்குத் துணையாகும்.

... அனைத்துக்கும் கல்வி வேண்டும்!
செம்மையிற் பொருள் ஒவ் வொன்றின்
பண்புகள் தெரிதல் வேண்டும்!
இம்மக்கள் தமக்குள் மேலோர்
இழிந்தவர் என்னும் தீமை
எம்மட்டில் போமோ, நன்மை
அம்மட்டில் இங்குண்டாகும்

(குடும்ப விளக்கு)

பொருள்களின் மெய்ம்மை அறிதலே அறிவியலாகும். அதன் வளர்ச்சிக்குத்தக மனிதனின் ஆற்றல் வளருகிறது. ஆற்றல் வளரும் அளவிற்குப் பண்பும் வளரவேண்டும். ஆகையாற்றான், உயர்வு தாழ்வு கற்பித்தும், உண்டாக்கியும் துன்பம் சேர்க்கும் பாதையைத் தீமையென விலக்கக் கோருகிறார்.

ஆண்கள் மட்டுமின்றிப் பெண்களும் அறிவியற் பாதையில் ஏற்றம் பெற வேண்டும் என்பார், பாரதிதாசன். வெண்ணிலவில் இறங்கவும், எண்ணற்கரிய உடுக்களின் இயல்பறிந்து வரவும் தமிழ்ப் பெண்ணைப் பணிக்கிறார்.

மக்கள் வாழும் உலகினில்
மதங்கள் சாதி வேற்றுமை
சுக்கு நூறாய் ஆக்கிய
தூய பெரியார் முகமென
அக்கரைக்கண் தோன் றிடும்
அழகு நிலவில் இறங்குவாய்!

புதிய உலகு:

ஆக்கவும் அழிக்கவும் ஆற்றல் பெற்றவன் மனிதன். நன்மையை ஆக்கவும் தீமையை அழிக்கவும் அவன் கற்றுக்கொள்ள வேண்டும். இயற்கைச் செல்வங்களை ஆண்டு பொருள் நலத்தைப் பெருக்கிக் கொள்ளும் ஆற்றல் பெற்ற மனிதன், இவ் வண்டத்தில் அவனுக்குரிய நிலையையும் உள்ளத்திற் கொள்ள வேண்டும். அதனால் அதிகாரச் சுரண்டல் ஆசை அவனைப் பற்றாது.

எத்தனை பெரிய வானம்
எண்ணிப்பார் உனையும் நீயே;
இத்தரை, கொய்யாப் பிஞ்சு;
நீ அதில் சிற்றெரும்பே
அத்தனை பேரும் மெய்யாய்
அப்படித்தானே மானே?
பித்தேறி மேல்கீழ் என்று
மக்கள்தாம் பேசல் என்னே!

(அழகின் சிரிப்பு)

இத்தகு பண்பட்ட உள்ளத்தில், எல்லோரும் ஓர் நிறை என்ற எண்ணம் நிலை பெறுகிறது. பொதுமை உணர்வு வலுப்பெறுகிறது.

உடையவன் இல்லான் என்பதை நீக்கி
உழைப்பினை அனைவர்க்கும் பொதுமையாக்கி
உழைப்புக் கேற்ற ஊதியம் தேக்கி
உலகம் நடத்துக ஓரரசாக்கி!

எனத் தேனருவி மொழிகிறது. புதியதோர் உலகம் செய்யவிரும்பும் புரட்சிக் கவிஞர், பேதமிலா அறிவுடைய அவ்வுலகத்திற்குச் சுயமரியாதை உலகு எனப் பெயரிட விரும்புகிறார். அத்துடன், 'சாதிமத பேதங்கள் மூட வழக்கங்கள் தாங்கி நடைபெற்றுவரும் சண்டையுலகை,' ஒழிக்க வேண்டும் எனச் சமுதாயப் பண்பாட்டுச் செம்மைக்காக ஒரு கவிதையில் குரல் கொடுக்கும் கவிஞர், இன்னொரு பாவில், "பொதுவுடைமைக் கொள்கை திசையெட்டும் சேர்ப்போம் . . . ஒரு பொருள் தனி எனும் மனிதரைச் சிரிப்போம்" எனப் பொருளாதாரச் சமனியத்தை வலியுறுத்துவார்.

**உளப்பண்பு:**

மக்கள் நாயகம், சமனியச் சமுதாயம், மனிதஇன ஒற்றுமை முதலிய இலக்குகளை நோக்கி விழிப்புற்ற மக்கள் நடைபோடுவதற்கு ஏற்பப் புதிய உலகு செய்ய விரும்பும் கவிஞர்.

> இயல் பொருள் பயன்தர மறுத்திடில் பசிப்போம்
> ஈவதுண்டாம் எனில் அனைவரும் புசிப்போம்

எனக் கூறுவார். இயற்கை வளத்தைப் பயன்படுத்தி, செல்வத்தைப் பெருக்கிக் கொண்ட நிலையில், அனைவருக்கும் கிட்டும் அளவிற்கு மிகு பண்டங்கள் உள்ள சூழலில், அதைப் பங்கிட்டுக் கொள்வதில் மனிதரிடையே பூசல் மிகா வண்ணம் பார்த்துக் கொள்வது எளிதாகலாம். ஆனால், வளங்குறைந்துள்ள பொழுது, பொருளாக்கம் போதாமல் இருக்கும் பொழுது, பசியையும் பகிர்ந்து கொள்ள வேண்டும் எனச் சொல்லுகின்றாரே, அஃது எளிய காரியமா? அதையும் செய்ய வேண்டும், அதுதான் புரட்சி! பொருளாக்கத்தின் வேகத்தையும் போக்கையும் நினைத்தபடி கொண்டு செல்ல முடியாது; சூழல் மாசுபடும் கேட்டினாலும், உயிர்ச் சமனிலையில்லாக் கேட்டினாலும் மனித இனம் எதிர் நோக்கியுள்ள பேராபத்துக்கள் அதைச் சுட்டுகின்றன. இயற்வளங்களைக் கொண்டு, மனிதனுக்குத் தேவையான பண்டங்களையும் பணிகளையும் ஆற்றலையும் பெருக்கிக் கொள்வதற்கு ஓர் எல்லையுண்டு எனும் மெய்ம்மையைக் காணும் இந்நாளில், 'இயல் பொருள் பயன்தர மறுத்திடில் பசிப்போம், எனப் பாரதிதாசனார் கூறுவது தனிக் கவனத்திற்குரியது. 1929ஆம் ஆண்டிலேயே தொலை நோக்கோடு இந் நாட்டு மக்களுக்குக் குடும்பக்கட்டுப்பாட்டின் தேவையை வற்புறுத்தியதைப் போன்றே, மனித இனத்திற்கும் இயற்கை வளத்திற்கும் உள்ள உறவின் தன்மையைக் கூர்மையாகக் கண்டு, செல்வத்தை மட்டுமன்றி, போதாமையையும் பகிர்ந்து கொள்ளும் பண்பு மனித இனத்திற்கு வேண்டு மென்கிறார்.

வாய்ப்பும் வலிமையும் பெற்றவர்கள், இருக்கும் செல்வத்தைத் தங்கள்பால் குவித்துக் கொண்டு, மற்றவர்களை வறுமையில் தள்ளும் இன்றைய போக்கு நீடிக்கும் வரை போரும் பூசலும் ஓயாது. நாடுகளும் குழுக்களும் இனங்களும் தனிமனிதர்களும் தங்களுக்கிருக்கும் உயர் சலுகை நிலையைக் கொண்டு ஏற்றத் தாழ்வை மிகுவிக்கும் இன்றைய தன்னலப் பார்வை மாறி, பொதுநல உணர்வு பரவவேண்டும்.

புதிய உலகைச் சமைக்கும் மனிதனுக்கு அதற்குரிய மனத்திட்பமும் பண்பும் வேண்டும்.

> வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
> உள்ளத் தனைய துயர்வு

என்பார் வள்ளுவர். உள்ளத்தைப் பண்படுத்தும் கருவி இலக்கு, நோக்கிய செயற்பாடே. குறிக்கோள் இலாதவன் வளர்ச்சி பெறாத பயனற்ற வீணன். குறிக்கோள் உள்ளவன் வறுமையைத் தாங்குவான், குறையை நீக்குவான், அறிவை வளர்ப்பான், பயன்பட வாழ்வான். பாவேந்தரின் 'நல்லமுத்துக்கதை' இவ்வுண்மையை உணர்த்துவதை, முனைவர் சாலை இளந்திரையனாரின் 'புரட்சி முழக்கம்' எனும் நூல் சுட்டுகிறது. எவ்விதத் துடிப்பும் இன்றி, மூடப் பழக்கத்தில் வாழ்வை வீணாகக் கழித்துக் கொண்டிருந்தான், நல்லமுத்து. தாய் மொழிப் பற்று ஒன்றின் காரணமாகத் தமிழ்க் காப்பை இலக்காகக் கொண்டான்; அதனால் மீண்டான்;

> மடமையில் மூழ்கி மடிகின்றான் அவன்;
> தன்மானத்தைச் சாகடிக்கின்றான்;
> மரக்கட்டை போல் வாழ்ந்து வந்தான்-
> இந்த நிலைக்கெலாம் ஈன்றவர் காரணர்!

ஆயினும் தமிழ்ப்பற்று அவனிடம் இருந்தது,

திராவிடர் கழகம் சேர்ந்துவிட்டான்;

இனிமேல் அவனோ தனியொரு மறவன்!

மாபெரும் மறுமலர்ச்சி ஓவியனாகவும் சிற்பியாகவும் திகழ்ந்தவன், மைகேலேஞ்சலோ. அவன் சொல்லுவான்: "ஒருவன் கைகளைக் கொண்டு ஓவியம் தீட்டுவதில்லை, மனத்தைக் கொண்டு வரைகிறான்". புரட்சிக் கவிஞரும்,

ஓவியம் வரைந்தான் - அவன் தன்

உளத்தினை வரைந்தான்

என்பார். செம்மை நெறிகளையும், அமைப்புகளையும் இயக்கங்களையும் கண்டு, புதிய உலகைச் சமைக்கும் உள்ளங்கள் மேன்மையுற வேண்டும். "கோணல் நம்பிக்கையாளர்கள் கொடிய செயல்கள் செய்வார்கள்", என வால்டேர் குறிப்பிடுவார்.

கொலை கள வென்பன யாவும் - அவர்

கோணல் உளத்தில் விளைவன அன்றோ?

என்பது நம் கவிஞரின் தேனருவி.

கோணல் உள்ளம் தன்னலத்தில் முகிழ்ப்பது. மற்றவர்களின் அறியாமையிலும் மூட நம்பிக்கையிலும் அச்சத்திலும் ஊன்றிவளருவது. ஆகையால், கோணல் மனக் கொடியோரின் சுரண்டலையும் அடக்குமுறையையும் ஒழிக்க, அவர்களின் பண்பாட்டுக் கருவிகளான மூடமத நம்பிக்கைகளிலிருந்து மக்கள் விடுபட வேண்டும். அவ்வாறு விடுபட்ட பாவேந்தரின் இரணியன், நரசிம்மனாக வந்து, நாராயணனைப் பார்த்துச் சொல்கிறான்: "அடே நான் தூணை உதைத்தேன். நாராயணனாக நீ வந்தாய். உன்னை உதைத்தால் உன்னிடமிருந்து தூண் வெளிவருமா என்று பார்க்கிறேன்."

இரணியன் உதைக்கிறான்; சிங்கத்தோல் போர்த்த காங்கேயன் வீழ்ந்து மடிகிறான். மறைந்திருந்த ஆரியர்கள் இரணியனைக் கொல்கிறார்கள். மக்களை அடக்கும் படையின் வலிமையைவிட, அவர்களின் மனதை மடக்கி ஒடுக்கும் மூட நம்பிக்கையின் வலிமை பெரிது, ஆழமானது. அதைப் போக்கி தெளிந்த மனத்தில் துணிவை ஏற்றுவது நம் கவிஞரின் நாடகமான 'இரணியன் அல்லது இணையற்ற வீரன்!'

அறியாமையையும் அச்சத்தையும் போக்குவது, குறிக்கோளைப்பற்றி நின்று அறிவையும் துணிவையும் வளர்ப்பது, இல்லாதாருடன் இருப்பதைப் பகிர்வது, அனைவரையும் நிகராக மதிப்பது முதலிய பண்புகள் வளர்வதற்கு மூலமாகத் திகழ்வது மனிதநேயமே! எழில் சுவையில் தோய்ந்து, அதை அள்ளித் தருவதை மட்டுமே பாப்புனையும் நோக்கமாக நமது கவிஞர் கொண்டிருக்கலாம். ஆனால்,

இன்னிலிலே, தமிழ் நாட்டினிலேயுள்ள

என் தமிழ் மக்கள் துயின்றிருந்தார்

அன்னதோர் காட்சி இரக்கமுண்டாக்கியென்

ஆவியில் வந்து கலந்ததுவே!

எனும் நிலையில், மக்களின் துன்பந்துடைக்கும் வழியைத் தேடினார். அதனால் தன் மதிப்பையும் பகுத்தறிவையும் சமனிய உரிமை வாழ்வையும் பேணும் சீரிய கருத்துக்களை அழகும் சுவையும் உணர்வும் கலந்து பாக்களாகத் தரும் மறுமலர்ச்சிப் பாவேந்தராக ஓங்கி உயர்ந்தார்.

* * *

# பாவேந்தரின் நாடக உத்திகள்

முனைவர் ஏ. என். பெருமாள்

**பாவேந்தரின் நாடகங்கள்:**

நற்றமிழ்க் கவிதைகள் பாடி நாடு போற்றும் கவிஞராகத் திகழ்ந்த பாரதிதாசன், நாடகங்கள் சில எழுதி மக்களுக்கு உணர்ச்சியும் தமிழுக்கு எழுச்சியும் ஊட்டியுள்ளார். பல வகையான நாடகங்கள் அவரது பேனாவிலிருந்து மலர்ந்து மேடையேறி மக்களைக் கவர்ந்துள்ளன. தமிழிலக்கியத் தழுவல்களாகச் 'சேரதாண்டவம்,பிசிராந்தையார். சத்திமுத்தப்புலவர் தலைமலை கண்ட தேவர்' போன்ற நாடகங்கள் உருவாகியுள்ளன.

புராணப் புதுக்கலாக 'இரணியன் அல்லது இணையற்ற வீரன்' நாடகம் அரங்கேறிப் பகுத்தறிவுச் சிந்தனையும் தமிழ் உணர்வும் விறுவிறுப்புடன் பரந்து வளர வழி காண்கிறது. 'படித்த பெண்கள்', 'குடும்ப விளக்கும் குண்டுக்கல்லும்' ஆகிய நாடகங்கள் பெண்ணின் பெருமைக்கு நல்ல எடுத்துக்காட்டுகள் ஆவதுடன் ஆணின் ஆணவ மதத்தை ஆற்றலுடன் அடக்கிக்காட்டும் அங்குசமாக விளங்குகின்றன.

மன்னராட்சி மாய்ந்து மக்களாட்சி மலரவேண்டும் என்ற குறிப்பைக் காட்டும் 'சௌமியன்' நாடகமும், கொடுங்கோலாட்சி சாய்ந்து நல்லாட்சி புலர வேண்டும் என்ற உணர்வைக் கொடுக்கும் 'ராஸ்புடீன்' நாடகமும் பாவேந்தர் நாடும் அரசியல் அமைப்பு முறையை நயமாக எடுத்துக் காட்டும்.

'கற்கண்டு', 'கழைக் கூத்தியின் காதல்', 'பொறுமை கடலினும் பெரிது', 'அமைதி' போன்ற சமூக நாடகங்கள் சமுதாயத்தின் சாபக் கேடுகளாக விளங்கும் ஏற்றத் தாழ்வுகளால் நேரிடும் தீமைகளை எடுத்துக் கூறுவதுடன் அவற்றைக் களையும் வழிமுறைகளை விளக்கும் வாயில்களைத் திறந்து காட்டுகிறது. சமயம் பற்றிய சிந்தனைகளைக் 'கோயில் இரு கோணங்கள்', 'சமணமும் சைவமும்' ஆகிய நாடகங்கள் விளக்கிக் கூறுகின்றன.

'ஆரிய பத்தினி மாரிஷை', 'வஞ்சவிழா', 'விகடகோர்ட்', 'அம்மைச்சி' போன்றவை ஆரியப் பார்ப்பனிய நடைமுறைகளைத் தாக்கும் நோக்கத்துடன் படைக்கப் பெற்றுள்ளன. நடனக் கலை ஆர்வம் கொண்டும் நடுநிலைமை பேணியும் 'நல்ல தீர்ப்பு' நாடகம் எழுதப் பெற்றுள்ளது. பெரியவர்களுக்கு அறிவுரையாக 'மூளை வைத்தியம்' நாடகமும் சிறுவர்களுக்காகக் 'குழந்தை நாடகமும்' உருவாக்கப் பெற்றுள்ளன.

பாரதிதாசன் பல வகையான நாடகங்களைப் பல்வேறு அமைப்புகளில் பலதரப்பட்ட நோக்கங்களுக்காக எழுதியுள்ளார். எடுத்துக்கூறும் கருத்துக்களுக்கு முதலிடம் கொடுத்து நாடகங்களைப் படைத்துள்ளார். சொல்ல நினைத்த கருத்துக்கள் நாடக ஓட்டத்தில் அழுத்தம்பெற்று கற்போர் மனதில் பதியும் தரமாகப் புகுத்தப் பெற்றுள்ளன. அதற்காகப் பலவகையான உத்திமுறைகளைப் பாவேந்தர் கையாண்டிருப்பதைக் காணலாம்.

### நாடக உத்தி முறைகள்:

நாடகம் மேடையில் கலையாகவும் நூலில் கலை இலக்கியமாகவும் விளங்குகிறது. அது கலையாகவும் இலக்கியமாகவும் சிறந்து விளங்கினால்தான் உயர்வாக மதிக்கப்படும். நாடகங்களை நன்கு படைக்க விரும்பும் ஆசிரியர்கள் பல்வேறு உத்திமுறைகளைக் கைக்கொள்கின்றனர்.

நாடக அமைப்பில் கட்டுக்கோப்பு (plot construction) பாத்திரப் படைப்பு (characterisation), சுவைப்புலப்பாடு அல்லது மெய்ப்பாடு (pysio-revelation), மொழி நடை (style) ஆகியவை முக்கிய இடம் பெறுகின்றன. இவை ஒவ்வொன்றும் சிறப்பாக அமைய நாடக ஆசிரியர் பல உத்திமுறைகளைப் பின்பற்றுகின்றனர்.

நாடக அமைப்புக்கென்று சில பொதுவான உத்திமுறைகள் உள்ளன. அவற்றை நாடகப் பொது அமைப்பியல் கூறுகளாகக் கருதலாம். நாடகவியலாக அவை விளக்கப்படும். நாடக அமைப்பு, மொழிக்கு மொழி மாறுபடுவதைக் காணலாம். சில நாடக ஆசிரியர்கள் பொது அமைப்பியல் முறைகளுடன் தங்களுக்கெனத் தனிப்பட்ட முறையில் சில உத்திகளைக் கையாள்வதைக் காண முடியும். பாரதிதாசன் தான் உருவாக்கியுள்ள நாடகங்களில் என்னென்ன உத்திமுறைகளைக் கைக்கொண்டுள்ளார் என்பதை அறிய முயலலாம்.

### நாடகக் கருத்தேர்தல் முறை :

படைப்பிலக்கிய வெற்றிக்குப் பெருங்காரணமாக கருத்தேர்தல் (Selection of Themes) மிகச் சிறப்பாக அமைய வேண்டும். காலத்துக்கு ஏற்றதாகவும் சமுதாயத்துக்குப் பயனுடையதாகவும் நாடகக்கரு அமைவதே சிறப்பாகக் கருதப்படும். காலத்தாலும் இடத்தாலும் அழியாத கருத்து விளக்கத்துக்கு உதவும் நாடகக் கரு மிகப் பெரிதாக மதிக்கப்படும். நாடக ஆசிரியர் சமூகத் தேவைக்குச் சிறப்பிடம் கொடுத்து மாந்தநேயத்தை அடிப்படை உணர்வாகக்கொண்டு படைப்பிலக்கியக் கருவை த்தேர்வு செய்தல் வேண்டும்.

தமிழ் நாட்டுப் பகுத்தறிவுப் பாசறையில் தன் மனவேகம் கொண்டு தமிழன் தன் இன உணர்வையும் மொழிப் பெருமையையும் உலகுக்கு அறிவிக்கும் எழுச்சி மிக்க காலக் கட்டத்தில் பாரதிதாசன் தன் சிந்தனையைத் தீட்டிக் கூராக்கிய பேனாவைக் கையில் எடுக்கிறார். சமூகம் மலர்ச்சியடையவும் தமிழ் வளர்ச்சியடையவும் தன்மானவுணர்வு எழுச்சி அடையவும் பாவேந்தர் பல்வகை இலக்கியங்களைப் படைக்கின்றார். நாடகங்கள் உருவாகி அரங்கேறுகின்றன. ஆசிரியரின் நோக்கங்கள் நிறைவேற உணர்ச்சிமிக்க கருத்துக்கள் நிறைந்த நாடகங்கள் அணியணியாக வருகின்றன.

### தமிழின உணர்வு :

பாரதிதாசனின் நாடகக் கருத்தேர்வுமுறை அவருடைய படைப்பு நோக்கத்துக்குத் தக்கவாறு அமைந்துள்ளது. ஆரிய ஆதிக்கத்தை நிலை நிறுத்தும் நோக்கத்துடன் புராணங்கள் கற்பனைப் படைப்புக்களாக எழுதப்பெற்றுள்ளன. அவற்றில் தமிழரின் ஆற்றலும் தன்மான உணர்வும் சரியாகக் காட்டப் படவில்லை. நேர்மாறாகச் சுட்டப்பட்டுள்ளன. அவற்றைத் திருத்தி மக்கள் மனதில் நிறுத்திக் காட்ட பாவேந்தர் விரும்புகிறார்.

தமிழரின் நெஞ்சத் துணிவையும் நேர்மைத் தன்மையினையும் விளக்கிக்காட்ட 'இரணியன் அல்லது இணையற்ற வீரன்' என்ற நாடகத்தை புராணப் புதுக்கலாகப் பாவேந்தர் படைக்கிறார். பழமைப் படைப்பில் புதுமைக் கருத்துக்களைப் புகுத்திக் காலத்துக்கு ஏற்ற எண்ணங்களையும்

சிந்தனைகளையும் விதைத்துச் சமூக நலனும் சிந்தனைச் சிறப்பும் நற்பயனும் காண முயலுவதைப் புராணப் புதுக்கல் எனக் கருதலாம்.

பல புராணக் கதைகள் பார்ப்பனர்களுடைய மேனிலையை உறுதிப் படுத்தும் நோக்கத்தில் அவர்களுடைய கற்பனை ஆற்றலினால் பொய்மையாகப் புனையப்பெற்றவை என்று கருத இடமுள்ளது. ஹென்றி பெவரிட்ஜ் என்ற அறிஞர் கூறுவது போன்று 'பிராமணர்கள் கல்வியைத் தங்களுக்கே சொந்தமாக்கிக் கொண்டு தங்களுடைய நிலைமையைத் துஷ்பிரயோகப் படுத்தி, தங்கள் இஷ்டம்போல் எழுதிய கட்டுக் கதைகளுக்கு எல்லா விஷயங்களையும் உட்படுத்தி வைத்தார்கள். இந்தக் கற்பனைக் கதைகள் அனைத்தும் வேண்டுமென்றே கெட்ட எண்ணத்துடன் சாமர்த்தியமாய்ப் பிறரை அழுத்தி, தங்கள் நிலையை உயர்த்திக் கொள்வதற்காகவே எழுதப்பட்டவைகளாகும்.

ஆரியரின் மேலாண்மையை உறுதிப்படுத்துவதற்காகவும் இறையருள் அவர்களுக்கே துணை நிற்பதை எடுத்துக் காட்டுவதற்காகவும் இரணியனின் கதை தவறான நோக்கத்துடன் கற்பனை செய்யப்பட்டது என்பது பலரது கருத்து. 'விஷ்ணு என்ற கடவுள் ஒரு சத்திரிய வீரனாக வணங்கப்பட்டு ஆரியக் கூட்டத்தாருக்கு அடிக்கடி போரைச் செய்யவும் அவர்களுக்கு வெற்றியுண்டாக்கவும் அவதாரம் செய்வதாக எல்லோராலும் கருதப்பட்டது'.

இத்தகைய 'வஞ்ச அக நோக்கம்' இரணியன் கதைப் படைப்பில் இருப்பதாக உறுதியுடன் நம்பிய பாரதிதாசன் தன் அகமனத்தெழும் தன்மானத் தமிழுணர்வு அழுத்தமாக மேலோங்க, இரணியனை இணையற்ற வீரனாக்கி நாடகம் எழுதத் துணிகிறார். புராணக் கதையின் வஞ்சக நோக்கத்தைப் பொருளற்ற) உண்மை உரையாக்கித் தன் உணர்ச்சிகளுக்கு உருக்கொடுத்து புராணத்தில் புதுமைக் குரலெழுப்பி உரிமையும் பெருமையும் மீட்டுயிர் பெற்றெழத் தன் நாடகப் படைப்புத் திறனை நன்கு பயன்படுத்தி இந்நாடகத்தைத் தன் உண்மை உணர்ச்சியின் உருவாக்கமாகச் சமைத்துள்ளார்.

பாரதிதாசன் பல நாடகங்கள் எழுதி இருந்தாலும் இந்த ஒரு நாடகத்துக்கு மாத்திரம் 'இரணியன் அல்லது இணையற்ற வீரன்' என இருபெயர் சூட்டியுள்ளதின் நோக்கத்தைச் சிந்திக்க வேண்டும். இந்நாடகம் மக்களிடம் பரப்பப் பெற்றுள்ள புராணக் கதையின் அடிப்படையில் ஆக்கப் பெற்றது என்பதை உணர்த்த 'இரணியன்' என்ற பெயர் முன்னர் கொடுக்கப்படுகிறது.

நாடகத் தலைவன் புராணக் கதையில் இடம்பெறும் இரணியன் அல்லன்; இவன் 'இணையற்ற வீரன்' என்ற உயர்நிலைக்குப் புதுமையாக மாற்றப்பட்டுள்ளான் என்பதை உறுதிப்படுத்த இரண்டாவது பெயர் பின்னர் கொடுக்கப்படுகிறது. முதற்பெயர் புராணத்தை நினைவுபடுத்தும். இரண்டாம் பெயர் புராணப் புதுக்கலைத் தெளிவுபடுத்தும். கருத்தேர்வை நாடகப் பெயர் சூட்டலில் சுட்டியுள்ள பாங்கை 'இரணியன் அல்லது இணையற்ற வீரன்' நாடகப் பெயரமைப்பு கொண்டு தெளியலாம்.

இந்த நாடகம் ஆரியர் தமிழருக்கெதிராய்ச் செய்த சூழ்ச்சியை அம்பலப்படுத்தும் நோக்கம் கொண்டது. இதே கருத்தைப் பாவேந்தர் தன் கவிதை வரிகளிலும் காட்டிச் செல்வதைக் காணலாம்.

> இன்றும் தமிழரை இராக்கதர் எனச் சிலர்
> பன்னுகின்றனர் என்பது பொய்யா?
> இவைகளை நாம் எண்ண வேண்டும்.
>
> (பாரதிதாசன் கவிதைகள் தொகுதி II: ப.114)

இதே உணர்வைக் கருவாகக் கொண்டு 'வஞ்ச விழா' நாடகத்தைப் புனைந்துள்ளார். தமிழரின் துணையுடன் தமிழரை நய வஞ்சகமாக வென்று ஆரிய ஆதிக்கத்தை நிலை நாட்டிய தீபாவளி நாளை வஞ்ச விழா நாள் என்று பாவேந்தர் குறிப்பிட்டுக் காட்டுகிறார்.

### தமிழர் அறவுணர்வு :

தமிழர் நீதியை நிலை நாட்டுவதில் நிகரற்றவர் என்பது 'நல்ல தீர்ப்பு, பிசிராந்தையர்' ஆகிய நாடகங்கள் வாயிலாக விளக்கப்படுகிறது. சங்க இலக்கியத் தழுவலாகப் பிசிராந்தையார் நாடகத்தின் மூலப்பகுதி விளங்கினாலும் அதன் உயிர்ப்பாக அமைவது நாடகத்துள் நாடகமாக விளங்கும் பாண்டிய நாட்டு மங்கையான பச்சைக்கிளியின் கொலை வழக்காகும்.

மொத்தம் 34 காட்சிகள் கொண்ட நாடகத்தில் 15 காட்சிகள் (கா. 3 முதல் 17 வரை) நாடகத்துள் நாடகமாக வந்து நாடு காக்கும் நல்ல மன்னன் நீதியை எவ்வாறு காக்க வேண்டும் என்பது அழுத்தம் திருத்தமாக விளக்கப்படுகிறது. நாடக ஆசிரியர் தேர்ந்தெடுத்த கருவைப் பிசிராந்தையார் வாயுரையாக வெளியிட்டுக் காட்டுகிறார்.

'எல்லாரும் நல்லவராய் இருந்தால் மட்டும் போதாது. எல்லாரும் செல்வராய் இருந்தால் மட்டும் போதாது.... எல்லாரும் வல்லவராயும் இருத்தல் வேண்டும்'. (கா:15, பக் 88). ஒவ்வொருவரும் தன்னைக் காத்துக் கொள்ளும் திறமையுடையவராக இருத்தல் வேண்டும். அத்தகைய திறமையை அனைத்து மக்களுக்கும் ஊட்ட வேண்டியது அரசின் கடமை. அதைச் செய்யாத வரை அரசனும் அவனைச் சேர்ந்தோரும் குற்றவாளிகளே என்ற கருவை விளக்கிக் காட்டும் நாடகத்தின் தீர்ப்பு.

### தமிழ் இலக்கியத் தழுவல் :

இலக்கியத் தழுவலாகத் திகழும் 'சேர தாண்டவம்' தன் கருத்தேர்வாகக் கலையைக் கொள்கிறதா அல்லது காதலை ஏற்கிறதா என்ற ஐயப்பாடு எழ இடமுள்ளது. நாடகத் தலைவன் ஆட்டனத்தி நடனக் கலை வல்லான்; ஆடுவோனை யாரெனத் தெரியாமலேயே அவனது ஆட்டங்கண்டு அவன் பேரில் நாட்டங்கொண்டு சோழநாட்டு இளவரசி ஆதிமந்தி காதலில் கவிழ்ந்து கருத்தழிகிறாள். ஆட்டனத்தி சோழ நாட்டுக்கு வந்ததே ஆதிமந்தியின் அழகு மயக்கத்தால்தான் என்பது முன்னே விளக்கப்படுகிறது.

நாடகத்தின் பிற்பகுதி ஆட்டனத்தியை விரும்பும் இரு பெண்களின் நிலையை விளக்கிக் காட்டுகிறது. ஆதிமந்தி அவனுக்காக உயிர் சுமந்து, அவனின்றி உயிர் காக்க முடியாத நிலையில் தவிக்கிறாள். நெய்தலி (மருதி) அவனுயிரைக் காத்து, அவனைக் காதலித்து, அவன் தனக்குக் கிடையா நிலையில் தன்னுயிரைக் கடல்மடியில் போக்குகிறாள்.

ஆட்டனத்தியோ அவளையும் இவளையும் காதலித்து ஆணின் காதல் அங்குமிங்குமாக அலைபாயும்தன்மையுடையது என்பதைக் காட்டி விடுகிறான். காதலுணர்வின் உளவியல் கூறுகள் நாடக ஓட்டத்தில் அலசப்படுவதைச் சிறப்பாகக் காண முடிகிறது.

நாடகத்தின் பெயர் கலையுடன் தொடர்புடைய 'சேர தாண்டவம்' என்றிருந்தாலும் நாடகத்தின் கரு காதலுணர்வைக் கொண்டே விளங்குவதைச் சிந்தித்து அறியலாம். நாடக ஆசிரியர் தான் எழுதிய முன்னிலக்கியம் காட்டும் கருத்துக்களுக்கு அப்பால் சென்று ஆண் பெண் உறவின் சிறப்பையும் சிக்கலையும் எடுத்துக் காட்டுவதைக் காணலாம்.

### மக்களாட்சி மலர்தல் :

சிலவிதமான அரசியல் கோட்பாடுகளை நுட்பமாக அலசி ஆய்ந்து நடப்பியலுக்கு அவை எந்த அளவுக்குப் பொருந்தி வரும் என்பதைச் செயல் முறைப்படுத்திக் காட்டும் முயற்சியாகச் 'சௌமியன்' நாடகம் விளங்குகின்றது. கொடுங்கோலாட்சி ஒழிக்கப்பட வேண்டும்; மன்னராட்சி மாய்ந்து மக்களாட்சி மலர வேண்டும். இதற்கு வழிமுறை என்ன என்பதைக் காண நாடகம் முயல்கிறது.

யாருக்கும் எந்த நோவையும் செய்யாது அன்பால் அனைவரையும் அரவணைத்து அறவழி நின்று அரசாணை செலுத்த முடியுமா என்ற கொள்கை நல்ல நம்பி என்பாரைக் கொண்டு சோதனைக்கு உட்படுத்தப்படுகிறது.

காலம் கனியும் வரை காத்திருந்து நல்ல வாய்ப்பு கிடைத்ததும் இருக்கும் பலம் அனைத்தையும் திரட்டிக் கொடுமையை எதிர்த்து அழிக்க வேண்டும் என்ற கொள்கை சந்திரசேனர் என்பாரைக் கொண்டு சோதிக்கப் படுகிறது.

கொடுங்கோலன் ரவிகேதுவின் கொடுஞ்செயல் நல்ல நம்பியையே வாளெடுத்து அவள் கையை வெட்டி வீழ்த்தும்படி செய்து விடுகிறது. கோபதி என்ற பாத்திரம் கூறுவது போன்று, 'லட்சியத்தை அடையும் மார்க்கத்தில் இம்சை இருக்கத்தான் வேண்டும்; இருப்பது இயற்கை' (கா 2 அ, பக் 26) என்பதுதான் நாடக ஆசிரியரின் கொள்கையோ என்று கருத இடமுள்ளது.

நாடகத் தலைவனான சௌமியன் அறம் திறம்பாதவன். ஆயுதம் தாங்கி அறப்போராற்ற அஞ்சாதவன்; அன்புடையவன். கொடுங்கோலை எதிர்த்து வெற்றி பெறுகிறான். அரச பதவி அவனைத் தேடி வருகிறது. 'பொல்லாங்கு என்பவை எல்லாம் தரும் இப்பதவியை நான் வேண்டேன்' (கா.18, பக் 93) என்று கூறி முடியைக் கழற்றிக் குடிமக்களின் அடிகளுக்குச் சூட்டி விடுகிறான். முடியாட்சி முடிவுறுகிறது; குடியாட்சி மலர்கிறது. இதுதான் சௌமியின் நாடகத்தின் வாயிலாகப் பாரதிதாசன் அறிவுறுத்தும் அரசியல் கொள்கை என நம்பலாம்.

### அன்பின் பெருமை உணர்த்தல் :

அன்பின் வழியது உயிர் வாழ்க்கை. அறத்தின் வழியது நல்வாழ்க்கை. அன்பும் அறமும் அமைதிக்கு வழியமைக்கும். ஆனால் அன்பும் அறமும் கொண்டு தன்னலம் கருதாது பிறர்நலம் பேணுவோன் அவதிப்பட்டு அழிந்து போவதை 'அமைதி' என்ற நாடகம் விளக்கிக் காட்டுகிறது.

### பெண்ணின் பெருமை கூறல் :

பெண்ணின் பெருமையைக் கருவாகக் கொண்டு 'குடும்ப விளக்கும் குண்டுக் கல்லும்' என்ற குறு நாடகமும் 'படித்த பெண்கள்' என்ற பெரு நாடகமும் பாவேந்தரால் படைக்கப் பெற்றுள்ளன. இளம் பெண்களின் மனவுணர்வை மதியாது தன்னலத்துக்காக முதிய ஆண்களுக்கு அவர்களைப் பலிகொடுக்கும் கொடுமையைப் போக்க 'கற்கண்டு' நாடகம் முற்படுகிறது.

காதலுணர்வு இயற்கையானது. சாதிவேறுபாடு செயற்கையானது. 'கழைக் கூத்தியின் காதல்' நாடகத்தில் இவ்விருவகை உணர்வுகளும் முட்டி மோதுகின்றன. இம்மோதலின் முடிவை நாடக முடிவு சுவையாகக் காட்டுகிறது. காதல் வயப்பட்ட அரசனும் கழைக் கூத்தியான முத்துநகையும் உரையாடுகின்றனர்.

*முத்து நகை: சாதியுண்டா?*

*அரசன் : இல்லை.*

*முத்து நகை: மணந்து கொள்ள தடையில்லையே?*

*அரசன் : இல்லை.*

*(கா. 24, பக் 78)*

செயற்கையான சாதியுணர்வு மாய்ந்து இயற்கையான காதலுணர்பு முகிழ்ந்து அரசனும் கழைக்கூத்தியும் தழுவிக் கொள்வதில் நாடகத்தின் கரு முற்றி முதிர்ந்து விடுகிறது.

### சமய வெறியைக் கண்டித்தல் :

சமயவெறியைக் கண்டிக்கும் நோக்கமுடன் 'சமணமும் சைவமும்' உருவாக்கப்பட்டுள்ளது. தவறான சமயவுணர்வை எடுத்துக்காட்டும் வகையில் 'கோயில் இரு கோணங்கள்' என்ற நாடகம் எழுதப்பட்டுள்ளது.

பாரதிதாசன் தன்னுடைய நாடகங்களுக்குக் கருத்தேர்தல் செய்துள்ள முறையைச் சிறப்பாகக் கருதலாம். தமிழின உணர்வு, பகுத்தறிவுச் சிந்தனை, ஏற்றத் தாழ்வற்ற சமுதாய அமைப்பு, சாதி சமய வேறுபாடற்ற சமூக அமைப்பு, பெண்ணின் பெருமை, கருத்தொருமித்த காதலின் சிறப்பு, மனமொத்த குடும்ப வாழ்வு, கொடுங்கோலின் வீழ்ச்சி, குடியரசின் மலர்ச்சி போன்று பலவகையான கருப்பொருளைக் கொண்டு நாடகங்களைப் பாவேந்தர் படைத்துள்ளார்.

### கட்டுக் கோப்பு முறை :

நாடக அளவைக் கொண்டு பாரதிதாசனின் நாடகங்களை மூன்றாகப் பிரிக்கலாம். அம்மைச்சி, வஞ்சவிழா, ரஸ்புடீன், தலைமலை கண்ட தேவர் போன்றவை ஓரங்க நாடகங்கள். நல்ல தீர்ப்பு, கற்கண்டு, கழைக் கூத்தியின் காதல், குடும்ப விளக்கும் குண்டுக் கல்லும் ஆகியவை குறு நாடகங்கள். சேர தாண்டவம், சௌமியன், இரணியன் அல்லது இணையற்ற வீரன், பிசிராந்தையார் முதலியவை பெரு நாடகங்கள். அளவால் வேறுபடும் நாடகங்கள் கட்டுக் கோப்பு முறையாலும் வேறுபடும் என்பதை அறிய வேண்டும்.

நாடகக் கரு முறையாக விளக்கப்பட்டு நோக்கம் முழுமையாக நிறைவேறும் தரமாகக் கட்டுக்கோப்பு அமைய வேண்டும். புராணக் கதையில் தீயவனாகக் காட்டப்படும் இரணியன் பாரதிதாசனின் நாடகத்தில் இணையற்ற தமிழ் வீரனாகக் காட்டப்படுதல் வேண்டும். அதற்காகப் புராணக் கதையில் நல்லவனாக்கப்படும் பிரகலாதனை முதல் காட்சியிலேயே ஆரியர் சூழ்ச்சிக்கும் பார்ப்பன நங்கைக்கும் அடிமையாக்கி அவனைப் பற்றி ஒரு தாழ்வான எண்ணத்தை நாடகம் காண்போரின் மனதில் ஆசிரியர் படரச் செய்து விடுகிறார்.

முதல் இரண்டு காட்சிகளில் ஆரியரின் நயவஞ்சகத் தன்மைகளையும் அவர்களின் சூழ்ச்சியில் சிக்கி பெற்ற தந்தையைக் கூட அவர்களுக்காகக் கொல்லத் துணிந்த பிரகலாதனையும் காட்டிய நாடக ஆசிரியர் மூன்றாம் காட்சியில் பிரகலாதனைப் பற்றோடு விரும்பும் அன்புமிக்க தந்தையாக இரணியனை எடுத்த எடுப்பில் அறிமுகப் படுத்துகிறார்.

மகனுக்கு இளவரசுப்பட்டம் கட்டத் துடிக்கும் இரணியனையும் ஆரியப் பெண்ணிடம் மயங்கி தந்தையைக் கொல்லத் துணிந்த பிரகலாதனையும் ஒப்பிட்டுக் காணுமாறு செய்ததில் நாடக ஆசிரியரின் படைப்புத்திறனும் நோக்க நிறைவும் செவ்வனே விளங்கி விடுகின்றன.

இரணியனைக் கொல்ல முயன்ற ஆரிய நங்கை சித்ரபானுவைக் கொண்டே அவனுடைய பெருமையைப் பாரதிதாசன் விளக்கிக் காட்டுவது நல்ல நாடக உத்தியாகும். அவள் கூறுகிறாள்,

ஆஹா! என்ன பெருந்தன்மை! பகைவர்க்கு
அருள்புரியும் இந்தத் தமிழ் மன்னன் தன்மை
எப்படிப்பட்டது. ஆயினும் எமது ஆரியர்
கட்டளைப்படி தமிழர் உயர்வைப் பற்றிப்
பாராட்டக் கூடாது'!

(கா.5, பக் 61)

இவ்வுரையின் முற்பகுதி தமிழ் மன்னனின் பெருஞ்சிறப்பையும் பிற்பகுதி ஆரியரின் சுயமையையும் விளக்கும் தன்மை உடையன. நாடகக் கட்டுக் கோப்புக்கும் நோக்க ஈடேற்றத்துக்கும் இத்தகைய உரையாடல்கள் நன்கு உதவும். இரணியன் இணையற்ற தமிழ் வீரன் என்று உறுதிப்படுத்தும் வாயில்களாக இவற்றைக் கருதலாம்.

இணையற்ற வீரனாக உறுதிப் படுத்தப்பெற்ற இரணியன் ஆரியரின் சூழ்ச்சிக்குப் பலியா-கப்போகிறான். அதற்குக் காரணம் தமிழ் மக்களின் அறியாமையாகும் என்பதை நாடக ஆசிரியர் அழுத்தம் திருத்தமாகக் கூறி விடுகிறார்.

இரணியனும் அமைச்சனும் மாறுவேடம் பூண்டு நாட்டு மக்களின் மன நிலையை அறிய விரும்புகிறார்கள். அப்பொழுது ஒருவன் கூறுகிறான்.

நான் ஆரியர் சொல்வதைத்தான் நம்ப
வேண்டும்'. (கா.10, பக். 86).

இவ்வுரையை அனைவரும் ஆதரிக்கிறார்கள். அதைக்கண்ட இரணியன் மிகவும் மனம் வருந்தி,

ஆரியர் சூழ்ச்சியாலே அறிவை இழக்கின்றாரே
சீரிய தமிழரெல்லாம்-மந்திரி
சிந்தனை தீர்ந்தனரே (கா.10, பக்.87)

இவ்வுரையால் இணையற்ற வீரனான இரணியன், ஆரியரின் வஞ்சக உரையை அறிவிழந்து நம்பிய நாட்டுமக்களின் ஆதரவின்மையால் விரைவில் கொல்லப் படப் போகிறான் என்பதை ஆசிரியர் குறிப்பாக உணர்த்திக் காட்டுவதாகக் கருதலாம்.

ஆரியரின் சூழ்ச்சியால் இரணியன் கொல்லப்படுகிறான். அவனுடைய குறிக்கோள் மாய்ந்துவிடக் கூடாதென்று பாரதிதாசன் விரும்புகிறார். பழியேற்று நிற்கும் படைத்தலைவன் வாயுரையால் தமிழ் மக்களுக்கு அறைகூவல் விடுகிறார்.

ஏ தமிழ் பெருமக்களே! .... ஆரியர்களை
அகற்றுங்கள். தமிழர் நாட்டைத் தமிழர்
நாடாக்குங்கள்'.(கா. 15, பக்.107).

தமிழ் மக்களுக்குத் தன்மான உணர்வு ஊட்டுவதில் இந்த நாடகம் நல்ல வெற்றியைப் பெற்றுள்ளது. நாடகத்தின் கட்டுக்கோப்புமுறை இத்தகைய சிறப்புக்குப் பெருங்காரணமாக அமைகிறது.

*நாடகத்துள் நாடகம் :*

பொதுவாக நாடகத் தொடக்கம் முக்கிய பாத்திரங்களையும் செயற்பாடுகளையும் 'அறிமுகப்படுத்தும் பகுதியாக அமையும்.' 'படித்த பெண்கள்' 'சேரதாண்டவம்,' 'கற்கண்டு' போன்ற நாடகங்களில் முற்பகுதி முறையான அறிமுகம் அமைந்து உள்ளது. பிசிராந்தையார் நாடகத்தில் பாத்திர அறிமுகம் இருப்பினும் முக்கிய செயற்பாட்டு அறிமுகம் இல்லை. இந்நாடகத்தில் மூன்றாம் காட்சியிலிருந்து வேற்றுச் செயலாக நாடகத்துள் நாடகம் தொடங்கி கட்டுக்கோப்பு முறையையே மாற்றி விடுகிறது.

முக்கிய நாடகத்துக்கும் நாடகத்துள் நாடகத்துக்கும் இறுக்கமான தொடர்போ பிணைப்போ இருப்பதாகத் தெரியவில்லை. பிசிராந்தையாரின் சீர்மிக்க வாழ்வின் செம்மையினை எடுத்துக் காட்டுவது முக்கிய நாடகம். ஆனால் நாடகத்துள் நாடகமோ பச்சைக்கிளி என்ற பெண்ணின் கொலையைப் பற்றித் துப்பு துலக்குவதாக அமைந்துள்ளது.

இரண்டும் வேறு வேறாக இருப்பினும் நாடகத்தைப் படிக்கும் போது ஒன்றுக்கொன்று துணைநிற்பது போன்று இணைவதைக்கண்டு உணர முடிகிறது. தமிழ் மன்னன் நீதி காக்கத் துடிப்பதும் அதற்குப் புலவர் பெருந்தகை நன்கு உதவுவதும் சிறப்பாகக் கருதக்கூடிய பண்புகள்.

எல்லாவற்றுக்கும் மேலாக அனைவருக்கும் அனைத்துக் காலத்துக்கும் பொருந்தக்கூடிய அறிவுரை பிசிராந்தையாரின் வாயுரையால் கூறப்படுகிறது. ஒவ்வொருவரும் தன்னைத்தானே காத்துக் கொள்ளும் ஆற்றலைப் பெற்றிருக்க வேண்டும். அந்த ஆற்றலை அரசு மக்களுக்கு உண்டாக்க வேண்டும். (கா.16, பக் 89). வாழ்வுக்கு உதவும் கருத்துக்குச் சிறப்பிடம் கொடுக்கப்படுகிறது. கருத்து விளக்கத்துக்கு நன்கு உதவுமாறு நாடகக் கட்டுக்கோப்பு அமைக்கப்பட்டிருக்கிறது.

*சிறப்பு அறிமுகம் :*

'சௌமியன்' நாடக அறிமுகம் சிறிது மாற்றமுடன் அமைந்துள்ளது. ஆகையினால் சிறப்பாகத் தோன்றுகிறது. நாடகத்தின் முக்கிய பாத்திரங்களைப் பற்றிய பேச்சே தொடக்கத்தில் இல்லை. ரவிகேது மன்னனின் கொடுங்கோலை அழிப்பது நாடகத்தின் முக்கிய நிகழ்ச்சி. நாடகத் தொடக்க காட்சிகளான 1, 1அ, 1ஆ ஆகிய மூன்றிலும் ரவிகேதுவின் நாட்டிலுள்ள வஞ்சக கிராமபதி செய்யும் கொடுஞ்செயல்கள் கூறப்படுகின்றன. காட்சிகள் 2, 2அ ஆகிய இரண்டிலும் நகரபதி செய்யும் கயமைகள் விளக்க ப்படுகின்றன.

நாடகத்தின் முக்கியமான செயல் ஓட்டத்துக்குக் காரணமான ரவிகேது நடத்தும் கொடுங்கோலாட்சியின் கடுமையை உணர்த்தும் முற்கூறாக இந்த அறிமுகக் காட்சிகளை நாடக ஆசிரியர் அமைத்துள்ளதாகக் கருதலாம். கீழிருப்போரின் கொடுந்தன்மை காட்டி மேலிருப் போரின் பெருங்கொடுமையை அழுத்தம் திருத்தமாக அறிவிக்க விரும்பி இவ்வாறு அறிமுகம் செய்யும் முறையை ஆசிரியர் கையாண்டிருப்பதாகத் தோன்றுகிறது. நாடகக் கட்டுக்கோப்பில் இத்தகைய அறிமுக அமைப்பு முறை மிகப்பயனுடையதாக அமைந்து நாடக ஆசிரியரின் படைப்புத்திறனைச் சிறப்படையச் செய்கிறது.

மூன்றாவது காட்சியிலிருந்து முக்கிய பாத்திரங்கள் அரங்கேறிக் கொடுங்கோலினை வீழ்த்த முற்படுகின்றனர். இதன் தொடக்கம் முக்கிய செயலோட்டத்தின் அறிமுகம் போன்றே அமைகின்றது. இப்பகுதியை இயல்பு அறிமுகமாகக் கருதுவதே பொருத்தமாகும். அவ்வாறாயின்

இதற்கு முன் கூறியதைச் சிறப்பு அறிமுகமாக ஏற்றுக் கொள்ளலாம். அவ்வாறு கருதுவது இத்தகைய கட்டுக்கோப்பு அமைப்பு முறைக்குப் பொருந்தும் முடிவாக இருக்கும்.

### பல நிகழ்ச்சிகளைத் தொடுத்துப் பின்னுதல் :

நெருக்கமான தொடர்பு இல்லாத பல நிகழ்ச்சிகளைத் தொடுத்து நாடகத்தைக் கட்டிக் கோக்கும் முறையைப் பாரதிதாசன் கையாண்டுள்ளார். இம்முறைக்கு 'அமைதி' நாடகம் நல்ல எடுத்துக் காட்டாக அமையும். தன்னலம் கருதாது பொது நலம் நாடும் சிறந்த பாத்திரமாக மண்ணாங்கட்டி என்பான் நாடகத் தொடக்கத்திலிருந்து முடிவுவரை செயல்படுகின்றான். அவனுடைய பல்வேறு செயல்கள் இணைக்கப்பெற்று நாடகம் உருவாகிறது.

இறந்த பாட்டியின் இறுதிச் சடங்கை முடித்துவிட்டுத் தன் சிறிய கூரை வீட்டுக்கு மண்ணாங்கட்டி திரும்புகிறான். இது நாடகத் தொடக்கம். மரத்தில் கட்டப்பட்டிருந்த குறவனை விடுவிக்கும் முயற்சியில் காவலர்களால் தாக்கப்பட்டு மண்ணாங்கட்டி இறக்கிறான். இது நாடக முடிவு. தொடக்கத்துக்கும் முடிவுக்கும் இடையில் மண்ணாங்கட்டியின் நற்செயல்கள் நாடகக் கட்டுக்கோப்பு நிகழ்ச்சிகள் ஆகின்றன.

வீடில்லாத ஒருவனுக்குத் தன் வீட்டை நன்கொடையாகக் கொடுத்தல் (கா 3) , கட்ட துணியில்லாத முதியவளுக்குத் தன் பாட்டியின் புடவையை அன்பளிப்பாகக் கொடுத்தல் (கா.4.) வேலி ஓரத்தில் கண்டெடுத்த அனாதைக் குழந்தையைப் பிள்ளையில்லாத கணவனுக்கும் மனைவிக்கும் கொடுத்ததுடன் அதை வளர்க்க ப் பணமும் நகையும் கொடுத்தல் (கா.5), கழுத்தில் கயிறு இறுகித் துடிக்கும் கன்றுக்குட்டிக்கு உதவல் (கா.6), திருடரிடம் பொருளை மீட்டுக் கொடுத்தல் (கா.7), வறுமையுள்ள மக்களுக்கு உதவல் (கா.10), குற்றவாளிகளை இனம்காட்டி ஏழைமக்களை விடுவித்தல் (கா.16) போன்று பல நிகழ்ச்சிகளை இணைத்து 'அமைதி' நாடகம் பின்னப்பெற்றுள்ளது.

### ஓரே நிகழ்ச்சியை விளக்கிப் பின்னுதல் :

ஒரு நிகழ்ச்சியை, வளர்ச்சியை விளக்கி நாடகக் கதையைப் பின்னும் முறையே பெருவழக்காக உள்ளது. பாவேந்தர் 'கற்கண்டு' நாடகத்தில் இம்முறையை மிகத் தெளிவாகப் பின்பற்றி இருப்பதைப் பார்க்கலாம். நாடகக் கதை மிக எளிமையானது.

வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க இயலாத ஒருவர் தன் பருவமகளை முதியவர் ஒருவருக்கு மணம் செய்து கொடுக்க ஒப்புக் கொள்கிறார். இதை மகள் சற்றும் விரும்பவில்லை. தருமன் ஒரு தெருப்பாடகன். இளைஞன்; அவன் முதியவர் அனைவரையும் தன் திறமையால் ஏமாற்றி அப்பெண்ணை மணந்து கொண்டதை நாடகம் நயமாக விளக்கிக் காட்டுகிறது.

இவ்வொரு நிகழ்ச்சியே நாடகக் கதைப்பின்னலுக்கு மூலமாகிறது. ஆனால் அதன் விளக்கத்தில் பல சுவையான காட்சிகள் இடம் பெறுகின்றன. தருமன் சிறுத்தொண்டபத்தன் கதை பாடுதல், சிங்கார முதலியாரிடம் காவல்காரன் வேலை பெறல், வீரப்ப முதலியாரை ஏமாற்றல், பெண் வேடம் பூண்டு கற்கண்டைச் சந்தித்தல், அவள் மனம் அறிந்து மணந்து கொள்ளுதல், வீரப்ப முதலியாரை விரட்டி அடித்தல், கற்கண்டுடன் வாழத் தொடங்கல் ஆகிய அனைத்தும் ஒரே நிகழ்ச்சியின் விரிவாக அமைவதைக் காணலாம்.

நாடகக் கதைப் பின்னலில் பாரதிதாசன் பல முறைகளைக் கையாள்கிறார். அவை அனைத்தும் நாடக ஆசிரியரின் கருத்து விளக்கத்துக்கு நன்கு உதவுகின்றன. கருத்துக்களுக்கு

அழுத்தம் கொடுப்பது போன்று நாடகக் கலைத்தன்மைக்கும் இத்தகைய கட்டுக்கோப்பு முறைகள் ஓரளவு உதவுவதாகக் கூறலாம்.

## ஆள் மாறாட்டம் செய்தல் :

நாடக ஓட்டத்தில் பங்குபெறும் பாத்திரங்களை ஆசிரியர் ஆள்மாறாட்டம் செய்து காட்டுகின்றார். ஆள் மாறாட்டம் செய்ய பல முறைகளைக் கையாள்கின்றார். உருவ ஒற்றுமையுடைய இருவரை ஒருவர் மாற்றி ஒருவராகச் செயல்படச் செய் விடுவதைக் காணலாம்.

'சௌமியன்' நாடகத்தில் சௌமியனும் தௌமியனும் உருவத்தோற்றத்தில் ஒற்றுமை உடையவர். ஆகையினால் சௌமியன் இருக்க வேண்டிய சிறையில் தௌமியன் இருக்கிறான். சௌமியன் படைதாங்கிச் சென்று வெற்றிபெற்று முடிபுனைந்து மன்னனாகிறான். நாடகக் கதைப்பின்னலின் உச்சநிலையே ஆள் மாறாட்ட உத்தியால் சாதிக்கப்பட்டு விடுவதைக் காணலாம்.

உண்மையான ஆளைத் தெரியாதவரிடம் பொய்யான ஒருவனை ஆள் மாறாட்டமாகக் காட்டி நாடகத் தேவையைச் சாதித்து விடுவதையும் பார்க்கலாம். 'கற்கண்டு' நாடகத்தில் தருமன் என்ற தெருப்பாடகன் தன்னைப் பெரும் பணக்காரரான சிங்கார முதலியாராகக் காட்டி வீரப்ப முதலியாரை நம்பச் செய்ததினால் அவர் மணக்க விரும்பிய இளம்பெண்ணான கற்கண்டைத் தருமன் பெருஞ்சிக்கலின்றி மணக்க முடிந்தது. ஆசிரியர் விரும்பிய கருத்தை நாடகத்தில் சிறப்பாகப் புகுத்திக் காட்ட இந்த ஆள் மாறாட்ட உத்தி மிகவும் பயன்பட்டுள்ளது.

உண்மை வேடத்தை மாற்றி மாறுவேடம் புனைந்து ஆள்மாறாட்டம் செய்து கதைப் பின்னலுக்கு உதவும் முறையையும் பாரதிதாசன் கையாண்டு தான் விரும்பிய அளவுக்கு வெற்றியைப் பெற்றிருப்பதைப் 'படித்த பெண்கள்' நாடகத்தில் பார்க்கலாம்.

நாடகத தலைவனான பொன்னன் பல தவறுகளைச் செய்து வாழ்க்கையை வீணடிக்கிறான். அவனுடைய மனைவி மின்னொளி தன் தமக்கை இன்னமுதுடன் கூடிக் கணவனைத் திருத்தி நல்வழிப்படுத்த முயல்கிறாள். அவர்களுடைய வண்டி ஓட்டுநரான மரக்கால் பெண்கள் இருவருக்கும் நன்கு உதவுகின்றான்.

பொன்னன் குடும்பச் சொத்துக்காகத் தன் தம்பி கண்ணப்பனைக் கொல்ல, மரக்கால் மூலம் இரண்டு அடியாட்களை அமர்த்துகிறான். பெரிய கொய்யா, சிறிய கொய்யா ஆகிய இருவரும் பொன்னனிடம் தாங்கள் கண்ணப்பனைக் கொன்ற முறையை விளக்கிக் கூறுகின்றனர். அந்த விளக்கத்தைக் கேட்டதும் பொன்னன் மனம் பதறித் துடிக்கிறான்.

தம்பியைக் கொன்ற குற்றவுணர்வு அவன் நெஞ்சத்தைத்தாக்கி வதைக்கிறது. பொன்னன் நிலை குலைந்து மனம் உடைந்து கத்துகிறான். அரற்றி அழுகிறான். தன் தவறை முழுமையாக உணர்கின்றான். இனி இத்தகைய கொடுமைகளைச் செய்ய நினைக்கவே மாட்டான் என்ற நிலை உருவாகிறது.

தம்பியைக் கொன்று தான் உயிர் வாழ்வதா என்று பொன்னன் மனம் நொந்து துடிக்கும்போது பெரிய கொய்யாவும் சின்ன கொய்யாவும் தங்கள் பொய்வேடம் களைந்து தங்கள் மெய்யுருவான இன்னமுதாகவும் மின்னொளியாகவும் தோன்றுகின்றனர். நாடகக் கட்டுக்கோப்பில் உச்சநிலை எட்டப்படுகின்றது. கொல்லப்பட்டதாகக் கருதப்படும் கண்ணப்பன் கண்முன் உயிருடன் நடந்து வருகிறான். தீய மனத்தைத் தூய மனமாக்க ஆள்மாறாட்டம் உதவியிருக்கும் முறையைக் காணலாம்.

நாடகக் கட்டுக்கோப்பு நல்ல முறையாக அமையவும் எதிர்பார்த்த வெற்றியை நாடகம் பெற்றுச் சிறக்கவும் ஆள்மாறாட்ட உத்தி நன்கு பயன்பட்டுள்ளதைக் கண்டு உணரலாம். இந்த உத்தியைப் பல முறைகளில் கையாளலாம் என்பதைப் பாரதிதாசன் தன் நாடகங்கள் வாயிலாக விளக்கிக் காட்டியுள்ளார்.

### குறிப்பால் கருத்துணர்த்தல் :

கருத்து விளக்கத்துக்காகக் குறிப்பு காட்டுதல் ஆசிரியர்களின் வழக்கம். சிலவற்றை வெளிப்படையாகக் கூறுவது கட்டுக்கோப்பைக் குலையச் செய்வது ஆகிவிடும். மேலும் அத்தகைய வெளிப்பாடு சுவையைக் குன்றச் செய்து விடுவதும் உண்டு. ஆகையினால் குறிப்பால் கருத்துணர்த்திக் கட்டுக்கோப்பைச் சிறப்படையச் செய்து விடுவது நல்ல படைப்புத் திறனாகும். பாரதிதாசன் மிகத் திறமையாக இந்த உத்தியைக் கையாள்வதைக் காணலாம். 'இரணியன் அலலது இணையற்ற வீரன்' நாடகத்தில் பிரகலாதன் ஆரிய நங்கையின் சித்ரபானுவின் அழகு மயக்கில் விழுந்து விடுகிறான். இனி அதிலிருந்து எழவோ தப்பவோ அவனால் முடியாது. பிரகலாதனின் நிலையை வஞ்சக நெஞ்சமுடைய சித்ரபானுவின் அண்ணன் காங்கேயன் ஓர் உவமையால் கூறுகிறான்.

'தேன்குடத்தில் ஈ விழுந்து விட்டது' (கா.1, பக் 39) தேன் இனிதாயினும் அது இருக்கும் குடத்துக்குள் விழுந்த ஈக்குத் தப்பும் வழியே கிடையாது. அது அழிவை அடைந்தே தீர வேண்டும். அதுபோல் சித்ரபானுவின் அழகில் மயங்கிய பிரகலாதனுக்கு அழிவு வருவது மிக உறுதியாகும் என்பது குறிப்பு.

இதே போன்று ஒரு குறிப்பு 'கழைக் கூத்தியின் காதல் ' என்ற நாடகத்தில் வந்து எத்தகைய பொருள் விளக்கம் தருகிறது என்பதைப்பார்க்கலாம். கழைக் கூத்தியான முத்துநகை நல்ல அழகி, அவளைஅரசர் பார்க்க வருகிறார். இத்தகைய அழகியை அரசர் கண்டால் அவரது நிலை என்ன ஆகும் என்பது பற்றி தோழியர் உரையாடுகின்றனர்.

வள்ளி : முத்துநகை, உன்னை அரசர் கண்டால்
என்ன ஆகும்? நீ தேன்குடம்! அவர் ஈ!
முள்ளி : தேன்குடம் வாய் திறந்தால்தானே!

(கா. 8, பக்.46)

இக்குறிப்பு உணர்த்தும் கருத்து சிந்தனைக்கு உரியதாகும்.. அரசர் முத்துநகையின் அழகில் மயங்குவது உண்மை. ஆனால் அந்த மயக்கத்தால் அவருக்கு அழிவு வராது முத்துநகை காப்பாற்றி விடுவாள். இதனை ஆசிரியர் குறிப்பாகக் காட்டுவதைக் காணலாம்.

இவ்வாறு நாடகக் கட்டுக் கோப்பில் பாரதிதாசன் பல உத்தி முறைகளைக் கையாள்கிறார். நாடகங்களைக் கூர்ந்து காணின் ஓர் உண்மை புலனாகும். ஆசிரியர் கலைத் தன்மையை விடவும் கருத்துக்களுக்கே சிறப்பிடம் கொடுத்திருப்பது நன்கு விளங்கும். பாரதிதாசன் பயன் படுத்தியுள்ள உத்திமுறைகள் அவர் கூற விரும்பும் கருத்துக்களுக்கு நல்ல அழுத்தம் கொடுப்பதைக் காணலாம். நாடகப்பின்னலின் ஊடே தூவப்பட்டுள்ள சமூகச் சிந்தனைக் கருத்துக்கள் மக்களின் மனதுக்குள் சென்றடையவேண்டும் என்பதே பாரதிதாசனின் படைப்பின் முக்கிய நோக்கம் என்று கருதலாம்.

அடிக்குறிப்பு :

1. ஹென்றி பெவரிட்ஜ், விரிவான இந்திய சரிக்கிரம் - முகற்பாகம் (1895), ப.15

2. ஈ.பி. ஹாவெல், இந்தியாவில் ஆரியர் அரசாட்சியின் சரித்திரம், (1918), ப.32.

3. பாரதிதாசன் கவிதைகள் தொகுதி II. ப.114.

# பாரதியாரின் வழித்தோன்றல் பாரதிதாசன்

### அன்புப் பழம் நீ

நானும் நண்பர் கே. வீ. வீரராகவன் அவர்களும் 1947ஆம் ஆண்டில் 'அன்புப் போர்' என்ற நூல் எழுதினோம். அப்பொழுது நான் பாரதிதாசன் அவர்களைப்பற்றி எழுதிய விமர்சனம் பின்வருமாறு:

புரட்சிக்கவி - பாரதிதாசன் அவர்கட்கு

புதுயுகத்தில் பூத்த புரட்சிக்கவி மலரே,

மலரின் மென்மைக்கும் உங்கள் வீராவேசத்தின் எழுச்சிக்கும் பொருத்தமில்லையெனத் தோன்றலாம்! ஆயினும் மலரினும் இனிய உங்கள் கவிநயத்தைக் காணுமிடத்து வேறு அடைமொழி இட்டுவிளிக்க மனம் வரவில்லை.

உண்மையில் பாரதி சகாப்தத்தில் தோன்றி, பாரதியார் தொடங்கிய பணியைத் தொடர்ந்து நடத்தும் கவி தாங்கள் ஒருவரே என்பதில் ஐயமில்லை! பாரதியார் எல்லா தெய்வங்களையும் தொழுபவர். தாங்களோ தெய்வமில்லையென்று சாதிப்பவர்! பாரதியார் மிகவும் இளநெஞ்சுபடைத்தவர்! தாங்களோ வைரநெஞ்சு படைத்தவர்! வைரம் பாய்ந்த உறுதி கொண்டவர். இருந்தும் பாரதியாருக்கு உண்மைப் பிரதிநிதி தாங்களே என்றால் இதில் உள்ள மகத்தான விசேஷங்களை மக்கள் இனியும் மதியாதிருப்பது பேதைமை.

கொள்கையும் நம்பிக்கையும் காலத்துக்கேற்ப மாறவேண்டியதவசியம்.

பாரதியார் காலத்தில் அல்லாவையும் ஏசுவையும் பற்றிப் பாடுபவர்கள் பைத்தியமெனத் தான் மதிக்கப்பட்டிருப்பார். அதே போல் இக்காலத்தில் நாத்திகமென்றால் மக்கள் 'அம்மம்ம' என்று அலறுகிறார்கள். நாங்கள் நாத்திகரல்லாதபோதும், நாத்திகத்தைக் கண்டு நடுங்கும் இயல்பு படைத்ததில்லை. ஆகவே, உங்கள் கொள்கையைக் குறை கூற நாங்கள் முன் வரவில்லை.

இரு துறைகளில் உங்களை முக்கியமாக பாரதியாரின் அவதாரம் என்றே நாங்கள் கருதுகிறோம். காதல் துறையில் கவிதைகள் இயற்றுவதில் பாரதியாரையும் தாங்கள் மிஞ்சியிருக்கிறீர்கள்.

"பார்த்து பறித்த தாமரைப் பூத் தீர்த்து விலைக்குக்
கொடடி என்றேன்
பூத்த முகத்தாமரையால் புதுமைகாட்டி மயக்கி
நின்றாள்"

*என்பது போன்ற அடிகளைப் படித்து மயங்கி நிற்காமல் வேறென்ன செய்ய முடியும்?*

*காதலுக்கடுத்தபடி பாரதியாரின் வீராவேசம் உங்களிடம் புத்துயிர் பெற்று பல இடங்களில் துள்ளி எழுகிறது. தாலாட்டுப் பாட்டில் கூட.*

*மூடத்தனத்தின் முடைநாற்றம் வீசுகின்ற*
*காடுமணக் கவரும் கற்பூரப் பெட்டகமே*

*என்று நெஞ்சு பொறுக்காது கோபம் பொங்கி எழுகிறது. காதலுக்குப் போடும் கட்டுப்பாடுகளைக் கண்டு சீறி எழுந்து*

*காதலிருவர்களும் - தம் கருத்தொருமித்தபின்*
*வாதுகள் வம்புகள் ஏன்? இதில்*
*மற்றவர்க்கென்ன உண்டு*
*சூது நிறை உலகே - ஓ! துட்ட இருட்டறையே!*

*என்று பாடும்போது சபாஷ் போடத்தான் தோன்றுகிறது. ஆனால் ஒரு விமர்சகர் சொன்னதுபோல் 'பூசனிக்காய்' முதற்கொண்டு 'கர்ப்பத்தடை' வரையில் எல்லாவற்றையும் பாடித்தீர்க்க முற்படுவதுதான் உங்கள் பெருந்தவறு என்று எடுத்துக் காட்ட விரும்புகிறோம். உங்கள் புரட்சி வேகத்துக்கும் குழந்தைப் பகுதி பாடல்களுக்கும் வெகுதூரம்.......*

*இப்பணியை தாங்கள் தே. வி. அவர்களுக்கே விட்டு விடுதல் நலம்....*

*சுயமரியாதைக்காரரான உங்களுக்குக் கோபம் வந்தாலும் [illegible]. பாரதியாரின் அவதாரம் என்றே கொண்டாடித் தீருவோம்.*

*புரட்சிக் கவிஞர் சில நண்பர்களைச் சிரிக்காமல் சிரிக்க வைப்பார். அமரரான புத்தனேரி சுப்பிரமணியம் ஒரு பத்திரிகையில் வெளியிட்ட பின்வரும் செய்தியே இதற்குச் சான்று ஆகும்.*

*புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் 1946இல் திருவல்லிக்கேணியில் தங்கியிருந்தபோது, அவருடன் சில நாட்கள் பழகும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அறிஞர் அண்ணா அவர்களைப் பற்றி நான் எழுதிய கவிதையை ஒரு நாள் அவரிடம் காண்பித்தேன். படித்து விட்டு "நான் ஒரு திருத்தம் சொல்லட்டுமா?" என்று கேட்டார்.*

*"சொல்லுங்கள்" என்றேன். "இலை மெல்லும் செவ்வாயன்" என்று எழுதியிருக்கிறாயே.... அதற்குப் பதில் 'தழை தின்னும் பெருவாயன்' என்று போடலாமே! என்று கூறிவிட்டுக் குலுங்க குலுங்கச் சிரித்தார் பாரதிதாசன்.*

*அறிஞர் அண்ணா அவர்கள் வெற்றிலையைத் தழைபோலக் குதப்புவதையே வேடிக்கையாகக் குறிப்பிட்டார் புரட்சிக் கவிஞர்.*

*"சரி... நீங்கள் சொன்னபடியே மாற்றி விடுகிறேன். அடிக்குறிப்பிலும் நீங்கள் செய்த மாற்றம் என்று போட்டு விடுகிறேன்."*

*"வேண்டாம் வேண்டாம்! அவர் நண்பர் என்ற முறையில் சும்மா கிண்டலுக்குச் சொன்னேன். இப்படியே இருக்கட்டும் என்று தட்டிக் கொடுத்தார் புரட்சிக்கவிஞர்!*

* * *

# பாவேந்தர் யாப்பு நெறி - பாரதியாருடன் ஒப்பீடு

முனைவர் இரா. திருமுருகன்

ஆசிரியப் பாக்கள் மிகுதியாக வழங்கியது சங்ககாலம். வெண்பாக்களைப் பாடியது சங்கமருவிய காலம். விருத்தங்களுக்கு உரியது காப்பிய காலம். சந்தப் பாடல்கள் பெருகியது இடைக்காலம். சிந்துப் பாடல்கள் உருவாகி நிலைபெற்றது பிற்காலம். அண்மைக் காலத்தில் சிந்துப் பாக்களின் வளர்ச்சியாகிய உருப்படிகள் (கீர்த்தனைகள்) விரும்பிப் பாடப்பெற்றன. ஒரொரு காலத்தில் ஒவ்வொரு வகை மிகுதியாகப் பாடப் பெற்றாலும், பிற பாடல் வகைகளும் சிறுபான்மை இடம் பெற்றே வந்தன.

ஊன்றி நோக்கினால் கால அடைவில் பயன்படுத்தப்பட்டு வரும் பாவகைகளில் இசைத்தன்மை வளர்ந்து வருவது புலனாகும்.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வெளியான பாரதியாரின் சுதேச கீதங்கள் (1908) என்ற நூலில் பெரும்பான்மையாக உள்ளவை சிந்துப் பாடல்களும் உருப்படிகளுமே. அடுத்து பாரதிதாசனாரின் முதல் நூலாக வெளியான மயிலம் சுப்பிரமணியர் துதியமுது (1926) என்னும் நூலிலும் இதே நிலையைக் காண்கிறோம்.

> பாடலிற் பழமுறை பழநடை என்பதோர்
> காடு முழுதும் கண்டபின் கடைசியாய்ச்
> சுப்பிர மணிய பாரதி தோன்றியென்
> பாட்டுக்குப் புதுமுறை புதுநடை காட்டினார்
>
> (நானோர் பாவேந்தன் - தேனருவி)

என்று பாவேந்தர் பாடுகின்றார். பாரதியார் தமக்குக் காட்டிய புதுமுறையாகப் பாவேந்தர் குறிப்பிடுவது என்ன?

பாவேந்தர் பயன்படுத்திய பாவகைகளைப் பாரதியார் பயன்படுத்திய பாவகைகளுடன் ஒப்பிட்டபோது கிடைத்த முடிபுகள் பின்வருமாறு:-

பாரதியார் பாடிய பாவடிவங்கள் 29, அவையாவன:

1.நேரிசை வெண்பா, 2.நேரிசை ஆசிரியப்பா, 3.நிலைமண்டில ஆசிரியப்பா, 4.நூற்பா (புதிய ஆத்திசூடி), 5. அறுசீர் விருத்தம் வகை-1, 6.அறுசீர் விருத்தம் வகை-2, 7.அறுசீர் விருத்தம் வகை-3, 8.எழுசீர் விருத்தம், 9.எண்சீர் விருத்தம் வகை-1, 10.எண்சீர் விருத்தம் வகை-2, 11.எண்சீர் விருத்தம் வகை-3, 12.எழுசீர்ச் சந்த விருத்தம், 13.வண்ணவிருத்தம் (திருப்புகழ் அமைப்பினது), 14.கட்டளைக் கலிப்பா, 15.தரவு கொச்சகக் கலிப்பா, 16.கட்டளைக் கலித்துறை, 17.கலிவிருத்தம், 18.வஞ்சித்துறை 19.வஞ்சிவிருத்தம், 20.காவடிச்சிந்து, 21.நொண்டிச்சிந்து, 22. ஆனந்தக்களிப்பு,

23.கும்மி, 24.கிளிக்கண்ணி, 25.வெண்டளைக்கண்ணி, 26.இரண்டடிச்சிந்து, 27.நாலடிச்சிந்து, 28.உருப்படி - எடுப்பு முடிப்புடன் (பல்லவி சரணத்துடன்), 29.உருப்படி - எடுப்புத் தொடுப்பு முடிப்புடன் (பல்லவி அனுபல்லவி சரணத்துடன்).

பாவேந்தர் பயன்படுத்திய பாடல் வடிவங்கள் 39. அவை பின்வருமாறு:

1.குறள்வெண்பா, 2.நேரிசைவெண்பா, 3.இன்னிசை வெண்பா, 4.பஃறொடை வெண்பா, 5.நேரிசை ஆசிரியப்பா, 6.நிலை மண்டில ஆசிரியப்பா, 7.இணைக் குறள் ஆசிரியப்பா, 8.அறுசீர் விருத்தம் வகை-1, 9.அறுசீர் விருத்தம் வகை-2, 10.அறுசீர் விருத்தம் வகை-3, 11.எழுசீர் விருத்தம், 12.எண்சீர் விருத்தம் வகை -1, 13.எண்சீர் விருத்தம் வகை -2, 14.எண்சீர் விருத்தம் வகை -3, 15.எண்சீர் விருத்தம் வகை -4, 16.பன்னிருசீர் விருத்தம், 17.எழுசீர்ச் சந்த விருத்தம், 18.எண்சீர்ச் சந்த விருத்தம், 19.பன்னிருசீர்ச் சந்த விருத்தம், 20..வண்ண விருத்தம், 21.தரவு கொச்சகக் கலிப்பா, 22.தரவிணைக் கொச்சகக் கலிப்பா, 23.கட்டளைக் கலித்துறை, 24.கலிவிருத்தம், 25.நூற்பா, 26.காவடிச்சிந்து, 27.நொண்டிச்சிந்து, 28.வளையற்சிந்து, 29.கும்மி, 30.ஆனந்தக் களிப்பு, 31.தென்பாங்கு, 32.இலாவணி, 33.இரண்டடிச் சிந்து, 34.நாலடிச் சிந்து, 35. உருப்படி - எடுப்பு முடிப்புடன், 36.உருப்படி - எடுப்புத் தொடுப்பு முடிப்புடன், 37.வெண்டளைக் கண்ணிகள், 38.ஏற்றப்பாட்டு, 39.ஆசிரியத்தாழிசை.

பாரதியார் பாடிப் பாவேந்தர் பாடாமல் விட்ட பாவடிவங்கள் 4. அவை: கட்டளைக் கலிப்பா, வஞ்சித்துறை, வஞ்சி விருத்தம், கிளிக்கண்ணி என்பன.

பாரதியார் பாடாமல் பாவேந்தர் பாடிய பாவடிவங்கள் 14 : அவை: குறள் வெண்பா, இன்னிசை வெண்பா, பஃறொடைவெண்பா, இணைக்குறள் ஆசிரியப்பா, எண்சீர் விருத்தம் வகை-4, பன்னிருசீர் விருத்தம், எண்சீர்ச் சந்த விருத்தம், பன்னிருசீர்ச் சந்த விருத்தம், தரவிணைக் கொச்சகக் கலிப்பா, வளையற் சிந்து, தென்பாங்கு, இலாவணி, ஏற்றப்பாட்டு, ஆசிரியத்தாழிசை என்பன.

இவற்றுள் பாரதியார் பாடாத பழைய வடிவங்கள் (வளையற் சிந்து, தென்பாங்கு, இலாவணி நீங்கிய) பதினொன்று. ஆனால் பாவேந்தர் பாடாது விட்ட பழைய வடிவங்கள் கட்டளைக் கலிப்பா, வஞ்சித்துறை, வஞ்சிவிருத்தம் என்ற மூன்றே. எனவே, பாரதியாரினும் பாவேந்தர் பழைய மரபை மிகுதியாகப் போற்றுவோராகக் காணப்படுகிறார்.

முழுநூல்கள் என்று பார்த்தாலும் பாரதியார் இயற்றிய கண்ணன் பாட்டும், பாஞ்சாலி சபதமும் பெரும்பாலும் சிந்துப் பாடல்களால் இயன்றவை. ஆனால் பாவேந்தரின் நூல்களிற் பின்வருவன முழுமையாகப் பழைய பாவகைகளால் ஆனவை. பாண்டியன்பரிசு முழுவதும் எண்சீர் விருத்தத்தால் இயன்றது. இருண்டவீடு நேரிசையாசிரியப்பாவால் நிகழ்வது. தமிழியக்கம் அறுசீர் விருத்தத்தால் ஆனது. கண்ணகி புரட்சிக் காப்பியத்தில் ஒரு வண்ணப் பாதவிர அனைத்தும் எண்சீர் விருத்தம். மணிமேகலை வெண்பா அனைத்தும் வெண்பாக்கள். காதலா கடமையாவில் அனைத்தும் ஆசிரியப் பாக்கள்.

பாவேந்தர் நூல்களில், தாழ்த்தப்பட்டோர் சமத்துவப்பாட்டு என்ற சிறிய நூல் மட்டுமே முழுவதும் புதிய வகையாகிய சிந்துப் பாடல்களால் இயன்றது. அதுவும் பாடிப் பரப்புவதற்கான இசைப்பாடல்களாக எழுதப்பட்டதால் இந்நிலை போலும்.

பாவேந்தர் நூல்களைக் கால அடைவில் காணும்போது, அவர் பாரதியாருடன் தொடர்பு கொண்டிருந்த காலத்தில் எழுதிய சிந்துப்பாடல்களின் விழுக்காடு பிற்காலத்தில் குறைந்து கொண்டே செல்வதை உணரமுடிகிறது.

பாவேந்தர் பாடல்களின் அடிகளைக் கணக்கிட்டு அவை 40600 என்கிறார் மா.செல்வராசன் (452 : 1979). இது ஏறத்தாழக் கம்பராமாயணத்தின் அளவாகும். (சென்னைக் கம்பன் கழகப் பதிப்பில் உள்ள பாக்களின் எண்ணிக்கை - மிகைப்பாடல்களை நீக்கி - 10368 ; அடியளவு 41472)

இவற்றுள் சிந்துகளும் உருப்படிகளும் 8705 அடிகளே. இது மொத்தத்தில் 27% விழுக்காடே, 73% விழுக்காடும் அகவல், விருத்தம், வெண்பா முதலியவையே.

பாரதியார் பாடல்களின் அடிகள் ஏறக்குறைய 4000. அவற்றில் சிந்துகளும் உருப்படிகளும் ஏறத்தாழ 3000 அடிகள். இது மொத்தத்தில் 75% விழுக்காடு ஆகும்.

இதிலிருந்து பாவேந்தர் பாரதியாரைச் 'சிந்துக்குத் தந்தை' என்பது பொருத்தமே என்பதும், தாம் சிந்துகளைப் பாரதியாரினும் மிகக் குறைந்த விழுக்காடே பயன்படுத்தியுள்ளார் என்பதும் தெளிவாகின்றன.

### சிந்துகளில் காணப்படும் ஒற்றுமை:

சிந்துக்குத் தந்தையாகிய பாரதியாரை விட மிகுதியாகச் சிந்து வகைகளிலேயே மூன்றை (வளையற் சிந்து, தென்பாங்கு, இலாவணி) பாவேந்தர் பாடியிருக்கிறார். எனினும் இருவரிடமும் ஓர் ஒற்றுமை தெளிவாகத் தென்படுகிறது.

### நான்கடிச் சிந்துகள் :

சிந்துக்கு உரிய அடியளவு இரண்டு என்பதே அதன் இலக்கணம். அதனை,

இரண்டடி ஒத்து அழிசீர் இலாதது சிந்தாம்

(வீர சோழியம், 127)

இவை இரண்டடியாய்த் தம்மில் ஒத்துவந்த சிந்து

(பஞ்சமரபு, 85 உரை)

ஓர் எதுகை பெற்ற இரண்டடிகள் அளவொத்து வருதல் சிந்து எனப்படும்

(புலவர் குழந்தை 84 :1961)

என்னும் கூற்றுகளால் அறியலாம். இத்தகைய சிந்துகளை இரண்டடியால் மட்டுமன்றி நான்கடியாலும் இயற்றும் புதிய மரபைப் பாரதியார் பாவேந்தர் ஆகிய இருவரிடத்திலும் காண்கிறோம். பாவேந்தரிடம் இரண்டடிச் சிந்துகளினும் நான்கடிச் சிந்துகளே மிகுதியாய் உள்ளன.

### சான்று:

### இரண்டடிச்சிந்து :

எடுத்த சுள்ளியில் அடுப்பெரிக்கையில்

எழில் எழில் அவன் எழிலே - பின்

இடைக் கிடை எனைக் குலுக்கிடும் அவன்

இயற்றிய கலைத் தொழிலே

(பாரதிதாசன் பன் மணித்திரள் ப.52)

நாலடிச்சிந்து :

சித்திரச் சோலைக ளேஉமை நன்கு

திருத்த இப் பாரினிலே - முன்னர்

எத்தனை தோழர்கள் ரத்தம் சொரிந்தன

ரோ உங்கள் வேரினிலே

நித்தம் திருத்திய நேர்மையினால் மிகு

நெல்விளை நன்னிலமே - உனக்

கெத்தனை மாந்தர்கள் நெற்றிவியர்வை

இறைத்தனர் காண்கிலமே

(பாரதிதாசன் கவிதைகள் தொகுதி 1, ப.57)

பாரதியார் தாம் பாடிய காவடிச்சிந்து, நொண்டிச்சிந்து முதலியவற்றையும் மரபுக்கு மாறாக நான்கடிக்கண்ணிகளாகப் பாடியிருக்கிறார். 'தாய் எட்டடி; குட்டி பதினாறடி' என்பது போலப் பாரதியாரினும் மிகுதியாகப் பாவேந்தர் இப்புதிய மரபைக் கையாண்டுள்ளார். காவடிச் சிந்து, நொண்டிச் சிந்துகளோடு, பாரதியார் இரண்டடிக் கண்ணிகளாகப் பாடிய கும்மி, ஆனந்தக் களிப்புகளையும் இவர் நான்கடிக் கண்ணிகளாகப் பாடியிருக்கிறார்.

தனிப்பெயர் பெறாமல் பலவாறாக வரும் சிந்துகளைப் பாரதியார் ஏறக்குறையச் சரிபாதியளவு நான்கடியாகப் பாடியிருக்கப் பாவேந்தரோ தாம்பாடிய சிந்துகளில் மிகப் பெரும்பான்மையை நாலடிச் சிந்துகளாகவே பாடியிருக்கிறார். எனவே,

சிந்துகளைப் பொறுத்த வரையில் பாரதியார் நெறியில் பாவேந்தர் மிகுதியாகவே சென்றிருக்கிறார். அதற்காகப் பழைய வடிவங்களைப் புறக்கணித்து விடவில்லை. தம் காலத்து மற்ற பாவலர்களை விட மிகுதியாகச் சிந்து வகைகளைப் பாடியிருக்கிறார் என்பதே உண்மை.

தொடை இயல்புகள்:

**மோனை:** பொதுவாக அடியின் நடுவிடத்தில் மோனை அமைதல் சிறப்பு - நெற்றியின் நடுவில் பொட்டுவைப்பதைப்போல்லொருளுக்குமதன்மையளித்தமோனையைவேறிடங்களில்அமைக்கும் இயல்பைப்பாவேந்தர்பாடல்கள்பலவற்றில்காணலாம்.

பூரிப்பால் ஏறும் வீழும்

புரண்டிடும் பாராய் தம்பி

(அழகின் சிரிப்பு, கடல்-1)

என்பதுபோல் முதல் சீரிலும் நான்காம் சீரிலும் மோனை வருவதுமுறை.

ஆனால்,

பச்சிலைப் பொய்கை யான

நீலவான் பரப்பில் தோன்றும்

(எதிர்பாராத முத்தம்-2)

என்பதுபோல் முதற்சீரிலும், ஐந்தாம் சீரிலும் மோனை பெறும் அறுசீர் விருத்தங்கள் மிகுதியாக உள்ளன.

எழுந்தது செங்க திர்தான்

கடல்மிசை அடடா எங்கும்

(அ.சி.கடல்-5)

என்பது போல் முதற்சீரிலும், ஆறாம் சீரிலும் மோனை அமையும் அடிகளும்

கீரியின் உடல் வண்ணம்போல்

மணல் மெத்தை அம்மெத் தைமேல்

(அ.சி.கடல்-1)

என்பதுபோல் மோனையே இல்லாத அடிகளும் பாவேந்தர் பாடல்களில் உண்டு.

**எதுகை:** எதுகைத்தொடை பாவேந்தர்க்கு ஏவல் செய்கின்றது. ஒலிநயம் சான்ற எதுகைகளை அவரிடம் நிரம்பக் காணலாம். அன்ன - கன்று, உண்ண - கண்ட என்பவற்றில் இரண்டாம் எழுத்து ஒன்றி வந்தாலும் சிறப்பான எதுகையாகாது. இவற்றைப் போன்ற எதுகைகளைப் பாவேந்தர் பாடல்களில் காண்பது அரிது. இரண்டடிப் பாடல்களையே நான்கடியாக எழுதியவர் அவர். பிசிராந்தையார் என்ற ஒரு நூலையே ஒலி நயம் ததும்பப் படைத்தவர் அவர். அவரிடம் எப்படி எதுகைப் பஞ்சம் இருக்க முடியும்? எனினும் எண்ணிப்பார்க்கத்தக்கனவாக சில எதுகைத் தொடைகள் இருக்கவே செய்கின்றன.

1) தமிழர் பலரின் தலைகள் சாய்ந்தன

வடவரிற் சிலரும் மாய்ந்து போயினர்

(எதிர்பாராத முத்தம் - 20)

இதில் மி-ட எதுகையாக வருகின்றன. இவை மி-டி என்றோ ம-ட என்றோ வந்தால் 'உயிர் ஒன்றிய எதுகை' எனலாம். இரண்டாமெழுத்து இரண்டும் குறிலாக இருப்பது ஒன்றே இங்கு உள்ள ஒற்றுமை. அதனால் இதனைக் 'குறில் எதுகை' என்று அழைப்பது பொருத்தமாகும். அல்லது, தமிழர்க்கு வடவர்பகை என்னும் கருத்துப்படப் பாவேந்தர் இதனை முரண் தொடையாக அமைத்திருத்தலும் கூடும்.

2. பின்வரும் அறுசீர் விருத்தத்தில் முதல் மூன்றடிகளும் ஓர் எதுகையாகவும் நான்-காமடிவேறு எதுகையாகவும் வருகின்றன.

புள்ளிருக் கும்வே ளூர் போய்ப்

புனைமுத்துக் குமரன் மீது

பிள்ளை நூல் பாடி மன்றில்

பெம்மானை மும்மணிச் சொல்

தெள்ளுநீர் ஆட்டிப் பின்னும்
சிதம்பரச் செய்யுட் கோவை
அம்மைக்கி ரட்டை மாலை
அருளினான் இருள்ஒன் றில்லான்.

*(எதிர் பாராத முத்தம் 31-1)*

இப்படி வருவது மரபுக்கு மாறானது. இதில் ஏதேனும் பிறழ்ச்சி இருக்குமோ என்னும் எண்ணம் எழுகிறது.

**ஒலிநயம்:** பாவேந்தர் பாடல்களில் ஒலிநயம் சான்ற இடங்கள் ஏராளமாக இருக்கின்றன. சான்றாக,

'அம்மைக்கி ரட்டை மாலை
அருளினன் இருளொன் றில்லான்'
'விழுதொடு சாய்ந்த தென்று
விளம்பினார் உளம்ப தைத்தே

*(எதிர்பாராத முத்தம் 31,32)*

என்பன போன்ற இடங்களைக் காட்டலாம்.

**சிதைவுகள்:** யாப்பிலக்கணத்தில் ஊற்றம் உள்ளவர் பாவேந்தர். குயில் இதழில் 'பாட்டுக்கு இலக்கணம்' என்ற கட்டுரைத் தொடரை எழுதி யாப்பறிவைப் பரப்பியவர். அதில் ஓரிடத்தில்,

"பாட்டு எழுது வோரிற் பலர் இன்னும் குற்றிய லுகரத்தின் முன்வரும் உயிரைப் புணர்க்காமலே பாட்டின் அடியளவை நிரப்பி வருகிறார்கள்.

'கண்டு அவனைக் கயல்விழிதான் காதலித்தாள்' இது வெண்பாவின் ஓர் அடி. கண்டு - மென்றொடர்க் குற்றியலுகரச் சொல். இதன்முன் 'அவனை' என்ற உயிர் முதற் சொல் வந்தால் 'கண்டவனை' என்று புணர வேண்டும். அவ்வாறு புணர்ந்தாலோ தளை தட்டும் அதனால் கண்டு என்பதைக் கண்டே என்று ஆக்கிக் கொண்டால் அது குற்றியலுகரமும் ஆகாது; ஓசையும் கெடாது. வெண்பாவுக்கு மட்டும் அன்று; எந்தப் பாட்டிலும் இது கருதப்பட வேண்டும்" என்று கூறி,

நாட்டை அடுத்தொரு காடு - அதில்
நாவலின் பொந்து அதில் ஒரு பாம்பு
போட்டது ஒன்று ஐயப்பன் - கீழ்ப்
பொத்தென்று வீழ்ந்தனன் செத்துமடிந்தான்.

என்ற பாடலைக் காட்டி அதில் உள்ள அத்தகைய பிழைகளையும் திருத்துகின்றார் (பாட்டுக்கு இலக்கணம் 38). இத்தகைய பிழையை 'யதிவழு' என்கிறது தண்டியலங்காரம் (113). ஆனால் இத்தனை விழிப்பாகவும் நுட்பமாகவும் இலக்கணமரபைப் போற்றும் பாவேந்தர் பாடல்களில் இவர் குறிப்பிடும் இதே குறை இடம் பெற்றிருப்பது வியப்புக் குரியது.

மட்டான வருவாய் உண்டு. எங்கப்பா

*(குறிஞ்சித்திட்டு 177)*

இதுபோன்ற இடங்கள் இன்னும் சில உண்டு. அசை, சீர், அடி குறைகின்ற இடங்களும், அடி அளவுக்கு மிகுதியாய் உள்ள இடங்களும், பாவகைக் குறிப்புப் பொருந்தாத இடங்களும் பல உள்ளன. இச்சிதைவுகள் பெயர்த்து எழுதியோராலோ அச்சிட்டோராலோ நேர்ந்திருக்கக் கூடும்.

* * *

**துணை செய்த நூல்கள்:**

**பாவேந்தர் நூல்கள்:**


1. அழகின் சிரிப்பு, 3 ஆம் பதிப்பு, செந்தமிழ் நிலையம், இராமச்சந்திரபுரம் , 1947.
2. எதிர்பாராத முத்தம், 8ஆம் பதிப்பு, செந்தமிழ் நிலையம், இராம ச்சந்திரபுரம் , 1963.
3. தேனருவி , 2ஆம் பதிப்பு , பாரதிதாசன் பதிப்பகம், புதுச்சேரி, 1950.
4. பாரதிதாசன் கவிதைகள் தொகுதி-1, 24ஆம் பதிப்பு, செந்தமிழ் நிலையம், இராமச்சந்திரபுரம் , 1980.
5. பாரதிதாசன் பன்மணித்திரள், முத்தமிழ்ச்செல்வி அச்சகம், சென்னை,1964.
6. மயிலம் சுப்பிரமணியர் துதியமுது, மயிலம் டெக்டைல்சு வெளியீடு, புதுவை.


**பிறர் நூல்கள்:**


1. கம்பராமாயணம், மறு அச்சீடு, கம்பன் கழகம், சென்னை.
2. குழந்தை, புலவர், யாப்பதிகாரம், 2 ஆம் பதிப்பு, பாரிநிலையம், சென்னை, 1961.
3. மா.செல்வராசன், பாரதிதாசன் ஒரு புரட்சிக்கவிஞர், வண்ணமலர் வெளியீடு, 1979.
4. தண்டியலங்காரம் உரையுடன், கழகம், சென்னை,1983.
5. பஞ்சமரபு, அறிவனார், தெய்வசிகாமணிக்கவுண்டர் பதிப்பு, வேலம்பாளையம், 1975.
6. பாரதியார் கவிதைகள், வானவில் பிரசுரம், புதிய பதிப்பு,1980.
7. வீரசோழியம் உரை, கா.ரா.கோ.பதிப்பு, பாவேந்தர் கழகம்,1942.


* * *

# உன்னைத்தான் தம்பி!

கவிஞர் கா. வேழ வேந்தன்

னவுகளே! தளிர்க ளே! எம்
எழில்வாழ்வின் 'விடிவெள்ளி' நீங்கள் அன்றோ?
புதிரான, புதிதான செயல்திட் டத்தால்
புத்துலகம் உருவாக்கும் 'சிற்பி' நீங்கள்!
'ஓதிமர'த்தால் உலகுக்கோர் நலந்தான் உண்டா?
உலகூட்டும் 'தென்னை'யைப்போல் வாழ வேண்டும்
'மதிநல'த்தால், 'பொதுத் தொண்'டால் பிறந்த மண்ணின்
மதிப்புலகில் ஓங்குதற்கே உழைக்க வேண்டும்!

'படிப்பறி'வே மூலதனம்! குறள்நூல் கூறும்
'பண்புக'ளே நமைக்காக்கும் கேட யங்கள்!
துடிப்புமிகு 'சிந்தனை'தான் வாழ்க்கை ஓடத்
துடுப்பாகும்! 'அன்'பொன்றே கடவுள்! பாழும்
குடி,சூது, பொய்,களவு, பொறாமை என்னும்
'கொடும் பேய்கள்' நமைநாட விடக்கூடாது!
நெடியபுகழ் இமயத்தின் முகட்டில் ஏற
நிலையான 'பேருழைப்பே' ஏணி யன்றோ!

அழுதாலும் 'மேகம்'போல் அழுதல் வேண்டும்!
அலர்கின்ற 'மலர்'போலச் சிரித்தல் வேண்டும்
'முழுநில'வாய் ஒளிநல்கி உலவ வேண்டும்!
முனைந்தோடும் 'கதிரவன்'போல் கடமை வேண்டும்!
'உழும்எரு'தைப் போல்வாழ்வில் உழைக்க வேண்டும்!
ஒய்யாரத் 'தென்ற'லைப்போல் இனிமை வேண்டும்!
விழுதுவிட்ட 'ஆலமரம்' போல்தாங்க வேண்டும்!
'விளக்'கைப்போல் பயன்நல்கி அணைதல் வேண்டும்!

கடலுக்குள் வீழ்ந்தபின்னர் ஆற்றைப் பற்றிக்
கணமேனும் பேசுபவர் ஏது? வாழ்வில்
நெடும்பயணம் நடத்துகின்ற 'நதி'தான் நாட்டின்
நீள்வயலைச் சிரிக்கவைத்துச் செழிப்பைச் சேர்க்கும்!
உடல்போகும்; உயிர்மூச்சும் ஓடிப் போகும்!
ஒப்பரிய நற்பணியால் உலகோர் போற்ற
நடமாடும் 'காந்தியைப் போல்'லிங்க'னைப்போல்
நாம்என்றும் வரலாற்றில் ஒளிர வேண்டும்!

* * *



# பாவேந்தர் பார்வையில் பெண்மை

முனைவர் சு. சிவகாம சுந்தரி

தின்றதையே தின்று தெவிட்டுதல் இல்லாமல்

அன்றன்று வாழ்விற் புதுமை காணவேண்டும்.

பாவேந்தர் பாரதிதாசன் 'இசையமுதில்' இப்படிச் கூறுகின்றார்.

கால தத்துவத்தின் எதிரொலியாய் - காலத்துக்குரிய தேவையின் எதிரொலியாய்க் காலத்தைப் பிரதிபலிக்கவும் கவிஞன் தோன்றுகின்றான். அத்தகைய கவிஞன் தொன்னெறியில் வேரூன்றிப் புது நெறி, புரட்சி நெறிவகுக்கும் திறனுடையவன் என்று சொல்லலாம். "காலமே கவிஞன்" என்பார் விக்கௌண்ட் மார்லி. காலத்தின் சூழலுக்குத் தக்கவாறு அமைதியைத் தோற்றுவித்து அந்த அமைதி நிலையில் இரண்டறக் கலந்து, இன்பத்தை அனுபவித்துப் பின்னர் எடுத்து விளக்கும் ஆற்றல் கவிஞனுக்கு உண்டு. அவன் காட்டும் அழகில் நமக்கு மயக்கம் மட்டும் ஏற்படுவதில்லை. மன எழுச்சியும், உயிர்ப்பும் கூட ஏற்படுகின்றன. சில போழ்து புரட்சிக்கு வித்தாகவும் அமைந்து விடுகின்றது.

தேசியக் கவி பாரதியை மனத்தில் நிறுத்தி நீள நினைந்து பார்க்கும் பொழுது, அந்த நினைவின் தொடர்ச் சங்கிலியாகப் புரட்சிக் கவிஞன் பாரதிதாசன் வருகின்றார். பாரதியால் பாரதிதாசனும், பாரதிதாசனால் பாரதியும் மேன்மையுற்றார்களென்பதே உண்மை.

பாவேந்தர் பாரதிதாசனைப் புரட்சிக் கவிஞர் என்று அழைக்கின்றோம். புரட்சி என்பது மாறுதல். அதாவது இருந்த ஒன்று வேறொன்றாக மாறுவது; மாற்றுவது; புதுமை பூப்பது; இது உயிருள்ள, உயிர்த்தொடர்புள்ள அனைத்திற்கும் பொதுவானது. காலம் கறங்குபோல் சுழன்று புரட்சி அடைந்து வருகிறது. இத்தகு புரட்சி உலகத்தில், சமுதாயத்தில், மக்கள் தொடர்புடைய எத்துறையிலும் ஏற்படலாம். இந்த வரலாற்றுப் போக்கை எண்ணிப்பார்க்கும் பொழுது நாம் வாழும் இந்த நூற்றாண்டை நமது நாட்டின் புரட்சிக் காலங்களில் ஒன்றாகக் கூறலாம். பலர், பல்துறைப்புரட்சியில் ஈடுபட கவிதைத் துறையில் ஈடும், எடுப்பும், இணையுமற்ற புரட்சியைச் செய்த ஒருவர் பாரதியார்; மற்றவர் பாரதிதாசன்.

பாரதியாரின் புரட்சிமனம் அரசியலில் முளைத்து, சமூகத்தின் பிற துறைகளில் கிளைத்துச் செழித்தது. பாரதியாரின் தோழமையில் தங்கி வளரும் பேறுபெற்ற பாரதிதாசனின் புரட்சிமனம் தமிழில் முளைத்து, சமுதாயத்தின் பிற துறைகளில் வேரோடியது. பெண்மை உழைப்பாலும், காதல் போன்ற சிலவற்றில் பற்றிப் படர்ந்திருந்தாலும் பெண்மையில் அது கொடி அசைந்து, அரும்பெடுத்து மலர் குலுங்க பூத்து நிற்பதைக் காணலாம்.

பாரதிதாசன் தமிழ் இலக்கியத்தை ஆழ்ந்து பயின்றிருக்கின்றார் என்பதற்கு அவருடைய எழுத்துக்களே சான்றாக நிற்கின்றன. பள்ளிப்படிப்பில் பிரெஞ்சு மொழி கற்க வேண்டிய சூழ்நிலை பாரதிதாசனுக்கு ஏற்பட்டதென்றாலும், அவர் தமது பதினெட்டாம் வயதிலேயே, தமிழ்ப் புலமைத் தேர்வு பெற்றுக் கல்லூரித் தமிழாசிரியராகப் பணிபுரியத் துவங்கிவிட்டார்.

இலக்கணமும் இலக்கியமும்

அறியாதவன் ஏடெழுதல்

கேடு நல்கும்

என்று கவிஞர் கூறும்பொழுது, இலக்கண, இலக்கியத்திற்கு அவர் கொடுக்கும் முக்கியத்துவம் இயல்பாகவே தெரிகின்றது.

என்மகள் அகத்தில் எழுந்த கவிதையைப்

புறத்தில் பிறர்க்குப் புலப்படுத் துதற்குச்

செய்யுள் இலக்கணம் தெரிதல் வேண்டுமாம்

இந்த அடிகள் குறிக்கும் பேருண்மையும் அதுதான். தத்தம் கவிதைப் பயணத்தில் எங்கோ ஒரு சில இடங்களில் தமிழை நினைத்துக் கொண்டே கவிஞர்களைப்போல இல்லாமல் "உயிரை உணர்வை வளர்ப்பது தமிழே" என்றும், "வெங்குருதி தனிற் கமழ்ந்து வீரஞ் செய்கின்ற தமிழ் எங்கள் மூச்சாம்" எனப் புரட்சிக் கவிஞர் உறுதியாய்ப் பாடுவார். பாரதிதாசனின் இக் கூற்றுக்கு வடிவம் தந்தது அவர்கண்ட பெண்மை என்று குறிப்பிடலாம்.

பெண்மையில் பாரதிதாசன் கண்ட புரட்சி கால வெள்ளத்துடன் எதிர் நீச்சலடித்து, கவிதைக் கரையைத் தொட்டுவிட்ட பெரும் புரட்சியாகும்.

எங்கெங்கும் காணினும் சக்தியடா

என்பதே அவர் கொள்கை. திரும்பும் பக்கமெல்லாம், முகிலைக்கிழித்து வெளிக் கிளம்பும் முழுமதிபோலத் தமிழும், பெண்மையும் கைகோர்த்து வளைய வருகின்றன.

காலையிளம் பரிதியிலே அவளைக் கண்டேன்

கடற்பரப்பில் ஒளிப்புனலில் கண்டேன் அந்தச்

சோலையிலே, மலர்களிலே, தளிர்கள் தம்மில்

தொட்ட இடம் எலாம் கண்ணில் தட்டுப் பட்டாள்

மாலையிலே மேற்றிசையில் இலகுகின்ற

மாணிக்கச் சுடரிலவள் இருந்தாள்! ஆலஞ்

சாலையிலே கிளைதோறும் கிளியின் கூட்டந்

தனில் அந்த அழகென்பாள் கவிதை தந்தாள்

இக்கவிதையில் சக்தியும், தமிழும் வண்ண வடிவக் காட்சியாக வளையவருவதை உணரலாம். இதனினும் ஒரு படி மேலே செல்ல விரும்பிய பாவேந்தர் காதலி தரும் சுகம் இனிய தென்றாலும் அதைவிட இனியது தமிழ் என்பதை "சஞ்சீவி பர்வதத்தின் சாரல்" வழி காட்ட நினைக்கின்றார். இந்த இனிய காட்சி பெண்மை உயர்வு தமிழில் யாரும் புனையாத காட்சி எனலாம்.

காதல் ததும்பும் கண்ணா ளன்தனைக்

கோதை ஒருத்தி கொச்சைத் தமிழால்

புகழ்ந்தாள் என்று பொறாமல் சோர்ந்து

வீழ்ந்தான்

காதலி, அரைகுறையாகப் பேசினாலும், பிதற்றினாலும், "நின் வாயின் சொல் அமுதம்" என்று தன்னை மறந்து கூறும் நிலையிலிருந்து ஒரு மாறுதல் - ஒரு புரட்சி செய்து பெண்மையை விடத் தமிழை உயர்த்திப் பாடுவார் பாவேந்தர்.

பிறிதோரிடத்தில் கவிதையையே ஒரு அழகிய பெண்ணாகக் கற்பனை செய்து பாட்டிசைப்பார்.

தண்ணிலவும் அவள் முகமோ? தாரகைகள் நகையோ?

தளிருடலைத் தொடும் உணர்வோ? நன் மணஞ்சேர் குளிரும்

விண்ணீலம் கார்குழலோ! காணும் எழிலெல்லாம்

மெல்லியின் வாய்க் கள்வெறியோ! அல்லி மலர்த்தேனின்

வண்டின் ஒலி அன்னவளின் தண்டமிழ்த் தாய் மொழியோ?

வாழியஇங் கிவையெல்லாம் எழுதவரும் கவிதை!

கண்டெடுத்தேன் உயிர்ப்புதையல்! அதோ வந்துவிட்டாள்

கண்டெழுத முடியாத நறுங்கவிதை அவளே!

இவ்வாறு பெண்மையில் பாரதிதாசன் கண்ட தமிழ் கால வெள்ளத்தை எதிர்த்துக் கவிதை முரசு கொட்டுவதைக் காணலாம்.

உவந்தொருவன் வாழ்க்கைசரி யாய்நடத்த

உதவுபவள் பெரும்பாலும் மனைவியாவாள்

என்பதைப் பாவேந்தர் பலநிலையில் வற்புறுத்துவார்.

பாரதிதாசனின் பெண் அதிகம் பேசவில்லை. அந்தப் பெண்ணின் சார்பில் கவிஞர் பேசுகின்றார். சங்க இலக்கியத் தமிழ் மரபில் ஊறிவந்த பாவேந்தர், பகுத்தறிவுப் பாசறையின் புதுமைத் தமிழச்சியாகத் தன் காலத்திய பெண் விளங்க வேண்டுமென்பதைத் தன் எழுத்துக்கள், பாத்திரங்கள் அனைத்திலும் அடிச்சரடாக அமைத்துக் காட்டுகிறார்.

கோட்டைப் பவுன் உருக்கிச் செய்த

குத்து விளக்குகள் போன்ற குழந்தைகளைப்

பெற்றுக் கொடுப்பது மட்டும் பெண்ணின் பணியல்ல.

வண்மை உயர்வு மனிதர் நலமெல்லாம்

பெண்மையினால் உண்டென்று "

உறுதியாகச் சொல்லக் கூடியவளாகப் பெண் வளரவேண்டும்.

அன்னத்தின் தூவி அனிச்ச மலரெடுத்துச்

சின்ன உடலாகச் சித்தரித்த மெல்லியல் பெண்

தாய் என்று காட்டத் தமிழர்க்கு வாய்த்தவள்.

ஆனால்

கல்வியில்லை உரிமையில்லை

பெண்களுக்கு,

கடைத்தேற வழியின்றி

விழிக்கின்றார்கள்

என்ற நிலையில் தடுமாறித் தவித்து நிற்கின்றாள். எனவேதான் அவளைக் கடிகாரம் ஓடு முன். அண்டை வீட்டுப் பெண்களோடு சேர்ந்து, தலைவாரிப் பூச்சூட்டிக் கொண்டுப் பாடசாலைக்குச் செல்ல வேண்டுகிறார். கடல் சூழ்ந்த தமிழ்நாடு முழுவதும் "பெண்கல்வி பெண்கல்வி" என்ற ஓசை விண்ணையும் தாண்டி ஒலித்து முழங்க வேண்டும்.

குப்பை மணக்கக் குடித் தெருவெல்லாம் மணக்க

அப்பம் நிலாப்போல் அடுக்கி வைக்கவும் பெண்ணுக்குக்

கல்வி வேண்டும். அவளால் மட்டுமே "வாழ்க வையகம்" என்று வாழ்த்திப்பாடி மற்றவர்களையும் பணிசெய்யத் தூண்ட முடியும்.

மூடத்தனத்தின் முடைநாற்றம் வீசுகின்ற

காடு மணக்க வரும் கற்பூரப் பெட்டகமே

அப்படிப்பட்ட பெண்ணால் இந்த வையகம் பொலிவுபெறும். வாழ்வுபெறும்.

எல்லாம் அசையச் செய்தால் - உயிர்கள்

எதிலும் அசைவைச் சேர்த்தால்

சொல்லால் இசையால் இன்பம் - எமையே

துய்க்கச் செய்தாய்

இத்தகு சக்திவாய்ந்த பெண் குழந்தை பற்றிப் பாவேந்தர் பின் வருமாறு பாடுவார்.

எள்ளிளஞ் சிறிய பூவை

எடுத்துவைத் திட்ட மூக்கும்

வள்ளச்செந் தாமரைப் பூ

இதழ்கவிழ்ந் திருந்த வாய்ப்பின்

அள் இரண் டும்சிவப்பு

மாதுளைச் சிதறச் சிந்தும்

ஒள்ளிய மணிச்சி ரிப்பும்

உவப்பூட்டும் பெண்கு ழந்தை

படிக்க வேண்டும் என்பதில் பாவேந்தர் பல பாடல் பாடித் தன் வேட்கையை வெளிப்படுத்துகின்றார்.

கல்வி இல்லாத பெண்கள்

களர் நிலம்! அந்நிலத்தில்

புல் விளைந்திடலாம்; நல்ல

புதல்வர்கள் விளைவதில்லை

எனக் கூறுவதோடு அமையாமல்

கல்வி இல்லா "மின்னாளை"

வாழ்வில் என்றும்

'மின்னாள்' என்றே உரைப்பேன்

எனப் பெண்கல்வியைப் பல நிலைகளில், பல படிகளில் பாவேந்தர் மனத்தில் பதியுமாறு எடுத்துக் கூறுவார்.

உலவிடும் இசைத் தேரேறித்

தெளிதமிழ் பவனி வந்து

செவிக் கெலாம் காட்சி தரும்

பெண் கல்வி கற்றவளாக விளங்கும் பொழுதுதான் நல்ல மனைவியாக இருக்க முடியும்.

இடும்பை தீர்ப்பவள்

என்மனை! அவள் என்

குடும்ப விளக்கு

வேறெது கூறுவேன்?

எனக் கவிஞர் கூறி உற்றார், உறவினர், யாவர் செய்யும் அன்பைவிட

மனைவிஎன் அன்புக்

கருகில் இருப்பவள்; என்மேல்

அன்பு வைத்திருப்பவள்

எனத் தொடர்ந்து "நல்மனைவி உடையார் கடலுலகப் பெரும்புகழும் வாழ்நாளும் உடையார் என்ற உண்மையைக் கூறிப் பெண்மையை வாழ்த்துகின்றார். பெண்களுக்குக் கல்வியறிவு தருவதால் சமுதாயத்தில் ஏற்படும் விளைவினையும் சுட்டிக் காட்டுவார்.

மகளி ரெல்லாம் கல்வியறிவு

ஒழுக்கமுள ராயின்

மருத்துவமே வேண்டாவாம்;

பிணிமூப்பு வாரா

என்று கூறி, நிறைவாக

மகளிரெல்லாம் அரசியலைக்

கைப்பற்றி ஆண்டால்

மாநிலத்தில் போரில்லை

சாக்காடும் இல்லை

என முத்தாய்ப்பு வைக்கும் புரட்சிக் கவிஞரின் குடும்ப விளக்கு அவரது புரட்சி மனத்தில் எழுந்த உண்மைக் காவியமாகத் திகழ்கின்றது. தன்னிலை தன்னை விட்டோட, அதைத் தான் தொடர்ந்தே பற்றி வரும் மின்னலைப்போலப் பெண்மைக்குக் கவிமாலை சூட்டிப் பாவேந்தர் மகிழ்கின்றா ரெனின் மிகையில்லை.

இளமை மணத்தை, இரண்டாந்தாரமாகப் பெண் வாழ்க்கைப் படுவதைக் கண்டிக்கும் பாவேந்தர் விதவை மணத்தை வரவேற்கின்றார். விதவைச் சிறுமி தேம்பி அழுதவண்ணம் தன் பாட்டியிடம் கூறுகின்றாள், அவலச் சுவையின் பேருருவியாய், பெருங்காடாய் குழந்தை மணத்தின் கொடுமையை, ஏழுவயதுச் சிறுமியின் - கூவத்தெரியாத குஞ்சின் குரலை - தாவாச் சிறுமானின் துயரத்தை மோவா அரும்பின் துயரத்தைப் பாவேந்தர் கண்ணின் நீர் பெருக விவரிப்பார். கணவனை இழந்த சிறுமி கைம்பெண்ணாகத் தந்தை வீட்டில் இருக்கின்றாள். மனைவியை இழந்த அவள் தந்தை மறுமணம் புரிந்து, பழமையை மறந்து, ஏழுவயதில் தன் கணவனை இழந்த மகள் நிலையையும் மறந்து புதிய மனைவியோடு மகிழ்ந்திருக்கின்றார். இதையெல்லாம் கவனித்த ஏழு வயது விதவைச் சிறுமி தேம்பி அழுத வண்ணம் தன் பாட்டியிடம் கூறுகிறாள்

*என்னை விலக்கி என்சிறு தாயிடம்*
*தந்தை கொஞ்சுதல் தகுமோ? தந்தை*
*அவளை விரும்பி அவள் தலை மீது*
*பூச்சூடு கின்றார் ; புறக்ணித்தார் எனை*
*தாமும் அவளும் தனியறை செல்வார்!*
*நான்ஏன் வெளியில் நாய் போல் கிடப்பது?*
*அவருக்கு நான்மகள் அவரெதிர் சென்றால்,*
*"நீபோ" என்று புருவம் நெறிப்பதோ?*

குழந்தை விதவை தேம்பி அழுவதாகக் காட்டும் பாரதிதாசன்

"கோரிக்கை யற்றுக் கிடக்குதண்ணே வேரிற் பழுத்த பலா" எனக் காட்டி நம் சிந்தனையைத் தூண்டிவிடுகின்றார். அத்துடன் தேம்பி அழும் குழந்தையை அழைத்துத் திடங்கொண்டு போராட மாற்று வழியையும் காட்டுகின்றார். தெளிவான வழியையும் சொல்லுவார்.

*கற்றவளே! ஒன்று சொல்லுவேன்*
*கனத்த உன் பெற்றோரைக் கேளே - அவர்*
*கல்லொத்த நெஞ்சை உன் கண்ணீரினாலே*
*நனைத்திடுவாய் அதன்மேலும் - அவர்*
*ஞாயம் தராவிடில் விடுதலை மேற்கொள்*

பொருந்தா மணத்தை எதிர்க்கும் பாவேந்தரின் இளம் பெண்ணும் பெரியதோரு போராட்டத்திற்குத் தயாராகின்றாள். கண் குழிந்த நரைத் தலைக் கிழவனுக்கும், இள நங்கைக்கும் திருமணம் நடத்தப்பட்டுவிட்டது. கொல்லத் துணிவின்றிப் பெண்ணைக் கூட்டிவைத்த திருமண வாழ்க்கையைத் தாய் காணுகின்றாள்.

*இளமை ததும்ப எழிலும் ததும்ப*
*காதல் ததும்பக் கண்ணீர் ததும்பி*
*என்மகள் கிழவ னருகில் இருந்தாள்*

வாயின் கடையில் எச்சில் வழியக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்த கணவனைப் பார்த்தாள். நேரம் நகர்ந்தது.

தொண்டு கிழவன் விழிப்பான் என்று
கெண்டை விழிகள் மூடாக் கிளிமகள்
காதலும் தானும் கனலும் புழுவுமாய்
ஏங்கினாள்

எதையோ நினைத்தாள். பால் செம்பை எடுத்தாள். இடையில் சொருகியிருந்த சிமிழை எடுத்து அதில் கொட்டினாள். அருந்தப் போகும் சமயம் தாய் வந்து தடுத்தாள். பால்சிந்த, அதனைப் பூனை குடிக்க அது செத்து விழுகிறது. பெண்ணின் பரிதாப நிலையைக் குறிப்பிடும் புரட்சிக்கவிஞர் அவளுக்குரிய விடுதலை மார்க்கத்தை வெளிப்படுத்துகின்றார்.

பிறிதொரு வேளை தனித்து வரும் பெண்ணை மடக்குகின்றான் 'தறிகெட்ட' காளை ஒருவன். புரட்சிக்கவிஞர் அந்தப் பெண்ணுக்கு அறிவுரை கூறுகின்றார். இங்கு பாவேந்தர், ஒரு புதிய கோணத்தில் புதுமைப் பெண்ணைப் பழக்கப்படுத்த எண்ணுகின்றார்.

தனித்து வரும்போது - கெட்ட
தறுதலை கண்வைத்தால்
இனிக்க நலம் கூறு - பெண்ணே
இல்லாவிடில் தாக்கு!

பெண் கூறும் இனிய அறவுரைக்கு முதலிடமும், ஏற்காவிடில் வன்முறைக்கு மறுஇடமும் கொடுக்கின்றார். "எழுச்சியுற்ற பெண்களில்" மீண்டும் ஒரு காட்சி! பெண் கூறும் இனிய உரையைத் தறுதலை ஏற்கவில்லை. எனவே,

ஒரு கையில் உடைவாளும்
இடது கையில்
'ஓடிப் போ' என்றுமொரு
குறிப்புமாகப்
புருவத்தை மேலேற்றி
விழித்து.....

அவனை விரட்டுகின்ற பாரதிதாசனின் புதுமைப் பெண் புதிய விடுதலைக்கு வித்திட்டு வளருகின்றாள்.

காவியம் என்ற பெயரில் சஞ்சீவி பர்வதத்தின் சாரல் வடித்துக் கொடுத்த கவிஞரின் வஞ்சி பேசுகின்ற பெண்ணுரிமைப் பேச்சுக்கள் இனியன என்பது மட்டுமல்ல . காலம் தந்ததுமாகும்.

பெண்ணுக்குப் பேச்சுரிமை வேண்டாம்என் கின்றீரோ
மண்ணுக்கும் கேடாய் மதித்தீரோபெண்ணினத்தை
பெண்ணடிமை தீருமட்டும் பேசுந் திருநாட்டு
மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே,
ஊமை என்று பெண்ணைஉரைக்குமட்டும் உள்ளடங்கும்
ஆமை நிலைமைதான் ஆடவர்க்கும் உண்டு
புலன் அற்ற பேதையாய்ப் பெண்ணைச் செய்தால் அந்
நிலம் விளைந்த பைங்கூழ் நிலைமையும் அம்மட்டே

ஆண்மகனால் செய்ய முடியாத காரியத்தைச் செய்யும் வல்மையைப் பெண்பெற்றிருக்கும் பெருந்திறனை விளக்கும் புரட்சிக்கவிஞர், காதலியர் கடைப்பார்வையில் ஆண்மகனின் சாதனை பெருகிவிடும் பெருஞ் சிறப்பையும் விளக்குகின்றார்.

கண்ணின் கடைப்பார்வை காதலியர் காட்டிவிட்டால்
மண்ணில் குமரருக்கு மாமலையும் ஓர்கடுகாம்

பெண்மையின் மென்மையையும், வண்மையையும் பாவேந்தர் இணைத்துக் காட்டுகின்றார்.

"கடற் மேற் குமிழிகள்" வழியாகக் குடியாட்சி பெற்றநாடு பலவகையில் ஓங்குவதற்குக்

கலப்பு மணம் ஒன்றே
நல்வழிக்குக் கைகாட்டி

என்பதைத் தெளிவாக்குகின்றார். பாவேந்தரின் குடும்ப விளக்கு.ஒன்றே அவர் பெண்மைக்குச் செய்த தனி வணக்கத்தைத் தனித்துக் காட்டுகிறது.

உலவிடும் இசைத் தேரேறித்
தெளிதமிழ் பவனி வரும்

பாவேந்தரின் குடும்பவிளக்கு வாழ்த்துக்குரியவள் மட்டுமல்ல. வணக்கத்திற்கு முரியவள்.

*சிறுகுழந்தை விழியினிலே ஒளியாய் நின்றாள்;*
*திருவிளக்கிற் சிரிக்கின்றாள்; நாரெடுத்து*
*நறுமலரைத் தொடுப்பாளின் விரல்வ ளைவில்*
*நாடகத்தைச் செய்கின்றாள்; அடடே! செந்தோட்*
*புறத்தினிலே கலப்பையுடன் உழவன் செல்லும்*
*புதுநடையில் பூரித்தாள்; விளைந்த நன்செய்*
*நிறத்தினிலே என்விழியை நிறுத்தினாள்; என்*
*நெஞ்சத்தில் குடியேறி மகிழ்ச்சி செய்தாள்*

பாவேந்தரின் கவிதை வாழ்வின் வெற்றிக்குக் காரணம் அவர் பெண்மையை வாழ்த்தி, வணங்கிப் போற்றிப் பாராட்டியது தானெனின் அதுதான் உண்மை.

கருத்துக்களாலும், கவிதைத்திறத்தாலும் பாரதிதாசன் கூறும் முடிந்த கருத்து, "பெண்கள் அருளொளி க றங்கு வெண்டிரை வையகம் காக்கும்" என்பதே. பெண்மையை வணங்கிப் புதுமைப் பெண்ணுக்குப் பாரதி வகுத்தது இலக்கணம். பாவேந்தர் படைத்தது இலக்கியம்.

* * *

# பாரதிதாசன்

## ஓர் உலக மஹாகவி

கவிஞர் கா. சம்பத்து

தானியங்கள் முளைக்காமல் போவதில்லை
தனித்திறமைப் புதுமைகளும் சாவதில்லை

கவிஞர் சுரதா.

புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் உலகப் பெருங் கவிஞர்களில் ஒருவர். அவருடைய தமிழ்ப்பாட்டுக்களை எல்லாம் உலக மொழிகளில் மொழி பெயர்த்தால் இந்த உண்மை வெளிப்படும்.

நல்லனவற்றைக்கண்டு அவர் உள்ளம் குதித்தது; தீயனவற்றைப் பார்த்து அவர் நெஞ்சம் கொதித்தது. நீதியாவன யாவையும் நினைத்தார். மனத்தின் குதிப்பிலும், கொதிப்பிலும் வெளிப்பட்ட அவருடைய புதுப்புது எண்ணங்கள் யாவும் உலகப் பொதுவானவை, அவருடைய கவிதைகளில் கையாளப்பட்டிருக்கும் உத்திகளும், அவற்றில் அடைவுபட்டுக் கிடக்கும் இலக்கிய நயங்களும் இதுவரையில் எவரும் மேற்கொள்ளாதவை. திறமையில் புதுமை; சிந்தனையில் புதுமை இவை கவியரசரின் உடைமை.

மகாகவி பாரதியார் "புரட்சி", "பொதுவுடைமை" என்னும் புது வார்த்தைகள் இரண்டைத் தமிழுக்குத் தந்தார். எனினும், புரட்சிக் கருத்துக்களையும், பொதுவுடைமை எண்ணங்களையும் தமிழிலக்கியத்தில் நிரம்பப்புகுத்தியவர் பாரதிதாசனே,

இன்னொன்று நமக்கு வியப்பூட்டுகிறது. உரை நடையைப் போற்றிக் கவிதை நூல்கள் படிப்பதை மக்கள் தவிர்த்துவரும் இந்நாளில் செந்தமிழ் இயற்கைக்கு முரண்படாமலும், யாப்பு பிழையாமலும் மரபு சிதையாமலும் எழுதப்பட்ட பாரதிதாசன் கவிதைகளைப் பலரும் விரும்பிப் படிப்பதன் ரகசியம் என்ன? பொதுமக்கள் நலம் நாடி எளிய முறையில் புதுக்கருத்தைச் சொன்னார். இதைத் தவிர வேறு காரணம் இருக்க முடியாது. தமக்குக் கிடைத்த வாழ்நாள் பொது நலத்துக்கு உழைப்பதற்கே என அவர் கருதியிருந்தார். தன்னலத்தை நீக்கிப் பிறர் நலத்தையே கருத்தில் வைத்து, "வலியரால் வாடும் எளியாரின் சார்பில்" நின்று போராடி வந்தார். தீயனவற்றை எதிர்த்தார்; நல்லனவற்றை ஆதரித்தார். மனித குலம் முழுமையும் பசி, பிணி, பகைமை, அறியாமை முதலிய கேடுகளிலிருந்து விடுபட வேண்டும். உலகம் முழுமையும் ஒரே குடும்பம் என்ற உணர்வு எல்லா மக்களிடத்திலும் ஏற்பட வேண்டும். ஏழை - பணக்காரன் முதலாளி - தொழிலாளி என்ற வேற்றுமைகளுக்கெல்லாம் எவை எவை காரணங்கள் என்பதை அறிந்து அவற்றின்ஆணி வேரைக் கல்லி, வர்க்க பேதமற்ற அழகுலகைச் சமைக்க வேண்டும். "பெருநிலத்தார் எல்லாரும் ஒரு தாயின் மக்கள்; பிறர் தமர் என்று எண்ணுவது பேதமை"

என்பதைப் பிறர்க்கு உழைக்கும் எழுத்தாளர் புரிந்து கொள்ளுதல் வேண்டும்; மக்களை ஒன்றுபடுத்த முயலுதல் வேண்டும். இப்படிப்பட்ட நினைவுகளில் கவியரசரின் நெஞ்சம் தோய்ந்து கிடந்தது, அவருடைய உள்ளம் அன்பு நெறியை நாடி நின்றது.

உன் வீடு - உனது
பக்கத்தின் வீட்டின்
இடையில் வைத்த சுவரை இடித்து
வீதிகள் இடையில் திரையை விலக்கி
நாட்டொடு நாட்டை இணைத்து மேலே
ஏறு! வானை இடிக்கும் மலைமேல்!
ஏறிநின்று பாரடா எங்கும்!
எங்கும் பாரடா இப்புவி மக்களை!
பாரடா உனது மானிடப் பரப்பை!
பாரடா உன்னுடன் பிறந்த பட்டாளம்!
'என் குலம்' என்றுனைத் தன்னிடம் ஒட்டிய
மக்கள் பெருங்கடல் பார்த்து மகிழ்ச்சி கொள்!
அறிவை விரிவு செய்! அகண்டமாக்கு
மானிட சமுத்திரம் நானென்று கூவு
பிரிவுஇலை; எங்கும் பேதமில்லை
உலகம் உண்ணஉண்! உடுத்த உடுப்பாய்!
புகல்வேன்; "உடைமை மக்களுக்குப் பொது"
புவியை நடத்து பொதுவில் நடத்து!
வானைப்போல மக்களைத் தாவும்
வெள்ள அன்பால் இதனைக் குள்ள மனிதர்க்கும்
கூறடா தோழனே!

என 'உலகம் உன்னுடையது' என்ற கவிதையில் கூறியிருப்பதை நோக்குக; "சௌமியன்" என்ற நாடகத்திலும் இதே கருத்தை எப்படி வலியுறுத்துகிறார் என்பதையும் கவனியுங்கள்.

'உங்கள் எதிரில் உலகம் நடக்கிறது; அதை நீங்கள் நோக்குக; உங்கள் பார்வையை விசாலப்படுத்துக; அறிவுலகம் ஏறுக; நீங்களும் இவ்வுலக மக்களும் ஒன்றே என உணர்க, உங்கள் எதிரில் நல்லனவும் தீயனவும் நடக்கின்றன. நல்லனவற்றை ஆதரியுங்கள். தீயனவற்றை எதிர்க்க நீங்கள் ஆயத்தமாகுங்கள். உலக நலத்திற்காக நீங்கள் எதற்கும் சித்தமாயிருங்கள். நீங்கள் பொதுமக்களுக்குச் செய்யும் தொண்டு நீங்கள் உங்களுக்குச் செய்யும் தொண்டு என்று உணருங்கள். அஃது அன்பு நெறியாம் அன்பு செய்யுங்கள். அதனால் அன்பை வளருங்கள். அன்பினால் இவ்வுலகம் ஒன்றுபடும்" ('சௌமியன்' பக்கம்-14)

இதுதான் மனிதகுலம் கடைத்தேறுவதற்காகப் புரட்சிக் கவிஞர் சுட்டிக்காட்டிய உலக நெறி; வாழ்க்கைமுறை. இம்முறையை எடுத்துக்கூறியதோடு அவர் நின்றுவிடவில்லை. "நீங்கள் ஒவ்வொருவரும் இல்லாதவர்கட்கு உங்களிடம் இருப்பனவற்றை உதவுவதிலேயே கவனம் செலுத்தவேண்டும். அதனால் மக்கள் அறிவிலே தெளிவு பெறுவார்கள்" (சௌமியன் - பக்-16) எனவும்,

வாயைத் திறக்கவும் சக்தி - இன்றி
வயிற்றைப் பிசைந்திடும் ஏழைகட்கே நீ
தாயென்ற பாவனையோடும் - உன்
சதையையும் ஈந்திட ஒப்புதல் வேண்டும்

எனவும் ஏழை மக்களின் துன்பத்தைப் போக்க வேண்டும் என்பதை மனிதாபிமானத்தோடு எவ்வளவு உருக்கமாய்ச் சொல்லியிருக்கிறார் என்பதைச் சிந்தியுங்கள்.

இஃதன்றியும் தானுண்டு தனது குடும்பம் உண்டுஎன ஒதுங்கி வாழக்கூடாது. தனது தெருவின் நலத்தைக் கருதுகின்ற அளவுக்கேனும் ஒருவனுடைய உள்ளம் விரிவடைய வேண்டும். பின்னர்ப் படிப்படியாகத் தனது ஊர் தனது நாடு என்று போற்றுகிற அளவுக்கு மனப்பக்குவம் அடைந்து தொல்லுலக மக்களெல்லாம் ஒன்றே என்னும் ஒருமைப் பாட்டு உணர்ச்சி ஒவ்வொருவருக்கும் ஏற்படவேண்டும். இந்த ஆவல் அவருடைய உலக ஒற்றுமை' என்ற கவிதையில் வெளிப்படுகிறது.

தன்பெண்டு தன் பிள்ளை சோறு வீடு
சம்பாத்தியம் இவையுண்டு தானுண்டென்போன்
சின்னதொரு கடுகு போல் உள்ளம் கொண்டோன்
தெருவார்க்கும் உதவாத சிறிய வீணன்;
கன்னலடா என் சிற்றூர் என்போன் உள்ளம்
கடுகுக்கு நேர்மூத்த துவரை உள்ளம்;
தொன்னையுள்ளம் ஒன்றுண்டு, தனது நாட்டுச்
சுதந்திரத்தால் பிறநாட்டைத் துன்புறுத்தல்

ஆயுதங்கள் பரிகரிப்பார், அமைதிகாப்பார்
அவரவர்தம் வீடுநகர் நாடு காக்க
வாயடியும் கையடியும் வளரச் செய்வார்;
மாம்பிஞ்சின் உள்ளத்தின் பயனும் கண்டோம்
தூய உள்ளம், அன்புள்ளம், பெரியஉள்ளம்
தொல்லுலக மக்களெல்லாம் ஒன்றே என்னும்
தாயுள்ளம் தனிலன்றோ இன்பம்; ஆங்கே
சண்டையி.ல்லை; தனநலந்தான் தீர்ந்ததாலே.

இந்தக் கவிதையின் மூலக் கருத்தைப் புரிந்து கொண்டால் உலக ஒற்றுமையிலும் உலக அமைதியிலும் பாரதிதாசனுக்கு எவ்வளவு அக்கரை இருந்தது என்பது வாசகர்களுக்கு எளிதில் புலனாகும்.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் ஓர் ஊருக்கோ, ஒரு நாட்டுக்கோ மட்டும் சொந்தமானவர் அல்லர். அவர் உலகம் முழுமைக்கும் பொதுவானர். அவர் ஒரு உலக மகாகவி. எனவே, பிற மொழிகளில் நல்ல திறம் பெற்றுள்ள தமிழ் அறிஞர்கள் பாரதிதாசன் கவிதைகளைத் தங்களுக்குக் கைவந்த மொழிகளில் பெயர்த்துத் தர முனைதல் வேண்டும். இது பெரிதும் அவசியமும், அவசரமுமான வேலையும் ஆகும்.

* * *

# பாவேந்தர் பாரதிதாசன்

கவிஞர் சக்திக்கனல்

மூச்சுத் திணறித் தமிழ்க்கவி துன்புற்ற
வேளை உயிர் கொடுத்தான்! — நல்ல
முத்திரைச் சித்திர ரத்தினச் சொற்கவி
மாலை தொடுத்து வைத்தான்!
பேச்சில் எழுத்தினில் மூச்சில் தமிழைச்
சுவாசித் துயிர் வளர்த்தான் — மனப்
பேழை திறந்தங்கு தேக்கிய பொற்குவை
கொட்டிக் கொடுத்து விட்டான்!

நட்ட நடுநிசி கொட்டும் இருளினில்
நாங்கள் தவித்திருந்தோம்! — கவி
நாயகன் தீச்சுடர் கொண்டுவந் தான்!தமிழ்
ஞான ஒளி கொடுத்தான்!
துட்டரைக் கண்டதும் துள்ளிச் சுழன்றெழும்
வேல்எனத் தாக்கி நின்றான்! — எங்கள்
சொந்தச் சகோதரர் துன்பப் படுகையில்
இரத்தக்கண் ணீர் வடித்தான்!

கூனல் விழுந்த முதுகில் இரும்பினைக்
காய்ச்சி உருக்கி விட்டான்! — இங்கு
குள்ளர் தமைக்கண்டு கைகொட்டி ஏளனம்
செய்து விலக்கி வைத்தான்!
கானில் மலையில் வயலில் கடலில்
அழகைச் சிரிக்க வைத்தான்! — இங்கு
கைகட்டிச் சேவகம் செய்யும் இழிதொழில்
காறி யுமிழ்ந்து விட்டான்!

இன்னுயிர் ஈந்தும் தமிழ்மொழி காத்திட
ஏற்றவோர் சூள் உரைத்தான்! — கவி
எக்காள மிட்டுத் தமிழ்முர சோச்சிஎம்
மக்களை வாழ வைத்தான்!
மன்னவ னாய்எங்கள் மக்கள் கவிச்சுடர்
வாழ்ந்து நிறைந்துவிட்டான்! — இன்று
வங்கக் கடற்கரைச் சிங்கமெனச் சிலை
யாகி முறுவலித்தான்!

* * *

# பாரதிதாசனின் புதுப்பார்வை

முனைவர் கு.ப. கணேசன்

ஒல்காப்பெரும்புகழ்த் தொல்காப்பியம் கணவனை இழந்த மனைவியையும் மனைவியை இழந்த கணவனையும் சுட்டுகிறது[1]. கைம்மையைப் பெண்டிர் விரும்பவில்லை என்பதைக் குறுந்தொகைப்பாடலும்[2], பூதப்பாண்டியன் மனைவி பெருங்கோப்பெண்டு கூற்றும்[3] புலப்படுத்துகின்றன. இடையர்களால் வெட்டிச் சிதைத்த மொட்டை மரத்தைக் கைம்பெண்டிர் நிலைக்கு உவமைகாட்டுவர்[4]. கணவனை இழந்த மகளிர் பூவிழந்து பொட்டிழந்து வளையல் அணியாமல் இருப்பதையும்[5] பாயில் படுக்காமல் புளி சேர்க்காமல்[6] அல்லி அரிசியை உணவாக உண்ணுதலையும்[7] நூல்நூற்று வாழ்தலையும்[8] சங்கப் பாடல்கள் தெளிவு படுத்துகின்றன. கைம்பெண்டிர் வாழ்விலே மாற்றம் வேண்டும். சமுதாயத்தில் அவர்கள்ஏற்றம் பெறவேண்டும் என்று பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை எவருமே சிந்திக்கவில்லை. பாட்டிலே புரட்சிசெய்த வள்ளலார் முதன்முதலாக இது பற்றிச் சிந்தித்தார்[9]. தம்முடைய கட்டுரையில், கதையில் கைம்பெண்ணுக்கு மறுமணம் செய்துவித்த பாரதி, கவிதையில் இதுபற்றிப்பாடவில்லை. தமிழ்க் கவிஞர்கள் யாருமே பாடாத கைம்பெண் மறுமணத்தை முதன்முதலில் பாரதிதாசன் பாடுகிறார். விதவை மணம் பற்றிய புதியதொரு பிரச்சார வேகத்தைப் பாரதிதாசன்தான் தமிழ்க் கவிதைக் கழனிக்குத் தந்தவர்.தமிழ்க்கவிதை உலகில் இது புதுப்பார்வை-புரட்சிப்பார்வை.

### சிந்தனை :

தம்முடைய தொடக்க காலத்திலிருந்தே பெண்கள்நிலைகுறித்துப் பெரிதும் சிந்தித்த கவிஞர் மங்கல நாணிழந்து மதிப்பிழந்து வாடிக்கொண்டிருக்கும் கைம்பெண் பற்றிக் கவலை கொள்கிறார். 1930இல் வெளியிட்ட எதிர்பாராத முத்தத்தின் இரண்டாவது பகுதியில் உவமை மூலம் தம் உள்ளக்கிடக்கையைப் புலப்படுத்துகிறார். செந்தில் வேலவனின் அருளால் குருபரன் பேசியது கண்டு பெற்றோர் மகிழ்கின்றனர். எவ்வாறு? "கைம்மையாய் வாழ்வாள் நல்ல கணவனைப் பெற்றதைப்போல்" கவிஞர் நெஞ்சில் கைம்பெண் பற்றிய எண்ணம் ஊறியிருந்தமைக்கு இது சான்றாகும்.

### செயல் :

எண்ணத்தைச் செயலாக்க விழைந்த கவிஞர் 10.11.1930இல் புதுவை முரசு இதழில் மறுமணம் செய்துவைக்கிறார். குப்பன் கோமளவல்லியைக் கண்டு கொள்ளை கொடுத்தனன் உள்ளத்தினை. கட்டழகன் தந்த விண்ணப்பம் ஒப்பினள் காரிகையாள். தான் ஓர் அமங்கலை எனக்கூறி கண்ணீர் பெருக்கினள். குப்பன் நெஞ்சில் பற்பல சிந்தனைகள், வீணர்களும், வேறு விதியற்ற பண்டிதர்களும் வந்து 'சாதியில் உன்னை விலக்கிடுவோம், உன் தந்தைசொத்தையும் நீ

இழப்பாய். ஆதி வழக்கத்தை மீறுகிறாய். தாலி அறுத்தவளை மணம் ஒப்புகிறாய்' என்று மிரட்டுகின்றனர். கூடியமட்டிலும் யோசித்த குப்பன் குள்ளச்சமூகத்தின் கட்டுக்களை வெட்டி எறிந்தனன். இறுதியில் "நீ தடுமாற்றம் அகற்றிவிடு; கைநீட்டடி; சத்தியம் நான் மணப்பேன்" எனக்கூறி மணப்பதாகப் பாடுகிறார்.

### தயக்கம் ;

*1930* இல் சமூகத்தின் கூச்சலுக்கு அஞ்சாத கைம்பெண்ணுக்கு வாழ்வளித்த கவிஞர் *1938* இல் கைம்பெண்ணின் காதல் நிறைவேறாமல் போனதாகப் பாடுகிறார். சுந்தரனும் சொர்ணமும் வெள்ளத்தினோடொரு வெள்ளமாய் நல்ல வீணையும் நாதமுமாய் மாறி நிற்கின்றனர். இருவரின் பெற்றோரும் வருகின்றனர். 'புற்றரவு ஒத்தது தாயர் உள்ளம் அங்கு புன்னகை கொண்டது மூடத்தனம்' என்று பெற்றோரின் மனஇயல்பைச் சுட்டுகிறார் கவிஞர். குற்றம் மறுத்திடக்கோடி இருக்கின்றது. ஆனால் கற்றவர் யாவையும் நெஞ்சில் தேக்கிக் கண்ணீர் பெருக்கினர் நீரருவி எனக்காட்டி, "சற்றிது கேளுங்கள் நாட்டினரே, பரிதாபச் சரித்திர மானிடரே" என்று மக்களிடம் விண்ணப்பம் செய்து,"ஒற்றைப் பெரும்புகழ்த்தாயகமே இந்த உவமைகள் செய்ததில் தீமையுண்டோ?" எனத் தாயகத்தைக் கேள்விகேட்டுப் பாடலை முடிக்கின்றார்[11].

### மயக்கம் :

கைம்பெண் காதலுக்காகத் தாயகத்தைக் கேள்விகேட்ட கவிஞர் கைம்பெண் காதலால் விளைந்த கதையினை விளக்குகிறார். 'தாலியோடு சகலமும் போயின. தெருவார்கள், ஊரார்கள் இதை அறிந்தால் ஓயாமல் தூற்றிடுவார். இவ்வூரில் யாம் உயர்ந்திருந்தோம் தாழ்த்திவிட்டாய்' எனத்தாயின் புலம்பலையும், உன்னைக் கொன்று போட்டுத் தலையறுத்துக் கொள்கிறேன்' எனக்கூறும் தந்தையின் கூற்றையும், 'அந்த மதியற்றவனைக்கொல்வேன்' என்று அருகிருக்கும் கொடுவாளைத் தூக்கும் அண்ணனின் செயலையும் அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறார் கவிஞர்.இதுதான் சமுதாயம் என்பதை எடுத்துக்காட்டுகிறார். இதனால் மனமுடைந்த மங்கை நல்லாள், எனை மணந்தார் இறந்தார் அது என் குற்றமல்ல என்று கூறி ஆடவரின் காதலுக்கும் பெண்கள் கூட்டம் அடைகின்ற காதலுக்கும் மாற்றம் இல்லை. வாடாத பூப்போன்ற மங்கை நல்லாள் நல்ல மணவாளன் இறந்தால் பின் மணத்தல் தீதோ? பாடாத தேனீக்கள், உலவாத்தென்றல் பசியாத நல்வயிறு பார்த்ததுண்டோ? என இயற்கை நியதியை எடுத்தியம்புகிறாள். இறுதியில் கடலில் வீழ்ந்து உயிர் துறக்கிறாள். இந்தக்கைம்பெண்ணை வாழவைக்க முடியாத கவிஞர் "ஊரார்கள் பார்த்திருந்தார் கரையில் நின்றே உளம் துடித்தார் எனினும் உயிர் வாழ்கின்றார்" எனப்புலம்புகிறார்[12].

### முழக்கம் :

கதை நிகழ்ச்சிகளின் மூலம் கைம்பெண் காதல்நிலையைத் தெளிவு படுத்திய கவிஞர் கவிக்கூற்றாகப்பாடுகிறார். "கோரிக்கையற்றுக்கிடக்கு தண்ணே வேரில் பழுத்த பலா மிகக் கொடியது என்று எண்ணிடப்பட்டதண்ணே குளிர்வடிக்கின்ற வட்டநிலா" என்று கைம்பெண்ணிற்காக இரங்கி ஏக்கமுற்று தென்றல், சோலை, மாலை, கனி, வீணை, கிரீடம், தேன்குடம் ஆகிய இன்பம் நல்கும் பொருள்களை அக்கைம்பெண்ணிற்காக உவமை கூறி, இறுதியில் துணைவி இறந்தபின் வேறொரு துணைவியைத்தேடும் ஆடவன்போல் பெண்ணும் துணைவன் இறந்தபின் வேறொரு துணையைத் தேடச்சொல்லிடுவோம் புவிமேல் என்று ஆணையிடுகிறார்[13]. "கைம்மைக்கொடுமை" என்ற பாடலில், "கூண்டில் கிளிவளர்ப்பார். இல்லத்தில் குக்கல் வளர்த்திடுவார். வேண்டியது தருவார், அவற்றின் விருப்பத்தை அறிந்தே

மாண்டவன் மாண்டபின்னர் அவனின் மனைவியின் உள்ளத்தை ஆண்டையர்காண்பதில்லை. ஐயகோ! அடிமைப்பெண்கதியே! எனக் குமுறுகிறார்[14]. "கைம்மைத்துயர்" எனும் பாடலில் "அணையாத காதலினை அணைக்கச் சொன்னீர் அணைகடந்தால் உங்கள் தடை எந்தமூலை?"[15] என்று உளவியல் தன்மையை உலகுக்கு உயர்த்துகிறார். "ஆய்ந்துபார்" எனும் பாடலில் சமுதாயத்தின் நலன் கருதி கேள்விகள் பல எழுப்புகிறார். அவற்றுள் விதவைத்திருமணம் பற்றிய கேள்வியும் ஒன்றாகக் காட்டுகிறார்[16].

### விளக்கம் :

கதைகளின் வாயிலாகவும், கவிக்கூற்றாகவும் கைம்பெண் நிலையைக் காட்டிய கவிஞர் பெண்பெற்ற தாயொருத்தி தன் மகள் கைம்பெண்ணாக வாழ்வதுகண்டு மனம் வெதும்பிப் புலம்பிச் சமுதாயத்தைச் சாடுவதாகப் படைத்துள்ளார். "காதலைத் தீய்த்த கட்டுப்பாட்"டில் "சமூகத்தில் எங்களைத் தாழ்த்தி விட்டாய்" என்று புலம்பிய தாயைக்காட்டிய கவிஞர் இத்தாயின் மூலம் 'திருந்துமோ இச்சமூகம்' எனக் கேட்டு "மறுமணம் புரிவது சிறுமை என்றறைவது குறுகியமதியென" முழங்க வைக்கிறார்[17].

### புதுமை :

கைம்பெண்படும் வேதனையைப் பலவாறு பாடிக்காட்டிய பாரதிதாசன் ஆடவன் ஒருவன் மூலம் அவளை வாழவைக்கிறார். மரணப் படுக்கையில் போராடிக்கொண்டிருக்கும் ஆடவன் ஒருவன் தன் மனைவியைப்பார்த்து, 'கடும்பிணியால் நான் இறந்துபட்டால் கைம்பெண்ணாய் வருந்தாமல் அடம் செய்யும் வைதீகத்தைப்பொருட்படுத்தாமல் ஆசைக்குரியவனை நாடி மகிழ்வோடு மாலை சூடு" என்று கூறுகின்றார்[18]. ஆணுக்குப் பெண் சரிநிகர் என்பதை அழகாக எடுத்துரைக்கிறார் கவிஞர் இங்கு.

### புரட்சி :

கடும்பிணியாளன் கருத்தைக் கூறிய கவிஞர் கைம்பெண் ஒருத்தி காதலன் ஒருவனுடன் களிப்பெய்தி மகிழ்வதைக்காட்டுகிறார்[19]. இதேநிலையை 1944இல் வெளியிட்ட 'காதல் நினைவுகள்' எனும் நூலில் சற்று விரிவுபடுத்தி ஊராரின் எதிர்ப்பை உதறித்தள்ளும் உறுதி-மிக்க காதலர்களைக் காட்டுகிறார். குள்ளமனத்தினர் கூடித்திரண்டு கொலை வெறியராய் வருதல் கண்ட காதலர் "குன்றனைப்போல் நிமிர்ந்து கண் ஒளி கூர்ந்து அச்சம் தவிர்த்து இன்றுள தேசம் புதுதேசம் மணம் எங்களிஷ்டம்" எனக் காதலர் கூறியதாகக் காட்டி ஊரினர் ஓடியதாக முடிப்பார்[20].

### முடிவு :

தமிழ் இலக்கியக் கழனியில் யாருமே நினைத்துப் பார்க்க முடியாத கைம்பெண் மணத்தைக் கருவாக எடுத்து அதனை மிகச் சிறப்பாகப்பாடி முடித்தவர் பாவேந்தர் பாரதிதாசன். 'மாந்தோப்பில் மணம்' என்ற கவிதையில் குப்பனும் கோமளவல்லியும் ஏழைகள் ஆதலால் அவர்கள் காதல் வெற்றியடைவதாகக் காட்டுகிறார். சமுதாய அந்தஸ்துபெற்ற சுந்தரமும் சொர்ணமும் சமுதாயக்கட்டுப்பாட்டிற்குப் பயந்து தங்கள் காதலை விட்டுக்கொடுப்பதாகக் காட்டுகிறார். 'காதலைத்தீய்த்த கட்டுப்பாட்டில்' கவிஞர் அவர்களைச் சாகடித்துவிடுகிறார். காதலர் இறப்பு கவிஞருக்குப் புதிய வேகத்தைத் தந்தது. ஆதலால் கைம்மைத்துயரைப் பல பாடல்களில் பாடி, சமூகத்தைச்சாடி 'இதில் யாருக்குமே வெட்கமில்லை' என முடிக்கிறார். பெண்ணுளத்தைப் பெண்ணே உணர்வாள் என்பதற்கேற்ப பெற்றவள் ஒருத்தியின் புலம்பலைக்

காட்டுகிறார். மாந்தோப்பில் வரும் குப்பனைப்போல் மனத்தெளிவு பெற்ற கடும்நோயாளன் தன் மனைவியைத் தன் மறைவிற்குப்பின் வேறொருவனை மணந்துகொள்ளச் செய்கிறார். "காதல் நினைவுகள்" மூலம்காதலர் ஊராரை எதிர்த்த உறுதியைக் காட்டுகிறார். 1948இல் வெளியான "காதலா? கடமையா?" எனும் காப்பியத்தில் கைம்மை இல்லா நாட்டினைப்படைத்துக் காட்டுகிறார்[21]. கைம்மை மணத்தை ஆதரிக்கும் கவிஞர் பொருந்தாமணத்தையும்[22]. குழந்தை மணத்தின் கொடுமையையும்[23] சாடுகிறார். இவற்றிற்கெல்லாம் மேலாக மலடி எனும் காரணம் காட்டி மறுமணம் புரிபவர்களுக்குப் பாடம் புகட்ட, "பிள்ளை பெற வேண்டாமே. உனை நான் பெற்றால் பேறெல்லாம் பெற்றவனே ஆவேன்"[24] எனக்கூறுகிறார். இவ்வாறாகப் பெண்களுக்காகப் புதுமை செய்து புரட்சிசெய்த பாவேந்தர் பெண்ணுலகு உள்ளவரை போற்றிக் கொண்டாடும் பெருங்கவிஞராவார் என்பது உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை.

**அடிக் குறிப்புக்கள் :**

1. தொல்காப்பியம் பொருளதிகாரம், புறத்திணை இயல், நூற்பா எண் 19.
2. குறுந்தொகை, பாடல் எண் 69.
3. புறநானூறு, பாடல் எண் 246.
4. மேலது, பாடல் எண் 250.
5. மேலது.
6. மேலது, பாடல் எண் 246.
7. மேலது, பாடல் எண்கள் 248, 280.
8. மேலது, பாடல் எண் 125, நற்றிணை, பாடல் எண் 353.
9. கைம்மையே தவிர்த்து மங்கலம் அளித்த கருணையே.
10. பாரதிதாசன் கவிதைகள், முதல்தொகுதி, மாந்தோப்பில் மணம் பக். 68-71.
11. மேலது, காதல் குற்றவாளிகள், பக் 74-76.
12. மேலது, காதலைத் தீய்த்த கட்டுப்பாடு, பக்.84-87.
13. மேலது, கைம்மைப் பழி, பக்.107-108.
14. மேலது, கைம்மைக் கொடுமை, பக்.109-110.
15. மேலது, கைம்மைத் துயர், பக்.121.
16. மேலது, ஆய்ந்து பார், பக்.144.
17. மேலது, கைம்பெண் நிலை, பக்.119.
18. மேலது, இறந்தவன் மேல்பழி, பக்.120
19. மேலது, கைம்மை நீக்கம், பக்.122.
20. பாரதிதாசன், காதல் நினைவுகள், பக்.24-27.
21. பாரதிதாசன், காதலா கடமையா, பக்.14
22. பாரதிதாசன் கவிதைகள் முதற்தொகுதி மூடத்திருமணம், பக்.11.
23. மேலது, குழந்தை மணத்தின் கொடுமை, பக்.116.
24. பாரதிதாசன் கவிதைகள் இரண்டாம் தொகுதி, மெய்யன்பு, பக்.39.

* * *

# இன்றைய சிந்தனைக்குப் பாவேந்தரின் 'தமிழியக்கம்'

முனைவர் சொ. சிங்காரவேலன்

**தமிழியக்கம் - "நல்வினை!" :**

"தமிழ் நாட்டில் தமிழ் பல துறைகளிலும் தாழ்மைப்படுத்தப்பட்டிருக்கிறது. அத்துறைகளில் சிலவற்றையே இதில் எடுத்துக் காட்டியிருக்கிறேன். மற்றும் சில துறைகள் பின்னர் ஆகட்டும். இதைநான் எழுதியதின் நோக்கம் என்னவெனில், தமிழார்வம் மிக்க இளைஞர்கள் இத்தகைய துறைகளில் தமிழ் முன்னேற்றம் கருதி இயன்றவாறு கிளர்ச்சி செய்யவேண்டும் என்பதுதான்" என்று தம் "தமிழியக்கம்" முன்னுரையாக, "நல்வினை" எனத் தலைப்பிட்டு எழுதினார் பாவேந்தர் (தமிழியக்கம், முதற் பதிப்பு 1945). "பலவகையினும் கிளர்ச்சி செய்யின் தமிழ் விடுபடும். தமிழ்நாடு விடுபடும். எவ்வினையினும் இஃதன்றோ இந்நாள் இன்றியமையாத நல்வினை" என்று முடித்திருந்தார் பாவேந்தர். முப்பதாண்டுகளுக்குள்ளாகவே, எட்டாம் பதிப்பை எட்டியது "தமிழியக்கம்" (1975 வரை).

**இக்காலத் தேவை :**

தமிழ் தமிழ்நாட்டில் உரிய இடத்தைப் பெற்றிட வேண்டும் என்ற நல்ல நோக்கம் உடையது "தமிழியக்கம்"; " பக்தி இயக்கம்" (**Bhakti Movement**) தமிழகம் கண்டது; "தமிழ் இயக்கத்தி"னை அந்த நல்ல நோக்கம் போன்றே தொடங்கினார் பாவேந்தர்."தமிழ்த் தொண்டு" என்பதைவிடத் "தமிழ் இயக்கம்" என்பது உயர்ந்தது; ஆற்றல் சார்ந்தது. பாவேந்தர் தொடங்கி வைத்த அவ்வியக்கம் இன்னும் உயிரோட்டம் உடையதாகவே உள்ளது. "பெயர்ப் பலகைகளில் தமிழ்" பற்றிய தமிழக அரசின் அண்மைக் கால அரசாணையும், அது தொடர்பாகத் தமிழகச் சட்ட மன்றத் தலைவர் பேராசியர் தமிழ்க் குடிமகனின் விளக்கக் கட்டுரைகளும், இந்த இயக்கத்தின் இக்கால இன்றியமையாமையை விளக்குவனவாகவே உள்ளன.

பாவேந்தரின் "தமிழியக்கம்" இந்த உயர் சிந்தனைகளை உணர்ச்சி ததும்ப எடுத்துரைக்கும் காலப்பெட்டகம்; கருத்துக் களஞ்சியம்; சிந்தனைத்தொகுப்பு என்பது மிகையாகாது.

**நூற்பொருள்:**

"தமிழியக்கம்" 24 பாகுபாடுகளைக் கொண்டு திகழ்கின்றது; 120 அறுசீர் விருத்தங்களை உடையது. "நெஞ்சு பதைக்கும் நிலை" யில் தொடங்கிய புரட்சிக்கவிஞர், "இருப்பதை விட இறத்தலே நன்று" என்று 'ஆவேசம் பொங்க எழுந்து "வரிப்புலியே! தமிழ்காக்க எழுந்திரு!" என்று அழைப்பு விடுக்கிறார். "மங்கையர், முதியோர்" முதலியவர்களுக்கும் அவர் அழைப்பு விடுத்த திறம் குறிப்பிடத்தக்கது. "வாணிகர்," "அரசியல் சீர் வாய்ந்தார்" "புலவர்", "குடும்பத்தார்"

"கோயிலார்", "அறத்தலைவர்", "விழாநடத்துவோர்", "கணக்காயர்", "மாணவர்", "பாடகர்", "கூத்தர்", " பாட்டியிற்றுவோர்", "சொற்பொழிவாளர்", "ஏடெழுதுவோர்" "பெருஞ்செல்வர்", என்று சமுதாயத்தில் பல்வேறு நிலையினர்க்கும் இவ்வியக்க நடைமுறை பற்றி உணர்ச்சி ததும்ப எடுத்துரைக்கின்றார் கவிஞர்.

### சமுதாய இயக்கம் :

ஓர் இயக்கம் தனிமனிதர்களைப் பொறுத்து வெற்றி தோல்விகளைத் தழுவுதல் இல்லை; அது சமுதாய இயக்கமாக மலர்ந்தால் அன்றி நல்ல விளைவுகளை எதிர்பார்க்க இயலாது. பாவேந்தர், தமிழ் மொழியின் உயர்நிலை, சமுதாய இயக்கமாக மலர்ந்தால் அன்றி முழுமை பெற முடியாது என்று கருதியே இத்தகைய படிமுறைகளை மேற்கொண்டனர் என்று கருதலாம்.

### மறுமலர்ச்சி :

"தமிழியக்கம்" தோன்றி அரை நூற்றாண்டுக் காலம் ஆன பிறகும் கூட, சுயமரியாதை இயக்கம் மொழிக் கொள்கையை அடிப்படையாக்கியும் கூட, இன்னும் வெற்றி பெறவில்லை என்பதை நோக்கும்போது, தமிழ்மக்களில் பெரும்பாலோர் அறியாமையின் அதிக விழுக்காடே என்பது புலனாகின்றது. அதனைக் களைந்திட வேண்டுமெனில், மீண்டும் "தமிழியக்கம்" புத்துணர்ச்சி கொண்டு மறுமலர்ச்சி பெற்றிட வேண்டும்.

### இளைஞர் சிந்திக்க:

இன்னும் தமிழுக்குப் பகைவர்களாக உள்ளவர்கள் தமிழர்களே; வேறு பிறர் அல்லர். துறைதோறும் தமிழை வளக்க வேண்டியவர்கள், துறைதோறும் அழித்து வருதலை என்னென்பது? மேடையிலே "தமிழ்" "தமிழ்" என்று பேசுவதுடன் நின்று விடுவது பலர் இயல்பாக உள்ளது. செயலளவில் தம் தாய்மொழியை மறந்த சிறுமை இன்று பெரும்பான்மைத் தமிழரின் பெருமையாக உள்ளது.

> தமிழ் வாழ்க என்றெழுதிக்
> கையெழுத்திட்டார் தலைவர் -
> ஆங்கிலத்தில்"
>
> ("இளந்தூது", இதழ்2 , 1990)

என்று கூறுவது நடப்பு நிலையே அன்றிக் கற்பனை அன்று.

இளைஞர்கள் இவ்வகையில் சிந்திக்க வேண்டுவதும் செயலாற்ற வேண்டுவதும் இன்றைய தேவைகள்; உடனடித் தேவைகள்.

### தமிழாய்ந்த தமிழர் - முதல் அமைச்சராக :

பாவேந்தர் அன்று பாடிய பாடல் ஒன்று இன்று நிறைவேறிவிட்டது; கலைஞர் அரசு இடைவெளிக்குப் பிறகு அரியணை ஏறியுள்ளது; இந்த ஆட்சியில், "தமிழியக்கம்" தழைத்திட வில்லை எனில் வேறு எப்போது தலையெடுக்க இயலும்? சிந்திக்க வேண்டும்:

> "தமிழாய்ந்த தமிழன்தான்
> தமிழ் நாட்டின் முதலமைச்சாய்

வருதல் வேண்டும்!

தமிழ்ப்பகைவன் முதலமைச்சாய்

தமிழ்நாட்டில் வாராது

தடுத்தல் வேண்டும் (36)

என்ற அடிகள், "தமிழியக்க" அடிகள்; ஒரு கவிஞரின் வாக்குப் பொய்க்காது என்பதற் கல்லவோ, அடையாளங்கள்! இந்தச் சிந்தனையும் பாவேந்தர் தமிழின் வெற்றிக்குப் பெருமை சேர்க்கும் அன்றோ?

## மொழிப்போருக்கு அழைப்பு :

"கரும்பு தந்த தீஞ்சாறே!

கனிதந்த நறுஞ்சுளையே!

கவின்செய் முல்லை

அரும்பு தந்த வெண்ணகையே!

அணிதந்த செந்தமிழே!

அன்பே! கட்டி

இரும்புதந்த நெஞ்சுடையார்

துறைதோறும் நின்னெழிலை

ஈடழித்து

வரும்புதுமை நினைக்கையிலே

நெஞ்சு பதைக்கும், சொல்ல

வாய்பதைக்கும்!" (1)

என்று தமிழையே விளித்து, உணர்ச்சி பொங்க உரைக்கின்றார் பாவேந்தர்.

"விழிப்போரே நிலைகாண்பார்;

விதைப்போரே அறுத்திடுவார்;

களைகாண் டோறும்

அழிப்போரே அறஞ்செய்வார்;

அறிந்தோரே உயர்ந்திடுவார்;

ஆதல் ஆர்வம்

செழிப்போரே! இளைஞர்களே!

தென்னாட்டுச் சிங்கங்காள்!

எழுக நம்தாய்!

மொழிப்போரே வேண்டுவது!

தொடக்கம் செய்வீர்; வெல்வீர்!

மொழிப்போர் வெல்க!" (120)

என்று போர்க்கால அழைப்புடனே, "தமிழியக்கத்தை" நிறைவு செய்கின்றார். ஆம், அது தொடக்கம்தான். அந்தத் தொடக்கத்தைப் பின்பற்றினோமா? பாவேந்தர் பாதையில் நடந்தோமா? நவின்றதைச் செயற்படுத்தினோமா? என்று தமிழன் ஒவ்வொருவனும் தன் நெஞ்சு தொட்டுக் கேட்டுக் கொள்ள வேண்டிய தருணம் இது!

### கல்லூரி, பல்கலைக் கழகங்களில் தமிழ் :

கல்லூரிகளில் பயிற்று மொழியாக இன்னும் தமிழ் வரவில்லை; தமிழ் ஆக்கப்படவில்லை. இதனை உடனடியாகத் தொடர்புடைய துறையினர் நோக்க வேண்டும். 'பாடநூல்கள் இல்லை' என்று கூற இயலாது. அறிவியல், மருத்துவம் தொடர்பாக உயர் கல்வித்துறையில் இன்று எண்ணற்ற பாடநூல்கள் தக்க விற்பன்னர்களால், உருவாக்கப் பட்டுவிட்டன. தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் இவ்வகையில் விழுமிய தொண்டாற்றி வருகின்றது. பயிற்று மொழி தமிழாக இருந்தாலன்றோ, கற்கும் மாணாக்கர் புரிந்து கொள்வர்! பாவேந்தர் வினவினார் இவ்வாறு:

> கல்லூரித் தலைவரை நான்
> கேட்கின்றேன்; கனிதமிழின்
> பேரைச் சொன்னால்,
> சொல்லூறிப் போகாதோ?
> வாயூறிப் போகாதோ?
> தூய்தமிழ்க்கு
> வல்லூறாய் வாய்த்தீரோ? (26)

இந்த வினாவிற்கு விடையளிக்கும் நாள் அண்மையில் வந்தாக வேண்டும் அன்றோ?

### எங்கும் தமிழ் மணக்க :

சிங்கப்பூர்க் கடைவீதியில் செந்தமிழ் மணக்கின்றது; மலேசியக் கடைவீதிகளில் தமிழ் மணம் வீசுகின்றது. தமிழகக் கடைவீதிகளில் தமிழ் தவழ்வதிலே தடை என்ன இருக்க முடியும்? தமிழ்மக்களை வைத்துத்தானே பெரும்பான்மை வாணிகம் நடக்கின்றது! அவ்வாறாயின், தம் கடைகளின் பெயர்ப் பலகைகளில் தமிழில் எழுதினால் வணிகத்திற்கு என்ன இழப்பு வந்துவிடும்? சிந்திக்க வேண்டாமா? புரட்சிக்கவிஞர் இந்தச் சிந்தனையை எவ்வளவு அழகாகப் பாடுகின்றார்!

> அறிவிப்புப் பலகையெல்லாம்
> அருந்தமிழ்ச்சொல் லாக்குவதே
> அன்றி, அச்சொல்
> குறைவற்றுத் தொடராகக்
> குற்றமற்ற சொல்லாக
> அமையுமாயின்
> மறுவற்றுத் திகழாளோ
> செந்தமிழ்த்தாய்? (24)

இவ்வாறு கேட்டதுடன்,

மணக்கவரும் தென்றலிலே
குளிரா இல்லை? தோப்பில்
நிழலா இல்லை?
தணிப்பரிதாம் துன்பமிது!
தமிழகத்தின் தமிழ்த் தெருவில்
தமிழ்தான் இல்லை! (22)

என்று மனம் நொந்து பாடுகின்றார் பாவேந்தர்.

## தமிழியக்கம் - உயிரியக்கம் உணர்வியக்கமாக வேண்டும் :

சுருக்கமாகக் கூறினால், "தமிழியக்கம்" இன்றைய தமிழகத்தின் : உயிரியக்கம்" ஆக — "உணர்வியக்கம்" ஆக மலர வேண்டும். மாணவர் முதல் அரசியல் தலைவர் வரை அனைவரும் "ஒண்டமிழ்த்தாய் சிலம்படியின் முன்னேற்றம் ஒவ்வொன்றும்" நம் முன்னேற்றம் என்று கருதும் நிலை வேண்டும்; தமிழக அரசின் இவ்வகை நடவடிக்கை ஒவ்வொன்றையும் செயல் நிலையில் மலர மனங்கொள்ள வேண்டும். இருபத்தோராம் நூற்றாண்டில், தமிழ் எவ்வகைத் துறையிலும் மலர்ந்திட, ஆட்சி நிலையில் பொலிந்திட, பாவேந்தரின் இக்கொள்கை முழக்க அழைப்பு, "தமிழ் வரிப்புலிகளை" எழுப்ப வேண்டும்; அந்தச் சிந்தனைக்கு அழைப்பே இச்சிறுகட்டுரை.

* * *

# பாவேந்தர் ஒரு பல்கலைக் குரிசில்

எச். இராமசாமி

பாவேந்த தர்ஒரு பல்கலைக் குரிசில்
நாவேந் தும்தமிழ் பல்கலை படைக்கும்
பாரதி பைந்தமிழ் போற்றும் நாவே
பாரதம் செழிக்கச் சுதரையும் போற்றும்
சுப்பிர மணியரைப் போற்றிய அவரே
சுயமரி யாதைச் சிங்கமாய்த் திகழ்ந்தார்.
பார்க்கும் இடமெலாம் சக்தியைக் கண்டவர்
பாங்குடன் அழகின் சிரிப்பையும் கண்டார்
சஞ்சீவி பர்வதச் சாரலைச் சார்ந்து
சஞ்சலம் நீங்க வழியைக் காட்டினார்.
புரட்சிக் கவியைப் படைத்த அவரே
புரட்சி யாளராய் விளங்கினா ரன்றோ?
நீல வாளின் கோல நிலவை
அவரைப் போலே கண்டவர் எவரே?
தொழிலா ளர்தம் சிறப்பை யெல்லாம்
தொகுத்துத் தந்தோர் அவர்போல் யாரே?
தமிழின் இனிமையைத் தரணிக் குணர்த்தினோர்
அவரைப் போலே எவரேனும் உண்டோ?
தமிழைக் காக்க அவர்போ லிங்கே
தருக்குடன் மீசை முறுக்கினோர் எவரே!
குடும்ப விளக்கை ஏற்றி வைத்தார்.
இருண்ட வீட்டையும் சுட்டிக் காட்டினார்.
இளைஞர் காதலை எழுது கின்றவர்
எத்தனை யோபேர் இன்றும் உள்ளனர்
முதியோர் காதலை பாடிச் சிறந்தவர்
இவரைப் போலே எவரே உள்ளனர்?
வேரில் பழுத்த பலாவென விதவையை
விதித்துக் காட்டி விரும்பிடச் செய்தார்

இராணுவ ஒழுக்கம் கடைப்பிடித் திட்ட
எவரும் அஞ்சும் டி.ஆர். சுந்தரம்
இவரிடம் இருந்த பல்கலை ஆற்றலை
அறிந்து அன்றோ பணிந்து போற்றினார்?
பாவேந்தர் இருந்த இடத்திற் கன்றோ
கலைஞரும் கண்ண தாசனும் சென்றனர்?
உளத்தில் எத்தனை உளத்தைக் கண்டார்?
சுடுகு உளத்தை துவரை உளத்தை
மாம்பிஞ் சுளத்தை தொன்னை உளத்தை
உலகம் போற்றும் தாயுள் ளத்தை
உயர்ந்தோர் போற்றும் வண்ணம் காட்டினார்.
இருட்ட றையிலே உலகம் உள்ளதை
வெளிச்சம் பாய்ச்சி விளக்கிக் காட்டினார்
ஒடப்பர் தமையே உதையப்ப ராக்கி
உலகில் சமநிலை நிலைக்கக் காட்டினார்
மண்ணாங் கட்டியாய் நின்ற மனிதனை
மானிட ஆழியில் கலக்க வைத்து
மனத்தை உயர்த்தி பொதுமை புகட்டினார்
புதிய ஆத்திச் சூடி படைத்து
புரட்சிக் கருத்தைப் புகட்டி வருகிறார்.
ஏற்றப் பாட்டிலும் எழில்மிகு கருத்தை
எடுத்தி யம்பி ஏற்றம் பெறுகிறார்.
தாலாட் டுப்பாட்டில் தரமிகு கருத்தை
தரணிக் களித்து தனித்து நிற்கிறார்
நாற்று நடுவோர் பாட்டிலும் கூட
நயமிகு கருத்தை நட்டு வைக்கிறார்
ஆலையின் சங்கை ஊதச் சொல்லி
அழகிய காதலைச் சுவைக்க வைக்கிறார்
தமிழி யக்க நூலைப் படைத்து
சமூக வாழ்வை மேம்பட வைக்கிறார்.
இசைய முதினை இனிதே இயம்பி
இனிய தமிழிசை இயம்ப வைக்கிறார்.
கருத்தடை தோன்றாக் காலத்தி லேயே
கருவுக் குத்தடை வேண்டும் என்கிறார்.
பள்ளி செல்லாச் சிறுமியை அழைத்து
கல்வி மலைவாழை என்று நவில்கிறார்
பசியென்று வந்தவர் தம்மைப் பார்த்து
புசியென்று அன்னம் போடச் சொல்கிறார்



அரசு போற்றும் வள்ளுவர் வடிவை
வடித்துக் காட்ட மூலமாய் நின்றார்
விருந்து ஓம்ப இவரைப் போலே
பிறந்து ஒருவர் இனிவர வேண்டும்
பாவின் வேந்தர் இன்று இருந்தால்
பெண்ணை மணக்கக் கூலி கேட்கும்
எண்ணிப் பார்க்கா இளைஞர் கூட்டம்
பாட்டைக் கேட்டு எடுப்பார் ஓட்டம்
மருமகள் எரிய உதவும் அடுப்பு
மாமியும் மகனும் எரியவும் உதவும்
அந்த வித்தையை பாவேந் தர்தமிழ்
அட்டி யின்றித் திட்டமாய்த் தீட்டும்
கலப்படம் செய்யும் கயவர் கூட்டை
கவிஞர் பாட்டு போடுமே ஓட்டை
ஓட்டு விரும்பிகள் செய்யும் சேட்டையை
பாட்டு விரட்டி ஓட்டும் சாட்டையாய்
கையூட்டு வாங்கும் கொடுக்கும் கைகளை
கொலைவாள் கொண்டு வெட்டியே வீசும்
பிறமொழி தமிழில் கணக்கின்றி கலப்போர்
தறிகெட்டு ஓட பரணி பாடுவார்
எல்லாக் கலையும் தமிழில் கற்க
இனைய வழியை ஏற்ற நெறியை
எடுத்திய யம்புவார் ஏற்றம் பெறுந்தமிழ்
பாரதி போற்றும் சிறந்த மாணவர்
கவிஞர் தமக்கோர் சிறந்த ஆசான்
குயிலைப் படைத்த இதழா சிரியர்
திருக்கு றளக்கு உரையா சிரியர்
கண்ணகி மேகலை போற்றும் தூயர்
பாண்டியன் பரிசைப் பாருக் களித்தவர்
அழகின் சிரிப்பை அணுகிக் கண்டார்
நாடகம் நன்கு படைக்கத் தெரிந்தவர்
திரைப்பட உரைநடை பாடல் புனைந்தவர்
சட்ட சபையிலும் அங்கம் வகித்தவர்
பாவேந் தர்ஒரு பல்கலைக் குரிசில்.

* * *





கொலை வாளினை எடடா மிகு
கொடியோர் செயல் அறவே

- பாரதிதாசன்

ஓவியம்: ஜி. இராமன்

# அமில பூமி.... அமில பூமி....

கவிஞர் அரசு மணிமேகலை.

பின்னாலே பேசுகின்ற
பெருங்கொடுமைத் தீக்குணத்தை
இன்றே, இப்பொழுதே
இந்தியர்நாம் விட்டுவிடின்

மண்ணெல்லாம் பொன்னாகும்
மாநிதியம் வசமாகும்!
எண்ணில்லாச் சாதனைகள்
ஏராளம் பூத்துவரும்!

ஆளிருக்கும் வரையினிலே
ஆகாகா போட்டுவிட்டு
அவர் நகர்ந்து போனதுமே
ஆயிரங்கள் பேசுகிறோம்!

"எனக்கில்லை சாதி" யென்று
ஏகமாக முழங்கிவிட்டு
"எதிர்வீட்டுப் பணியாளன்
என்ன சாதி?" என்கின்றோம்!

கண்முன்னே பொதுச்சொத்து
களவேதான் போயிடினும்
"என்வீட்டுச் சொத்தில்லை!
எனக்கென்ன?" என்கின்றோம்!

"பெண்ணெல்லாம் பெருஞ்சக்தி
பேச்சிழந்தேன் தெய்வதமே"
என்றபடி, பேருந்தில்
இடிக்க ஆள் பார்க்கின்றோம்!

நிலையான ஒருகொள்கை
நித்தமும்கைக் கொள்ளாமல்
அலையடிக்கும் பக்கமெல்லாம்
ஆர்ப்பரித்து ஓடுகிறோம்!

ஆர்ப்பரித்து ஓடிவிட்டு
ஆங்குலாபம் இல்லையெனில்
நாணமின்றி வெட்கமின்றி
நாடிமீண்டும் திரும்புகிறோம்!

நாம்பிறந்த உலகமிது
நலிந்துவரக் கண்டாலும்
என்னென்றும், ஏதென்றும்
இதுவரையும் கேட்டறியோம்!

உடன்பிறந்த மக்களெல்லாம்
உலைச்சோற்றுக் கேங்குகையில்
உல்லாசப் பயணங்களை
ஒருநாளும் விடுத்தறியோம்!

மொத்தத்தில் மனச்சாட்சி
முழுவதுமாய்க் கொன்றுவிட்டோம்!
இரத்தத்தில் நேர்மையணு
இல்லாமல் செய்துவிட்டோம்!

இதயத்தில் ஊறிவிட்ட
இலஞ்சத்தின் இயல்பாலே
இருகைகள் நீட்டுதற்கும்
இயல்பாகத் துடிக்கின்றோம்!

என்றைக்கு இவைஒழிப்போம்?
என்றைக்குத் தலையெடுப்போம்?
அன்றைக்கே சுதந்திரத்தை
அடைந்ததாக அறிவிப்போம்!

* * *

# பாரதி தாசனின்
# 'அவள் மேற் பழி'
# என்ற புரட்சிப் பாடல்

முனைவர் மு. அப்துல் கறீம்.

பாவேந்தர் பாரதிதாசனின் தமிழ்மொழி பற்றிய கருத்தோட்டமே புரட்சி அமைப்புடைய-தாகும். தமிழ்ப் புலவர் எல்லோரும் தமிழ் மொழியைப் போற்றினர்; புகழ்ந்தனர்; தமிழைத் தெய்வமாகக் கண்டு களித்தனர். ஆனால் தமிழைத் தமிழரின் உயிர் நிலையாக, உடம்பாக, உணவாக, உணர்வாகக் கண்டு போற்றிய பாரதிதாசனின் போக்கு புதியது; புரட்சிப் போக்குடையது. 'தமிழ் எங்கள் உயிருக்கு நேர்; 'தமிழே நீ என்றன் ஆவி' 'தமிழை என் உயிர் என்பேன்', 'உயிரை உணர்வை வளர்ப்பது தமிழே' என்றெல்லாம் பாடியவர் பாரதிதாசன். "உண்ணல், உடுத்தல், உயிர்த்தல் எனச் செந்தமிழை நண்ணலும் ஆம் என நாட்டுக" எனப் பாடிய புரட்சியைப் பாவேந்தருக்கு முன்பு யாரும் செய்ததில்லை. பாரதிதாசன் மனையாளும் மக்களும் அயலவர் ஆகும் வண்ணம் தமிழ் அறிவினில் உறைதல் காணீர் என்பார் (பாரதிதாசன் கவிதைகள், தொகுதி I, 19, மூன்றாம் பாட்டு). காதல் உலகத்தில் கருத்தொருமித்த இருவரும் தம் காதலைவிடத் தமிழ்க்காதலுக்கே முதலிடம் தருவதாகப் பாடிய ஒரே கவிஞர் பாரதிதாசனே (குடும்ப விளக்கு). இராமலிங்கர் போன்ற அருளாளர்கள் கூடக் காதல் இன்பம் தலையான இன்பம் என்ற கருத்துக் கொண்டிருக்க, 'மாது தரும் சுகமும் மாத்தமிழுக் கீடில்லை' எனப் பாடியது பாரதிதாசன் செய்த புரட்சியல்லவா? சமயவாதிகள் அவரவர் சமயத்தைச் சார்ந்த ஆணும் பெண்ணும் மணக்க வேண்டும் எனப் பேசினர். இதனை உடன்படாத பாரதிதாசன், சாதிசமயக் கலப்பு மணத்தை விரும்பி வேண்டிப் பாடுகின்றார். ஆனால் பலமொழி பேசுவோர் தம்முள் மணக்கும் மொழிக்கலப்பு மணத்தை மட்டும் மறுக்கிறார். தமிழறிந்த பெண்ணையே தமிழன் மணக்க வேண்டும் என்கிறார். 'பழகு தமிழறியாப் பாவை, தமிழருக்கு உயிரில்லாத உடல்' எனப் பாடுகிறார் (காதல் நினைவுகள், தமிழ் வாழ்வு). காதலி, கொச்சைத் தமிழில் புகழ்ந்ததைப் பொறுக்காது சோர்ந்து வீழ்ந்த காதலனைப் படைத்துக் காட்டுவார். இவையெல்லாம் தமிழை, அதன் அருமையை, அதன் புகழை, அதன் பயனை, அதன் வளர்ச்சியைச் சிந்தித்த போக்கிலும், சிறப்பித்த நோக்கிலும் பாவேந்தர் புரட்சி செய்திருத்தலைக் காட்டும்.

தமிழ் மொழிப் பார்வையில் புரட்சி செய்த கவிஞர், தமிழ் அகப்பொருள் மரபில் மாபெரும் புரட்சியைச் செய்திருக்கின்றார். தமிழ் அகப்பொருளில், தலைவனிடம் தவறு இல்லையாயினும், தலைவி தவறு கற்பித்து ஊடிக் கூடல் இன்பத்தைக் கூட்ட முயல்வது மரபு (குறள், 1321). பெண்ணியலார் எல்லாரும் கண்ணின் பொதுவுண்டமையால், பரத்தமைப்பட்ட நின் மார்பைப் பொருந்தேன் எனத் தலைவன் மேல் பழிகூறித் தலைவி ஊடுவாள் (குறள்.1311). இதுவே மரபு.

அவன் மேல் மட்டும் அவள் காதற் பழிகூற அனுமதி தந்தது தமிழ் அகப்பொருள். மேலும் இது நாடக வழக்கு - உலகியல் வழக்கன்று என்பதையும் மறந்துவிடக் கூடாது. ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானமான உரிமைகளைப் பெற வேண்டும் என்ற புரட்சிக் கருத்தை

அனைவரும் ஏற்றுக் கொண்டு விட்ட பிறகு - கற்பு நிலை என்று சொல்லவந்தால், இரு கட்சிக்கும் அதனைப் பொதுவில் வைக்க வேண்டும் என்று முடிவு செய்து விட்ட பிறகு - அவன் மேல் பழி மட்டும்தான் கூற வேண்டுமா என்ற சிந்தனையில் ஈடுபடுகின்றார் புரட்சிக் கவிஞர்.

இரண்டாயிரம் ஆண்டுகளாக யாரும் மாற்றத் துணிவு கொள்ளாத இம் மரபை மாற்றி மாபெரும் புரட்சி செய்கின்றார் பாரதிதாசன். நாடக வழக்கில் 'அவன்மேல் பழி' சுமத்தும் உரிமை அவளுக்கு இருக்கும்போது, 'அவள் மேல் பழி' சுமத்தும் உரிமை அவனுக்கு இருக்கக் கூடாதா? என எண்ணுகின்றார். விளைவு, காதல் நினைவுகள் என்ற பாவேந்தர் படைப்பில், 'அவன்மேல் பழி' என்ற பகுதியைப் பாடி முடித்ததும், 'அவள்மேல் பழி' என்ற தலைப்பில் ஒரு 'புரட்சிப் பாடலைத் தயங்காது பாடுகின்றார்.

தலைவி தோழியைத் தலைவனிடம் தூது அனுப்புகின்றாள். தூது சென்ற தோழி, தலைவனை நோக்கிக் 'கைப்பிடியில் கூட்டி வரத் தலைவி கட்டளை இட்டாள்' எனத் தலைவியின் உரிமையை நாட்டிப் பேசுகின்றாள். அதற்குத் தலைவன், கற்பனையாக அவள்மேல் காதற் பழி சுமத்தி, வர மறுக்கின்றான்.

> தேரடியில் கண்ட அவள் தேனிதழைத் தந்தவுடன்
> ஊருக்கெனைக் கூட்டிச்செல்க என்றாள் - தன்னை
> யாருக்குமுன் வாக்களித் திருந்தாள்?
> சோலையிலே வஞ்சியினைத் தொட்டிடுமுன் சேல்விழியாள்
> நாலுதரம் சுற்று முற்றும் பார்த்தாள் - எந்தக்
> காலிக்கவள் அஞ்சி முகம் வேர்த்தாள்?"
> புன்னகையும் பூப்பதில்லை புதுமலரும் தீண்டவில்லை
> என் நினைவால் வாடுகின்றாள் என்றாய் - அன்று
> சன்னலிலே யாருக்காக நின்றாள்?
> தொத்துகிளி யாள்எனது தோளின்மிசை வந்திருக்கப்
> பித்துமிகுந் தாள் என மொழிந்தாய் - அவள்
> இத்தெருவில் யாருக்காக வந்தாள்?

*(காதல் நினைவுகள், அவள் மேற்பழி,*
*கண்ணி. 2,3,6,7.)*

நம் கருத்துக்குத் தேவையான நான்கு கண்ணிகளையும் மேலே தந்துள்ளோம். இங்கு ஒருதலைவி உரிமையோடு தலைவன்மேல் என்னென்ன பழியெல்லாம் சொல்லி ஊடுவாளோ, அவற்றையெல்லாம் தலைவிமேல் சொல்லித் தலைவன் ஊடிப் பேசுகின்றான்.

> 'தன்னை யாருக்கு முன் வாக்களித்திருந்தாள்?
> 'எந்தக் காலிக்கு அவள் அஞ்சி முகம் வேர்த்தாள்?
> 'சன்னலில் யாருக்காக நின்றாள்?
> 'யாருக்காக இத்தெருவில் வந்தாள்?

எனத் தலைவிமேல் தலைவன் சுமத்தும் காதற்பழிகள் தமிழ் இலக்கிய மரபில் பெரும் புரட்சியாகும்.

பாரதிதாசன் செய்த இந்த மாபெரும் மரபுப் புரட்சி ஆழ்ந்த சிந்தனைக்குரியது. தலைவன் மேல் தலைவி காதற்பழிகூற அனுமதித்த தமிழ் மரபு, தலைவனுக்கு மட்டும் அவ்வுரிமையை மறுத்ததேன்? என்பதே இங்கு பாவேந்தரின் கேள்வி. ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானமான உரிமைகளைப் பெறவேண்டும். இல்லறத்தில் ஆணுக்குப்பெண் அடிமையன்று - கற்புநிலை என்று சொல்ல வந்தால் இருகட்சிக்கும் அஃது பொது - எனவரும் சமுதாயச் சிந்தனை மாற்றங்களை ஏற்றுக் கொண்டு விட்ட பிறகு, அவள் மட்டும் அவனைக் காதற்பழி சுமத்தி ஊடலாம்; அவன், அவள் மேல் காதற்பழி சுமத்தி ஊடக் கூடாதா? என்பதே பாரதிதாசனின் புரட்சிப்பாடல் தோன்றக் காரணமாக இருந்த சிந்தனை என நமக்குத் தோன்றுகின்றது.

தலைவன் தனக்குமட்டுமே உரியவன்; அவனை வேறொரு பெண் காணவும் நினைக்கவும் அனுமதியேன் என்று சொல்லி, ஆணுடைய காதலில் உறுதி நிலையைப் பெண் எதிர்பார்க்கும் போது, ஆண் மட்டும் பெண்ணிடம் அவ்வுறுதி நிலையை எதிர் பார்க்கக் கூடாதா? ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னர் திருவள்ளுவர் படைத்த காதலன் முழுமதியை நோக்கி, என் மனைவியின் மாண்பை நீயும் பெற வேண்டுமானால், பலர் காண உலா வராதே எனப் பேசுகிறான் (குறள், 1119). இப்பேச்சின் உயிர்ப் பொருள், தன் மனைவி பலர் காண உலா வந்தால் தன்னால் பொறுக்க இயலாது என்பது தானே? கோவலன் மாதவியிடத்துக் கண்ட குறையும் அதுதானே? பலர் காண இந்திரவிழாவில் மாதவி ஆடிய ஆட்டங்கண்டு உள்ளம் வெதும்பிய கோவலனின் ஊடல் உள்ளம், (சிலம்பு, கடலாடும் காதை, அடி.82) கானல் வரியில் பிரிவாக மாறியது சிலம்புச்செய்தியாகும். இந்த நோக்கில் பாரதிதாசனும் திருவள்ளுவர், இளங்கோ ஆகியோர் படைத்த தலைவர்களின் உள்ளப் போக்குடைய ஒரு தலைவனைப் படைத்து, அவன் வெளிப்படையாக 'அவள்மேல் பழி' சுமத்தும் உரிமையை வழங்க முந்துகிறார் எனவும் எண்ணலாம்.

ஒருவனுக்கு ஒருத்தி என்ற காதல் கற்பில் பாவேந்தருக்கு உறுதியான நம்பிக்கையுண்டு. நாடக வழக்கே என்றாலும் - கற்பனையே என்றாலும் - தலைவி, தலைவன் கற்புத் திறத்தில் குறை கூற அனுமதி தந்த தமிழ் இலக்கிய மரபு பொருத்தமுடையதா? கற்புக் குற்றத்தைக் கற்பனையாக- வேனும் தலைவன் மேல் சுமத்துவது, தலைவனின் தலைமைப் பண்புக்குப் பொருந்துமா என்பது பாரதிதாசனுக்கு ஏற்பட்ட பெரிய ஐயம். கற்பு இருவருக்கும் பொது என்ற சிறந்த பண்பட்ட உயர்ந்த கொள்கைக்கு இம்மரபு முரணல்லவா? உலகியற்படி நோக்கினால் இம்மரபில் உண்மை இருக்கிறது என்று சொன்னாலும், தலைவன்பால் கற்புப் பழி சுமத்துவதில் கவிஞருக்கு உடன்பாடில்லை. அம்மரபைப் போற்றலாம் என்றால், உலகியலில் இதுவும் நடைமுறையில் இருப்பதால், தலைவியின் பாலும் கற்புப் பழி கூறலாமே என்பதுதான் பாவேந்தரின் சிந்தனைப் போக்கு. அதனால்தான் அவன்மேல் பழி என்ற மரபுப் பாடலைப் பாடி முடித்ததும், அவள்மேல் பழி என்ற புரட்சிப் பாடலையும் பாடுகின்றார். ஒன்று, இரண்டையும் மறுப்போம்; இன்றேல் இரண்டையும் பாடுவோம் என்பதே பாரதிதாசனின் எண்ணப்போக்காக இருந்திருக்க வேண்டும்.

ஆய்வென்று வந்த பிறகு மறுபக்கத்தையும் பார்த்தாக வேண்டும். தலைவிமேல் காதற்பழி சுமத்திப் பாடும் புரட்சிப் பாட்டை, எத்துணை சமாதானங்களும் எண்ணற்ற காரணங்களும் காட்டப்படுமேனும், தமிழ்ச் சமுதாயம் ஏற்குமா? இஃது காதல் இன்பத்திற்கு வழிவகுக்குமா? மக்கள் ஒழுக்க நெறிக்கு உயர்வு சேர்க்குமா? என இயல்பான ஐயங்கள் தமிழ் உள்ளத்தில் தோன்றுவது இயற்கை.

பழந்தமிழ்ச் சான்றோர், பரந்துபட்ட அனுபவமும் ஆழ்ந்தகன்ற அறிவு நுட்பமும் கொண்டு தமிழ்க் காதல் இலக்கியத்தில் பெண் பாத்திரத்திற்கு வழங்கிய உரிமையை ஆண் பாத்திரத்திற்கு வழங்காது அமைந்தனர். வழங்கினால், வருங்கேடுகள் மிகப்பல என எண்ணினர். ஒரு தலைவன்

ஒருத்திக்கு மேற்பட்ட தலைவியரை வாழ்க்கையில் கொள்ளுவது, பெருமைக்கும் பாராட்டுக்கும் உரியதன்று எனக் கருதினாலும், இயற்கைக்கு மாறுபட்டதன்று; நடைமுறைக்கு ஏலாததும் அன்று. இன்றைய வாழ்க்கையிலும் நடைமுறையில் உள்ளதாகும். இன்றியமையாத் தேவை ஏற்படும்போது, அதனை வரவேற்றுப் புரட்சிச் சிந்தனையாளர் போற்றவும் பார்க்கின்றோம். ஆனால் ஒரு தலைவி ஒருவனுக்கு மேற்பட்ட பலரை வாழ்க்கையில் எண்ணிப் பார்ப்பது என்பதே இயலாத ஒன்றாகும். மேலும் இதனால் வாரிசுரிமையில் பெருஞ்சிக்கல் ஏற்பட்டுச் சமுதாயத்தில் பெருங்குழப்பம் தோன்றி விடும். ஆகவேதான், கற்பனையில் கூட -நாடக வழக்கில்கூட - இத்தகு சிந்தனைக்குத் தமிழ்ச் சான்றோர் இடந்தந்ததில்லை.

பாரதிதாசனின் முன்னோடியாகிய பாரதியுங்கூடத் தலைவியின் உள்ளத்தில் ஒரு புரட்சி எண்ணத்தைக் கண்ணன் பாட்டில், 'கண்ணன் என் காதலி' என்ற பகுதியில் படைத்துக் காட்டுகின்றார். கண்ணன் மனநிலையை அறிந்து வர வேண்டும் எனக் கூறிப் பாங்கியை அவன்பால் தூது விடுக்கும் போது, அவன் தன் மனநிலையை வெளிப்படுத்தத் தாமதித்தால்,

அன்னிய மன்னர் மக்கள் பூமியிலுண்டாம் - என்னும்
அதனையும் சொல்லிடடி தங்கமே தங்கம்

என்ற கண்ணம்மாவின் புதுமைப் பேச்சு, காதலியின் உள்ளப்போக்கில்ஒரு புரட்சியேயாகும்.

தன் காதலுக்கு ஊறு நேர்ந்து, காதலனை மணக்க இயலாது என்ற நிலை வந்தால், காதலி தன் பெற்றோரையும் துறந்து, காதல் ஒன்றையே பற்றுக் கோடாகக் கொண்டு, தன் காதலனுடன் உடன் போன பெண்களைத் தான் இலக்கியங்கள் காட்டுகின்றன. காதலன் தன்னை மறந்தால் தனக்கு வாழ்வே இல்லைஎன வாழ்ந்தவள் அவள். அந்த எண்ணப்போக்கை மாற்றிக் காதலன் காதலியிடம் பாராமுகமாக இருந்தால், தன் தகுதிக்குத் தகுந்த வேறு மணமகனைப்புதுமைப் பெண் தேர்ந்தெடுத்துக்கொள்வாள் என முதன் முதலாக காதலனை எச்சரிக்கை செய்கின்றார் பாரதி . இவ்வாறு பெண்ணுள்ளத்தில் காதற் புதுமையைத் தோற்றுவிக்கும் பாரதியின் புரட்சியில் விரும்பத்தகுந்த ஆக்கப் போக்கு உண்டு.

மஸ்தான்சாகிபு அவர்கள் பேரின்பக் காதலனாகத் தன்னை உருவகித்துக் கொண்டு,

என்னைவிட்டால் மாப்பிள்ளைமார் எத்தனையோ உன்றனுக்கே
உன்னை விட்டால் பெண்ணெனக்கும் உண்டோ மனோன்மணியே

(மனோன்மணிக் கண்ணி.73)

என நாயக நாயகி பாவத்தில் பாடும் பாட்டில் இருக்கின்ற புதுமை எண்ணத்தக்கது. இறைவனுக்கு எண்ணற்ற மாப்பிள்ளைமார்களாகிய அடியார்கள் இருக்கின்றனர். ஆனால் தனக்கோ இறைவன் என்னும் ஒரு பெண்ணைத் தவிர வேறு யாரும் பெண்ணில்லை எனப்பாடி, ஆண்மகன் பேணவேண்டிய கற்பு நெறியின் பெருமையைப் பேசுவார். இறைக்காதலில் இன்புற்ற நிலையில் மஸ்தான் பாடிய பாட்டில் காதலனின் காதல் நெஞ்சத்தின் உறுதி நிலையை - காதல் கற்பை - அற்புதமாக எடுத்துக் காட்டுகின்றார்.

கண்ணம்மாவின் புதுமைப் பேச்சும், மஸ்தானின் உறுதியான காதல் நெஞ்சமும் பாரதிதாசன் வேண்டுவனவே. பெண் பேண வேண்டிய கற்புநெறியில் மாறுபட்ட வேறு கருத்து பாரதிதாசனுக்கு இல்லை என்பதை அவருடைய குடும்ப விளக்கும் பிற பாடல்களும் தெளிவு படுத்தும். பின்னர் இப்புரட்சிப்பாடலை அவர் ஏன்பாடினார்? என்பது வியப்பூட்டுவதாகவே இருக்கிறது.

கற்பனையில், நாடக வழக்கில் கூட ஆடவர் கற்புக்கு ஊறுவிளைவிக்கும் மரபொன்றை உண்டாக்கியது புரட்சிக் கவிஞருக்கு உடன்பாடில்லை. உலகியலில் உண்டு என்பதனால் இலக்கியத்தில் 'அவன்மேல் பழி' கூறுவது சரி என்றால், உலகியலில் உண்டு என்பதனால் 'அவள்மேல் பழி' கூறுவதும் சரியே யாகும். ஒன்றை அனுமதித்தால் மற்றதையும் அனுமதித்தாக வேண்டும் என்பதே அவர்கருத்தென துணியலாம். பழந்தமிழர் வாழ்வு நெறியை, பண்பாட்டைப் பெரிதும் போற்றும் பாவேந்தர், இங்கு மட்டும் மாறிப்பாடுவதால், இதனைப் 'புரட்சிப்பாடல்' என அழைக்காது, அவன்மேற்பழி சுமத்திப்பாட அனுமதித்த தமிழ் மரபை மறுக்க இப்படியொரு புது உத்தியை இப்பாடல் மூலம் கையாண்டார் எனக் கருதலாம். இப்பாடல் பற்றி மேலும் ஆய்ந்து புதுக் கருத்துக் கூறினால் போற்றி மகிழத் தடை என்ன?.

* * *



அறிவியல் புகுந்ததே எங்கும்-அட
அறியாமையின் இருள் நடுங்கும்

- பாரதிதாசன்

ஓவியம் : ஆர். வரதராசன்

# இருளும் ஒளியும்: இருண்ட வீடு, குடும்ப விளக்கு

## ஒரு திறனாய்வு

அ. சங்கர வள்ளி நாயகம்.

**புகழேட்டில் புரட்சிக் கவிஞர் :**

பொன்னையும் பாரான் புகழுரை வேண்டான்
தன்னலம் கருதித் தயங்கிட மாட்டான்
அமிழ்தினும் இனிதென ஆன்றோர் போற்றும்
தாய்மொழிப் பண்பின் தன்மையைக் காக்கும்
வாய்மையே தன்னுடைய வாழ்வின் உயிர்ப்பென
முதுமையிற் புகுந்துள முரண்களை மாற்றிப்
புதுமையிற் பாடும் புரட்சிக் கவிஞர்

எனப் பாரதிதாசனின் பண்பை, அவர் ஆற்றிய பணியைச் சொல்லோவிய மாக்கிக் காட்டுகிறார் நாமக்கல்லார்.

"எனக்குக் குயிலின் பாடலும் மயிலின் ஆடலும் வண்டின் யாழும் அருவியின் முழவும் இனிக்கும்; பாரதிதாசன் பாட்டும் இனிக்கும்" எனப் பாரதிதாசனின் பாத்திறத்தைத் தமிழ்த் தென்றல் திரு.வி.க. சுட்டுகின்றார்.

"அவரைப் புரட்சிக் கவிஞரென்றும், புதுவைக் கலைஞரென்றும், புதுமை அறிஞரென்றும் பலவிதமாகப் பாராட்டியிருக்கிறார்கள். நந்தமிழ் நாட்டில் அவருடைய சிறந்த கவிதைகளைப் போற்றாதார் யாருமே இல்லையென்று சொல்லலாம். அவருடைய புரட்சிக் கொள்கைகளும். புதுமை எண்ணங்களும் சிறுபான்மைக் கூட்டத்தாருக்கு உடன்பாடில்லாமல் இருக்கலாம். அவருடைய பரந்த கருத்துக்களும் சிறந்த அறிவுரைகளும் பிற்போக்காளர்களுக்கு வேம்பாக இருக்கலாம். ஆனால் கவிஞர் பாரதிதாசன் கவிதைகளின் பண்பை அனுபவித்தவர்கள் அனைவரும் அதைத் தீம்பாலமுதமாகக் கொள்வர் என்பதில் ஐயமில்லை" என இதழியல் துறையின் நெறிப்படுத்துநரான டி.ஏ.வி. நாதன் என்பார் பாரதிதாசன் கவிதைப் பண்பிற்குப் புகழாரம் சூட்டிப் பூரிக்கின்றார்.

**கவிஞரிடம் பூத்த கல்விச் சிந்தனை :**

ஊருக்குக் கிழக்கே உள்ள
பெருங்கடல் ஓரம் எல்லாம்
கீரியின் உடல்வண்ணம் போல
மணல் மெத்தை, அம்மெத்தை மேல்

நேரிடும் அலையோ, கல்வி
நிலையத்தின் இளைஞர் போலப்
பூரிப்பால் ஏறும், வீழும்;
புரண்டிடும்; பாராய் தம்பி

என்ற வரிகள் 'அழகின் சிரிப்பு' என்னும் இயற்கை அழகு குடியிருக்கும் நூலில் 'கடல்' என்னும் தலைப்பில் இடம் பெற்றுள்ளன. பெண்ணிடத்தில் கொள்ளும் காமச் செறிவு-நிறைவு உணர ஒல்லாதது என்னும் கருத்தை விளக்க வந்த வான்புகழ் வள்ளுவர், " அறிதொறும் அறியாமையே மிஞ்சும்" என்ற உவமையைக் கையாண்டு அறிவின் அளப்பரிய தன்மையினைக் காமத்துப் பாலில் காட்டி, அறிவை மாந்தர் காமுறுமாறு வேண்டுகிறார். இயற்கை அழகில் ஈடுபட்ட-கடல் அலையின் கவினுறு காட்சியில் நெஞ்சைப் பறிகொடுத்த கவிஞர் பாரதிதாசனுக்கும் அலையின் செயற்பாட்டினை விளக்கப் பள்ளிக்கூடச் சிறுவர்களின் செயற்பாட்டினையே உவமையாக்கும் எண்ணம் உருவாகியுள்ளது. புலமைச் செறிவால் நெஞ்சேறி நிமிர்ந்து நிற்கும் இளைஞரைப் போன்று கடலலைகள் பூரிப்பால் மேலெழுகின்றனவாம். கடலலையைக் காட்டுமிடத்தும் கல்விச் சிந்தனை கவிஞரை அலைத்திருப்பதை அசைத்திருப்பதை உணரலாம். அறியாமை-யெனும் இருட்டறையில் அகப்பட்டு அல்லலுறும் இவ்வுலகம் ஒளிபொருந்திய அறையில் ஒண்டிக் கொள்ளும் - ஒட்டிக்கொள்ளும் நாள் எந்நாளோ என்ற கவிஞரின் ஏக்கப் பெருமூச்சு நம் செவியில்படுகிறது ; படர்கிறது:

என்னரும் தமிழ்நாட்டின் கண்
எல்லோரும் கல்வி கற்றுப்
பன்னருங் கலைஞானத்தால்
பராக்கி ரமத்தால் அன்பால்
உன்னத இமயமலைபோல்
ஓங்கிடும் கீர்த்தி யெய்தி
இன்புற்றார் என்று மற்றோர்
இயம்பிடக் கேட்டிடல் எந்நாளோ

என்று அறியாமைச் சேற்றில் புதையுண்டு, புகழின்றி வாழும் மாந்தரினம் அறிவுத் தடாகத்தில் நீந்தி, நீள்புகழ் படைக்கும் நாளே நாட்டின் துன்பத்திற்கு விடிவு நாள் - விடுதலை நாள் ஆகும் எனக் கல்விப் பெருமையினைக் கவிஞர் காட்டியமைகிறார். இக்கல்வி பால்பாகுபாடு அறியாதது. ஆண், பெண் ஆகிய இருபாலரும் கற்க வேண்டுவதே அவர்தம் தலையாய கடமையாகும் எனக் கவிஞர் கருதுகிறார்.

### பெண் கல்வி பேணிய பெருங்கவிஞர் :

பாரதிதாசன் வாழ்ந்த கால கட்டத்தில் பெண்ணினத்தார்க்குக் கல்வி மறுக்கப்பட்டிருந்தது. 'அடுப்பூதும் பெண்டிர்க்குப் படிப்பெதற்கு?' என்ற குரல் வன்மையாய் ஒலித்துக் கொண்டிருந்த காலமாகும். சூடிக்கொடுத்த நாச்சியார்கள் சூடிக் களையும் மலர்களாய் மதிக்கப்பட்டனர். கல்வி பூண வேண்டிய காரிகையர் பூணணிகளாகப் புறக்கணிக்கப்பட்டனர். பள்ளியில் பயில வேண்டிய பாவையர் வெறும் படுக்கையறைப் பதுமைகளாகக் கருதப்பட்டனர். பெண்கல்வி ஓங்குமட்டும், பேசுந்திரு நாட்டின் மண்ணடிமை தீராது என்ற கருத்தில் மிக அழுத்தம் பெற்றவராகக் கவிஞர் விளங்கினார். பெண்ணறிவு பூத்துக் குலுங்கும் குடும்பத்தை நன்னெறி காட்டும் விளக்காகக் கவிஞர் காட்டுகின்றார். பெண் பேதைமை பெருகிக் காணும் வீடு இருண்ட வீடாகவே அவர் கருத்திற் படிந்துள்ளது. இக்கருத்தோட்டங்களின் கருவுயிர்ப்பே 'குடும்ப விளக்கு', 'இருண்ட வீடு' என்னும் இரு நூல்களாகும்.

உவந்தொருவன் வாழ்க்கை சரியாய் நடத்த
உதவுபவள் பெரும்பாலும் மனைவியாவாள்

என்னும் பெர்னாட்சாவின் கருத்தை எடுத்துரைக்கும் கவிஞர், பெண்மை நலத்தைக் 'குடும்பவிளக்கில்' அறிமுகம் செய்கிறார்.

கல்வியில்லை உரிமை யில்லை பெண்களுக்கு
கடைத்தேற வழியின்றி விழிக்கின் றார்கள்

என்ற கவிஞரின் கருத்துத் தாக்கமே 'இருண்ட வீடு' என்னும் நூலில் பரவிக் கிடக்கிறது. ஒவ்வொரு இல்லத் தலைவியும்,

அரிவையர் கூட்டமெல்லாம்
அறிவிலாக் கூட்டம் என்பாய்
புரிவரோ விசயராணி புரிந்தஇச்
செயல்கள் மற்றோர்

எனக் கவிஞர் 'வீரத்தாய்' என்னும் காப்பியத்தில் வீரத்தின் விளைநிலமாகக் காட்டும் விசய ராணியாக வீறு பெற்று விளங்கவேண்டும் என்பதுவே கவிஞரின் வேணவாவாகும்.

### விருந்தும் மருந்தும் :

அன்னை தன் குழந்தைக்கு அமுது படைக்கிறாள்; அழகான ஆடையும் அணியும் அணிவித்துப் பூட்டி மகிழ்கிறாள் ; பாறு மயிர்க் குழலை வாரி முடிக்கிறாள்; பூச்சூட்டிப் பொலிகிறாள் ; நெற்றியில் பொட்டிட்டு முத்தமும் தருகிறாள் ; கல்வி ஊட்டுகிறாள் ; கதைகள் பேசிக் களிப்பூட்டுகிறாள்; இத்தகைய தாய்மை நிலையைத் தாங்கியே கவிஞர் 'குடும்ப விளக்கை'ச் சுடரேற்றுகின்றார்.

அத்தகைய தாய்தான் சில வேளைகளில் குழந்தையைக் கடிந்து பேசுகிறாள்; கட்டளையிடு-கிறாள்; கசப்பான மருந்தும் தருகிறாள்; இச் சூழலைப் பெற்ற தாய்மைப் பண்பே கவிஞரை 'இருண்ட வீடு' பற்றிப் பாடச் செய்தது.

இனி, இவ்விரு நூல்களின் செய்திகளை ஒப்பியல் சிந்தனையுடன் காணுவாம் ;

### நூல்களின் அமைப்பு :

குடும்ப விளக்கு ஐந்து பகுதிகளைக் கொண்டதாயினும் முதற்பகுதி 'ஒருநாள் நிகழ்ச்சி' என்னும் தலைப்பினைப் பெற்றுள்ளது. அப்பகுதியே நம் ஒப்பீட்டிற்கு உதவும் பகுதியாகும். இருண்ட வீட்டிலும் 'ஒரு நாள் நிகழ்ச்சியே ' விரிவாக இடம் பெற்றுள்ளது. ஆனாலும் இந்நூல் 'ஒருநாள் நிகழ்ச்சி' என்னும் தலைப்பினைப் பெறவில்லை. குடும்பவிளக்கு ஆசிரியப்பா என்னும் பாவகையால் பாடப்பட்டிருப்பினும் விருத்தங்களும் இடையிடையே விரவியுள்ளன. இருண்டவீடு முழுமையும் ஆசிரியப்பாவில் இயற்றப்பட்டுள்ளது.

### செய்திப் பகுப்பு :

காலை மலர்ந்ததிலிருந்து இரவை வழியப்புகின்ற வரையிலான நிகழ்ச்சிகள் இருவகையான வீட்டிலும் சுட்டப் பட்டுள்ளன. நிகழ்வுகளை ஒருநாளின் பெரும் பொழுதினடிப்படையில் மூவகையாகப் பகுத்துக் கொள்ளலாம்.

1. காலை - நண்பகல் வரையில் நிகழ்வன.
2. மாலைப் பொழுதில் நிகழ்வன.
3. இரவுப் பொழுதில் நிகழ்வன.

### காலை - நண்பகல் வரையில் நிகழ்வன :

## குடும்ப விளக்கு :

குடும்ப விளக்கு இருகை நீட்டி அழைக்கிறது ; கூடச் செல்வோம். அது கூட்டி வரும் நிகழ்வுகளை நினைந்திடுவோம்.

### காலைப் பொழுதும் தலைவியின் கடமை உணர்வும் :

புலர்ந்திடப் போகும் பொழுதே குடும்பவிளக்கின் தலைவியின் விழிகளும் மலர்ந்தன. இருள் பிரியுமுன்பே அவள் கண்களை விட்டுத் துயில் பிரிந்ததால் அவளின் ஒளி பொருந்திய விழிகள் குளத்து நீரில் குதிக்கும் கெண்டை மீன்களாய்க் காட்சி தருகின்றன.

### மாக்கோலமும் மங்கையின் கோலமும் :

செங்காந்தள் நிகர்விரலால் விளக்கினைத் தூண்டி, மலர்க்கையில் அதனை ஏந்தி, அன்ன நடைபயின்று, கொல்லைப்புறம் அடைந்து, குளிர் புதுப்புனலை மொண்டு, முகத்தைத் துலக்கி, உண்டநீரை முத்தாயுதிர்த்துச் சேந்து நீரைச் செங்கையில் ஏந்தித் தெருக்கதவு சார்ந்த தாழ்திறந்து, தகடு போற் குறடு கூட்டிக் கழுவி, அரிசிமாக் கோலம் அமைத்தாள். கோலமிட்ட கோதையின் கோலமும் மேன்மையாய் விளங்கியது. அவளின் செம்மைச் செய்கை கண்ட பகலவன் தன் பொன்னொளியைப் பரிசிலாக நீட்டிப் பாராட்டினான்.

### இல்லறக் கடமையாற்றும் நல்லறச் செல்வி :

கோலம் போட்டு முடித்த கோதை இல்லறக் கடமைகளை இயக்கினாள். யாழெடுத்துத் தமிழிசை அவள் பாடினாள்; மாடு கறந்தாள்; வீட்டை விளக்கமுறச் செய்தாள்; செம்புத் தவலைகளைச் செழும்பொன்னாக்கினாள்; பைம்புனல் தேக்கினாள்; பற்றவைத்த அடுப்பினில் பண்ணப்பட்ட அப்பமடுக்கிக் குடிப்பதற்கு இனிய கொத்துமல்லி நீர் இறக்கிப் பாலொடு சர்க்கரையிட்டாள்.

### மணவாளன் நலமும் மழலையர் நலமும் :

யாழிடைப் பிறந்த அவளின் தமிழிசைப் பாடல் காதின் வழியே கருத்தினில் கலந்ததால் தூங்கிய கணவனும் பிள்ளைகளும் எழுந்து வந்தனர். கணவனைக் குளிர்புனல் காட்டிக் குளிக்கச் சொல்லி, வெள்ளுடை விரித்து, அவன் மேனி துடைத்துப் பிள்ளைகளாம் கிள்ளைகளை நன்னீராட்டி, உடல் நீர்த் துளிகளைத் துடைத்து, ஆடை பூணச் செய்து, அவர் தம் நலத்தை அவள் பேணினாள்.

காலையுணவாக்கிய செய்தியினை அடுக்களைத் தந்தியாக்கிக் கணவனுக்கும் பிள்ளை-களுக்கும் அவள் அனுப்பி வைக்க, மணவாளனும் மழலையரும் பந்தியில் குந்தித் தழைத்த வாழைத் தளிரிலை தன்னில் படைத்த பண்டம் உண்டனர்.

அவ்வீட்டின் அடுக்களைத் தலைவியாக மட்டுமிராமல், அவள் ஆசிரியையாகவும் மலர்ந்து,

வீட்டறையைக் கழகமாக்கிச் சங்கத் தமிழ்ச் சுவையைச் சாற்றிட, அச்சுவையைப் பிள்ளைகள் அள்ளி விழுங்கினர். பின்பு பிள்ளைகளுக்கு உடை அணிவித்துப் புதையடிச் செருப்புகளை அவர்தம் காலிற் செருகிச் சிறு குடையைக் கையில் தந்து, அவர்களைக் கைப்பிடித்துக் கூட்டித் தெருவரை தானும் வந்து, பள்ளிக்கு அனுப்பிய அப் பாவை பரவசமுற்றாள் ; அதன்பின்னும் பிள்ளைகளின் நினைவே அவளுக்குப் பெரும் நினைவாயிற்று.

அவள் பணி இத்துடன் நின்றதா ? நிற்கவில்லை. கடைக்குச் செல்லவிருந்த தன் கணவனைக் கழுத்துவரை வளர்ந்திருந்த தலைமயிரை மழுங்கச் செய்வித்துச் சட்டையைத் தன் கணவன் மாட்டக் கையில் எடுத்தாள். பொத்தலையும் கிழிசலையும் அப்பூவை கண்டாள்; பொள்ளெனத் தைத்தாள்; கணவனைக் கடைக்குப் போக்கிக் கடமைமகள் களிப்புற்றாள். விட்டதா வீட்டுப்பணி ? விடாமல் மேலும் தொடர்ந்தது, ஒட்டடைக் கோல் கொண்டு இல்லத்தை அவள் ஒயிலாக்கினாள். தையற்பணியைத் தையலாம் அவள் மேற்கொண்டாள்; மரச்சாமான்களை நிறப்படுத்தினாள்; கொல்லூற்று வேலையினையும் இக்குடும்ப விளக்கினாள் செய்து முடித்தாள்.

## விருந்தோம்பும் விளங்கிழை :

அப்பொழுதில் வீட்டிற்கு விருந்து வந்தது. வந்தவரோ அவளின் மாமன், மாமியர் ஆவர். விருந்து கண்டபோது புன்னகையை அவள் முகம் விருந்தாக்கியது. வந்த அரவம் கேட்டு, வாயில் வரை வந்து, அவள் வாழ்த்தினாள்; நல்வரவு கூறினாள் ; நாத்தியர், பேரர் நலமெல்லாம் அவர்களிடம் உசாவி உணர்ந்தாள் ; வெந்நீரை அண்டாவில் தேக்கி வைத்து. அவர்களை நன்னீராடச் செய்து, உணவும் தந்து, துப்பட்டி விரித்த மெத்தையில் அவர்களை அயரச் செய்தாள் ; மாமனார் கொண்டு வந்த வீட்டுப் பயன்பாட்டுப் பொருள்களையெல்லாம் வரிசையாய் அடுக்கி வகைமை செய்தாள் ; கடைக்குச் சிட்டாய்ப் பறந்தாள்; எவருடம்புக்கு எது ஆகாது என்றெல்லாம் கண்டு, ஆகும் கறிகள் வாங்கி, அமுதம் ஆக்கினாள். இடையில் பிள்ளைகள் வந்தனர். அவள் பேணும் கணவனும் வந்தான். வந்தவர்கள் விலாப்புடைக்க விருந்துண்டனர். பிள்ளைகளைப் பள்ளிக்குத் துள்ளியோடச் செய்து, கணவனை வீட்டில் ஓய்வெடுக்கச் சொல்லிக் கடையில் வணிகத்தையும் கவனித்துக் கணவன் வந்தபின் கடைக்கணக்கையும் அக்காரிகை ஒப்புவித்தாள். இங்ஙனம் காலையிலேயே குடும்ப விளக்கு சுடர் விடத் தொடங்கியது. என்ன காரணம் எனச் சிந்திப்போர்க்குப் பாவலர்,

> தூக்கத் தோடு தூங்கி யிருந்த
> ஊக்கமும் சுறுசுறுப் புள்ளமும் மங்கை
> எழுந்ததும் எழுந்தன

என்னும் வரிகளை அவர் தம் சிந்தனையில் பதியச் செய்கிறார்.

# இருண்ட வீடு :

இருண்ட வீட்டை எட்டிப் பார்ப்போமோ? எட்டிப் பார்க்கவே நாணுகிறோம். நாம் மட்டுமா? ஞாலக் கதிரவனும் வீட்டின் அலங்கோலம் கண்டு நாணுகிறான்.

## விடிந்தும் தலைவியின் விடியாத் தூக்கம் :

ஊரார்க்கெல்லாம் விடிந்தது. இவ்விருண்ட வீட்டிற்கு இன்னும் விடியவில்லை. கதிரவனே தன் கதிர்க்கை பாய்ச்சி மங்கையை எழுப்பினான் . மங்கை விழி திறந்தது. மீண்டும் துயின்றது. நாயின் அலறல், நற்பசுவின் கதறல், பானையின் 'படபடா' எனும் ஓசை ஆகிய அத்தனை முழக்கையும் கேட்ட ஏந்திழை புரண்டு, பொத்தல் மரப்புழுப் போல் நெளிந்தெழுந்தாள். அவள்

மேனிக் கோலமோ மேன்மையதாயில்லை. பிழிந்து போட்ட கருப்பஞ்சக்கையின் சுற்றையாய் அவள் காணப்பட்டாள்.

### பாவை செயலும் பரிதியின் நடுக்கமும் :

அரைகுறையாய் விழித்து நடந்து சென்ற அந்நங்கை, நடக்கும் பாதை 'இது தான்' என்னும் உணர்வின்றி மெதுவாய் அறையினின்றுவெளிவந்து பலகறையின் நடுவில் பதிந்த கோடுபோல் காணப்பட்ட பாதி திறந்த விழியுடன் தூக்கத்தையும் முழுமையாய் நீக்காது, ஓய்ந்து தள்ளாடிய நிலையில் அடிகளை ஊன்றி, நற்பசுவுக் கெதிர் கிடந்த சாணியைக் கிளறியெடுத்துப் பாற்செம்பில் கரைத்துத் தாழைத் திறந்து குறட்டில் தெளித்தாள்; கோலம் இடக் குனிந்தாள்; தாமரைக் கோலம்போடத்தான் நினைத்தாள் ; ஆனால் சிறிது தவறியதால் தேய்ந்த துடைப்பம் அவிழ்ந்து சிதறுவதைப் போல் கோலமும் சிந்திச் சிதறியது. கோலமிடக் குனிந்தபொழுது அவள் குழலோ முள்ளம்பன்றி முழுதுடல் சிலிர்த்தது போல் மேலெழுந்து விரிந்து கிடந்தது. வாலிழந்த மந்தி முகத்தாளைக்கண்ட காலைப் பரிதியின் கண்களும் நடுங்கின.

### சண்டிமணிப் பொறிகள் :

கோலமிட்டு முடிப்பதற்குள் அக்கோதைக்கு இட்டஅடி நொந்தது; எடுத்தஅடி கொப்பளித்தது. கணவரின் எதிர்வந்து கைஓய்ந்து, அவள் குந்தினாள் "என்ன மணியடி?" என்று அவளின் பொன்னிகர் கணவன் கேட்க, அவளோ,

> சண்டிமணிப் பொறிக்குச் சாவி கொடுக்க
> அண்டை வீட்டானை அன்றே அழைத்தேன்
> வரவே இல்லை மாமா

என்றே பதிலிறுத்தாள். இல்லத்தின் சாவி கொடுக்காத சண்டிமணிப் பொறிகள் தாங்கள்தாம் என்று அவர்கள் இருவருமே உணராமல் இருந்தனர். அந்த நேரத்தில் கையிற்குடையும் காலிற்செருப்புமாய் அண்டை வீட்டுக் கந்தன் கடைக்குச் செல்வதைக் கணவன் சுட்ட, அவளோ, "விடியா மூஞ்சி விடியுமுன்பே போனால், நீயும் போக வேண்டுமோ?" என்றே கூறி இளித்தாள். மணிப்பொறியும் எட்டரை அடிக்கையில் மங்கையும் இப்படிச் சொன்னாள்.

### முள்ளில்லா மணிப்பொறிகள் :

இருண்டவீட்டின் தலைவி இட்டபணிகளைக் கட்டுக் குலையுமாறு செய்திடப் பணியாள்கள் பலரிருந்தனர். வீடுபெருக்க வேம்பு வந்தாள். சமைபல் செய்ய சங்கிலி வந்தாள். கடைக்-கென்றமைந்த கணக்கனும் வந்தான். நடைவீட்டினிலே கடைக்கணக்கன் நெடுந்தூக்கத்தில் படிந்து கிடந்தான். வேலை செய்வோர்கள் மூலையில் குந்தி மாலை நேரத்தின் வரவு பார்த்திருந்தனர். இருண்ட விட்டுத் தலைவரும் தலைவியும் சண்டி மணிப்பொறிகள் எனின், வந்த பணியாள்களோ முள்ளில்லாத மணிப் பொறிகளாவர்.

### ஒட்டடை மழையும், ஊமைக்குப்பையும் :

தன்னையே காக்கத் தெரியாத இருண்ட வீட்டுத் தலைவி வீட்டின் தூய்மையை மட்டும் எங்ஙனம் காத்திடுவாள்? பழங்கால அறைக்குள் பதுங்கியிருந்த கிழஎலிகள் தம் கிளைஞரோடு கூடத்தில், சிறுகுண்டான் மேலும், மாடிப்படியில், மட்குடந்தன்னிலும் ஆடல்பாடல் அரங்கு நிகழ்த்தின. தயிரின் மொந்தையை நறுக்கென்று பூனை சாய்த்து நக்கிற்று. வடித்த சோற்றை வட்டிலில் கண்ட தடித்தடிக் காக்கைகள் சலிக்கத் தின்றன. வீட்டினுள் காற்று வீசுந்தோறும்

மோட்டு வளையில் மொய்த்த ஓட்டடை தரையில் மழையாகப் பொழிந்தது. ஊமைக்குப்பைகள் 'உம்' மென்று மேலெழுந்தன.

### விருந்தைப் பேணா வீட்டுத் தலைவி :

இந்நிலையில் தலைவியின் அண்ணன் விருந்தாக வருகை தந்தான். வாயிற்படி மேல் காலைவைத்த அளவிலேயே அவன் கால் இடறிற்று. வந்த நேரம் சரியில்லாததால் தலைவர் தம்மைத்துனரை உள்ளே வராதவாறு வாயிலிலேயே தடுத்து நிறுத்தினார். தூயகுறி தோன்றும் வரையில் வீட்டினுள் நுழையாது வீட்டெதிரில் மாட்டுக் கொட்டிலில் மொய்க்கும் கொசுக்களால் அவர் மூடுண்டிருந்தார். கொசுவின் மூடலா அது? அறியாமையின் மூடலே அதுவாகும். வீட்டினுள் நுழைந்த விருந்தாளி தன் தங்கையிடம்.

> உடம்புக் கென்ன? ஒன் றுமில்லையே?
> குழந்தைக் கென்ன? குறைபா டில்லையே?
> பெரியவன் நலத்தில் பிழைபா டில்லையே?
> குடித்தனம் எவ்வா று? தடித்தனம் இல்லையே?

என்று குடும்ப நலம் உசாவினான். "இருக்கின்றேன் நான்" எனத் தான் இன்னும் சாகாது இருப்பதை வியப்பாக்கி அவன் தங்கை விடையளித்தாள். அவள் அண்ணனும் பொருள்கள் வாங்கி வந்திருந்தான். என்னென்ன அவை எனப் பார்ப்போம்.

### வாங்கி வந்த பொருளும் வகையிலாச் செயலும் :

நோய் வாய்ப்பட்டுத் தூங்கிய பிள்ளையைத் துயருற எழுப்பி, வாங்கி வந்த மாம்பழம் அனைத்தையும் குழந்தை அண்டையில் அண்ணன் பரப்பினான். பூந்தி கட்டிய பொட்டலம் அவிழ்த்துக் கொஞ்சம் அள்ளிச் சாவுடன் போராடிக் கொண்டிருந்த குழந்தை முகத்தெதிர் வஞ்சகம் இன்றி அவன் வைத்தான். ஓட்டை நீக்கி விளாம்பழத்தையும் குழந்தையின் அண்டையில் விருந்தாக வந்தவன் வைத்தான். குழந்தை கிடந்த கூடமெல்லாம் உளுந்து கிடந்த களம்போலவும் வேம்பின் பழம், பூ விரிந்த தரை போலவும் காட்சியளித்தது. ஈயின் காடும் எறும்பின் காடுமாக அக்கூடம் ஆயிற்று. சென்னையில் வாங்கி வந்த விளையாட்டுத் துப்பாக்கியை மருமகனுக்கு மாமன் பரிசாக்கினான்.

இத்தனையும் சுமந்து வீடு தேடி வந்த அண்ணனை அவன் தங்கை விருந்தோம்பிய முறை விலாச்சிரிப்பினை எழுப்புகிறது. விடியலில் நாலுமணியளவில் வீட்டை விட்டுப் புறப்பட்டு வந்து சேர்ந்த தன் அண்ணனின் அயர்வு போக்க வெந்நீர் அவள் வைத்தாளில்லை. வரும் வழியில் கிளியனூரில் உண்ண முடியாமல் கிள்ளும் வயிற்றுப் பசியுடன் தள்ளாடித் தான் வந்திருப்பதை உணர்த்திய அண்ணனை உண்ணுமாறும் தங்கை கூறிடவில்லை. வீடிருந்தும் வேண்டியது இருந்தும் உண்ணச் சொல்லும் எண்ணம் வீட்டாருக்கு இல்லையாதலால் அருகில் இருந்த உணவு விடுதியில் அவன் உண்டு வந்தான்.

### பிள்ளை நலமும் பேணும் கணவன் நலமும் :

மங்கையோ விடிந்தும் துயின்றாள். அவள் கணவனோ சொத்தைப் பல்லைச் சுரண்டிய-படியே சாய்வு நாற்காலியில் சாய்ந்திருந்தான். வாங்கிய வடையையும் பிட்டையும் கூடத்து நடுவில் ஏடுவிரித்தே சமையல் செய்யும் சங்கிலி படைத்தாள். பல்லைச் சுரண்டும் தலைவர் அதனைப் பார்த்துக் காலைக் கடனைக் கழிக்கக் கருதி மெல்ல எழுந்து நடந்தார். கூடத்து

நடுவில் ஏடுவிரித்து வைத்த பிட்டையும் வடையையும் மொய்த்த ஈயோடு முதல்வர் தின்றார். மறுபடி ஒருபிடி வாயில் வைக்குமுன் திடுக்கென அவர் உமிழ்ந்தார். அதை அவர் அருந்துதல் நீக்கி, வடையையும் வேண்டாம் என அவர் கையினால் சாடை காட்டினார். 'வினையே ஆடவர்க்கு உயிரே' என்னும் பொன்மொழியைப் போற்றத் தவறிய தலைவர் மீண்டும் என்பு முறிந்த வன்புலி ஒன்று தன் உடம்பைக் கல்மேல் கிடத்திய காட்சியைப் போன்று ஓய்வாய் ஒரு பக்கத்துச் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கிடந்தார். வஞ்சகன் சிற்றம்பலத்திடம் தரப்பட்ட பணத்தைத் தக்க நேரத்தில் பெறாவிட்டால் ஐதராப்பக்கம் அவன் ஓடிவிடுவான் எனக் கணக்கன் கடமையினை நினைவூட்டியபின், வண்டி ஒன்றை வாடகைக்கு அமர்த்தி அரச காவலருடன் இலந்தையூர்ப் பக்கம் இல்லத் தலைவர் சென்றார். இரைவேட்டெழ வேண்டிய புலியன்ன தலைவர் குறைபெருக்கி வாழ்ந்தார்.

பிள்ளைகள் நலமோ பேசவொண்ணாதது. தாயோ துயில்வதால் நோயுடன் குழந்தை நூறு தடவை 'அம்மா' என்றும் 'அப்பா என்றும் கம்மிய தொண்டையால் கத்திக் கிடந்தது. இழந்த உயிரில் இம்மியளவு பிள்ளையின் உடலுடன் ஒட்டியிருந்ததால் வதங்கிய வள்ளிக்கொடியைப் போல் தாய்மேல் சாய்ந்து கிடந்த பிள்ளையின் வாயில் பிட்டு திணிக்கப்பட்டது. அங்ஙனம் திணித்த தாயை நோக்கி, 'தாயே! எனக்கிது சாகும் நேரம்' என்று வாயால் சொல்லும் வல்லமை அந்நோய்வாய்ப்பட்ட பிள்ளைக்கில்லை.

மூத்த பையனோ முழு மூடனாவான். பிட்டையும் வடையையும் உண்ணக் கருதிக் கையால் சாம்பலைத் தொட்டுப் பல்லையும் தொட்டு , உரலின் அருகில் இருந்த பாற்சொம்பைத் தூக்கி, முகத்தைச் சுருக்காய் அவன் கழுவினான் . பிட்டையும் வடையையும் ஆவலால் நாவில் அவன் இடுகையில் அவனுக்கு நடுவயிறு வலித்தது. கொல்லை நோக்கிச் செல்ல அவன் துடித்தான்; மெல்லும் வடையை விழுங்கவும் துடித்தான். இப்போராட்டத்தில் இயற்கையின் அழைப்பு வென்றது. எனவே வில்லம்பின் விரைவைத் தாங்கி அவன் நடக்க, நடுவிற்கிடந்த நாயை மிதித்துப் " படபட" வென்று பானையைத் தள்ளிக் கன்றின் கயிற்றால் கால் தடுக்குற்று, நின்ற பசுவின் நெற்றியில் மோதி, இரண்டு பற்களை இழந்து, கொல்லைக்குப் புரண்டெழுந்தோடிப் போனான்.

பிட்டையும் வடையையும் பெட்டியில் குந்தி அவன் கிட்ட இழுத்தான். அவன் வாயின் எயிறு கவலைமாட்டின் கழுத்துப் போல் வீங்கி இருந்ததால் வெடுக்கென வலித்தது. வாயில் நுழைய வடைக்கு வழியில்லை; பிட்டைப் பிசைந்து பார்த்தான். ஒரு துளி கூட உண்ணமாட்டாமல் 'கொரகொர, கொழகொழ, கொணகொண ' என்றான்.

எயிறு வீங்கி இடத்தை மறித்தது
தின்பதற் கென்ன செய்வேன்

என்பது ஆசிரியர் காட்டும் பாடலடிகள்.

குழந்தை நோயால் நோகக் காரணம் இருளன் இல்லத்தில் புகுந்ததால்தான் என்னும் எண்ணம் தலைவியின் நெஞ்சில்பட்டது. 'வாலன்' என்னும் மந்திரக் காரனை அழைக்கச் சங்கிலி புறப்பட, "ஏழரை ஒன்பது இராகுகாலம்" எனத் தலைவன் கூறி அவளைப் போகாதவாறு தடுத்தான். எனவே வீட்டின் தலைவியும் வேலைக்காரியும் நாலைந்து கடவுளின் நற்பெயர் கூறிக் குழந்தைக்குக் காப்பும் கட்டி, வேப்பிலை ஒடிக்கும் வேலையினைத் தொடங்கினர். இவற்றிற்கெல்லாம் காரணம் என்ன? அறிவெனும் வெளிச்சம் அவ்வில்லத்தில் இல்லை; மடமை மட்டும் மகிழ்ந்து கிடந்தது.

*மாலை நிகழ்வுகள்;*

## குடும்ப விளக்கு :

மாலை வந்தது மாலையிலும் குடும்பப்பணி மாலையாய்த்திரண்டது. மக்கள் வரவைத் தலைவி எதிர்பார்த்திட்டாள். மக்கள் வந்தனர்; மகிழ்ச்சி பெற்றாள்; சிற்றுணவைச் சீராக வழங்கினாள். பெற்ற தன் மக்கள் சூழத் திரைக்கடற்கரையை நாடிப் பெருவீதி ஓரமாகப் பொற்கொடி படர்ந்தாள்; கடற்கரைக் காட்சியை மக்களுக்குக் காட்டினாள்; பின்னர் மக்களுடன் வீடு நண்ணினாள். அதன்பின் அடுக்களைக்குள் நுழைந்த அவள் அமுதாக்கினாள்; அத்தானையும் வழிமேல் விழிவைத்துஎதிர்பார்த்தாள்.

## இருண்ட வீடு :

இருண்ட வீட்டுத் தலைவியின் தலைவரும் மாலை வந்தார். துன்பம் மாலைமாலையாகத் தொடர்ந்தது. தந்த கடனைப் பெறச் சென்ற இடத்தில் கடன்பட்டவன் வேற்றூர் போய்விட்டதை அறிந்த தலைவர் துன்பம் சூழ்ந்த நெஞ்சினராய் இல்லம் வந்தார். கடன்பட்ட சிற்றம்பலம் வேற்றூர் செல்ல இருப்பதாகவும் விரைவில் வந்து பணத்தைப் பெற்றுத் திரும்புமாறு மஞ்சள் உறையில் தலைவருக்கு வேண்டியவர் அஞ்சல் அனுப்பியிருக்க, மஞ்சள் உறையைக் கண்ட மங்கை மணவஞ்சல் எனக் கருதி, அதைக் காட்டாமல் இருந்ததாகத் தன் மடமையைக் காட்டத் தலைவன் சினம் கொள்ளப் படிப்படியாய்ச் சொற்களை வீசி எறிந்தான்:

எங்கிருந் தாயடி என்குடிக் கிப்படி
மங்கிப் போக வைத்தாய் காலடி
பொங்க லாண்டி யாகப் போம்படி
புரிவ தெல்லாம் மிகவும் அழும்படி

என்று இப்படி முடித்தார் முதலடி. தலைவி தானும் தாளத்தின்படித் தொடங்கினாள்,

ஊருக் கழித்தாய் உருப்பட வாநீ
நாட்டுக் கழித்தாய் நலம்பட வாநீ
இனியும் ஊரில் எடுபட வாநீ

என்று கூறி எழுந்தாள் அம்மை. இரண்டாம் அடியை இப்படி முடிக்குமுன், வந்த அண்ணன் வந்தவழியே சந்தடியின்றிச் சடுதியிற் தன்னூர் நோக்கிச் சென்றான். இல்லம் போர்க்கள-மாயிற்று. களப்போர் முதிர்ந்தது. முடிவில் தலைவர் தாம் இருக்கப்போகும் இடத்தைக்கூறி, யாரழைத்தாலும் வரப்போவதில்லை என வாய்வீரம் பேசி, அழைப்பார் யாரும் இல்லையாதலால் திரும்பிப் பார்த்துத் தெருவொடு சென்றார் .

## இரவு நிகழ்ச்சிகள் :

## குடும்ப விளக்கு :

இரவில் குடும்ப விளக்கின் தலைவர், பிள்ளைகள் அடுக்களையில் கூடாரம் அடித்தனர். அடுக்களை போர்க்களமாயிற்று. உணவைத் தூக்கியெறிந்து, பசிப்பகைவனைப் பறக்க அவர்கள் செய்தனர். படுக்கை விரித்து, உடை திருத்திக் குழந்தைகளைத் துயிலச் செய்யக் குழந்தைகளின் அல்லிப்பூ விழிகளும் மூடின. ஓண்பசு, நற்கன்றுக்கு வைக்கோல் ஈந்தே உட்கதவு

வெளிக்கதவுகளில் தலைவி தாளினைச் சேர்த்தாள். கட்டிலண்டை வந்த மங்கை காத்திருந்த தன் மணவாளனிடம், 'எப்போது தமிழனுக்குக் கையாலான தமதுழைப்பை, ஒரு காசைச் செலவு செய்தோம்?' என்று வினவ, அவன்,

வரும்படிவீ தப்படிநான் தரும்ப டிக்கு
வாக்களித்த படிகணக்கர் திங்கள் தோறும்
கரம்படிவீ தித்தமிழன் கழகத் தார்கள்
கடைப்படியை மிதித்தவுடன் எண்ணி வைப்பார்
பெரும்படியாய்ச் செய்ததுண்டு; படிக்க ணக்கைப்
பேசிவிட்டாய் கண்டபடி

என்று முதலடி பாடத் தலைவியும் தாளத்தின்படிப் பாடத் தொடங்கினாள். எப்படிக்கும் முதற்படியாய்த் தமிழ்படிக்கும் உணர்வைக் குடும்பவிளக்குத் தலைவி வாயிலாகக் கவிஞர் தமிழர்க்கு ஊட்டுகின்றார். இங்ஙனம் இல்லநலம் பாடி இரவு சென்றது.

அன்றியும் உன்பெண் டாட்டி
அறிவுக்கோர் திருவி ளக்காம்

எனக் குடும்பவிளக்கின் மாமன் தன் மருமகளைப் பாராட்டுவதைப் போன்று நாமும் பாராட்டுவோம். பாரெல்லாம் இத்தைய குடும்ப விளக்குகள் சுடரொளி வீசட்டும். சுடர்க் கொடிகளால் இல்லங்கள் நலம் பெறட்டும்.

### இருண்ட வீடு :

பகலிலேயே இருண்டு கிடக்கும் இவ்வீட்டை இரவுப்பொழுது என்ன பாடுபடுத்தும் என்பதையும் எண்ணிப் பார்ப்போம். தலைவரோ தவற்றிற்குரிய தலைவியைத் தண்டிக்க முடியாமல் வீட்டை விட்டு வெளியேறித் தம்மையே தண்டித்துக் கொண்டார். மண்ணெண்ணெய்ப் புட்டியை இடறியதால் வடிந்த எண்ணெயைத் தாயும் பெரிய பையனும் கையால் துடைத்து, நீர்விட்டுக் கையைத் துடைக்க வேண்டும் என்ற நினைவே இன்றி, எண்ணெய் நாறும் கையால் உணவினை எடுத்துண்டு முடித்தனர்.

பெரிய பையன் பெட்டியண்டையில் மெழுகுபோல் அழுக்குப் படிந்த தலையணை மீது தலையை வைத்து மூட்டை வெடுக்கென்று கடிப்பதையும் உணராது, 'கொரகொர' என்று குறட்டை ஏறத் தூங்கலானான். நவாப்புக் குதிரை நாடு முழுவதும் சவாரி வந்து தரையில் புரளல் போல் தலைவி புரண்டு தூங்கலானாள் . இருண்ட வீட்டில் இருளும் நோய்வாய்ப்பட்ட குழந்தையுமின்றி மற்ற அனைவரும் துயின்றனர்.

### கணவன் வருகையும் கதவிடிப்பும் :

வீரம் பேசி, வீட்டை விட்டுச் சென்ற தலைவர் இரவு பத்துமணி அளவில் தம்வீடு திரும்பினார்; கதவைத் தொட்டார்; தட்டினார்; தட்டிக்கொண்டேயிருந்தார். ஓசை கேட்டு அண்டை வீட்டாரெல்லாம் ஓடி வந்தனர். மங்கையோ துயில் எழுந்தாளில்லை. கதவிடிப்புப் பணி பன்னிரண்டு மணிவரை நீடித்தது. கதவிடிப்பெல்லாம் காதிலே விழவில்லையெனினும், திருட்டெலி சிறுவிரலைத் தின்றபின் பெருவிரல் தன்னைப் பிடுங்கும்போது தலைவி விழித்தாள். புழு ஒன்று சருகுமேல் புரள்வது போன்ற மெல்லோசையாகப் பெருங்கதவிடிப்பு அவள் காதில் விழுந்தது. அவள் எழுந்தாள்; கதவைத் திறந்தாள்; மீண்டும் நிறை முக்காடுடன் நீட்டிப் படுத்தாள். அடுக்களையுள் சென்ற தலைவர் உணவொன்றும் இல்லாததால் வசை

பாடினார். யாரும் எழவில்லை; உணவும் வந்த பாடில்லை. "சாப்பிடமாட்டேன் சத்தியம்" என்று உறுதி சாற்றினார்.

### திருடன் வருகையும் திருந்தா உள்ளங்களும் :

இந்நிலையில் திருடன் ஒருவன் வீட்டினுள் நுழைந்தான். சாவியினை எடுத்து அலமாரியை ஓசையுடன் அவன் திறந்தான். அவ்வோசையை வீட்டு நாய் கேட்டது. வீட்டிலிருந்தோர் கேட்கவில்லை. நிறையப் பணத் தாள், நிறையப் பணங்கள் போட்டுக் கட்டிய பொத்தற் பைகளைத் திருடன் தூக்கப்' பொத்தல் வழியே பொத்தென்று சிற்சில வெள்ளிக் காசுகள் வீழ்ந்ததால் எழுந்த ஓசையும் எவரையும் எழுப்பவில்லை. துணியொன்று தேடி, அதனுள் பணப்பையைக் கட்டி அதனை இடது கையிற் பிடித்து, வலதுகையில் கத்தியை வைத்துத் திருடன் புறப்பட்டான். அப்பொழுது கருந்தேள் ஒன்று அவன் காலைக் கவ்விற்று; காலை உதறினான். தகரப்பெட்டியில் அவன் கால் பட்டதால், அது எழுப்பிய ஓசையில் விழித்த தலைவன் விளக்கை ஏற்றிப் பார்க்க, வந்திருந்தவன் திருடன் என அறிந்து, பெட்டி மீதிருந்த துப்பாக்கியை எடுத்து நீட்டத் திருடன் அஞ்சிப் பணத்தைக் கொடுக்க முன்வரப் பெரிய பையனோ அத்துப்பாக்கி பொய்த் துப்பாக்கி எனக் கூறிப் பேதைமை காட்ட, அச்சம் அகன்ற திருடன் தெருவிற்கு வழி கேட்டுப் பணத்துடன் வெளியேறினான்.

### அறியாமையும் ஆவியிழப்பும்

அறிவு வெளியேறிய தலைவர் நெஞ்சில் ஆத்திரம் உள்ளேறியது. அவ்வாத்திரம் கொலைவெறியாக வளர்ந்தது. பையனுக்கு வைத்த குறி தவறியதால் அக்குறி தலைவியைச் சாவில் சாய்த்தது. அடுத்து வைத்த குறி தப்பாமல் பெரிய பையனின் உயிரைப் போக்கியது. நோய்வாய்ப்பட்ட குழந்தை இயல்பாகவே மாண்டு கிடந்தது.

குடும்ப விளக்கில் பிள்ளை வளர்ப்புக்குக் கிடைத்த பரிசு அறிவுக்குக் கிடைத்த பரிசாகும். இருண்ட வீட்டிலோ ஈரொருவர் சாவு அறியாமைக்குக் கிடைத்த பரிசாகும். குடும்ப விளக்கு கொலுவிருக்கும் இல்லத்தில் இரவிலும் ஒளி வீசுகிறது. இருண்ட வீடோ பகலிலும் இருண்டு கிடக்கின்றது.

### இருளும் ஒளியும் :

எல்லா நலமும் ஈந்திடும் கல்வி இல்லாததால் வீடுகள் இருண்டு கிடக்கின்றன. படிப்பிலார் நிறைந்த குடித்தனம் நரம்பின் துடிப்பிலாச் சுடுகாடாகும். இருண்ட வீடுகள் இல்லாமல் போக இருண்ட வீடுகளில் ஒளிவிளக்குகள் கொலுவிருக்க எவரும் கற்றிடுக. எக்குறை நேரினும் நிற்காது கற்றிடுக. பெண்கள் கற்க. ஆடவர் கற்க. இல்லார்க்கெல்லாம் கல்வி வந்தது எனில் உலகம் கடைத்தேறும். குடும்பவிளக்கைப் பாடிக் கல்வியின் பெருமையினை உடன்பாட்டுப் பொருளிலும் இருண்ட வீட்டை இயற்றி அதன் பெருமையை எதிர்மறைப் பொருளிலும் கவிஞர் விளக்கியுள்ளார். இருண்ட வீட்டின் அறியாமை இல்லாது போகட்டும். அறிவொளிக் குடும்பங்கள் அகிலத்தில் ஆயிரமாயிரமாய் மலரட்டும் என அவாவிய - அவாவதனை நூல் வடிவங்களில் காலத்தின் பரிசாகத் தந்து, கல்வித்துறையில் கருத்துப் புரட்சியை நிகழ்த்திய புரட்சிக் கவிஞருக்கு அறிஞர் தம் கருத்துமலரைப் படைத்துச் சூட்டும் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் தமிழ்ப்பணி கற்றோர், மற்றோர் நெஞ்சில் - நினைவில் என்றும் நின்று நிலைபெற , நீக்கமற நிறைந்திருக்கும் தமிழன்னை அருள்வாளாக.

* * *

# புதுவை மாநகர் சுப்புரத்தினமே!

பாளை. எழிலேந்தி

புதுவை மாநகர்
சுப்பு ரத்தினமே
பாரதி தாசன்
புவியோர் போற்றிடும்
புகழைப் பெற்றவனே!

புதுமைப் பாடலால்
புரட்சி விளைந்திடப்
பொங்கும் உணர்வினில்
பொலிவு பிறந்திடப்

புதுமை என்னவே
போர்க்கொடி தூக்கினன்
பொன்னிகர் தமிழர்
உரிமை காக்கவே!

(புதுவை மாநகர்)

தெள்ளிய அறிவும்
செந்தமிழ் நல்லுணர்வும்
தினை மாவும் தேனும்
சேர்ந்துணல் போலச்
செறியக் கொண்டவனே!

அள்ளும் நெஞ்சினில்
அழகின் சிரிப்பென
அரிய படைப்பினில்
குடும்ப விளக்கெனக்
கொள்ளி வைத்திடும்
கொடியர் நெஞ்சினில்
கூற வேண்டுமோ
தமிழியக்கமே!

(புதுவை மாநகர்)

செத்தொழிந் தாலும்
சிறப்பி தாமெனவே
பேச்சில் மூச்சில்
செந்தமிழ்ப் பயிரைச்
செழிக்க விளைத்தவனே!

இத்த ரையினில்
தமிழர் மேன்மையை
இகழின் தாய்தடுத்
தாலும் விடேனெனும்

பத்தரை மாற்றுப்
பசும்பொன் பாட்டினன்
பாவேந் தன்எனப்
பாவலர் ஏத்தவே!

(புதுவை மாநகர்)

* * *

# பாவேந்தரின் படைப்புக்களில் புறப்பொருள் திறன்

முனைவர் கோ. சிவகுரு நாதன்

அகமும் புறமும் பழந்தமிழ்ப் பாக்களின் பாடுபொருள். அகம் மாந்தர்தம் காதலுணர்வு; புறம், வேந்தர்தம் போர் ஒழுக்கத்தை முதன்மையாகக் கொண்டது. தனி வாழ்விலும் பொது வாழ்விலும் முறையே இடம்பெறும் காதலும் போரும் உலக வழக்காதல் தெளிவுறும். ஆதலின் காலம் மாறினும் இலக்கிய வகைகள் வேறுபடினும் பாக்களில் இலக்கியங்களில் அகமும் புறமும் இடம்பெறலாயின. இவ்விருபொருளுக்கும் இலக்கணங்களும் எழுந்தன.

## புறப்பொருள் அணுகு முறை :

புறம், வேந்தர்தம் போரொழுக்கம் ஒன்றை மட்டுமே குறிப்பதாகாது. புறத்திணைகளுள் ஒன்று வாகை. வீரம் மட்டுமல்லாது, கல்வி, கொடை முதலானவற்றுள் மேம்படுதலையும் வாகைத்திணை தழுவுகிறது. புறத்திணைகளுள் ஒன்று பாடாணாகும். இதுவும் வீரம் ஒன்றுடன் அமையவில்லை. தொல்காப்பியர் 'பாடாண்' எனக்குறித்தனரேயன்றி அதன் இலக்கணம் கூறவில்லை. புறப்பொருள் வெண்பாமாலை ஆற்றல் என ஒன்றுடன் அமையாது கொடை, அளி, ஒளி ஆகியனவற்றையும் விரிக்கும். மேலும் கல்வி, இன்பவொழுக்கம் ஆகியவற்றையும் தழுவுகிறது. உரையாசிரியர், ஒரு திறன் மட்டும் கூறித் திணைப் பொருளைக் குறுக்காது 'ஒழுகலாறு' என அனைத்தையும் தழுவுமாறு எழுதுவர். கோனாட்சிக் காலத்தில் பெரும்பான்மையும் வேந்தன், புறப்பொருள் தலைவனாவன். வேந்தன் திறமனைத்தும் புறப்பொருளாகும். குடியாட்சிக் காலத்தில் பொதுவாழ்க்கை முயற்சி அனைத்தும் புறப்பொருளாகும். அவ்வாறே, திறன் ஒன்றில் சிறப்புடைய மாந்தனும் புறப்பொருள் தலைவராவர். மேலும் வேந்தர்க்கும் மாந்தர்க்கும் வாழ்க்கைக்குரிய கருத்துக்களைப் புலவர் கூறுவதுமுண்டு. அவை முதுமொழிக் காஞ்சி என்றும் பொருண்மொழிக் காஞ்சி என்றும் வழங்கப் பெறும்.

ஆதலின் புறப்பொருள் வேந்தர் போர், வேந்தர்/மாந்தர் தம் முயற்சி. மாந்தரிடம் அமையும் பல்திறன் மேம்பாட்டுச் சிறப்பு, வாழ்க்கைக்குரிய கருத்துரை ஆகியவற்றைக் குறிப்பதாகும். இக்கருத்தில் பாவேந்தர் படைப்புகளில் புறப் பொருள் அணுகப் பெறுகிறது.

## புறத்துறைச் சிந்தனை :

புறப்பொருள் மரபினைத் தழுவிப் பாவேந்தர் தனிப்பாக்கள் யாத்துள்ளார். தேனருவி என்ற தொகுப்பில் துறைப்பாடல்கள் என்ற தலைப்பில் வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி ஆகிய திணைகளில் பாக்கள் உள. காஞ்சித்திணை, 'பகைவர் படையை எதிர்த்தல்' என்ற கருத்தில் அமைவதால் புறப்பொருள் வெண்பாமாலைக் கருத்தைத் தழுவியதாக அமைகிறது. பாவேந்தர் பாக்களில் வெட்சி சூடுதல், வஞ்சி சூடுதல் என அவ்வவ்வொழுக்கங்களுக்குரிய

பூச்சூடும் மரபு காணப்பெறுகிறது. பாவேந்தர் பாக்கள் இலக்கணத் துறைக் கருத்துக்களைத் தழுவியனவாக அமைகின்றன. வெட்சியில், செலவு, ஒற்று, ஆகொள் முதலியன பற்றிய குறிப்புக்கள் உள. கரந்தை போர் மலைதல், போர்க்களத்தொழிதல் ஆளெறிபிள்ளை முதலான துறைகளில் அமைகிறது. வஞ்சியில் படையெழுச்சி காணப்பெறுகிறது. காஞ்சித் திணைப் பாக்கள் இரண்டிலும் வஞ்சினக் காஞ்சித் துறை அமைகிறது. வீரன் ஒருவன், பகைவீரனின் தலையை வெட்டி அரசன் முன் கொணர்ந்து, பரிசு பெறுவதாக இருபாடல்களிலும் குறிப்புண்டு. இது 'தலைமாராயம்' என்ற துறையாகும். போர்க்களத்து வீரன், தன் புண்ணைக் கிழித்து இறப்பதுவும் கணவன் உயிர் பறித்த வேலால், மனைவி உயிர்விடுவதுமான பாடற்கருத்துக்கள் முறையே மறக்காஞ்சி, ஆஞ்சிக்காஞ்சி என்ற துறைக்கருத்தின. பிற திணைப் பாக்களிலும் காஞ்சித் திணைப்பாக்கள், பெரிதும் துறை தழுவிய கருத்துக்களாக உள. நொச்சித் திணைப்பாடலில் செருவிடை வீழ்தல், குதிரைமறம், எயில்தனை அழித்தல் ஆகிய துறைக் குறிப்புக்கள் உள. இவ்வாறாக இப்பாக்கள் புறப்பொருள் துறைகளின் சிந்தனையாக அமைகின்றன.

கரந்தைத் திணைப்பாடல், வீரன் ஒருவன் மற்றொருவனை முன்னிலைப் படுத்திக் கூறும் நடையினது. வஞ்சித் திணைப்பாடல் வீரர்களின் தன்மைக் கூற்று. பிற பாடல்கள் புலவர்தம் கூற்றுக்களே. வீரர்கள் சென்று போரிட்டு ஆ கவர்ந்து வெற்றி பெறும் படிநிலைகள் அனைத்தும் ஒரே பாடலில் வெட்சித் திணையில் அமைந்துள்ளது. இவ்வாறே ஒரே பாடலில், துறைக் கருத்துக்கள் பலவும் விரவுமாறு திணைப்பாக்கள் சில அமைந்துள்ளன. வெட்சி, வஞ்சி ஆகிய இரு திணைப்பாக்களும் வெற்றிக்குறிப்பின. பிறதிணைப் பாடல்கள் போர் நிகழ்ச்சி அளவுடன் அமைகின்றன. இவ்வாறு திணையை முழுமையாகப் பாடும் திணைப்பாடலும், திணைக்குட்பட்ட நிகழ்வுடன் அமையும் துறைப்பாடலுமாகப் பாக்கள் உள.

பகைவேந்தன் பண்பின்மையை வெட்சி ஒழுக்கத்திற்குக் காரணமாகக் காட்டும் மரபு இல்லை. ஆனால் பாவேந்தர் 'நல்லவை செய்யான் தன் நாட்டுக்கு மாற்றான், புல்லும் இடான் பசு மாட்டுக்கு " எனப் பகைவர் பண்பின்மை காட்டுவது புதுமையாகும்.

### மரபு வளர்ச்சி :

வஞ்சினம் கூறல் புறத்திணை மரபு. இதனை மரபுக்கேற்பக் கையாள்வதுடன் புதுமையாகவும் படைத்துள்ளார். 'இன்னது பிழைப்பின் இவ்வாறாவேன்' என்பது வஞ்சினநடை'. பகைவனை மாலைக்குள் அழிக்காவிடின் பழி ஏற்பேன். பகைவர்க்கு ஆளாவேன் ' எனத் துறைப்பாக்களில் அமைக்கிறார். 'பாண்டியன் பரிசில்' காணப்பெறும் வஞ்சினம் மரபும் புதுமையும் கலந்துள்ளது. 'பேழையினைக் கொணர்வேன் அன்றெனில் உயிர் வாழேன்' என வேலன் கூறும் வஞ்சினம் மரபு வழிப்பட்டது. கண்ணுக்கினியாள் வஞ்சினம், 'நரிக் கண்ணனை மாய்த்திடுவேன் அல்லது அவனால் மாள்வேன்' என மரபுவழி அமைவதுடன், புதுமை ஒன்றனையும் பெற்றுள்ளது. 'மணவாள உன்றன் ஆணை! திருநாட்டின் மீதாணை! மக்களுக்கு மேல் எனக்குள்ள அன்பின் ஆணை' என வஞ்சினம் கூறும் முன்னர் ஆணையிட்டுக் கூறும் புதுமையையும் பெற்றுள்ளது. 'தான் குற்றமற்றவன்' என ஒன்றின்மீது ஆணையிட்டுக் கூறும் உலக வழக்கின் தாக்கம் இது. போர்ச் சூழலன்றிப் பிறவிடத்தும் வஞ்சினம் கூறும் வழக்குமுண்டு. 'குறிஞ்சித் திட்டில்' தன் மகனை நஞ்சிட்டுக் கொன்றவளைக் கொன்று கடைத் தெருவில் பிணம் நாறச் செய்வேன்' என இழந்தவர் தந்தை வஞ்சினம் உரைப்பான்.

அவனை மாற்றான் கொன்றுவிட, தந்தை, "அவனைக் கொல்ல வேண்டும் என்ற கொள்கையைக் கொன்றுவிட்டாய்" எனக் கொன்றவனிடம் வருந்துகிறான். வஞ்சினம் வாய்க்காத வருத்தத்தைப் பாடல் புதுமையானதாகும்.'

## இலக்கணச் சார்பின்மை:

புறத்துறைக் கருத்துக்களின்தாக்கமின்றி இயல்பாகவும் போர் நிகழ்ச்சியைப் பாடுகிறார். தனிப்பாடல்களில் புறத்துறை ஆட்சிகளை ஏற்றவர், 'பாண்டியன் பரிசு' என்ற நூலில் போர்நிகழ்ச்சியை இயல்பாகப் பாடுகிறார். 'பகைப்படை வரவறிதல்', 'தன்படைக்கறிவித்தல்', 'போர் பற்றிக் கலந்துரையாடல்', 'போர் செய்தல,' 'தனிப்போர்', 'வெற்றி/தோல்வி', 'கொள்ளையிடல்'... என முறைமையாகப் பாடப்படுகிறது. இது கோட்டை நோக்கிய போராக இருந்தும் அகத்திணைக்குரிய இலக்கணக் கட்டமைப்பமையவில்லை. புறத்திணை தொடர்பான இலக்கணச் சொல்லாட்சிகளும் இங்கு இல்லை. இவ்வாறே பிறநூல்களில் பாடும்பொழுதும் புறத்திணைக் குறியீட்டுச் சொற்களைக் கையாளவில்லை. திணை, துறைக் கருத்துக்களுக்காட்-படாது இயல்பாகப் பாடப் பெறுகிறது.

'பாண்டியன் பரிசில்' காணப்பெறும் போர் நிகழ்ச்சியில் வஞ்சினம் கூறல் மரபாயினும் இன்றைய உலகவழக்குமாம். படைகள் படைகளுடன் பொருவதே போர். இருப்பினும் போர்களில் வீரன் ஒருவனின் தனி வீரமும் சிறப்பிக்கப் பெறுவதுண்டு. 'பிள்ளை நிலை', 'எருமைமறம்' 'குற்றுழிஞை முதலான புறத்துறைகள் போரில் தனிவீரம் குறிப்பன. பாண்டியன் பரிசும் போரில் தனிவீரத்தைக் குறிக்கிறது. 'நூற்றுவர்க்கு. . . தனியொருவன் விழுக்காடு தோள்கொடுத்து' என்பது கவிதை அடி. போர் நிகழ்ச்சியுடனமையாது, பிற இடங்களிலும் தனிவீரம் பாடப் பெறுகிறது. குதிரை மறவர் பலர் மீது வேலன் எட்டிப் பாய்ந்தனன். பல ஆடுகட்குள் வேங்கைபோல' என வேலன் தனிவீரம் குறிக்கப்பெறுகிறது. போர் அல்லாத இடத்திலும் தனிவீரம் பாடப்பெறுதலின் இது துறை சார்ந்த கருத்து என்பதனினும் உலகியல் தழுவியது என்பதாகும். ஆதலால் வஞ்சினமும் தனி வீரமும் இடம்பெறல் உலகவழக்கின் சார்பின எனத் தெளியலாம்.

போர் நிகழ்ச்சியில் போரின் கடுமை பாடப்பெறல் இயல்பே. கடும்போர் என ஓர் இயல் வகுத்துப் போரின் கடுமை பாடப்பெறுகிறது. 'வெற்றி மங்கை நூறுமுறை ஏமாந்தாள் ஆளைத் தேடி' என்ற நயம் தோன்ற போர்க்கடுமை பாடப்பெறுகிறது. இவ்வாறே வேந்தர் இருவர்தம் வாட்போர்க் கடுமை 'வாட்போருக்கு இலக்கியத்தை நல்கும்போது' எனக் குறிக்கப்பெறுகிறது. வேந்தர் இருவரும் தனியாக வாட்போரிடும் வாய்ப்பு நிலையும் போரில் நிகழும் என்பதற்கேற்பத் தனிவாட்போர் பாடப்பெறுகிறது.

இவ்விளக்கங்களால் பாண்டியன்பரிசில் காணப்பெறும் போர்நிகழ்ச்சிகள், இலக்கணச் சார்பாக அமையாமல் இயல்பானவையாக அமைதல் தெளிவுறும்.

## இன உணர்வு :

பாவேந்தர் இனவுணர்வு மிக்கவர். அவருள்ளத்தில் தமிழினவுணர்வு மேம்பாடு-எப்பொழுதும் நிலைபெற்றது. பாண்டியன் பரிசு போர் நிகழ்ச்சியொன்றை இனவுணர்வுபடப் பாடுகிறார். அரசன்-கணவன்-போர்க்களத்தில் இறந்து கிடக்கிறான். அரசி-மனைவி-போர்க்களம் போந்து தன் கணவன் இறந்த உடலைக் காண்கிறாள். 'வீழ்ந்ததோ நெடுமேனி,' 'கலைந்ததுவோ காதல் ஓவியம்' என அழுது கட்டழகன் உடலை அள்ளிக் கன்னம், உச்சி, மா பு தடவுகிறாள். அப்பொழுது முதுகுப் புண்ணைக் காண்கிறாள். துணுக்குறுகிறாள் ; அருவருப்படைகிறாள். இவ்விடம் பாவேந்தர், அரசியின் உள்ளம் வெளிப்படுமாறு சொல் அமைப்பர். 'பிணத்தைத் தரையிற் போட்டாள்' எனப் பிணம் என்ற சொல்லை ஆள்வர். நெடுமேனி - கட்டழகு உடல்-காதல்ஓவியம் முதுகுப்புண்ணைக் கண்ட அளவில் பிணமாகிறது. 'வீரத்துக்கு இழுக்கு' எனத் தலைவி எண்ணுவது இயல்பாகும். ஆனால் தலைவி இனவுணர்வுபட 'முதுகு காட்டத்

துணிந்ததுவோ தமிழா நின் தமிழ் நெஞ்சம்' என மொழிவள். பாவேந்தரின் இனவுணர்வு மேலோங்குகிறது. இலக்கணச் சிந்தனைக்காட்படாது இயல்பான சிந்தனையில் பாடும் நெறியை இனவுணர்வு வெற்றி காண்கிறது.

## புதிய வழக்காறுகள் பெண்பாலார் பாடப் பெறல்

பெண்கள் போர்க்களம் சென்று போர்செய்தமையைக் குறிப்பிடும் துறை இல்லை. இக்கருத்தில் பழந்தமிழ்ப் பாக்களும் இல்லை. மூதின் மகளிர்தம் வீரவுணர்வு புலப்படுத்தும் பாக்கள் உள. அம்மகளிர் போர் செய்தமைக்கான குறிப்பு இல்லை. 'புறமுதுகிட்டார்' என்ற பழிச்சொல்லின் உண்மை அறிய வீரத்தாயார் போர்க்களம் சென்ற குறிப்பு உள்ளது. பாவேந்தர் பாக்களில் மகளிர் தலைமை ஏற்கப்பெறுகிறது, போரிலும் பிற முயற்சிகளிலும் பெண்கள் பங்கு பாடப்பெறுகிறது. பாண்டியன் பரிசில் அரசன் மனைவி கண்ணுக்கினியாள், வஞ்சினம் கூறித் தேர் ஏறிப் போருக்குச் செல்கிறாள் . கண்ணில் பட்டோர் உடலைச் சாய்க்கிறாள். அரசன் மகள் அன்னத்தின் 'தமிழ்நெஞ்சம் வாட்போரை விரும்பும்.' அவள் குதிரை ஏறிப் பாண்டியன் பேழையைத் தேடுகிறாள். ஆத்தாள் கிழவி ஆண்வேடம் பூண்டு வாளேந்திப் பேழை தேடுகிறாள். இவ்வாறாகப் பாண்டியன் பரிசில் போர்ச்செயல்களிலும், பிற முயற்சிகளிலும் மகளிர் பங்கு பாடப்பெறுகிறது. வீரத்தாயில் அரசி மாறு வேடம் பூண்டு தன் மகனுக்கு வாட்பயிற்சி தருகிறாள். அரசியைப் பற்றி அமைச்சன் "அரசியோ வீரம் உறுதி அமைந்தாள். தரையினர் மெச்சும் சர்வகலையினள்" எனப் பாராட்டுகிறான். போர்ச் செயலன்றிப் பிறவற்றிலும் பெண்கள் தலைமை பாடப்பெறுகிறது. 'சஞ்சீவி பர்வதத்தின் சாரலில்', குப்பன் மூட நம்பிக்கையுடை யனாயும் வஞ்சி பகுத்தறிவுடையளாகவும் படைக்கப் பெறுகின்றனர். 'புரட்சிக் கவியில்' அமுதவல்லி தம் தந்தையிடம் -அரசனிடம்-காதல் முழக்கம் செய்கிறாள். 'குறிஞ்சித்திட்டில் தாமரை அயலினத்தாரிடம் தமிழ் நாகரிகம் பற்றிச் சொல்லாடுவாள். இவ்வாறாகப் பாவேந்தர் பல நூல்களிலும் பெண்கள் பேரொழுக்கம் பற்றியும் பிற முயற்சி குறித்தும் பாடுவது புதுமையாகும். இவ்வாறாகப் பாடுவது பாவேந்தர் காலப் பெண்ணுரிமைக் கோட்பாட்டின் விளைவாகும்.

## விடைபெறல் :

பாவேந்தர் பாக்களில் போர் பற்றிய புதிய வழக்காறுகளுமுள. போருக்குச் செல்லும் வீரன் தாயிடம்-மனைவியிடம் விடைபெறலும் அவர்கள் விடை கொடுத்தலும் பாவேந்தர் பாக்களில் உள. போர்மறவன் என்ற தலைப்பிலான கவிதையில் மறவன் போருக்குச் செல்லும் முன்னர் மனைவியிடம் விடை கேட்கிறான். மனைவி விடை கொடுக்கிறாள். பாண்டியன் பரிசில் ஆற்றுச் சூழலில் சிக்கியோரைக் காப்பதற்காக வேலன் விடை கேட்க தாய் விடையளிப்பதை, "விடை என்று கேட்டான்; செய்; நட என்றாள் தாய் எனப் பாவேந்தர் பாடுவர். புறநானூற்று மூதின்முல்லைப் பாடல் குலவுணர்வால் உந்தப்பட்டு வீரத்தாய் மகனைப் போருக்கு அனுப்பவதேயன்றி மகன் விடை கேட்பதும், தாய் விடை கொடுப்பதுமாக அமையவில்லை. போர்க்களச் சாவில் மறவன் தன் மனைவிக்குப் பறவை வழியாக ' நாட்டுக்குயிரைப் படைத்தான்; உடலைப் படைத்தான் ' எனச் செய்தி அனுப்புதல் புதிய நிலையாகும், வெற்றி வீரனின் வருகைத் தாழ்ச்சியை மனைவி குறிப்பதாகவே புறப்பாடல் உண்டு.

## சரணடைதலும் திறைபெறலும் :

பகைவர் இருவரும் போரொழிய வேண்டும் எனச் சந்து செய்விக்கும் வழக்கம் பழைய இலக்கியங்களில் புலனாகும். பார்ப்பனவாகைத் துறை இக்கருத்தினதே. ஆனால் பகைவர் படை எடுப்பில், படைகள் சரணடைதல் பாடப்பெறவில்லை. 'கடற்மேற் குமிழியில்', ஒரு திறத்துப்

பகைவர் சரணடைவதற்காகக் கோட்டை வாயிலில் வெண்ணிறக் கொடி எடுத்தமையைக் குறிக்கிறார்.

மாற்றரசனிடம் திறை கொளல் குறித்துத் தொல்காப்பியத்துறை இல்லை. ஆனால் புறப்பொருள் வெண்பாமாலை, திறை கொண்டு பெயர்தல் எனத் துறை வகுக்கும். புறநானூற்றில் பகை வேந்தர் திறையளிக்கும் முறை காணப்பெறும். திறை அளித்தல் இருவகை. போர்ச்சூழலில் பகை வேந்தனைப் பணிந்து திறையளிப்பது ஒருவகை . மற்றொருவகை தோற்ற அரசன் வென்ற அரசனின் தலைமை ஏற்றுக் காலம்தொறும் தருவதாகும். சங்க இலக்கியங்களில் காணப்பெறும் திறை போர்ச் சூழலில் தருவது. 'ஏகாதிபத்திய ஆட்சி' தோன்றிய பின்னரே காலம்தோறும் தரும் திறை இடம்பெறும். பாண்டியன்பரிசில், வென்ற அரசன் 'தோற்றவர்க்கு நாடளித்து, அவர்களிடம் நாளடைவில் கப்பம் கொள்ளல் அறம்" என்கிறான். 'நாளடைவில்' என்ற தொடரான் ஏகாதிபத்தியத் திறையைப் பாவேந்தர் பாடுவது தெளிவுறும்.

### மறைந்தோடலும் வஞ்சகமும் :

பாண்டியன் பரிசில் பகைவர் வென்ற நிலையில், தோற்ற அரசனின் அரண்மனைப் பெண்டிர் நிலவறை (சுரங்கம்) வழி வெளியேறுவதாகப் பாடுவது புதுமையாகும்.

முன்னைய இலக்கண இலக்கியப் போர்களில் வஞ்சகத்திற்கிடமில்லை. நச்சினார்க்கினியர் வாகைத்துறையொன்றன் விளக்கத்தில், போரில் வஞ்சகமாகக் கொல்வதைக் குறிப்பர். ஆனால் சங்க இலக்கியப் போர்களில் வஞ்சகப் போருக்கான குறிப்பில்லை. பாடுபொருள் வீரமாகும் பொழுதும் வீரநோக்கில் போரிடும் பொழுதும் வஞ்சகம் இடம் பெறாது. பாண்டியன்பரிசில், நரிக்கண்ணன் முகமூடியணிந்து போர்க்களம் போந்து மாற்று வேந்தன் முதுகில் குத்திச் சாகடிக்கும் வஞ்சகத்தைச் செய்கிறான்.

### வாழ்க்கை முயற்சிகள் :

போர் மட்டுமேயன்றி அனைத்து வாழ்க்கை முயற்சிகளும் புறப்பொருளே. சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் மலையேறும் குப்பன் முயற்சியைக் காட்டும் வாய்ப்பிருந்தும் கதைப்போக்கிற்காகப் பாடவில்லை. முயற்சியின் கடுமை, 'மாமலை தான் சென்னி வளைந்து கொடுத்ததுவோ'? நாம் மலைக்கக் குப்பன் விரைவாய் நடந்தானோ? எனக் குறிக்கப் பெறும். பாண்டியனின் பேழையைத் தேடும் முயற்சியும், பேழையைப் பெற்றுவரும் முயற்சியும் பாடப்பெறுகின்றன.

பிறமுயற்சிகளைப் பாடும்பொழுதும் வஞ்சகத்தன்மை குறிக்கப்பெறுகிறது. குறிஞ்சித் திட்டில் வேற்றினத்தவர் வஞ்சகமாகத் தலைமை பெற முயல்வதும் அவ்வஞ்சகத்தைத் திட்டமிட்டு முயன்று தோல்வியுறச் செய்வதும் விளக்கப்பெறும்.

பாண்டியன் பரிசில் பிறர் பேழையைத் தேடலாகாது என்ற கருத்தில் நரிக்கண்ணன் பூதம் என்ற கற்பனையைப் படைக்கிறான். எதிர்ப்புறத்தாரும் கற்பனைப் பூதங்கள் பலவற்றை எழுப்புவர். பாவேந்தர், இப்பூதக் கற்பனை வழி, மூடநம்பிக்கையை ஒழித்துப் பகுத்தறிவூட்டுவர். பேழை இருக்குமிடம் அறியவும் வஞ்சகம் இடம்பெறுகிறது. நீலன், தன் காதலிவழி பேழை இருக்குமிடத்தை வஞ்சகத்தால் அறிய முயல்கிறான். இவ்வாறு வஞ்சக முயற்சிகளும் புறவாழ்வில் குறிக்கப்பெறுகின்றன.

உலகப் பொருட்களின் நிலையாமை கூறுவது காஞ்சி என்னும் புறத்திணையாம். ஒரு நல்ல நோக்கத்திற்காக இந்த நிலையாமை உணரப்பெறும். நச்சினார்க்கினியர் வீடுபேற்றின் நிமித்தமாக நிலையாமை கூறப்பெறும் என்பர். பாவேந்தர், பொதுத்தொண்டிற்காக நிலையாமையைக் குறிப்பர்.

ஒரு சற்றும் பயனில்லா உடம்பை, வாழ்வா
உண்டில்லை என்னுமொரு மின்னைத் தின்ன
நரிசற்றும் விலக்காத கூட்டைச் சான்றோர்
நகைப்புக்கே இலக்கான குமிழிதன்னை. . . .

என வேலன் நிலையாமையைக் கூறிப் 'பேழையைத் தேடி அன்னத்தின் துயர் போக்குவென்' என மொழிகிறான். 'தமிழுக்கும் தமிழ்நாட்டுக்கும் சிறிய பயன் கிடைக்கும் முயற்சியில் சாவு வரின், அச்சாவு நாள் திருநாள்' எனக் கருதுவதும் காஞ்சித் திணையே.

பாடாண் திணை :

பாவேந்தர் பாடல்களில் பாடாண்திணைக் கருத்தும் பொருண்மொழிக் காஞ்சிக் கருத்தும் காணப்படுகின்றன. இவை விரிவாக நோக்குதற்குரியன. இக்கட்டுரையில் சுருக்கமாகக் குறிக்கப் பெறுகின்றன.

இலக்கணப் பாடாண் அரசனையும் கடவுளரையும் பாடுவதே. இலக்கியப் பாடாணும் பெரும்பான்மையும் அவ்வழக்கைச் சார்ந்ததே. இது காலத்தின் முறையாகும். 'பாடாண் ' என்ற சொல்லாட்சி 'தகுதி சான்றவர்' பாடற்குரியர் என்ற கருத்துடையது. பாவேந்தர் பாடல்களில் முன்னைய அரசர்களும் இன்றைய தலைவர்களும் பாடப்பெறுவர். இராவணனைப் பாடுவதும், இரணியனைப் புகழ ஒரு நூலையே படைப்பதும் பாவேந்தர் தம் கொள்கை வழிப்பட்டன.

'தேனருவி' என்ற தொகுப்பில் பலரைப் பாடிய பாக்கள் உள. கவிதையில் இரண்டாம் தொகுதியில் பாரதியாரைப் பற்றிப் பல பாடல்கள் உள. மறைமலையடிகள், திரு. வி.க., பரிதிமாற்கலைஞர், சுந்தரனார், பா.வே.மாணிக்க நாயக்கர், உமாமகேச்சுரன் இசைப்புலவர் இலக்குமணன் முதலிய கல்வித்திறன் வல்லாரையும், வ.உ.சி, ஆர்.கே.சண்முகம், பன்னீர் செல்வம், தியாகராசர், அமைச்சர் முத்தையா முதலிய அரசியல் தலைவர்களையும் அழகிரி, சவுந்திரபாண்டியன், முதலிய தன்மான இயக்கத் தலைவர்களையும் பாண்டித்துரைத்தேவர் ஆகிய தமிழன்பரையும் பாடியுள்ளார். இவர்களிடமமைந்த தனிச்சிறப்புகள் பாடல்களில் குறிக்கப் பெறுகின்றன. இவ்வாறாகப் பாவேந்தர் பாடாண் திணையை விரிவுபடுத்தியுள்ளார்.

பாவேந்தரால் பாடப்பெறுவோர் அண்மைக் காலத்தவர். அவர்கள் பெயர் கூறிய அளவிலேயே அவர்தம் அருஞ்செயல்கள் நினைவில் மேலோங்கும். அவரவர் தம் அருஞ்செயற் குறிப்புகளுடன் பாவேந்தர் பாடுகிறார். திரு. வி.க. வைப் பாடும் பொழுது, அவர்தம் பேச்சிலும் எழுத்திலும் காணப்பெறும் இனிமையையும் தெளிவினையும் குறிப்பர். தலைப்பே 'தேனருவி திரு.வி.க. என இனிமைக் குறிப்புடன் அமைகிறது. வ.உ. சி.யைப் பாடிய பாடலில் அவர் கப்பலோட்டிய குறிப்பு காணப்பெறும். தமிழில் நாடக நூல் செய்தமையும் தம்பெயரைத் தமிழ்ப் பெயராக மாற்றிக் கொண்டமையும் பரிதிமாற்கலைஞர் தம் சிறப்புக்கள். சுந்தரனாரைப் பாடும் பொழுது மனோன்மணிய நூல் நினைவு மேற்பட 'மனோன்மணிய சுந்தரனார்' என்று தலைப்பே அமைகிறது. பா.வே.மாணிக்க நாயக்கர் தம் மொழிநூல் அறிவால் சிறப்புற்றவர். அதற்கேற்பப் பாவேந்தர், 'ஒலி வடிவினுக்கும் வரிவடிவினுக்கும் ஓம் என்கிற எழுத்தே முதன்மை என்று விளக்கம் அளித்தமையைப் பாடுவர். இசைப்புலவர் இலக்குமணனின் இசைப்பணி பாடப் பெறுகிறது. பாண்டித்துரைத் தேவர் தமிழ்ச்சங்கம் நிறுவியமை, உமாமேகச்சுரன் தமிழ்க்கல்லூரி நிறுவியமை, அமைச்சர் முத்தையா வகுப்புவாரித்திட்டம் கொணர்ந்தமை முதலான அவரவர்தம் தனிச் சிறப்புச் செயற்பாடுகள் பிற இயல்புகளுடன் குறிக்கப் பெறுகின்றன. ஆர்.கே. சண்முகம் நிதித்துறை அறிஞர் எனப் பாராட்டப் பெறுவர். பண்டைத் தமிழ்நடை விடுத்துப் பலருக்கும் புரியும் நடையினைப் பாரதியார் மேற்கொண்டமை அவர்தம்

தனிச்சிறப்பாகக் கருதப் பெறுகிறது. இவ்வாறாக அவரவர் தம் தனிச் சிறப்புக்களைக் குறிக்கும் பாவேந்தர், மறைமலையடிகள் தம் தனித் தமிழியக்கத்தைக் குறிப்பிடாமை வியப்பே. அவர் தம் புலமை நலமும் நூலியற்றலும் குறிக்கப் பெறுகின்றன.

பாவேந்தர் தம் பாடாண் பாடல்கள், தனி மனித நோக்கிலும் இயக்க நோக்கிலும் அமைகின்றன. தேனருவித் தொகுப்பிலுள்ள பாடாண் பாடல்களில் ஓர் இயைபு இழை புலப்படுகிறது. இது பாவேந்தர் தம் உளக்கிடக்கையைத் தெளிவுறுத்தும்.

மறைமலையடிகள் 'மறை எனப்படுவது தமிழ்மறை' என்றும் 'ஆரியம் தமிழுக்குக் கடன்பட்டது ' என்றும் விளக்குவர். திரு. வி.க. 'கூனிக் கிடந்த தமிழர் விழிக்க வானுயர் திறத்தால் அனைத்தும் வழங்குவர்'. பாரதியார் புரியும் நடையைத் தமிழில் மேற்கொண்டார். வ.உ.சி. தமிழனைத் தாழ்த்த முயன்றவர்க்கு அஞ்சாமல் நாட்டுத் தொண்டாற்றினார். பரிதிமாற்கலைஞர் தமிழ்ப்பற்றுடையர், மனோன்மணியச் சுந்தரனார் நற்றமிழ் காக்கத் தன்னலம் துறந்தார். ஆர்.கே. சண்முகம் மதித்திடும் வண்ணம் தமிழ்த்தொண்டு செய்தவர். மாணிக்க நாயக்கர் தமிழ் எழுத்தே முதல் என்றார். இசைப்புலவர் இலக்குமணன் தமிழிசையை மீட்டார். அழகிரி, தியாகராசர், சவுந்திரபாண்டியன், பன்னீர்செல்வம் முதலானோர் தமிழினப் பற்றாளர். பாண்டித்துரைத் தேவரும், உமாமகேச்சுரரும் முறையே தமிழ்ச் சங்கத்தையும், தமிழ்க் கல்லூரியையும் நிறுவியவர்கள். அமைச்சர் முத்தையா, தமிழினக் காப்பாளர். இவ்வாறாகப் பாவேந்தரின் பாடாண் தலைவர்கள் ஒவ்வொரு வகையில் தமிழ்த் தொண்டினர். பாவேந்தர் தம் உளக்கிடக்கையான தமிழ்ப்பற்று, அவர்தம் பாடாண் தலைவர் பாக்களின் இயைபு இழையாக அமைகிறது.

'தேனருவி'ப் பாடாண் பாக்களனைத்தும் இசைப்பாக்கள். பாடாண் கடவுளரைப் பாடும்பொழுது இசைப் பாடல்கள் அமைவது மரபு. பாவேந்தர் மக்கள் பாடாணிலும் இசைப்பாடல் அமைத்தல் புதிய நெறியாகும்.

பாவேந்தர் பாடாண் தலைவர்களில் முன்னிற்பவர் பாரதியாரே. 'பாரதி' எனத் தலைப்பிட்டு, ஆறு பாக்கள் 'கவிதைகள் இரண்டாம் தொகுதியில் ' தொகுக்கப்பட்டுள்ளன. 'தேனருவி' யிலும் ஒரு பாடல் உண்டு. பாரதியார், 'ஞான ரதம்', 'கண்ணன் பாட்டு' முதலிய நூல்கள் பற்றிய குறிப்புகள், பாரதியாரின் பாக்கள் சில பற்றிய குறிப்புகள், பாடல்கள் சிலவற்றைப் பாடிய சூழல்கள், அவர் சேரியில் தங்கியமை, முகமதியர் கடையில் தேனீர் அருந்தியமை முதலிய தனிவாழ்க்கைக் குறிப்புகள், அவர்தம் பெண்ணுரிமைக் கோட்பாடுகள் முதலியன குறிக்கப் பெறுகின்றன.

பாரதியாரைப் பாடும்பொழுது உணர்வு மிகுதியுடன் பாடுவது குறிப்பிடற்குரியது. 'மக்கள் தொகுதி குறை ஒன்றால் வருந்தும் பொழுது அக்குறை தவிர்க்க ஆற்றல் வாய்ந்தவர் தோன்றுவர்; பாரதியார் பிறப்பு இத்தகையது' எனக் குறிப்பர். மேலும்,

> தமிழரின் உயிர்நிகர் தமிழ்நிலை தாழ்ந்ததால்
> இமைதிற வாமல் இருந்த நிலையில்
> தமிழகம் தமிழுக்குத்தகும் உயர்வளிக்கும்
> தலைவனை எண்ணித் தவங்கிடக்கையில்
> இங்குப் பாரதிப் புலவன் தோன்றினான்

எனப் பாரதியைத் தவப்புதல்வனாகப் பாடுவர்.

இவ்வாறே திரு.வி.க.வைப் பாடும் பொழுதும் 'தெளிவுபடுத்தும் அவர்க்குள்ள திறமை துளியேனும் பிறருக்கிருந்ததில்லை; இருக்கப் போவதுமில்லை' எனவும், சுந்தரரைப் பாடும்பொழுது தமிழ்த்தாய் கூறுவது போல "நான்பெற்ற மக்களில் சுந்தரன் சிறந்தவன்" எனப் பாடுவதும் உணர்ச்சி மிகுதி காட்டுவன.

வேந்தர் தம் நாட்டின் சிறப்புக் கூறுவது 'நாடு வாழ்த்து' என்ற துறையாக இலக்கணப் பாடாண் குறிக்கும். பாவேந்தர், திராவிட நாட்டைப் பாடுவதும் நாட்டுவாழ்த்துத் துறையாகக் கருதப்பெறும். இவ்வாறே தமிழ்மொழியைப் பாடுவதும் 'மொழி வாழ்த்தாக ' அமையும். இவ்விரு வகையிலும் பாவேந்தர் பாக்கள் மிகுதி. அவை தனியாகக் கருதுமளவு விரிவுடையன.

பொருண்மொழிக் காஞ்சி :

புறத்துறைகளுள் ஒன்று பொருண்மொழிக் காஞ்சி.

எரிந்தி லங்கு சடைமுடி முனிவர்
புரிந்து கண்ட பொருள்மொழிந் தன்று

என்பது அத்துறைக்கான இலக்கணம். தகுதி சான்றவர் கூறும் தகுதியுரை என்பது கருத்து. இவ்வாறான கருத்துக்கள் புறநானூற்றில் தனிப்பாக்களாக உள்ளன. பதினெண்கீழ்க்கணக்கில் நூல்களாக உள்ளன. காப்பியங்களில் தகுதியான மாந்தர்தம் கூற்றுக்களாக உள்ளன. பாவேந்தர், தனிப் பாடல்களிலும் காப்பியங்களில் மாந்தர் கூற்றுக்களிலும் கருத்துக்களைக் கூறுகிறார். கருத்துரைப் பாடல் பகுதிகள் மிகுதியாக உள்ளன. கருத்துரைப் பாடல்களில் 'மக்கள் உள்ளம் தன்னலம் நாடும் உள்ளமாகக் குறுகாது உலகநலம் நாடும் உள்ளமாக விரிந்து தன்னலமற்ற தாயுள்ளமாக அமையவேண்டும்' என்ற கருத்தில் 'தன் பெண்டு தன்பிள்ளை. . . ' எனத் தொடங்கும் பாடல் குறிக்கத் தக்கது. நேராகக் கருத்துரை கூறாது 'கூண்டுக் கிளியின் வாழ்க்கை வழி உரிமை பற்றிக் கூறும் 'தித்திக்கும் பழம் தின்னக் கொடுப்பார். . . ' என்ற பாடல் உத்தியாலும் சிறப்புறுகிறது. அவர்தம் ஆத்திசூடியும் பொருண்மொழிக் காஞ்சியே. பாண்டியன் பரிசில் கதை மாந்தர்தம் கூற்றுக்களாகக் கருத்துரைகள் உள. களவுப் பழக்கம் மேற்கொண்ட வீரப்பன்,

ஒருவனிடம் ஏற்பட்ட தீயொழுக்கம்
உடன் வலிந்தே பின்னதுதான் நீங்க ஒண்ணாப்
பெருநோயாய் மாறுவதே மெய்யே

எனத் தீயொழுக்கம் தொடக்க நிலையில் தவிர்க்கப் பெறாவிடின் அப்பழக்கம் நோயாக முதிரும் கடுமையைக் கூறுகிறார். இக் கருத்துரை, தகுதி சான்றவரின் கூற்றாக அமையாது, பயின்ற கள்வனின் கூற்றாக அமைகிறது. வீரப்பன் கள்வன்; ஆனால் 'களவுப் பழக்கம் தவிர்க்க முடியாத நோயாக வளர்ந்து விட்டதே' என உணர்விரக்கம் கொள்கிறான். ஆதலின் பட்டறிவை-யுடையான் கருத்துரையாகத் திகழ்கிறது. இவ்வாறாகப் பல கருத்துரைகள் உள. இசையமுதில் சிறுவர்க்கான கருத்துரைகள் உள. கடல்மேற் குமிழியில் மணப்பெண்ணுக்கான கருத்துரைகள் உள.

இவ்வாறாகப் பாவேந்தர் படைப்புகளில் போரொழுக்கம், பொதுமுயற்சி, தக்கோரைப் புகழல், கருத்துரை வழங்கல் ஆகிய புறப்பொருட் கூறுகள் அமைந்துள்ளன.

* * *

# பாரதிதாசனும் கார்ல் சான்ட்பர்க்கும்

சண்முக. செல்வ கணபதி

உலகில் ஒருலக மனப்பான்மை வளர ஒப்பிலக்கிய ஆய்வு துணை செய்கிறது. இனம், மொழி, நாடு போன்றவற்றால் பல வேறுபாடுகளைக் கொண்டுள்ள மனித சமுதாயம் மானுடப் பண்பால் ஒன்றுபட்டு விளங்குகிறது. அதுபோல் இலக்கியங்களிலும் வேற்றுமையில் ஒற்றுமையை ஒப்பிலக்கியம் இன்று கண்டு வருகிறது. ஒப்பிலக்கிய ஆய்வால் மொழியும் இலக்கியமும் வளம் பெறுவதோடு மனிதரிடையே சகோதரத்துவமும் வளர்கிறது.

இருபதாம் நூற்றாண்டின் தமிழ் உலக மகாக்கவி பாரதியின் தாசனாக விளங்கிய கனக சுப்புரத்தினத்தையும் *(1891-1964)*, அமெரிக்க நாட்டின் புதுமைக்கவி வால்ட் விட்மனின் வழித்தோன்றலான கார்ல் சான்ட் பர்க்கையும் *(1878 - 1967)* ஒப்பிட்டு ஆய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும். இவர்களின் படைப்புகள் அனைத்தையும் ஈண்டு எடுத்துக் கொள்ளாது இருவரின் கவிதைப்பகுதிகளில் சில மட்டும் ஈண்டு ஒப்பிடப்படுகின்றன.

## இருபதாம் நூற்றாண்டின் பாவலர்கள்:

பாரதிதாசன் *29.4.1891*இல் புதுச்சேரியில் கனகசபை முதலியார்க்கும் இலக்குமி அம்மாளுக்கும் மகனாகப் பிறந்தார். இவர் தோன்றுவதற்கு *13* ஆண்டுகட்கு முன்பு அமெரிக்க நாட்டில் காலிஸ்பெர்க் இல்லினாய்ஸ் என்ற இடத்தில் ஆகஸ்டு மாதம் கிளாரா தம்பதியரின் மகனாகக் கார்ல்சான்ட்பர்க்கு பிறந்தார். பாரதிதாசன் திருப்புளிசாமி அய்யாவிடமும், பெரிய சாமி ஆசிரியரிடமும்,பங்காரு பத்தரிடமும் முறையான கல்வி கற்றார்[1]. பதினாறாவது வயதில் புதுச்சேரி கல்வே கல்லூரியில் பயின்று தமிழ் வித்துவான் பட்டம் பெற்றார். சான்ட் பர்க்கு எட்டாம் வகுப்பு வரை இளமைக்கல்வி பயின்றார். குடும்பத்தின் வறுமைச் சூழலால் பயில வாய்ப்பிலாது பல்வேறு தொழில்களில் ஈடுபடலானார். சிறிது காலம் போர் வீரனாகவும் பணியாற்றினார். *1898-1902* வரை லம்பார்டு கல்லூரியில் சேர்ந்து பயின்று, பட்டம் பெறாமல் வெளியேறினார்[2].

பாரதியுடன் பழக ஆரம்பித்த சுப்புரத்தினம் பாரதியின் தாக்குரவிற்கு ஆளாகிப் பாரதிதாசன் ஆனார். சுப்புவின் கவித்திறனைக் கண்டு கொண்ட பாரதி 'எங்கெங்கும் காணினும் சக்தியடா' என்று தொடங்கும் பாடலின் மூலம் சுப்புவை வெளிஉலகிற்கு அறிமுகப் படுத்தியதோடு, தனது 'கவிதா மண்டலக் கவிஞன்' என்ற புகழினையும் அவருக்கு அளித்தார். சுப்புவின் கவித்திறனைப் பாரதி கண்டு கொண்டதுபோல சான்ட்பர்க்கின் கவித்திறனைச் சான்ட் பர்க்கு பயின்ற லம்பார்டு கல்லூரி ஆசிரியர் பிலிப் கிரீன்ரைட் கண்டு, அத்திறன் ஊக்கம் பெற உதவியதோடு, இவரின் இளமைக் காலக் கவிதைகளான **In Reckless Ecstasy, The Plaint of Rose, Incidentals** என்பவைகளைப் பதிப்பித்து உலகிற்கு அறிமுகம்

செய்துவைத்தார்[3]. கனகசுப்புவின் வாழ்வில் பாரதியின் தொடர்பும், சான்ட்பர்க்கின் வாழ்வில் பிலிப்கிரீன்ரைட் தொடர்பும் திருப்பு மையங்களாயின.

### பாரதியும் விட்மனும் :

தமிழ் இலக்கிய உலகில் பாரதியின் தோற்றம் ஒரு பெரிய மாற்றத்தினைத் தந்ததுபோல அமெரிக்க இலக்கிய உலகில் வால்ட் விட்மனின் பிறப்பு அமைந்தது. பண்டித நடைமாறி பாமர நடை கவி உலகில் நுழைந்தது. பழைய பாடு பொருள்கள் மாறி புதிய பொருள்கள் தோற்றம் பெற்றன. பாமரன் கவிதையின் நாயகன் ஆனான்.

பாரதியின் இலக்கியப் போக்கு சுப்புவைப் பாரதியின் தாசனாக்கியது. இதனைப் பாரதிதாசன்,

> பாடலிற் பலமுறை பழநடை என்பதோர்
> காடு முழுவதும்கண்டபின் கடைசியாய்ச்
> சுப்பிர மணிய பாரதி தோன்றியென்
> பாட்டுக்குப் புதுமுறை புதுநடை காட்டினார்[4]

என்கிறார். பாட்டுலக முன்னோடியாகப் பாரதிதாசனுக்குப் பாரதி விளங்குவது போல சான்ட் பர்க்கிற்கு விட்மன் விளங்குகிறார். விட்மனின் புல்லின் இதழ் (Leaves of Grass) நூலிற்கு இரு பதிப்புகளுக்கு இவர் முன்னுரை எழுதியுள்ளார். விட்மனின் சாயலை இவரின் பாடல்களில் நிரம்பக் காணலாம். ஆனால் தனது சுயசரிதையில் விட்மனை விட எமிலி டிக்கன்சனுக்கு தான் அதிகம் கடமைப் பட்டுள்ளதாகக் கூறுகிறார்.[5]

### பெரியாரும் லிங்கனும் :

"ஈ. வெ. ராமசாமியாகிய யான் திராவிட மக்களைத் திருத்தி உலகிலுள்ள மக்களைப்போல மானமும் அறிவும் உள்ள மக்களாக ஆக்கும் பணியில் ஈடுபட்டிருப்பவன் "[6] என்ற கொள்கை யோடு சமுதாயப் பணிசெய்த பெரியாரின் சீர்திருத்தக் கருத்திற்கு ஆளாகித் திராவிட இயக்கக்கவியாகப் பாரதிதாசன் பிற்காலத்தில் விளங்கினார். பெரியாரின் தாக்குரவால் கடவுள் மறுப்புக் கொள்கையாளர் ஆனார். மூடப் பழக்க வழக்கங்களைக் கண்டிக்கலானார். சமதர்ம சமுதாயம் காணவிழைந்தார். தமிழகத்தின் புரட்சிக் கவியானார்.[7]

தமிழகத்தில் சமுதாயப் புரட்சியைக் காண விழைந்த பெரியாரைப் போல அமெரிக்க நாட்டில் சமதர்மச் சமுதாயம் காண விழைந்த ஆப்ரகாம் லிங்கனின் கருத்துக்கள் கார்ல் சான்ட் பர்க்கைப் பெரிதும் கவர்ந்தன. லிங்கனின் கருத்துக்களால் ஈர்க்கப்பட்டதோடு தன் வாழ்வின் முன்னோடியாக அவரைக் கண்டார். லிங்கனின் வாழ்க்கை வரலாற்றை ஆறுபாகங்களாக எழுதி வெளியிட்டார். இந்நூல்கள் உயர்விலைப்பதிப்பில் 1,200,000, பிரிதிகளுக்கு மேல் வெளியிடப்பட்டன[8]. பின்பு மலிவுவிலைப் பதிப்பிலும் வெளிவந்தன. இந்நூல் 1967இல் அமெரிக்க நாட்டின் வாழ்க்கை வரலாற்று நூலுக்கான புலிட்சர் பரிசினையும் பெற்றது. பெரியார் பாரதிதாசனுக்கும், லிங்கன் சான்ட் பர்க்கிற்கும், முன்னோடிகளாக விளங்கினர்.

### படைப்புகள் :

பாரதிதாசனின் பாடல் நூல்கள் 33. பாடல் வரிகள் 40,600 என்று கணக் கிடப்பட்டுள்ளது[9]. இவைதவிர 17 நாடக நூல்கள், வாரியார் வரலாறு அல்லது கெடுவான் கேடு நினைப்பான் என்ற ஒரு புதினம், மூன்று கதை நூல்கள், சொற்பொழிவு நூல் மூன்று, இலக்கண நூல் இரண்டு,

கட்டுரைத் தொடர் ஒன்று, வினாவிடை நூல் ஒன்று, போன்ற பல படைப்புகளையும் படைத்துள்ளார்[10].

சான்ட் பர்க்கு படைத்த பாடல்கள் அனைத்தும் 771 பக்கங்களில் தொகுக்கப்பட்டு வெளியிடப் பட்டுள்ளன. இவர் சுமார் நாற்பதிற்கும் மேற்பட்ட நூல்களை வெளியிட்டுள்ளார். **Remembrance Rock** என்ற நாவலையும் ஆப்ரகாம் லிங்கனின் வாழ்க்கை வரலாறு ஆறு தொகுதிகளையும், **The American Songbag** என்ற நாட்டுப் புறப் பாடல் தொகுப்பினையும் **Rootabaga Stories; Rootabaga Pigeons, Abe Lincoln Grows up, Early moon, praike Town Boy, wind song** போன்ற குழந்தைகளுக்கான நூல்களையும், **Always the young strangers** என்ற தனது இளமைக் கால வாழ்வு பற்றிய நூலையும் வெளியிட்டுள்ளார்[11].

## பெற்ற பாராட்டுக்கள் :

பாரதிதாசனின் இலக்கியத் தொண்டினை மதித்துத் தமிழக மக்களின் சார்பில் 28.7.1946இல் சுமார் 25,000 ரூபாய் பொற்கிழி அளிக்கப்பட்டது. 1938இல் 'சுயமரியாதை இயக்கத்தின் ஒப்பற்ற கவி ' என்று பெரியாரால் பாராட்டப் பட்டார். 1954இல் புதுவை சட்டமன்ற உறுப்பினர் ஆனார். 1970 இல் இவரின் பிசிராந்தையார் நாடகம் சாகித்திய அகாடமி விருது பெற்றது. 1968இல் நடைபெற்ற உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டின் போது சென்னையில் பாவேந்தரின் உருவச் -சிலை அமைக்கப்பட்டது. பாரதிதாசன் பெயரால் திருச்சியில் ஒரு பல்கலைக்கழகம் நிறுவப்பட்டு இயங்கிவருகிறது. தமிழக மக்களால் புரட்சிக் கவி என்றும், பாவேந்தர் என்றும் அழைக்கப்பட்டு வருகிறார்.

வரும் ஏப்ரல் திங்களில் பாவேந்தர் நூற்றாண்டு விழாவைத் தமிழக மக்கள் கொண்டாட உள்ளனர்.

சான்ட்பர்க்கின் சிகாகோ பாடல்கள் (**Chicago poems**) **1914**இல் வெளிவந்த கவிதைக்கான ஹெலன் ஹாரிலிவின்சன் (**Helen-Haire Levinson Prize**) பரிசினைப் பெற்றது.[12] 1940இல் ஆப்ரகாம் லிங்கன் வாழ்க்கை வரலாற்று நூலிற்குப் புலிட்சர் (**Pulitzer Prize**) பரிசினைப் பெற்றார். 1950இல் சுவீடன் நாட்டின் அப்சலாவில் (**Uppsala**) கௌரவ டாக்டர் (**Ph.D-honorary**) விருதுபெற்றார்.[13] 1950 இல் இவரின் கவிதைத் தொகுப்பிற்காக புலிட்சர் (**Pulitzer Prize**) விருதுபெற்றார் . இவரின் பிறந்த நாளைச் சிகாகோ நகரம் 1953இல் 'கர்ல் சான்ட் பர்க்கு நாள்' என்று கொண்டாடியது.[14] இல்லினாய்ஸ் பல்கலைக்கழகம் இவரிடமிருந்த நூல்கள், இதழ்கள் அனைத்தையும் 50,000 டாலர் விலை கொடுத்துப் பெற்றது. சிகாகோ கவிஞர் என்றும் புல்வெளி பாடிய கவிஞர் என்று அமெரிக்கர்களால் அழைக்கப்பட்டு வருகிறார்.

## இருவர் பாடல் பகுதிகளில் சில ஒப்பீடுகள் :

கவிதையை, மானுடப் பண்பு வளர்க்கவும், மனிதநேயத்தை வளர்த்து மக்களிடம் சகோதரத் துவத்தை வளர்க்கவும், பல் வகையில் முரண் பாடுகளைக் கொண்ட சமுதாயத்தில் சமதர்மத்தைப் பேணவும், மக்களாட்சியின் மகத்துவத்தை எதிரொலிக்கவும், கழுத்து நெறிபட்டுப் பேச முடியாது தயங்கிய பாமரமக்களின் குரல்களை எதிரொலிக்கவும், சுரண்டும் வர்க்கங்களின் கொட்டத்தை அடக்கவும், இயற்கையின் எழில் மிகு கோலங்களைச் சொற்சித்திரங்களாக்கவும், மண்ணின் மணத்தையும் வளத்தையும் எதிரொலிக்கவும் செய்த கவிஞர்களாகப் பாரதிதாசனும் கார்ல் சான்ட் பர்க்கும் விளங்கினர். பல் நிலையிலும் பாதிக்கப் பட்டவர்களே இவர்கள் பாடல் நாயகர்கள். பாமரமக்களைப் பாதிப்பிற்குள்ளாக்கும் சுரண்டும் வர்க்கங்களே இவர்களின் எதிரிகள். அவ்வச் சமுதாயத்தில் தோன்றிய பல்வேறு பிரச்சினைகள் கவிதைக்குரிய பாடு-

பொருளாகியதோடு அப்பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் வழிகளையும் கவிதையின் மூலம் வெளியிட்டனர்.

மக்கள் தொகுதிஎக் குறையாலே

மிக்க துன்பம் மேவு கின்றதோ

அக்குறை நீக்கும் ஆற்றல் வாய்ந்தோனைச்

சிக்கென ஈன்று சீர்பெறல் இயற்கையாம்

(தொகுதி II. ப.72)

என்ற கவிஞர் கூற்று சமுதாயச் சிந்தனையுள்ள கவிஞனுக்கும் பொருந்தும். மா. செல்வராசன் கூறுவது போல, சமுதாயக் கொடுமைகளைச் சரியாகக் காண்கின்ற பார்வை பெறுவதே ஒரு புரட்சி, அதனைச் சந்திப்பது பெரும் புரட்சி. அப்பார்வையால் தாக்குண்டு அடங்கிப் போவாரும் உண்டு; ஆனால் அதன் இயல்பான வேகத்தோடு மேலும் உந்துதல் பெற்று எரிமலையாகக் குமுறும் எழுச்சி உள்ளம் பெறுவோரும் உண்டு. இவர்களே சமுதாயத்தில் மாற்றம் ஏற்படுத்த வல்ல ஆற்றலாளர்கள்". இவர்களின் பட்டியலில் பாரதிதாசனும் சான்ட் பர்க்கும் இடம் பெறும் ஆற்றல் உள்ளவர்கள் என்பதனையும் இவர்களின் பாடல்கள் மூலம் அறியலாம். "சமூகமே ஏறு நீ எம்கொள் கைக்கே" என்றனர்.

### பாட்டாளிகளைப் பாடும் நிலை :

தமிழ் இலக்கியத்தில் பாட்டாளிகளைப் பாரதிதாசனைப் போல் புகழ்ந்து பாடியோர் யாருமில்லை என்கிறார் தெ.பொ.மீ[15] உழைப்பே உயர்வு, என்றும் உழைப்பவனே உலகை ஆளும் மக்களாக வேண்டும் என்றும் கூறும் பாரதிதாசன் உழைப்பவனை உலகப்பனாக்கிச் சமதர்ம சமுதாயம் காண வழி கூறுகிறார். இவரின் பாடல்களிலே வண்டி ஓட்டி, இடையன், பாவுபோடும் பெண், நெசவாளன், இரும்பாலைத் தொழிலாளி, பூக்காரி, கூடை முடைவோன், வண்ணாத்தி, ஓவியன், குறவன் குறத்தி, தையல்காரன் என்ற பல் நிலை உழைப்பாளிகளும் இடம் பெறுகின்றனர். இவர்களின் உழைப்பே இவ்வுலகைப் பயனுடையதாக்கியது. இதனைப் பாரதிதாசன்.

கட்டத் துணியளித்தார் கல்லுழுது நெல்லளித்தார்

வெட்டிக்கா டெல்லாம் வீடாக்கித் தந்தார்

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

தரை மீது பட்டணங்கள் தந்தார்-கடலின்

திரை மீது பட்டணங்கள் செல்லும்படி அமைத்தார்.

(குறிஞ்சித்திட்டு)

உலகை வாழவைத்த இப்பாட்டாளி மக்கள்

கந்தை யணிந்தோம் - இரு

கையை விரித்தெங்கள் மெய்யினைப் போர்த்தோம்

மொந்தையிற் கூழைப் - பலர்

மொய்த்துக் குடித்துப் பசித்துக் கிடந்தோம்

(தொகுதி I, ப-133.)

என்று நொந்து வாடுகின்றனர். இவர்கள் உழைப்பின் பரிசாகப் பொறுமையையும் வறுமையையுமே பெறுகின்றனர் என்பதனைப் பாரதிதாசன்

காண்பதெலாம் தொழிலாளி செய்தான் அவன்
காணத் தகுந்தது வறுமையாம் - அவன்
பூணத் தகுந்தது பொறுமையாம்."

(தொகுதி I, ப. 151)

பொறுமையின் சிகரமான இவ்வுலகப்பர்களைச் சான்ட்பர்க்கு நொறுங்கிப்போன எளிய தேசச் சிதைவுகள் என்கிறார்.

அமெரிக்க இலக்கியத்தில் சான்ட்பர்க்கு தொழிலாளியை ஏற்றிப் போற்றியது போல் எவரும் போற்றவில்லை. இளமை வறுமையின் காரணமாக இவருக்கு ஏற்பட்ட இன்னல்கள் தொழிலாளிகளின் துன்பங்களைப் பாரதிதாசனை விட நன்கறிய வாய்ப்பாக இருந்தது. இவரின் பாடல்களிலும் ஆலைத்தொழிலாளி, செங்கல் சூலையில் வேலை செய்வோர், கட்டடம் கட்டும் தொழிலாளி, மீன் விற்போர், பணிபுரியும் பெண்கள், சிறார்கள் போன்ற பலரையும் காணலாம். இவர்களின் ஏக்கப் பெருமூச்சுக்களைப் பாடலாக்கிக் காட்டியுள்ளார். வறுமையையும் பொறுமையையுமே உழைப்பின் பரிசாக இவர்கள் பெறுகிறார்கள் என்பதனைப் பாரதிதாசனைப் போல கூறி, இவர்கள் 'இந்நாட்டின் நொறுங்கிப்போன எளிய தேசச் சிதைவுகள்' என்கிறார். இதனை 'மக்கள் கூட்டம் (masses) என்ற பாடலில்

"மக்களிடையே திரிந்து நான், நீலப்படலமும் குத்திட்ட செம்பாறையும் கண்டு வியப்பில் மூழ்கினேன்.

ஒன்றையொன்று உந்திக் கொண்டு வருவதாய், முடிவற்றதாய் அடுக்கடுக்காய் வரும் அலைத் தொடர்ச்சியைக் கடற்கரையில் கண்டு நான் மௌனமாய் நின்றேன்.

புல்வெளியில் விண்மீன்கள் கீழ்நின்று சப்தரிஷி மண்டலம் தொடுவானத்தின் தொலைவில் உள்ள புல்வெளியைக் கவிகின்ற காட்சியை நான் கண்டபோது எண்ணங்கள் நிறைந்து நின்றேன்.

பெரிய மனிதர்கள், போர் உழைப்பு ஆகியவற்றின் ஊர்வலங்கள், படைவீரர்கள் தொழிலாளிகளின் குழந்தைகளை ஏந்திநிற்கும் தாய்மார்கள் இவர்கள் அனைவரையும் நான் தீண்டினேன்.

கோடான கோடி ஏழையர் குத்திட்ட செம்பாறைகள், அலைகள், விண்மீன்களை விட அதிகம் பொறையுடையவர்களாக இருப்பதைக் கண்டேன்.

இவர்கள் அனைவரும் இந்நாட்டின் நொறுங்கிப்போன எளிய தேசச் சிதைவுகள் ."

(சான்ட் பர்க்கின் அனைத்துப் பாடல்
தொகுதி, ப.3-4)

போலிச்சமயவாதிகளைக் கண்டிக்கும் நிலை :

பாரதிதாசனும் சான்ட் பர்க்கும் சமயக் கருத்தில் முரண்பட்ட போக்குடையவர்களாக இருப்பினும் மக்கள் நலனுக்குழைந்த சமயவாதிகளைப் போற்றுவதிலும் மக்களை மடையர்களாக்கும் போலிச் சமயவாதிகளைக் கண்டிப்பதிலும் ஒத்த கருத்துடையவர்களாக விளங்குகின்றனர்.

பாரதிதாசன் தொடக்க காலத்தில் கடவுள் பற்றுடையவராகவும், பெரியாரின் தாக்குரவிற்குப் பின் கடவுள் மறுப்புக் கொள்கையாளராகவும் மாறினார். தன் வாழ்நாள் முழுதும் நாத்திகராகவே வாழ்ந்தார். மக்களின் பகுத்தறிவுக் கொள்கையைக் கொன்றுவிட்டு

கடவுள் கற்களாக நிற்கின்றார் என்றும், இதனால் சாதி, சமயம், புரோகிதம், பார்ப்பனீயம் போன்றன வளர்ந்தன என்றும், இதனால் தமிழ்ச் சமுதாயம் சீர் அழிந்தது என்றும் கருதுகிறார். இருப்பினும் மக்களுக்கு உழைக்கும் உழைப்பே கடவுள் என்றும், அக்கடவுளுக்கு உருவம் இல்லை என்றும் கருதுகிறார்.[16] மக்களை நல்லாற்றுப் படுத்த வேண்டிய சமயவாதிகள் போலிச் சமயவாதிகளாகி விட்டமையால் போலிச் சமயவாதிகளைக் கண்டிக்கிறார். ஆனால் தமிழுக்கு உழைத்த குமரகுருபரரையும், சமதர்மச்சமுதாயம் காண விழைந்த இராமலிங்க அடிகளையும், மானுடம் வாழ உயிர் துறந்த ஏசுநாதரையும் போற்றத் தவறவில்லை.

சான்ட்பர்க்கு கடவுள் ஏற்புக் கொள்கையுடையவர். இவர் கிருத்துவ மதத்தைச் சார்ந்தவர். இளமையில் தோன்றிய சமய உணர்வு இறுதி வரையிலும் மாறாநிலை பெற்றிருந்தது. இவ்வுலகம் கடவுள் தந்த கொடை என்று கருதினார். ஏசுவின் மனிதநேயத்தை ஏற்றிப் போற்றுகிறார்.

இருவரும் மானுடம் வாழ உயிர் துறந்த ஏசுவைப் போற்றுகின்றனர். ஏசு மனிதநேயம் செழிக்க மானுடம் வாழ வாழ்ந்தவர் என்கின்றனர். ஏசுவின் பெயரால் பல போலி மதவாதிகள் தோன்றி மக்களைத் துன்பத்திற்குள்ளாக்கி வருகின்றனர் என்கிறார்கள். இதனைப் பாரதிதாசன் 'ஏசு பொழிந்த தெள்ளமுது' என்ற பகுதியில்

மேதினிக்குச் சேசுநாதர் எதற்கடி தோழி - முன்பு
வெம்மை கொள் மக்களைச் செம்மை புரிந்திடத் தோழா அவர்

காதினிக்கும் படி சொன்னசொல் ஏதடி? தோழி - அந்தக்
கர்த்தர் உரைத்தது புத்தமுது என்றறி தோழா...

சொல்லிய யேசுவின் தொண்டர்கள் எங்கடி? தோழி - அந்தத்
தொண்டர்கள் உள்ளனர் தொண்டு பறந்தது தோழா - - - - -
....... ........ அடி

எல்லையில் பேதம் இழைத்தது தான் எவர் தோழி - அட
இந்த நெடுஞ்சட்டை அந்தகரே அறி தோழா.

(பாரதிதாசன் கவிதைகள் தொகுதி I, பக் 162-63)

ஏசுவின் கருத்தினைப் பாரதிதாசன் போல் சான்ட்பர்க்கும் ஏற்கிறார்.

ஏசு காண இனியவர், மோக்க இனியவர், பொறுமையாகச் செவி மடுப்பார்,

அவர் உடலினின்றும் புதியதும் அழகுடையதுமான எதையேனும் வீசிக் கொண்டே இருப்பார். செல்லும் போது அன்போடு தொட்டுச் செல்வார்.

( சான்ட்பர்க்கின் அனைத்துப் பாடல் தொகுதி, ப. 29)

பாரதிதாசனைப் போல் போலிப் பாதிரிமார்களையும் சாடத் தவறவில்லை. போலிப் பாதிரிமார்களை நோக்கி,

ஏசுவைப் பற்றி இரைச்சலிட்டும். . . உன் சட்டையைக் கிழித்துக் கொண்டும் வருகிறாய்.

இந்தச் சரக்கை நீ எங்கு பெற்றாய்?

ஏசுவைப் பற்றி உனக்கு என்ன தெரியும் ?

*(சான்ட்பர்க்கின் அனைத்துப் பாடல் தொகுதி, ப. 29)*

என்று கேட்கிறார்.

உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் பாதிரியார்களா? என்று இருவரும் வினவுகின்றனர். என்றோ ஒருநாள் யூதர்கள் ஏசுபிரானைச் சிலுவையில் அறைந்தனர். ஆனால் இப் போலிப் பாதிரிமார்கள் அன்றன்று ஏசுவைச் சிலுவையில் அறைகிறார்கள். அன்புப் பிழம்பான ஏசுவின் பெயரால் அஞ்சாமல் தீமை புரிகின்றனர். உழைப்பை மதித்த ஏசுவின் பெயரைச் சொல்லி உழைக்காமல் எத்திப்பிடுங்கும் எத்தர்களாக இவர்கள் உள்ளனர் என்று இருவரும் கருதுகின்றனர். பாரதிதாசன் கிருஸ்துவக் குருமார்களோடு ஏனைய போலி மடாதிபதிகளையும் கண்டிக்கிறார். சான்ட்பர்க்கு கண்ட சமுதாயத்தில் அதற்கு வாய்ப்பில்லை.

## இயற்கையை நோக்கும் நிலை :

பாரதியின் பாதையில் பாடல் எழுதப் புகுந்த பாரதிதாசன் பாரதியைவிட இயற்கையைப் பாடுவதில் மிஞ்சி விடுகிறார். இயற்கையைச் சக்தியின் உறைவிடமாகக் கண்டவர் பிற்காலத்தில் பௌதீக ஆற்றலாகக் கண்டார். இயற்கையைச் சார்புப் பொருளாகக் கண்ட தமிழிலக்கியப் போக்கையும் உடன்பட்டு இயற்கையை முதற்பொருளாகக் கொண்ட முழு முதல் நூலைக் கண்ட புதியவராகவும் விளங்குகிறார். நசீம்தீன் கூறுவதுபோல இயற்கைப் பாடலில் ஒரு புதிய மரபினையே தோற்றுவித்த இயற்கைக் கவிஞராகப் பாரதிதாசன் விளங்குகிறார்.[17] வால்ட் விட்மன், எமிலி டிக்கன்சன் போன்றோர் மீது கொண்ட ஈடுபாடும், புல்வெளி நகரமான கேல்ஸ் பர்க்கில் சிறு வயதுமுதல் கண்ட கவின் மிகு இயற்கைக் காட்சிகளும், வறுமையில் துவண்ட போதெல்லாம் இயற்கையின் பேரமைதி தந்த இதமான இன்பமும் சான்ட்பர்க்கை இயற்கையைப்பாடும் கவிஞனாக்கின. இவரின் பாடல்கள் மூன்றில் ஒரு பங்கு இயற்கை பற்றிய பாடல்களாக உள்ளன. விட்மனைப் போல இயற்கையில் தெய்வீகத்தைக் கண்டார்.

பாரதிதாசனும் சான்ட்பர்க்கும் 'இயற்கை கண்ணிற்கினிய சோலையாக மட்டுமல்லாது கனிதரும் தோப்பாகவும் இருக்க வேண்டுமென்ற நிலையில் இயற்கையை அழகுக் கருவூலமாகவும் கருத்தை ஏற்று முழங்கும் மேடையாகவும் கருதினர்.

## கடலலைக் காட்சி :

கடலலையை வருணனை செய்வதில் இருவரும் ஒன்றுபட்டு விளங்குகின்றனர். கடற்கரை ஓரத்தில் எழுந்து விழும் கடலலை 'கல்வி நிலையத்தின் இளைஞர் போலப் பூரிப்பால் ஏறும் வீழும்; புரண்டிடும்' என்கிறார் பாரதிதாசன். இளைஞனின் உள்ளம் உணர்வுக் களஞ்சியமாக இருக்கும். இன்ப உணர்வில் பூரிப்பதும் துன்பத்தில் துவள்வதும் இயற்கை. கடலலை எழுச்சியையும் வீழ்ச்சியையும் இளைஞனின் உள்ளத்தோடு ஒப்பிடுகிறார். இதற்கு மேலும் விளக்கம் தரும் வகையில் சான்ட்பர்க்கின் 'இளம் பௌவம்' (young sea) என்ற பாடல் அமைந்துள்ளது. இளைஞனின் உள்ளம் கடலலைபோல் ஓய்வின்றிச் சலனப் பட்டுக் கொண்டே இருக்கும். அதனால் அக்கடலுக்கே 'இளம்பௌவம்' என்று பெயரிடுகிறார். 'வேகத் திரைகளினால் வேதப் பொருள்பாடாமல்' இருவரும் இளைஞனின் உள்ளத்தோடு கடலலையை நோக்குகின்றனர். பாரதிதாசன் பள்ளித் தமிழாசிரியராகப் பணிபுரிந்தமையால் கல்வி நிலையத்தின் இளைஞனைக்காட்டுகிறார். சான்ட் பர்க்கோ அலைகடல் தாண்டி அமெரிக்காவில் பிழைப்புத் தேடி வந்த குடும்பத்தைச் சார்ந்தவராகையால் திரைகடல் ஓடித்

திரவியம் தேடும் ஊக்க நிலை இளைஞனுக்குத் தேவை என்பதை இப்பாடலின் மூலம் காட்டுகிறார்.

இவ்விரு கவிஞர்களும் இடத்தாலும் மொழியாலும் வேறுபட்டவர்களாக இருந்தாலும் சகோதரத்தன்மை கொண்டவர்களாக விளங்குவதனை இவர்களின் பாடல்களை ஒப்பிடுவதின் மூலம் அறிய முடிகின்றது. இலக்கிய ஒருமைப்பாடும் உலக சகோதரத்துவமும் வளர இதுபோன்ற ஒப்பாய்வுகள் துணைபுரியும்.

## அடிக்குறிப்புக்கள்

1. மன்னர் மன்னன், கறுப்புக் குயிலின் நெருப்புக் குரல், 1985, பக். 26-27.
2. Richard Crowder, Carl Sand Burg, 1964, P. 15.
3. Hazel Durnell, The America of Carl Sand Burg, 1965, p. 14.
4. பாரதிதாசன், புலவர். ந. இராமநாதனின் கவிஞரும் காதலும் நூலுக்கு எழுதிய வாழ்த்து.
5. Robert. E. Epiller, The Cycle of American Literature An essay in Historical Criticism, 1955, p. 237.
6. நா. இராமநாதன், பெரியார் ஒரு முழுப் புரட்சியாளர் , 1982, ப. 27.
7. மா. செல்வராசன், பாரதிதாசன் ஒரு புரட்சிக் கவிஞர், 1979 , பக். 17-18.
8. Carl Sand Burg, Abraham Lincoln - The Prairie years, Preface.
9. மா. செல்வராசன் பாரதிதாசன் ஒரு புரட்சிக் கவிஞர், 1982, ப. 454.
10. இலமா. தமிழ்நாவன், பாவேந்தரும் பாட்டாளியும், 1985, பக் 19-20.
11. Carl Sand Burg, The complete poems of Carl Sand Burg, 1969, Index.
12. Richard Crowder, Carl Sand Burg, 1964, P. 17.
13. Ibid, p. 17.
14. Ibid, p.17.
15. "Tamil" Indian Literature, since Independence, pp 313-14.
16. மா. செல்வராசன், பாரதிதாசன் ஒரு புரட்சிக் கவிஞர், 1958, பக். 75-76.
17. பாரதிதாசன் பாடல்களில் இயற்கை., 1973 பக்.IX..

* * *

# பாரதிதாசனின் கல்விக் கொள்கை

ப. காளிமுத்து

சமகாலத்துச் சமூகத்தின் தேவைகளையறிந்து அவற்றை நிறைவேற்றித் தருவதில் கவிஞர்கள் முன்னணியில் நிற்கிறார்கள். சமூகத்தின் சிக்கல்களைக் கண்டுணர்ந்து அவற்றைத் தீர்க்கும் கருவிகளாக அவர்கள் கவிதைகளைப் பயன்படுத்துகின்றனர். அவ்வகையில் அவர்கள் வாழும் சமூகத்தோடு தங்களை ஒன்றிணைத்துக் கொள்கின்றனர். பாரதிதாசன் காலத் தமிழகத்தில் நிலவிய கல்விச் சிக்கல், அதைத் தீர்க்க அவர் கூறும் வழிமுறைகள், கவிஞரின் கல்விக் கொள்கை முதலானவை இங்கு ஆராயப் படுகின்றன.

## பண்டைக் கல்வி முறை :

பழந்தமிழகத்தில் கல்வி எல்லோருக்கும் பொதுவாயிருந்தது. எல்லோர்க்கும் எளிதில் எட்டும் நிலையில் இருந்தது. பொன்வாணிகர், பொற்கொல்லர், மருத்துவர், முடவர், தச்சர், கணக்காயர், கணியர், கொற்றர், அறுவை வாணிகர், கூத்தர், கொல்லர், குறவர் முதலான அனைத்துத் தொழிற்பிரிவு மக்களும் கல்வியிற் சிறந்து விளங்கியமையைச் சங்க இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன. இவர்களில் பெண்பாற் புலவர்கள் மட்டும் முப்பதின்மர் ஆவர்[1]. இவ்வாறு மக்கள் எல்லோரும் கல்வியிற் சிறந்து விளங்கியமையால் 'அறிவுடையோரை அரசு விரும்பியழைத்ததோடு அறிவுடையோனாறு அரசும் சென்றது[2]. அறிவுடைமை பொது வுடைமையாய் இருந்தமையால் அற்றை நாள் தமிழகத்தில் கல்வி, கணக்காயர்களை, கலைஞர்களை, தலைவர்களை, அறிவியல் அறிஞர்களைத் தோற்று வித்தது[3]. கல்லணை கட்டப் பயன்பட்ட பொறியியல் அறிவு, கப்பல் கட்டிப் படையமைக்கவும் கடல் வாணிகம் நடத்தவும் பயன்பட்ட தொழில் நுட்பம், இமயம் வரை படைநடத்தவென்று வந்த போரியல் அறிவு ஆகியவற்றை அற்றைக் கல்விமுறை வழங்கியமைக்கு - அது எல்லார்க்கும் பொதுவாயிருந்த மையும், எல்லோர்க்கும் எளிதில் கிட்டியமையும் தாய்மொழியில் அமைந்து விளங்கியமையும் தலையாய காரணங்கள் எனலாம். இவ்வாறு எல்லாம் இருந்தமையால் அது எழில் மிகுந்த தமிழகமாய் இலங்கியது[4].

## குறிகாரர் தொகை கூடியதேன்? :

பல்வேறு நாகரிகப் பண்பாட்டுப் படையெடுப்புகளுக்கு, தமிழகம் ஆட்பட்டமையால் தமிழ் மக்களின் கல்வி முறையில் பெரும் மாற்றம் ஏற்பட்டது. ஆட்சி மொழியாக - கல்விமொழியாக இருந்த தமிழ் அவ்விடங்களிலிருந்து அகற்றப்பட்டு அயல்மொழிகள் அரியணை ஏறின. அயல்மொழிகளின் ஆதிக்கம் ஏற்பட்ட போது 'கல்வி ஒரு சாரார்க்கே' என்று ஒதுக்கப்பட்டது. ஆதலால் 'கைக்குறிகாரர்' கணக்கு ஆண்டு தோறும் அதிகமாயிற்று. 'எழில் மிகுந்த தமிழகம்' புழுதி படிந்து பொல்லாங்கடைந்து தாழ்ந்து போனமைக்குக் கல்வியில்லாமையே காரணம்[5]

என்று பாரதிதாசன் கருதுகிறார். கற்றோரும் தாம் கற்றதைப் பிறர்க்குக் கற்றுத்தரவில்லை. சமூகத்தில் பெரும்பான்மையினராக இருந்த உழைக்கும் மக்கள் கல்வி பெறுவதற்குத் தகுதியற்றவர்கள் எனத் தள்ளப்பட்டனர்.

### உழைக்கும் மக்கள் ஒதுக்கப்பட்டதேன்? :

உழைக்கும் மக்கள் கல்வியறிவு பெறக்கூடாது என்றே திட்டமிட்டு அவர்கள் புறக்கணிக்கப்பட்டனர். அவர்கள் "கல்வி இல்லாமல் இருந்தால் தானே பயிரிட்டு உழைத்து, அறுத்து, மூட்டையாகத் தைத்து, வண்டியில் போட்டு நகரத்துக்கு அனுப்பிவிட்டு, சாவியாய்ப் போன தானியத்தை வீட்டுக்கு எடுத்துக் கொண்டு போய், கஞ்சியாகக் காய்ச்சி, கலயத்தில் ஊற்றி, பிள்ளை குட்டிகளைச் சுற்றிலும் உட்கார வைத்துக் கொண்டு இன்று கடவுள் நமக்கு இவ்வளவு கொடுத்தார் என்று வாழ்த்துப்பாடி எருமைமாடு தவிட்டுத் தண்ணீர் குடிப்பது போல வயிறு முட்டக் குடிக்கமுடியும்".[6] என்று பெரியார் காரணம் கூறுவது முற்றிலும் பொருத்தமானதாகும்.

விரிந்த வானம் வெண்ணிலாவால் சிறப்புப் பெறுகிறது. பூவோ மணத்தால் பெருமை பெறுகிறது. ஆனால் 'இத்தரையோ தானறிந்ததைப் பிறர்க்குச் சாற்றும் அருமை மக்களால் பெருமை பெறுகிறது.' என்பார் பாரதிதாசன். தாம் கற்ற கல்வியை மற்றவர்க்கு நல்கும் மனமே நல்ல மனம்! செல்வத்துப் பயன் ஈதல் என்பதைப் போல் நடுவூருள் பழுத்திருக்கும் நல்ல கனிமரத்தின் பயன்பாட்டைப்போல் கற்றோர் பயன்படல் வேண்டும். ஆனால் தமிழகத்தின் நிலையோ தலைகீழாக இருந்தது.

தாம் கற்றதைப் பிறர் உணர விரித்துரைக்க விரும்பாத நாறாமலர்கள் நாட்டில் வளர்ந்தமையால் சிறப்பு வாய்ந்த சித்த மருத்துவம் சீரழிந்து போயிற்று. தமிழ் மக்களின் சிந்தனைச் சிறகுகள் வெட்டப்பட்டு அவர்தம் அறிவியல் வாழ்க்கை முடமாக்கப்பட்டது. இதனால் மூட நம்பிக்கையின் கை ஓங்கிற்று. பள்ளத்தில் வீழ்ந்து கிடந்தவர்களை மீட்பதற்கு மேட்டில் நின்றவன் முன்வரவில்லை. இருளில் சிக்கியிருந்தோரைக் கண்டு வெளிச்சத்தில் நின்றவன் வேடிக்கை காட்டினான்.

> கற்றவர் கல்லாரிடத்துக் கல்வியைப்
> பரப்ப முன்வரவில்லை, பாழிருள்
> விட்டு மீண்டவர் பிறரை மீட்கிலர்;
> கற்றவர் சிலர் கல்லாதவர் பலர்
> என்னும் இழிவு நாட்டில் இருக்கலாம்
> என்பது கற்றவர் எண்ணம் போலும்![7]

என்று கல்லாதவர்பால் இரக்கம் காட்டுகிறார் பாரதிதாசன். வரலாற்றுப் பின்னணியில் இத்தகைய கவிதைகளை ஆய்வு செய்தல் வேண்டும்.

### கவிஞர் காலத்தில் கற்றவர் தொகை :

பாரதிதாசன் காலத்தில் தமிழ்நாட்டில் கற்றவர் தொகை ஏறக்குறைய 20% எனலாம். இவர்களில் 10% பேர் கையெழுத்துப் போடுமளவு கல்வி கற்றவர் என்று கூறுவதே பொருத்த முடையதாகும். எஞ்சிய 10% பேர் நன்கு படித்தவர்கள் உயர்ந்த பதவிகளில் இருந்தவர்கள். அரசுப் பணியில், கல்வித் துறையில் இவர்களின் ஆதிக்கம் எவ்வாறு இருந்தது என்பதை கல்வித்துறையில் நெடுங்காலம் பணியாற்றிய நெ.து.சு. பட்டியல் போட்டுக் காட்டுகிறார்[8]. ஆங்கிலேய ஆளும் வர்க்கம் அஞ்சும் அளவிற்கு இவர்கள் ஆதிக்கம் இருந்தது என்பதை

மேலைநாட்டு ஆராய்சியாளர்கள் குறிப்பிட்டுக் காட்டுகின்றனர்[9]. இந்த நிலையை மாற்றியமைப்பதற்கான வழிமுறைகளைப் பாரதிதாசன் சிந்தித்துப் பார்க்கிறார்.

'எல்லார்க்கும் வாக்குரிமை இருக்கும் நாட்டில் எல்லார்க்கும் கல்வி இருக்க வேண்டும். இல்லாதவர் என்போர் கல்வி இல்லாதவரே; உடையவர் என்பவர் கல்வி உடையவரே'[10], என்னும் நிலையை ஏற்படுத்த வேண்டும் என்று பாரதிதாசன் புதிய விளக்கம் கொடுக்கிறார்.

### கட்டாயக் கல்வி :

கல்வி எல்லார்க்கும் பொது என்று ஆன பின்னரும் எல்லார்க்கும் கற்பதற்கான சூழலை ஏற்படுத்திக் கொடுத்த பின்னரும் எல்லாரும் கற்க முன்வரவில்லை. ஏன் எனில் கல்வியைப் பற்றிய மக்கள் கண்ணோட்டம் வேறுவிதமாயிருந்தது. ஆதலின் கல்வியைக் கட்டாயமாக்க வேண்டும் என்று கவிஞர் விரும்பினார். மக்களிடம் படிந்துள்ள கறைகளும் குறைகளும் போகாமைக்குக் கட்டாயக் கல்வி இல்லாமையே காரணமாகும் என்பது அவர் கருத்து.

கறைகள் போகா திருப்பதென்ன?
கட்டாயக் கல்வி கிட்டாமை தான்!

என்றும் 'கல்விதான், எல்லார்க்கும் கட்டாயம் வேண்டும்'[12] என்றும், 'கட்டாயம் கல்வி பயில்'[13] என்றும் பாரதிதாசன் கல்வியைக் கட்டாயப் படுத்துகிறார்.

'கல்வியறிவில்லாமல் பெறும் விடுதலையைக் கவிஞர் விரும்பவில்லை. கடடாயக் கல்வி இல்லையேல் இங்கு உள்ளதும் போய்விடும்.' என்று கருதுகிறார்[14] கட்டாயக் கல்வியை நல்குவதோடு மக்களுக்கு உடல் நலம் பற்றிய அறிவையும் கற்றுத்தரவேண்டும். அப்போதுதான் அவர்கள் அல்லல் அகலும்,[15] பயிர்களுக்கு நோய்வந்தால் உடனே மருந்து தெளித்து நோயைப் போக்க நினைக்கும் தமிழன் தன் குழந்தைக்கு நோய் வந்தால் இன்றும் வேப்பங் குழையடிக்க ஓடுகிறான். ஆதலால் உடல் நலம் பற்றிய அறிவை ஊட்ட வேண்டும் .

நாட்டை ஆள்வோர் கடமை மக்களுக்கு உணவு, உடை, உறையுள், நல்ல கல்வி ஆகியவற்றை நல்குதலாகும். இவற்றை நல்குவோர் மாட்சிமைக் குரியோர் என்று பாரதிதாசன் அவர்களைப் போற்றுகிறார் மேற்குறித்த நான்கனுள் கல்வி மிக இன்றியமையாதது. கல்லார் கடைப்பட்டவர் ஆதலின் அவர்களை முன்னேற்றக் கட்டாயக் கல்வி தேவை.

கல்லார் கடைப்பட்டார் ஆதலினால் கல்வி தான்
எல்லார்க்கும் கட்டாயம் வேண்டுமால் - இல்லார்க்கோ
ஊணுடை நல்ல உறையுள் படிப்பளித்தல்
மாணுடை மன்னர் கடன்.[16]

என்று கவிஞர் பாடுகிறார். இவ்வாறு 'கட்டாயக் கல்வியை' வற்புறுத்திக் கவிஞர் பாடும் இடங்கள் பலவாகும். இதற்கான சமுதாயச் சூழல் எவ்வாறு இருந்தது என்பதை விரிவாக ஆராய்ந்து, அதன் பின்னணியில் பாரதிதாசனின் கட்டாயக் கல்வி பற்றிய கருத்துக்களைத் தேர்ந்து தெளிய வேண்டும்.

### கல்வி எதற்காக ? :

கல்வியைப் பற்றிய சரியான அறிவும் தெளிவும் நம் மக்களுக்கு இல்லை. கல்விக்காக என்று வினவினால் அவர்கள் தரும் விடை நம்மை வியப்பிலாழ்த்தும். கல்வி என்பது மனிதனைப்

பெரிய பதவிகளில் அமர்த்தவும் ஊதியம் திரட்டுவதற்கான-பணம் தேடுவதற்கான ஒரு வழியாகவும் மட்டுமே பயன்படுகிறது. மனிதனை அறிவாளியாக்கச் சிந்தனையாளனாக மாற்றத் தற்காலக் கல்விமுறை பயன்படவில்லை.

" இப்போதுள்ள கல்விக் கூடம் எதற்காக இருக்கிறது? மக்கள் அறிவு பெற வேண்டும். ஒழுக்க முடையவர்களாக இருக்க வேண்டும் என்பதற்காகக் கல்வி தரவில்லை கல்வித் திட்டமும் இவைகளைப் போதிப்பதாக இல்லை. அவர்கள் படிப்பதெல்லாம் பிழைப்பதற்கு ! மண்வெட்டி எடுக்காமல், பேனா பிடித்தெழுதிச் சம்பாதிக்கும்படியான வழியைத் தேடுவதற்கேயாம்"[17] என்று பெரியார் தற்காலக் கல்விமுறை பற்றிக் குறிப்பிடுகிறார்.

மேலை நாடுகளில் கல்வி, சிந்தனைத் திறனை வளர்க்கும் வகையில் விளங்குகிறது: அறிவியலையும் ஆராய்ச்சியையும் அடிப்படையாய்க் கொண்ட கல்வி அங்குள்ளோர்க்கு வழங்கப்படுகிறது. ஆதலால் அறிவியலில் நாள்தோறும் புத்தம் புதிய சாதனைகள் நிகழ்த்தப் படுகின்றன. இங்கு, தின்றதையே தின்று வாந்தி எடுக்கும் நிலை நம் கல்வி முறையில் அமைந்து கிடக்கிறது.

கல்வி மக்களுக்குப் பகுத்தறிவையும் தன்மான உணர்ச்சியையும் தரவேண்டும். மக்களின் வாழ்வு மேம்படுவதற்கான நேர்மையான தொழில் செய்யவும் அலுவல்பார்க்கவும் அது பயன்படவேண்டும்.[18] மேலும் உரிமை உணர்ச்சி உடைய மக்களாக வாழ்வதற்கு அவர்களைத் தகுதிப் படுத்துவதற்குக் கல்வி உதவ வேண்டும். [19].

இத்தகைய கருத்துக்களின் தாக்கத்திற்காளான பாரதிதாசன் இவற்றை அப்படியே தம் கவிதைகளில் எதிரொலிக்கிறார். நம் நாட்டுக் கல்வி நிலை எவ்வாறு இருக்கிறது என்பதைக் கவிஞர்.

> கல்வியில் வீரம் கடுகும் இல்லை
> கூனிக் கொட்டாவி விட்டு விட்டுப்
> போன உயிர் போல் பொழுது போக்கினர்
> ஒழுக்கம் பழுத்தது விழுப்பம் வீழ்ந்தது![20]

என்று வருந்திப் பாடுகிறார். பள்ளிகளில் மேன்மைதரும் முறைகளைக் காணமுடியவில்லை. கவலை தரும் நடைமுறைகள் மாறிக் கல்விமுறை நன்முறையானால்தான் நாம் நலம்பெற முடியும்.[21] மக்களுக்கு அறிவையும் உரிமை வேட்கையையும் தரக்கூடிய கல்வியே உண்மையான கல்வி என்று கவிஞர் கருதுகிறார். [22].

## படிப்பினால் வரும் பயன் :

கல்வியால் வரும் நன்மைகள் கணக்கிலவாகும். 'கல்வி இருட்டிற்குக் கலங்கரைவிளக்கு என்றும் இருள் நீங்கக் கல்வி வேண்டும்' [24] என்றும் கவிஞர் குறிப்பிடுகிறார்.

> எது பொருள் என்னும் இருவிழி இலாரும்
> படித்தால் அவர்க்குப் பல்விழிகள் வரும்
> ஊமையும் கற்க; ஊமை நிலைபோம் !. . .
> கையும் காலும் இல்லான் கற்க
> உய்யும் நெறியை உணர்ந்து மேம்படுவான்![25]

இவ்வாறு கல்வியால் வரும் நன்மைகளைக் கவிஞர் அடுக்கிக் கொண்டே போகிறார். எல்லாவற்றிற்கும் மேலாகக் கற்றவனுக்குச் சமூகத்தில் உயர்ந்த இடம் கிடைக்கிறது என்பதனைப் பாரதிதாசன் மிக எளிமையாக எல்லோர்க்கும் புரியும் வண்ணம் பாடுவது சுவைபயப்பதாய் உள்ளது.

கல்லாத மூடனை 'வா' என்பார் : கற்றவனை
எல்லாரும் 'வாருங்கள்' என்றழைப்பார். [26]

இது நடைமுறையில் நாம் காணும் உண்மையாகும். கற்றவர்க்குச் சமூகத்தில் தகுதியும் மதிப்பும் உயர்ந்து விடுகின்றன. ஆதலால் எக்குறை நேரினும் நிற்காது கற்க என்கிறார் கவிஞர்.

மேலும் கல்லாதவன் பேராற்றல் பெற்றவனாக விளங்கினாலும் உண்மையில் அவன் வலிமையில்லாதவனே. ஏன் எனில் அவன்பால் எல்லா நோய்களும் எப்போதும் உண்டு. ஆதலால் அவன்,

இடிக்குரற் சிங்கநேர் இறையே எனினும்
படிப்பிலாக் காலை நொடிப்பிலே வீழ்வான். [27]

என்று கவிஞர் பாடுகிறார். ஆகவே மனிதனுக்கு உண்மையான வலிமையைத் தருவது கல்வியாகும் என்று கவிஞர் கருதுகிறார்.

## குழந்தைப் பள்ளிகள் :

நம் நாட்டில் குழந்தைகளைப் பெறுவதோடு பெற்றோர் கடமை முடிந்துவிட்டதாக நினைக்கின்றனர். குழந்தைகளை எவ்வாறு அறிவு சான்றவர்களாய் வளர்ப்பது? ஏன் கல்வி புகட்ட வேண்டும்? என்று பெற்றோர்க்குத் தெரியாது. 'ஏதோ தம் பிள்ளை படிக்கவேண்டும். என்பார்களே தவிர ஏன் கல்வி கற்க வேண்டும் என்று தெரியாது. படிக்கும் பிள்ளைகளோ எதற்காகப் படிக்கிறோம் என்பதைத் தெரிந்து கொள்ளாமலேயே படிக்கிறார்கள்[28] இந்த நிலையை மாற்றிட வேண்டும் என்று கவிஞர் விரும்புகிறார். குழந்தைகளின் சிந்தனை ஆற்றலை வளர்க்க நல்ல குழந்தைப் பளளிகள் தேவை[29]. குழந்தைகளுக்கு அகவை இரண்டானவுடன் அக்குழந்தைகளை

இரண்டாண்டான பின் இந்தா என்று
குழந்தையைப் பள்ளிக்குக் கொடுத்து விடுக[30]

என்று பாரதிதாசன் அறிவுறுத்துகிறார். குழந்தைகள் நல்ல சூழலில் - இனிய சூழலில் வளர்வதைக் கவிஞர் விரும்புகிறார்.

## பெண் கல்வி :

பெண்கல்வியின் இன்றியமையாமையை வலியுறுத்திப் பாரதிதாசன் பல பாடல்களைப் பாடியிருக்கிறார் அவர் படைத்துள்ள பெரும்பாலான பெண்மாந்தர் அறிவுக்கூர்மை மிக்கவர்களாகக் காணப்படுகின்றனர். "தாம் படைத்த பெண் பாத்திரங்களைக் கூடியவரை படித்த பெண்களாக உருவாக்கியுள்ளார் கவிஞர். அந்தப் பெண்கள் தங்கள் உரிமைகளைத் தாங்களே எடுத்துப் பேசக் கூடியவர்களாகவும் உருவாக்கப்பட்டுள்ளார்கள்[31] எனும் கூற்று முற்றிலும் பொருந்துவதாகும். அறிவுள்ள பெண்கள் குடும்ப விளக்குகளாகத் திகழ்வர். அறிவற்றவள் வாழும் வீடு இருண்ட வீடு என்பது பாரதிதாசனின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும்.

பெண்களுக்குக் கல்வி வேண்டும் என்பதைச் சிறு குழந்தைகளின் மனத்தில் ஆழமாகப் பதிய வைக்க வேண்டும். என்று கவிஞர் விரும்புகிறார். 'பெண்களுக்கு நகை மீதிருக்கும் மோகம் ஒழிய வேண்டும் பெண்களுக்கு உண்மையான அணிகலன் என்பது கல்வியே யாகும். கைக்கிரண்டு வளையலும் காதுக்கொரு தோடும் அழகு தருவன அல்ல.

கற்பது பெண்களுக்கு ஆபரணம்-கெம்புக்
கல்வைத்த நகை தீராத ரணம்!
கற்ற பெண்களை இந்த நாடு - தன்
கண்ணில் ஒற்றிக் கொள்ளும் அன்போடு ![32]

என்று கவிஞர் பாடுகிறார். வருங்காலத் தலைமுறையை வளர்த்து வாழ வைக்கும் பொறுப்பு மகளிரிடமே இருக்கிறது. மனிதச் சங்கிலியின் தொடர் அறுந்து போகாது காப்பாற்றுவோரும் அவர்களே யாவர். ஆதலின் அவர்கள் அறிவுடையோராய்த் திகழ வேண்டும். கல்வியில்லாத பெண்கள் பெரிதும் துன்பத்திற்கு ஆளாவதோடு அவர்கள் பெறும் பிள்ளைகளையும் நன்முறையில் அவர்களால் வளர்க்க இயலாது. ஆதலின் அவர்களை விளைச்சலுக்குத் தகுதியற்ற களர் நிலத்திற்கு ஒப்பிடுகிறார் கவிஞர். ஆனால் கல்வியறிவுடைய பெண்கள் பண்படுத்தப்பட்ட கழனிக்கு ஒப்பானவர்கள். அவர்கள் பெறும் குழந்தைகள் நல்லறிவுடையவர்களாக வளர்க்கப் பெறுவர்.

கல்வியில் லாத பெண்கள் களர்நிலம் அந்நிலத்தில்
புல்விளைந்திடலாம் நல்ல புதல்வர்கள் விளைவதில்லை
கல்வியை உடைய பெண்கள் திருந்திய கழனி;
அங்கே நல்லறிவுடைய மக்கள் விளைவது நவிலவோ நான் !

என்பது அவர்தரும் கவிதை. 'கல்வியில்லாத மின்னாள் வாழ்வில் என்றும் மின்னாள்[33] என்று குடும்ப விளக்கிலும் இக்கருத்தினை வலியுறுத்துகிறார் பாரதிதாசன்.

பெண்கள் பிள்ளை பெறும் எந்திரங்கள். அவர்களுக்குக் கல்வி எதற்கு என்று நெடுங்காலமாக நிலவிவந்த கருத்து, ஆங்கிலேயர் வருகைக்குப் பின்னர், மேலைக் கல்வி முறை விரைந்து பரவியதாலும், பெரியாரைக் போன்ற சமூகப் புரட்சியாளர்கள் பெண்களின் உரிமைகளை மீட்டு அவர்களை மேல்நிலைக்குக் கொண்டுவர ஓயாது உழைத்தமையாலும் தவிடுபொடியாயிற்று. பெண்களைப் படிக்க வைக்க வேண்டும் என்ற எண்ணம் எங்கும் பரவியது. பெண்களைப் படிக்க வைக்கவில்லை யென்றால் ஊரார் கேலி பண்ணுவார்களே என்று பெற்றோர் அஞ்சும் நிலை தமிழகத்தில் உருவாயிற்று.

படியாத பெண்ணா யிருந்தால் -கேலி
பண்ணுவார் என்னை இவ்வூரார் தெரிந்தால்[34].

என்று ஒரு தந்தை தன் மகளிடம் பள்ளிக்குப் போகுமாறு கெஞ்சுவதைப் பாரதிதாசன் படம் பிடித்துக் காட்டுவார். கல்வியில்லாத வீட்டை 'இருண்ட வீடு ' என்று மக்களுக்கு எடுத்துக் காட்டி அத்தலைப்பில் ஒரு நூலே எழுதியிருக்கிறார்.

### முன்னோடிக் கவிஞர் :

கல்விக் கூடங்களை விரும்பிப் பிள்ளைகள் தாமே போகுமாறு அவை திகழ வேண்டும். பிள்ளைகள் பள்ளிகளை நேசிக்குமளவு இனிய சூழல்கள் அங்கு இருக்க வேண்டும். குழந்தைகள்

காலையில் எழுந்தவுடன் கல்விக் கூடங்களை நினைத்துக் கண்ணீர் சிந்தி அழுது அடம் பிடிக்குமாறு அமைந்துகிடக்கும் சூழல்களை மாற்றியமைக்க வேண்டும் என்று கவிஞர் விரும்புகிறார்[35]. இத்தகைய கல்விச் சிந்தனைகளுக்கு அவரே முன்னவர்.

முதியோர் காதல், குடும்பக் கட்டுப்பாடு, கைம்பெண் மறுமணம் ஆகியவற்றைப் பாடிய முதற்கவிஞர் பாரதிதாசன் என்று கூறுவதைப் போல் முதியோர் கல்வியைப் பாடிய முதற் கவிஞர் அவரேயாவர்.[36]

### கவிஞரின் கனவு :

தமிழ் மக்கள் எல்லோரும் கல்விகற்று அறிவியல் துறைகளில் உயர்வு பெற்று இமயம் போல் புகழ்பெற வேண்டும் என்று பாரதிதாசன் ஆசைப்படுகிறார். கணிதங்கள், வானநூற்கள், அறிவியல்நூற்கள், இலக்கியங்கள் முதலிய பல்துறை நூற்களைத் தமிழ்மக்கள் தம் தாய்மொழியில் படைக்க வேண்டும். அவற்றைப் பிறநாட்டார் 'வையத்தின் புதுமை' என்று தத்தம் புத்தக சாலைகளில் வாங்கி வைக்கவேண்டும் என்று பாரதிதாசன் விரும்புகிறார்[37]. இந்த வையம் எல்லார்க்கும் எல்லாம் என்றிருப்பதான திசைநோக்கி நடை போடுகிறது. அங்கு, கற்றவர் கல்லாதவர்க்குக் கல்வி நல்க வேண்டும் . எவன் கல்லாதவர்க்குக் கல்வி தர மறுக்கின்றானோ அவனுக்குத் தூக்குமரம் காத்திருக்கிறது என்று பாண்டியன் பரிசில் குறிப்பிடுகிறார்.

### நல்ல குடும்பம் ஒரு பல்கலைக் கழகம் :

குடும்பம் ஒரு பல்கலைக் கழகமாக விளங்க வேண்டும் என்று விரும்பியவர் பாரதிதாசன். குடும்ப உறுப்பினர் அனைவரும் கல்வியிற் சிறந்து விளங்க வேண்டும். அக்கல்வி அவர்தம் அறிவு வளர்ச்சிக்குத் தூண்டுகோலாய் அமைய வேண்டும் . ஆணும் பெண்ணும் முதியரும் இளையரும் ஓய்வின்றிக் கற்க வேண்டும் 'அறைவீடு கழகமாகவும் அவள் ஆசிரியராகவும் ' திகழ வேண்டும் அத்தகைய அறிவு சான்ற நன்மக்கள் அடங்கிய குடும்பத்தைக் கவிஞர் 'பல்கலைக் கழகம்' என்றழைக்கிறார்.[38]

பாரதிதாசனின் கல்விக் கொள்கை தனி நூலாக விரியக் கூடியது. இங்கு எடுத்துக் காட்டப் பெற்றவை மிகச் சிலவே. வரலாற்றுப் பின்னணியில் அவர் தம் கல்விக் கொள்கையை ஆராய்தல் வேண்டும். தமிழகத்தின் 'கல்வி வரலாறு' தெளிவாக எழுதப்பட்டால் மேலும் பல உண்மைகள் வெளிப்படும். அது எதிர்காலத்தைச் செப்பனிட இன்றியமையாத் துணையாகும்.

* * *

### அடிக்குறிப்புக்கள் :

1. வையாபுரிப்பிள்ளை (ப.ஆ), 'சங்க இலக்கியம்' II, ப. 143.
2. பாண்டியன் நெடுஞ்செழியன் ; புறநானூறு - 383.
3. பாரதிதாசன், 'பாரதிதாசன் கவிதைகள் ' IV, ப. 126.
4. மேலது , ப. 123.
5. மேலது.
6. பெரியார், குடிஅரசு , 11.11. 1944.

7. பாரதிதாசன் , பாரதிதாசன் கவிதைகள் IV, ப. 127.
8. நெ.து. சுந்தரவடிவேலு புரட்சியாளர் பெரியார், பக். 22-23.
9. E.F. IRSCHICK, POLITICS AND SOCIAL CONFLICT IN SOUTH INDIA, PP-19-20
10. பாரதிதாசன் பாரதிதாசன் கவிதைகள் IV, ப. 127.
11. பாரதிதாசன், இளைஞர் இலக்கியம், ப. 10.
12. பாரதிதாசன், மணிமேகலை வெண்பா, ப. 130.
13. பாரதிதாசன், ஒரு தாயின் உள்ளம் மகிழ்கிறது, ப. 99.
14. பாரதிதாசன், தேனருவி, ப. 133.
15. பாரதிதாசன், குடும்ப விளக்கு , ப. 74.
16. பாரதிதாசன், மணிமேகலை வெண்பா, ப. 130.
17. பெரியார், விடுதலை, 9.3.1956.
18. குடி அரசு, 22.8.1937.
19. விடுதலை, 27-8-1931.
20. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் IV, ப. 203.
21. பாரதிதாசன், ஒரு தாயின் உள்ளம் மகிழ்கிறது, ப. 52.
22. பாரதிதாசன், இருண்ட வீடு , ப. 46.
23. பாரதிதாசன் கவிதைகள், IV ப. 127.
24. பாரதிதாசன், குறிஞ்சித் திட்டு, ப. 21.
25. பாரதிதாசன், இருண்ட வீடு, ப. 46.
26. பாரதிதாசன், ஒரு தாயின் உள்ளம் மகிழ்கிறது, ப. 99.
27. பாரதிதாசன், இருண்ட வீடு , ப. 46.
28. பெரியார், விடுதலை, 21.3.1956.
29. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் II ப. 129.
30. பாரதிதாசன், குயில் பாட்டு, 1.2.48.
31. பாரதிதாசன், இளந்திரையன் சாலை புரட்சி முழக்கம், ப. 98.
32. பாரதிதாசன் , இசையமுது II,ப. 52
33. பாரதிதாசன், குடும்ப விளக்கு II ,70 .
34. பாரதிதாசன், இசையமுது I , ப. 50.
35. பாரதிதாசன், குறிஞ்சித்திட்டு, ப. 159.
36. பாரதிதாசன், இருண்ட வீடு, ப. 46.
37. பாரதிதாசன் கவிதைகள் I, ப.97.
38. பாரதிதாசன், குடும்ப விளக்கு, முன்னுரை.

* * *

# பாரதிதாசனும்
# பிரெஞ்சுக் கோட்பாடுகளும்

முனைவர் ச. பிரீதி

உலகில் நடைபெற்ற புரட்சிகளுக்கெல்லாம் தலையாயதாய்க் கருதப்படுவது 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் பிரான்ஸ் நாட்டில் நடைபெற்ற புரட்சி ஆகும். அங்குக் கொடியவை இவை இவை எனச் சிலவற்றை வால்டோ, ரூசா, விக்டர் மேரி கியூகோ போன்ற அறிஞர்கள் எடுத்துக் காட்டினர்.

ரூசோவின் சமூக ஒப்புநெறி ஒரு பெரும் அரசியல் கொள்கை விளக்க நூலாகப் 'புரட்சியின் புனிதநூல்' என்று புகழப்படுகிறது அந்நூலில் ரூசோ 'சுதந்திரத்துடன்மனிதன் பிறக்கிறான். அவன் எங்கும் தளைப்பட்டுக் கிடக்கிறான். யாவர்க்கும் தலைவனெனத் தன்னைக் கருதுகின்றானே ஒழிய உண்மையில் அவன் மற்றெல்லாரைக் காட்டிலும் பேரடிமையாக உழல்கிறான் என்கிறார். வால்டேரின் கவிதைகள், நாடகங்கள், கட்டுரைகள் தத்துவங்கள் விக்டர் கியூகோவின் படைப்புகள் மக்களைத் தட்டியெழுப்பின. பிரான்சு மக்கள் கொடியவர்களுக் கெதிராகக் கொலைவாளினை எடுத்து கொடுமைகளைச் சாய்த்தனர். இந்நிகழ்ச்சிதான் பிரெஞ்சுப் புரட்சி என்றழைக்கப்படுகிறது. புரட்சியின் விளைவு, பிரான்சு குடியரசாகிய இந்தப் பிரெஞ்சுப் புரட்சி உலகிற்கு வழங்கிய கொடைகள் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்பன.

புதுச்சேரி 1672ஆம் ஆண்டு முதல் பிரெஞ்சு ஆளுகைக்குட்பட்டது[3]. 250 ஆண்டுகட்கு மேலாகப் பிரெஞ்சு மக்களோடு இருந்த தொடர்பு புதுவைவாழ் இந்தியச் சமுதாயத்தில் பிரெஞ்சுப் பண்பாடு ஊடுருவிப் பாய வழி செய்தது. புதுச்சேரியில் பிறந்து வாழ்ந்த பாரதிதாசனிடம் பிரெஞ்சுப் புரட்சியின் தாக்கம் இயல்பாகவே இருந்தது. இளம் பருவத்திலேயே அக்கோட்பாடுகளாவ் தாம் கவரப் பெற்றதை,

> இது அறி வெனத் தெரிந்த நாள்முதல் புதுவையில்
> சுதந்திரம் சமத்துவம் சகோதரத்துவம்
> மூன்றும் என்னுயிர் உணர்வில் ஊறியவை[4]

என்ற அடிகளில் கூறுகிறார்.

பிரெஞ்சு மக்களைப் பொறுத்த வரையில் சுதந்திரம் அரசியல் விடுதலை. சகோதரத்துவம் என்பது சமூகச் சமத்துவம். பாரதிதாசனைப் பொறுத்தவரையில் சுதந்திரம் என்பது மக்கள் குடியரசை நிறுவுதல். சமத்துவம் என்பது சமூகப் பொருளியல் சமத்துவமாகும். சகோதரத்துவம் என்பது மனித நேயத்தை உள்ளடக்கிய சாதி முறையற்ற சமுதாயத்தைக் காணலாகும்[5].

பிரான்சைப் பற்றியும், அவர்தம் உணர்வுகள் பற்றியும் பல இடங்களில் பாடும் பாரதிதாசன் பிரான்சு நாட்டு மக்கள் கவிஞர் விக்டர் கியூகோ பற்றியும் பாடுகிறார். பிரெஞ்சுக் கலைக் கழகத்திற்குத் (பிரெஞ்சு அகாடெமி) தேர்வு செய்யப் பெற்ற விக்டர் கியூகோ மூன்றாம் நெப்போலியனால் நாட்டை விட்டுத் துரத்தப் பட்டார். 1890இல் மீண்டும் நாடு திரும்பியபின் 'ஐரோப்பிய இலக்கிய உலகில் பெருங்கிழவனாய் விளங்கினார்.[6] இவருடைய 'லெஸ் மிஸரபிள்ஸ்' என்ற நாவலைப் பற்றி லியோ டால்ஸ்டாய்' நாவல் களில் எல்லாம் மிக உயர்ந்தது என்றும் தன்னுடைய 'போரும் அமைதியும் ' என்ற நாவல் கூட அதற்கு இணையாகாது' என்று கூறுகிறார்[7]. கியூவோப் பாடும் கவிஞர்.

செல்வர் சில்லோர் நல்வாழ் வுக்கே
எல்லா மக்களும் என்ற பிராஞ்சில்
குடிகள் குடிகட் கெனக் கவிகு விக்க
விக்டர் ஃகியூகோ மேவினான் அன்றோ [8]

என்று பாடுவதில் " எல்லோருடைய உரிமைகளையும் ஒருவனுக்காக அல்லது சிலருக்காக இழப்பதற்கு மாந்தர் சமுதாய அமைப்பை ஏற்படுத்திக் கொள்ளவில்லை. தனிமனிதனுடைய சுதந்திரம் மிகப் புனிதமானது"[9] என்ற ரூசோவின் கருத்து பிரதிபலிப்பதைக் காணலாம்.

'பாரதி நாமம் வாழ்க'[10] என்ற கவிதையில் சேக்ஸ்பியர்,தாகூர், டால்ஸ்டாய் முதலான அறிஞர் வரிசையில் விக்டர் கியூகோவையும் சேர்த்து, இவர்களோடு பாரதியை ஒப்பிட்டு இவர்களெல்லாம் தத்தம் சொந்த நாட்டில் நல்ல செயல் செய்தவர்கள் என்று புகழ்கிறார்.

நாளை நடப்பதை மனிதன் அறியானென்று
நல்லகவி விக்தர் யுகோ சொன்னான்[11]

என்று பாராட்டுவதில் அவர் மீது கவிஞர் கொண்டிருந்த மதிப்பு தெரிகிறது.

'பாரிசு விடுதலை நாள் விழா' என்ற பாடல் பிரான்சு முடியரசுக்கு முடிவுகண்டு குடியரசாக மாறியதைக் குறிக்கும் பாடல் ஆகும். இதில்,

பிறப்புரி மைகாண் பார்க்கும்
விடுதலை எனப் பிழிந்த
நறுந்தேனை எங்கும் பெய்தாய்,
நால்வகைச் சாதியில்லை.
தறுக்குறும் மேல்கீழ் இல்லை
சமம்யாரும் என்றாய், வானில்
அறைந்தனை முரசம், 'மக்கள்
உடன்பிறப் பாளர் என்றே[12]

என்று பிரான்சின் மூன்று கோட்பாடுகளையும் உள்ளடக்கி வாழ்த்துவதன் மூலம் சாதிப் பிரிவுகளால் பிளவுண்டு கிடக்கும் இந்தியச் சமுதாயத்தையே சுட்டிக் காட்டுகிறார்.

சஞ்சீவி பர்வதத்தின் சாரல் என்ற நெடுங்கவிதையில் குப்பனும் வஞ்சியும் மூலிகையைத் தின்று வையத்து மாந்தர்கள் பேசுவதை நேரில் அவர்கள் பேசுதல் போலச் செந்தமிழில் கேட்கிறார்கள். பிரான்சிலுள்ள உணவு விடுதிக்கு இத்தாலி நாட்டினன் வருகின்றான்.

அவனால் பிரெஞ்சுக் கருப்பனைச் சகித்துக் கொள்ள முடியவில்லை. விடுதி உரிமையாளரிடம் சென்று கருப்பு மக்களுக்காகத் தனிவிடுதி அமைக்கக் கூறும் போது விடுதியாளன் கண்டித்துப் பேசுகிறான்.

> *இத்தாலிச் சோதரனே! என்ன மதியுனக்கே?*
> *செத்து மடிவதிலும் சேர்ந்து பிறப்பதிலும்*
> *இவ்வுலக மக்களிலே என்னபேதங் கண்டாய்?*
> *செவ்வை பெறும் அன்பிலார் தீயபேதம் கொள்வார்*
> *எங்கள் பிராஞ்சியர்கள் இப்பேதம் பாராட்டித்*
> *தங்கள் பழங்கீர்த்தி தாழ்வடைய ஒப்பார்கள்.*
> *பேதபுத்தி சற்றும் பிடிக்காது போ ! போ! போ!*
> *பேதம் கொண் டோர்க்குப் பிராஞ்சில் இடமில்லை*[13].

இப்பாடலில் 'தங்கள் பழங்கீர்த்தி தாழ்வடைய ஒப்பார்கள்' என்ற வரி அவர்களின் சுதந்திர எண்ணத்தையும், முதல்வரி சகோதரத்துவத்தையும் மற்ற அடிகள் சமத்துவத்தையும் இவை இல்லோர் மீது கொண்ட வெறுப்பையும் புலப்படுத்துகின்றன.

இன்னொரு உணவு விடுதிக் காட்சி. 'தமிழர்க்கு வாழ்க்கைச் சுவை எது?' என்ற கவிதையில் ஓர் உணவுச் சாலையில் ஆடம்பர உடையணிந்த தமிழன் எளிய உணவுண்ணும் பிரெஞ்சு வணிகனைக் காண்கிறான். அவனிடம் சுவையில்லா உணவு உண்பதுதான் பிரெஞ்சு மக்களின் பழக்கமா? எனக் கேட்கிறான். அதற்குப் பிரெஞ்சுக் காரன்,

> *பிறந்த உம் நாட்டைப் பிறன் ஆள் கின்றான்*
> *வாழ்க்கையில் சுவையும் வாய்ப்ப துண்டோ?*
> *வாழ்க்கைச் சுவையிலான் வாய்ச்சுவை யுடையனோ?*
> *இன்றுநீர் உண்டதில் என்சுவை கண்டீர் !*
> *கமழ்புனல் ஆடினீர், அமிழ்துண வுண்டீர்*
> *நீர் ஓர் அடிமை என்பதை நினைந்தீரோ!*[14].

என்று கேட்பதுபோலப் பாடும் இவ்வடிகளில் கவிஞருக்கு அடிமைத் தனத்தின் மீதிருந்த வெறுப்பும், விடுதலை விருப்பும் புலனாகிறது.

முடியாட்சியின் கோணல்களைக் குருமார்களின் வஞ்சகக் கொடுமைகளை வால்டேரின் எழுத்துக்கள் வெளிச்சத்திற்குக் கொண்டு வந்தன[15]. இவரைப் போன்றே 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஜூல்ஸ் ஃபேர்ரி (**Jules Ferry**) கல்வித் துறையைச் சமய ஆதிக்கத்திலிருந்து மீட்டு அரசாங்கத்தின் பொறுப்பில் கொண்டு வந்தார். இவருடைய நூற்றாண்டு விழா புதுச்சேரியில் கல்வித் துறைத் தலைவர் முன்னிலையில் கொண்டாடப் பட்டபோது, கவிஞர் ஜூல்ஸ் ஃபெர்ரி பற்றி எழுதிய,

> வறியோர்க் கெல்லாம் கல்வியின் வாடை
> வரவிட வில்லைமத குருக்களின் மேடை
> நறுக்கத் தொலைந்த தந்தப் பீடை
> நாடெல்லாம் பாய்ந்தது கல்வி நீரோடை

என்ற பாடலை மாணவர்கள் பாட, கல்வித் துறைத் தலைவர் இப்பாடலைப் பிரெஞ்சில் மொழிபெயர்த்துத் தரும்படி கேட்டுப் படித்துக் கவிஞரை மகிழ்ச்சியால் பெரிதும் பாராட்டினார்[16].

'சுதந்திரம்'[17] 'சமத்துவப் பாட்டு'[18] 'சகோதரத்துவம்'[19] என்று தனித்தனியாகப் பாடுவதோடு 'மக்கள் நிகர்'[20] 'விடுதலை ஆசை'[21] 'விடியா விடுதலை விடிவதெந்நாள்'[22] 'உலகஒற்றுமை'[23] 'உலகப்பன்பாட்டு'[24] போன்ற பாடல்களில் மேற்கண்ட கொள்கைகளைப் பாடுகிறார்.

மனித சுதந்திரத்தை மிக உயர்வாகப் போற்றிப் பாடும் கவிஞர் விடுதலை பிறர் கொடுத்துப் பெறுவதல்ல என்பதை,

வென்ற தோளோடு மோது தோளெனும்
வென்றி நிலத்தில் விளைவதாம் விடுதலை[25]

என்று பாடும் கவிஞர் கூண்டிலடைடபட்டுக் கிடக்கும் ஒரு கிளிக்கும் இதனை உணர்த்துகிறார். 'சுதந்திரம்' என்ற கவிதையில் இரண்டு கிளிகளின் செயல் விளக்கப்படுகிறது. மூத்தகிளி சுதந்திரமாக வானில் பறந்து மகிழ்கிறது. இளைய கிளியோ கூண்டில் அடைபட்டுக் கிடக்கிறது. 'அக்கா அக்கா'' என்று அடிக்கடி அழைக்கிறது. கவிஞர் அக்கிளியைப் பார்த்து.

அக்கா அக்கா என்று நீ அழைத்தாய்
அக்கா வந்து கொடுக்கச்
சுக்கா மிளகா சுதந்திரம் கிளியோ[26]

என்று பாடுகிறார். இதேபோல 'வீட்டுக் கோழியும் காட்டுக் கோழியும்,[27] 'விடுதலை வேட்கை உயிரின் இயற்கை'[28] போன்ற உருவகக் கதைப் பாடல்களில் கோழிகள், நாய்கள் உரையாடல்களின் மூலம் அடிமை நாடுகளுக்கு விடுதலை நாடுகள் உதவ வேண்டும், எல்லா விதச் சமூகக் கொடுங்கோன்மைகளிலிருந்தும் விடுதலை பெறவேண்டும் என வற்புறுத்துகிறார். ஆடவர், பெண்டிர், இருவருக்கும் விடுதலை பொதுவானதாகும்,

வில்லார்க்கும் நல்ல நுதல்மாதர் எல்லார்க்கும்
விடுதலையாம் என்றே மணிமுரசம் ஆர்ப்பீரே[29]

என்ற வரிகளில் இதனைப் புலப்படுத்துகிறார்.

சமத்துவக் கொள்கை கவிஞர் மீது ஆழ்ந்த பாதிப்பை ஏற்படுத்தியிருக்கிறது. 'சமத்துவப் பாட்டி'ல் சமூக அரசியல் சமத்துவத்திற்காக அவர் குரல் கொடுக்கிறார். இதனைச் சாதாரண மக்களும் புரிந்து கொள்ளுமாறு, குதம்பைச் சித்தர் பாட்டு, காவடிச் சிந்து, நொண்டிச் சிந்து முதலான இசைவடிவங்களில் பாடியுள்ளார். உலகில் சமத்துவத்தால் மட்டுமே சமூகம் இன்பமுற முடியும் 'என்று கூறுகிறார்.

தாழ்வில்லை உயர்வில்லை
சமமென்ற நிலைவந்தால்
வாழ்வெல்லை காண்போமடி-சகியே
வாழ்வெல்லை காண்போமடி[30]

என்று உயர்வு தாழ்வற்ற சமத்துவச் சமுதாயத்தைக் காட்டுகிறார்.

உலகிற்குச் சமத்துவத்தைக் காட்ட வந்த பிரெஞ்சுக் குடியரசின் நிழலில் உள்ள புதுவையில் பிரெஞ்சினரையும், இந்தியர்களையும் மேலவர் கீழவர் என்று வேறுபடுத்திய போது கவிஞர், 'குடியரசில் இதுவோ சுதி' என்ற தலைப்பில் பாடிய பாடலில்,

கவிந்திருக்கும் ஒரு குடைக்கீழ் உள்ளவரில்
சிலருக்கு நிழல்; சிலருக்கு வெயிலோ?[31]

என்று வினவுகிறார். 'மேன்மைக் குடியரசில் இதுவோ சுதி?' என்று முடிப்பதில் கவிஞரின் வேதனை புலப்படுகிறது. ஒருகாலத்தில் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்'[32] என்று வாழ்ந்த மக்கள் பின்னர் சாதி, மதம், இனம் ஆகிய சீர்கேடுகளால் ஒற்றுமையின்றி இருந்தனர். இந்நிலையகற்றி மக்கள் அனைவரும் ஒற்றுமையுடன் 'ஒருதாய் மண்ணின் மக்கள்யாம்' என்ற உணர்வுடன் வாழ வேண்டும் என விரும்பும் கவிஞர்.

கரந்தபால் இருந்தருந்திப் பரந்து லாவும்
நெடும்பன்றிக் குட்டிகள்போல் மக்கள் யாரும்
நிறையன்பால் உடன்பிறந்தார் என்றுணர்த்தக்
கிடந்துதவம் புரிகின்ற உலகில்[33]

என்ற வரிகளில் இவ்வையகம் மக்களெல்லாம் உடன்பிறந்தவர்கள் என்பதை நிலைநாட்டத் தவம் புரிவதாகப் பாடுகிறார். பொதுவுடைமைக் கொள்கையின் இறுதிக் குறிக்கோள், உலகம் முழுவதும் ஒரு குடும்பம்; உலகமக்கள் யாவரும் உடன்பிறப்புக்கள்; உலகத்திலுள்ள செல்வம், இன்ப துன்பங்கள் யாவும் அக்குடும்பச் சொத்து; குடும்ப மக்கள் யாவருக்கும் அக்குடும்பச் சொத்தில் சரிபங்கு என்பதேயாகும்'[34] என்ற ஈ.வெ.ரா. பெரியாரின் கருத்தும் ஒப்புநோக்கத் தக்கது.

இளமையிலேயே பிரெஞ்சுக் கொள்கைகளால் ஈர்க்கப் பெற்ற கவிஞர் பின்னர் தன்மான இயக்கத்தில் தன்னைப் பிணைத்துக் கொண்டார். அவ்வியக்கக் கொள்கைகளை ஒருபாடல்வழிக் கூறும் பொழுதும் பிரெஞ்சுக் கோட்பாடுகளைக் கூறுகிறார்.

எல்லோரும் ஓர்குலம் எனப்பாடல் வேண்டும்;
எல்லோரும் பொதுவாய் இன்புறல் வேண்டும்;
உயர்வு தாழ்வுகள் ஒழிந்திட வேண்டும்:
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
யார்க்கும் கல்வி ஈந்திடல் வேண்டும்
தொழிற்கல்வி எங்கும் தோன்றிடல் வேண்டும் ;
சுதந்திரம் சமத்துவம் சகோதரத்துவமெனும்
இதந்தரும் பதவி எவர்க்கும் வேண்டும்

இப்பாடல் கவிஞரால் 9.10.1932 'குடியரசில்' எழுதப் பெற்றது.

இவ்வாறாகப் பாரதிதாசனின் படைப்புகளில் அவர் உயிரில், உணர்வில் ஊறிய பிரெஞ்சுக் கோட்பாடுகளின் தாக்கத்தை நாம் காணலாம்.

அடிக்குறிப்புக்கள் :

1. வை. விருத்தகிரிசன். ஐரோப்பா - கடந்த ஐந்து நூற்றாண்டுக் காலச் சரித்திரம், (த. மொ. பெ) ப. 270.
2. ரூசோ, சமூக ஒப்புநெறி, (த.மொ.பெ) ப.3.
3. மு. ஆரோக்கிய சாமி, தமிழ்நாட்டு வரலாறு, ப. 102.
4. பாரதிதாசன், நாள்மலர்கள், ப. 65.
5. Alvar, Marxian thought and Bharathidasan - A comparative study (un published M. Phil thesis of Madurai Kamaraj University).
6. A Note about Hugo. Notre. Dame De Paris by Hugo.
7. Introduction in Les Miserables of Hugo, Vol. I.
8. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், தொகுதி, 2, ப. 72
9. ஈ.வெ.கி. சம்பத், முடிசாய்ந்தது, ப. 12
10. பாரதிதாசன், புகழ் மலர்கள். ப. 139
11. பாரதிதாசன் கவிதைகள் தொகுதி I, த மிழச்சியின் கத்தி. ப. 28
12. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் தொகுதி 4. ப. 230
13. பாரதிதாசன் கவிதைகள் தொகுதி I, ப.5.
14. பாரதிதாசன் கவிதைகள் தொகுதி I, தமிழுக்கும் அமுதென்று பேர். ப. 110
15. வை. விருத்த கிரிசன். 'ஐரோப்பா -கடந்த ஐந்து நூற்றாண்டுக் காலச் சரித்திரம் ப. 269.
16. முருகுசுந்தரம். பாவேந்தர் நினைவுகள். பக் 46-47
17. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் தொகுதி. 1, ப. 180.
18. பாரதிதாசன், பாரதி- தாசன் கவிதைகள் தொகுதி 4, ப. 180.
19. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் தொகுதி 1, ப. 161
20. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் தொகுதி 4, ப. 168
21. மேலது, ப. 125
22. பாரதிதாசன், நாள்மலர்கள் பக் 83-84
23. பாரதிதாசன் கவிதைகள் தொகுதி. 1. ப. 131
24. மேலது, ப. 147
25. பாரதிதாசன், காதலா கடமையா? ப. 2
26. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் தொகுதி 1, ப. 180
27. பாரதிதாசன், குயில்பாடல்கள் , பக் 109-111
28. பாரதிதாசன், நாள்மலர்கள், பக் 91-92
29. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதை தொகுதி 4 , ப.230
30. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் தொகுதி 3, ப. 180
31. பாரதிதாசன், வேங்கையே எழுக பக்.57.
32. கணியன் பூங்குன்றன், புறநானூறு, பாடல் 192
33. பாரதிதாசன், பாண்டியன் பரிசு, ப. 42.
34. ஈ.வெ.ரா. பெரியார், 'குடியரசு; 10.9.1933.

* * *

# பாரதிதாசன் கைச்சிலம்பு (கண்ணகி புரட்சிக் காப்பியத்தில் பாவேந்தர் செய்த மாற்றங்கள்)

முனைவர் மீனாட்சி முருகரத்தினம்

0. வழி நூல்கள்:

நூல்களைப் பண்டைத் தமிழ் இலக்கணத்தார் மூவகையாகப் பகுத்துரைப்பார்கள். முதல் நூல், வழிநூல், சார்புநூல் என்பனவே அம்மூவகைகள். அவற்றின் இலக்கணம் கூறுகையில், மனிதன் படைக்கும் நூல் எதுவும் முதனூல் ஆகாது என்ற கருத்தைக் கூறுவதுபோல் தோன்றுகின்ற, "வினையின் நீங்கிய விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முதனூலாகும்" என்ற நூற்பா ஆழமான உண்மை ஒன்றை உள்ளடக்கியதாகும். ஏனெனில் நூலியற்றல் மட்டுமன்றி, மானுட முயற்சிகள் எவையுமே முற்ற முழுக்க அவர்களுடையது மட்டுமாதல் முடியாது. ஒரு நூலின் உருவாக்கத்தில் வெளிப்படையாகப் பங்குகொள்வன மனிதனின் மூளையும் மனமுமே என்றாலும் அவ் இரண்டின் உருவாக்கத்தில் ஒளிந்திருக்கும் கூறுகள் எண்ணிலடங்கா. கற்ற கல்வி, பிறந்து வளர்ந்த சூழல், சிந்தனையை உருவாக்கிய நூல்கள், மனிதர்கள் முதலிய பலவற்றின் தாக்கத்தால் உருவாகும் மனத்தின் படைப்பே நூல். எனவே நூலின் படைப்பில் நேரடிப் பங்குகொள்வது மனமே என்றாலும் அந்த மனத்தை உருவாக்கிய ஏனைய கூறுகளும் மறைமுகப் பங்கு கொள்ளவே செய்யும். அவ்வகையில் படைப்பிலக்கியம் **(Creative Literature)** தொடங்கி எந்த நூலுமே ஒருவகையில் வழி, சார்பு நூல்களே ஆகும்.

ஒரு படைப்பிலக்கியத்தின் உருவாக்கத்தில் பங்குகொள்ளும் செல்வாக்குக் கூறுகளை **(Influencing Factors)** எண்ணிப் பார்த்துத் தாக்கக் கோட்பாட்டை **(Theory of Influence)** முன் வைக்கும் ஒப்பியல் இலக்கியம் **(Comparative Literature)** பண்டைத் தமிழர் கூறுவதுபோல் 'முனைவன் கண்டதே முதனூல்' என்று சொல்வதில்லை. குறிப்பாகச் சுட்டக்கூடிய மூலப்படைப்பு எதுவும் இல்லாத முதல் முயற்சிகளை எல்லாம் அவற்றின் உருவாக்கத்திலும், அவற்றை உருவாக்கியவனின் உருவாக்கத்திலும் பங்கு கொண்டிருக்கக்கூடிய செல்வாக்குக் கூறுகளைக் கருத்திற் கொள்ளாமல், மூலநூல் அல்லது முதுனூல் என்றே வழங்கும். அத்தகைய நூலினால் ஏதாவதொரு வகையில் செல்வாக்குப் பெற்று எழுகின்ற நூலை வழிநூல், சார்புநூல் **(Translations, Adaptations, etc.,)** என வழங்கும்.

அவ்வகையில், சிலப்பதிகாரத்தை மூல நூலாகக் கொண்டெழுந்த வழி அல்லது சார்பு நூலாகப் பாரதிதாசனின் 'கண்ணகி புரட்சிக் காப்பியம்' என்ற படைப்பைக் கூறலாம். இவ்வாறு தன் படைப்புக்கு மூலமாக வேறொரு நூலைக் கொண்ட படைப்புக்களை ஆராயும்போது, அவை எழுந்த காரணம், மூல நூலொடு அவை கொண்டுள்ள ஒற்றுமை வேற்றுமைகள், வழி நூலின் தனித்தன்மைகள் முதலியன எண்ணிப் பார்த்தற்குரியன.

*0.1. படைப்பு நோக்கம்:*

எந்தப் படைப்புக்கும் ஒரு நோக்கம் உண்டு. வழி நூல்களில் அது சிறப்பாகவே ஆராய்தற்குரியது. ஏனெனில் தன் படைப்பிலக்கியத்திற்குக் கருவாகக் குறிப்பிட்ட ஒரு நூலை அல்லது அதன் ஒரு கூறினை ஆசிரியன் தேர்ந்தெடுத்தமைக்குத் தக்க காரணம் இருக்கும்; இருக்கவேண்டும். எண்ணற்ற படைப்புக்களில் ஏதோ சில மட்டும் சிலர் மனத்தை மட்டும் கவர்ந்து மாற்றுப் பதிப்பொன்றை வெளியிடத் தூண்டுமானால் அதற்குத் தக்க காரணம் இருக்கவேண்டும். தூண்டப்பட்ட மனங்களும் எளியவை அல்ல; துய்ப்புக்கு மேற்பட்டெழும் துடிப்புக்கொண்டவை; படைப்பாற்றல் உடையவை. தம் கவித்துவ வெளியீட்டிற்குப் பிறர் ஒருவர் படைப்பைத் தூண்டுகோலாகக் கொள்ளவேண்டுமானால் — திறம் சான்ற இவர்களைச் செயற்படத் தூண்டும் ஆற்றல் அந்த மூலங்களுக்கு இருக்கவேண்டும். அந்த மூலம் இவர்களைக் கவர்ந்ததற்கும் எழுதத் தூண்டியதற்கும் ஒரு காரணமும் நோக்கமும் இருக்கவேண்டும். அவ்வகையில் சிலப்பதிகாரம் புரட்சிக் கவிஞரைக் கவர்ந்த காரணம் என்ன? அதை இவர் மீண்டும் பாடியதன் நோக்கம் என்ன? இவை சிந்திக்க வேண்டியவை.

தமிழிலக்கியம் கற்றோரின் மனங்கவர்ந்த நூற்பட்டியலில் உறுதியாக இடம்பெறும் நூல்களில் ஒன்று சிலம்பு. எனவே அது புரட்சிக் கவிஞரின் கவனத்தைக் கவர்ந்ததில் வியப்பு இல்லை. ஆனாலும் தானும் அதைப் பாட எண்ணியது ஏன்?

> சிலப்பதிகாரப் பெருநூல் எனை அழைத்துத்
> தனித்தமிழில் சிலபாட்டால் அடிகள் உள்ளம்
> கலப்பற்ற பசுப்பாலே யாக மக்கள்
> கவிந்துண்ணத் தருக எனச் சொன்னதாலே
> சொலப்புகுந்தேன் என்தமிழர் இருந்து கேட்பார்
> தூயதமிழ்ச் சுவைகண்டு வாழ்வார் நன்றே (பா.9)

என்கிறார். 'தனித்தமிழில் சில பாட்டால்', 'அடிகள் உள்ளம் கலப்பற்ற பசுப்பாலேயாக மக்கள் கவிந்துண்ண', 'தூய தமிழ்ச் சுவைகண்டு' என்ற தொடர்கள் கவனத்திற்குரியவை.

பகுத்தறிவுப் பாசறையில் வளர்ந்த பாரதிதாசனாரின் திராவிடப் பற்றும் தமிழர்பாற் காதலும் ஆரிய வெறுப்பும் - சரியோ தவறோ, நாம் உடன்படுகிறோமோ இல்லையோ உலகறிந்தவை, ஆரியன் வரவால் தமிழரின் நாகரிகம் கலப்புற்றுக் கெட்டுத் தாழ்வடைந்தது என்பது அவர் கருத்து. அந்தக் கலப்பை அவர் சிலம்பிலேயே கண்டிருப்பார் போலத் தெரிகிறது. கண்ணகியின் பண்பு அவரைக் கவர்ந்திருக்கிறது; அவள் வாழ்வும் முடிவும் அவரை இறும்பூது கொள்ளச் செய்திருக்கிறது. ஆனால் அவள் வாழ்க்கை சிலம்பில் புனையப்பட்ட விதத்தில், சில இடங்கள் அவருக்கு உடன்பாடாக இல்லை. அவர் கருத்துப்படி கண்ணகி என்ற அடிக்கருத்து (Theme) போற்றுதற்குரியது. ஆனால் அதன் கதைப்பின்னல்புனைவு தமிழ்த்தன்மையை முழுமையாகப் பெறவில்லை. எனவே தம் மனங்கவர்ந்த கருப்பொருளைத் தாம் விரும்பும் விதத்தில் புனைய விரும்பியே இந்நூலை இயற்றியுள்ளார்.

அங்ஙனம் புனைகையில் நல்ல படைப்பாளர் எவரும் செய்வதுபோல் தம் காலச் சூழலுக்குப் பொருத்தமான சில சிந்தனைகளும் இடைமிடைந்து பாடியுள்ளார். இத்தகு முயற்சிகள் உலகில் புதியன அல்ல; பலராலும் மேற்கொள்ளப்பட்டவையே. அவ்வகையில் அவர் செய்த மாற்றங்களில்தான் ஆசிரியரின் படைப்புத்திறனும் தனித்தன்மையும் (Creativity and Originality) வெளியாகின்றன.

### 02. வழி நூல்களில் தனித்தன்மை :

மொழிபெயர்ப்புக்களும், தழுவல்களும் படைப்பிலக்கியங்களுக்கு நிகரான மதிப்பைப் பெறுவதில்லை. படைப்பிலக்கியங்களே தனித்தன்மை உடையவை என்றும், தழுவல்கள் பிறர் கைவண்ணத்தில் மெருகேற்றும் பணி மட்டுமே செய்வன என்றும் கருதப்படுகிறன. ஆனால் இங்கே நாம் பார்க்க வேண்டிய சரியான கோணம் ஒன்றுண்டு, அதன் வழியே பார்த்தால் தழுவல்களும் தனித்தன்மையுடையனவே என்பது புரியும். மூலநூல்களுக்கும், தழுவல்களுக்கும் இடையே உள்ள உறவு காரண காரிய (cause-effect) உறவாக இருக்குமானால் அங்கே காரணம் மட்டுமே சிறப்புப் பெறும். ஏனெனில் காரணத்தின் இயல்பான, தவிர்க்க முடியாத விளைவு காரியம். காரணம் இருந்தால் காரியம் கண்டிப்பாகத் தொடரும். விசையை அழுத்தினால் விளக்கு எரியும். மின்னோட்டமே இரண்டுக்கும் அடிப்படை. மின்னோட்டம் விளைவிக்கும் விசையை யார் அழுத்தினாலும் விளக்கெரியும். ஆனால் மூலநூல் - தழுவல் நூல் உறவு இத்தகையது அன்று. மூல நூலுடன் தொடர்பு கொள்ளும் எல்லோருமே தழுவல் நூல் படைப்பதில்லை. வால்மீகி இராமாயணத்தை அறிய நேர்ந்த, படித்த தமிழர் பலராகலாம். ஆனால் தமிழில் எழுதியவர், எழுதிப் பெயரும் பெற்றவர் கம்பரே. ஹோமரது காப்பியத்தைச் சுவைத்தவர் பலர். ஆனால் ஜாய்சின் கைகள் மட்டுமே இயங்கி 'யுலிசிஸ்' (Ulysses) எழுதின. பைபிளைப் படித்தவர் எத்தனை பேர்? சுவர்க்க நீக்கமும் மீட்சியும் எழுதத் தோன்றியதும், முடிந்ததும் மில்டனுக்கு மட்டுந்தானே? அகலிகை கதையை அறிந்த ஆயிரக்கணக்கானோரில் மீட்டுருவாக்கம் செய்தோர் வ.ரா.வும் அகிலனும் யோகியாருமாகிய சிலரே; மாற்றி எழுதியவரோ புதுமைப்பித்தன் ஒருவர்தான். உத்தரகாண்டத்திலிருந்து ஒரு கணத்தைத் தேர்ந்தெடுத்துச் சீதையின் சிந்தாகுலம் என்னும் கண்டகாவ்யம் இயற்ற ஒரு குமாரன் ஆசான் தானே தூண்டுதல் பெற்றார்? எனவே மூலநூல் - தழுவல் நூல், உறவு, பொதுமை சான்ற காரண - காரிய உறவன்று; வித்தின் விளைவு போலத் தனித்தன்மை சான்றது.

மூல நூலால் பாதிப்புப் பெறுதற்கும் எழுதும் தூண்டுதலைப் பெறுதற்கும் எழுதிப் பெயர்பெறுதற்கும் ஒரு தனித்தன்மை வேண்டும். தழுவல் நூல் எழுகையில் அதில் அந்தப் படைப்பாளரின் முத்திரை பதிந்திருக்கும். ஒருவகையில் நோக்கினால் வாழ்வின் பிரதிபலிப்பான இலக்கியம் படைக்கும்போது, வாழ்வினால் பாதிக்கப்பட்டு எழுதும் தூண்டுதலைப் பெறுகிறான் ஒரு படைப்பாளன். அதே விதமான பாதிப்பையும் தூண்டுதலையும் வாழ்வினிடமிருந்து பெறுதற்குப் பதிலாக வாழ்வின் பிரதிபலிப்பான இலக்கியத்தினின்றும் பெறுகிறான் தழுவல் நூலாசிரியன். வாழ்வின் தூண்டலால் எழுவது மூல இலக்கியம்; இலக்கியத்தின் தூண்டுதலால் எழுவது தழுவல் இலக்கியம். படைப்பாசிரியனுக்கு எவ்வளவு தனித்தன்மை உண்டோ அவ்வளவு தனித்தன்மை தழுவல் ஆசிரியனுக்கும் உண்டு. வாழ்வில் காணக்கூடிய கூறுகளையே படைப்பிலக்கிய ஆசிரியன் தன் கோணத்தில் காட்டுகையில் அதில் அவன் தனித்தன்மையைக் கண்டுகளிப்பது போல் இலக்கியத்தில் காணக்கூடிய கூறுகளையே தன் கோணத்தில் கண்டு தழுவல் நூலாசிரியன் தன் கோணத்தில் காட்டுகையில் அவன் தனித்தன்மைகளைக் காண முடியும்.

மூலநூல் - தழுவல் நூல் ஒப்பீட்டில் இரண்டுக்கும் பொதுவான கூறுகள், இரண்டும் வேறுபடும் கூறுகள், ஒற்றுமை - வேற்றுமைகளுக்கான காரணங்கள் ஆகியன பற்றி ஆராய்தல் சுவையும் பயனும் நல்கும். இத்தகைய ஒப்பீடுகளில் ஈடுபடுகையில் இரண்டு ஆசிரியர்களுக்கிடையேயும் நிலவும் பலவிதமான வேறுபாடுகளை மனத்திற்கொண்டு நோக்கவேண்டும். காலம், நாடு, மொழி, இனம், பண்பாடு, வாழ்வியற் கோட்பாடு, வயது சமூகச் சூழல், சார்ந்திருக்கும் அரசியல், கலை, சமூக இயக்கங்கள் முதலிய பல வேறுபாடுகளால் தழுவல் இலக்கியத்தின் தனித்தன்மை அமையும்.

சான்றாகச் 'சமூக நியதிகள் ஏற்காத உடலுறவு'என்ற அடிக்கருத்து, பெற்ற தாயுடன் மகன் உடலுறவு கொள்ள நேருதல் என்ற கதைப்பின்னல் வழியே வெளிப்படல், பல நாட்டுப் பல மொழிக் கதைகளில் பலவாறாக இடம்பெற்றுள்ளது. 'ஈடிபஸ் ரெக்ஸ்' என்ற கிரேக்கப் படைப்பில் அறியாமல் அந்த உறவு நேர்ந்துவிட அதற்காக மகன் கண்களை ஈட்டியால் குத்திக்கொண்டு இறப்பதாகக் கதை புனையப்பட்டுள்ளது. தமிழ்ப் பழங்கதையிலோ உறவு ஏற்படும் சூழல் நேருமே தவிர, உறவு நேருமுன் தவிர்க்கப்பட்டதாகக் கதை அமைகிறது. இதேபோல் இயற்பகை நாயனார் கதை, வெளியூர் செல்லும் மகனுக்கு அறிவுரைகள் சொல்லியனுப்பும் மூத்தோர் கதை முதலிய நூற்றுக்கணக்கான சான்றுகளிலும் பின்புலச் செல்வாக்கால் அடிக்கருத்துப் பின்னுமாறு மாறுபடக் காணலாம்.

அவ்வகையில் சிலப்பதிகாரத்தின் அடிக்கருத்தான கண்ணகியின் வாழ்வு இளங்கோவால் பின்னப்படும் முறைக்கும் பாவேந்தரால் பின்னப்படும் முறைக்கும் இடையிலுள்ள வேறுபாடுகள் இருவருக்கும் இடையே நிலவும் கால வேறுபாடு, சமூகச் சிந்தனை வேறுபாடு ஆகியவற்றின் அடிப்படையில் விளக்கப்படுதற்குரியன.

### 1-கண்ணகி புரட்சிக் காப்பியம் - தனித்தன்மைகள் :

பாரதிதாசன் கைச்சிலம்பு, இளங்கோவின் கைச்சிலம்பினின்றும் எண்ணற்ற வகைகளில் மாறுபடுகிறது. முதல் மாற்றம் முதன்மையான மாற்றம் - தமிழ்ப்பண்பாடாகப் பாரதிதாசன் கருதுவனவற்றிற்கு மாறான சிலம்புச் சித்திரங்களில் செய்யப்படுகிறது.

கண்ணகி திருமணத்தைக் களவு வழிப்பட்ட காதல் மணமாகக் காட்டும் முயற்சிகள் உண்டு. எனினும் அகச்சான்றுகள் அது பெரியோரால் ஏற்பாடு செய்யப்பட்ட மணம் எனவே சுட்டும். பாரதிதாசனுக்கு இதில் உடன்பாடு இல்லை. களவு வழிவந்த மணமே தமிழர் பண்பாடு என அவர் கருதுகிறார். இதுவே சரியான கருத்தும்கூட ; ஆரியர் மணமுறைகள் எட்டனுள் ஒன்றான காந்தருவம் தமிழரின் களவுக்கு ஒப்பானது என்று தொல்காப்பியம் கூறினாலும் வடவரால் ஏற்றுக்கொள்ளப்பட்டவை, எட்டில் நான்கே. அந்த நான்கனுள் காந்தருவம் இடம்பெறவில்லை. அத்துடன், சிலரால் இழிவாகவும்கூடக் கருதப்பட்டது. அதனாலேயே பரிபாடலில் களவு மணமே - தமிழர் பண்பாடு என வாதிடும் புலவரைக் காணமுடிகிறது. ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ் அறிவிக்கப் புகுந்த கபிலர் குறிஞ்சிப்பாட்டை இயற்றியதன் காரணம் கூட அவர்கள் ஏற்காத களவு மணத்தின் அருமையும் பெருமையும் உணர்த்தவே என்று தோன்றுகிறது. மற்றவரிடம் காணப்படாமல் தம்மிடம் மட்டுமே காணப்படுவதைத்தானே ஒருவர் தம் பண்பாடு எனப் பிரித்து உணர்த்த முடியும்? எனவே களவு மணமே தமிழர் பண்பாடு என்ற பாவேந்தரின் கருத்து வரலாற்றடிப்படையில் சரியான ஒன்று. அவ்வகையில் கண்ணகி கதையில் அவர் செய்யும் முதல் மாற்றம் ஏற்பாட்டுத் திருமண எதிர்ப்பு.

களவு மணமாகக் கண்ணகி மணத்தை மாற்றிக் காட்டுவதை விட, ஏற்பாட்டு மணம் வாழ்விற்குப் பொருந்தா மணம் எனக் காட்டுவதே ஆசிரியர்க்கு உவப்பான செயலாகிறது. புரட்சிக் கவிஞர் அல்லவா? உடன்பாட்டில் கூறுதலில் உப்புச்சப்பு இராது; புரட்சியே மனத்தில் உறைக்கும் என எண்ணுகிறார். எனவே பெற்றோர் மண ஏற்பாடு செய்ய, ஊர்ப் பெரியோர் கடிந்துரைப்பதாகக் காட்டுகிறார்:

> செந்தமிழ் நான்மறை முறையும் செத்ததேயோ?
> செம்மலுளம் மங்கையுளம் ஒன்று பட்டால்
> அந்நிலைதான் மணமென்பார் அதனை விட்டே

அப்பன்மார் ஒப்புவதால் ஆவ தென்ன?

தந்தைதரப் படும்பொருளா மங்கை நல்லாள்?

தகுவதன்றே தகுவதன்றே என்று சொன்னார். (பா.11)

இவ்வாறே நூல் முழுவதும் நோக்கினால், (1) சிலம்பில் கூறப்பட்ட செய்திகளில் சில மாற்றம் பெறுகின்றன. (2) சிலம்பில் கூறப்படாத செய்திகள் சில புதிது புகுந்துள்ளன. (3) சிலம்பில் விரிக்கப்பட்டன தொகுத்தும், சுருக்கப்பட்டன விரித்தும் பேசப்படுகின்றன. (4) தம் காலச் சமூகச் சூழலுக்கேற்பச் சில கருத்துக்கள் நுழைக்கப்பட்டுள்ளன.

## 1.1. மாற்றங்கள் :

கண்ணகியைக் குறவர் கண்ட இடம், விதம், அவள் வரலாற்றைக் குட்டுவனும் இளங்கோ அடிகளும் அறிய நேர்ந்தமை ஆகிய பதிகச் செய்திகளிலேயே மாற்றம் உண்டு. கண்ணகி கணவனுடன் வானூர்தியில் செல்லவில்லை; இயல்பாக இறக்கிறாள். குறவர்கள் இறுதிச் சடங்குகளைச் செய்கிறார்கள். கண்ணகி பற்றி முதலில் குட்டுவனிடமும் பிறகு இளங்கோவிடமும் கூறுகிறார்கள். அதன்பின் சாத்தனார் கேட்க, இளங்கோவால் பாடப்பட்ட சிலப்பதிகாரம் தன்னை அழைத்துத் தனித்தமிழில் பாடுமாறு கேட்கத் தான் பாடியதாக முன்னுரை அமைக்கிறார்.

நூலினுட் செய்த மாற்றம் முன்னரே சுட்டியது போல் கண்ணகி திருமண ஏற்பாட்டில் தொடங்கித் தொடர்கிறது. கண்ணகியும் கோவலனும் யானை மேலேறி, நகர்வலம் வருகின்றனர். 'யாண்டுசில கழிந்தன, இற்பெருங்கிழமையின்' என இளங்கோ பேசிய இல்லற வாழ்வும் விரிவாகப் பேசப்படுகிறது. கண்ணகி மாமியார் மெச்சிய மருமகளாக விருந்தோம்பி இல்வாழ்வு பேணுகிறாள். மாதவியின் மடல்கள் இரண்டில் பின்னதன் செய்தி மாறுபடுகிறது. அம்மடலைக் கோவலன் தன் பெற்றோர்க்குப் பொருந்துமென அனுப்பியதோ, 'தன்தீதிலள்' என மாதவிக்கு இரங்கியதோ இடம் பெறவில்லை. மறுமடல் கண்ட அவன் மனநிலை, செயல் ஆகியன பற்றிப் பேச்சே இல்லை. அடைக்கலம் புகுந்த மாதரி வீட்டில் 'கையறி மடைமையின் காதலற்காக்கி'யதாய் இளங்கோ கூறுவார். ஆனால், 'மாதர் இவை செயற்கரிய என முடித்த'தாக இவர் பாடுகிறார். தேவியின் சிலம்பை அவள் பணிமகள் வஞ்சி திருடிக் காதலனான பொற்கொல்லனிடம் தந்ததாகப் பாவேந்தரின் கதை சொல்கிறது. பாண்டிமாதேவி ஊடியதன் காரணம் பாண்டியன் அவையில் பாடிய பாடலாகிறது. கோவலன் இறப்புப் பற்றிக் கண்ணகிக்குத் தெரிவிப்பவள் மாதரியாகிறாள். ஊர் எரியுண்டது பொதுமக்களின் செயல் என்று எண்ணுமாறு புனைவுரை அமைகிறது. கண்ணகி தீக்கடவுளை ஏவவோ, 'தீத்திறத்தார் பக்கமே சேர்க'வென்று பணிக்கவோ இல்லை. கணவனை இழந்த விரக்தியில் தன் நகிலை எறிவதாக, "என் கண்ணாளன் வலது கையால் முதல் ஏந்தும் இடது கொங்கை விம்மல் ஏன் என அதனைப் பிய்த்தெறிந்தாள்" என்று பாடுகிறார். மதுராபதித் தெய்வம் பின் செல்லவில்லை. நால்வகை வருண பூதங்கள் வரவேயில்லை. தேவந்தி பூசாரிணியாகக் கோவிலில் ஆகவில்லை. தெய்வமேறப்பெற்று யாரும் பழம்பிறப்புப் புதுப்பிறப்புக் கதைகள் கூறவில்லை. இவையெல்லாம் பாவேந்தர் கைச்சிலம்பில் நாம் காணும் குறிப்பிடத்தக்க மாற்றங்கள்.

## 1.2. புதிய செய்திகள்:

கண்ணகி விருந்தோம்பிய ஒருநாளில் முக்காடிட்டு முகமறைத்து யாரென்று அறியவிடாமல் தடுத்து அவள் மாமியே வந்து கண்ணகியின் விருந்தோம்பற் சிறப்பையும் முதியோர்ப் பேணும் பண்பையும் சோதித்தறிந்து மகிழ்ந்து சமையல் திறத்தைப் பாராட்டிப் பரிசுகள் அளித்துச் செல்கிறாள். மாதவியுடன் வாழும் நாளில் கோவலன் ஒருநாள் பலகணி வழியே எட்டிப்

பார்த்துத் தெருவில் தனியே செல்லும் தன்னொத்த வயதினனைக் கண்டு "என்போன்றான் துணைவியின்றி எவ்வாறு தனித்தும் உயிர் வாழ்ந்தான்" என்று கேட்கிறான். சிலம்பின் கடலாடு காதையில் விவரிக்கப்படும் புகார்நகர்ப் புனைவில் இடம்பெறாத ஆடு, கோழிச் சண்டைகள் கண்ணகி புரட்சிக் காப்பியத்தில் விவரிக்கப்படுகின்றன. காவலன் பேரூர் கண்டு கோவலன் மகிழ்வெய்திய திறம் சிலம்பில் கூறப்படாத வகையில் வினா-விடைப் பாங்கிலமைந்து ஊர் பற்றிக் கோவலன் மக்களிடம் கேட்டறிவதும் அவர்கள் கேள்விக்கு விடையாகத் தன் வரலாறு கூறுவதுமாகப் புதிய செய்திகள் அமைகின்றன. கண்ணகியை மாதரியிடம் அடைக்கலமாகத் தருவதும், கவுந்தியல்ல, கோவலன். கண்ணகியின் கற்கோட்டம் எழுகையில் குட்டுவனும் கோதையும் அதைச் சென்று காணமுற்படும் காட்சியும், சிற்பி-சிற்பிமனைவி உரையாடலும் காதல் பெரிதா, கலை பெரிதா எனக் கண்டறிவதும் 2, 3 இயல்களாக நீளும் புதிய செய்திகள்.

### 1.3. தொகுப்பு விரிப்புகள்:

இவ்வகையில் குறிப்பிடத் தகுந்தது கானல்வரி. சிலம்பின் கானல் வரிப் பாடல்களில் இரண்டு மட்டுமே பேசப்பட்டு எஞ்சியவை விடப்படுகின்றன. பிணக்குக்குக் காரணமான பாடல்களில் இரண்டே பேசப்பட்டாலும் மனப்பிணக்கு ஏற்பட்ட விதமும் விளைவும் விரிவாகப் பேசப்படுகின்றன. கனாத்திறம் உரைத்த காதையில் தேவந்தியின் அறிவுரை கேட்ட இளங்கோவின் கண்ணகி 'பீடன்று' எனச் சுருங்கக் கூறி அமைவாள். ஆனால் பாவேந்தரின் கண்ணகியோ மிக விரிவாக விளக்கி மறுத்துரைப்பாள். சிலம்பில் விரிவாக இடம்பெறும் மாங்காட்டு மறையோனின் மதுரைவழிப் புனைவு மிகச் சுருக்கிக் கூறுப்படுகிறது. காடுகாண், நாடுகாண் காதைச் செய்திகள் புறக்கணிக்கப்படுகின்றன. அடைக்கலக் காதைக் கோவலன் பெருமைகள் இடம்பெறவேயில்லை. தேவந்தி கதை அறவே விடப்படுகிறது. ஆனால் அரசியின் சிலம்பைத் திருடிய வஞ்சி-பொற்கொல்லனின் காதல் கதையும், களவை அவர்கள் மறைத்த திறமும் விரிவாகப் பேசப்படுகின்றன. 'நற்றிறம்படராக'_கொற்கை வேந்தே யாமுடைச் சிலம்பு மணியுடை அரியே' என இரட்டை வரியில் இடம்பெற்ற கண்ணகியின் வழக்குரை இயல் முழுவதும் நீள்கிறது.

### 2. மாற்ற நோக்கம்:

முற்குறித்த மூவகை மாற்றங்கள் செய்து மூல நூலைத் தம்போக்கில் பாவேந்தர் வழங்கத்தக்க காரணங்கள் உண்டு.

தனித்தமிழில் - மொழியில் மட்டுமல்ல பண்பாட்டுத் திறத்திலும் தர வேண்டும் என்பது முதற்காரணம். தமிழர் பண்பாட்டுக்கு ஒவ்வாதவை, உள்ளடங்காதவை எனக் கருதிய இடங்களையெல்லாம் மாற்றிக் கொண்டார். தமிழ்ப் பண்பாட்டிற்கு உரியவை எனக் கருதிய காட்சிகளைப் புதிதாகச் சேர்த்துக் கொண்டார். விரித்தும் தொகுத்தும் கூறிய இடங்களில் இது தவிர்த்த வேறுசில காரணங்களும் உண்டு. இளங்கோவின் படைப்பு நோக்கம் முடிகெழுவேந்தர் மூவர்க்கும் உரிய கதையைப் பாட்டுடைச் செய்யுள் வழியே கூறி மூன்று உண்மைகளை நிலைநாட்டுவது. எனவே, மூவர் நாடும் திறனும் போற்றப்பட்டன. இசை, நாட்டியக் கூறுகள் இணைக்கப்பட்டன; காப்பியத்திற்கே உரிய இயற்கைப் புனைவு, இன்பியற் புனைவு, அரசியற் புனைவு ஆகியவை விரிவாக இடம்பெற்றன. ஊழ் வலியுறுத்தப்பட்டது. இயற்கை இகந்த நிகழ்ச்சிகள் இயல்பாகச் சொல்லப்பட்டன. கண்ணகி தெய்வமானாள். ஆனால் பாவேந்தரின் படைப்பு நோக்கு, பகுத்தறிவுப் போக்கில், தமிழ்ப் பண்பாட்டின் உயர்வும், ஆரிய நாகரிகத் தாழ்வும் வெளியாகும் வகையில் நம்பகத்தன்மையுடன் கூடிய சுவையான கதைப்பின்னலை அமைத்துத் தம் காலச் சமூகச் சூழலுக்குப் பயன்படும் கருத்துக்களை வழங்கல். எனவேதான்

இயற்கை இகந்த நிகழ்ச்சிகளை விட்டுவிடுகிறார். கால, இடப் புனைவுரைகளான காப்பியக் கூறுகளை ஒதுக்கிவிடுகிறார். நம்பகத் தன்மையும் சுவையும் ஏற்படும் வகையில் நிகழ்ச்சிகளைப் பொருத்தமுறவும், அடுக்கடுக்காகவும் புனைந்து தருகிறார்.

### 3பாவேந்தர் கைச்சிலம்பு :

இந்த மாற்றங்கள், சேர்ப்புக்கள், விரிப்புத் தொகுப்புக்களுக்கும் அப்பாற்பட்டுப் பாவேந்தர் கைவண்ணம் அவர் ஆளுமையைப் புறந்தோற்றியவாறு புலனாகும் இடங்களும் இந்நூலில் உண்டு. அவரது தமிழ்ப்பற்று, ஆரிய வெறுப்பு, புலச்சுவைப் புனைவுரைகள், சமகாலச் சமூகச் சித்திரிப்பு ஆகியன அவ்வகையில் குறிப்பிடத்தகுந்தவை.

### 3.1 தமிழ்ப் பற்று :

தமிழ் மொழியும் தமிழ்ப் பண்பும் தமிழர் வாழ்வும் தரணியிலேயே உயர்ந்தவை என்ற தீவிரமான எண்ணம் உடையவர் பாவேந்தர். உவமைகள் கூறும் போது கூடத் தமிழர்க்குரிய செயல்களும் பொருள்களும் சிறப்பாக்கி உவமிக்கப்படக் காணலாம். தமிழரின் செயல்களை உயர்த்தியே கூறுவார். அவ்வாறு பேசித் தம் தமிழ்ப் பற்றை வெளியிடும் இடங்கள் இந்நூலில் பலவுண்டு.

கண்ணகி வீட்டில் விருந்துண்ட பின்னர் ஓய்வெடுத்த நிலையைப் பாடுகையில், "வளம்பேசிச் செந்தமிழ்நூல் இன்பம் துய்த்து மாய்பட்டு மெத்தையில்" சாய்ந்திருந்ததாகக் கூறுகிறார். கண்ணகியின் பிரிவுத்துயரைப் பேசுகையில், "தன் பாற்பொங்கலை இழந்த உழவன் போல"வும், "செந்தமிழ்தான் மாப்புலவர் இழப்பின் உயர்வு இழத்தல் போலவும்", வருந்தியதாகப் பாடுமிடத்தில் தமிழர் திருநாளும், தமிழ்ப் புலவோரும் பேசப்படக் காணலாம். "இலம்பாடி வந்தோர்க்கே இல்லை என்னார், இனம்பாடும் புலவர்க்கே எல்லாம் என்போர்" எனத் தமிழரைப் போற்றுகிறார். "சிறந்தொருவற்கொருத்தி ஒருத்திக்கொருத்தன் என வாழும் தென்னாட்டுத் தமிழர் யாரும்" எனத் தமிழர் பண்பாடு பேசுவார். மதுரை எரியுண்டபோது தப்பிக்க ஓடியவர்கள், "செந்தமிழர் சேருமிடம் காடோ மேடோ நன்றேறும் என்றார்கள் போலும்", சென்றதாய்ப் பாடுகிறார். கண்ணகிக்குச் சிலைவடிக்கக் கல்தேரும் போது, "தெற்குமலைக் கல்லைப் போல் முதிர்ச்சியில்லை வடக்குமலையிற் காணும் கல்லில்; ஆனால் தெற்குமலை நம்முடைமை அதனைக் காப்போர் செந்தமிழர்" என்பதனால் வடக்கே இமயத்திற் கல்லெடுக்க முடிவு செய்ததாகக் கூறுவார். அத்துடன்,

> ஆங்கிருக்கும் தமிழ்ச் சான்றோர் ஈங்குவந்தார்
> ஆரியர்கள் தமிழ்பழித்தார் என்று சொன்னார்
> தீங்குள்ளார் கனகனொடு விசயன் என்றார்
> செந்தமிழர் திறங்காட்டா திருந்தோ மானால்
> ஆங்கிருக்கும் தமிழ்ச்சான்றோர் நெஞ்சம் என்னாம்?
> அனைத்துலகில் தமிழன்சீர் என்னாம் என்றான்.
> யாங்குள்ளான் தமிழ்பழித்தான் ஆங்குச் சென்றே
> அழித்துயர்க என்றார் அங்கிருந்தோர் யாரும் (பா.203)

என்று தமிழையும் தமிழரையும் பழித்தோரை எதிர்க்கும் முனைப்புடனே குட்டுவனின் வடதிசைப் படையெடுப்பு நிகழ்ந்ததை உணர்ச்சியுடன் பாடுவார். கல் சுமந்து கனகவிசயர் வருகையில், "அங்கங்கு நின்றுவரும் ஊர்வலத்தில் ஆரியம் தோற்றது தமிழே வென்றதென்பார்" எனப் பாடுகிறார். குட்டுவன் வடக்கில் வாழும் பைந்தமிழ்ப் பெரியோரை வரவேற்றுப்

பேசுகையில், "தமிழ் நெறியின் பெற்றி கூறிப் பிறர் போக்கின் சிறுமையினை எடுத்துக்காட்டி வீசுதலை விழும்போதும் தமிழர் நாக்கு 'வெல்க தமிழ்' என வேண்டும்" என உணர்த்தியதாய்ப் பாடுவது குட்டுவன் வாயிலாக வெளிவரும் கவிஞரின் கூற்றே அன்றோ? இளங்கோ வேண்மாள் தன் தோழியை விளிக்கையில் கூட "யார் வந்து கேட்டாலும் இல்லை என்னா இசைவந்த குடிவந்த பெண்ணே" எனத் தமிழ்க்குடியின் ஈகையுணர்வு போற்றப்படும். "செந்தமிழின் உண்மை நிலை எந்த நாளும் சிறிதேனும் மாறாது நினைவில் வைக்க" (பா.240) என்பார். "திருடித்தான் வாழ்ந்திடுதல் வேண்டும் என்றால் செத்துத்தான் புகழ் காப்பேன் என்று சொல்வோன் இருள் தீர்ந்த பழந்தமிழன்" (பா.242) என்று தமிழரின் மானவுணர்வை எடுத்துரைப்பார். "அந்தமிழ் நான்மறை கண்டு மறை கண்டீர்கள்" (பா.243) என்று வேதங்களுக்கும் வழி வகுத்தது தமிழென்பார்.

## 32. ஆரிய வெறுப்பு :

இந்த ஆழ்ந்த தமிழ்ப்பற்றின் மறுபுறம் அவர்க்கிருந்த ஆரிய வெறுப்பு இதனினும் அதிகமாகவும், அழுத்தமாகவும் வெளியாகிறது. கண்ணகி திருமணத்தை நடத்தி வைக்க வந்திருந்த ஆரியனை நகைப்பிற்கும் எள்ளலுக்கும் உரிய பாத்திரமாக்கித் தொல்காப்பிய மெய்ப்பாட்டியலில் நகைக்கு நிலைக்களனாகக் கூறப்படும். ஆரியர் பேசுந் தமிழில் அவனைப் பேசவைத்துத் தன் வெறுப்பிற்கு வடிகால் தேடிக்கொள்கிறார். ஆரியரைச் சுட்டுமிடமெல்லாம் அவச்சொல் பெய்கிறார். 'பிழைபாட்டு வடவர்கள்' (பா.41), 'புண்பட்டுச் சாவ அஞ்சும் ஆரியர்கள்' (பா.69), 'கோணல் மனப்பார்ப்பனத்தி' (பா. 85), 'ஒழுக்கமிலாப் பார்ப்பனர்' (பா.95), 'ஓர் பார்ப்பு' (பா.96), 'அறங்காணாப் பார்ப்பனர்கள்' (பா.109), 'சிறிதுச்சிக் குடுமியினர்' (பா.179), 'பன்றியுண்பர்' (பா.218) என்றெல்லாம் பழித்துரைக்கிறார்.

## 33. புலச்சுவைப் புனைவுரைகள் :

காப்பியத்தில் இடம்பெறும் புனைவுரை மரபைப் பின்பற்றாவிடினும் இயற்கையில் ஈடுபாடும் புலன்களின் பொறிவழித் துய்ப்பில் ஆர்வமும் கொண்டவராதலின் ஐம்புலன்கள் ஆரும் இன்பங்களைக் - குறிப்பாக நாவின் சுவைப்பொருள்களை - நிறைய புனைந்துரைக்கிறார். சிலம்பில் இல்லாத ஒரு தனித்தன்மை இது. அறம் கூற வாய்ப்புக்களைத் தேடிக்கொண்டு காட்சிகளை அதற்கேற்ப அமைக்கும் டாக்டர் மு.வ. வின் நாவல்களில் போலவே நாவின் சுவையை விரித்துப் பாடும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொண்டு வயிறார உண்டு மகிழும் காட்சிகளைப் புனைகிறார் பாவேந்தர்.

குறிஞ்சிப்பாட்டில் 99 பூக்களின் பெயர்களைக் கபிலர் கூறுவது போல, 'முக்கூடற் பள்ளு'வில் பள்ளர், பள்ளத்தியர் ஆகியோர் பெயரும் நெல்வகைகளின் பெயரும் கூறுப்படுவது போலக் கண்ணகி புரட்சிக் காப்பியத்தில் இயல் 8 முழுவதும் தூயதமிழ்ப் பெயர்கள் நிறைந்துள்ளன. கோவலன்-கண்ணகி மணவீட்டினுள் நுழையும் தலைவன் தலைவியரின் பெயர்களே அவ்வாறு அடுக்கப்பட்டுள்ளன. இயல்கள் ஒன்பதும் பத்தும் எழுபத்திரண்டும் விருந்துண்ட கூட்டத்தைப் புனைந்துரைப்பவை.

> வயிறொன்று தனிப்பெட்டி யாயிருந்தால்
> வந்த எலாம் வரவுவைத்துத் தோளில் தூக்கி
> உயிரச்சம் இல்லாமல் செல்லலாமென்
> றுரைத்தவனை மற்றொருவன் நோக்கி அண்ணே
> துயர் என்ப தொன்றில்லை என்றிருந்தால்

தொண்ணூறு வடை ஒன்றும் பண்ணா என்றான்
அயல் நின்றான் கைப்பற்றி நின்றான் ஓர்ஆள்
அயலானைத் தூக்கிவிட்டு வீழ்ந்தான் ஓர்ஆள் (பா. 215)

என்றும்,

வடையினிலே நெய்யொழுகிற் றென்றான் திண்ணன்
நெய்யினிலே வடையொழுகிற் றென்றான் வேங்கை
குடத்தளவு முக்கனியா என்றான் முத்தன்
குண்டான் தேனா அதற்கே என்றான்எட்டி (பா. 28)

இந்நாட்டில் எவன் வீட்டில் புத்துருக்கில்
இலைசோறு கறியெல்லாம் மிதக்கும் என்றார் (பா.29)

என்றும் விருந்து புனையப்படுகிறது.

நூலின் உள்ளடக்கம் ஆசிரியனின் உள்ள அடக்கமாக அமைவதுண்டு. அவன் எண்ணங்கள் காட்டும் கண்ணாடியாய், அகம் காட்டும் முகமாய், ஆளுமையை உணர்த்தும் ஆய்வு நூலாய் அமைவதுண்டு. பாரதிதாசனின் வாழ்வில் அவர் இயற்கையையும், அழகையும் போற்றியதற்கு இணையாகச் சுவையான உணவையும் போற்றியவர். சுவையான உணவுப்பட்டியலும் சுவைத்த திறப்பட்டியலும் இவ்வுண்மையை உணர்த்துவன.

### 3.4. சமகாலச் சமூக ஆடி :

ஆசிரியனை மட்டுமின்றி அவர் வாழும் காலமும் காட்டும் கண்ணாடி இலக்கியம். என்றோ நடந்த கதை; என்றோ எழுந்த நூல். இன்று அதைத் தழுவி எழுதுகையில் இக்காலச் சூழலின் செல்வாக்குத் தவிர்க்க முடியாதது. அரங்கேற்றம் முடிந்து அகம் நோக்கிச் சொல்கிறாள் மாதவி.

இடம் தொடரச் செல்கின்ற மாதவியி னோடே
எலாரும் செல்லலுற்றார் ஆயிரங்கண் அன்னாள் (பா. 46)

....... . . . . .. . . . . . . . . . . . . ....... . . . . . . . . . . .

அவள் முதுகின் பின்னிருந்த ஒரு ஆள் கழுத்தை
அணுகி அவள் மலர் முகத்தை உற்றுப் பார்க்கின்றான்
துவளுகின்ற பின்னலினைத் தொடுகின்றான் ஒருவன்
சுடர்ப்பொன்னோ மின்னலோ என்றுடலை ஒருவன்
கவலையுடன் பார்த்தபடி நடக்கின்றான் மற்றும்
கருத்துறுத்தும் காதலால் வஞ்சியவள் முதுகை
அவுக்கென்று தொட்டுநக்கிச் சுவைக்கின்றான் ஒருவன்
அவள் ஆடை மேற்பறக்கச் சேலையென்றான் ஒருவன் (பா. 47)

நகரமக்கள் நெருக்கத்தில் மாதவிக்கு
நலிவுவரா திருக்கவே பல்லோர் சேர்ந்து

தகுநெடுங்கை கோத்துமா வட்டம் ஆக்கித்
தையலினை நடுவினிலே நடத்திச் சென்றார் (பா. 48)

என்ற காட்சி இன்றைய திரைப்பட நடிகைகள் தெருவில் சென்றால் நிகழும் காட்சியின் புனைவு அன்றோ?

அத்தகையீர் கடல்சூழ்ந்த இந்நிலத்தை
அந்தமிழ் நாடாக்குவதாம் இந்தக்கொள்கை
எத்தகுதி எவருடையார் இதை எதிர்க்க (பா.207)

என்ற வரிகளில் ஆசிரியர் சார்ந்திருந்த இயக்கத்தின் 'திராவிட நாடு திராவிடர்க்கே' என்ற கொள்கையின் சாயல் ஒளிந்துள்ளதோ என்ற எண்ணம் எழுகிறது.

இறந்தானுக் குதவினனல் இருந்த போதில்
இருந்த பொதுக் குறைநீக்கல் ஆகும்; அன்றி
இறந்தானின் உடலுக்குத் தேரும் தாரும்
ஏற்பாடு செய்வதும் வேறிடத்தில்
சிறந்தான் என்றெண்ணுவதும் அங்கே அன்னோன்
சீரடைய இங்குள்ள பார்ப்பனர்க்கு
முறங்காணும் அரிசிமுதல் செருப்பீறாக
முடிதாழ்த்துக் கொடுப்பதுவும் மடமை என்றான் (பா.200)

என்ற வரிகளில் இறந்தவர்க்குச் சடங்குகள் செய்யும் மூடநம்பிக்கை சாடப்படுகிறது. வடநாட்டின் மீது படையெடுத்துப் புறப்பட்ட செங்குட்டுவன் நாளும் கோளும் பார்த்து வாளும் வில்லும் ஏந்தவில்லை; கோவில்களின் சின்னங்களை அணியவில்லை. வீரத்தை மட்டுமே நம்பிப் புறப்படுகிறான். கண்ணகியைப் போற்றியோரும் அவளை வரமளிக்கும் தெய்வமாய்க் கருதவில்லை.

இன்றொன்றை நாமளித்தால் நாளைக் கொன்றை
எமக்களிப்பாள் எனும் மடமை எழவே இல்லை (பா.266)

என்று பகுத்தறிவுப் பாசறையில் வளர்ந்த மனம் எழுதுகிறது.

இங்ஙனம் கண்ணகியின் கதையைக் கையாண்ட திறத்தில் மட்டுமல்ல, கதை கூறும் கலையைக் கையாண்ட திறத்திலும் பாவேந்தரின் தனித்தன்மை வெளியாகக் கவித்துவம் மிளிரக் காணலாம்.

### 3.5. புனைதிறன் :

................ புகாரைப் புனைகையில்,
கள்மிகுக்கக் கட்டியதோர் நாளங்காடி
கால்நடையாய்க் கண்டுவர ஓராண்டாகும்
இன்றேறும் சரக்குயரம் பொதிகைக் குன்றம்
இறக்குமதிச் சரக்கெல்லாம் யானைக் குன்றம்
பொன்வரவு செலவெழுதும் கணக்கர்க் கோலை
பொழுதெல்லாம் தந்தபனந் தோப்பே மொட்டை (பா.64)

என்பதும், கண்ணகி கல்நாட்டு விழாவிற்குச் செய்த ஏற்பாடுகளை,

செங்கதிரும் வேறுவழி செல்ல வேண்டும்
செல்லாக்கால் சோற்றுமலை இடிக்கும் மற்றும்
இங்குள்ள பெருங்குளத்து நீர் இறைத்தே
எம்மருங்கும் கரையெடுத்துத் தயிரைத் தேக்கித்
தங்கமலை மாடெல்லாம் தரும்பால் தேக்கத்
தடங்கடலை இடங்கேட்க வேண்டு மன்றோ? (பா.256)

என்பதும், அவர் கற்பனையின் திறமுணர்த்துவன. பொருளணி மட்டுமன்றிச் சொல்லணிகளும் சிறக்கப் பாடியுள்ளார். தான் யாரென்று கூறும் கண்ணகியின் கூற்றில்,

செஞ்சிலம்பே ஒன்றோடி இரண்டு கண்ணின்
முந்நீர் போய் நானிலமேற் செறியக் கண்டார்
அஞ்சுவன் ஆறபார்த்(து) எழு வகைத்தாய்
எட்டீகைத் தொண்டுவளர் திசைகள் பத்தும் (பா. 146)

என எண்வரிசை இடம் பெறுகிறது. கோவலனின் வெட்டுண்ட உடல்மீது வீழ்ந்தழும் அவள் நிலை,

முகம் காண்பான் அவன் காண முகங்காணாதாள்
முகம் கண்டு முகம்கண்டு முகத்தை ஒற்றி
அகம் கண்ட துயர்ப்பெருக்கே கண்ணீராக
அகம் கண்டம் முகம் தோள்கள் தழுவிக்காவின்
நகம் கண்டு கால்கண்டு கைகள் கண்டு
நடுக்குற்று விரலாழி கண்டு வீழ்ந்தாள் (பா. 153)

என்று சொற்பின்வருநிலை அணி அமையப் பாடப்படுகிறது. குட்டுவன் படை செல்லும் கோலம்,

தனதனதன தனதனதன தத்தத் தத்தா
தனதனதன தனதனதன தத்தத் தத்தா

என்ற சந்தத்தில்,

வழிகுழிபெற நிலநெளிவுற எட்டுத் திக்கே
மலிபொடிஎழ னிசை இருள்பெற ஒட்டுப்பட்டே
விழிஎரிதர மடமடஎன முற்பட்டுத் தோள்
விடுபடைஎறி படைதொடுபடை எட்டத்தொட்டே
ஒழிவதுபகை ஒழிவதுபகை தட்டுக் கெட்டே
உறுவதுபுகழ் எமதிறைஎன வெற்றிச் சொற்கே
மொழிஎனஒரு தமிழர்கள்படை முற்பட்டுத்தீ
முடுகியதென விரைவதுபட வெற்புக் கற்கே

என அமையுமிடம் ஓசையும் உணர்ச்சியும் ஒருங்கே சிறக்குமிடம்.

*சிதைந்த பரல்கள் :*

*சீரான இச்சிலம்பிலும் சிதைந்த பரல்கள் சிலவுண்டு. குறிப்பிடத் தகுந்தவை 2 இடங்கள்.* கொற்கை வேந்தே என்ற விளியிலேயே பாண்டிமாதேவியின் சிலம்பு முத்துப்பரலுடையது என்பதை உணர்த்தி யாமுடைச் சிலம்பு மணியுடைய அரியே என்பதில் தன் வாதம் உணர்த்திய சிலம்பின் கண்ணகி சொற்செட்டில் சுவைப்பெருக்கை ஊட்டியவள். பாவேந்தரின் கண்ணகி பாண்டியனுடன் நீள நடத்தும் உரையாடல் குறிப்புச் சுவை குன்றுமிடமாகிறது. அதேபோல் மாதவியின் 2-ஆவது கடிதம் இலக்கியச் சிறப்பு வாய்ந்தது. 'அடிகள் முன்னர் யானடி, வீழ்ந்தேன்; வடியாக் கிளவி மனக் கொளல் வேண்டும்' எனத் தொடங்கும் மடலில் மாதவியின் துயரும் கோவலனின் குற்றமும் கணிகை என்பதால், தான் தாழ்வுறக் குலமகள் என்பதால், கண்ணகி வாழ்வுற்றதை உணர்த்தும் குறிப்பும் நிறைந்து கோவலன் தன் பெற்றோர்க்கு அதை அனுப்புமளவு நாகரிக மொழிகள் வாய்க்கப்பெற்றிருந்தது. மாதவிபால் மனமிரங்கினாலும் செயற்பாலதறியாது மயங்கும் கோவலன் மனநிலை காப்பியத்தின் அவலச்சுவையை மிகுக்கும் இடம் அது. ஆனால் அது பாவேந்தர் கைச்சிலம்பில் முதன்மை பெறாமல் புறக்கணிக்கப்படுகிறது. குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றமே விசும்பின் மதிக்கண் மறுப்போல் உணரப்படும். திறமான கவிஞரின் பாட்டென்பதாலேயே இக்குற்றங்கள் தெரிய வருகின்றன.

5. முடிவுரை :

தனித்தன்மை சான்ற இத்தழுவல் நூல் மரபுமரத்தின் விழுதாக அமையவில்லை; வேரைத் தகர்த்து வேறொன்றை நட்ட செயலாகவும் அமையவில்லை. ஒட்டுச்செடியாகப் பழமையும் புதுமையும் மரபும் மாற்றமும் கலந்து சுவை தருகிறது.

இக் காப்பியத்தின் அடிக்கருத்தான கண்ணகியின் பண்புப் புனையில் கட்டுரையாளரின் தனிப்பட்ட மனக்குறை ஒன்றுண்டு. புரட்சிக் கவிஞரின் புனைவிலே அன்றிப் பொதுவான சமூக அமைப்புப் பற்றிய மனக்குறை அது. வாழ்க்கையை அவனுக்கும், அவளை அதன் துணைக்கும் உரித்தாக்கி அவனுக்குரிய வாழ்க்கைக்கு அவன் வழி நிற்கும் துணையாக அவளைக் கருதும் ஆடவர் முதன்மைச் சமூகத்தின் வாழ்வியல் மதிப்பீடு ஆளுக்குப் பாதியான அர்த்தநாரி உடலிலும் அவனில் பாதி அவளென்று கொண்டு பார்க்கும் மனப்போக்கு புரட்சிக் கவிஞரிடமும் சிறிது ஒட்டிக் கொண்டுதான் உள்ளது. பெண் குழந்தைத் தாலாட்டுப் பாடியவர் தான்; விதவை மறுமண முரசு கொட்டியவர்தான். ஆனாலும்,

> ஆதிசூழ் உலகத்து மகளிர்க் கெல்லாம்
>
> அகமுடையான பேர்காத்தல் அறமாம் என்னும்
>
> வாழுநெறி காட்டினாள் கற்பின் அன்னை

என்று பாடும்போது, அதுமட்டுமே அவளுக்கு அறமென்று அவர் கூறாவிடினும், அதற்கு மேலும் அவளுக்கு அறமிருப்பதாய் உணர்தற்கு இடமிருப்பினும், ஆடவர்க்கும் கற்பு உரித்தெனப் பிற இடங்களில் அவர் பாடியிருப்பினும், கணவனுக்காக வாழ்ந்த கண்ணகியையும் சமூகத்துக்காக வாழ்ந்த மேகலையையும் போற்றும் சமூகமும் இலக்கிய உலகமும் தனக்கென வாழும் பெண்மையைப் போற்ற முன்வருமா என்ற கேள்வி எழுகிறது. தான் போற்றிய கொள்கைக்காக இல்லத்தார், ஊராரின் உணர்வுகளைப் பொருட்படுத்தாத நாயன்மார் போற்றப்படுதல்போல் நாயகிமார் போற்றப்படுவாரா?

பாரதி ஒரு புதுமைப் பெண்ணைப் படைத்து உலவவிட்டார். புதுமை ஆண்கள் தோன்றுவது எப்போது? கண்ணகி புரட்சிக் காப்பியங்கள் எல்லைக்குட்பட்ட பெண்மையையே போற்றுவன. பெண்ணின் எல்லைகள் விரிவது எப்போது? ஆண்களுக்கு அது புரிவது எப்போது?

* * *

# எதிர்பாராத முத்தம் காட்டும் காதலோவியம்

முனைவர் சரளா ராசகோபாலன்

பாரதிதாசனார் புதுமைப் பாவலர், புரட்சிக் கவிஞர், ஆனால் பழைமையையும் விரும்பியவர்.

> பழமையில் இங்குள அன்புறு காதற்
> பயனுறும் அகப்பொருள் காப்போம் (இசை. 2. பக்.28)

என்று சங்க அகப் பொருளை விரும்பிய பாவேந்தர் அகப்பொருளின் சிறப்புணர்ந்து அதனைக் காக்க வேண்டும் என்றும் கூறியுள்ளார் . நாட்டின் அகப்பொருள் இலக்கியங்கள் செழிப்புடன் வளரவேண்டும், பெருக வேண்டும் என்று விரும்பினார்.

> வையகம் வியக்கும் வண்ணம்
> அகப்பொருள் வளர்ந்த நாட்டில் (குறிஞ்சித்திட்டு ப. 59)

என்று அகப்பொருள் இலக்கியங்களின் வளர்ச்சி ஒரு நாட்டின் சிறப்பைக் குறிப்பதாக அவர் நினைத்துள்ளார்.

பாவேந்தர் தொல்காப்பியத்தையும் சங்க இலக்கியங்களையும் நன்கு கற்றவர். இதை ஒரு சிறு நிகழ்ச்சியின் மூலம் தெளிவாக்கலாம்.

1953இல் தமிழர் திருநாளின்போது டாக்டர். மு. வரதராசனாரின் திருக்குறள் தெளி-வுரையைப் பாவேந்தர் பார்க்க நேர்ந்தது. அந்நூலில் மு. வரதராசனார் காமத்துப்பால் என்பதை இன்பத்துப்பால் என மாற்றி எழுதியிருந்தார். இதனை மறுத்த பாவேந்தர் தொல்காப்பியத்-திலிருந்தும் சங்க இலக்கியங்களிலிருந்தும் தூய காதலுக்குக் காமம் என்ற சொல் ஆளப்பட்டுள்ளதாகச் சான்றுகளைக் காட்டியதாகத் திரு. கோவேந்தன் தன் 'பாவேந்தம்' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். (ப.47) இந்நிகழ்ச்சியின் மூலம் பாவேந்தரின் சங்க இலக்கியப் புலமையை அறிய முடிகிறது. அதனால் தாம் படைத்த எதிர்பாராத முத்தம் என்னும் காதல் காவியத்திலும் மரபு வழிப்பட்ட காதலையே படைத்துள்ளார். அதே நேரத்தில் தன் புரட்சி எண்ணங்களுக்கேற்ப, பல புரட்சிகளை - மாற்றங்களைச் செய்துள்ளார்.

இந்நூலின் காதலர்களான பொன்முடியும் பூங்கோதையும் மண உறவு முறையினர். அவர்கள் இருவரும் ஓராண்டிற்கு முன்வரை வாங்காத பண்டமில்லை. உண்ணும் போதும் மனம் வேறுபட்டதில்லை. அவள் அவனை அத்தான் என்றழைப்பாள். அவனும் அத்தை மகளைப் பிரியாமல் இருந்தான். இருவரின் பெற்றோரும் பகை நெஞ்சினரான பிறகு பார்க்க முடியாத நிலை ஏற்பட்டது.

ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப (தொல்.1038)

என்று கூறியதற்கேற்ப உயர்ந்த ஊழின் ஆணையால் - நல்லூழின் ஏவலால் பொன்முடியும் பூங்கோதையும் சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. இருவரும் எதிர்ப்பட்டனர். அவனும் பார்த்தான், அவளும் பார்த்தாள்.

இரு முகமும் வரிவடிவு கலங்கிப், பின்னர்
முதல் இருந்த நிலைக்குவர இதழ் சிலிர்க்க
முல்லைதனைக் காட்டி, பன்மூடி மிக்க
அதிகாித்த ஒளிவந்து முகம் அளாவ
கடிமூச்சுக் குரலாலே ஒரே நேரத்தில்
அதிசயத்தைக் காதலோடு கலந்த பாங்கில்
"அத்தான் "பூங்கோதை" என்றார்; நின்றார் (எ.பா.மு: ப.10)

என்று காதலரின் காதற்காட்சி காட்டப்படுகிறது. இவ்வாறு தொல்காப்பியரின் மரபு வழிப்பட்ட காட்சியைக் காட்டிய புரட்சிக் கவிஞர் தனக்கேயுரிய இன்னொரு காட்சியையும் காட்டுவர். காதலர் இருவரும் தூரத்தே கண்டனர். தொத்துகின்ற கிளிக்கெதிரில் அன்னோன் இன்பத் தோளான மணிக்கிளை நெருங்குகிறது. அத்தாணி மண்டபத்து மார்பனாம் பொன்முடியின் அண்டையில் அழகிய பட்டத்தரசியாம் பூங்கோதை நெருங்குகிறாள். அந்நேரத்தில் அவ்விருவர் தம் மனவோட்டங்களை ஆசிரியர் அழகுறக் காட்டுகிறார். இருவரும் சந்திப்பதற்கு முன்பே சந்தித்தது போன்ற உணர்வில் அவர்களின் மெய்ப்பாட்டுணர்வுகளை உளவியல் அடிப்படையில் உரைக்கிறார்.

என்விழிகள் அவ்விழியைச் சந்திக்குங்கால்
என்னவிதம் நடப்ப "தென யோசிப்பாள் பெண்;
ஒன்றுமே தோன்றவில்லை ; நிமிர்ந்தே அன்னோன்
ஒளிமுகத்தைப் பார்த்திருப்பாள்; குனிந்து கொள்வார்;
சின்னவிழி ஒளிபெருகும்; இதழ் சிரிக்கும்!
திருத்தமுள்ள ஆடைதனைத் திருத்திக் கொள்வாள்! (எ.பா.மு: ப.10)

என்று அவள் மெய்ப்பாட்டு நிலை உரைக்கப்படுகிறது. அவனும்

......... முகநிமிர்ந்து வானிலுள்ள
புதுமையெலாம் காண்பவன் போல்பூங் கோதைதன்
இன்பமுகம் தனைச் சுவைப்பான் கீழ்க்கண்ணாலே (எ.பா.மு: ப.10)

காதலர்தம் மனவொற்றுமையே அகத்திணையின் உயிர்ப்பண்பு. இவ்வொற்றுமையை 'உள்ளப் புணர்ச்சி' என்று அகவிலக்கணம் கூறும். ஆயினும் அக இலக்கணங்கள் மெய்யுறு புணர்ச்சியை நேரிடையாகக் கூறவில்லை. அதனால்தான் "உள்ளத்தான் வேட்கை சொல்லினும் மெய்யுறாராயிற்று" என்று இறையனாராகப் பொருள் உரையாசிரியர் கூறுமளவுக்கு இலக்கியங்கள் அமைந்தன. பாவேந்தர் இந்நூலுக்கே 'எதிர்பாரா முத்தம்' என்று தலைப்பிட்டார். இவர் முத்தக் காட்சிகளைப் பலவாறாக எடுத்துக் கூறியுள்ளார். அதனால் காதலர்கள் கண்டவுடனே தம்மை மறந்த லயந்தன்னில் இருப்பதைக் காட்டுகிறார். மெய்யணைப்பையும் முத்தத்தையும் அதன் விளைவையும் நயமாகக் கூறுகிறார்.

. . . . . . . . . . . . . . . . . . . . . . . .அன்னோன்

வெடுக்கென்று தான் அணைத்தான் "விடாதீர்" என்றாள்

கைஇரண்டும் மெய்யிறுக, இதழ்நி லத்தில்

கனஉதட்டை ஊன்றினான், விதைத்தான் முத்தம்!

உச்சிமுதல் உள்ளங்கால் வரைக்கும் உள்ள

உடலிரண்டின் அணுவனைத்தும் இன்பம் ஏறக்

கைச்சரக்கால் காண வொண்ணாப் பெரும்பதத்தில்

கடையுக மட்டும் பொருந்திக் கிடப்பதென்று (எ.பா.மு:ப.11)

நிச்சயித்த மறுகணத்தில் பிரிய நேர்ந்த நிலை நினைத்து அழுததாகக் குறிப்பிடுவார். முத்தத்தினால் காதலர் பெறும் இன்பத்தையும் பாவேந்தர் குறிப்பிடுவது யாரும் கூறாததாகும்.

அடுத்த முறையும் காதலர் சந்தித்தல் 'இடந்தலைப்பாடு' என்று அகவிலக்கியம் பகரும். புரட்சிக் கவிஞர் நேராக இக்காட்சியைக் காட்டவில்லை. ஆனால் தலைவி தனக்காகக் காத்திருப்பாள் என்று கூறும் முறையில் இக்காட்சியைக் கற்பனையில் அமைத்தார்.

செப்பேந்தி அவள் துறைக்குச்

செல்லுங்கால், சென்று காண

ஒப்பினேன் (எ.பா.மு:ப. 15)

என்று 'இடந்தலைப்பாட்டுக்'கான ஏற்பாட்டினைப் பண்டாரத்திடம் கூறுகிறான். அவள் எவ்வாறு தனக்காகக் காத்திருப்பாள் என்பதையும் காட்டுகிறான்.

இமைநோக என்னை நோக்கி

இருப்பாள் கண்திருப்ப மாட்டாள்

சுமைக்குடம் தூக்கி அந்தச்

சுடர்க்கொடி காத்தி ருந்தாள் (எ.பா.மு:ப.16)

என்று படம் பிடித்துக் காட்டுகிறான். தந்தை செல்ல அனுமதிக்காததால் இடந்தலைப்பாட்டில் தன் தலைவியைச் சந்திக்க இயலாநிலை பொன்முடிக்கு நேர்கிறது.

### பாங்கற் கூட்டம் :

இடந்தலைப்பாட்டின் பின்னர் நண்பன் தலைவனின் நிலைகண்டு நின் துன்பத்திற்குக் காரணம் யாது எனக் கேட்க, அவனோ, தலைவி தன்னைப் பிணித்ததைக் கூறுவான். பாங்கன் தலைவி இருக்கும் இடத்திற்குச் சென்று தலைவி தலைவனுக்கு ஏற்றவளே என நற்சான்று அளிப்பான். அவன் உதவியால் நிகழும் இக்கூட்டத்தைப் பாங்கற் கூட்டம் என்று குறிப்பர்.

இக்காவியத்தில் பொன்முடிக்கு நண்பன் இருப்பதாகக் காட்டவில்லை, அவன் தன் குடும்பத்திற்குப் பூ கொண்டுவரும் பண்டாரத்தையே தூது விடுகிறான். அவனிடத்தில்

மறைநாய்கன் பெற்ற பெண்ணாள்

மயில்போலும் சாயல் கொண்டாள்;

நிறைமதி முகத்தாள்; கண்கள்

நிலம் போல் பூத்திருக்கும்;

பிறைபோன்ற நெற்றி வாய்ந்தாள்.

பேச்செல்லாம் அமுதாய்ச் சாய்ப்பாள் (எ.பா.மு: ப.14)

என்று தன் தலைவியின் அழகை அவனிடத்தில் கூறுவான். பண்டாரமும்

தென்னம் பாளை பிளந்து
சிந்திடும் சிரிப்புக் காரி !
இன்னும் கேள்அடை யாளத்தை
இடைவஞ்சிக் கொடிபோல் அச்சம்
நன்றாகத் தெரியும்! நானும்
பூஅளிப் பதும்உண் டென்றான்! (எ.பா.மு: ப.15)

என்று தலைவி பூங்கோதையின் அழகை விவரிப்பதாகக் கூறப்படுகிறது. அவன் மூலமாகச் சந்திக்கும் இடமும் நேரமும் அறியும்படியாகவும் கூறுகிறான். இம்மரபு வழியைப்போற்றிய ஆசிரியர் புதுமையைக் கையாள்கிறார். அப்பண்டாரத்தின் மூலம் கடிதம் பெற்ற அறிவுசான்ற பூங்கோதை அப்பண்டார வேடத்தில் தன் காதலனை வரச் சொல்கிறாள். இப்பண்டாரப் பாத்திரம் நகைச்சுவைப் பாத்திரமாகவும் அமைகிறது. இக்கதையின் அவலத்திற்கு வழிகோலும் பாத்திரமாகவும் அமைகிறது. தூது சென்ற இவனே தலைவன் தலைவியிடம் கையூட்டு வாங்கியும் பெற்றோரிடம் காதலைச் சொல்லிவிடும் பாத்திரமாக அமைகிறான். இவனுடைய சொல்லே அவலத்திற்குத் துணையாகிறது.

சங்க இலக்கியத்தில் தோழி பாத்திரப்படைப்பு மிகச் சிறந்த படைப்பாகும். தோழியின் செயலைப் பண்டாரம் செய்கிறான். பூங்கோதை புனிதை என்னும் தன் தோழியிடம் தம் அத்தானை அறிமுகம் செய்து வைக்கிறாள். இருவரின் காதல் நாடகத்திற்கு அவள் சாட்சியாக அமைகிறாள்.

### பகல் இரவுக் கூட்டங்கள் :

"காதலர்கள் காதலிக்கும் தொடக்கத்துத் தம்மை எதிர்நோக்கியிருக்கும் துன்பத் தொகையைப் பற்றி அறியார். அதுபோல் துன்பமலையை இன்பக் கடலுக்குள் தூக்கி எறியும் வன்மை காதலுயிர்களுக்கு உண்டு என்பதையும் அறிவார். காலப்போக்கு காதலின் பேராற்றலையும் வழிதுறைகளையும் மெல்ல மெல்ல அன்னோர்க்குக் கற்றுக்கொடுக்கும். முன்பில்லாத ஆற்றலும் துணிவும் ஒட்பமும் காமத்தால் உண்டாகும்" என்ற அடிப்படையில் பகல் இரவுக் கூட்டங்கள் நடைபெறுவதாக டாக்டர் வ.சுப. மாணிக்கனார் கூறுவர். (தமிழ்க்காதல் ப.65-66)

புரட்சிக் கவிஞரின் எதிர்பாராத முத்தத்திலும் பொன்முடியும் பூங்கோதையும் இரவிலும் வைகறையிலும் சந்திக்கின்றனர். சங்க இலக்கியத் தலைவனைப் போன்றே பொன்முடி இரவு நேரத்தில் பூங்கோதையைச் சந்திக்கச் செல்கிறான். நீலம் கரைத்த நிறைகுடத்தின் உட்புறம் போல், ஞாலம் கறுப்பாக்கும் நள்ளிருளில் சோலை உதிர் பூவென்ன மக்கள் துயிலும் போதில் இரு ஜீவன்களின் திறந்த விழிகள் மட்டும் ஆவலினால் மூடாமல் இருக்கின்றன. பொன்முடியோ. "ஆடாதெழுந்தான் அவள் நினைப்பால் - ஓடைக்குள் காலால் - வழிதடவும் கஷ்டம்போல் தன்உணர்வால் ஏலா இருளில் வழிதடவி - மேல்ஏகி வீட்டுத் தெருக்கதவை மெல்லத் திறந்திருண்ட காட்டில் இரு கண்ணில்லான் போதல் போல் பெட்டை அவளுடைய தோட்டம் புகுந்தான். அவன் புகும் தருணத்தில் வீணையிலோர், தந்தி மெதுவாய் அதிர்ந்ததுபோல் 'அத்தான்' என்றாள் நங்கை. அவன் அவளை அணைத்து கிழங்காய் கன்னத்தில் முத்தமிட்டான்.

சங்க இலக்கியத் தலைவன் பெற்றோரிடம் அகப்பட்டதாகப் பாடல்கள் இல்லை. பொன்முடி தூதிற்குத் தகுதியற்றவனை நம்பியதால் பூங்கோதையின் பெற்றோரிடம் அகப்படுகிறான். அவள் தந்தை பொன்முடியைப் புன்னை மரத்தில் கட்டி அடிக்கின்றான். தலைவனின் பொன்னுடம்பில் தன்னுடம்பைப் போர்த்தபடி. அப்பா அடிக்காதீர் என்று அவள் அழுகிறாள். தன் மேல் கோபங்கொண்ட தந்தைக்கெதிரிலேயே அவனைக் காக்கும் அவளின் திறம் போற்றுதற்குரியது. உலராத காயங்களோடு பொன்முடியும் தன்வீடு நோக்கி நடக்கும்போதும் அவள் நலமொன்றே நினைத்து நடக்கிறான். இவ்வாறு காதலர் இருவரும் ஒருவர் மற்றவர்க்காகவே வாழும் காதல் நெஞ்சம் சிறப்பாகப் படம் பிடிக்கப்பட்டுள்ளது. சங்கத் தலைவி இற்செறிக்கப்படுவதைப் போலப் பூங்கோதையும் இற்செறிக்கப்படுகிறாள்.

தன் காதல் பெற்றோர்க்குத் தெரிந்த பிறகும், தன் காதலன் அடியுண்டதைக் கண்ட பின்னும் பூங்கோதை அவனைச் சந்திக்க விரும்புகிறாள். பண்டாரத்தின் மூலம் கடிதம் கொடுத்தனுப்புகிறாள். அதில் அவள் அவனைக் கனவில் கண்டதாக எழுதியிருந்தாள். கனவிலும் அவனைக் கண்டு அவளுடைய தேகம் காய்ச்சிய இரும்பாகிறது. அவன் தோள் மேல் உராய்வதலால் சிலிர்த்துப் போகிறாள்.

இற்செறிப்பு நிலையிலும், பகல் குறியிடத்தில் பொன்முடியைச் சந்திக்க விரும்புகிறாள், பூங்கோதை. பண்டாரத்தின் முக அமைப்பபைக் கூறி அவ்வேடத்தில் தன்னைச் சந்திக்குமாறு கூறுகிறாள். அவன் வரவு நோக்கி தூங்காமல் இருக்கிறாள். தலைக்கோழி கூவியபோது நாயொன்று குலைத்தது. கொக்கு வெள்ளை மேல் வேட்டிப் பண்டாரம் தான் என்று மனம் பூரிக்கிறாள். 'திருவிழாவே! எனை மகிழ்ச்சி செய வா' என அழைக்கிறாள். 'சனப்பனா? குணக்குன்றா?' எனத் தன் உணர்வைக் கேட்கிறாள். ஆளன் வந்தவுடன் தகதகெனக் குதித்தாடும் காலைச் சொன்னபடி கேள் என்கிறாள். அன்னை பால் கறக்கத் தொடங்குகிறாள்.

> தாமரை போய்ச் சந்தனத்தில் புதைந்ததுபோல்
> தமிழ்ச்சுவடிக் கன்னத்தில் இதழ் உணர்வை
> நேமமுறச் செலுத்தி நறுங்கவிச்சு வைகள்
> நெடுமூச்சுக் கொண்டமட்டும் உரிஞ்சி நின்று
> மாமியவள் பால்கறந்து முடிக்க, இங்கு
> மருமகனும் இச்சென்று முடித்தான் முத்தம் (எ.பா.மு: ப.34)

என்று காதலரின் பகற்கூட்டம் படம்பிடிக்கப்படுகிறது.

ஒரு குமரியின் காதலொழுக்கம் பற்றி ஊர்மகளிர் வாய்க்குள் பேசிக்கொள்வது 'அம்பல்' எனவும் வெளிப்படையாகப் பேசுவது 'அலர்' எனவும் பெயர் பெறும். சங்க இலக்கியத்தில் மகளிரே அலர் தூற்றலாகக் கூறுதல் மரபு. அவ்வாறு செய்தல் ஓம்புமின் (புறம் 195) என்பதற்கு நேர்மாறாக ஊர்ப்பெண்டிர் செய்வது அல்லதேயாயினும், சமுதாய நெறிக்கு நல்லது என்ற கருத்தால் தமிழ்ச் சான்றோர் ஊராரையும் அகத்திணையிலக்கணத்தில் போற்றிக் கொண்டனர். புரட்சிக் கவிஞர் ஆடவர் அலர் தூற்றுவதாகக் கூறுகிறார். பொன்முடியின் வேலைக்காரன் பொன்னன் என்பவனிடம் பூங்கோதையின் வேலைக்காரன் இரிசன் என்பவன், மாப்பிள்ளை பொன்முடி மணப்பெண் பூங்கோதையிடம் சாப்பாடு சமைத்துச் சாப்பிடுவதுபோல் புன்னை அடியில் பூரிப்பு முத்தம் தின்று கொண்டிருந்த நேரத்தில் எசமான் கண்டு புன்னையில் கட்டி வைத்து அடித்த செய்தியைக் கூறினான் (எ.பா.மு. ப.36). தூதுவனாகச் சென்ற பண்டாரமோ பொன்முடி அடிபட்டதை மாநாய்கனிடம் கூறினான். (எ.பா.மு. ப.37) பெண்டிர்க்குரியதாகக் கூறப்பட்ட அலர்தூற்றலை ஆடவர்க்குரியதாக மாற்றியமைக்கிறார் புரட்சிக் கவிஞர்.

பிரிவு :

சங்க இலக்கியங்கள், பொருளிற்காகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிவதைப் பலபடச் சிறப்பித்துக்காட்டும். 'பொருள்வயிற் பிரிவு', என்னும் இத்துறை சங்கப் புலவர்களின் நெஞ்சை அள்ளிய துறைகளுள் ஒன்று. இன்பமும் கடமையும் போராடும் இடமாக, நல்ல உணர்ச்சிகள் மோதிக்கொள்ளும் இடமாக இத்துறை அமைந்திருப்பதைக் காணலாம் - தலைவன் தலைவிக்குப் பரிசம் போடுவதற்கு வேண்டிய பொருள் திரட்டுவதற்காகப் பிரிவதை வரைவிடை வைத்த பொருள்வயிற் பிரிவு என்று சங்க இலக்கியம் கூறும்.

எதிர்பாராத முத்தத்திலும் தலைவன் பொருளுக்காகத் தலைவியைப் பிரிகின்றான். தலைவியைத் திருமணம் செய்து கொள்வதற்காக அல்லாமல் தலைவியிடமிருந்து தலைவனைப் பிரிக்கும் முயற்சியாக இப்பிரிவு ஏற்படுகிறது. முத்து வாணிகரோடு பொன்முடியை வடக்கே அனுப்பினால், 'கொஞ்சநாளில் குறைகள் ஒழிந்து விடும்; கொஞ்ச நாள் சென்றால் மறப்பான் குளறுபடி, நெஞ்சில் அவன் மயக்கம் நீங்கும்' என தந்தை நினைக்கிறான். (எ.பா.மு.ப.39) பொருள்வயிற்பிரிவு பாவேந்தரின் காப்பியத்தில் தலைவனைத் தலைவியிடம் சேர்க்கப் பயன்படாமல் அவர்களைப் பிரிக்கப் பயன்படுகிறது.

ஆற்றாமை :

துன்பத்தின் இன்பமே கவிதைக்கும் கற்பார்க்கும் சுவைக்கும் ஆதலின், சங்கச் சான்றோர்கள் பாலைத்துறையை விரும்பிப் பலபடப் பாராட்டினர். தலைவியின் தனிமைத்துயர், புறக்காட்சிகள் அவள் உள்ளத்தைக் கலைத்தல், பிரிந்து சென்ற தலைவன் நல்லபடியாக வர வேண்டுமே என்னும் ஏக்கம், அவன் வந்தவுடன் திருமணம் நடக்க வேண்டும் என்ற நினைப்பு முதலியன தலைவியின் உள்ளத்தை ஆட்கொண்டு அலைக்கழிக்கும். பாவேந்தரின் காவியத்தில் பொன்முடி வடக்கு நோக்கிச் சென்றதால் பூங்கோதை ஆற்றாளாயினாள். தலைவனின் பிரிவால் தூங்காமல் இருந்தாள். ஓர் இரவில் தோட்டத்தை அடைந்த அவள் தன் காதலனைத் தன் தந்தை கட்டிவைத்து அடித்த புன்னையைக் கண்டாள். தொட்டபோதெல்லாம் கலையேறும் நல்லுடம்பை - விட்ட போதின்ப வெறியெடுக்கும் காதல் மெய்யைக் - கட்டி வைத்த காரணத்தில் புன்னையைக் காரிகையாக நினைக்கிறாள். அதனோடு உறவு கொண்டாடுகிறாள். புன்னையில் அவள் உடம்பு, நினைவு சென்று கன்னலின் சாறு போலக் கலந்தது. பெற்றவர் வந்து புன்னைப் பெரு மரப் பட்டை போலப் பூங்கோதையைப் பெயர்த்தெடுத்தார். விழி திறந்தவுடன் 'அத்தான்' என்றாள். கண்ணீர் ஒழுக்கினாள்.

சங்கத் தலைவி தலைவன் வரும்வரைக்கும் ஆற்றியிருப்பாள். பூங்கோதையோ அவன் வரும்வரை காத்திருக்காமல், தானே தேடிச் செல்ல முடிவெடுக்கிறாள். முத்து வாணிகருடன் தனியாகச் செல்கிறாள். வடக்கே தலைவன் பொன்முடியைச் சந்திக்கிறாள். ஜீவமுத்தும் பெறுகிறாள். அவன் இறப்பில் இவள் இறக்கிறாள். (எ.பா.மு. ப.60)

காதலர் இறப்பதாகச் சங்க இலக்கியம் காட்டுவதில்லை. பாவேந்தர் இறுதியில் அவல முடிவிலே முடிக்கிறார்.

> தீந்தமிழர் உயர்வினுக்குச் செத்தான்! அன்பன்
> செத்ததற்குச் செத்தாள் அத்தென்னாட்டன்னம்! (எ.பா.மு: ப.60)

என்று முடிக்கிறார். இவ்வாறு சங்க இலக்கியப் புலமையாளராகிப் பாவேந்தர் மரபு வழியில் காவியத்தை நடத்திச் சென்றார். இடையிடையே தன் புரட்சி உள்ளத்திற்கேற்பப் புரட்சி மாற்றங்களைச் செய்துள்ளார்.

* * *

# பாட்டுடைத் தலைவர்

# பாவேந்தர்

கவிஞர் ஆர். சி. தமிழன்பன்

பாவேந்தர் அவர்களை, முதன் முதலாக 1955ஆம் ஆண்டில் தென்னாற்காடு மாவட்டம் சின்னசேலம் என்ற ஊரில், இலக்கியச் சொற்பொழிவுக்காக வந்தவரைச் சந்திக்கின்றேன். பாவேந்தர் அவர்களுக்கு "வணக்கம்" கூறி அமர்ந்ததுமே 'முகம்' என்ற சொல் தமிழா?" என வினாவினேன், " அது உன் 'முகம்' தான் தமிழா!" வீட்டின் கூரைக்கும் மலையின் உச்சிக்கும் 'முகடு' என மொழிவதில்லையா, அதுபோல மனித உடலின் உச்சிப் பாகத்தை- அதனடிப்-படையில 'முகம் ' என அழைக்கின்றோம்" என்றார்.

பிறகு, பாவேந்தர் அவர்கள் சற்று ஆவேசமாகவே பேசினார். "தமிழ்ப்பகைவர்கள், தமிழ்ச் சொற்களையெல்லாம் வடமொழிச் சொற்களாகவே எண்ணும்படி நமக்கு ஐயத்தை ஊட்டும் கேட்டினைச் செய்கிறார்கள்" என்றார்.

பாவேந்தர்பால் மிகு பற்றுக்கொண்ட என் தமிழாசான் போடிநாயக்கனூர் தசாவதானி கணக்காயர் கான் முகம்மதுப் புலவர் அவர்கள் இக்கருத்தையே ஏற்கனவே என்னிடம் கூறியிருந்தார். ஆகவே என் தமிழன்பு அவர்பால் மேலும் சிறக்க வளர்ந்தது. ஆனால், என் தமிழாசான் கூறியதில் அமைதி இருந்தது. பாவேந்தர் கூறியதிலோ, தமிழின் உணர்வு கொப்பளிக்கும் ஆவேசம் மிகுந்திருந்தது.

வந்தவர் வஞ்சகர் தமிழாற் செழித்தார்
வாழ்வினில் உயர்ந்த பின் தமிழையே பழித்தார்

என்ற பாவேந்தரின் நெருப்பு வரிகள் நம் நெஞ்சத்திலே உணர்வைப் பொங்கச் செய்கின்றன. அவரது 'தமிழியக்கம்' சாமான்யமன்று.

வணிகர் தம் முகவரியை
வரைகின்ற பலகையில், ஆங்
கிலமா வேண்டும்?
மாணுயர்ந்த செந்தமிழால்
வரைக என அன்னவர்க்குச்
சொல்ல வேண்டும்!

என்று கூறுகிறார்.

செந்தமிழின் சிறப்பைச் செப்பி அதன் உயர்வுக்காகப் பாட்டு மூலம் பாடுபட்டவர்களில் பாவேந்தர்தான் முன்னணித் தளநாயகராக விளங்குகிறார். செந்தமிழின் சீர்மையைக் கூறும் போது எத்துணை அழகாகச் சுவையாக ஒளிப்படமாகக் காட்சி தரச் செய்கிறார்.

கனியிடை ஏறிய சுளையும் - முற்றல்
கழையிடை ஏறிய சாறும்
பனிமலர் ஏறிய தேனும் - காய்ச்சுப்
பாகிடை ஏறிய சுவையும்
நனிபசு பொழியும் பாலும் - தென்னை
நல்கிய குளிரிள நீரும்
இனியன என்பேன் எனினும் - தமிழை
என்னுயிர் என்பேன்- கண்டீர்

குளிர்தென்றல் பனிக்கட்டி வரிகளான இவற்றில் சுவை மட்டுமல்ல, நற்றமிழே நம் உயிர் என்பதையும் எடுத்துக் காட்டுகிறார். தமிழ் இல்லையெனின் உயிரற்ற உடலேயாம்.

இசையைவிட - இனிய உறவினரை விட - கவிஞர் காட்டும் காட்சியின்பத்தைவிட அஃதாவது திருக்குறளில்,

கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணேயுள

என திருவள்ளுவனார் கூறியதையும் மிஞ்சி, அத்துணை இன்பங்களையும் அள்ளித் தருவது தமிழ் என்கிறார்.

மங்கை ஒருத்தி தரும் சுகமும் - எங்கள்
மாத்தமிழுக்கீடில்லை

எனத் தமிழின் சுகமான சுவையை - உயர்வான உணர்வை - தெளிவான தேர்வை வரையறுக்கின்றார். உணவு வகைகள் நம் உடலை வளர்த்தாலும் நம் உயிரை - உணர்வை வளர்ப்பது தமிழ் என்கிறார்.

நல்லுயிர், உடம்பு, செந்தமிழ் மூன்றும்
நான் நான் நான்

என எத்துணை அழுத்தமாக ஆழ்ந்த தமிழன்போடு தம் உருவையும் உணர்வையும் தெளிவுபடுத்துகின்றார்.

இத்தகைய உணர்ச்சிக் கவிஞரான பாவேந்தருக்கும் மகாகவி பாரதியாருக்கும் ஏற்பட்ட சந்திப்பே ஓர் இனிமையான நிகழ்ச்சியாகும். திருவாளர் வேணு (வல்லூறு) நாயகர் இல்லத் திருமணத்தில், பாரதியாரின் நாட்டுப் பாடலொன்றைப் பாவேந்தர் பாடுகின்றார். சொல்லும் வண்ணமும் சிறிதுகூடச் சிதையாமல் பாடுவதைக் கேட்ட பாரதியார், வியப்பு மிக்கடைந்தவராய்ப் பாராட்டுகிறார் - தழுவிப் போற்றுகிறார். பாரதியார் விருப்பப்படி பாடிய பாடல்தான்,

எங்கெங்கு காணினும் சக்தியடா! தம்பி
ஏழுகடல் அவள் வண்ணமடா

சொல் நயத்தாலும் வண்ண எழிலாலும் பாரதியாரை ஈர்த்த பைந்தமிழ் பெருமகனார்தான் பாவேந்தர்.

ஏற்கனவே பாரதியாரைப் பற்றி,

பைந்தமிழ்த் தேர்ப்பாகன், அவனொரு

செந்தமிழ்த் தேனீ சிந்துக்குத் தந்தை!

குவிக்கும் கவிதைக் குயில்! இந்நாட்டினைக்

கவிழ்க்கும் பகையைக் கவிழ்க்கும் கவிமுரசு

என்று பாராட்டியுள்ளார் பாவேந்தர். இவரை இனம் கண்டு கொண்டதால் கனக சுப்புரத்தினம் என்ற தன் பெயரைப் பாரதிதாசன் எனப் பரிமளிக்கச் செய்தார்.

இளமையில் நாடக ஈடுபாட்டில் மிகவும் திளைத்திருந்தார் பாவேந்தர் அவர்கள். நெருப்பாற்றிலே நீந்தி வந்த பகுத்தறிவுத்தந்தை பெரியார் அவர்களின் தன்மான இயக்கத்தின் கொள்கைகளும் கோட்பாடுகளும், நாட்டிலே நலமுறத் திகழ, நாடக மேடையிலே நடமாடவிட்டார். பழந்தமிழ் வரலாற்றிலும் அவ்வரலாற்றுக்குப் புதிய பொலிவு மிக்க வடிவமைத்துத்தருவதிலும், மாபெரும் இலக்கியங்களையெல்லாம் ஆழ்ந்து சிந்தித்து ஆற்றலைப் புலப்படுத்திப் பெரும் புகழ் பெற்றார்.

பாவேந்தர் அவர்கள் எழுதிய இனவெழுச்சி நாடகமான 'இரணியன்-இணையற்ற வீரன்' நாடகத்தில் இரணியனாகக் குத்தூசி குருசாமி அவர்களும், பிரகலாதனாகத் திருவாசகமணி கே.எம்.பாலசுப்பிரமணியம் அவர்களும் நடித்துள்ளதை இங்கே குறிப்பிட விரும்புகின்றேன்.

முத்தமிழ் கலா வித்வரத்ன டி.கே.எஸ். சகோதரர்கள் நடித்த 'பாலாமணி அல்லது பக்காத் திருடன்', 'நாதசுரச் சக்கரவர்த்தி டி.என். இராசரத்தினம் அவர்கள் நடித்த 'காளமேகம்' , 'ஆயிரம் தலைவாங்கிய அபூர்வ சிந்தாமணி', 'வளையாபதி' மற்றும் பல திரைப்படங்களுக்குக் கதை , உரையாடல், பாடல்களைத் தீந்தமிழில் எழுதிய பெருமகனார்தான் பாவேந்தர் அவர்கள்.

சீரிய நற்கொள்கையினை எடுத்துக்காட்ட

சினிமாக்கள் நாடகங்கள் நடத்த வேண்டும்

கோரிக்கை பணம் ஒன்றே என்று சொன்னால்

கொடுமை இதைவிட வேறே என்ன வேண்டும்?

பணம் பண்ணும் சாதனமாக மட்டுமில்லாமல் பண்பு வளர்க்கும் நல்ல தமிழ் போற்றும் சாதனமாகவும் விளங்க வேண்டுமெனக் கூறுகிறார்.

பெண்களின் பெருமை, உயர்வு, விடுதலைபற்றி நிறையவே பாடியுள்ளார். 'படித்த பெண்கள்' என்ற நூலின் முன்னுரையில் குறிப்பிடும் போது, பொற்றாலியோ டெவையும் போம்- ஏன்? அவள் படித்தவள்; தன் துணைவனுக்கு நற்றுணையாயிருந்தவள். உயிரின் இயற்கையாகிய காதல் வினைக்குக் கன்னலிசை; உடலுக்கு உயிர் ஆதலால்!"

படித்த பெண்கள் இந்நாட்டிற்கு இன்றியமையாதவர்கள். பெண்கள் அனைவரும் படிக்க வேண்டும். அவர்கள் ஆண்களோடு சரி நிகரானவர்கள் என்பதைப் பற்பல நிலையிலும் எடுத்துக் கூறுகிறார். குடும்ப விளக்கான பெண்களைக் குன்றின் மீதிட்ட விளக்காகப் போற்றிப் பாடுகிறார். ஒரு குடும்பத்தின் முன்னேற்றத்திற்கு அடிப்படைக் காரணமாக விளங்குபவர்களே பெண்கள். அத்தகைய "குடும்ப முன்னேற்றமே நாட்டின் முன்னேற்றம். நலல குடும்பம் பல்கலைக் கழகம்" என்ற பாவேந்தர் அவர்களின் பெயரால் அமைந்திருக்கும் பல்கலைக்கழகத்தால் நாடு முன்னேற, குடும்ப முன்னேற்றம் காணும் பெண்களின் விடுதலையை - முழுமையாகக் காணுவோம்.

மேலும், ஆங்கில ஆதிக்கத்திலிருந்து நாடு விடுபட - விடுதலை வேட்கை மிக்குடையவராய் பாரதியார், வ.வே.சு, டாக்டர் வரதராசுலு, அரவிந்தர் போன்றார்க்குப் புகலிடம் அளித்தவர் பெற்றோர்க்குத் தெரியாமல், வடித்த சோற்றை மேல்துண்டில் கட்டி எடுத்துச் சென்று கொடுத்தவர். அந்நாளில், கதர்த் துணியைத் தோளில் சுமந்து தெருத்தெருவாக விற்று சுதேசி இயக்கம் வளர அருந்தொண்டாற்றியவர் பாவேந்தர் அவர்கள்.

பல்வேறு நிலையிலும் - பல்வேறு துறையிலும் பாவேந்தரின் பாட்டுத்தொண்டு, நாட்டுத் தொண்டுக்குரிய நல்லிளைஞர் பட்டாளத்தைப் பெருக்கியது. அன்பர் முருகு. சுப்பிரமணியம் அவர்கள் நடத்தி வந்த 'பொன்னி' என்ற இலக்கிய இதழ், 'பாரதிதாசன் பரம்பரை'யை உருவாக்குமளவிற்கு பாவேந்தரின் கவிதைப் புலம் செழித்திருந்தது. இன்றைய பெருங்-கவிஞர்களின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும், அதன்மூலம் பகுத்தறிவுக் கொள்கைகள், பெண்கள் முன்னேற்றம் போன்ற விரிவான எண்ணங்கள் உள்ளங்களில் உருப்பெற்றன.

பாவேந்தர் அவர்களின் கவிதைப் பணியைப் போற்றிப் பேண வேண்டுமென்ற பெருநோக்கோடு, பேரறிஞர் பெருந்தகை அண்ணா அவர்களால் *29.7.1946* இல் 'புரட்சிக்கவிஞர்' எனப்போற்றி, பொற்கிழி (ரூ.*25,000/-*)யும் தரப்பெற்றது.

பாட்டால் உயர்ந்த பெருங்கவிஞர் மட்டுமல்ல; தன்பாட்டை நாட்டோர் - நல் இலக்கியவாணர் அனைவரும் புகழ்ந்து பாராட்டி - போற்றிப் பாடவே - பாவேந்தர் அவர்கள் பாட்டுடைத் தலைவராகவே விளங்குகிறார். *9.4.1891*இல் மலர்ந்த இக் கவிமலர் *21.4.1964*இல் இயற்கை எய்தியது.

இயற்கையோடியற்கையாக இயற்கை அழகின் சிரிப்பாக, எங்கெங்கும் இனிதுற கவிதை அழகாகவே காட்சி தருகின்றார்.

வேம்பின் கசப்பாக விளங்கும் பகுத்தறிவுக் கொள்கைகளைக் கரும்பின் தீஞ்சாறாகச் சுவைபட வழங்கியவர் - புயலின் ஆவேசத்தை விடக் கடுமையான மறுமலர்ச்சிக் கருத்துக்களைத் தென்றலின் தழுவலாகத் தந்தவர் - வெடிக்கும் எரிமலையின் பொறி பறக்கும் கனலாக எரிக்கும், சமுதாயச் சீர்திருத்தக் கருத்துக்களைக் குளிர் புனலின் ஊற்றாக வார்த்தவர்.

'அழகின் சிரிப்பு'க் காட்டி, 'இருண்ட வீட்'டிலே 'குடும்ப விளக்கு' ஏற்றிய கொள்கைச் செம்மல்! 'குறிஞ்சித் திட்டி'லே பழந்தமிழ் மரபு செப்பி, பைந்தமிழ் அன்னைக்குப் 'பன்மணித்திரள்' அலங்கல் சூட்டிய மாமன்னர்!

'தமிழச்சியின் கத்தி' நீட்டி, 'சேர தாண்டவம்' நிகழ்த்தி, 'பாண்டியன் பரிசு' வழங்கிய வள்ளல்! 'இரணியன் இணையற்றவீரன்' என 'அமைதி' யாக 'நல்ல தீர்ப்பு' நல்கிய நீதிபதி!

'காதலா? கடமையா?' என 'காதல் நினைவுகளி'ல் இனிக்கும் 'ஒரே முத்தம்', அதுவும் 'எதிர்பாராத முத்தம்' எழில்மிகு தமிழுக்குத் தந்த காவியத் தலைவன்! 'படித்த பெண்களாக' பாரினில் விளங்க வேண்டுமென பாத் தொடுத்த பாவாணர்.

'கண்ணகி புரட்சிக் காப்பியம்', 'மணிமேகலை வெண்பா', 'பிசிராந்தையார்' ஆகிய 'இசையமுது' பொழிந்த இசைவாணர்! 'அமிழ்து எது?'வென கேட்போர்க்கு அமிழ்து தந்து 'ஆத்தி சூடி' அமர்ந்த தேவன்!

இன்னும் ஏராளமான கவிதைகளைத் தந்து 'பாரதிதாசன் கவிதைகளா'கவே நிலைத்து விட்ட பண்புப்பாட்டாளர் பாவேந்தரை, நம் நாவேந்தி நெஞ்சாரப் போற்றுதல் கடமையாகும்.

பாவேந்தர் நூற்றாண்டு பொலிக! வெல்க!

* * *

# பாக்குண்டு வீசியவன்

ஆ. அரிமாப் பாமகன்

முன்னை உலகாண்ட மூவாத் தமிழ்ப்பெருமை
பின்னை உலகோர்க்குப் பேசியவன் - இன்னலிலே
செந்தமிழ்ச் சாதி சிறுமை யுறக்கண்டு
வெந்தணலாய்ப் பாக்குண்டு வீசியவன் - சிந்துக்குத்
தந்தை பதித்த தடத்தினிலே பண்ணிசைத்து
முந்துரிமைச் செந்தீயை மூட்டியவன் - எந்தமிழர்
பண்பாடு வீரம் பழகியநல் வாழ்க்கையெலாம்
கண்ணாடி போல்எமக்குக் காட்டியவன் - வெண்தாடி
வேந்தர் நெறியில் வெகுண்டெழுந்தே இந்நிலத்து
மாந்தர் உரிமைநிலை நாட்டியவன் - ஓந்திகளின்
சம்பிரதாயச் சாதிமதச் சாக்குருவி வேதாந்த
வெம்பகையைப் பாட்டெடுத்தே ஓட்டியவன் - வம்புமொழி
எத்தனை பட்டாளம் கூட்டி வரும், அதை
'மொத்து'எனச் சங்கம் முழங்கியவன் - சித்திரமாய்த்
தோய்ந்த புலமையினால் தூயதமிழ்த் தென்னாடு
வாய்ந்த இயற்கை வழங்கியவன் - ஆய்ந்துணர்ந்து
பெண்ணடிமை தீர்ந்திடவும் பெண்தலைமை ஆர்ந்திடவும்
எண்ணத்தில் வெங்கனலை ஏற்றியவன் - மண்ணடிமை
தீர்ந்து சிறப்பெய்தச் சிங்க இளையோரைச்
சார்ந்து வினைபுரியச் சாற்றியவன் - சேர்ந்துழைக்கும்
பாட்டாளி மக்கள் பயன்பெறவே பாட்டெழுதி
ஏட்டுத் தமிழ்சிறக்க ஏற்றியவன் - பூட்டவிழ்ந்த
பூவேந்தும் தேன்ஆறாய்ப் பொங்கிப் பிலிற்றியவன்
பாவேந்தர் பாரதிதா சன்.

* * *

# வெற்றியே பெற்று விளங்குக நிலைத்து!

கவிஞர் நெய்வேலி சோழன்

நல்ல குடும்பம் பல்கலைக் கழகம்
சொல்ல இனிக்கும் சுவைத்தொட ராலே
பல்கலைக் கழகப் பணியெது? வென்றால்
நற்குடும் பங்களை நாளும் வளர்த்தல்
சாதி யென்னும் சழக்கினைச் சொல்லி
நீதியைக் கொல்லும் நிலையினை அழித்தல்
உழைப்போர் கரங்கள் உயர்வினை அடைய
விழைவுடன் நெறிகளை விளக்கி யுரைத்தல்
ஆணினைப் போலவே பெண்ணினம் சிறக்கப்
பேணி யவர்தம் பெருமையை வளர்த்தல்
தமிழர் குருதியின் தனித்திறச் சான்றினை
அமிழ்தென நம்மோர் அறிந்திடச் செய்தல்
இமிழ்கடல் உலகில் இலக்கியம் அறிவியல்
தமிழ்மொழி தன்னிலே தருக்கிடச் செய்தல்
போரிடும் உலகை வேரொடு சாய்த்து
பாரிடந் தன்னில் பண்பை வளர்த்தல்
மூடத் தனத்தை முழுதும் அழிக்கப்
பாடம் மூலம் பயிற்சி யளித்தல்
தேடும் செல்வப் பயனே யுலகில்
நாடும் நலத்தில் மகிழச் செய்தல்
பழகும் இந்தப் பண்பிலே சிறந்தால்
அழகின் சிரிப்பிலே அகிலமே மகிழும்
எனசமு தாயச் சிற்பியாய் நமக்கு
மனங்கொளச் சொன்ன பாரதி தாசனின்
பெயரில் விளங்கும் பல்கலைக் கழகம்
அயர்வது வின்றி யவர்தம் கருத்தை
பெற்றிடக் கொடுத்துப் பெரும்புக ழோடு
வெற்றியே பெற்று விளங்குக நிலைத்து!

* * *

# பாட்டிலே பதிந்த பண்பாட்டுச் சுவடு

முனைவர் இர. குழந்தைவேலு

## 1. பீடுருவினர் பாரதிதாசனார் :

இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில், பிறமொழிக்குத் தமிழர் ஆட்பட்டனர்; தமிழாற்றலை நழுவவிட்டனர்; தமிழ் மரபோ தமிழ்ப் பற்றோ பேணவியலாது பெருந்தூக்கத்துள் வீழ்ந்தனர்.

அத்தமிழர்க்கு முன்னணிப் பாவாணர் சிலர், தம் எழுச்சியால் தமிழுணர்ச்சி தந்தனர்; குன்றா முயற்சியோடு முனைந்து நின்று, அந்நாளில் இருந்த அவல நிலை மாற வேண்டும் என்று விரும்பினர்; மாற்றப் பாடுபட்டனர். அத் தாழாத் தளராப் பெருமுயற்சியால், அந்நாளில் தமிழரைச் சூழ்ந்த கெடுவகை அறியாமை அகன்றது. இத்தகு நன்னிலை வரப் பாடுபட்ட பாவாணர் நிரலின் பீடுருவினர் பாரதிதாசனார்.

## முழுநிறை பண்பாளர் :

அவர் அஞ்சா நெஞ்சுடைத் தமிழர்; தமிழ் மொழியின் நல்லுயர்வே தம்முயர்வாகக் கொண்டவர். எங்காவது தமிழுக்கு ஊறு எனின், நெஞ்சு பொறுக்காது அவர் துடிதுடிப்பார்; நிமிர்ந்தெழுந்து நிற்பார்; தயங்காது போராடுவார்; தம் வல்லமையால் அங்கிங்கென்னாதவாறு எங்கும் அதன் தலை காண்பதும் அரிதாக, அதனைத் தலையெடுக்கவொட்டார்.

இவ்வாறு விழிப்போடு தமிழ்ப் பெருமை காத்து, நலப்பேறுகள் கொழிக்க நெறியாகத் தமிழின் தனித்தன்மை வளர்க்க முற்பட்ட தனிப்பெருந்தகையாளர் அவர். ஆதலால் தமிழ்ப் பெருமக்கள் நாவிலும் செவியிலும் கருத்திலும், அப் பெருந்தகையாளர் நிலைத்து நிற்கின்றார். அவர்தம் அளவிலாத் தமிழன்பின் அருமை அறிந்து நாடே ஏடுகளால் ஏற்றலும் பாவின் பெருமைபோற்றலும் செய்யத் தவறவில்லை. அவர் பெருமை இந்நெறியில் நாளும் வளர்கின்றது.

தமிழைத் - தமிழ்ப் பண்பாட்டைத் - தம் உயிர் மூச்சாகக் கொண்டார் அவர். ஆதலால் முழுநிறைப் பண்பாளராக அவர் வாழ்ந்தார். அம் மேம்பாட்டோடு வாழ்ந்த அவர்தம் பாட்டிலே பொங்குவளங் கண்ட தமிழ்ப் பண்பாட்டுச்சுவடு பதிந்துள்ளது. களங்கமில்லாப் பண்பாட்டுச் சுவடு அது. அதற்குத் தனித்தன்மை உண்டு. அது பொருள் செறிந்தது; இலக்கியப் பண்பாட்டு நலம் பெற்றது.

## பண்பாட்டுச் சுவடு :

இந்நெறியில் பாரதிதாசனார் தம் தமிழ்த் தேனின் முழுவிளைவைத் தமிழ்மக்கள் துய்க்க, ஒரு தூண்டுதலாகும் நூற்றாண்டு விழாக் கொண்டாட்டம் சிறக்கும் காலம் இது. இதனைச்

சிந்திக்கவே அத் தனித்தன்மை வாய்ந்த தமிழ்ப்பண்பாட்டுச் சுவடு, இங்கே ஆழ்ந்து கருதத்தக்க முதன்மை கொண்டது என்பது இனிது விளங்கும். அதனைச் சற்று ஊன்றிக் கண்டறிந்து மகிழ்தல் தகும்.

## 2. ஒப்பியல் முறை :

பாரதிதாசனார்தம் பாட்டிலே தனித்தன்மை காட்டும் பண்பாட்டுச் சுவட்டின் ஒரு கூறு, ஏற்றத்தோடு பதிந்திருத்தலை இனிக் காணல் வேண்டும். இக் காணலுக்கு முன்னர், அப் பண்பாடு எது என்பதனைத் தொடக்கத்தில் காணல் தகும். அடுத்து அதன் தனித்தன்மை கொண்ட ஓர் எடுத்துக்காட்டினைக் காட்ட முயலுவதே இங்குப் பொருந்துவதாகும்.

வெளியிலக்கியத்தோடு ஒத்திட்டுவைத்துப் பார்க்கும் ஒப்பீட்டைக் கொண்டே தமிழிலக்கியப் பண்பாட்டுத் தனித்தன்மை அறிதல் பொருந்தும். இன்று உலவி வரும் கருத்து இது. இதற்குத் தகச் சாகுந்தல நாடகமும், திருக்குறளும் கொண்ட இரு முதற் காட்சி நிலை, ஒப்பியல் முறைக்கு ஒத்து அமைகின்றது; அத் தனித்தன்மையைக் காட்டுகின்றது. ஆதலால் இப் பெருநூல்களுள்ளும், தனித்தனியே முதன் முதலில், தலைவியின் தோற்றத்தைத் தலைவன் கண்ட காட்சிகள், ஒப்பியல் முறையில் இங்கு உடன் நிறுத்திக் காணுதற்கு வேண்டும்.

## தமிழிலக்கியப் பண்பாடு :

முதலிற் 'சாகுந்தல நாடகம்' செய்த காளிதாசர் காட்டும் தலைவனைச் சிறிது நோக்குவோம். இளஞ் செடிகளுக்குச் சகுந்தலை தண்ணீர் விடத் தலைப்பட்டாள். அப்போது அவள் காணாது, மரங்களின் பின்னே அவன் மறைந்து நின்றான்; அவளைக் கண்ணாரக் காணவே விரும்பினான்.

சகுந்தலையின் மார்பகத்தைப் பொதிந்துகொண்ட கச்சு, இறுக்கிக் கட்டப்பெற்றிருந்தது. அவ்வேளையில் அதன் வருத்தம் போக்க அவள் நினைந்தாள். ஆதலால் அதனைத் தன் தோழி அனசூயை துணையாக அவள் நெகிழ்த்துவிடச் செய்தாள்.[1] அந் நெகிழ்ச்சி நிலையில், அவள் மார்பகத்தைத் தகவிலாது அவன் கண்டான்[2]. உடல் நலம் சுவைக்கும் நோக்கில் அவன் இறங்கிக் காமங்கொண்டான். அவன் தன் பண்பாட்டில் தாழ்ந்தான்.

இதற்கு நேர்மாறாகத் திருவள்ளுவர் தந்த தலைவனைச் சற்றுக் காண்போமாக.தலைவியைத் தனியனாய்த் தலைவன் கண்டான். அவன் கண்டபோது, அவள் மார்பகத்தின் மேல் ஆடை கிடந்தது. அவனைத் தகவோடு செம்மையிற் சேர்த்தது அது. இவ்வாறு மறைப்பாக ஆடை மூடிக்கொள்ளத் தலைவியின் பண்பாடு மிக்க முதற் காட்சி நிலையைக் குறள் கூறுகின்றது. அது வருமாறு உளது:

> கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்
> படாஅ முலைமேல் துகில்[3]

இவ்வாறு ஒப்பிட்டுக்காணவே இலக்கியப் பெருமக்கள் இருவரும், தலைவிக்கு ஆடையைக் காட்டும் இருவேறு முறைகளில் வேற்றுமை காணப்பெறுகின்றது. அவ் வேற்றுமையைக் கொண்டு, தனித்தன்மையோடு தமிழிலக்கியப் பண்பாட்டின் ஒரு கூறு தேர்தல் இங்கு எளிதாயிற்று என்பதில் ஐயமில்லை.

## ஆளும் திறன் :

மேலே சற்று முன்னர் ஒப்பியல் முறையில் அறிந்த, தமிழிலக்கியப் பண்பாட்டின் ஒருகூறு, பாரதிதாசனார் தம் ஆளும் திறனோடு அவர்தம் பாட்டுலகில் பதிந்திருக்கின்றது. அப்பண்-பாட்டுச்சுவட்டினைக் கண்டு இங்கு விளக்கத் தலைப்படுதலே பொருந்துவதாகும். அவ் விளக்கத்தில் இனிக் கருத்துச் செலுத்தலாம் .

### விலக்காத உடை :

இன்பம் தரும் தென்றலைக் குறித்துத் தொகையாக ஓரிடத்தே பாரதிதாசனார் பாடினார். தென்றல் வரவே அதனைத் தடுக்கத் தமிழ்ப் பெண்மக்களும் முயல்வர் அல்லர் என்றார் அவர். இவ்வாறு தென்றலுக்கு இருக்கும் நல்வரவேற்பினைப் பாராட்டினார் அவர். இப் பாராட்டில் தென்றலின் குறும்பாக அவர் குறிப்பிடும் ஓரிடத்தில், ஒரு பண்பாட்டு நுட்பத்தைப் பொருத்திக் காட்டினார். அகத்தின் அகமாக அது நுணுகி நுணுகிச் செல்கின்றது. இங்குக் கருதத்தக்கது அது.

தமிழ் மகளிர் தம் கச்சணிந்த மார்பின்மேல் துகில் இடுவர். இவ்வழக்கமே தமிழ் நிலத்து ஓர் ஒழுக்கமாகும். அவ்வாறு இட்ட துகிலை அம் மகளிர் விலக்கத் துணியார். அத் துகில் விலகினும் அதனைக் காத்துக் கொள்ளத் தயங்கார்; தவறார்.

தென்றலின் குறும்பென பாரதிதாசனார் ஒன்றனைக் கண்டார். அதனைத் தாம் கண்ட ஒரு செயல் வழியில் அவர் அழுத்தமாக அறிவித்தார். அவ்வறிவிப்பில் மேற்கண்ட இயல்பமைந்-திருக்கின்றது;

. . . . . . . . . . . . . . . . . . பெண்கள்
விலக்காத உடையை நீபோய்
விலக்கினும், விலக்கார் உன்னை![5]

இவ்வாறு தமிழ் நிலத்து மகளிர் அணிந்த மேலாடையைச் சிறிதும் விலக்கார் என்னும் ஓர் அகத்தன்மையைத் தம் பாட்டிலே அவர் தூய்மையாகப் போற்றிப் பதித்தார். இது பிறர் பழித்தற்கு இடந்தராதவாறு அமைந்திருக்கின்றது. தமிழ் மகளிரிடத்துக் காணப்பெறும் ஓர் ஒழுக்கத்தைத் தம் பாட்டிலே வைக்கவேண்டும் செவ்வியில் அவர் வைத்தார். அது நாகரிகம் குன்றாது பொலிகின்றது என்பது இங்கு இன்பம் விளைக்கின்றது. இவ்வகையில் தமிழ்ப் பண்பாட்டிற்கு அவர் தந்த மதிப்பைக் காட்டுதற்கு, மேற் கண்ட செய்தியைக் காட்டாகச் சொல்லாம்.

### ஆடை திருத்தம் :

'பெண்கள் விலக்காத உடையை'க் குறித்த பார்வையைத் தந்த பாரதிதாசனார், அடுத்துத் தம் பாடலுள் காட்டும், 'ஆடை திருத்தி நின்றாள்' ஒருத்தி நின்ற இடமும் காணுதற்குரியது. அவளுக்கு இனியானைக் காண்பாளாயினாள் அவள். அக்கண்ணாளைக் கண்டான் அவன் அந்நோக்கு எதிராக நோக்குதலை அவள் விலக்கினாள்.

இருவரும் எதிரெதிரே கண்டனர் என்று பாரதிதாசனார் காட்டவில்லை. இக் காதல் கடக்காத இருவர் நோக்கில், இருவருக்கும் எதிரெதிரே முன்னைத் தமிழ் மரபே நிற்கின்றது:

கூடத்திலே மனப் பாடத்திலே - விழி
கூடிக் கிடந்திடும் ஆணழகை,
ஓடைக் குளிர்மலர்ப் பார்வையினால் - அவள்
உண்ணத் தலைப்படு நேரத்திலே
பாடம் படித்து நிமிர்ந்த விழி - தனிற்
பட்டுத் தெரித்தது மானின்விழி

ஆடை திருத்தி நின்றாள் அவள்தான் - இவன்
ஆயிரம் ஏடு திருப்புகின்றான்![6]

அவன் தன்னைக் காணுங்கால் அவள் கண்டாளல்லள். ஆயினும் பார்க்கும் அப்போதே அவள் தனதாடையைத் திருத்தினாள். இவ்வாறு ஆடையைத் திருத்தச் செய்தது, அவள். தன் உள்ளத்திலிருந்து நழுவவிடாத தமிழ்ப் பண்பாடே என்று சொல்லத் தோன்றுகின்றது. அவனைக் காணுமுன், அது விலக்காத ஆடை ஆதலால், அதனைச் சிறிதும் குலையாதவாறு, அவள் வரும்போது திருத்தம் செய்தே வந்தாள் எனக் கொள்ளலும் கூடும். இதனால் அவள் மேலாடையினிடத்து வைத்த பெருமதிப்பே வெளிப்படுகின்றது. பண்பாட்டு நோக்கில் அவள் அம் மேலாடையைப் போற்றினாள் என்பதும் இங்கு விளங்குகின்றது.

பாரதிதாசனார் தம் பாட்டிலே ஆடை தரும் பண்பாடு, இவற்றோடு நிற்பதன்று. இவற்றிற்கு மேலும் அது முன்னைப் பண்பாட்டு மரபின் பிழிவாக, ஒளி, இருள் என்னும் இரண்டனைத் தழுவிச் செல்லுகின்றது. அதனைச் சில காட்டுக்கள் துணையாகத் தொடர்ந்து காணலாம்.

## நீலவான ஆடை :

இப் பிற்பகுதியின் தொடக்கத்தில் காணப்பெறும் ஒளி என்பது, அது நிற்கும் நிலாவைக் குறிப்பிடுகின்றது. இங்கே குறிப்பிட்டுக் காணும் பண்பாட்டு அடிப்படையில், நிலாவின் இடமதிப்பறியத்தக்கது.

குளிர் வடிக்கும் வட்ட நிலா அது, அந் நிலவே, ஒருத்தியின் முகமாக ஒருவனுக்குத் தோன்றுகின்றது. அம்முகத்தாளே முத்துச் சுடர் போல ஒளி பொழிந்தாள்; தக்க ஆடை அணிந்தாள் நீலவானமே அவளுக்கு ஆடையாகின்றது.

குளிர் அவள் உடலைப் பற்றும்; அவளுக்கு இடர் விளைக்கும். ஆதலால் முழுதும் உடலை ஆடையால் மறைத்தலோடு தன் தலைக்கு அவள் முக்காடிட்டும் கொண்டாள்:

நீலவான ஆடைக்குள் உடல் மறைத்து
நிலாவென்று காட்டுகின்றாய் ஒளி முகத்தை[7]

நீலமுக் காட்டுக் காரி
நிலாப்பெண்ணாள்.[8]

இவ்வாறு உடல் மறைக்கும் வழக்கத்தைத் தமிழ் மகளிர்க்குக் காட்டுதல், அம் மகளிர்தம் பாண்பாட்டு மனப்பாங்கிற்கு ஏற்றதொன்றாகும்.

## முத்துப் போர்வை :

அடுத்து இருட்டே பெண்ணாகத் தோன்றும் காட்சியைக் காணல்வேண்டும். பாரதிதாசனாரே தம் வல்லமையால் அக் காட்சியைக் காட்டுதல் வேண்டும். அவரும் அக் காட்சியைக் காணுதற்கு வழி காட்டினார். அவர் கூறும் முறையால் அவள் தோற்றம், போர்வை , கருங் கூந்தல், கொண்டை எல்லாம் உணர்த்தலாயினார்.

இல்லறங் கண்ட தலைவன் ஒருவன் அருகே அவன் வாழ்க்கைக்குத் துணைநலமாகும் தலைவி ஒருத்தி நின்றாள். பேராண்மை கொண்ட அவனும் இருட்பெண்ணாளைக் கண்டான்.

இருள் மண்டிக்கிடக்கும் இரா வேளை அது. அவ் வேளையில் பொலிவோடு இருட்-பெண்ணாள் நின்றாள். அவளுக்கோ ஒளிபடைத்த கண்கள். அவள் மேனியில் போர்வை இருந்தது. பண்பாடு காக்கும் போர்வை அது. முத்துக்கள் போன்ற உடுக்கள் தைக்கப்பெற்ற போர்வை அது. ஆதலால் அவள் அணிந்த போர்வையைக் கண்டான் அவன். அவள் தன் கருங் கூந்தலில் வயிர வில்லையாகும் நிலாவைப் பெய்திருந்தாள். எனவே அவளுக்குக் கொண்டை உண்டு என்று அவன் கண்டான்:

கள்ளரை வெளிப் படுத்தும்
இருட்பெண்ணே, கதைஒன்றைக் கேள்:
பிள்ளைகள் தூங்கி னார்கள்;
பெண்டாட்டி அருகில் நின்றாள்;
உள்ளமோ எதிலும் ஒட்டா,
திருக்கையில், நிமிர்ந்தேன், நீயோ
வெள்ளைமுத் துக்கள் தைத்த
போர்வையை மேனி போர்த்தே
மண்முதல் விண் வரைக்கும்
வளர்ந்தஉண் உடல் திருப்பிக்
கண்மலர் திருப்பி நின்றாய்!
பின்புறம் கரிய கூந்தற்
கொண்டையில் ஒளியைக் காட்டும்
குளிர்நிலா வயிர வில்லை
கண்டேன்; என் கலங்கும் நெஞ்சம்
மனைவியின் திருமுன் செல்லும்![9]

இவ்வகை நோக்கினால் பாரதிதாசனார்க்குத் தமிழ்ப் பண்பாட்டு ஒளியே அந் நிலா மகளுக்கும், இருட்பெண்ணாளுக்கும் ஆடை தேர்தலில், வழிகாட்டிற்று என்பது இங்கு ஏற்படுகின்றது.

### 4. முடிவாகப் பண்பாடு அறிக :

இவ்வாறு பாத்திறன் காண் நோக்கோடு பாரதிதாசனார்தம் பாட்டிலே கண்ட பண்பாட்டுச்சுவடு, தமிழ்ப் பெண்களுக்கு அவர் அளித்த மதிப்பினைப் பேரளவில் காட்டுகின்றது. அப் பெருமதிப்பே அவர்தம் அளப்பரும் பண்பின் பெருமையைப் பாராட்டிக் கூறுகின்றது. இவ்வகையில் அவர்தம் பாட்டிலே அமைந்த பண்பாட்டுச்சுவடுகள் பற்பல உண்டு. இத்தகு பண்பாட்டுப் பார்வையால், முழு அளவில் அவர்தம் பாட்டினைச் சுவைக்க முன்வருவோர், தமிழ்ப் பண்பாட்டுச்சுவடு அறிதலே தக்கது எனச் சொல்லுதற்கு இடன் உண்டாகின்றது.

### அடிக்குறிப்புக்கள்:

1. காளிதாசர், சாகுந்தல நாடகம், (தமிழாக்கம் : மறைமலையடிகள்) சைவ சித்தாந்த கழகம், சென்னை, 1957, பக் 10-12.
2. மறைமலையடிகள், சாகுந்தல நாடக ஆராய்ச்சி, சைவ சித்தாந்த கழகம், சென்னை, 1960, ப.48.

3. K. Kothandapani, , Thirukkural-Kamathuppal, The Sornammal Endoment Lecturers-University of Madras, Madras, 1962, pp.61.62.

4. திருக்குறள், 1087.

5. பாரதிதாசன். அழகின் சிரிப்பு, தென்றல், செந்தமிழ் நிலையம், திருச்சி, 1954, பாட்டு: 5.

6. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், காதற் குற்றவாளிகள், செந்தமிழ் நிலையம், திருச்சி, 1964, பாட்டு:2.

7. பாரதிதாசன் கவிதைகள், புரட்சிக் கவி, ப. 20

8. அழகின் சிரிப்பு, குன்றம், பாட்டு:9.

9. அழகின் சிரிப்பு, இருள், பாட்டுக்கள்:4,5.

* * *




கலைமாமணி மனசை. ப. கீரன்

புதுவையிலே, சென்னையிலே குயில்தான் கூவப்
புதுப்பாதை வேய்ந்திட்டான்! கதிரோன் சுற்றி
அதுவதுதன் பாதையிலே அணியாய்ச் செல்லும்
அமைப்பேபோல் ஆளுமைகொள் கவிஞர் பல்லோர்
பொதுவுடைமைத் தனிவாழ்வைக் காட்டிச் செல்வார்!
புதுப்புதுநற் கவிஞர்கள் அணியிற் சேர்வார்!
மதுமொய்க்கும் தேனீபோல் பல்கும் கூட்டம்!
வளர்த்திட்டான்! கவியுலகின் கதிரோன், என்பேன்!

நகரினிலே புதிதான தியாக ராய
நகர்என்னும் கிளையில்பாக் குயில்தான் தங்கும்!
மிகநன்றால் ஈர்ப்புவிசை போலே ஈர்த்து
விரிந்தோங்கு பசுமரத்தில் ஆணி போலே,
அகம் இருந்தும் திரைப்படத்தால் தமிழைப் போற்ற
ஆர்வமிக்கார்! அல்லலுற்றார்! தமிழர் வாழத்
தகவில்லார் தயவெல்லாம் விழைந்தார்! தாங்கும்
தாயேபோல் கருசுமக்கும் அன்னை, என்பேன்!

வணங்காதான்! சழக்குகளைச் சாடும் பாவான்!
வாய்த்ததமிழ் முழங்குமன்றின் குரலால் வாழ்வான்!
சுணங்காதான் உள்ளத்துள் உளவே பாக்கள்,
சொல்விதிக்கும் இலக்கியமே இவன்பா! எங்கும்
இணங்காதான்! மோதுபுயல்! தனியோர் ஆண்மை
ஏற்றுயர்ந்தான்! ஆசிரியர் பணிக்கும் மேன்மைக்
குணங்குவித்தான்! குலவிளக்கு! அவன்போல் எங்கே
குறிகாண்போம்? விடிவெள்ளி அவனே, என்பேன்!

* * *

# பாவேந்தர் புகழ் வாழ்க!

இலாவை. புகழேந்தி.

தமிழா எழு! தனையே உணர்! தலையேநிமிர்ந் திருப்பாய்!
அமிழ்தாம்நிகர் மொழியாம்தமிழ் உயிராய்வளர்த் திடுவாய்!
அணையாவிளக் கெனவேஒளிர்ந் திடுவாய்நில மிதிலே!
இணையே உனக் கிலையேஎனும் நிலையேஅடைந் துயர்வாய்!

முறையாம்நெறி பலகூறிநல் அறிவாம்வழி மொழியும்
மறையாம்திருக் குறள்கூறிடும் நெறிபேணிடல் நலமாம்!
இனமானமும் தமிழ்மானமும் விழியாகிடும் நமக்கே
இனிதாகிடும் செயல்யாவையும் வகுத்தேவளர் தமிழா!

பகுத்தேஅறி அதனால்உள அறியாமையும் விலகும்!
மிகுத்தேவரும் துயர்யாவையும் தகர்த்தேவிடு நகையால்!
துணிவாயிரு! பிறர்வாழவும் துணையாயிரு இனிதாய்!
புணைபோலிரு! கனிவாயிரு! விழிப்போடிரு வலிதாய்!

இதுபோல்பல கருத்தேஅமை நறும்பாக்களும் அளித்தே
மதியாம்வழி நமையேசெல வழியே அமைத் துவந்தார்!
இருளோட்டிடும் எழுஞாயிறின் கதிர்வீச்செனும் நிலையாய்
மருளோடிட உணர்ந்தேஎழச் செழும்பாடலும் பகர்ந்தார்!

நிலைமாறிடும் நரிபோன்றவர் பிழையாம்செயல் கெடவே
"கொலைவாளினை எடடா!" என வலிதாகவும் கடிந்தே
இடியாமதன் முழக்கேஎனத் தமிழ்பாரதி தாசன்
படிமீதினில் நிலையாம்தமிழ் வளர்த்தார்புகழ் பெரிதே!

* * *



# பாவேந்தர் படைப்புக்களில் பெண் விடுதலை

*முனைவர் செயராணி ராசதுரை*

பெண்ணிய (**Feminism**) நோக்கில் "பெண்விடுதலை" என்னும் கருத்துப் படிவத்தை அளவையாக(**Scale**)க் கொண்டு, பாரதியார், பெரியார் ஆகியோரது பெண் விடுதலைக் கருத்துக்களோடு ஒப்பிட்டு, பாவேந்தரின் படைப்புகளை ஆராய்ந்து மதிப்பிடுவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### பெண்ணியமும் பெண் விடுதலையும் :

"சமத்துவம்" என்பதைக் கொள்கை அளவிலும், "சமமின்மை"யை நடைமுறை வாழ்விலும் கொண்டுள்ள உலகச் சமுதாயங்கள் அனைத்திலும் சமுதாய மாற்றத்திற்குப் பின்னர், பெண்களின் நிலை சிக்கல் நிறைந்த ஒன்றாகக் கருதப்படுகிறது. ஆண்களுக்கு நிகரான சுதந்திரத்தையும், சமத்துவத்தையும் பெண்களும் பெறவேண்டும் என உலகெங்கிலும் உள்ள பெண்ணியக்க அமைப்புகள் வலியுறுத்தி வருகின்றன. இவ்வமைப்புகள், பெண்ணியக் கோட்பாட்டினை மையமாகக் கொண்டு செயலாற்றுகின்றன.

பெண்ணியக் கோட்பாடு, பின்வரும் மூன்று முக்கியக் குறிக்கோள்களை உள்ளடக்கியது. **(Eastman, 1975 : 51-57)**

1. பெண்ணினம் அடைய வேண்டிய இலக்கு பெண் விடுதலையாம்.

முக்கியமானதும் முதன்மையானதுமான இக்குறிக்கோள், தனிச் சொத்துடைமையற்ற சமத்துவ உலகைப் பெண்விடுதலையோடு இணைக்கின்ற கம்யூனிச சித்தாந்தத்தில் இருந்து மாறுபட்ட ஒன்றாகும். பெண்களும் மனிதப் பிறவிகள் தாம். தங்களது பன்முக ஆற்றல்களையும் திறமைகளையும் பலவழிகளிலும் வெளிப்படுத்தக்கூடிய வாய்ப்புகளைப் பெண்கள் பயன்படுத்திக் கொள்ள ஏற்றவாறு இப்போதுள்ள சமுதாய அமைப்பு திருத்தி அமைக்கப்படும் போதுதான் பெண் விடுதலை சாத்தியமாகும்.

2. தகுதிக்கேற்ப, விரும்பும் தொழிலைத் தெரிவு செய்யும் சுதந்திரத்தையும் பொருளாதாரச் சுதந்திரத்தையும் பெண்கள் பெறவேண்டும்.

3. மகப்பேறு தொடர்பான எந்தவொரு விஷயத்திலும் முடிவெடுக்கும் உரிமை பெண்களுக்கு உண்டு.

சுருங்கக்கூறின், ஆண்களைப் போன்று குடும்ப, சமூக வாழ்வியல் உரிமைகளையும் சமூக மதிப்பையும் பெண்கள் அனுபவிப்பதுதான் பெண்ணிய நோக்கிலான பெண்விடுதலை ஆகும்.

இதனைப் பெற, சிதறிக் கிடக்கும் பெண்களை ஓர் அமைப்பின்கீழ் ஒன்று திரட்டி, பெண்மைச் சக்தியினைக் கூட்டியெடுத்துப் பேரியக்கமாக உருக்கொடுத்துப் போராடி வருகிறது பெண்ணியக்கம். பெண் விடுதலை எனபது பெண்களாலேயே பெறப்படவேண்டிய ஒன்றாகும் என்பது இவ்வியக்கத்தின் அடிப்படைக் கருத்தாகும்.

பெண்ணியக்கக் கருத்துக்களினால் ஈர்க்கப்பெற்று, "வாழ்வில் ஆண்களுக்கு நிகரான சமவாய்ப்புகளைப் பெண்களும் பெற்றாக வேண்டும் என நம்புகிறவராகவும்; குடும்ப அமைப்பில் வழிவழி மரபாகப் பெண்கள் வகித்துவரும் பொறுப்புகளைப் பயன் மதிப்பிடுகிறவராகவும்; பெண்களின் குடும்பப் பங்குகளுக்குக் (family roles), குடும்பத்திலும் சமுதாயத்திலும் தகுந்த சிறப்பும் மதிப்பும் கிடைத்திட நல்லாதரவு தருபவராகவும் இருக்கிற ஆண் அல்லது பெண், பெண்ணியக் கோட்பாட்டாளராவர்" (Barbara, 1987).

அந்த வகையில் பாவேந்தர் பாரதிதாசனும், இவருக்கு இலக்கிய குருவாக விளங்கிய பாரதியும், அரசியல் குருவாக அமைந்த ஈ.வெ.ரா. பெரியாரும் பெண்ணியக் கோட்பாட்டாளர்களே.

### பாரதியும் பெண்விடுதலையும் :

பெண்விடுதலை பற்றிய தெளிவான கருத்து பாரதிக்கு உண்டு. ஒருபுறம்,

> விடுதலைக்கு மகளிரெல்லோரும்
> வேட்கை கொண்டனம் வெல்லுவம் என்றே
> திடமனத்தின் மதுக்கிண்ணம் மீது
> சேர்ந்து நாம் பிரதிக்கினை செய்வோம்

என்று பெண்ணினத்தை விழிப்புறச் செய்து கொண்டும் (வானதி பதிப்பகம், 1981:184), மறுபுறம் சமுதாயத்தின் மனப்போக்கினைத் திருத்திச் செப்பமாக்குவதில் முனைந்தும் நின்றவன் அவன்.

குழந்தை மணத்தைத் தடை செய்தல், விரும்பியவனை மணக்கும் உரிமையைப் பெண்ணுக்கு அளித்தல், மணமுறிவு-விதவை மறுமணம் ஆகியவற்றை ஆதரித்தல் போன்றவற்றோடும் கூட,

> "-பிதுரார்ஜிதத்தில் பெண்குழந்தைகளுக்கு சமபாகம் கொடுக்க வேண்டும்.
>
> -விவாகமே இல்லாமல், தனியாக இருந்து வியாபாரம், கைத்தொழில் முதலியவற்றால் கௌரவமாக ஜீவிக்க விரும்பும் ஸ்திரீகளை ஏதேச்சையான தொழில் செய்து ஜீவிக்க இடம் கொடுக்க வேண்டும்.
>
> -பெண்களுக்கு ஆண்களைப் போலவே உயர்தரக் கல்வியின் எல்லாக் கிளைகளிலும் பழக்கம் ஏற்படுத்த வேண்டும்.
>
> -தகுதியுடன் அவர்கள் அரசாட்சியில் எவ்வித உத்தியோகம் பெற விரும்பினாலும் அதைச் சட்டம் தடுக்கக் கூடாது.
>
> ...தமிழருக்கு சுயராஜ்யம் கிடைத்தால் அப்போது பெண்களுக்கும் ராஜாங்க உரிமைகளிலே அவசியம் பங்கு கொடுக்க வேண்டும்."

என்ற பாரதியின் கருத்துக்கள் (பாரதி புத்தக நிலைய வெளியீடு, 1964: 304 & 305) பெண்ணிய நோக்கிலான பெண்விடுதலைக்குப் பெரிதும் அரணாக அமைந்துள்ளன. பெண்களுக்குக் கல்வி வேண்டும்தான். அதேசமயம் எவ்விதமான கல்வி தரப்பட வேண்டும்? என்றும்; ஆரம்பப்பள்ளி

ஆசிரியைகளாகவும், மருத்துவச் செவிலிகளாகவும், கொண்டான் குறிப்பறிந்து நடக்கக்கூடிய இல்லத் தலைவிகளாகவும் பெண்கள் விளங்குவதற்குப் போதுமான அளவு கல்வியைத் தந்தாலே போதுமானது என்றும் இருந்த சமுதாயச் சூழலில் பெண்களுக்கு உயர்கல்வி வேண்டும் என்று உறுதியாகச் சொன்னவன் பாரதி ஒருவன்தான். மணம் செய்து கொள்ள விருப்பமில்லையானால் ஒரு பெண் தனித்துத் தன்காலில் நின்று வாழமுடியும்-வாழவேண்டும் என்று வகுத்துக் காட்டியவனும் அவன்தான். சொத்தில் பெண்ணுக்கும் சம உரிமை, கல்வி, வேலை வாய்ப்பு உரிமைகள் பற்றிய பாரதியின் கருத்துக்கள் பெண்விடுதலை குறித்த அவனது தெளிவுக்குத் தக்க சான்றுகளாம்

## பெரியாரும் பெண்விடுதலையும் :

"பெண்விடுதலை வேண்டும்" என மேடைகளில் பேசியும்; "விடுதலை", "குடியரசு" ஆகிய நாளிதழ்களில் எழுதியும் வந்ததோடல்லாமல் அதனைச் செயல் வடிவாக்குதற்கும் கடுமையாகப் போராடியவர் பெரியார்.

"பெண்மக்களை இன்று ஆண்கள் நடத்தும் மாதிரியானது, மேல்சாதிக்காரன் கீழ்ச்சாதிக்காரனை நடத்துவதைவிட, பணக்காரன் ஏழையை நடத்துவதைவிட, எசமான் அடிமையை நடத்துவதை விட மோசமானதாகும். அவர்கள் எல்லாம் இருவருக்கும் சம்பந்தமேற்படும் சமயங்களில் மாத்திரந்தான் தாழ்மையாய் நடத்துகின்றார்கள். ஆனால் ஆண்களோ பெண்களைப் பிறவி முதல் சாவு வரை அடிமையாகவும் கொடுமையாயும் நடத்துகின்றார்கள்." என்ற இன்றைய சமுதாயத்தில் பெண்களின் நிலையை மிகச்சரியாகக் கணித்தவர் இவர் (சிந்தனையாளர் கழக வெளியீடு,1974:108).

பெண்களின் நிலை உயர்ந்திட, உயர்கல்வி வாய்ப்புகளும், சுயமாகத் தொழில் செய்து பொருளீட்டும் சுதந்திரமும், மண உரிமையும் வேண்டும் என்பதில் உடன்பாடான கருத்துக்கள் பெரியாருக்கும் உண்டு. இவையெல்லாவற்றையும்விட சொத்துரிமையையே பெரிதும் வலியுறுத்தினார் பெரியார். இதற்குக் காரணம், "ஆணுக்குத்தான் சுதந்திரம், ஆணுக்குத்தான் சொத்து; ஆணுக்குத்தான் வீடும் வாழ்க்கையும்" என்ற நிலை ஏற்பட்ட பிறகுதான் வைதிகத் திருமணமுறை நடைமுறைக்கு வந்தது என்று அவர் நம்பினார் (சிந்தனையாளர் கழக வெளியீடு 1974:163). இதனாலேயே வைதிகத் திருமணமுறையைப் புறக்கணித்துச் சுயமரியாதைத் திருமண முறையைப் புகுத்தினார். "சுயமரியாதைக் கலியாணம் என்பதன் முக்கியத் தத்துவம், கூட்டு வாழ்க்கையில் ஆணுக்கும் பெண்ணுக்கும் எவ்வித வித்தியாசமோ உயர்வு தாழ்வோ இல்லை என்பதும், சகலதுறைகளிலும் சமசுதந்திரம் அளிக்கப்பட வேண்டும் என்பதுமேயாகும்" என்று விளக்கம் கொடுத்தார் (சிந்தனையாளர் கழக வெளியீடு 1974:190).

தனி உடைமை ஒழியும்வரை - பெண்ணடிமையும் நீங்காது என்று பெரியார் கருதியதன் பொருள் ஆணுக்கு மட்டுமே உரியதாக இருந்து வரும் சொத்துரிமையைத்தானே தவிர, கம்யூனிச சித்தாந்தம் கூறும் தனி உடைமையை அல்ல. எனவே முடிவாகப் பெரியார் கொண்டுள்ள பெண்விடுதலைக் கருத்தும் பெண்ணிய நோக்கிலான பெண்விடுதலைக் கருத்தும் ஒப்புமையுடை-யனவேயாம்.

## பாவேந்தர் படைப்புகளில் பெண்விடுதலை :

பெண் விடுதலை பற்றிய கனவுகள் பல கண்டவன் பாரதி பெண்ணடிமை நீங்கவும் பெண்விடுதலை பெறவும் கருத்துக்கள் பல உரைத்தவர் பெரியார். பாரதியின் கனவுகளுக்கும், பெரியாரது கருத்துக்களுக்கும் தம் படைப்புகளில் உருவம் கொடுக்க முயன்றவர் பாவேந்தர் பாரதிதாசன். பாரதி-பெரியார் ஆகியோரது கருத்துக்களால் தாக்கம் பெற்றவர் இவர்.

"ஆடை அணிகலன், ஆசைக்கு வாசமலர் தேடுவதும், ஆடவர்க்குச் சேவித்திருப்பதுவும் அஞ்சுவது"மான பெண்கள் நிலையை அடியோடு மாற்றி அமைத்திடவென்றே பெண் பாத்திரங்களைப் படைத்தார் பாவேந்தர்" என்றும் (சாலை. இளந்திரையன்,1978:) "நம் பெண்கள் வெறும் போகப் பொருள்களாக ஆகக்கூடாது. அவர்கள் புது உலகம் சித்தரிக்க வேண்டும்' (சி.க.வெ.1974:227) என்ற தந்தை பெரியாரின் கருத்தோட்டங்களுக்கு ஏற்பப் பாவேந்தர் தமது பெண்பாத்திரங்களைப் படைத்துள்ளார். .... ...தனிப்பாடல்கள், கதைப்பாடல்கள், நாடகம் என்ற பல்வேறு வடிவங்களிலும் பெண்ணுரிமைக்கும் பெண் விடுதலைக்கும் சிறப்பிடம் கொடுத்தவர் பாரதிதாசன். பாரதியாரைப் போல உரைநடையிலும் பெண் சமத்துவத்தைப் பாரதிதாசனும் வலியுறுத்தியுள்ளார் என்றும் (ச.சு.இளங்கோ, 1984:390) அறிஞர்கள் கூறும் கருத்துக்கள் பெண்ணிய நோக்கில் இன்று மீளாய்வுக்கு உரியன.

### பெண் பாத்திரங்கள் :

இலக்கியப் படைப்பாளர்கள் தங்களின் படைப்புகளில் ஆண் பாத்திரங்களைச் சித்திரிப்பதற்கும் பெண் பாத்திரங்களைச் சித்திரிப்பதற்கும் இடையே பெருத்த வேறுபாடு உண்டு.

நல்லவர்கள், தீயவர்கள், உத்தமர்கள், ஊழல்பேர்வழிகள், இனிய பண்பினர், குரூர இயல்பினர், தத்துவவாதிகள், யதார்த்தவாதிகள் என்று வெவ்வேறுவிதமான பண்புகள் கொண்டவராக ஆண் பாத்திரங்கள் உருவாக்கப்படுகின்றனர்.

பெண்பாத்திரங்களைப் படைக்கும்போது மட்டும் "திருமணம்" என்பதை அடிப்படை அளவையாகக் கொண்டு மணமாகாத இளம்பெண், மனைவி, தாய், விதவை என்ற நான்கு பிரிவுகளில் அடக்கிவிடுகின்றனர். இந்நான்கு பிரிவுகளைச் சார்ந்த ஒவ்வொரு பெண்பாத்திரத்திற்கும் என்று திட்டவட்டமான "படிமம்" உண்டு. பண்புகளும் இப்படிமத்தோடு பொருந்தும் வகையில் வரையறுக்கப்பட்டவைதாம். இந்நான்கு பிரிவுகளுக்குள்ளும் உள்ள ஓர் ஒற்றுமை, "கற்பு" எனும் கோட்பாட்டின் கீழ் இவையாவும் கட்டுண்டு கிடப்பதேயாகும்.

பாவேந்தரது படைப்புகளும் இந்நிலைக்கு விதிவிலக்கல்ல.

### கற்பு (Chastity):

"கற்புக் கோட்பாடு என்பது ஒரு பருப்பொருளின் மாசினைக் குறிப்பதாக இருந்து, பின்னர் கணவனுக்கு உண்மையுள்ளவளாக நடந்து கொள்ளும் மனைவியின் ஒழுக்கம் என்பதாகவும், அவ்வொழுக்கமும் உடல் ஒழுக்கமே என்பதாகவும் இணைத்து நோக்கிய மனப்போக்கின் விளைவு ஆகும்" (C.S.Lakshmi,1986:168).

ஒரு பெண்ணின் மதிப்பை - வாழ்வை, கற்பு எனும் அளவையால் சோதித்துப் பார்ப்பதையும்; மயிர் நீப்பின் உயிர் வாழாக் கவரிமான் போல, சந்தர்ப்ப சூழ்நிலை காரணமாகக் கற்பைப் பறிகொடுக்க நேர்ந்தபோதும் அப்பெண் உயிர்வாழ அருகதையற்றவள் என விதிக்கும் மரபையும் பாரதியோ பெரியாரோ ஏற்றுக் கொள்ளவே இல்லை. அவ்வாறு கற்பு என்பது ஒழுக்கம் என்ற பொருளில் வலியுறுத்தப்படுமானால் அஃதை ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவானதாகவே கொள்ள வேண்டும் என்றனர்.

இக்கருத்தைப் பாவேந்தரும் தமது பாடல் ஒன்றில் வெளிப்படுத்தி உள்ளார்.

பெண்களிடம் கற்பை எதிர்பார்க்கும் ஆண்கள்
பெண்களைக் கற்பழித்துத் திரியலாமோ?

பெண்களுக்கும் ஆண்களுக்கும் கற்பு பொதுவன்றோ

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

ஆடவர்க்கொரு நீதியோ - எழில்

மாதர்கட்கொரு நீதியோ

என உலகப் பெண்களை விளித்துப் பேசியுள்ளார் (பூம்புகார் பிரசுரம், 1977:161 & 162). எனினும் பாவேந்தர் தமது படைப்புகளில் கற்பை உயிராகப் போற்றும் பெண் பாத்திரங்களையே படைத்துள்ளார்.

சமூகப் படிநிலை அமைப்பில் வசதி படைத்த நடுத்தரப்பிரிவு மக்களிடம்தான் "கற்பு" என்னும் கருத்து ஒரு கோட்பாடாக உருப்பெற்று, கட்டுப்பாடுகள் பலவற்றைப் பெண்களுக்கு மட்டுமே விதித்து வீட்டுடன் அவர்களை நிறுத்தி வைத்தது. சாதாரண பாட்டாளி மக்கள், ஏழை எளியவர், அன்றாடக் கூலிகளின் வாழ்வில் இவ்வளவு கடுமையான கட்டுப்பாடுகள் இல்லை. ஆனால் பாவேந்தரோ, நடுத்தரப்பிரிவினரின் மனப்பான்மையிலிருந்து விடுபடாதவராக, தயிர் விற்பவள் போன்ற அன்றாடக் கூலிப் பிழைப்பு நடத்தும் பெண்களுக்கும் கற்பே உயிர் என்கிறார் (பூம்புகார் பிரசுரம், 1977 a: 146). "உடைத்திருத்தம்" என்ற கவிதையில்

உப்பு விற்கும் குப்பு - நீ

ஒழுங்கை விட்டது தப்பு !

செப்புப் போல் உறுப்பு! வெளித்

தெரிவதே நகைப்பு - தலையில்

உப்பு விற்கும் குப்பு....

. . .        . . .        . . .

தமிழ்ப் பெண்ணின் துப்பு - நீ

தவறுவதா செப்பு !

அமைவான உடுப்பு - நீ

அணிவதுதான் கற்பு

என்று உடல் சார்ந்த கற்புக்கொள்கையினை, உப்பு விற்கும் பெண்ணிடம் உணர்த்த முயன்ற பாவேந்தருக்கு, அப்பெண்ணின் வயிற்றுப்பாடு மறந்து போனது வியப்பேயாகும். (பூம்புகார் பிரசுரம், 1977 :147). இதற்குக் காரணம், சமூகப்படிநிலை அமைப்பின் எந்தப் பிரிவினளாகப் பெண் இருப்பினும், அவளைப் பாவேந்தர் தமிழ் மகளாகவும், திராவிட இனத்தவளாகவும் கருதிப் பழகியதேயாகும். இதனைத் தமது "புரட்சித் திருமணத் திட்டம்" எனும் கவிதையில்,

சீர்சால் திராவிடர்

பண்பு சிதையாமல்

நிற்பவளே பெண்ணாவாள்

என்று அவர் குறிப்பிட்டுள்ள பாடல் வரிகளில் இருந்து அறிய முடிகிறது. (பாரி நிலையம், 1983:218).

தமிழ்ச் சமுதாயத்தில் கற்பிழந்த அல்லது கற்பைப் பறிகொடுத்த பெண்ணொருத்தி உயிர் வாழவும் தகுதியற்றவள் ஆவாள். பெரும்பாலும் இப் பெண்கள் தங்களுக்குத் தாங்களே நெருப்பிட்டுக் கொளுத்திக் கொண்டு மடிகின்றனர். ஏனெனில் உடல் மாசினை எரித்துத்

தூய்மையாக்க வல்லது நெருப்பு என்ற நம்பிக்கை காலம்காலமாக மரபில் ஊறிப்போயிருப்பதுதான். இந்த நம்பிக்கை பாவேந்தருக்கு உண்டு என்பதை அவரது "தமிழச்சியின் கத்தி" உறுதிப்படுத்துகிறது.

"அயலான் நாட்டில் அந்நியர் வீட்டில் கீழ்மகன் ஒருவனால் வஞ்சகமாக நஞ்சிடப்பெற்று உணர்வு மயங்கிய நிலையில் தமிழ்மகள் சுப்பம்மாள் கற்பழிக்கப்பட்டாள். நினைவு திரும்பியதும் கற்பழித்தவனைத் தேடிப் போய் கட்டாரியால் குத்திக் கொன்றாள். சுப்பம்மாளையும் அவள் கணவன் திம்மனையும் அரசனின் சேனை சுற்றி வளைத்தது. சிப்பாய்கள் சிலரைக் கொன்ற திம்மனும் இறுதியில் கொல்லப்படவே, சுப்பம்மாள் சிறைப்பிடிக்கப்பட்டு, அந்நாட்டு மன்னவன் முன்னிலையில் கொண்டு வந்து நிறுத்தப்படுகிறாள். அவளைச் சிறுகச் சிறுகச் சித்திரவதை செய்து கொல்லச் சொல்லி ஆணையிடுகிறான் மன்னவன். அவளோ தன் மூச்சினை உள்நிறுத்தி மரணத்தை ஏற்கிறாள். ஆனால் பாவேந்தர்,

> மூளுதடா என் நெஞ்சல் தீ! தீ! உன்றன்
> முடிவேக மூளுதடா அக்கொடுந்தீ
> . . .  . . .  . . .
> என்றதிர்ந்தாள் திசையதிர்ந்து போகும் வண்ணம்!
> எல்லாரும் சுப்பம்மா நிலைமை தன்னை
> ஒன்றுபடப் பார்த்திருந்தார்! அவளுடம்பில்
> ஒளி கண்டார்....

என்று ஒளிப் பிழம்பின் வடிவமாகச் சுப்பம்மாளின் முடிவைக் காட்டி, அவளது உடற்களங்கத்தை நெருப்பால் நீக்க முயன்றுள்ளார் (பாரி நிலையம், 1980 : 111 & 112). பாவேந்தர், கற்பிற்சிறந்த பெண்ணையே 'பெண்' என்று கருதியுள்ளார்.

> பெண்ணென்றால் அவளல்லவோ பெண்? - உலகில்
> பெண்ணென்றால் அவளல்லவோ பெண்.
> கண்ணவள் மாமியார்க்கே காப்பவள் மாமனார்க்கே
> உண்மையில் வாழ்க்கையிலே உயிராவாள் கணவனுக்கே!
> காண நல்ல நகை வேண்டாம் கற்பொன்றே அவள் பூண்டாள்
> ஆணழகன் வீட்டினுக்கே அறம் வளர்க்கும் திருவிளக்கே

என்று புகுந்த வீட்டில் பம்பரமாகச் சுழன்று கணவனின் உறவினரை அன்புடன் பேணுவதும்; கணவனின் குறிப்பறிந்து பணிவிடைகள் புரிவதும்; கற்பை அணிகலனாகப் பூண்டுள்ளதுமான மரபுவழிப் "பெண்மை" எனும் படிமத்தையே பெண்பாத்திரங்களாகப் பாவேந்தர் படைத்துள்ளார் (பூம்புகார் பிரசுரம், 1977 : 103). கற்பே உயிர் என வலியுறுத்தப் படுவதாலேயே இப்பெண்கள், குடும்பம் வீடு என்ற வரையறைக்குள் வளைய வருகின்றனர்.

### மணமாகாத இளம் பெண்கள் :

பாவேந்தரின் படைப்புகளில், மணமாகாத இளம் பெண்கள் பள்ளிக் கல்வியும் மனத்துணிவும் கொண்டவர்களாகச் சித்திரிக்கப்பட்டுள்ளனர். அவர்கள் விரும்பியவனை மணப்பதற்குப் பெற்றோரிடம் போராடக்கூடிய உரிமை உணர்வும் பெற்றவர்கள். மிகத் தெளிவாகவே உரிமை முழுக்கம் செய்கின்றனர்.

"சஞ்சீவி பர்வதத்தின் சார"லில் வரும் வஞ்சி, "பெண் என்றால் சொன்னபடி கேட்க வேண்டும்" என்ற மரபினை உடைத்தவள்.

> பெண்ணுக்குப் பேச்சுரிமை வேண்டாம் என்கின்றீரோ?
> மண்ணுக்கும் கேடாய் மதித்தீரோ பெண்ணினத்தை?
> பெண்ணடிமை தீருமட்டும் பேசுந்திருநாட்டு
> மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே

என்று ஆணித்தரமாகப் பேசுகிறாள் (செந்தமிழ் நிலையம். 1988:3). அப்பாவிக் குப்பனுக்கு நாட்டின் நிலையினை உணர்த்திய வஞ்சி, செயலளவில் ஏதும் சாதித்தாளா என்றால் இல்லவே இல்லை.

> மூடப்பழக்கம், முடிவற்ற கண்ணுறக்கம்
> ஓடுவதென்றோ? உயர்வதென்றோ? நானறியேன்

எனக் குப்பன் பெருமூச்சு விடுவதுடன் வஞ்சியின் பங்கு முடிந்துவிடுகிறது. முடியரசைக் குடியரசாக மாற்றிட விரும்பும் அரச குடும்பத்துப் பெண் பாத்திரங்களும் தத்தமது காதல் வெற்றியே வாழ்வின் இலட்சியம் என்று போராடுகின்றனர்.

**மனைவி :**

வீடுதான் ஒரு பெண்ணின் இயங்குதளம் என்பது, இன்றைய சமூகச் சூழலைப் பின்னணியாகக் கொண்டுள்ள பாவேந்தரின் படைப்புகளில் அழுத்தம் பெற்றுள்ளது. பண்புள்ள மனைவி குடும்பத்தின் விளக்காவாள் என்பது அவரது கருத்து. குடும்ப விளக்காக அமையும் இவரது பெண்பாத்திரங்கள், கல்வியும் திறமையும் சமூக அக்கறையும் கொண்டவர்களாக இருந்தும், கணவனுக்குப் பின்னிருந்து அவனது வெற்றிகளுக்கு ஊக்கமும் உறுதுணையுமாய் அமைந்து கடமை ஆற்றுகின்ற இரண்டாம் இட சமூக மதிப்புப் பெற்றவர்களேயாவர். இவரே ஒரு பாத்திரத்தின் வாயிலாகக் 'குடும்ப விளக்கும் குண்டுக்கல்லும்' என்ற தமது கவிதையில் குறிப்பிட்டுள்ளது போன்று, அதில் வரும்

> தில்லைக் கண்ணம்மா திருக்காமு முதலியாருக்கு
> அசல் அடிமை (பூம்புகார் பிரசுரம். 1978 : 101)

குடும்ப விளக்குகள் எல்லாருமே அசல் அடிமைகள் தாம். பெண்மை எனும் பேராற்றல் இங்குக் குடும்ப எல்லைக்குள் சிறைப்பட்டு, சமூக அளவில் தன் சக்தியை வெளியிட இயலாமல் ஒடுங்கிப் போயிற்று.

குடும்ப அமைப்பில் கணவன் ஆண்டானாகவும் மனைவி அடிமையாகவும் உழல்வதைப் பின்னாளில் பாவேந்தர் மனம் ஒப்பவில்லை என்பதை அவரது "துணைவன் இலக்கணம்" எனும் கவிதை சுட்டிக்காட்டுகிறது. 'விருந்துவர இன்னும் அரைமணி நேரம்தான் இருக்கிறது என்று அப்போதுதான் வந்து சொன்னான் கணவன். அதற்குள் சமையல் முடிந்தாக வேண்டுமே. இருவருமாக செய்கின்றனர். கணவன் அடுப்பு மூட்டுகிறான். சமையலைத் தொடங்குகிறாள் மனைவி. அம்மியில் மிளகாய்ப் பொடியை வைத்து அரைக்கின்றான் கணவன். குழம்பு வைத்து முடிக்கிறாள் மனைவி. வாழையிலை நறுக்கி, கூடம் பெருக்கி, பாய் இட்டு, நீர் வைத்து, கை துடைக்கத் துணியும் வைத்துப் பாடிக்கொண்டே குரல் கொடுக்கின்றான் கணவன். எல்லாம் ஆயிற்று என்கிறாள் மனைவி.

அரைமணி அளவில் சோறுகறி ஆக்கிய
உன்றன் திறமை உவமை இல்லாதது

என்று கணவன் பாராட்டுகிறான்.

ஆடவர் உலகே ஆடவர் உலகே
எனக்கென் துணைவரைப் போல நின்
மனைவிமார்க்கு நீ துணைபுரிந்து வாழ்கவே

என்று வேண்டுகோள் விடுக்கின்றாள் மனைவி. (பூம்புகார் பிரசுரம். 1977 : 178)

குடும்ப அமைப்பில் கணவனுக்கும் மனைவிக்கும் உரியதான மரபுவழிப்பட்ட வேலைப்பிரிவுகள் "குடும்ப விளக்கில்" அப்படியே பின்பற்றப்பட்டன. மாறாக இங்கு, அவ்வேலைப் பிரிவுகள் புறக்கணிக்கப்பட்டுள்ளன. குடும்ப வாழ்வில் சமத்துவம் என்பது காலப் போக்கில் கவிஞர் பெற்ற கருத்துநிலை வளர்ச்சியாகும். எனினும்,

குடும்ப விளக்காகவே திகழ வேண்டும்
பெண்கள். அவர்களுக்குக் குண்டுக்கல்லாகத்
திகழ வேண்டாம் குடும்ப ஆடவர்கள்

என்று பாவேந்தர் கொண்டுள்ள முடிவான கருத்து - பெண் பாத்திரங்களைப் பொறுத்த மட்டிலும் அவரது மரபுவழிச் சிந்தனையின் விளைவே என்பது தெளிவாகிறது.

தாய் :

பாவேந்தர் படைப்புகளில் "தாய்" என்ற படிமமும் மரபு வழிப்பட்டதேயாகும். அது புனிதமானது : உணர்வுப் பூர்வமானது; தியாக வடிவினது.

அன்னையும் ஆசானும் ஆருயிரைக் காப்பானும்
எனும்படி அமைந்தீர்! இப்படியே பெண்ணுலகம் ஆகும்
நாள் எந்நாளோ? அந்நாளே துன்பமெலாம்
போகுநாள்; இன்பப் புதியநாள் என்றுரைப்பேன்!
அன்னையெனும் தத்துவத்தை அம்புவிக்குக் காட்டவந்த
மின்னே, விளக்கே, வரிநிலவே வாழ்த்துகின்றேன்

என்று வீரத் தாயாக விஜயராணியைப் படைத்துள்ளார் பாவேந்தர் (செந்தமிழ் நிலையம், 1988 : 49), குடும்ப விளக்கில்,

பாடம் சொல்லப் பாவை தொடங்கினாள்
அவள் வாத்திச்சி; அறை வீடு கழகம்;
தவழ்ந்தது சங்கத் தமிழ்ச்சுவை

என்று அன்னையை அன்புப் படிவமாகவும், அறிவூட்டும் நல்லாசானாகவும், கண்போல் கணவனையும் குழந்தைகளையும் காப்பவளாகவும் தமிழ் நெஞ்சம் கொண்டவளாகவும் படைத்துக் காட்டியுள்ளார் (பாரி நிலையம். 1972 : 8).

**விதவை :**

விதவைப் பெண்களின் நிலை கண்டு வருந்தி, அந்நிலையை மாற்றிட விதவை மறுமணத்தை ஆதரித்து, அவர்களுக்காகத் குரல் கொடுத்துள்ளார் பாவேந்தர். பெரியார் ஒரு முறை, "ஒரு ஜீவனைப் பட்டினியாகப் போட்டுக் கொல்வதிலும் ஒரு பெண்ணை விதவையாக வைத்துச் சாகாமல் காப்பாற்றுவது கொடுமையல்லவா' என்று விதவை நிலையின் துயரத்தை எடுத்துரைத்தார். (சிந்தனையாளர் கழக வெளியீடு, 1947 ; 140). அவர் வழியில் பகுத்தறிவுக் கருத்துக்களைப் பரப்பிய பாவேந்தரும், விதவைக்கு மறுமணம் செய்து கொள்ள உரிமை வேண்டும் என்னுமிடத்தில் "பசியாத நல்வயிறு பார்த்ததுண்டோ" என வாழவேண்டும் எனும் விருப்பம் இயல்பானதொன்றே என்பதைக் காட்டியுள்ளார்.

**பெண் விடுதலை :**

'பெண் விடுதலை' என்பது பற்றிப் பாவேந்தரும் சிந்தித்திருக்கிறார். ஆணுக்குப் பெண் நிகர் என்பதை ஏற்றுக் கொண்டுள்ளார்.

> ஆண் உயர்வென்பதும் பெண் உயர்வென்பதும்
> நீணிலத் தெங்கணும் இல்லை.
> வாணிகம் செய்யலாம் பெண்கள் - நல்
> வானூர்தி ஓட்டலாம் பெண்கள்

என்று பாடிய போதிலும் (இசையமுது: முதல் தொகுதி, 1977 : 52), சிறந்த இல்லத் தலைவியராகும் தகுதிக்கே தமது பெண் பாத்திரங்களை அவர் உருவாக்கியுள்ளார். "பெண்ணுக்கு நீதி" எனும் கவிதையில்,

> கற்றவளே ஒன்று சொல்வேன் - உன்
> கண்ணைக் கருத்தைக் கவர்ந்தவன்நாதன்!
> கனத்தஉன் பெற்றோரைக் கேளே! - அவர்
> கல்லொத்த நெஞ்சையுன் கண்ணீரினாலே
> நனைத்திடுவாய் அதன் மேலும் - அவர்
> ஞாயம் தராவிடில் விடுதலை மேற்கொள்!

என்று பாடியுள்ளார் (செந்தமிழ் நிலையம், 1988 : 117) பாவேந்தர். இங்கு பெண்விடுதலை என்பது மணவுரிமை மட்டும்தானா என்ற ஐயம் எழுகிறது.

"பெண்கள் விடுதலை" என்ற பாடலில், ஒரு கூட்டுக் குடும்ப அமைப்பில் மனைவி பாடும் பாட்டினைப் படைத்துக் காட்டி,

> பெண்டாட்டி என்ற பெயரடைந்த நாள் முதலே
> ஒண்டொடிக்கும் சொத்தில் ஒரு பாதி உண்டுரிமை

எனும் நிலை வந்தால் பெண்விடுதலை சாத்தியமாகும் என்ற கருத்தினைப் பெறவைத்துள்ளார். (பூம்புகார் பிரசுரம், 1977 : 158). சொத்துரிமை கிடைப்பதன் மூலம் பெண்ணுக்கும் பொருளாதாரச் சுதந்திரம் கிட்டும் என்பதை விடவும் கணவன் வீட்டார் படுத்தும் பாடுகளிலிருந்து கிடைக்கும் விடுதலையையே பாவேந்தர் பெண் விடுதலை என்று இங்குக் குறிப்பிட்டுள்ளார்.

**, முடிவுகள் :**

1. பாவேந்தரின் பெண் பாத்திரங்கள், ஏனைய இலக்கியப் படைப்புகளிற் போலவே மணமாகாத இளம்பெண், மனைவி, தாய் விதவை என்ற நான்கு பிரிவினராகப் படைக்கப் பெற்றுள்ளனர்.

2. கற்புக் கோட்பாட்டில் ஆழ்ந்த பிடிப்பும் நம்பிக்கையும் கொண்டவராகப் பெண் பாத்திரங்களை உருவாக்கியுள்ளார் பாவேந்தர். எனவே இவரது பெண் பாத்திரங்கள் மனைவி, தாய் என்ற குடும்பப் பங்குகளையே ஏற்றுள்ளனர்.

3. பெண்ணுக்குப் பேச்சுரிமை, கல்வியுரிமை , மணவுரிமை, சொத்துரிமை போன்றவற்றை இவர் வலியுறுத்திய போதிலும் உயர்கல்வி பெற்ற பெண்ணையோ; சுயமாகத் தொழில் செய்து பொருளாதாரச் சுதந்திரத்தை அனுபவிக்கும் ஆர்வமுள்ள பெண்ணையோ; சமூகப் பொறுப்பேற்றுப் பெண்மைச் சக்தியின் பரிமாணங்களையும் பன்முக ஆற்றல்களையும் வெளிப்படுத்துகின்ற பெண்ணையோ; இவரது பெண் பாத்திரங்களில் காண முடியவில்லை.

4. மனைவி, தாய் என்ற குடும்பப் பங்குகளில் மரபுவழிப் பெண்மை எனும் படிமத்தையே இவர் போற்றியுள்ளார்.

5. இவை காரணமாகவே பாரதியிடமும் பெரியாரிடமும் பெண்விடுதலை என்பது பற்றி இருந்த சிந்தனைத் தெளிவைப் பாவேந்தரிடம் பெற முடியவில்லை.

6. தமிழிலக்கியப் பாரம்பரியத்தில் பாவேந்தருக்கு இருந்த பரிச்சயமும், தமிழ்ப் பண்பாட்டில் அவருக்குள்ள ஈடுபாடும் "பெண் விடுதலைக்" கருத்துக்கள் ஓர் எல்லைக்குள் நின்றுவிடக் காரணமாகிவிட்டன.

தனிப்பாடல்களிலும் பாத்திரக் கூற்றுக்களிலும் பெண்ணுரிமை, பெண்விடுதலை பற்றிய பாவேந்தரின் கருத்துக்கள் வலிமை பெறும் அளவிற்கு, அவரது குறுங்காவியங்களில் இடம் பெற்றுள்ள பெண்பாத்திரங்கள் பெண்ணிய நோக்கிலான பெண் விடுதலைக்குப் போராடுபவர்களாகச் செயல்வடிவம் பெறவில்லை என்பதே பாவேந்தரின் படைப்புகள் உணர்த்துகின்ற உண்மையாகும்.

* * *

**பயன்பட்ட நூற்கள்:**


1. இளங்கோ ச.சு..1984 - பாரதிதாசன் படைப்புக்கலை: (சிவகங்கை, அகரம் வெளியீடு),
2. இளந்திரையன். சாலை, 1978 - புரட்சிமுழக்கம் : (சென்னை, பூம்புகார் பிரசுரம்).
3. சிந்தனையாளர் கழகம், 1974 - பெரியார் ஈ.வெ.ரா.சிந்தனைகள். முதல் தொகுதி: பதிப்பாசிரியர் ஆனைமுத்து, (திருச்சிராப்பள்ளி).
4. செந்தமிழ் நிலையம், 1988 - பாரதிதாசன் கவிதைகள்: (புதுக்கோட்டை)
5. பாரதிதாசன், 1977 - இசையமுது முதல் தொகுதி
6. பாரதிதாசன், 1980 - தமிழச்சியின் கத்தி: (சென்னை பாரி நிலையம்).
7. பாரதி புத்தக நிலையம்,1964 - மகாகவி பாரதியார் கட்டுரைகள்: (மதுரை).

8. பாரி நிலையம். 1983 - பாரதிதாசன் கவிதைகள்: (மூன்றாம் பகுதி) சென்னை).

9. பூம்புகார் பிரசுரம். 1977 - காதல் பாடல்கள் (பாரதிதாசனின் கவிதைத் தொகுப்பு, சென்னை).

10. பூம்புகார் பிரசுரம். 1977 - குயில் பாடல்கள். பாரதிதாசனின் கவிதைகள் தொகுப்பு (சென்னை)

11. பூம்புகார் பிரசுரம் 1978 - தலைமலைகண்டதேவர், (பாரதிதாசனின் கவிதை தொகுப்பு, சென்னை)

12. வானதி பதிப்பகம் 1981 - பாரதியார் கவிதைகள், (சென்னை).

13. Eastman Crystal, 1978 - On Women & Revolution: (Newyork, Oxford University Press)

14. Lakshmi, C.S., 1986 - Women in society, The face behind. The Mask women in Tamil Literature: (New Delhi, Vikas Publishing House).

15. Barbara J. Isely, 1987 - "The new approach of Indian Feminist scholars" to the study of the Indian Family'. An unpublished article read in the sociology seminar at Tamil University, Thanjavur.

* * *

# எந்தையும் பாவேந்தரும்

கவிஞர் தண்டமிழ்ப் பித்தன்

பாடுகின்ற பாட்டெல்லாம்
பாடுபட்டு வருபவைதான்,
ஏடுகண்ட உடனேயே
எழுந்துவரும் உணர்ச்சிகளை
நாடுகண்டு நல்வழியாம்
நெறிபற்றிக் கொளற்காக
ஈடுஇணை இல்லாத
யாப்பளித்தார் பாரதியே!

ஏறுஎங்கள் பாரதிதான்
என்கிற போழ்தினிலே
வீறுகொண்டு வந்தவராம்
விறற்றமிழர் பாவேந்தர்
ஆறுபல காட்டிட்டார்
அறிவுஒளி ஏற்றிட்டார்
நாறுமணம் மலராலே
நனிபெறுதல் போன்றினிதாய்!

பாரதிக்கு தாசனெனப்
பேர்பெற்றார் புகழுற்றார்
பாரதிக்குத் தொண்டர்பலர்
பல்கினராய்ச் சொன்னாலும்
சீருதிக்கும் இவர்நிகராய்ச்
சொல்லஎவர் தாமுள்ளார்
கூர்மதிசேர் இவரேதான்
கனகசுப்பு ரத்தினனார்!

பாரதியால் பாடல்கேட்டுப்
பாவலனே என்றுயர்த்திப்
பாராட்டப் பெற்றவர்நம்
பாவேந்தர் அவரூடே
நேரிடையாய் இணைநின்று
நண்பர்களாய்ப் பாரதியின்
ஏர்நிழலில் இருந்திட்டார்
எந்தையுமே இன்புறவே!

பாரதியார் சின்னப்பையா
பாடென்று சொல்லிச்சொல்லி
சீரருணா சலக்கவியார்
செம்பாடல் கேட்டுவந்த
பேறுதனைப் பெற்றவரே
பெருமைமிகும் எந்தையவர்
கூறுவேங் கடனாராம்
குணப்பெயரே கொண்டவராம்!

நான்மறைகள் கோள்வினைகள்
நற்சித்த மருத்துவச்சீர்
கூன் அற்ற இலக்கியங்கள்
கற்றவராய் வரகவியாய்
வான்பற்றும் உடுக்கூட்டம்
வளர்இயல்பைக் கணக்கிட்டு
தேன்சொட்டும் வகையினிலே
தெரிவிப்பார் எந்தையரே!

ஓர்நாள் மாலையிலே
உயர்கோள்கள் செயல்பற்றி
ஆராய்ந்து உரைக்கவென
அரும்வேந்தர் வினவிடவே
"ஐம்பூதச் சேர்க்கையினால்
ஐம்புலனும் அமைந்துளதால்
ஐம்பூதத் தியல்பிதற்கும்
ஆம்" என்றார் எந்தையுமே!

அன்றுபல விளக்கங்கள்
அவர்கேட்க இவருரைக்க
நன்று மனம் மகிழ்ந்திட்டார்
நம்வேந்தர் போற்றிட்டார்
பின்னொருநாள் தாசரவர்
பார்த்தார்ஓர் நாடகந்தான்,
"என்ன இது! பலகாரம்
இத்தனையா" என்றுரைத்தார்



"ஒன்றுசிறு நாடகத்தால்
விளைசெலவும் இதுமீறும்!"
"மன்றுள்பல காரங்கள்
மிளிராமல் இருப்பனபோல்,
தன்றன்றன் திறமையதால்
தோற்றுதல்தான் நடிப்பென்று"
தன்னுடைய தீர்ப்புரைத்தார்
சூழ்ந்திருந்தோர் ஒப்பிட்டார்!

ஒருமுறையான் உயர்சென்னை
ஊர்வந்தேன் உருளைத்தாள்
பெருமளவில் அச்சிடற்கே
பொருள்ஈந்து பெறுதற்காக
அருநிலையம் ஒன்றினிலே
யான் நுழைந்த வேளையிலே
திருநிறைபா ரதிதாசர்
சந்தித்தார் அவ்விடத்தே!

அந்நாளில் "கோட்டா"வே
உள்ளோர்க்கே "நியூசுபிரிண்டு"
தன்னாலே கிடைக்குமலால்
என்போன்ற தனியார்க்கு
எளிதாகக் கிடைக்காது
என்பதனால் பாவேந்தர்
"ஏனப்பா என்னிடமே
உரைக்கவிலை" என்றிட்டார்!

ஆம்அய்யா! தங்களிடம்
அடியேனே முறைசெய்ய
அறியாமை காரணத்தால்
அமைவாக இருந்திட்டேன்
ஆவனநீர் இன்றெனக்கே
அளித்திடவே வேண்டுமென
நாவதனை அசைப்பதற்குள்
நனிஉதவி புரிந்திட்டார்!

"சித்தர்கள் மருத்துவத்தில்
சிறந்தபல பச்சிலைகள்
மெத்தவும் இருந்தாலும்
மெல்லுகின்ற கம்மாறு
வெற்றிலைக்கு நிகருண்டோ
வேங்கடரே கபம் அறுக்கும்
வெற்றிஇலை இதுவன்றோ
என்றார்"சீர் பாவேந்தர்!

பாவேந்தர் மருத்துவமும்
பாங்குடனே அறிந்துள்ள
பான்மைக்கே மிகமகிழ்ந்து
பாராட்டிப் பூரித்தார்
மேன்மைமிகும் மொழிகளினால்
மாசித்தர் மருத்துவராய்
தான் இருந்தும் தருக்கின்றி
தோள்கொட்டி எந்தையரே!

எதைச் செய்ய மேவிடினும்
எந்தையுடன் பாவேந்தர்
அதற்கான உபாயமதை
ஆக்கமுறச் செய்திடுவார்
மதத்திற்கோ சாதிக்கோ
மடமைக்கோ இருவோரும்
அதிர்வெடியாய் இருந்தார்கள்
அதுபுதுவை வரலாறு.

* * *

# ஐந்திணையில் பாவேந்தன்

கவிதைச்செல்வர் கல்லாடன்

### குறிஞ்சி

மலையெல்லாம் தேன்வழியும்; மலையின் நீண்ட
மருங்கெல்லாம் தேன்வழியும்; உயர்ந்த வாழைக்
குலையெல்லாம் தேன்வழியும்; அருவி துள்ளிக்
குதிப்பதிலே தேன்வழியும்; வழியும் செந்தேன்
நிலையெல்லாம் பாவேந்தர் இயற்கை காட்டும்;
நினைவெல்லாம் தமிழ்காட்டும் இன்பம் காட்டும்
கலையெல்லாம் கவியரசர் கவிதை காட்டும்;
கருத்தெல்லாம் நந்தமிழர் நினைவே காட்டும்!

### முல்லை

முல்லையிலே பூமணக்கும்; மணக்கும் தாது;
மூங்கிலிலே தேன்மணக்கும்; மணக்கும் அண்டைக்
கொல்லையிலே வரகுதினை; ஆயன் ஊதும்
குழலினிலே இசைமணக்கும்; இயற்கை காட்டும்
எல்லையிலே பாவேந்தர் தமிழ்ம ணக்கும்;
ஈடில்லாத் தமிழியக்கம் மணக்கும் எங்கும்;
ஒல்லையிலே தமிழோசை மணக்கும்; என்றும்
ஓங்கு புகழ் பாவேந்தர் பேர்மணக்கும்!

### மருதம்

வயலெல்லாம் கதிர்தாவும்; கன்னற் காட்டின்
மருங்கினிலே கழைதாவும்; கார்கா லத்துப்
பெயலெல்லாம் ஏரிகுளம் குட்டை தாவும்;
பெருகிவரும் வளம்தாவும்; கயல்கள் தாவும்;
அயலெல்லாம் கலப்பையுடன் உழவன் செல்லும்
அருங்காட்சி பாவேந்தர் பாட்டில் தாவும்;
செயலெல்லாம் செந்தமிழர் உயர்வுக் கென்னும்
சீர்தாவும்; இசைதாவும், இன்பம் தாவும்!

### நெய்தல்

கடலோரம் அழகாடும்; அலைகள் ஆடும்;
கரையோரம் நீள்தென்னை ஆடும்; தாழை
மடலோரம் மென்காற்றில் ஆடும்; புன்னை
மலராடும், படகாடும், தழைத்த நெய்தல்
திடலோரம் கண் துஞ்சும் பாவின் வேந்தர்
செழும் பாட்டில் பொதுமையெலாம் ஆடும்; ஏழைக்
குடலூரும் வெம் பசியைப் போக்கு தற்குக்
கூறுகின்ற கருத்துக்கள் நெருப்பாய்ப் பூக்கும்!

### பாலை

வேரோடு மரம்வெம்ப வெய்யில் காய
வெந்தழலாம் சாதியினால் உலகம் சாம்ப
நீரோடு குறும்மனத்துக் குட்டை வற்ற
நெஞ்செல்லாம் அனல்சொரிய நின்ற காலை
சீரோடு கவிதந்தான் கனக சுப்பு;
சீர் செய்தான்; சாதியினை உடைத்தெ றிந்தான்;
நீராடு விழிமாதர் விடுத லைக்கு
நேர்செய்தான் நூற்றாண்டில் வாழ்கின் றானே!

***

# புரட்சிக் கவிஞரின் உளவியல் அணுகுமுறை

பேரா. கருவை பழனிசாமி

எந்தத் தொழிலைச் செய்வதானாலும் உளவியல் அணுகுமுறை இன்றியமையாததாகும். உளவியல் அணுகுமுறை பின்பற்றப்படாதபோது, ஒரு செயல் செம்மையாக நிறைவெய்தாது என்பது மட்டுமில்லை; அதன் இலக்குஎல்லையைச் சென்றடையாது என்பது வெளிப்படை. குழந்தைகளுக்குக் கல்வி வழங்கும் பொறுப்பை ஏற்கிற ஆசிரியர்கள், பாடத் திட்டத்தைப் பின்பற்றுவதாயினும், குழந்தை உளவியல் அறிந்தவராகவும், கல்வி உளவியல் பெற்றவராகவும் தக்க பயிற்சிச் சான்றிதழ் பெற்றாக வேண்டும். அரசியல் நடத்தும் கட்சித்தலைவரும் தொண்டரும் மக்கள் உளவியலையையும் இதர கட்சியினர் உளவியலைய்யும் அறிந்தே தமது கொள்கைத் திட்டங்களையும் செய்கைத்திட்டங்களையும் வகுக்க வேண்டும். ஒரு மருத்துவ நிபுணரும், ஒரு பொறியியல் வல்லுநரும், ஒரு தொழில் அதிபரும், ஒரு வணிகரும் உளவியல் விதிகளை அலட்சியம் செய்து விட்டுத் தத்தம் கடமையைச் செய்துவிட்டதாக நிறைவு பெறமுடியாது. ஒரு நீதிபதியும் குற்றவியலறிவோடு சட்ட அறிவை மட்டும் கொண்டு தீர்ப்பு வழங்கி விடுவதற்கில்லை. உளவியலறிவும் அவருக்கு அவசியமாகிறது. இத்தகைய அடிப்படையிலேதான் ஒரு கவிஞர் வெற்றிக்கு அவருடைய உளவியல் அணுகுமுறையே காரணமாகிறது என்பதனைப் புரட்சிக் கவிஞரின் அணுகுமுறையைக் கொண்டு அரண் செய்வதே இக்கட்டுரையின் முதல் நோக்கம். அதன்மூலம் பாரதிதாசன் அவர்களின் இலக்கியக் கொள்கையைச் சுட்டுவது இக்கட்டுரையின் அடுத்த நோக்கம் ஆகும்.

பொதுவாகவே மனிதர்களுக்கு அறிவும் உணர்ச்சியும் உண்டு. அறிவின் வரையறையிலும் உணர்ச்சியின் வரையறையிலும் வேறுபடலாம். கவிஞராகச் செயல்படுவோர் இந்த விதிக்கு, விலக்கானவராயிருக்க முடியாது. அதனால் பிறமனிதர்களைப் போல கவிஞர்களுக்கும் சில இயல்புகள் பொதுவாக அமையலாம். இந்த அடிப்படையில் புரட்சிக்கவிஞர் பிரச்சினையாகக் கண்டு, கண்டு,

எதை விரும்பினார்? - தமிழ் மொழியை! - சரிதானா?

எதை ரசித்து மகிழ்ந்தார்? -இயற்கை எழிலை! - சரிதானா?

எதை மதித்து வாழ்த்தினார்? - ஜனநாயகத்தை! - சரியா, தப்பா?

எதைப் போற்றிப் புகழ்ந்தார்? பொதுவுடைமையை! - முறைதானா?

எதை வெறுத்தார்? பெண்ணடிமையை! - எதற்காக?

எதைப் பழித்தார்? மூடநம்பிக்கையை! - சரிதானே?

எதைக் குறைவாகக் கருதினார்?- அறியாமையை! - தவறா?

எதைக் கடுமையாகத் தாக்கினார்? - இந்தித்திணிப்பை! - தவறா?

*எதைக் குற்றம் சுமத்தினார்? - சாதியமைப்பை! - தவறா?*

*எதை உற்று நோக்கினார்? - ஏற்றத் தாழ்வை! - எதற்காக?*

*எதை நெருங்கிப்பார்த்தார்? - பழைய இலக்கியங்களை? - ஏன்?*

*எதைத் தீவிரமாக எதிர்த்தார்? - அடிமைத்தனத்தை! - ஏன்?*

*எதைத் தீமையாகக் கண்டார்? - கல்லாமையை! - ஏன்?*

*எதை நன்மையாகக் காட்டினார்? - கல்விப் பேற்றினை! - ஏன்?*

*எதை அதிகமாகச் சிந்தித்தார்? - உழைப்பாளர் மேன்மையை! - ஏன்?*

*எதை அலட்சியமாக நடத்தினார்? - தன்னலத்தை! - ஏன்?*

அவர் பிரச்சினைகளை அறிந்து கொள்வதிலே காட்டிய ஆர்வத்தைப் போலவே பிரச்சினைகளை வெளிப்படுத்திப் பிறருக்கு அறிவூட்டுவதிலேயும் ஒத்த ஆர்வம் காட்டியவர். பொதுவாகவே, மற்றவர்களைவிட, கவிஞர் உணர்ச்சி மிகுந்தவர்; உணர்ச்சி வசப்படுகிறவர் என்று எண்ணுவதுண்டு. அதைப் போலே இலக்கியம் உணர்ச்சியை முதன்மையாகக் கொண்டிருக்க வேண்டும்; அதாவது இலக்கியம் படைக்க அடிப்படையாக வேண்டுவது உணர்ச்சி என்று கூறுவதுண்டு. ஆனால் இங்கு கவனிக்கவேண்டிய ஒரு நுட்பம், இலக்கியம் அறிவை அடிப்படையாகக் கொண்டு பிறப்பது. அதாவது பிரச்சினைகளின் அழுத்தத்தைக் கவிஞர் அறிவது அடிப்படை. அங்ஙனம் பெற்ற அறிவை அவர் பிறர் அறியவும், உணரவும், ஏற்றுப் போற்றவும் உணர்ச்சியோடு வெளியிடுகிறார். தீவிரமான அறிவைத் தீவிரமாகக் காட்ட உணர்ச்சி வசப்பட்டலான்றி அந்த அறிவு பிறருக்கு எட்டாது. ஆகவே தான் மதிக்கும் ஒன்றை தான் பழிக்கும் ஒன்றை தன்னளவுக்குப் பிறரும் மதிக்கவேண்டுமானால், தன்னளவுக்குப் பிறரும் பழிக்கவேண்டுமானால் அதனைத் திரையிட்டு மறைக்காமல் மெருகுபடுத்தி உணர்ச்சியூட்டிக் கொட்டிவிடவேண்டும். அப்போது, தான் விரும்புவது நிறைவேறுவதற்கும் தான் வெறுப்பது நிறைவேறுவதற்கும், வழியாக அமையும்.

படிபடிபடி என்ற பாடல்[1] கல்வி உளவியல் நெறியின் விதிப்படி இயங்குவதை அதனை ஒரு முறை படித்தாலே விளங்கும்படி அமைந்துள்ளதைக் கொண்டு உணரலாம். திரும்பத் திரும்பக் கூறும் பயிற்சியினால் கற்றல் எளிதாகும் என்பது ஒரு கற்றல் விதி ஆகும். (**Law of Repetition);** கல்வி உளவியலில் அதனைப் பயிற்சி விதி என்றே சுட்டுவர். சொற்பின்வருநிலை அணிநயம்பட இப்பாடல் அமைந்திருப்பதும் குழந்தை உளவியல் சார்ந்ததே ஆகும். கல்வி என்பது குழந்தைகள் பிரச்சினையோ பெண்கள் பிரச்சினையோ மட்டுமில்லை, அது சமூகப் பிரச்சினை என்பதைப் புரட்சிக் கவிஞர் நன்கு உணர்ந்தவராகையினால், அதற்குத் தன் கவிதைகளையே களமாக்கிக் கொண்டார். அவரது சமூகக் கடமையை நிறைவேற்றிய பெருமிதப் பாங்கே அவர் கவிதைகளைப் புரட்சிக் கவிதைகளாக மதித்துப் போற்ற இடம் தருகிறது. இத்தகைய சமூகப் பொறுப்பில் மலர்ந்தவையே இந்தித் திணிப்பை எதிர்த்த பாடல்களும்; சாதி வெறியைக் கண்டித்த பாடல்களும் ஆகும். எத்தனை ஆண்டுகளாகப் பாடினாலும் என்றும் தணியாத இலட்சிய வேட்கையே திரும்பத் திரும்பப் பிரச்சினைகளின் தீவிரத்தை வெட்ட வெளிச்சமாக்கும் போக்குடையது; எய்தியது இகந்து படாமை காத்தல், எய்தியதன் மேல்சிறப்பு விதி என்ற இலக்கண உத்திகள் கல்வி உளவியலை ஒட்டிப்பிறந்த பயிற்சி விதிகளேயாம்.

தம் காவியங்களிலும், நாடகங்களிலும் மீண்டும் மீண்டும் தாம் போற்றி வரும் சமூகப் பிரச்சினைகளையே முன்வைத்து இயக்குவதால் அவரது கவிதைக் கொள்கையே இலக்கியக் கொள்கையாக மலர்ந்தது. குடியாட்சி ஓங்குவதும் சமத்துவம் மேலோங்குவதும் காதல் மணம் சாதித் தடை நீக்குவதும் பாண்டியன் பரிசு, குறிஞ்சித் திட்டு, புரட்சிக்கவி முதலிய காவியங்களில் பளிச்சிடுகின்றன. இருபதாம் நூற்றாண்டின் ஜனநாயக அரசியல்

சமத்துவப்பொருளியல் அமைப்பு உலகெங்கும் நிலவிவரும் தாக்கம் தமிழ் இலக்கியத்திலும் இடம் பெறுவது உலகளாவிய விசாலப்பார்வையைத் தவிர்க்கவியலாத அனுசரணையாகவே கருதலாம். அதுதான் மனிதநலப்பாங்கான உளவியல் சார்பு என்று போற்றப்படுகிறது. (**Human Psychology).**

இத்தகைய பன்முகப்பாங்கான உளவியல் சார்ந்த இலக்கியக் கொள்கையே புரட்சிக் கவிஞரின் சஞ்சீவிபர்வதத்தின் சாரலில் பொருந்தியுள்ளது. முழுக்க முழுக்க நேர் கூற்றாகவும் அயல் கூற்றாகவும், இணைந்த நாடகப் பாங்கில் சஞ்சீவ பர்வதத்தின்சாரல் உருவாக்கம் பெற்றுள்ளது; இச்சிறு காவியம் இடம் பெற்றுள்ள "பாரதிதாசன் கவிதைகள் முதல் தொகுதி" யிலேயே கவிக் கூற்றாக இடம் பெற்றுள்ள தனித் தனிக்கவிதைகள் பலவற்றிலும் எடுத்து இயம்பிய கருதுகோள்களே இச்சிறு காவியம் முற்றும் இழைந்து வருகின்றன. முன்னிலைப் புறமொழியாகப் பழந்தமிழ் இலக்கிய மரபில் ஊறிக்கிடக்கிற உத்தியில்

இத்தாலி நாட்டான்
பிரஞ்சு நாட்டான்
நல்ல அமெரிக்கன்
பொல்லா அமெரிக்கன்
இங்கிலாந்து வெள்ளையன்

ஆகியோர் "வெளிப்பாடுகளை" (**Reactions**) முன்வைத்து இந்திய மக்களின் மறு செயல்களுக்கு (**Reactions**) வித்திட்டுள்ளதை சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் வரும் குப்பன் - வஞ்சி உரையாடல் நிகழ்ச்சியில் உணர வைத்துள்ளதே பாரதிதாசன் உளவியல் அணுகுமுறைக்கு மேல்வரிச் சட்டமாகும். 'உன்னை விற்காதே' என்ற தலைப்பின் கீழும் "சுதந்திரம்" என்ற தலைப்பின் கீழும் கவிக்கூற்றில் முழங்கி முன்மொழியப்பட்ட முதல் தொகுதிக் கருதுகோள் - சுதந்திரம், அரசியல் உரிமை! என்பன.

"சுக்கா மிளாக சுதந்திரம் கிளியே? என்ற வினாவிற்கு விடைதான் சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் எழும் இன்னொரு வினாவடிவம்: "இந்த நிலையில் சுதந்திரப் போரெங்கே? கொந்தளிப்பில் நல்லதொரு கொள்கைமுளைப்பதெங்கே? என்பதாகும்.

தஞ்சமென்று பிறன்கையில் தாழ்கிலாத்
தன்மையாவது வீரன் முதற்குணம்!
நெஞ்சிலூறிக் கிடந்ததம் பூமியை
நேரில் மற்றவர் ஆண்டிடப் பார்த்திடும்
பஞ்சையன்று துரியன் இராவணன்
பாரதக்குலம் வேண்டிடும் பண்பிதே!

என்று எண்ணிப் பாடியவர், சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் நலிவுதரும் கதையின் தாக்கத்தை மூடிமறைக்காமல் சாடியுள்ளார்!

நல்ல இமயம் நலங்கொழிக்கும் கங்கை நதி
வெல்லத் தமிழ் நாட்டின் மேன்மைப் பொதியமலை
செந்நெல் வயல்கள் செழுங்கரும்புத் தோட்டங்கள்
தின்னக் கனிகள் தெவிட்டாப் பயன்மரங்கள்

இன்பம் செறிந்திருக்கும் இப்பெரிய தேசத்தில்

முப்பத்துமுக்கோடி மாந்தர்கள் மொய்த்தென்ன?

செப்பும் இயற்கை வளங்கள் செறிந்தென்ன?

மூடப்பழக்கம் முடிவுற்ற கண்ணுறக்கம்

ஓடுவதென்றோ? உயர்வதென்றோ?

என்று வினாவியதோடு, "நானறியேன்" என்றும் விடை கூறித்தவித்தான் குப்பன்; ஆனால் வெள்ளைக்காரனோ 'உண்மை'யை வெளிப்படையாகக் கூறியதைக் குப்பனும் வஞ்சியும் கேட்டறிந்துள்ளது தெரிகிறது.

தேகம் அழிந்துவிடும்; சுற்றத்தார் செத்திடுவார்

போகங்கள் வேண்டாம்; பொருள் வேண்டாம் இந்தப்

பாழுலகம் பொய்யே பரமபதம் போ" என்னும்

தாழ்வகற்ற எண்ணுங்கால் சாக்குருவி வேதாந்தம்

சாதிப்பிரிவு சமயப் பிரிவுகளும்

நீதிப்பிழைகள் நியமப் பிழைகளும்

மூடப் பழக்கங்கள் எல்லாம் முயற்சி செய்தே

ஓடச் செய்தால் நமையும் ஓடச் செய்வார் என்பேன்.

என்று இந்திய சுதந்திரப் போரின் பலமற்ற போக்கினை வெள்ளையன் வாய்விட்டுப் பேசும் விமரிசனப் பாங்கினைக் காட்டினார் பாரதிதாசன்.

## முதல்தொகுதியில் :

"சகோதரத்துவம்" "ஆய்ந்துபார்" என்ற தலைப்புகளில் கவிக்கூற்றாக முன்மொழிந்ததையே பிரஞ்சுக்காரன் அயல் கூற்றாக்கியும் முன்னிலைப் புறமொழியாக்கியும் சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் அவனுடைய மறு செயலாக்கிச் (Reactions) காட்டியிருப்பது புரட்சிக் கவிஞரின் உளவியல் அணுகுமுறையாகும்.

செத்து மடிவதிலும் சேர்ந்து பிறப்பதிலும்

இவ்வுலக மக்களிலே என்ன பேதங்கண்டாய்?

செவ்வை பெறும் அன்பிலார் தீயபேதம் கொள்வார்

எங்கள் பிராஞ்சியர்கள் இப் பேதம் பாராட்டித்

தங்கள் பழங்கீர்த்தி தாழ்வடைய ஒப்பார்கள்

பேதபுத்தி சற்றும் பிடிக்காது போ! போ! போ!

பேதம் கொண்டோர்க்குப் பிராஞ்சில் இடமில்லை

என்பதனைக் குப்பனும், வஞ்சியும் மூலிகைப் பயனாகக் கேட்டு

மகிழ்ந்தனர். நீங்களே சொல்லுங்கள் 'என்ற தலைப்புள்ள முதல் தொகுதி பாடலில் கேளாதன எல்லாம் கேட்பன போல எழுப்பிய வாதங்களையே - நல்லஅமெரிக்கன் குரலிலும் பொல்லா அமெரிக்கன் குரலிலும் வெளிப்பட (Reactions) வைத்துள்ளார் - சஞ்சீவி பர்வதத்தின்

சாரலில் 'உலக ஒற்றுமை' எனும் தலைப்பிட்டுச் சுட்டிய தத்துவ முத்திரைக்கு உரைவிளக்கமாக அமைவதே சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் இடம் பெற்றுள்ள நல்ல அமெரிக்கன் படப் பிடிப்பாகும்.

நானிலத்தில் வாழ்கின்ற
எல்லோரும் நன்றாய் இருக்க நினைத்திடுவான்
நல்ல அமெரிக்கன்

மேலோட்டமாகப் பார்த்தால் சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் இடம் பெற்றுள்ள குப்பனும் வஞ்சியும் எதிர்பாராத முத்தத்தில் வரும் பொன்முடியுடனும், பூங்கோதையுடனும் ஒப்பிடத்தக்க காதல் நெஞ்சினர்; ஆனால் சற்றே கீறிப் பார்த்தால் - நன்கு ஊன்றிப் படித்தால், காதலுக்கு மேலானதொரு நாட்டுக் கடமை உள்ளதை உணர இயலும்; அக்கடமையாம் நாட்டு விடுதலைக்குப் போராடுவதும், போராட்டத்துக்குத் துணையாவதுமே சஞ்சீவி பர்வதத்தில் ஓங்கியுள்ள உயிர் நிலையான உள்ளடக்கம். மூலிகை பெற்றுத் தரும் கோரிக்கையைக் குப்பன் நிறைவேற்றினால் "நோகாமல் முத்தங்கள் நூறு" தருவதாக வாக்களித்தாள் வஞ்சி. குப்பன் அச்சாரம் ஒரு முத்தம் முன்னதாகக் கேட்டு வைத்தான்; வஞ்சியோ, கேலிக்கு நேரம் இதுவல்ல, கேளுங்கள் மூலிகைக்குப் பக்கத்தில், முத்தம் கிடைக்கும் என்றாள். இப்படியே பார்த்தால் சஞ்சீவி பர்வதத்தின் சாரல் ஒரு முத்தக்காப்பியமாகக் கருதத்தோன்றும். உண்மையில் அது 'இன்றைமை வருத்தும் இன்னல்களை' மாய்க்கவல்லி முரசொலி; உலகின் அடிமைத் தளையை அறுத்தெறிய வந்த கொலைவாள்! பெண்ணடிமையை, நாட்டின் மண்ணடிமையை பொருளாதாரக் கொத்தடிமையை வெட்டி வேரறுத்துப்புதைக்கும் வீரப்போர் வாள். இத்தனைக்கும் காரணம் அதன் உத்திப் புதுமை! என்ன புதுமை? உளவியல் சார்பான அணுகுமுறையே அந்தப் புதுமை. தூண்டல் துலங்கல் (**Stimuli - Response**) என்ற விதிமுறையில் கல்வி நிகழக் கூடியது. அது வெளிப்பாடுகள், மறு செயல்கள் எதிர்தாக்குதல் என்ற முறையில் கவிதைகள் படைக்கப்படுதல், படிக்கப்படுதல் ஆகும். பாரதிதாசன் எண்ணிறந்த காதல் பாடல்கள் பாடிப்பாடி மகிழ்ந்தவர்; மகிழ்வித்தவர்; தமிழ் மொழியைப் போற்றிப் புகழ்ந்து பாடிப்பாடி மகிழ்ந்தவர், மகிழ்வித்தவர். இயற்கை அழகில் ஈடுபட்டு ஈடுபட்டு எழுதுவதில் களைப்படையாதவர். இம்மூன்று துறைக்கு மட்டுமா பாரதிதாசன் கவிதைகள் இடம் தந்தன? சமுதாயத்தில் சாதி காரணமாக உயர்வு தாழ்வு கூடாது என்று சாதியமைப்பைச் சாடிப் பாடிய பாடல்கள் பாரதிதாசனுக்குப் பெருமை சேர்த்தன. செல்வம் காரணமாக ஏற்றத் தாழ்வு நிலவியதைக் கடுமையாக எதிர்த்துப் பொது உடைமையைப் போற்றிப்புகழ்ந்து வரவேற்றுப் பாடியதும் அவர் பெருமையைக் கூடுதலாக்கியது. அரசியல் உரிமை மறுக்கப்பட்டு மக்கள் அடிமைகளாகச் சிறுமைப்படுத்தப்படுவதைப் பழித்து குடியாட்சி மலரப் பாடிப்பாடி வாதாடியதும் பாரதிதாசன் புகழ் பெருகக் காரணமாயிற்று. தம் கவிதையைக் கல்விக்குரிய களமாக்கிக் கல்வியறிவைப் பெருக்கவேண்டி முழங்கியவர். பாரதிதாசன். கல்வி வளர்ச்சிக்கு இந்தி தடையாகுமாதலால் இந்தித் திணிப்பை எதிர்த்துப் போராடிக் கிளர்ச்சி செய்யப் பாடிப் பாடி அணிவகுக்க முற்பட்டவர் பாரதிதாசன். இங்ஙனம் பாரதிதாசன் கவிதைகளில் இடம் பெற்ற பிரச்சினைகளில் பெண் விடுதலையும் ஒன்றாகும். இங்கே சுட்டித் தொகுக்கப்பட்ட ஒன்பது பிரச்சினைகள் பாரதிதாசன் கவிதைகளின் உயிரோட்டமாக அமைந்தவை. இவைகளில் தமிழ்மொழியைப் போற்றுவதும் இந்தித் திணிப்பைத் தாக்குவதும் ஆகிய இரண்டைத் தவிர ஏழு பிரச்சினைகளும் சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் இடம் பெற்றுள்ளன. பின்னர் பாடிய காவியங்களிலும் இதர கவிதைகளிலும் அவர் இயற்றிய நாடகங்களிலும் இப்பிரச்சினைகள் திரும்பத் திரும்ப இடம் பெற்றதுண்டு என்றாலும் சஞ்சீவி பர்வதத்தின் சாரல் இவற்றுக்கெல்லாம் ஒரு வெள்ளோட்டம்/முன்னோட்டம் என்ற அடிப்படையில் தனி மதிப்புக்குரியதாகிறது. இதிலிருந்து பாரதிதாசனின் இலக்கியக் கொள்கையை இனங்கண்டு

உணர சஞ்சீவி பர்வதத்தின் சாரல் சான்றளிப்பதன் மூலம் அதன் தனிமதிப்பு மேலும் பெருமதிப்பாக முடிகிறது. பாரதிதாசன் பாடியவைகளில் தம் கலையைப் பூரணமாக்கும் நோக்கிலிருந்து பழைய சாத்திரப் புழுதிகள் படிந்த அச்ச இருளையும் மயக்கிடும் பாழையும் ஒரு அங்கதக் குறிப்புடன் பாடுகிற தோரணையில் கருத்துப்புதுமையும் உத்திச்சிறப்பும் உயர்ந்த கவிதைப் படைப்பாகும் சஞ்சீவி பர்வதத்தின் சாரல்[3] என்ற டாக்டர் சி.கனகசபாபதி அவர்களின் ஆய்வுக் கருத்து இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

அடிக்குறிப்புக்கள் :

*1*  நூலைப்படி - சங்கத்தமிழ்
நூலைப்படி - முறைப்படி
நூலைப்படி
காலையில் படி கடும்பகல்படி
மாலை இரவு பொருள்படும் படி  *(நூலைப்படி)*
. . . . . . . . . . . . . . . .
கற்பவை கற்கும்படி
வள்ளுவர் சொன்னபடி
கற்கத்தான் வேண்டும் அப்படிக்
கல்லாதவர்கள் வாழ்வதெப்படி? .....*(நூலைப்படி)*
. . . . . . . . . . . . . . . . . .
அகப்பொருள்படி அதன்படி
புறப்பொருள்படி நல்லபடி
புகப்புகப் படிப்படியாய்ப்
புலமை வரும் என் சொற்படி  *(நூலைப்படி)*
. . . . . . . . . . . . . . . . . . . .
தொடங்கையில் வருந்தும்படி
இருப்பினும் ஊன்றிப்படி
அடங்கா இன்பம் மறுபடி
ஆகும் என்ற ஆன்றோர் சொற்படி  *(நூலைப்படி)*
. . . . . . . . . . . . . . . . . . . .

*(பாரதிதாசன் ஒருதாயின் உள்ளம் மகிழ்கிறது, ப.34-35)*

*2.*  ஒன்பது பிரச்சினைகள்:

*1.*காதல், *2.*இயற்கை, *3.* தமிழ், *4.*சாதி, 5.பொருளாதார சமத்துவம் _ பொது உடைமை. *6.*அரசியல் உரிமை - ஜனநாயகம் *7.*இந்தித்திணிப்பு *8.* பெண்ணடிமை, *9.*மூடநம்பிக்கை - பகுத்தறிவு.

*3.*  சி.கனகசபாபதி, பாரதி - பாரத்தாசன் கவிதை மதிப்பீடு, ப.*243*

* * *

# 'அழகின் சிரிப்பு' தமிழ்த் தனி முதல் நூல்

முனைவர் வே. காத்தையன்

உலகில் எங்கும் விளங்கும் இயற்கை - இலக்கியத்தின் பாடுபொருளாய், பாடுபொருளின் பின்புலமாய் பாடு பொருளுக்குப் பெருந்துணையாய் இலங்குகின்றது.

இயற்கைக்குத் தனிமைப் புனைவும் தலைமைப் பொலிவும் தனி நூல் படைப்பும் தந்தவர் பாவேந்தர். பாரதிதாசன். தமிழ்க் கவிதையுலகில் இயற்கைக்கு அழகு எனப் பெயர் சூட்டிக் களித்தவர் பாவேந்தர்.

பாவேந்தர் படைப்புகளில் இயற்கை அழகாய் மலர்ந்து அழகியாய் மயக்கித் தோழியாய்த் துணை செய்து தலைவியாய் இன்பந்தரும் பாங்கு எங்கும் வெளிப்படுகின்றது.

### பாரதிதாசனின் இயற்கைப் புனைவுக் கோட்பாடு :

இந்நூற்றாண்டின் ஒப்பற்ற இயற்கைப் படைப்பான தமது அழகின் சிரிப்பு முன்னுரையில் பாரதிதாசன்,

> காணும் பொருளிலெல்லாம் அழகைக் காணவும்
> கண்டவாறு தாமேயாகச் சொல்லோவியம் செய்யவும்
> திறம் பெறுதல் வேண்டும் தமிழர்கள்[1]

என்று குறிப்பிடுவது இயற்கைப் புனைவு பற்றிய அவர் கோட்பாடாகும். இயற்கையின் கூறுகள் அனைத்திலும் இலங்கும் அழகுப் பொலிவைக் காணும் உணர்வும், உணர்ந்தாங்கு புனையுந்திறமும் கவிஞர் பெற வேண்டுமென்பதே இயற்கையை அழகாகக் கண்ட பாரதிதாசனின் குறிக்கோள். எண்ண இனிக்கும் வண்ண வடிவாலும் வனப்பாலும் உணர்வைக் கொள்ளை கொண்டு தம் வயமிழக்கச் செய்த தாமரைக் காட்சி,

> ........................ நெஞ்சைக்
> கண்ணுள்ளே வைக்கச் சொல்லிக்
> கவிதையைக் காணச் சொல்லும்"[2]

என்று பாரதிதாசன் காட்டியுள்ளது முன்னர்க் கூறப்பட்ட அவர்தம் கோட்பாட்டை உறுதிப்படுத்துகின்றது. அதனால் இயற்கையைக் காணும் நோக்கிலும் அதனைக் கவினுறப் புனையும் போக்கிலும் பாரதிதாசன் தனித்த சிறப்புடன் விளங்குதல் தெளிவாகின்றது.

### இயற்கை - கவிநோக்கில் காட்டும் வனப்பு வகை :

இயற்கையின் கூறுகளை அழகாகவும், அழகைத் திரட்டிய கூட்டாகவும், அழகின் முதற்பொருள் கொண்டமைந்த படைப்பாகவும், அழகுக்குள் அழகாகவும், அழகின் ஓவியமாகவும், வாழ்வாகவும் பாவேந்தர் தம் கலையுலகிற் கண்டு களிக்கும் நிலை தெரிகின்றது. இயற்கையின் வனப்பார்ந்த பொலிவினை நல்லழகு என்றும், சுட்டுகின்றார். அழகு உயிர்பெற்று மேய்வதாகவும், கூத்தாடுவதாகவும் அவர்தம் கவிநோக்கில் காட்சியளிக்கின்றது. இயற்கையைப் பாடிப் போற்றும் கவிவாணரான பாரதிதாசன் அது உலகில் வழங்கும் எல்லையற்ற வனப்புவளம் நோக்கி அதனை உலகின் அழகாகவே சுட்டுவது குறிப்பிடத்தக்கது.

### அழகுத் தோய்வின் நெருக்க நிலை :

இயற்கையழகைப் பல நிலைகளிலுணர்ந்த பாவேந்தர் தம் அழகுத் தோய்வை, இயற்கையில் அழகைக் காணல், அதனிற் கலத்தல், அதனோடு வாழ்தல், அதில் தம்மையிழத்தல் ஆகிய நான்கு நிலைகளிற் புலப்படுத்துகின்றார்.

### இயற்கையில் கண்ட உறவு முறைகள் :

இயற்கை எழிலில் இன்பங்காணும் கவிஞர் உலக வாழ்வில் அது வழங்கும் இனிய பயனுணர்ந்து, அதனை உறவு முறையிற் கண்டும் கொண்டும் அதற்கேற்ற பெயர் சூட்டி அழைத்தும் அவர்தம் ஈடுபாட்டை வெளிப்படுத்துகின்றார். இயற்கையைப் பெண்ணாகவும், அழகுப்பெண்ணாகவும் காதலியாகவும், தாயாகவும் உறவு நலந்தோன்ற சுட்டிக் காட்டுகின்றார்.

### இயற்கை - பயன்நோக்கில் பெற்ற பெயர்கள் :

இயற்கைக் கூறுகள் நல்கும் பல்வகைப் பயன் கருதி அவற்றை வாழ்விற்குப் பயன் நல்கும் பல்வேறு பொருள்களாகவும் காட்டியுள்ளார். உலகுக்குதவும் வித்தெனவும், வேராகவும் மக்கள் பெற்ற சொத்தென்றும் குறிப்பிடுவதோடு மக்கள் வாழ்வாகவும், வாழ்வுக்கான வளமாகவும், சமுதாய நலம் பொலிய அழைக்கின்றார். மானிடர் துன்ப நோய் நீக்கும் மருந்தாகவும், கைகொடுக்குந் துணையாகவும் காட்டுகின்றார். மாந்தர்க்கு இயற்கை அளிக்கும் பன்னலச் சிறப்பு கருதி அது திருவாகவும், உயிராகவும் போற்றப்பட்டுள்ளது.

### அழகின் சிரிப்பு-தனிச் சிறப்பு :

தமிழ் இலக்கிய வரலாற்றிலும், கவிதை வரிசையிலும் 'அழகின் சிரிப்பு' தனித்த சிறப்புடையது. இந்நூல் பாரதிதாசன் இயற்கையின் எழிலார்ந்த பொலிவினைத் தமது அழகுணர்வு சான்ற கலைமனக் கண்களாற் கண்டு உருவாக்கிய ஒப்பற்றப் படைப்பாகும்.

இந்நூலிற் கவிஞர் தம் முன்னுரைக் குறிப்பில் காணும் பொருள்களிலெல்லாம் இலங்கும் அழகினை நுகர, காண்பார் கருத்திலும் அழகுணர்ச்சி இருத்தல் வேண்டுமென்ற கருத்தினைப் புலப்படுத்துகின்றார். அதனால்தான் அவருடைய கலையுள்ளம் இருளில் எழிலைக் காண்பதுடன் அதனை அனைத்துள்ளும் அழகாகக் கொண்டு போற்றவும் செய்கின்றது. நூலின் தொடக்கத்தில் இடம் பெற்ற அழகெனும் தலைப்பில் அமைந்த பாடல்கள் மூன்றும்[3] அடுத்து வரும் அந்நூற்பாடல்களுக்கு முன்னுரையாகவும், இயற்கை பற்றிக் கவிஞர் கொண்ட இலக்கியக் கோட்பாடாகவும் விளங்குகின்றன. இயற்கையை அதன் அழகு விருந்து பற்றியே போற்றிப்பாடும் தமிழ்ப் பாடல்களில் அவற்றிற்கு இணையானவை இல்லையென்று மு. வரதராசன் குறிப்பிடுவது 'அழகின் சிரிப்பி'ன் சிறப்பிற்கேற்ற சான்றாகின்றது.

## புதுமரபு :

இயற்கைப் புனைவில் இந்நூற்படைப்பு ஒரு புதிய மரபின் தொடக்கமாகும். இலக்கியத்துறையில் புதிய உணர்ச்சிகள் எழுந்து புதிய போக்கில் அமையும்போது பழ மரபுகளைக் கடந்த நிலையும் மாறிய நிலையும் தோன்றுவதுண்டு என மு. வரதராசன் மரபில் மாற்றம் நிகழ்வதனைச் சுட்டிக் காட்டியுள்ளார்[4]. இயற்கை குறித்த தம் கலைநோக்கிலும் கவிதைப் புனைவிலும் தனித்த பார்வையும் புலன் ஒன்றிய தோய்வும் கொண்டு புதிய படைப்புத் தந்தவர் பாரதிதாசன். பழ மரபினையும் வேண்டுவழி ஆண்டுப் புதுப்பித்தவர். பழந்தமிழ் இலக்கியங்கள் இயற்கைப் புனைவில் மேற்கொண்ட வருணனை, பின்புலம், உவமை போன்ற சார்புநிலை நெறிகளைத் தம் புனைவுகளில் போற்றியதோடு இடைக்கால இலக்கியங்களில் வழக்குக் குறைந்த உள்ளுறை போன்றவற்றையும் புதுப்பித்துத் துலக்கியவர்.

## மரபில் மூன்று நிலைகள் :

கவிதையில் மரபு வழுவாது நடப்பவர் பலர் என்றும், அம் மரபின் எழிலினைத் துலங்க வைப்பார் சிலர் என்றும், மிகச் சிலரே அம்மரபுக்குப் புது நிலையும் கூட்டிக் காட்டுவர்[5] என்றும் 'அறிஞர் அண்ணா' குறிப்பிட்டதற்கிணங்கக் கவிதைத் துறையில் மரபை ஆளும் இம்மூன்று நிலைகளிலும் பாரதிதாசன் சிறந்து விளங்குகின்றார். தமக்கு முற்பட்ட காலக் கவிஞர்களைப் பின்பற்றும் நிலை, தனித்த சிறப்புடன் விளங்கும் நிலை, புதுமரபைத் தோற்றுவித்துப் பிறருக்கு வழிகாட்டும் நிலை ஆகிய மூன்றிலும் அவர் ஒப்பற்றுத் திகழ்கின்றார்.

## முதல் நிலை :

பாரதியாரின் கவிதா மண்டலத்தைச் சேர்ந்த கனகசுப்புரத்தினமாகப் பாரதி நெறியைத் தம் நெறியாகக் கொண்டு இயற்கையின் இயல்பையும் இயக்கத்தையும் சக்தியின் திருவிளை-யாடல்களாகச் சிறப்புறப் புனைந்திருக்கின்றார்.

## இரண்டாம் நிலை :

இரண்டாம் நிலையில் இயற்கையை அதன் அழகு நலம் குறித்தே புனையும் தனிப்பாடல்களும், அதன் தலைமைச் சிறப்பினைக் காட்டும் தனி நூலும் படைத்து இணையற்று விளங்குகின்றார். இந்நூற்றாண்டின் கவியுலகில் கால்கொண்டு சிறக்கும் சமுதாயப் பாங்கினைப் பாரதிதாசன் தம் குறிக்கோளாகக் கொண்டு, கவிதை படைக்கும் பாங்கினைத் தம்முடைய முழுக் கவிதைகளிலும், கவிதைப் பகுதிகளிலும் நன்கு புலப்படுமாறு புனைந்துள்ளார். இவ்வகையில் சமுதாய நலங்குறித்த கருத்தின் பிறப்பிடமாகவும், அதனைப் புலப்படுத்தும் அரங்காகவும் இயற்கையை அதன் அழகு குன்றாது புனைந்து காட்டுவது பாரதிதாசனின் ஆளுமையாக அமைகின்றது.

## மூன்றாம் நிலை :

மூன்றாம் நிலையாகத் தமிழ் கூறும் நல்லுலகில் பல இளங் கவிஞர் தம் கவிதை வழிகாட்டியாகப் பாரதிதாசனைக் கொண்டு தம் கலைப்படைப்பினை உருவாக்கிப் 'பாரதிதாசன் பரம்பரை' எனப் பெருமையோடு தமக்குப் பெயர் சூட்டிக் கொண்ட நிலையினைக் குறிப்பிடலாம். அக்கவிஞர், பலரும் இயற்கை குறித்துத் தனிக் கவிதைகள் யாத்துள்ளனர்.

மதிப்பீடு :

இயற்கைப் புனைவில் முந்தையோர் மரபினைத் தழுவிப் போற்றல், இயற்கைக்குத் தம் நூல்களில் தனியிடச் சிறப்பும் தலைமையும் அளித்துப் புதுமரபு காணல், இப்புதுமரபு போற்றும் வகையில் பின்னோர்க்கு வழிகாட்டி ஒளிர்தல் ஆகிய மூன்று நிலைகளிலும் பாவேந்தர் முன்னோடியாய்த் திகழ்கின்றார்.

அடிக்குறிப்புக்கள் :

1. *அழகின் சிரிப்பு, ப.4.*

2. மேலது, ப.27.

3. மேலது, ப.5.

4. மு.வரதராசன், இலக்கிய மரபு, ப.201.

5. சி.என். அண்ணாதுரை, அணிந்துரை, வல்லம் வேங்கடபதி கவிதைகள்.

* * *



மகிழ்ந்து நான் ஏகும் போதில்
காடுதன் மயிலை ஏவி
அகவலால் வரவேற் பொன்றை
அனுப்பிற்று

- பாரதிதாசன்

ஓவியம் : ஏ. இராசேந்திரன்

# பாவேந்தர் தனித்தமிழ்:

சு. தமிழமல்லன்

பாரதி போற்றிய பாரதி தாசன்
சீர்மிகப் பெற்றவன் சிந்தனைப் பாவலன்
யாரினும் யாரினும் தமிழ்மேற் காதலன்
வேரினை யறுத்திடும் பகையினர் வேர்களைப்
பீரங்கி வைத்தே பிளந்திடும் காவலன்!
எரிமலைக் குழம்பவன் எரித்திடும் கதிரவன்!
சாதிகள் பொசுக்கினான் சாத்திரம் தீய்த்தான்
மோதியே அழித்தான் மூடத் தனங்களை!
புலவர் வள்ளல்! பொதுமைப் பூமரம்!
கலகக் காரன்! கறுப்புடை வேந்தன்!
பகுத்தறி வரிமா! பாட்டுப் புரட்சியை
வகுத்தபே ராசான்! வறியவர் தோழன்!
கெடுதலை யெல்லாம் கெடுக்கவே
விடுதலை பாடினான் பாரதிதாசனே!

அடிமை மொழியாய் அருந்தமிழ் அல்லற்
படுவதை உணர்ந்தார் பாரதி தாசனார்!
நந்தனார் என்னும் நலிந்த வகுப்பினன்
சொந்தக் கோயிலுள் செலமுடி யாமல்
அன்றே தடுத்தனர்! அன்னவோர் நிலையே
இன்றும் நம்தமிழ் அடைந்திடல் ஆமோ!
தீண்டத் தகாத நந்தனா ராகவே
ஆண்டநம் மொழிதான் ஆட்படு வதுவோ?
இந்நிலை உணர்ந்தார் இனியபா வேந்தர்
நன்னிலை மீட்டிட நாவசைத் தெழுதினார்!

"காற்செருப்பைப் பிறனொருவன் கழிவிடத்தில் தள்ளிடினும்
பொறாத உள்ளம்
மேற்படுத்தும் எவற்றினுக்கும் மேம்பட்ட தன்மொழியைத்
தமிழைத் தீயோர்
போற்றுவதற் குரியதொரு பொதுவினின்று நீக்கிவைத்தால்
பொறுப்ப துண்டோ?"

கோயிலுள் தமிழ்தான் நுழைவதற் கென்றே
கொஞ்சும் தமிழில் கொட்டினான் பாக்களை!

பற்பல வகையினில் பைந்தமிழ் ஒழித்திடப்
பற்பல வகையினில் பகைவர் முயன்றனர்!
முயற்சியில் ஒன்றே மணிப்பிர வாளமாம்
உயிரினைப் பறிக்கவே உதவாக் கலப்பினைத்
தமிழினிற் சேர்த்தனர்! தமிழ்தான் அழியுமோ?
தமிழாய் வழங்கிய தக்கநற் பெயர்களை
உமிழும் வண்ணம் வடசொல் லாக்கினர்!

"சேரன் சோழன் செல்வேள் மறவன்
வீரன் பாணன் வென்றி வேங்கை"
எனும் தமிழ்ப் பெயர்களை எல்லாம் நீக்கினர்
இனும்வாய் நுழையா இழிபெயர் நுழைத்தனர்!

"ஜலஜா கிரிஜா வனஜா தனுஜா
புஷ்பா பங்கஜம் புஷ்கர பூரணி
நிஷாஉஷா நீரஜா நித்தியா வித்தியா
பாஷ்யம் ரமேஷ் பாஸ்கர் விக்டர்"
இவைநம் தமிழரின் இன்றைப் பெயர்கள்
இவற்றால் தமிழ்தான் இம்மியும் வளருமா?

அடிமை வழக்கெலாம் அற்றுப் போய்விழத்
தடியால் அடித்துத் தாக்குதல் போலே

தனித்தமிழ் முழக்கினைப் பாரதி தாசனார்
இனித்திடும் வகையினில் எழுதியே குவித்தார்.

"உணவுதரு விடுதிதனைக் கிளப்பன வேண் டும்போலும்
உயர்ந்த பட்டுத்
துணிக் கடைக்குச் சில்குஷாப் எனும்பலகை தொங்குவதால்
சிறப்புப் போலும்
பவன் மண்டல் முதலியன இனியேனும் தமிழகத்தில்
பயிலா வண்ணம்
அவண்சென்று முழங்கிடுவீர்! ஆங்கிலச் சொல் இந்திமொழி
வடசொல் யாவும்
இவண் தமிழிற் கலப்பதுண்டோ?"

என்னும் வரிகள் பாரதி தாசனின்
பொன்னார் வரிகள் புரட்சிக் கொழுந்துகள்
மொழியின் தூய்மை முழக்கிடும் வரிகள்
மொழியின் விடுதலை இலாமல் என்றும்
நாட்டின் உரிமை நண்ணா தென்பவை!
ஏட்டில் வரைந்தவிப் பாட்டின் அடிகள்
தயக்கம் இன்றித் தமிழரால்
இயக்கமாய் மலர்ந்திடல் இன்றைய தேவையே!

* * *

# பாவேந்தர் வழி நடப்போம்

புதுவை அருணன்

கூவும் கருப்புக் குயிலெல்லாம்
கொள்கை புரட்சிக் கவிஞரவர்
மேவும் சிறப்பு நூற்றாண்டில்
மேன்மை உரிமைப் பண்ணிசைக்கும்!

ஆடும் வண்ண மயிலெல்லாம்
அழகு தமிழின் பாவேந்தர்
பாடும் கொள்கை பாமுழக்கின்
பண்ணுக் கேற்ப ஆடிடுமே!

கூடி விண்ணில் கருமேகம்
கூட்டும் முழக்கில் பாவேந்தர்
நாடிப் புனைந்த சீர்திருத்த
நயத்தை ஓங்கி இடிமுழக்கும்!

அருவி வெண்மை சலசலப்பில்
அருமைக் கவிஞர் தமிழுணர்வை
உருகிப் பொழிந்து நாட்டுக்கே!
உண்மை உணரச் செய்திடுமே!

தமிழர் நாமும் ஒருணர்வில்
தழையும் அன்பால் ஒன்றுபட்டே
அமிழ்தாம் தமிழைத் திக்கெட்டும்
அரும்பிப் பூக்கச் செய்திடுவோம்!

அருமைக் கவிஞர் பாவேந்தர்
அவனிக் களித்த கருத்தெல்லாம்
கரும்பின் சாறாய்க் கனிந்திடவே
கருத்திற் கொண்டும் உழைத்திடுவோம்!

இன்றும் உடும்புப் பிடிபோல
இருக்கும் சாதி யுணர்வுதனை
வென்று பொதுமை குமுகாயம்
மிளிரக் கவிஞர் வழிநடப்போம்!

பாட்டு வேந்தர் வாழ்நாளில்
பாகார்த் தமிழே கொலுவோச்சும்
காட்சி காண விழைந்தநிலை
கனிய நாமும் முனைந்திடுவோம்!

பாட்டுத் தலைவர் நூற்றாண்டில்
பசிக்கும் ஏழை இலையன்றே
நாட்டு நடப்பிற் கால்கோள
நாளும் கவிஞர் வழிநடப்போம்!



# 'அழகின் சிரிப்பு' அணிகளில் சமூக நோக்கு

முனைவர் அ. கலியபெருமாள்

## அழகின் சிரிப்பு :

அழகு, கலையின் ஆவி; இன்பத்தின்பால் ஆற்றுப்படுப்பது, இயற்கையோ அழகுக்கு இருப்பிடம்; கவிதைப் பிறப்பிடம். காலைப் பரிதியிலும், கடற்பரப்பிலும் ஒளிப்புனலிலும் அதைக் கண்டு மகிழ்ந்தவர், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன். சோலை மலர்களிலும், தளிர்களிலும் தொட்ட இடமெல்லாம தட்டுப்பட்ட அழகைத் தொட்டுப் பார்த்தவர் அவர். மாலைப்பொழுதிலே மேலைத்திசையிலே ஒளிரும் மாணிக்கச்சுடரில் இருந்து, ஆலம் சாலையில் கிளைக்கூட்டத்துக் கிள்ளைக் கூட்டத்தில் அந்த அழகென்பாள் அவருக்குக் கவிதை தந்தாள். "நசையோடு நோக்கடா எங்கும் உள்ளாள்/நல்லழகு வசப்பட்டால் துன்பம் இல்லை" (அழகு-3) என்பதே நமக்குப் புரட்சிக் கவிஞர் இயம்பும் அறிவுரை. "என்றும் இன்பமே, அழகு என்பது" என்பதன்றோ கவிஞர் கீட்சின் மொழி பெயர்க்க இயலாத அனுபவம்.

அழகின் சிரிப்பில் அகமகிழும் கவிஞர், கடல் அலைகளில் அசைந்து ஆற்று வெள்ளத்தில் மிதக்கிறார். தென்றலில் குளிர்ந்து செந்தாமரை மணத்தை நுகர்கிறார். வான்பரப்பில் தேன்பரப்பி, உதய ஞாயிற்றின் ஒளியால் காரிருளை ஓட்டுகிறார். காட்டிலே அலைந்து ஆலிலே தங்கிப் புறாக்களைக் கண்டு கிளிப்பேச்சைக் கேட்டுக் குன்றம் ஏறுகிறார். சிற்றூரின் இயற்கையிலே சிந்தை பறி கொடுத்துப் பட்டணத்துச் செயற்கையிலே பழகித் தமிழ்ப்பொழிலில் தேன் சுவைக்கும் தும்பியாகிறார். எங்கெங்கும் செல்ல அவர் ஏறும் அழகு ஊர்தி அணியாகிறது. உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம் என அணிவகுக்கும் அந்த அணிகளில் எல்லாம் புரட்சிக் கவிஞரின் சமூக நோக்கு அமைந்துகிடப்பது வியப்பூட்டுவதாம். கவிஞரின் நேரிடைக் கவிதைகளில் கல்வித்தேவை வெளிப்படுவதும், புரட்சித்தீ புகைவதும், அடிமை அடிவருடுவதும், உழைப்பு ஊதியம் பிழைப்பதும், தமிழ்உணர்வு தலைதூக்கி நிற்பதும் இயல்பே. இத்தகைய சமூக நோக்கை, அழுகு சிரிக்கும் அணிகளில் எதிர்பார்க்க இயலாது. ஆனால் புரட்சிக் கவிஞரின் அழுத்தமான சமூக நோக்கு, அணிகளிலும் தாக்கத்தை ஏற்படுத்தத் தவறவில்லை.

## கல்விப்பூரிப்பு :

"அறிவுடையார் எல்லாம் உடையார்" என்பது வள்ளுவர் அறிவுரை. அறிவு, முறையான கல்வியாலும், மூத்தோர்வாய்க் கேள்வியாலும் அமைவது. அடி அடியாய் எடுத்துவைப்பதன்றி ஒரேயடியாய்த் தாண்டுவதில் இல்லை, அறிவு முன்னேற்றம்[2]. அறிவைத் தரும் கல்வி அடைந்தோரையே "கண்ணுடையர்" என்று அடையாளம் காட்டுவார் வள்ளுவர். விழுப்பம் தருதலால் உயிரினும் மேலாக ஓம்பப்படத்தக்கதாக உள்ள ஒழுக்கத்திற்கு மூலம் கல்வி.[3] இத்தகைய கல்வி தரும் நிலையமே, கடற்கரைக்குச் செல்லும் கவிஞரின் எண்ணத்தில்

தோன்றுகிறது. ஊருக்குக் கிழக்கே ஒரு பெரும் கடல்; ஓரத்தே கீரியின் உடல் வண்ணம் போல் மணல் மெத்தை. அம்மெத்தையிலே தவழும் அலையோ பூரிப்பால் ஏறுகிறது. உவமையாகக் கவிஞரின் உள்ளத்தில் கல்வி நிலைய இளைஞர் உருவெடுக்கிறார். 'நேரிடும் அலையோ கல்வி/நிலையத்தின் இளைஞர் போலப்/பூரிப்பால் ஏறும்" (கடல்-1) என்பது பாரதிதாசன் சொல்வண்ணம். கவிஞர் உருவாக்கிய இலட்சிய உலகத்தில் கல்வி நல்காக் கசடர்க்குத் தூக்குமரம் அல்லவா காத்திருக்கும். "கல்லாரைக் காணுங்கால் கல்வி நல்காக்/கசடர்க்குத் தூக்குமரம் அங்கே உண்டாம்" (பாண்டியன் பரிசு, இயல் 56.4).

## பொல்லாரும் நல்லாரும் :

ஒளி முத்துக்கள் இறைந்தது போல் உள்ள குளத்து நீரில் பச்சை இலைத் தட்டில், கரும்பாம்பின் தலைகளையும், அணிவிளக்கின் அழகுப்பிழம்புகளையும், மங்கையர் வான் பார்த்துச் சிரிக்கின்ற இதழ்க்கூட்டத்து மாணிக்கச் சிதறல்களையும் முறையே தாமரைச் சிற்றரும்பாய், செவ்வரும்பாய், விரி அரும்பாய்க் காணும் கவிஞர், கவிதையைக் காணச் சொல்லும் செந்தாமரை மலர்களில் கருத்திழக்கிறார். மலர்ந்த செவ்விதழைக் குழந்தையின் கன்னமாக்கி, விழியிலே விழி வைத்து, மணவாளன் உருக்கண்டு பூரிக்கும் மங்கை உதட்டிலே ஒட்டிக் களிக்கும் கவிஞர், சமூகத்தை வாழவிடாது தவிக்கச் செய்யும் பொல்லார் நெஞ்சமாக்கித் துடிக்கிறார். அதே துடிப்பை, வாரித்தருவோரின் சிவந்த அங்கையாகக் கண்டு ஆனந்தத் துடிப்பாக்குகிறார் "ஓரிதழ் பொல்லார் நெஞ்சம்/வாரித்தரச்சிவந்த/ உள்ளங்கையாம் மற்றொன்று" (செந்தாமரை-7)

## அடிமையின் அவலம் :

ஆண்டானுக்குக் கீழே சிக்கித்தவிக்கும் அடிமைநிலை, பாரில் தொடர்ந்துவரும் பரிதாப நிலை. அடிமைத்தனம் தவறானது இல்லை என்றால் எதுவுமே தவறில்லை[4] என்று சினங்கொள்வார் ஆபிரகாம் லிங்கன். அடிமைத்தனம், பூட்டிய விலங்கிலே இல்லை. அடிமையிடமே இருக்கிறது. அடிமைத்தனம் நீங்கிய உள்ளத்தோரே விடுதலை அடையப் பெறுவர்.[5] இத்தகைய அடிமை நெஞ்சத்தையே முகில் மொய்க்கும் குன்றம் கண்ட கவிஞர் எண்ணிப்பார்க்கிறார்.

வண்முகில் ஒன்று கூடிப்
பானையில் ஊற்று கின்ற
பதநீர் போல் குன்றில் மொய்க்கப்
போனது; அடிமை நெஞ்சம்
புகைதல் போல் தோன்றும் குன்றம் (குன்றம்-10)

அடிமைகளில் கொத்தடிமை நிலை, மேலும் அனுதாபத்திற்குரியது. ஆண்டானுக்கு உழைப்பை வைத்து, அடி வயிற்றுக்குப் பசியை வைத்துப் புலர்ந்ததும் வேலைக்குப் போவதற்காகவே பொழுது போனதும் கூட்டுக்குள் அடைகிறார்கள். கூட்டிலிருந்து காலையில் கோட்டுப் பூப் போலச் சரியும் புறாக்கள் மாலையில் அதே கூட்டுக்குள் அடைகின்றன-கொத்தடிமைகள் போல. "கூட்டினில் அடையும் வந்தே/கொத்தடிமைகள் போலே" (புறாக்கள் - 10) .

## உழைப்பாளி நிலை :

'உழைப்பே உலகின் பிழைப்பு. விண்ணை மண்ணிலே மேவச் செய்யும் உழைப்பாளிக்கோ வளமில்லை; மகிழ்ச்சியில்லை. உழைப்பே எதையும் வெல்லும்'[6] என்று உயர்த்திப்பேசுவார் வர்ஜில். உழைப்பின் ஆற்றல் இது எனில் உழைப்பாளியின் நிலையோ.......உழைப்பின்

களம்-உழைப்பின் விளைவு உழைப்பாளிக்கு உரியதாகிறதா? உழைப்புக்கு ஏற்ற ஊதியமாவது கிடைக்கிறதா? ஐந்தும், ஐம்பதும் என்ற ஆங்கிலக் கவிதையில் அருமையாகச் சொல்லுவார். ஒரு புலவர்[7]. ஐம்பது பேர் உழைத்துப் பயனை ஐந்து பேருக்குக் கொடுக்கிறார்கள். அந்த ஐந்து பேருமே சட்டங்கள் இயற்ற அனுமதிக்கப்படுகிறார்கள். ஐம்பது பேருமே அறிவற்றவர்கள், வாழத் தகுதியற்றவர்கள் என்று கூறுவதா?

உழைப்பாளியின் அவல நிலை உணர்ந்த கவிஞர் இரவு நேரத்து வானத்தைப் பார்க்கிறார். அடைத்திருக்கும் விண்மீன்கள் அவர் உள்ளத்தில் இன்பக்காட்சியை அடைக்கவில்லை. உள்ளத்து வேதனைச் சூட்டால் உடலில் தோன்றிய கொப்புளங்களாக அவை தெரிகின்றன. விண்ணுக்கு வந்த வேதனைதான் என்ன? பாரிலே நடக்கும் பரிதாபத்தை - கொடுமையைப் பகல் முழுவதும் பார்க்கிறது; பார்க்கிறது. பார்க்கப்படுவது உழைப்பாளியின் பரிதாபக் காட்சி. இந்த உழைப்பாளிகள் அனைவரும் ஏழைகள். உரிமை கேட்டாலோ புண்ணிலே அம்பு பாய்ச்சப்படும் கொடுமைக்கு உள்ளாகின்றனர். ஆணவக்கார இழிந்தோரோ செல்வத்திற்கு அதிபதிகள். இதைப் பகல் முழுவதும் பார்த்துப் பார்த்துக் கொதித்தவானம், இரவில் விண்மீன்களாய்க் கொப்பளிக்கிறது.

மண்மீதில் உழைப்பார் எல்லாம்
    வறியவராம்; உரிமை கேட்டால்
புண்மீதில் அம்பு பாய்ச்சும்
    புலையர் செல்வராம் இதைத்தன்
கண்மீதில் பகலில் எல்லாம்
    கண்டு கண்டு அந்திக்குப் பின்
விண்மீனாய்க் கொப்பளித்த
    விரிவானம் பாராய் தம்பி (வான்-1)

## புரட்சியின் ஆற்றல் :

புரட்சிக் கவிஞருக்குப் புரட்சியின் நினைவு, இயற்கையில் தோய்ந்திருக்கும் போதும் எழுந்தோங்குகிறது. புரட்சி, சர்வாதிகாரக் கொடுமையைப் புரட்டித் தள்ளுவது. உழைப்பாளிகள் ஒடுக்கப்பட்டால் உண்டாவது புரட்சிதானே. அந்தப் புரட்சியில் அவர்கள் இழப்பது விலங்குகள் அன்றி வேறில்லை. அதனால்தான் அவர்களை ஒன்றுபடுமாறு காரல் மார்க்சும் ஏஞ்சல்சும் அறைகூவுகின்றனர்.[8] கடற்கரைக்குச் செல்லும் கவிஞர், கரையோரத்தில் அலைகள் மோதிக் கலகம் விளைவிப்பதைக் காணுகிறார். அதே நேரத்தில் கடல் நடுவே அமைதியைப் பார்க்கிறார். கரையோரத்துக்கலகம், புரட்சியையும், கடல் நடுவில் அமைதி, புரட்சிக்குப்பின் பொலியும் அமைதியையும் கவிஞருக்கு நினைவூட்டுகின்றன.

புரட்சிக்கப்பால் அமைதி
    பொலியுமாம் அதுபோல் ஓரக்
கரையினில் அலைகள் மோதிக்
    கலகங்கள் விளைக்கும் ; ஆனால்
அங்குள்ள அலைகட்கப்பால்
கடலிடை அமைதி அன்றோ (கடல்-3)

கலகம் வேறு, புரட்சி வேறு, கலகம் புரட்சியாகாது என்பதை ஆன்றோர் கூற்றில் காணலாம்[9]. ஆனால இங்குக் குறிக்கப்படும் கலகம் அறத்தின்பாற்பட்டது.

வெள்ளம் ஆற்றிலே விரைகிறது. அதற்குமுன் எங்கும் கோடையின் ஆதிக்கம், வெப்பம் சுடச்சுட வேதனை ஒளிர்கிறது. குளிர்ச்சிக்கு ஏங்குகிறது குவலயம். கோடையிலிருந்து விடுதலை கொடுப்பவர் யார் என்று தவிக்கும் வேளையில், ஆற்று வெள்ளம் பாய்ந்து வந்து அவலம் போக்குகிறது; உவகை ஆக்குகிறது. கொடுங்கோல் ஆட்சி நீக்கி நலம் கொடுக்கும் புரட்சியைக் கவிஞர் நினைக்கிறார். "கோடையாட்சி மாற்றிற்று, புரட்சி வெள்ளம்" (ஆறு-4).

## தமிழ் உணர்வு :

மொழி உணர்வு, சமூகத்திற்கு முதன்மையானது. மொழி இன்றேல், இனம் இல்லை; மொழியும் நாடில்லை. தமிழ் உணர்வைப்புரட்சிக் கவிஞரிடமிருந்து எந்த இடத்தும் தனித்து வைத்துப் பார்க்க முடியாது. சிந்தையிலும், மொழியிலும் செயலிலும் செந்தமிழ் அன்றி வேறில்லை. குன்றத்தை இருள் மூடக்காண்பார், கருத்துக்களைக் கருந்தமிழ்ச்சொல் மூடி இருத்தலை நினைவு கூர்கிறார்.

"கருந்தமிழ்ச் சொல்லுக்குள்ளே/கருத்துக்கள் இருத்தல் போலே" (குன்றம்-8)

மூடிய தாமரை முகிழ்வாய் அவிழ்கிறது; நிறைத்துவைத்த தேனை இரைத்துவரும் வண்டுகளுக்கு நெஞ்சுவந்து கொடுக்கிறது. இது நமது கவிஞர்க்குத் தமிழ்ப்புலவரின் எண்ணத்தை நினைவூட்டுகிறது. தேடிவைத்த தமிழ் உணர்வை-தமிழ் உணவைச் சிந்தை மகிழ்ந்து பலர் தின்னத்தந்தும் வாடுவதில்லை தமிழ்ப்புலவோர்.

மூடியவாய்திறந்து
உளமார முன்னாள் எல்லாம்
தேடிய தமிழ்உணர்வைத்
தின்னவே பலர்க்கும் தந்தும்
வாடாத புலவர் போலே
அரும்பிப்பின் மலர்ந்த பூக்காள்
வாடாது தேன் கொடுக்கும்
வண்டுகள் அதைக் குடிக்கும் (செந்தாமரை-8)

"புன்னைக் காய்த்தலையில் செம்மைப்புதுமுடி" புனைந்திருக்கும் கிளி காட்டில் திரியும்போது கிரீச்சென்று கழறுவது கிளிக்கு இயற்கை; அதன் பொருள் அதற்குத்தான் புரியும். கூட்டிலோ அதே கிளி, நாம் சொல்லிக் கொடுக்க, நமக்காக நம்மைப் பார்த்து நம்மிடம் கொஞ்சுகிறது. காணும் கவிஞருக்குச் சமூகத்தில் நிலவும் ஓர் இரட்டை வேட நிலை கவனத்திற்கு வருகிறது. வீட்டிலே சிலர் தூத்தம் என்பார்கள்: அவர்களே வெளியில் ஏட்டிலே தண்ணீர் என்பார்கள். வடமொழித் தூத்தம் வீட்டில் அவர்களுக்கு வழக்கமானது; தமிழ்த்தண்ணீர் வெளியில் அவர்களின் பிழைப்புத் தாகத்தைத் தணிக்கிறது. இதனைச் சுட்டிக்காட்டும் கவிஞர் வாக்கில் கிளியின் இருவகைப் பேச்சு இடம் பெறுகிறது.

காட்டினில் திரியும் போது கிரீச் சென்று கழறுகின்றாய்
கூட்டினில் நாங்கள் பெற்ற குழந்தைபோல் கொஞ்சுகின்றாய்
வீட்டிலே தூத்தம் என்பார் வெளியிலே பிழைப்புக்காக
ஏட்டிலே தண்ணீர் என்பார் உன்போலதான் அவரும் கிள்ளாய்
(கிளி-7)

இருவகையாகப் பேசும் கிளியின் பெருமையையும் எடுத்துரைக்கிறார். காட்டிலே திரியும் கிளியைக் குறவன் கண்ணி வைத்துக் கூட்டில் சிறை செய்கிறான். நாட்டிலே வந்து வீட்டிலே உள்ள மனிதர் முன் வைத்துக் கிளியின் அழகைக் காட்டுகிறான். கொண்டு வந்த கிளியைக் கண்டு உவந்தோரும் பொருள் கொடுக்கின்றார். எதுபோல் என்று விளக்கவந்த கவிஞர் தம்பொருளைத் தமிழுக்கு ஈயும் செல்வரை எண்ணிப்பார்க்கிறார்.

மனைதொறும் சென்றே உன்றன் அழகினை எதிரில் வைப்பான்
தனக்கான பொருளைச்செல்வர் தமிழ்க்கீதல் போல ஈவார்

(கிளி-9)

தமிழ் உணர்வு - தமிழ்த்தொண்டு சிந்தையிலும் மொழியிலும் சிறப்பதோடு செயலிலும் நடைபெற்றுச் சீர்பெற வேண்டும் என்பதே கவிஞரின் குறிக்கோள்.

அடிக்குறிப்புக்கள் :

1. **A thing of Beauty is a Joy for ever - John Keats (Endymion)**
2. **Knowledge advances by steps, not by leaps - Thomas Macaulay.**
3. **Education has for its object the formation of character - Herbert Spencer.**
4. **If slavery is not wrong, nothing is wrong - Abraham Lincoln.(Letter to A.6, Hodges, 1864)**
5. **His slavery was not in his chains, but in himself. They can only set free men free - James Oppenheim.**
6. **Labor Conquers everything (Labor Omnia Vincit) - Virgil**
7. **If fifty men did all the work/And gave the price to five/And let those Five make all the rules-- You would say the fifty men were fools/Unfit to be alive -- P.S. Gilman.**
8. **"Sire It is not a revolt - It is a revolution": Lian Court to Louis XVI, July 1789.**
9. **The Proleterians have nothing to loose but their chains. They have a world to win, workers of the world unite - Marx and Engels.**

* * *

# பாவேந்தர்

# ஒரு பாட்டுப் புயல்

கவிஞர் முத்துலிங்கம்

மரபுக் கவிதையாய் மாபெரும் இலக்கியப்
புரட்சி மேகத்தைப் பூமிக் கழைத்தவன்!
இலக்கிய வயலை எரிமலைச் சிந்தனைக்
கலப்பையால் உழுது கருத்தை விதைத்தவன்!
தெற்குத்திசையில் சிவப்புச் சூரியனை
உலகப்பன் பாட்டில் உதிக்க வைத்தவன்!
விடுதலைக் களத்தில் வேள்வித் தீயைப்
பாக்களால் வளர்த்தவன் பாரதி எனினும்
செந்தமிழ் உணர்வெனும் சீறும் புயலைக்
கந்தகச் சொற்களால் காலூன்ற வைத்த
சுந்தரக் கவிஞன் 'சுப்புரத் தினம்தான்!'
புவனத்தில் தமிழுடன் பொருதி யோர்க்கெலாம்
இவனும் பாரதியும் இருகுழல் கொண்ட
துப்பாக்கி யாகத் துலங்கிவந் தவர்கள்!

எழுபது வயதில் இருக்கும் கிழவன்
கொழுந்துக் குமரிக்குக் கொழுநன் ஆவதை
முதன்முதல் எதிர்த்த முத்திரைக் கவியிவன்!
அதற்குமுன் எதிர்த்தவர் அவனியில் அன்றிலர்!
மனைவியை இழந்தவன் மறுமணம் புரிகையில்
கணவனை இழந்த காரிகை மட்டும்
கல்யாணம் செய்வதைக் கடுமையாய் எதிர்த்த
முள்மனம் கொண்ட மூடர்கள் நடுவே
மன்மத உணர்ச்சி மன்னுயிர்க் கொன்றுதான்;
பெண்ஆண் என்றிதில் பேதம் இலையென

விதவைப் பெண்ணுக்கும் விவாக வாசற்
கதவைத் திறக்கக் கவிதைபா டியவன்!

மண்ணின் மீது மாகவி பாரதி
பெண்ணின் விடுதலை பேசினா ராயினும்
சீர்த்திருத்தக் கொடியைத் தேசக் கம்பத்தில்
பறக்க விட்டவன் பாரதி தாசனே!
நாட்டிலே பெரியார் நடத்திய புரட்சியைப்
பாட்டிலே நடத்திய பண்டிதன் இவன்தான்!
கற்றவர் கூடும் கவியரங் கத்தில்
இலக்கணம் இன்றி எவர்பாடி னாலும்
வலக்கையால் பிடித்து வாவென் றிழுத்தே
இடக்கையால் அப்புறம் எட்டித் தள்ளும்
பழக்கத்தை உடையவர் பாரதி தாசன்!
நல்ல வேளை நாட்டில்இன் றவனிலை!

திரைப்படப் பாடல் தீட்டிட வேண்டி
இசையமைப் பாளரின் எடுபிடி போலே
கவிஞர்களிற் சிலர் காரியம் செய்கையில்
தனது காலைத் தானே குனிந்து
தொடுவது கூட சுயமரி யாதைக்குப்
பங்கமென் றுரைத்தவர் பாரதி தாசன்!
சிங்கத்தைப் போலே சீறும் விழியினர்!
தங்கத்தைப் போலே தகுதியில் மிகுந்தவர்!
வங்கத்தைப் போலே கற்பனை வளர்த்தவர்!
இவரைப் போலே இன்னோர் கவிஞன்
புவனத்தில் இதுவரை பூத்ததே இல்லை!
வாழிய அவரது வண்ணத் திருப்புகழ்!

* * *

# பகைசாய்த்த பாவேந்தன்

கருப்பத்தூர் கணேசன்

பனிவரையின் தலையினிலே கொடிபொ றித்தே
பழித்திட்ட பகைத்தலையில் கல்லை ஏற்றி
இனத்துக்கே விளைந்திட்ட பழிது டைத்த
இனமானக் குட்டுவனாய், ஆரி யத்தின்
முனைப்புகெட படைநடத்தி வெற்றி கண்ட
முடிவேந்தன் பாண்டியனாய், வடபு லத்தில்
தனித்தமிழின் புகழ்பொறித்த சோழ வேந்தாய்
தமிழ்காக்கப் பிறந்தவனே புலிப்பா வேந்தன்!

வற்றிவிட்ட இனவுணர்வு; மொழிப்பற் றின்மை;
வளந்தேடி வந்தவரின் வலைவி ரிப்பு;
ஒற்றுமைக்குக் குழிபறிப்பு; வஞ்சம் மாயை;
உடன்பிறப்புப் போராட்டம்; இனக்கொ லைகள்;
இற்றுவிட்ட தமிழ்மானம்; அடிமைப் புத்தி;
எதிரிகளின் கால்வருடி வழுத்தும் போக்கு
மற்றிவைகள் தமிழழிக்கச் சூழ்ந்த போது
மண்ணுதித்துப் பகைசாய்த்தான் புரட்சி வேந்தன்!

தீக்குழம்புச் சொல்லெடுத்துப் பகையை வீழ்த்திச்
செந்தமிழர் குருதியெலாம் இனமா னத்தை
ஊக்கியெழச் செய்தஅவன் உணர்வுப் பாட்டால்
உலகத்துத் தமிழரெலாம் தலைநி மிர்ந்தார்!
பாக்களினால் சமுதாயப் புரட்சி கண்ட
பாவேந்தர் நூற்றாண்டைப் போற்றும் இந்நாள்
பூக்காட்டுத் தமிழகத்தில் சிலைகள் நூறு
பொலியநிலை நாட்டியவர் புகழ்கு விப்போம்!

# பாவேந்தரும் பைந்தமிழும்

புலவர் அரங்க.வடிவேலன்

**விழியும் மொழியும் :**

தமிழும் சேயும்

இமைப்போது பிரிந்தாலும் வாழ்வதில்லை

இதனாற்றான் மொழி ஒருவன் உயிர் என்றார்கள்

- பாவேந்தர்

விழித்திருக்கக் கழுத்தறுக்கும் பொல்லாத உலகம் இது. விழியிழந்தவன் வாழ்வு பற்றி விளம்பத் தேவையில்லை. மொழியிழந்தவன் வாழ்வுமட்டுமென்ன, விழியிழந்த கதை தானே! வாயுள்ள பிள்ளை பிழைக்கும், அதாவது மொழியறிவு நிரம்பப் பெற்றவன் புகழ் வாழ்வு பெறுவான் என்ற இவ்விரு கருத்துக்களையும் உன்னி உன்னி உணர்ந்ததனால் அன்றோ, மொழி மாந்தனுக்கு விழியாகும் என்று பகர்ந்தனர். உயிரோடு உயிராய், உணர்வோடு உணர்வாய், அணுவோடு அணுவாய்ப் பின்னிப் பிணைந்து இரண்டறக் கலந்து கிடப்பது மொழி. நாம் காண்பது மொழி, கேட்பது மொழி, உரைப்பது மொழி, பூனையைக் கண்டால் அச்சம்! யானையைக் கண்டால் அச்சம்! என அஞ்சியஞ்சிச் சாவாரும் வீறுகொண்டு எழும் வண்ணம், 'அடே காலா சற்றே என் முன்னே வாடா! உனை என் காலால் மிதிக்கிறேன்! என்று சிங்க ஏறுபோல் பாரதியை முழங்கச் செய்தது மொழி. அதுவும் நம் தமிழ் மொழியேயன்றோ!

**பாடிவந்த நிலா :**

தலைமை சான்ற தமிழினம் மடிமை சான்ற அடிமைக் கண் அழுந்தி, இராமன் ஆண்டாலென்ன? இராவணன் ஆண்டாலென்ன? எனத் திண்ணை வேதாந்தம் பேசியதோடு, 'மரம் வைத்தவன் நீர் விடுவான்' எனக் கோழைத்தனமாகப் பொறுப்பை விதியின் தலையில் போட்டனர். அதனால் வலியிழந்து, மதியிழந்து, நிதியிழந்து, நேர்மையிழந்து சீர் குலைந்து, நாடிழந்து அடிமையாயினர். அந்நிலையில் பைந்தமிழ்த் தேர்ப்பாகன், அவனொரு செந்தமிழ்த் தேனீ. சிந்துக்குத் தந்தை, குவிக்கும் கவிதைக் குயில். இந் நாட்டினைக் கவிழ்க்கும் பகையைக் கவிழ்க்கும் கவி முரசு.

நீடு துயில் நீக்கப் பாடிவந்த நிலா. காடு கமழும் கற்பூரச் சொற்கோ, கற்பனை ஊற்றாம் கதையின் புதையல். திறம் பாடவந்த மறவன், புதிய அறம் பாடவந்த அறிஞன். நாட்டில் படரும் சாதிப்படை மருந்து, மண்டும் மதங்கள் அண்டா நெருப்பவன். அயலார் எதிர்ப்புக்கு அணையா விளக்கவன். தமிழ் உரம் ஏறிய நெஞ்சும், தமிழ் விளையாடிய பாவும், தமிழ் முழங்கிய நாவும் தமிழே தன் பேச்சாய், மூச்சாய், இன்பமாய், ஏன் அனைத்துமாய்க் கொண்ட மூவாத் தமிழ்

பயின்ற மூதறிஞர் வழி வந்த முத்தமிழ் வித்தகன். சீரிய-கூரிய தீஞ்சொல் வவ்விய கவிஞன். வழிந்திட வேண்டும் தமிழ்த்தேன், உலகமெலாம் பொழிந்திட வேண்டும் செந்தமிழ் வானம் புதுமையதே என்று முழங்கிய கவிஞன் பாவேந்தன் பாரதிதாசன்.

அவர் பாடல்களின் வழி நின்று தமிழோடு அவருக்குள்ள உறவு பற்றியும், தமிழின் சிறப்பியல்புகளான தொன்மை, இனிமை, இன்பம், மேன்மை, முதன்மை, தமிழ் வாழ்வு, தமிழ்க் காதல், தமிழ் விடுதலை, இன்றைய நிலை, இருக்க வேண்டியநிலை, அவர் அவாவி நிற்கும் மாற்றம், மொழி பற்றி அவர் தம் கருத்துக்கள் ஆகியவை பற்றி இக் கட்டுரை நனி நவிலும்.

### தமிழின் தொன்மை :

"கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு முன்தோன்றி மூத்த தமிழ்", "கூடலில் ஆய்ந்த ஒண்தீங்தமிழ்", "கண்ணுதற் பெருங்கடவுளும் கழகமோடமர்ந்து பண்ணுறத் தெரிந்தாய்ந்த இப்பசுந்தமிழ்", "தொடுக்கும் கடவுள் பழம் பாடல் தொடையின் பயன்", என்றெல்லாம் நம் முன்னைய அறிஞர்கள் தமிழின் தொன்மையைச் சுட்டுவதற்குக் கடவுளோடும், அவர் தம் அருஞ்செயல்களுடனும் ஒட்டியே கூறிச் சென்றார். காரண காரியத் தொடர்பற்ற முறையில் புராணச் சான்றுகளைக் கொண்டு தொன்மை கணிப்பது இன்மை புகுத்திவிடும் என்பதை நன்குணர்ந்த பாவேந்தர், உலக மொழிகளுள் வடமொழி, கிரேக்கம், எபிரேயம், சோமாலி, அமாய், எகிப்து, அசீரியன், பாலவி, பாரசீகம், அரபு, சீனம் முதலிய மொழிகளுள் கலந்துள்ள தமிழ்ச் சொற்களைக் கொண்டும், பாணினிக்கு உரை வகுத்த காத்தியாயனர் உரையில் தமிழ் வேந்தர்களான சேர, சோழ, பாண்டியரைக் குறித்துள்ளமை கொண்டும், கி.மு. இரண்டில் தோன்றிய பதஞ்சலி நூலில் 'காஞ்சி', 'கேரளம்' குறித்துள்ளமை கொண்டும், பாண்டியன் ஒருவன் அகஸ்டஸ் மன்னனுக்குத் தூது அனுப்பிய செய்தி கொண்டும், தமிழக மன்னர்களுக்கு மெய்க்காப்பாளர்களாக யவனர் இருந்தார்கள் என்ற குறிப்பைப் கொண்டும், பிளைனியின் இயற்கை வரலாறு கி.பி. 77, தாலமியினுடைய நாட்குறிப்பு கி.பி. 510, பெரிப்புளூஸின் கடற்பயன நு ூல் கி.பி. 80, அசோகனது கல்வெட்டு கி.மு. 200,ஆகியவைகளில் காணப்படும் தமிழ்ச் சார்புடைய குறிப்புக்களாலும், அண்மைக் காலத்து மேற்கத்திய மாந்த இயல் ஆய்வாளர், நிலவியல் ஆய்வாளர் முதலியோரின் கூற்றிலிருந்தும், தேவநேயப் பாவாணரின் உலகின் முதல் தாய்மொழி என்ற நூலின் கருத்துப்படியும் உலகில் தோன்றிய முதல் நிலப்பகுதி லெமுரியாவுடன் கூடிய தமிழகம் தான் என்றும், அதில் தோன்றிய உயிரினமும், மொழியுந்தான் உலகிற்கு மூத்தது என்பதைத்

> தமிழனே இது கேளாய், தமிழே ஞாலத்தின்
> தாய் மொழி பண்டு
>
> ஆதி மொழி என் அருமைத் தமிழ் என்றே
> ஓதி உலகுக் குணர்த்திடவே
>
> சொல்லார்ந்த தமிழ் மொழிக்கும் அதனின் தோற்றம்
> தொல் பழமை அடிமுடியைக் கண்டாரில்லை
>
> தமிழ் மொழி தனி மொழி உலகத்தின் தாய் மொழி

எனத் தெளிவாக்குகிறார். தொன்மை சுட்டப் புகுந்தவர் உலகத் தோற்றத்தையே கூறி, கோள்களின் தோற்றம் கூறி, ஞாயிற்று மண்டிலம்-திங்கள் மண்டிலம்-விண்மீன் மண்டிலம்-கடல் இவையனைத்தும் தோன்றும்பொழுது உடன் தோன்றியது தமிழ் என்று அதன் மூப்பையும், உடன் பிறந்த சிறப்பையும் சுட்டி கோள்களோடு தோன்றிய பழமைச் சிறப்பைக்

கொண்டிருப்பினும் தமிழானது அன்றன்றும் புதுமையாய்ச் சீரிளமைத் திறங்கொண்டு செயல்படுவதையும் குறிக்கத் "திங்களொடும் செழும் பரிதி தன்னொடும், விண்ணொடும், உடுக்களோடும், மங்குல் கடல் இவற்றோடும் பிறந்த தமிழ்" என்று தொன்மையைக் கூறுகின்றார்.

## தமிழ் உறவு :

அவரது தமிழார்வத்தை அறிஞர்கள் கீழ்க்கண்டவாறு கூறுகின்றனர்.

"அமிழ்தினும் இனிதென ஆன்றோர் போற்றும் தமிழ் மொழித் தொண்டே தவமெனத் தாங்கியவர்" என நாமக்கல் கவிஞரும், தித்திக்கும் செந்தமிழ்த்தேன் அள்ளி எத்திக்கும் இல்லை தமிழ் மொழிக் கீடெனும் நல்லுரையை வெல்லும் வகையுரைத்த வித்தகன் எனப் பொன்னடியானும், "தலைக்கேறிய தமிழ் மயக்கம் அவர் வாழ்வோடு பிறந்த சால்பாயிற்று" எனத் திருநாவுக்கரசும், "அவர் பாடலைப் படிக்கும் அன்னியனும் தமிழன்பனாகி விடுவான்" என அ.சிதம்பரநாதன் செட்டியாரும், "பழந்தமிழ் புதுக்கும் பாரதிதாசன் என்பேன்" எனப் பாவாணரும் கூறும் கூற்றுக்கிணங்க அவரது தமிழ் உறவைக் காணமுடிகிறது. அவர் உள்ளத்தை ஆட்கொண்டிருப்பன தமிழ், தமிழர் எனும் உணர்ச்சி. அவரைத் தமிழ் இயக்குகிறது. தமிழ்ச் சீர் - தமிழ்த்தீனி - தமிழ்ச் சாப்பாடு - தமிழ்ச்சாராயம் - தமிழ்ச்சியின் கத்தி - தமிழ்ப்பெரியார் - தமிழ்ப் பிள்ளை - தமிழ்ப் பள்ளி என எல்லாம் அவருக்குத் தமிழ்தான். அவருக்கும் தமிழுக்கும் உள்ள உறவை இரண்டாகப் பகுக்கலாம். ஒன்று தமிழே அவர், அவரே தமிழ்; உயிரே தமிழ், உடலே அவர் எனப் பிரித்தறிய முடியாத ஒன்றிய நிலை உறவு. இரண்டு அவர் வேறு; தமிழ் வேறு என்று பிரித்தறியத் தக்க உறவு. தமிழே அவர், அவரே தமிழ் என்ற பகுப்பில் கீழ்க்காணும் வரிகளில் சிலவற்றைச் சுட்டலாம்:

1) நல்லுயிர் உடம்பு செந்தமிழ் மூன்றும், நான்! நான்! நான்!

2) தமிழும் நானும் மெய்யாய் உடலுயிர் கண்டீர்

3) எனதுயிரே! உடலே! பொருளே! நீ எதை வேண்டித் தவங்கிடந்தாய்

4) அளப்பிலா உவகை ஆடற் றமிழே நீ என்றன் ஆவி

5) உடலியக்கும் நல்லுயிரே, உயிரியக்கும் நுண் கலையே

இப்பொருள்பட இருபத்தைந்திற்கு மேற்பட்ட இடங்களில் தமிழை உயிராகக் கூறியிருக்கின்றார். பொதுவாகத் தமிழை உயிர் என்று அறுபதிற்கு மேற்பட்ட இடங்களில் கூறியிருக்கின்றார். 'தமிழெனில் எம்முயிர்ப் பொருளாம்' என்று பாடிய முதற்றமிழ்க் கவிஞன் இவரே எனலாம். தமிழ்வேறு அவர் வேறு என்ற பகுப்புக்கு தமிழைப் படைவீடாகவும், தன்னைப் படை மறவனாகவும், தமிழைப் பூத்துக் குலுங்கும் பூக்காடாகவும், தன்னை அப்பூங்காவில் சுற்றித் திரிந்து தமிழாகிய மது உண்ணும் தும்பியாகவும் உருவகப்படுத்தித் தமிழுக்கும் அவருக்குமுள்ள உறவை,

நீயோ கருமான் செய் படையின் வீடு
நான் அங்கோர் மறவன்! கன்னல் பொருள் தரும் தமிழே
நீ ஓர் பூக்காடு! நானோர் தும்பி

எனச் சுட்டும் வரிகளைச் சான்றாகக் காட்டலாம்.

"தமிழை வானாகவும் தன்னை வெண்ணிலாவாகவும்
தமிழை வாளாகவும் தன்னை வீரனாகவும்

பயின்ற மூதறிஞர் வழி வந்த முத்தமிழ் வித்தகன். சீரிய-கூரிய தீஞ்சொல் வவ்விய கவிஞன். வழிந்திட வேண்டும் தமிழ்த்தேன், உலகமெலாம் பொழிந்திட வேண்டும் செந்தமிழ் வானம் புதுமையதே என்று முழங்கிய கவிஞன் பாவேந்தன் பாரதிதாசன்.

அவர் பாடல்களின் வழி நின்று தமிழோடு அவருக்குள்ள உறவு பற்றியும், தமிழின் சிறப்பியல்புகளான தொன்மை, இனிமை, இன்பம், மேன்மை, முதன்மை, தமிழ் வாழ்வு, தமிழ்க் காதல், தமிழ் விடுதலை, இன்றைய நிலை, இருக்க வேண்டியநிலை, அவர் அவாவி நிற்கும் மாற்றம், மொழி பற்றி அவர் தம் கருத்துக்கள் ஆகியவை பற்றி இக் கட்டுரை நனி நவிலும்.

## தமிழின் தொன்மை :

"கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு முன்தோன்றி மூத்த தமிழ்", "கூடலில் ஆய்ந்த ஒண்தீங்தமிழ்", "கண்ணுதற் பெருங்கடவுளும் கழகமோடமர்ந்து பண்ணுறத் தெரிந்தாய்ந்த இப்பசுந்த்மிழ்", "தொடுக்கும் கடவுள் பழம் பாடல் தொடையின் பயன்", என்றெல்லாம் நம் முன்னைய அறிஞர்கள் தமிழின் தொன்மையைச் சுட்டுவதற்குக் கடவுளோடும், அவர் தம் அருஞ்செயல்களுடனும் ஒட்டியே கூறிச் சென்றார். காரண காரியத் தொடர்பற்ற முறையில் புராணச் சான்றுகளைக் கொண்டு தொன்மை கணிப்பது இன்மை புகுத்திவிடும் என்பதை நன்குணர்ந்த பாவேந்தர், உலக மொழிகளுள் வடமொழி, கிரேக்கம், எபிரேயம், சோமாலி, அமாய், எகிப்து, அசீரியன், பாலவி, பாரசீகம், அரபு, சீனம் முதலிய மொழிகளுள் கலந்துள்ள தமிழ்ச் சொற்களைக் கொண்டும், பாணினிக்கு உரை வகுத்த காத்தியாயனர் உரையில் தமிழ் வேந்தர்களான சேர, சோழ, பாண்டியரைக் குறித்துள்ளமை கொண்டும், கி.மு. இரண்டில் தோன்றிய பதஞ்சலி நூலில் 'காஞ்சி', 'கேரளம்' குறித்துள்ளமை கொண்டும், பாண்டியன் ஒருவன் அகஸ்டஸ் மன்னனுக்குத் தூது அனுப்பிய செய்தி கொண்டும், தமிழக மன்னர்களுக்கு மெய்க்காப்பாளர்களாக யவனர் இருந்தார்கள் என்ற குறிப்பைக் கொண்டும், பிளைனியின் இயற்கை வரலாறு கி.பி. 77, தாலமியினுடைய நாட்குறிப்பு கி.பி. 510, பெரிப்புளுஸின் கடற்பயன நு ூல் கி.பி. 80, அசோகனது கல்வெட்டு கி.மு. 200,ஆகியவைகளில் காணப்படும் தமிழ்ச் சார்புடைய குறிப்புக்களாலும், அண்மைக் காலத்து மேற்கத்திய மாந்த இயல் ஆய்வாளர், நிலவியல் ஆய்வாளர் முதலியோரின் கூற்றிலிருந்தும், தேவநேயப் பாவாணரின் உலகின் முதல் தாய்மொழி என்ற நூலின் கருத்துப்படியும் உலகில் தோன்றிய முதல் நிலப்பகுதி லெமுரியாவுடன் கூடிய தமிழகம் தான் என்றும், அதில் தோன்றிய உயிரினமும், மொழியுந்தான் உலகிற்கு மூத்தது என்பதைத்

தமிழனே இது கேளாய், தமிழே ஞாலத்தின்
தாய் மொழி பண்டு

ஆதி மொழி என் அருமைத் தமிழ் என்றே
ஓதி உலகுக் குணர்த்திடவே

சொல்லார்ந்த தமிழ் மொழிக்கும் அதனின் தோற்றம்
தொல் பழமை அடிமுடியைக் கண்டாரில்லை

தமிழ் மொழி தனி மொழி உலகத்தின் தாய் மொழி

எனத் தெளிவாக்குகிறார். தொன்மை சுட்டப் புகுந்தவர் உலகத் தோற்றத்தையே கூறி, கோள்களின் தோற்றம் கூறி, ஞாயிற்று மண்டிலம்-திங்கள் மண்டிலம்-விண்மீன் மண்டிலம்-கடல் இவையனைத்தும் தோன்றும்பொழுது உடன் தோன்றியது தமிழ் என்று அதன் மூப்பையும், உடன் பிறந்த சிறப்பையும் சுட்டி கோள்களோடு தோன்றிய பழமைச் சிறப்பைக்

கொண்டிருப்பினும் தமிழானது அன்றன்றும் புதுமையாய்ச் சீரிளமைத் திறங்கொண்டு செயல்படுவதையும் குறிக்கத் "திங்களொடும் செழும் பரிதி தன்னொடும், விண்ணொடும், உடுக்க ளோடும், மங்குல் கடல் இவற்றோடும் பிறந்த தமிழ்" என்று தொன்மையைக் கூறுகின்றார்.

### தமிழ் உறவு :

அவரது தமிழார்வத்தை அறிஞர்கள் கீழ்க்கண்டவாறு கூறுகின்றனர்.

"அமிழ்தினும் இனிதென ஆன்றோர் போற்றும் தமிழ் மொழித் தொண்டே தவமெனத் தாங்கியவர்" என நாமக்கல் கவிஞரும், தித்திக்கும் செந்தமிழ்த்தேன் அள்ளி எத்திக்கும் இல்லை தமிழ் மொழிக் கீடெனும் நல்லுரையை வெல்லும் வகையுரைத்த வித்தகன் எனப் பொன்னடியானும், "தலைக்கேறிய தமிழ் மயக்கம் அவர் வாழ்வோடு பிறந்த சால்பாயிற்று" எனத் திருநாவுக்கரசும், "அவர் பாடலைப் படிக்கும் அன்னியனும் தமிழன்பனாகி விடுவான்" என அ.சிதம்பரநாதன் செட்டியாரும், "பழந்தமிழ் புதுக்கும் பாரதிதாசன் என்பேன்" எனப் பாவாணரும் கூறும் கூற்றுக்கிணங்க அவரது தமிழ் உறவைக் காணமுடிகிறது. அவர் உள்ளத்தை ஆட்கொண்டிருப்பன தமிழ், தமிழர் எனும் உணர்ச்சி. அவரைத் தமிழ் இயக்குகிறது. தமிழ்ச் சீர் - தமிழ்த்தீனி - தமிழ்ச் சாப்பாடு - தமிழ்ச்சாராயம் - தமிழ்ச்சியின் கத்தி - தமிழ்ப்பெரியார் - தமிழ்ப் பிள்ளை - தமிழ்ப் பள்ளி என எல்லாம் அவருக்குத் தமிழ்தான். அவருக்கும் தமிழுக்கும் உள்ள உறவை இரண்டாகப் பகுக்கலாம். ஒன்று தமிழே அவர், அவரே தமிழ்; உயிரே தமிழ், உடலே அவர் எனப் பிரித்தறிய முடியாத ஒன்றிய நிலை உறவு. இரண்டு அவர் வேறு; தமிழ் வேறு என்று பிரித்தறியத் தக்க உறவு. தமிழே அவர், அவரே தமிழ் என்ற பகுப்பில் கீழ்க்காணும் வரிகளில் சிலவற்றைச் சுட்டலாம்:

1) நல்லுயிர் உடம்பு செந்தமிழ் மூன்றும், நான்! நான்! நான்!

2) தமிழும் நானும் மெய்யாய் உடலுயிர் கண்டீர்

3) எனதுயிரே! உடலே! பொருளே! நீ எதை வேண்டித் தவங்கிடந்தாய்

4) அளப்பிலா உவகை ஆடற் றமிழே நீ என்றன் ஆவி

5) உடலியக்கும் நல்லுயிரே, உயிரியக்கும் நுண் கலையே

இப்பொருள்பட இருபத்தைந்திற்கு மேற்பட்ட இடங்களில் தமிழை உயிராகக் கூறியிருக்கின்றார். பொதுவாகத் தமிழை உயிர் என்று அறுபதிற்கு மேற்பட்ட இடங்களில் கூறியிருக்கின்றார். 'தமிழெனில் எம்முயிர்ப் பொருளாம்' என்று பாடிய முதற்றமிழ்க் கவிஞன் இவரே எனலாம். தமிழ்வேறு அவர் வேறு என்ற பகுப்புக்கு தமிழைப் படைவீடாகவும், தன்னைப் படை மறவனாகவும், தமிழைப் பூத்துக் குலுங்கும் பூக்காடாகவும், தன்னை அப்பூங்காவில் சுற்றித் திரிந்து தமிழாகிய மது உண்ணும் தும்பியாகவும் உருவகப்படுத்தித் தமிழுக்கும் அவருக்குமுள்ள உறவை,

> நீயோ கருமான் செய் படையின் வீடு
> நான் அங்கோர் மறவன்! கன்னல் பொருள் தரும் தமிழே
> நீ ஓர் பூக்காடு! நானோர் தும்பி

எனச் சுட்டும் வரிகளைச் சான்றாகக் காட்டலாம்.

> "தமிழை வானாகவும் தன்னை வெண்ணிலாவாகவும்
> தமிழை வாளாகவும் தன்னை வீரனாகவும்

தமிழை மணமாகவும், தன்னைப் பூவாகவும்
தமிழை இசையாகவும் தன்னை மகரயாழாகவும்
தமிழை ஒளியாகவும் தன்னைக் கண்ணாகவும்"

உருவகப்படுத்தி அவருக்கும் தமிழுக்கும் உள்ள உறவின் ஆழத்தைத்தெளிவாக்குகிறார்.

துள்ளும் இளமையைத் துடிப்புறச் செய்யும் ஆற்றலைத் தருவது தாய்ப்பால் ஆகலான் தமிழைத் தமக்குப் பால் என்றும், தாயின்றிப் பிறப்பில்லை அதுபோல் தமிழின்றித் தான் தோன்றுதல் இல்லை ஆகலான் தமிழைத் தாயென்றும், வேரின்றிப் பயிருக்கு வளர்ச்சி ஏது? அதுபோல் தமிழாகிய வேரின்றித் தமக்கு உரிமை வாழ்வேது? என்று எண்ணிய கவிஞர் தமிழைத் தன் உரிமை வாழ்விற்கு வேரென்றும், எவ்விதத் தடையுமின்றி எப்பொருளும் உயர்ந்து செல்ல வழி தருவது வான். வானின்றி உயர்வில்லை. அதுபோல் தமிழின்றித் தம் வாழ்வில் உயர்வில்லை என்ற பொருள் படத் தமிழைத் தம் உயர்விற்கு வான் என்றும், தமிழுக்குத் தோளை உவமையாக்கித் தமிழ் தம் அறிவுக்குத் தோள் என்றும், தமிழுக்கும் கவிதைக்கும் உள்ள தொடர்பை, வயிரத்திற்கும் வாளுக்கும் உள்ள உறவு போல் தம் கவிதைக்கும் தமிழுக்கும் உள்ள உறவென்றும், ஓர் ஊரின்றி இன்ப வாழ்வமையாதவாறு போலத் தமிழின்றித் தமக்கு இன்ப வாழ்வில்லை என்று உணந்த பாவேந்தர், தமிழைத் தம் வாழ்விற்கு நிருமித்த ஊரென்றும், கூறித் தமிழுக்கும் தமக்கும் உள்ள உறவை அப்பொருள் கொண்ட கீழ்க்காணும் பாடலால் தெளிய வைக்கிறார்.

தமிழ் எங்கள் இளமைக்குப் பால்!
தமிழ் எங்கள் பிறவிக்குத் தாய்!.
தமிழ் எங்கள் உரிமைச் செம்பயிருக்கு வேர்!
தமிழ் எங்கள் உயர்வுக்கு வான்!
தமிழ் எங்கள் அறிவுக்குத் தோள்!
தமிழ் எங்கள் கவிதைக்கு வயிரத்தின் வாள்!.
தமிழ் எங்கள் வாழ்விற்கு நிருமித்த ஊர்!

## தமிழின் சிறப்புக்கள் :

தமிழின் சிறப்புக்களில் ஒன்று அதன் தொன்மை. அது குறித்து முந்திய பக்கத்தில் விளக்கப்பட்டுள்ளது. இனிமை என்பதும் அதன் சிறப்பியல்பு ஆகலான் அதனை ஈண்டுக் காண்போம். தமிழினிமையை நமது பண்டைய இலக்கியங்கள், பிறநாட்டாரது குறிப்புக்கள் என்ன கூறுகின்றன என்பதைக் கண்டு, அடுத்துப் பாவேந்தர் காட்டும் இனிமையைச் சுவைப்போம். அனுமன் பிண்டி மரக்காவில் சீதையுடன் எம்மொழியில் உரையாடுவது, என்று எண்ணி இனிமையானது தமிழ், எனவே அம்மொழியில் உரையாடினான் என்று வான்மீகி கூறுவார். "மதுரமான தமிழ் மொழியை வளர்த்தமையால் பாண்டியர் தலைநகர் மதுரை எனப் பெயர் பெற்றது" என்பார் இரா. இராகவையங்கார். "தமிழெனும் இனிய தீஞ்சொல் தையல்" என மணிமேகலை கூறும். "செவ்விய மதுரஞ்சேர்ந்த நற்றமிழ்" என்பது கம்ப இராமாயணம். "இனிமையும் நீர்மையும் தமிழெனலாம்" எனப் பிங்கலம் சாற்றும். "பாலேய் தமிழ்" என்று கூறும் திருவாய் மொழி. இவ்வாறு தமிழின் இனிமையைக் கூறுகின்றன அருந்தமிழ் நூல்கள்.

மேலும் சான்றோர் பலரும் அவர்தம் நூல்களும் தமிழினிமை கூறுமிடத்துத் தீஞ்சுவைக் கனி, தண்டேன் நறை, அவற்றை வடித்தெடுத்த சாரம், அது கனிந்து ஊற்றியிருந்த பசுந்தமிழ் என்றெல்லாம் கூறுவர். பிற நாட்டு அறிஞர் பெருமக்கள் "தமிழ் மிகவும் பண்பட்ட மொழி. அது

தனக்கே உரித்தான வளம் நிறைந்த இலக்கியச் செல்வங்களைப் பெற்றிருக்கிறது என மாக்சுமுல்லரும் , "ஆற்றல் மிக்க சொற்களில், பல கருத்துக்களைப் புலப்படுத்துவதில் தமிழ் மொழிக்கு ஈடில்லை" எனப் பெர்கிவலும், "திராவிட மொழிகளுள் மிகவும் பண்பட்டது தமிழ். வடமொழியை முற்றிலும் புறக்கணித்துவிட்டு வளர்ச்சியடையும் தன்னாற்றல் மிக்கது தமிழ்" எனக் கால்டுவெல்லும், "சொற்பெருக்கும் கலைநுட்பமும், பண்பட்ட தூய்மையும் உடைய மக்கள் பேசும் மொழிகளுள் தமிழும் ஒன்று" என டெய்லரும், "பாட்டுருவில் தமிழ் கிரேக்கமொழியைக் காட்டிலும் பண்பட்ட தூய்மையும், நுட்பமும் உடையது, அது நிறைவாலும், ஆற்றலாலும் ஆங்கிலம், செருமன் போன்றது" என வின்சுலோவும், தமிழின் இனிமை- தொன்மை- இலக்கியவளம்-தனித்தியங்கும் தன்மை முதலியவற்றை எடுத்தியம்புகின்றனர்.

பாவேந்தரோ இனிமை எனப்படுவது கனியிடை ஏறிய சுளையல்ல, கருப்பஞ்சாரல்ல, பசுவின் பாலல்ல, தெங்கின் இளநீரல்ல, பிற எது எனின் தமிழ் அமிழ்து, தமிழ்ப் பண் அமிழ்து என்று அதன் இனிமையை இயம்புகிறார். "சீர்பெறுமுத்தமிழே தெவிட்டாத புத்தமிழ்தே"- "தாய்மொழி நம் தமிழ் மொழி தலைமலைத்தேன் அல்லவா", "அன்றன்று அணுகப் புதிய புதிய சுவை குன்றாத செந்தமிழ்" என்றெல்லாம் கூறுவதோடமையாது முத்தாய்ப்பு வைத்தாற்போல் தமிழுக்கும் அமுதென்றுபேர் என்ற நூலில்,

எந்தமிழ் இன்பம் என்னுடை
ஊனில், உயிரில், உவப்புறும் எதற்கும்
மேலே! மேலே! தாவிச் செல்வது

என்று குறிப்பிடுகிறார். இராமலிங்க அடிகட்கு மாணிக்க வாசகர் பாடல் கருப்பஞ்சாற்றினிலே தேன் கலந்து-பால் கலந்து-செழுங்கனி கலந்து-ஊன் கலந்து -உயிர் கலந்து உவட்டாமல் இனிப்பதுபோல் தமிழ் இவரது ஊனிலும், உயிரிலும் மட்டுமின்றி எவை எவை உவப்பைத் தருமோ அவைகளுக்கும் மேலே, மேலே தாவிச் சென்று இன்பத்துள் இன்பத்தைத் தரவல்லது என்று தமிழின் எல்லையில்லா இனிமையைப் புலப்படுத்துகிறார்.

## தமிழின்பம் :

இவ்வுலக வாழ்க்கையில் தலையாய இன்பம் ஆண் பெண் இன்பந்தான் என்று கூறுவர். ஐம்புலனுக்கும் இன்பம் தரும் ஒரே பொருள் பெண் என்பார் வள்ளுவர். இன்பம் என்பது எல்லாவுயிர்க்கும் தானமர்ந்து வரும் மேவற்றாகும் என்பார் தொல்காப்பியர். விடுதல் அறியா விருப்பு என இளங்கோவடிகள் கூறுவார். "முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும் வாரிருங் கூந்தல் வயங்கிழை ஒழிய வாரேன்" என உருத்திரங்கண்ணனார் கூறுவார். காதல் உடல் கொள் உயிரினங்களைப் பருவம் வந்துழிப்பற்றும் பொதுமைப் பண்பு என்பார் வா.சு.ப. அவர்கள். காதலினால் நுண்கலைகள் அனைத்தும் தோன்றும் ஆதலினால் காதல் செய்வீர் உலகத்தீரே! அஃதன்றோ இவ்வுலகத் தலைமை இன்பம் எனப் பாரதியார் கூறுவார். பாரதிதாசனோ எது இன்பம் என்பதற்கு விளக்கவுரையாக,

இன்பம் எனப்படுதல் தமிழின்பம் என
தமிழ் நாட்டினர் எண்ணுக

என்கிறார். நிலத்தினும் பெரிதாக-நீரினும் ஆழமானதாக-வானிலும் உயர்ந்ததாக-இவ்வுலகத் தலைமை இன்பமாகப் பெண்ணின்பத்தை அனைவரும் கருதினர். ஆனால் பாவேந்தரோ,

மங்கை ஒருத்தி தரும் சுகமும் - எங்கள்
மாத்தமிழ்க் கீடில்லை என்றுரைப்போம்

என்று கூறுகிறார். தமிழின்பத்திற்கு இணையாக இவ்வுலகில் எந்த இன்பமும் கிடையாது என்று கூறிய முதற்றமிழ்க் கவிஞரும் இவரே எனலாம்.

### தமிழ்த்திரு :

இன்பத் தமிழ்க் கல்வி எல்லோரும் கற்றால் துன்பங்கள் நீங்கிடும், சுகம் வரும், திணையளவு வருவாய் இல்லாதவரும் தமிழ் கற்றால் திருவாகிய செல்வம் வழிதேடி அவரை அடையும் என்பதைத் தினைவரும்படி இல்லார்க்கும் திருநல்கும் தமிழ் என அதன் சிறப்பைக் கூறுகிறார்.

சான்றாண்மை இவ்வுலகில்
தோன்றத் துளிர்த்த தமிழ்

புவிமூர்க்கம் தவிர்த்த தமிழ், அறத்தைக் காத்த தமிழ், வாழ்வில் செம்மையைச் சேர்த்த தமிழ், வீழ்வாரைக் காத்த தமிழ், எல்லாவற்றையும் அசையச் செய்த தமிழ், உயிர்கள் அனைத்திலும் இயக்கம் தந்த தமிழ் என்று அதன் சிறப்பியல்புகளைக் குன்றாப் பெருமை உடைய நிறைமொழி ஒன்றே என்றால் அது; என் தாய்மொழியாம் தமிழ் என்கிறார்.

மேன்மைக் கெல்லாம் மேன்மையுடையது தமிழ்; உலகில் உயர்ந்தவை என்று எதை எதைச் சொல்கிறோமோ அவைகளுக்கு எல்லாம் மேன்மையானது தமிழ் என்பதைக் கூறுகிறார்.

எம்மொழி அருமை பெருமை பேசுதற்கு
அறிய அன்னையா? அப்பனா? உடன் பிறந்
துரிமையில் இணையும் தொப்பில் உறவினரா?
வாழவைத்திடும் தோழனா? காதலால்
சூழ் உலகத்துத் தோன்றாத் துணையா?
மயக்குறு மக்களா? மண்ணுலகத்தில்
எதைச் சொன்னாலும் அதனை ஏற்றிடேன்,
ஏனெனில் எந்தமிழ் இன்பம் என்னுடைய
ஊனில், உயிரில், உவப்புறும் எதற்கும்
மேலே! மேலே! தாவிச் செல்வது!
எவைக்கும் மேல்ாய் எவைக்கும் உள்ளாய்
சுவைப்பட்டு யிரில் உயிர்ப்புறு வாழ்க்கையில்
ஓங்கியும், உயர்ந்தும் பாங்குற விரிந்தும்.
மேன்மைக் கெல்லாம் மேம்படும் எம்மொழி

என அமுதென்றுபேர் என்ற நூலில் தமிழின் மேன்மையை விளக்குகிறார். அதன் சிறப்பியல்புகளாகத் தமிழ் நாகரிகத்தின் நாற்றங்கால் எம்மொழிக்கும் ஈடு இணையற்ற செம்மொழி, உலகச் சிந்தனைக் கெல்லாம் ஊற்றாய்த் துலங்கும் உண்மையில் பைஞ்சுனை - காலப் பழமையால் வயிரம் பாய்ந்தது என அதன் மேம்பாட்டை இயம்புகிறார்.

### தமிழ்க் காதல் :

காதல் என்று பழந்தமிழ்ச் சொல்லுக்குத் தூய்மையான அன்பு என்பது பொருள், நாயன்மார்கள் இறைவன் மேல் கொண்ட அன்பினைக் "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி" என்றுதான் கூறினார்கள். இறைவன் மேல் கொள்கின்ற - தெய்வக் காதல் - ஆண் பெண்ணிடம்

கொள்கின்ற மானிடக் காதல் - கவிஞர் மொழியிடம் கொள்கின்ற தமிழ்க் காதல் மூன்றும், தொடக்கநிலை- வளர்ச்சி நிலை முற்றிய நிலை - என்ற வகையில் தொடங்கி, வளர்ந்து முதிர்வது இயல்பு. இவ்வகையில் கவிஞரின் தமிழ்க் காதலைக் காணலாம்.

ஒன்றன் மீது காதல் தோன்ற வேண்டுமெனின், அந்த ஒன்று கண்ணையும், கருத்தையும், கவரக்கூடியதாக - பயன்மிக்கதாக இருக்க வேண்டும். இறைவன் அழகுக்கு அழகாயிருந்து கண்ணையும், பேரறிவுப் பிழம்பாயிருந்த அறிவையும் கவர்ந்து, இன்பத்துள் இன்பமாகிய பேரின்பத்தினைப் (மோட்சம்) பயனாகத் தருகிறான். மானிடர்கள் செம்புலப் பெயனீர்போல் அன்புடை நெஞ்சங்கள் இரண்டறக் கலந்து ஐம்புல இன்பமாகிய சிற்றின்பத்தைப் பெறுகின்றனர். அதுபோல் கவிஞர் தமிழின்பத்து அழகிலும், ஆழ்ந்து, அகன்று, ஓங்கிய கருத்திலும் தன்னைப் பறிகொடுத்துத் தமிழ்மேல் ஆராததீராக்காதல் கொள்கின்றார்.

அன்னையையும், அத்தனையும் அன்றே துறந்து, உலகியல் நடைமுறைகளை விட்டொழித்து, தன்னை மறந்து, தன் பெயரை மறந்து தலைவன் தாளைத் தலைப்பட்ட நங்கையைப் போல், தமிழ் மேல் கொண்ட காதலால் உற்றார், பெற்றார், தெருவார், ஊரார், மனைவி, மக்கள் முதலிய சுற்றம் மறந்து தமிழ் மட்டும் நினைவில் கூட அல்ல; அறிவில் உறைந்துள்ளது என்பதை,

> பயிலுறும் அண்ணன் தம்பி!
> அக்கம் பக்கத்து உறவின் முறையார்!
> தயைமிக உடையாள் அன்னை!
> எனைச் சந்ததம் மறவாத் தந்தை!
> குயில்போற் பேசிடும் மனையாள்.
> அன்பைக் கொட்டி வளர்க்கும் பிள்ளை!
> அயல வராகும் வண்ணம் தமிழ் என்
> அறிவினில் உறைதல் கண்டீர்

எனக் காட்டுகிறார்.

உலகில் நமது ஆற்றலாலும், அறிவாலும் உயர்ந்த மலையைப் பெரிய மடுவாக்கலாம், ஆழ்கடல் அனைத்தையும் மேடாக்கலாம், விண்ணில் விரைந்து பறக்கலாம், உலகில் வேண்டும் பொழுது வேண்டிய இடத்தில் மழை பெய்விக்கலாம்.

நாடுகளுக்கிடையே உள்ள தூரத்தை அணிமையாக்கலாம். உலகில் இறப்பே கூட இல்லாமல் செய்யலாம். ஆனால் தமிழ் மேல் கொண்ட காதலிலிருந்து தன்னை இமைப்பொழுது கூடப் பிரிக்க, பிரிந்து வாழ முடியாத அளவிற்கு அன்றில் பறவைபோல் காதலால் பிரித்தறிய முடியாத நிலைமையைச் சுட்டுகிறார். காதல் முற்றிய நிலையில் காண்பவையெல்லாம் அவையே போறல் என்ற அவத்தைக் கிணங்க எங்கும் எதிலும் தமிழையே காண்கிறார்.

> ஊனுக்குள் உணர்வேயும் தமிழன்றோ வெளியே யும்
> உள்ளத்துள்ளும் தான் நந்தும் அனைத்துமே
> காட்சிதரும் வாயில் எல்லாம் தமிழே யன்றோ

என அவருக்கு உணர்வெல்லாம், உணர்ச்சியெலாம் உயர் தமிழ்தான்.

> தமிழ் எம் உணர்வு தமிழ் எம் உணர்ச்சி
> உண்ணும் உணவும் பருகும் நீரும்
> தமிழே! தமிழே!

என்று கூறுகிறார். தமிழர்களைப் பார்த்துத் தமிழ் விடுதலைப் போரைத் தட்டிக் கழிப்பதா? நமது பெருமையை நாமே அழிப்பதா? நமையீன்ற தாயின் குடலை நாமே கிழிப்பதா? எனச் சிந்தனையைக் கிளர்ந்தெழச் செய்து, வெற்றித் தமிழ் மொழி மெச்சிப் புகழ்பெறத் துட்டப் பயல்களை வெட்டிப் பலியிடக் கட்டளையிடுகிறார்.

உலகில் பெண்ணுக்கு மிகவும் விருப்பமானது உயிர், கணவன் - உற்றார் - பெற்றார் - ஆடை அணிமணிகள் தாம். அவர் படைத்த தமிழ் வீராங்கனை,

> இன்பத் தமிழ்க் கின்னல் விளைக்கையில்
> கன்னலோ என்னுயிர் கணவனும் வேண்டேன்
> உற்றார் வேண்டேன்! உடமை வேண்டேன்!

என்று கூறுகிறாள்.

## இன்று தமிழ் :

தமிழகத்தில் வணிகர் - அரசியலார் - புலவர் - கோயிலார் - கணக்காயர் - மாணவர் - பாடகர்- கூத்தர் - எழுத்தாளர் - செல்வர் - விளம்பரத்தார் - இதழாளர் - வானொலியார் எனப் பலர் நச்செண்ணம் கொண்டு நந்தமிழை அழிக்க வரும் நிலையைக் கண்டு,

> மணக்க வரும் தென்றலிலே குளிராயில்லை தோப்பில் நிழலா இல்லை
> தணிப்பரிதாம் துன்பமிது தமிழகத்தின் தமிழ்த் தெருவில் தமிழ்தானில்லை

என்று வருந்துகிறார். "தென்றலில் குளிரும், தோப்பில் நிழலும் இருத்தல் இயற்கை. அதுபோல் தமிழ் நாட்டில் அதுவும் தமிழர் வாழும் தெருவில் தமிழ் இருத்தல் இயற்கை. அவ்வாறு தமிழகத் தெருப்பெயரில் - நகர்ப்பெயரில் - கடைப்பெயரில் - விளம்பரத்தில் - சுவரொட்டியில் - இயற்பெயரில் - பேச்சு வழக்கில் தமிழ் இல்லாமை கண்டு நெஞ்சம் விம்மி வாய்பதைத்துக் குமுறும் எரிமலையாயக் கொந்தளிக்கும் அலைகடலாய், வெகுண்டெழுந்து, நெட்டுயிர்ப்போடுற்ற பிணங்களாக உலவிடும் தமிழரைப் பார்த்துத்

' துயின்றது போதும்! இன்றே துடித்தெழு! தூக்கு வாளை! என்று தமிழ் கெடுக்கும் கொடியவரின் செயல்களை அழித்தொழிக்கக்

> கொலை வாளினை எடடா-மிகு
> கொடியோர் செயலறவே

என்றும் தமிழ் காத்துத் தமிழ்த்தாய்க்கு வரும் பெருமை உன் பெருமை எழுந்தருள்க! இளந்தமிழா! வரிப்புலியே! என இளைஞரையும், ஒரு வானில் பன்னிலவாய் உயர் தமிழ்ப் பெண்களெலாம் எழுக எனப் பெண்டிரையும், தண்டூன்றும் முதியோரையும் ஒண்டமிழ்த் தாய் சிலம்படியின் முன்னேற்றத்திற்குப் பாடுபட வேண்டுகிறார்.

தமிழர்கள் ஆங்கிலத்தைக் கற்கையிலும் அயல்மொழியைக் கற்கையிலும், தீங்கனியை- செந்தமிழை தென்னாட்டின் பொன்னேட்டை உயிராக் கொள்வீர் எனத் தமிழரை வேண்டுகிறார். பல்லுயிரும் பரமனை விரும்புவதுபோல் பல்லுயிரும் தமிழை விரும்புகிறது என்பதை,

> விலங்கு பறவை செந்தமிழ் நாட்டில் விரும்பிக் கேட்பதும் செந்தமிழ்ப் பாட்டே
> குலுங்கும் அரும்பும் செந்தமிழ்நாட்டில் குளிர்ந்த செந்தமிழ் கேட்டு மலரும்

என்று உயர்திணை உயிர்களேயன்றி, அஃறிணை உயிர்களாகிய விலங்கு - பறவை, அரும்பு ஆகியவையும் தமிழை விரும்புவது மட்டுமல்ல, தமிழால் தழைக்கின்றன என்கிறார். இசையால் பயிர்கள் வளரும், உயிர் தழைக்கும் என்பார் கருத்திற்கு அரண் செய்வது போல், " உயிரை, உணர்வை வளர்ப்பது தமிழே! " என்று நிறுவுகிறார்.

## தமிழ் வாழ்வு :

தமிழின் இன்றியமையாமையை அனைத்துத் துறைகளிலும் வலியுறுத்துகிறார். ஒரு நாட்டின் அமைச்சராக இருந்தாலும் தமிழ் கற்றிருக்க வேண்டும் என்றும், மன்னனாக முடிபுனைதற்குக் கூடத் தகுதியாக " இயற்றமிழ், இசைத் தமிழ், இனிய ஆடற்றமிழ் முயற்சியிற் கற்ற பின் முடிபுனை" என்றுரைத்துத் தமிழின் முதன்மையை நிலை நாட்டுகிறார். தமிழறியான் அமைச்சனாக வரின் தமிழர் நிலை, தமிழர் நெறி, தமிழர்களின் தேவை, வாழ்வு தகமை முதலியவற்றை அறிதல் இயலாது, எனவே, " அந்தமிழ் இல்லார் அறிவிலார் என்கிறார். நம்மவர்க்கு உறுதுணை தமிழென்றும், அது பாய்ந்திட வாழாத வாழ்வு, வாழ்வாகா என்றும் கூறுபவர்,

வாழ்வாவது
தமிழ் பாய்ந்திட வாழ்வது வாழ்வு
மூதறிவுள்ளது வாழ்வு நறும் முத்தமிழ்
கற்பது வாழ்வு

என்று பாடுகிறார். ஆகவே, அனைவரும் தமிழ்க் கல்வி கற்றவர் என்ற நிலையைத் தமிழகம் அடைந்தால் வாழ்விலுள்ள துன்பங்கள் நீங்கி விடும். சுகம் அதர்வினாய் வரும், நெஞ்சினில் தூய்மை உண்டாகும், உள்ளத்து வழிப்பிறக்கும், எண்ணமும், சொல்லும் தூய்மையான வழி வீரம் தானே வரும் என்று தமிழ்க் கல்வியின் பயனையும், சிறப்பையும் கணிக்கிறார்.

இமயமலைபோல் உயர்ந்த நாடும்-தன்
மொழியில் தாழ்ந்தால் வீழும்

தமிழ் மொழி வாழ்ந்தால் தமிழர் வாழ்வார்
தமிழ் மொழி வீழ்ந்தால் தமிழர் வீழ்வர்

தமிழ் உயர்ந்தால் தமிழ் நாட்டின்
நிலை உயரும் அப்பா

தமிழ் காத்து நாட்டினைக் காப்பாய்-பெண்ணே
தமிழரின் மேன்மையைக் காப்பாய்

என்ற வரிகளில் நாட்டின் சிறப்பில் மொழியின் பங்கே முதன்மையானது என்பதை வலியுறுத்துகிறார். 'மொழி வாழ்வே நாட்டு வாழ்வு; நம் வாழ்வு என்பதால் எது செய்ய நாட்டிற்கே எனத் துடித்த சிங்கமே! இன்றே! இன்னே! புதுநாளை உண்டாக்கித் தமிழ் காப்பாய்! நன் மொழிக்கு விடுதலை நல்கிடு! தமிழின் நலம் எங்குக் கெடுகின்றதோ அங்கெல்லாம் தலையிட்டுக் கிளர்ச்சி செய்க! என வேண்டுகிறார்.

## இன்று தமிழ் :

பல துறைகளில் வடமொழியுடன், பிற மொழிகளும் இடம் பெற்றுத் தமிழை நலித்து வரும் செயல்களைக் காட்டுகிறார். நமது புலவர்கள் தொல்காப்பியம், நன்னூல் தவிர வேறு புதிய இலக்கணங்கள் வகுக்காமலும் முன்னதில் உள்ள பிற மொழிக் கலப்பைக் களையாது இருப்பதையும், கோவிலில் தமிழ் இடம் பெறா நிலையையும், விளம்பரங்களில், வானொலியில் தமிழின் சீர்கேட்டையும், இசையிலும், இதழ்களிலும் உள்ள நிலையையும், அச்சகத்தார் செயலையும் அகரமுதலிக் குழுவின் போக்கையும் நமக்கு எடுத்துக் காட்டி, இந்நிலைகளை போக்க முன்வந்தார்.

மொழியே தானே மூச்சு! மொழியே தானே மனிதன்!
மொழியே தானே உணர்வு! மொழியே தானே வழிகள்!
மொழியே தானே வாழ்வு! மொழியே தானே உலகம்!
மொழியே தானே இன்பம்! மொழியின்றேல் நாம் யாரோ?

என்று வினவுகிறார்.

மொழியால்தான் தமிழன், மலையாளி, கன்னடியன், தெலுங்கன், குஜராத்தி, வங்காளி, மராத்தி, அஸ்ஸாமி, காஷ்மீரி, பஞ்சாபி, ஆங்கிலேயன், உருசியன், பிரஞ்சுக்காரன், போர்த்துக்கீசியன், கிரேக்கன், செர்மன் என மக்களைப் பாகுபடுத்தி அவரவர் மொழியால் பெயரிடுகிறோம். அம்மொழிகள் இல்லையேல் நாம் யார் யாரோ! மொழி இன்றியமையாத ஒன்று. எனவே, தமிழர்கள் இன்றைய நிலையை மாற்றிடச் செய்யும் போரில் மாற்றான் வாளால் வீசப்பட்டு வெட்டுண்டு தரையில் விழும் தமிழர் தலையில் உள்ள நாக்கு வெல்க தமிழ்! என முழங்க வேண்டும் என்கிறார்.

## பாவேந்தர் கனவு :

மாந்தர்கள் கனவு காண்பது இயல்பு. அக்கனவுகளில் தாம் விரும்பிய-விரும்புகின்ற ஒன்றையே பெரும்பாலோர் காண்பர். அவர்கள் கனவு பெரும்பாலும் தன்னலமிக்கதாகவே இருக்கும். ஆனால், நம் கவிஞர் காணும் கனவு பலபடி உயர்ந்து; தமிழ், தமிழ் நாடு, தமிழர், தமிழ்க் கவிதை, தமிழினம் எனப்பொது முன்னேற்றத்தையே கனவாகக் கண்டு, அக்கனவுகளை நனவுலகில் கொண்டு வர முயல்கின்றார். உலகில் தொன்று மூத்த தாயாம் தமிழையும், தமிழர்களின் கவிதைகளையும் உலக மொழிகள் அனைத்திலும் மொழிபெயர்த்துக் காணுவதற்கு ஆழிசூழ் ஞாலம் அவாவி நின்றது என்ற தேனினுமினிய தீஞ்சொற்கள் தொடர்ந்து செவியில் வெள்ளம் போல் பாயும் நாள் எந்நாளோ? என்று எண்ணுகின்றார். மேலும், என்னரும் தமிழ் நாட்டின்கண் ஆண், பெண், ஆண்டான், அடிமை, உடையோர், இல்லோர் என எல்லோரும் பல்வேறு துறை கல்வி கற்று, அறிவால்-ஆற்றலால், அன்பால், இமயம்போல் ஒவ்வொரு துறையிலும் உயர்ந்து புகழ் அடைந்தார்கள் என்று பிற நாட்டினர் கூறக் கேட்கும் நாள் எந்நாள்? என்று ஏங்குகின்றார்.

பாவேந்தரும் பைந்தமிழும் என்ற இக்கட்டுரையில் பாவேந்தரின் தமிழியலைக் கண்டோம். பாவேந்தரைத் தமிழ் இயக்குகிறது. பேச்சாலும் எழுத்தாலும், பாட்டாலும், கூத்தாலும் பிறருவக்க தமிழ் முரசு ஒச்சியவர். தித்திக்கும் செந்தமிழ்த் தேன் அள்ளி, எத்திக்கும் இல்லை தமிழ் மொழிக்கு ஈடெனும் நல்லுரையை உரைத்த வித்தகன் என்று பொன்னடியான் மதிப்பிட்டது உண்மை. வெறும் புகழ்ச்சி இல்லை.

"தமிழுக்குத் தொண்டு செய்வோன் சாவதில்லை".

* * *

# வாழிய பாவேந்தர் வழி!

புலவர் இ.பட்டாபிராமன்

புதுச்சேரி மண்ணுக்குச் சொந்தக் காரர்
புரட்சியினைப் பரப்பிவிட்ட புலமை மேலோர்;
மதுவூறு செந்தமிழ்தேர் மக்கள் சேர்ந்தே
மனமாரப் பாராட்டப் பெறுவோர்; நந்தம்
நிதியாக விளங்குமிசை பாவேந்தர் போல்
நீணிலத்தில் வேறெவரும் பிறந்த தில்லை;
மதிசேர் நற்றமிழர்களுக் கெல்லாம் வானூர்
மதியாக விளங்குமவர் புகழே வாழி!

எளிய கவிதைபலவும் அந்நாள் தன்னில்
இயற்றிவந்தேன்; குயிலுக்கும் அனுப்பி வென்றேன்;
எளிமை விழைபாவேந்தர் கண்டார்; "பாடல்
எழுதிடுக! தொடர்ந்திடுக!" என்றார் அய்யா;
வளமை உளத்தோ டெனக்குத்தந்த ஊக்கம்
வளர்த்ததுவே பாத்துறையில் என்னை; பின்னாள்
உளமாரப் பலராலும் ஏத்தப் பெற்றேன்;
உண்மை; இதில் ஒளிவுமறை வில்லை சற்றும்.

ஒரு காவியம் உயர்காவியம் குறுங்காவியம் படைத்தேன்;
அதன் பேர்நிறை "காதல்பறவை" எனவே விதித்தேன்;
சிறு காவிய மெனினும் அது சிறந்த முதல் பரிசைப்
பெறவே உள மகிழ்ந்தேன் பாவேந்தர் நடை காட்டிப்
படைத்தேனதை எனவே பரிசினையே உறலானேன்;
படிகள்பல அரசே வெளியிடவே உளங்களித்தேன்;
தடையே யிலாத்தமிழ்மா நடை பாவேந்தருக்குரித்தே!
தக்கார் வழியாத்தால் நாம் பெறுவோம் பெரும்புகழே!

வாழிய பாவேந்தர் வான்புகழே என்றென்றும்
வாழிய வண்ணத் தமிழ்!

* * *

# பாரதி தாசனின் உலகை நோக்கிய உரிமைகள்

முனைவர் பெ.சுபாசு சந்திர போசு

தமிழ்க் கவிதைப் படைப்பில் இருபதாம் நூற்றாண்டில் இரு கண்களாக விளங்கியவர் பாரதியும், பாரதிதாசனும் ஆவர். சிற்றூரையும் பாடி உலகையும் பாடிய புரட்சிக் கவிஞர் பாரதிதாசன். பாரதி ஒரு கவிதைத் தென்றல் என்றால், பாரதிதாசன் ஒரு கவிதைப்புயல் என்று கூறலாம். பாரதிதாசன் தான் வாழும் உலகை நோக்கியும், வாழ்வை விமர்சித்தும் ஒரு புதிய வாழ்வை, உலகைப் படைக்க உரிமைக் கவிதைகள் பாடியுள்ளார்.

**கவிஞன் :**

கவிஞன் என்பவன் காலத்தின் கண்ணாடியாக வாழ்க்கையைப் பிரதிபலித்துக் காட்டுபவன் என்பர். நிகழ்காலத்தைப் பிரதிபலித்தும், எதிர்காலத்தை உணர்ந்தும் தீர்க்கதரிசனக் கவிதைகளைப் படைப்பவனே கவிஞன் என்றும் கூறுவர். நாளைய உலகின் உரிமைக் குரலாக ஒலிக்கின்ற கவிதைகளைப் படைப்பவன் கவிஞன் என்பர் இக்பால். உலகிற்கு உரிமைக் குரலாக ஒலிப்பது கவிக்குரல் என்பர் பெர்னாட்ஷா. எனவே தான் கிரேக்க நாட்டில் கவிஞனுக்கும், கண்ணுக்கும் ஒரே சொல்லைப் பயன் படுத்துகின்றனர். இக்கருத்துக்களுக்கு உருவாகத் தமிழ்க் கவிதையில் நிமிர்ந்து நிற்பவர் பாரதிதாசன். அதனால்தான் இவரைத் "தமிழ் தேசியப் பார்வையோடு உலகப் பார்வையும் பெற்று விளங்கியவர்"[1] என மதிப்பிட்டுள்ளனர்.

**புதியதோர் உலகு :**

பாரதிதாசன் மூடத்தனமும், அடிமைத்தனமும் நிறைந்த உலகை மாற்றி அறிவுடைய உலகத்தைப் படைக்க விரும்பியதால், 'புதியதோர் உலகம் செய்வோம்' என்று பாடுகிறார். இவர் புதிய உலகு என்ற பகுதியில்.

> புதியதோர் உலகம் செய்வோம்!
>
> பேதமிலா அறிவுடைய அவ்வுலகத்திற்குப்
>
> பேசு சுயமரியாதை உலகு எனப்பேர் வைப்போம்[2]

என்று பாடி புதிய உலகின் எதிர்பார்ப்பை விளக்கியுள்ளார்.

> புதியதோர் உலகம் செய்வோம் - கெட்ட
>
> போரிடும் உலகத்தை வேரொடு சாய்ப்போம்
>
> பொதுவுடைமைக் கொள்கை திசையெட்டும் சேர்ப்போம்
>
> புனிதமோ டதை எங்கள் உயிரென்று காப்போம்[3]

என்பதன் மூலம் கெட்ட உலகத்தோடு போராடித் தனியுடைமையை நீக்கிச் சமவுரிமை வழங்கும் பொதுவுடைமை உலகத்தை உயிரென்று பாடுகிறார். முதலில் சுயமரியாதை உலகைப் பாடிய புரட்சிக் கவிஞர், அதன் பரிணாம வளர்ச்சியாகப் பொதுவுடைமை உலகைப் பாடுவதும், பொதுவுரிமையைக் கேட்பதும் அவரின் உலகை நோக்கிய உரிமைக் கோட்பாட்டைத் தெளிவாக உணர்த்துகின்றது.

### உலகப்பனுக்கிட்ட கட்டளை :

வர்க்க வேறுபாட்டை உடைக்கப் பாரதிதாசன் பாடிய உரிமைப் பாட்டு உலகப்பன் பாட்டாகும்.

பகுத்தறிவு மன்றத்தில் உலகம் என்ற
பழையமுத லாளியினை நிற்க வைத்து[4]

என்பது புரட்சிக் கவிஞரின் உலகப்பன் பாட்டின் தொடக்கமாகும். இதில் பாரதிதாசன் சுயமரியாதை இயக்கச் சார்பில் பகுத்தறிவு மன்றத்தில் உலகம் என்ற பழைய முதலாளியினை நிற்க வைத்துக் கவி விசாரணை நடத்துகிறார், பாரதிதாசன். "இதிலே உள்ள புதுமை நாம் மனசில் உணரக் கூடியது. கவிஞர் குறிப்பிடுகின்ற மன்றம் தமிழகத்தில் என்றைக்குமே ஏற்படாத ஒன்று. அதில் உலகம் என்ற பழைய முதலாளியை நிற்க வைத்தது முன்பு எப்போதும் உண்டாகாத நிகழ்ச்சி. இது சாதாரண நிகழ்ச்சி அல்ல. உலகப்பனை மன்றத்திலே நிற்க வைப்பது என்றால் அது பாரதிதாசன் என்ற கவிஞரின் சாதனைதான்; அவருடைய கருத்து வேகத்தின் சாதனைதான். மானுடர் ஒன்று என்றது புதிய சாத்திரம். அந்தக் கருத்தின் காற்று அணுக்கள் கலந்தது பாரதிதாசனின் உலகப்பன் பாட்டு"[5] என்பர் சி.கனகசபாபதி. இப்பாட்டில் முதலாளித்துவத்தின் ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடும், உழைக்கும் வர்கத்தினருக்குப் பாரதிதாசன் இடும் கட்டளை, வேறு எக்கவிஞரும் பாடாத புதுமையாகும். அதே வேளையில் முதலாளித்துவத்திற்குப் பாரதிதாசன் தரும்எச்சரிக்கை,

ஓடப்ப ராயிருக்கும் ஏழையப்பர்
உதையப்ப ராகிவிட்டால் ஓர் நொடிக்குள்
ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி
ஒப்பொப்பர் ஆய்விடுவார் உணரப்பா நீ[6]

என்பதாகும். இது உலகளவில் கவிஞருக்கு இருந்த சமவுரிமைப் போக்கினை அடையாளப்படுத்துவதாக அமைகிறது. உலகப்பன் உணர வேண்டும் என்பது மட்டுமல்லாமல், செயல் வடிவிலும் உருவாக வேண்டும் என்பதனையும் இப்பாடல் வலியுறுத்துகின்றது.

### புதியஉலகில் உரிமைகள் :

இவ்வுலகம் செல்லும் திசையை வரையறுத்துக் கூறியவர் பாரதிதாசன். செல்லும் வழியில், தோன்றும் இடர்களைத் துச்சமாக மதிக்கும் மனநிலை புரட்சிக் கவிஞரிடத்தில் மிகுதியாகவே காணப்படுகிறது. என்ன நேர்ந்தாலும் எதிர்க்கும் எண்ணம் கவிஞருக்கு இயல்பாகவே இருக்கின்றது. இக்கருத்தைப் 'பாண்டியன் பரிசில்' பேசப்படும் அரசியல் தத்துவங்கள் சான்றுகளாகப் பகர்கின்றன.

எல்லார்க்கும் எல்லாம் என்றிருப்ப தான
இடம் நோக்கி நடக்கின்ற திந்த வையம்

கல்லாரைக் காணுங்கால் கல்வி நல்காக்

கசடற்குத் தூக்குமரம்அங்கே உண்டாம்

நல்லாரே எல்லாரும் அவ்வை யத்தில்

நமக்கென்ன கிழியட்டும் பழம் பஞ்சாங்கமே [7]

என்று சாடுகிறார். இந்நிலையில் இடர்மிகு உலகோடு போராடிப் புதிய உலகைப் படைக்கும் போது என்னென்ன உரிமைகள் கிடைக்கும் என்பதையும் கவிஞர் பட்டியலிட்டுக் காட்டியுள்ளார்.

எல்லார்க்கும் தேசம் எல்லார்க்கும் உடைமை எல்லாம்

எல்லார்க்கும் எல்லா உரிமைகளும் ஆகுகவே

எல்லார்க்கும் கல்வி சுகாதாரம் வாய்ந்திடுக

எல்லார்க்கும் நல்ல இதயம் பொருந்திடுக

வில்லார்க்கும் நல்ல நுதல்மாதர் எல்லார்க்கும்

விடுதலையாம் [8]

என்று பாடுவதால், கவிஞரின் உரிமைப் போராட்டம், எல்லார் மனதிலும் ஒரு புதுவேகத்தை உருவாக்கி எல்லாரும் எல்லா உரிமைகளும் பெறவழிவகை செய்கிறது.

பாண்டியன்பரிசில் வீரப்பன் பேசும்போது,

சொத்தை யெல்லாம் தமக்கென்று சொல்வார் தம்மை

வெருட்டுவது பகுத்தறிவே! இல்லையாயின்

விடுதலையும் கெடுதலையும் ஒன்றேயாகும் [9]

என்பதிலும் தனிவுடைமைஎதிர்ப்பை வெளிக்காட்டியுள்ளார். இக்கருத்தைக் கவிஞர், உதாரன் கொலைக்களத்தில் பேசும் போது,

ஒரு மனிதன் தேவைக்கே இத்தேசம்

உண்டென்றால், அத்தேசம் ஒழிதல் நன்றாம்! [10]

என்று குரல் எழுப்புகின்றான். இக்குரலால் மக்கள் மனதில் உரிமைக் குரல், புரட்சிக் குரலாக மாறி,

செல்வமெலாம் உரிமையெலாம் நாட்டாருக்கே [11]

என்ற பொதுவுரிமையை நிலைநாட்டுகின்றனர். இதேபோல் ' வீரத்தாய்' என்னும் கவிதை நாடகத்தில் சுதர்மனின் குரலாக,

எல்லார்க்கும் தேசம், எல்லார்க்கும் உடைமையெலாம்

எல்லார்க்கும் எல்லா உரிமைகளும் ஆகுகவே! [12]

என்பதிலும் சமவுரிமைச் சமுதாயச் சிந்தனையை வெளிப்படுத்தியுள்ளார்.

### மானிட சமுத்திரம் :

வாழ்வின் வல்லமையை நிலைநாட்டுவது மானிட சக்தி என்பதை மனிதன் உணர வேண்டும்.

பிறப்பும், பொருளும் காரணமாக வந்த பேதத்தை ஒழித்துச் சமத்துவ நிலை எய்துவதை நோக்கமாகக் கொள்ள வேண்டும். ஆனால் மானிடச்சாதி தன்னை எப்போது உணர்ந்து நடக்குமோ என வினவுகிறார் கவிஞர்.

என்றுதான் சுகப்படுவதோ-நம்மில்
யாவரும் சமானம் என்ற பாவனை இல்லை-அந்தோ
ஒன்றுதான் இம் மானிடச் சாதி-இதில்
உயர்பிறப் பிழிபிறப் பென்பதும் உண்டோ? [13]

இக்கேள்வியில் சமுதாய நிலையைச் சொல்லிப் புதிய சமுதாய உருவாக்கத்தை எதிர்பார்த்துள்ளார். உலக மக்கள் அனைவரும் ஒன்றே என்ற உணர்வினை எய்த முடியாமல் தடுக்கும் அறியாமை ஒழிந்தால், சமத்துவ நிலை தானாக வந்து அமையும் என்பது கவிஞரின் கருத்தாகும். அக்கருத்தை நிலை நிறுத்த வரும் கவிஞர், மனிதனுக்கு வேண்டுகோள் விடுக்கிறார்.

மானிடத் தன்மையை நம்பி - அதன்
வன்மையினாற் புவி வாழ்வுகொள் தம்பி!
'மானிடம்' என்றொரு வாளும் -அதை
வசத்தில் அடைந்திட்ட உன் இரு தோளும்
வானும் வசப்பட வைக்கும் - இதில்
வைத்திடும் நம்பிக்கை, வாழ்வைப் பெருக்கும் [14]

என்று பாடுகிறார். கவிஞர் மானுடத்திற்குக் கொள்கைகளை மட்டும் சொல்லாமல், அக்கொள்கைவழி செயலாற்றவும்நெறிப்படுத்தியுள்ளார். தனிமனிதன் உலக மனிதனாக மாற வேண்டிய உணர்வுகளையும் வெளிப்படுத்தி உள்ளார்.

எங்கும் பாரடா இப்புவி மக்களைப்
பாரடா உனது மானிடப் பரப்பைப்
பாரடா உன்னுடன் பிறந்த பட்டாளம்!
'என் குலம்' என்றுனைத் தன்னிடம் ஒட்டிய
மக்கட் பெருங்கடல் பார்த்து மகிழ்ச்சி கொள்!
அறிவை விரிவு செய்- அகண்டமாக்கு
விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை!
அணைத்துக்கொள்! உனைச் சங்கமமாக்கு
மானிட சமுத்திரம் நானென்று கூவு! [15]

என்று கூவி இந்த மானுட சமுதாயத்தை விழிக்கச் சொல்லியுள்ளார் பாரதிதாசன். அறிவை விரிவு செய்தும், அகண்டமாக்கியும், விசாலப் பார்வையால் மக்களை விழுங்கியும், மக்களோடு அணைந்தும், சங்கமமாகியும் மாறினால் 'ஒன்றே உலகம்' என்ற பொதுமைப் பண்பும் உருவாகும் எனக் கவிஞர் கருதுவது தெளிவாகிறது. அதற்குத் தன்னையே மானுட சமுத்திரமாக உருவகிப்பதும் புலப்படுகிறது. " நானென்று கூவு" என்பது, பாரதிதாசனிலே ஒரு எல்லையற்ற 'நானாக' மாறுகிறது. "நான் பரந்துபட்டவன், நான் பல்லாயிரக்கணக்கானவன் " என்ற வால்ட் விட்மனைப் போல், "காக்கை குருவி எங்கள் ஜாதி,நீள் கடலும் மலையும் எங்கள் கூட்டம், நோக்கக் களியாட்டம், நோக்கும் திசையெல்லாம் நாமன்றி வேறில்லை" என்ற பாரதியைப் போல், பாரதிதாசனும் தன்னை மானுட மகா சமுத்திரமாக உருவகித்து "மானுட சமுத்திரம் நான்

என்று கூவு" என்று கூவும் எக்காளக் கூற்றிலே மானுடத்தின் முழு வெற்றியையும் காண முடிகிறது"[16] என்பார் கா. செல்லப்பன். அத்தகு நிலையில் மானுடம் வெற்றி பெறுகையில் அனைத்து உரிமைகளும் மலரும் என்பது கவிஞரின் எண்ணமாகும்.

## உலக நோக்கில் தமிழியம் :

'தமிழியம்' என்பதைத் தமிழ் மொழி, தமிழ் நாடு, தமிழர் பண்பாடு, தமிழர் நலம் ஆகியவற்றின் முழுவடிவமாகக் கண்டவர் புரட்சிக் கவிஞர். எனவேதான் பாரதிதாசன் தமிழியத்தின் அடிப்படையில் புதிய யுகத்தைப் படைக்க, மானுடத்தின் மகத்துவத்தை அடையாளப் படுத்தும் கவிதைகளைப் பாடியுள்ளார். இக்கருத்தை, " பாரதியிலே மொழி வழியாகத் தேசியம் காட்டப்படுகிறது. பாரதிதாசனிலே மொழியியமே தேசியமாகி விடுகிறது"[17] என்றும் கூறுவர். உலக உரிமைக்கு வித்தாக அமைவது தமிழ் உணர்வு என்பது பாரதிதாசனின் கோட்பாடாகும்.

உயிரை உணர்வை வளர்ப்பது தமிழே[18]

தமிழ் எங்கள் உரிமைச் செம்பயிருக்கு வேர்[19]

என்றெல்லாம் தமிழை உயிராகவும், உரிமைப் பயிராகவும் பாடியுள்ளார் கவிஞர்.

பாரதிதாசனில் மானுடத்தின் உரிமைகள், உலகை நோக்கிய உரிமைகளாக மானுட சாதிக்காகவே கவிதைகள் பாடப்பட்டுள்ளன. புரட்சிக் கவிஞரின் கவிதைகள், 'அடையாதது இருக்கலாம், அடைய முடியாதது எதுவும் இல்லை' என்ற மார்க்ஸின் கருத்தை வெளிப்படுத்தியுள்ளன.

* * *

## அடிக்குறிப்புக்கள் :

1. ச.சு. இளங்கோ, பாரதிதாசன் ஒரு நோக்கு, சிந்தனையாளர் பதிப்பகம், சென்னை-8, முதற்பதிப்பு, டிசம்பர்,1981.ப-92.
2. பாரதிதாசன் கவிதைகள் தொகுதி-1, ப-146.
3. மேலது, ப-158.
4. மேலது, ப-147.
5. சி. கனக சபாபதி - பாரதி - பாரதிதாசன் கவிதை மதிப்பீடு, என்.சி.பி.எச். சென்னை-98, முதற்பதிப்பு, 1979,ப-229.
6. பாரதிதாசன் கவிதைகள் தொகுதி - 1, ப-148.
7. பாரதிதாசன், பாண்டியன் பரிசு, ப-99.
8. பாரதிதாசன் கவிதைகள் தொகுதி - 1, ப-50.
9. பாரதிதாசன், பாண்டியன் பரிசு, ப-99.
10. பாரதிதாசன் கவிதைகள் தொகுதி - 1, ப-33.

11. மேலது, ப-33.
12. மேலது, ப-50.
13. பாரதிதாசன் கவிதைகள் தொகுதி - 3, ப-202.
14. பாரதிதாசன் கவிதைகள் தொகுதி - 1, ப-145.
15. மேலது, ப-150.
16. கா. செல்லப்பன், உலகக் கவியரங்கில் பாவேந்தர் பாரதிதாசன், சென்னைப் பல்கலைக்கழகம், 1981,ப-152.
17. மேலது, ப-150.
18. பாரதிதாசன் கவிதைகள் தொகுதி -1, ப-88.
19. மேலது, ப-89

* * *

# பாரதிதாசன்
# கதைப்பாடல்களில் காதல் நெறி

முனைவர் அ. இராமரத்தினம்

முன்னுரை :

இருபதாம் நூற்றாண்டில் தமிழ்க் கவிதைக்கு வளம் சேர்த்தவர்கள் பலர். அவர்களுள் முன்னணிக் கவிஞராகப் பாரதிதாசன் அவர்கள் *(1891-1964)* விளங்குகிறார். அவர் தமிழ் மொழியைத் தம் உயிராக மதித்தார்; தமிழர் பண்பாட்டைக் கண்ணெனக்கருதினார். தமிழ்ச் சமுதாயத்தின் ஏற்றம் குறித்து அவர் எண்ணலுற்றார். அவர் தம் தெளிந்த சிந்தனைகள் இனிய கவிதைகளாகப் பிறப்பெடுத்தன. தன்னுணர்ச்சிப் பாடல்களாகவும் கதைப் பாடல்களாகவும், இசைப்பாடல்களாகவும், இயக்கப்பாடல்களாகவும் வடிவெடுத்தன. அக்கவிதைகள் தமிழர்களின் நெஞ்சங்களை நிறைத்தன; தமிழ் நாட்டு மேடைகளில் முழங்கின. தமிழர்கள் அவரை நன்றிப்பெருக்கில் 'பாவேந்தர்' என்றும் 'புரட்சிக்கவிஞர்' என்றும் பாராட்டி மகிழ்ந்தனர்.

காலச்சூழல் :

பாரதிதாசன் அவர்களின் எழுச்சிக்குக் காரணமாக அவர் வாழ்ந்த காலச்சூழலமைகிறது. அவருள்ளிருந்த கவிதை ஊற்று பாரதியார் அவர்களால் தோண்டப்படுகிறது. பாரதியார் நட்புறவு பாரதிதாசனை அவரது கவிதா மண்டலத்தில் ஒருவராக்கிச் செழுமையாக்கியது. பாரதிதாசனது ஆசிரியப் பணியும் ஆழ்ந்த தமிழ்ப்புலமையும் பரந்துபட்ட பட்டறிவை நல்கின. அவர் சார்ந்திருந்த தன்மதிப்புக் கழகக் கொள்கைகள் அவரது கவிதைப்பொருள்களாயின. பழமையில் விழுமியதைப் புதுமையாக்கி அவர் மக்களுக்கு வழங்கினார். அவ்வகையில் அவர் யாத்த பாடல்களை *1.* தனிப்பாடல்கள் *2.* கதைப்பாடல்கள் என இரண்டாகப் பகுக்கலாம். கதைப் பாடல்களாகக் கீழ்க்கண்டவைகளைக் கொள்ளலாம்.

*1.*சஞ்சீவிபர்வதத்தின் சாரல் *(1930)*, *2.*புரட்சிக்கவி *(1937)*, *3.*மாந்தோப்பில் மணம் *(1938)*, *4.*காதல் குற்றவாளிகள் *(1938)*, *5.*எதிர்பாராதமுத்தம் *(1941)*, *6.*பாண்டியன் பரிசு *(1943)*, *7.*எங்களிஷ்டம் *(1944)*, *8.*தமிழ் வாழ்வு *(1944)*, *9.*காதலா? கடமையா? *(1948)*, *10.*கடல்மேற்குமிழிகள் *(1948)*, *11.* குடும்ப விளக்கு பகுதி *- 3 (1948)*, *12.*அகத்தியன் விட்ட புதுக்கரடி *(1948)*, *13.*தமிழச்சியின் கத்தி *(1949)*, *14.*போர்மறவன் *(1949)*, *15.* ஒன்பதுசுவை *(1949)*, *16.*நல்லமுத்துக்கதை *(1955)*, *17.* குறிஞ்சித்திட்டு *(1959)*.

இப்படைப்புகளுள் சில அளவில் மிக்கவை; சில அளவில் குறைந்தவை. எனினும் கதையின் ஊடே காதல் உணர்வும், கற்பு நெறியும் இழையோடுகின்றன. இவற்றுள்ளும் பாரதிதாசன் காதலுக்குச் சிறப்பளித்துப் பதின்மூன்று !பாடல்களைப் படைத்துள்ளார். இக்கதைப் பாடல்களில் அவர் காதலைப் புனைந்திருக்கும் திறத்தை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

காதல் :

பாரதிதாசன் கதைப்பாடல்களில் 'காதலை' விரிவாக ஆராய்வதற்குமுன் காதலைப் பற்றி முதலில் விளக்க முற்படுவோம். காதல் உயிர்களின் இயற்கை உணர்வாகும். அதை உடற் பசியென்றும், உள்ளப்பசியென்றும்,உயிர்ப்பசியென்றும், பிறவிப்பசியென்றும் போற்றுவர்[1] இளமையோடிருக்கும் ஆண், பெண் ஆகிய இருவர் உள்ளங்களிலுமுள்ள நற்பண்பு ஒருவரை ஒருவர் கவரச்செய்கிறது. இத்தகைய தூய கவர்ச்சியே காதலாகும். இக்காதல் பண்டைத்தமிழர் வாழ்வில் சிறப்புற்றிருந்தது. இதனைக் களவொழுக்கம் என்பர். தமிழர் கூறும் களவொழுக்கம் இருவருள்ளத்தும் உள்நின்று சுரந்த அன்பின் பெருக்கால், தான், அவள் என்னும் வேற்றுமையின்றி இருவரும் ஒருவராயொழுகும் உள்ளப்புணர்ச்சியாகும்.[2] இத்தகைய காதல் வாழ்விற்குப் புத்துயிரூட்ட பாரதிதாசன் விரும்பினார். எனவே அவர் தம் கதைப் பாடல்களில் காதல் மணங்களை அமைத்து மகிழ்ந்தார். அவரது காதல் புனைவுகளை 1. கண்டதும் காதல், 2.உறவுமுறைக்காதல், 3. சூளுரை விளைத்த காதல் என வகைப்படுத்தி ஆராயலாம்.

### 1. கண்டதும் காதல்:

தமிழர் காதலை விரிவாக ஆராய்ந்த வ.சுப. மாணிக்கனார் " கண்டதும் காதல் " என்றளவில் தமிழர் காதல் அமைகிறது என்பர்.[3]. இக்காதல் நிகழ்வு "கண்டதும் காதல் கொள்ளாதார்யாரே" என்ற சேக்ஸ்பியரின் கூற்றிற்குப் பொருத்தமாக உள்ளமை எண்ணத்தக்கது.

முதற்பார்வையே காதலாக உருவெடுப்பதை வள்ளுவர்...

> கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
> என்ன பயனும் இல[5]

என நயமுறமொழிவர். இக்கருத்தை அரண் செய்வதாகக் கம்பர் இராமாயணத்தில் புனைந்திருக்கும் காட்சி ஒன்று உள்ளது.

> எண்ணரு நலத்தினானினைய ணின்றுழிக்
> கண்ணொடு கண்ணினை கவ்வியொன்றையொன்று
> உண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
> அண்ணலும் நோக்கினா னவளும்நோக்கினாள்[6]

இராமபிரானும் சீதா தேவியும் ஒருவரையொருவர் கண்ட அளவிலே மிக்க காதல் கொண்டமை புலனாகிறது. எனவே கண்டதும் காதல் வயப்படுதல் உலகில் பெருவழக்காக உள்ளது.

### காதல் புனைவுகள் :

ஆய்விற்குட்பட்ட கதைப்பாடல்களில் பதினான்கு காதல் நிகழ்ச்சிகள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் பத்து, கண்டதும் காதல் என்றளவில் நிகழ்கின்றன. இரண்டு நிகழ்ச்சிகள் பெற்றோர் தேர்வு செய்த பெண்ணிடத்து மலரும் காதலாக உள்ளன. ஒன்றில் உறவுமுறையால் காதல் ஏற்படுகிறது. மற்றொன்றில் காதல் சூளுரையால் விளைகிறது. இனி ஒவ்வொன்றையும் நுட்பமாக நோக்கலாம்.

### சஞ்சீவிபர்வதத்தின் சாரல் :

கதைத் தலைவனான குப்பன், வஞ்சியை மலைச்சாரலில் சந்தித்துக் காதல் கொள்கிறான்.

வாடாத பூ முடித்த வஞ்சிவரக் கண்டான்

வரக் கண்டதும் குப்பன்வாரி அணைக்கக்

கரக்கின்ற காதலொடு சென்றான்[7]

இருவரும் வேடர்குலத்தைச் சேர்ந்தவர்களாக உள்ளனர். அவர்கள் அன்புறவிற்குத் தடையில்லை. இக்காதல் நிகழ்வு சங்க காலத் தினைப்புனக் காதலை நினைவூட்டுவதாக உள்ளது.

### புரட்சிக் கவி :

அமுதவல்லி அரசனின் ஒரே மகளாவாள். அவள் குடிமக்களுள் ஒருவனான நல்லிசைப்புலவர் உதாரன் என்பவனைத் திரையை விலக்கிப் பார்த்தாள். இருவருள்ளத்தும் முதல் நோக்கிலேயே காதல் விளைகிறது.

அந்த ஏந்திழை தன்னெதிர் நின்றதைத்

தன்னிக ரற்ற உதாரனும் - கண்டு

தன்னை மறந்த வனாகியே[8]

அவர்கள் காதல்; திருமணமாகக் கனிய சாதியும், செல்வமும் தடையாக அமைகின்றன. இறுதியில் பொதுவுடைமையாட்சியில் திருமணம் நிகழ்கிறது. இது காதல் வளர்த்த கலப்புமணமாகும்.

### காதலா? கடமையா? :

மிக்க அழகுடைய கிள்ளை கதைத்தலைவி ஆவாள். அவள் அரச குலத்தில் தோன்றிய போதும் ஓர் உழவன் மகனாகிய மகிணனைக் காதலிக்கிறாள். இவர்களது காதல் கண்டதும் காதல் என்ற அளவில் நிகழ்கிறது. கடும் எதிர்ப்புகள் இருப்பினும் கடமையையாற்றிக் காதலனை அவள் மணக்கிறாள். அரச குலமும் உழவர் குடியும் ஒன்றாகி மக்களாட்சி நாட்டில் மலர்கிறது.

### கடற்மேற் குமிழிகள் :

கடல் மேற்குமிழிகள் என்னும் காப்பியத்தில் இரண்டு காதல் காட்சிகள் இடம் பெற்றுள்ளன. ஒன்று இளவரசன் வையத்திறல் பூக்காரியின் மகள் மின்னொளியைக் காதலிப்பதாகும். பார்த்த அளவிளேயே வையத்திறல் உள்ளத்திரையில் மின்னொளி நிழலாடுவதை அவன் கூற்றாலே அறியலாம்.

பஞ்சணையில் தனியே படுத்தேன்.

நெஞ்சில் அவள் கூத்து நிகழ்த்துகின்றாளே[9]

மற்றொன்று செம்மறித்திறலும் பொன்னியும் கொண்டகாதலாகும். செம்மறித்திறல் மன்னன் புலித்திறனுக்குத் தம்பி என்ற உறவுமுறையுடையவன். எனினும் அவன்தாய் வேடர் குலத்தைச் சார்ந்தவள் ஆவாள். எனவே அவன் பிறப்பால் தாழ்ந்தவனாகக் கருதப்படுகிறான். ஆனால் பொன்னி மன்னனுக்குக் கொழுந்தியாகும் மன்னர் குலப் பெண்ணாவாள். அவர்களிடையே முகிழ்த்த உள்ளப்புணர்ச்சியை

என்னன்பு நோக்கினிலே யான்

நோக்கத் தன்னருமைத்

தென்னம் பாளைச் சிரிப்பால் தின்னுவளே
என் ஆவி [10]

என நவிலும் செம்மறித்திறலின் இனியமொழியால் அறியலாம்.

இவ்விரண்டு இணைகளையும் மன்னன் புலித்திறல் கண்டித்துத் தடுக்க முயல்கிறான். ஆனால் அவன் வெற்றிபெறவில்லை. மக்களாட்சியை நிறுவி

காட்டோமே சாதிமணம் கலப்புமணம் ஒன்றே
நல்வழிக்குக் கைகாட்டி [11]

என செம்மறித்திறல் முழக்குவது கவிஞரின் கருத்தேயாகும்.

வையத்திறல் மின்னொளி காதல், கவிஞர் மற்ற காப்பியங்களில் புனைந்துள்ள காதல் நிகழ்வுகளின்றும் சற்றே வேறுபட்டதாகும். இளவரசன் வையத்திறல் குடிமக்களுள் ஒரு பெண்ணிடத்து அன்புகொள்ளுகிறான். "புரட்சிக் கவி" யிலும் "காதலா ? கடமையா" விலும் மன்னர் குலப்பெண்கள் காதல் கொள்ளும் ஆடவர்கள் குடிமக்களாக உள்ளனர். சமுதாய நிகரமைப்பிற்குக்காதலில் இருவழிப்பாதை தேவை என்பது இவற்றால் உணர்த்தப்படுகிறது.

### அகத்தியன் விட்ட புதுக்கரடி :

காதல் மணத்தைக் கடிவோரைச் சாடுவதற்காகப் புனையப்பட்ட கதைப்பாடல் அகத்தியன் விட்ட புதுக்கரடியாகும். அரச குலத்தில் தோன்றிய மங்கை பகைவர்களுள் ஒருவனைக் கண்ட மாத்திரத்தில் காதல் வயப்படுகிறாள்.

ஒரு நாள் அரசனின் உறவினள் ஒருத்தி
பகைவனை அன்போடு பார்த்தாள் அவனும்
அவள்மேல் மிகுந்த அன்பு கொண்டான்
இருவரும் உயிர் ஒன்றிரண்டுடல் ஆனார் [12]

இதுகாறும் கூறப்பட்ட காதல்களில் குலம், பொருள், ஆகியவற்றால் ஏற்படுகின்ற ஏற்றத் தாழ்வுகள் திருமண நிறைவேற்றத்திற்குத் தடையாக உள்ளன என அறியலாம்.

### குடும்ப விளக்கு :

தமிழர்களுக்கு ஒரு நல்ல குடும்பத்தைக் கருத்தியலாகப் புனைந்துகாட்ட கவிஞர் குடும்ப விளக்கைப் படைத்தார். மணவழகரும் மாவரசரும், நெருங்கிய நண்பர்களாவார்கள். மணவழகர் இல்லத்திற்கு மாவரசர் குடும்பத்தினர் விருந்தாக வருகின்றனர். அவ்வேளையில் வேடப்பனுக்கும் நகைமுத்துவிற்கும் காதல் ஏற்படுகிறது. இக்காதலை,

நகைமுத் தென்னும்
பாவையும் விருந்தாய் வந்தாள்
என்னுளந் தனிற் படிந்தாள்
ஓவியம் வல்லாள் என்றன்
உருவையும் எழுதினாளே [13]

என வேடப்பன் வெளிப்படுத்துகிறான். சாதி பற்றிய குறிப்பு பாடலில் இல்லை. சமூக-பொருளாதாரச் சமநிலை இரு குடும்பங்களிலும் ஒத்தியல்வதால் அவர்கள் காதலுக்குத் தடையில்லை. நட்புரிமைபூண்ட குடும்பங்களேயெனினும் கண்டதும் காதல் என்ற நிலையில்-தான் காதல் புனையப்பட்டுள்ளதை மனங்கொளல் வேண்டும்.

## தமிழ் வாழ்வு :

ஓரிரு நிகழ்ச்சிகளை நிலக்களனாகக் கொண்டு பாரதிதாசன் அவர்கள் காதற்கதைப் பாடல்களைப் புனையும் திறம்பாராட்டத்தக்கது. "தமிழ் வாழ்வு" என்னும் பாடலில் காதல் சற்றே மாறுதலான கண்ணோட்டத்தில் கையாளப்பட்டுள்ளது. மருது என்னும் இளைஞன் அகல்யா என்னும் நங்கையைப் பார்த்தவுடனேயே காதல்கொள்கிறான். அகல்யாவும் மனதார மருதுவை நேசிக்கிறாள்; ஆனால் பெற்றோர் மருதுவிற்குக் கன்னல் எனும் பெண்ணை மனம் பேசியுள்ளனர். இப்பெண்ணை மருது விரும்பவில்லை. ஆலமரத்தின் கீழ் மருது அகல்யாவைச் சந்திக்கிறான். அகல்யாவின் அன்புச் சொற்கள் தெலுங்கிலே போந்ததால் மருது ால் புரிந்து கொள்ள இயலவில்லை.

பொருள் விளங்காமொழி புகலும் ஒருத்தி
இருளில் இட்ட இன்ப ஓவியம் [14]

அவன் அகல்யாவைத் துறந்து கன்னலையே மணந்து கொள்கிறான். கவிஞரின் புதுவகையான முடிவு காதலுணர்விற்கு எதிராக உள்ளது.நடைமுறைக்கேற்றதாயில்லை.

## நல்லமுத்து கதை :

நல்லமுத்து அறியாமை நிறைந்தவனாக இருந்த நிலையில் தந்தை பார்த்த பெண்ணை நேசிக்கத் தொடங்கினான். பின்னர் அவன் தந்தை அப்பெண்ணை மணக்க வேண்டாமென்று தடுத்தபோதிலும் தன்னுடைய திருமணத்தைக் காதல் திருமணமாக்கிக் கொள்ளுகிறான் அவன்.

ஒருத்தியும் ஒரு வனும் உள்ளம் கலத்தல்
திருமணம் என்க [15]

என விளக்கமளிப்பது இன்புறத்தக்கது. திருமண வாழ்க்கையில் காதல் நிலவ வேண்டும் என்ற கருத்தைக் கவிஞர் இப்பாடல் வழியே வலியுறுத்துகிறார்.

## கைம்பெண் காதல் :

பாரதிதாசன் அவர்கள் கைம்பெண்கள்பால் கழிவிரக்கம் கொள்கிறார். அவர்களுக்கு மறுமணம் செய்து வைப்பதில் அவர் ஆர்வம் கொண்டிருந்தார். எனவே அவர்கள் காதல் நிகழ்ச்சிகளாக மூன்று கதைப் பாடல்களை அவர் பாடியுள்ளார்.

## மாந்தோப்பில் மணம் :

குப்பன் என்பவன் ஓர் இளம்பெண்ணிடம் முதல் பார்வையிலேயே காதல் கொள்கிறான்.

கன்னி அனுப்பும் புதுப்பார்வை - அவர்
கட்டுடல் மீதிலும் தோளினிலும் -சென்று

மின்னலின் மீண்டது கட்டழகன் - தந்த
விண்ணப்பம் ஒப்பினள் புன்னகையால்[16]

ஆனால் அவள் சிறுமியாக இருக்கும் போதே மணம் முடிக்கப்பட்டாள். அவள் கணவன் இறந்துவிட்டான்[17] ஊர் மக்கள் எதிர்த்த போதிலும் அவர்கள் மணந்து மகிழ்ந்தனர்.

### காதல் குற்றவாளிகள் :

சுந்தரத்தின் வீட்டிற்குச் சொர்ணம் வருகிறாள். ஒருவரையொருவர் நோக்க இருவரும் காதல் கொள்கின்றனர்.[18] ஆனால் அவள் ஓர் இளம் விதவை. பெற்றோர் அவர்கள் காதலுக்குத் தடையாக நின்றனர். காதலர்கள் கண்ணீர்வடிப்பதாகக் கவிஞர் பாடலை முடிக்கிறார்.

### எங்களிஷ்டம் :

தலைவன், தலைவி ஆகிய இருவருக்குமிடையே காதல் பிறக்கிறது. தலைவி கைம்பெண்ணா-வாள் காதல் உணர்விற்குக் கைம்மை தடையாக இல்லை. ஆனால் சமூக மரபுகளும், வைதீக நெறிகளும் அவர்களுடைய அன்பு வாழ்க்கைக் கெதிராகத் தடைக் கற்களாக நிற்கின்றன.

மணம் எங்களிஷ்டம் எனக்கூறியே, அன்னதோர் ஊஞ்சலை உந்தி
உயர்ந்து உயர்ந்து ஆடினர், ஊரினர் ஓடினர் [19]

அவர்கள் நெஞ்சத்துணிவுடன் மணவாழ்வை மேற்கொண்டனர்.

இம்மூன்று கதைப் பாடல்களால் கைம்பெண்களும் காதல் வயப்படுவர் என்பது தெளிவாகிறது.

### 2. உறவுமுறைக்காதல் :

'எதிர்பாராத முத்தம்' என்ற காப்பியத்தில் உறவுமுறைக் காதல் விளக்கப்படுகிறது. பொன்முடியின் உள்ளம் கவர்ந்தவளாகப் பூங்கோதை விளங்குகிறாள். இருவரும் நெருங்கிய உறவினர். எனினும் பகைமை சுவர் எழுப்பி அவர்களைத் தடுக்கிறது. ஆனால் அவர்கள் ஒருவரை யொருவர் நோக்கியபோது காதல் வயப்படுகின்றனர்.

எதிர்ப்பட்டார் அவன் பார்த்தான், அவளும் பார்த்தாள்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
அத்தான், 'பூங்கோதை' என்றார். நின்றார், ஆங்கே[20]

ஒருவரையொருவர் முன்னரே அறிந்திருந்த நிலையில் அவர்களிடையே காதல் தோன்றுகிறது. இக்காதல் கண்டதும் காதல் என்ற கோட்பாட்டினின்றும் சற்றேவிலகியது எனினும் குடும்பப் பகைமையால் அவர்கள் மணமின்றியே இறக்கின்றனர்.

### 3. சூளுரை விளைத்த காதல் :

பாண்டியன் பரிசு என்ற காப்பியத்தின் தலைவி அன்னம் ஆவாள். அவள் அரச குலத்தில் தோன்றினாள். அவள் காணாமற்போன பேழையைத் தேடித்தருபவரையே தான் மணப்பாதாகச் சூளுரைக்கிறாள்.

ஒருத்தன் எனை மணப்பதெனில் அன்னோன் என்றன்
உயர் பேழை தனைத்தேடித்தருதல் வேண்டும்[21]

அவள் மேலும் கதைத் தலைவனான வேலனைக் கண்டு அவன்பால் நன்றியும் பரிவும் கொள்கிறாள்.

வேலன் அன்னத்தைக் காதலிக்கிறான். அவனே பேழையைத் தன்னருந்திறனால் தேடி மீட்டுவருகிறான். அவன் அன்னத்தை அடைவதில் தடையேதுமின்றி மணந்து மகிழ்கிறான். அன்னம் வேலன் காதல் முல்லைத் திணையில் நடைபெறும் 'ஏறு தழுவல்' என்ற காதல் நிகழ்ச்சியை நினைவூட்டுவதாக உள்ளமை கருதற்பாலது.

உயர்காதல் நெறிக்குப் புறம்பாகச் சூளுரை நிகழ்ச்சியமைந்துள்ளது. ஆயினும் அன்னம் வேலன் ஆகிய இருவரிடையே அன்பு படிப்படியாக வளர்ந்து காதலாகக் கனிகிறது. காதல்நெறியில் இது ஒரு வகை.

முடிவுரை :

பாரதிதாசன் கதைப்பாடல்களில் "காதல் " மையப்பொருளாக விளங்குகிறது. பண்டைத் தமிழரின் காதல் வாழ்வை மீட்டுருவாக்கம் செய்து அவர் பாடல்களில் வெளிப்படுத்துகிறார். பெற்றோர் நிச்சயித்த திருமணமாக இருப்பினும், அவ்வாழ்வில் காதல் முகிழ்த்தல் வேண்டும் எனக் கவிஞர் வற்புறுத்துகிறார். முன்னறிமுகமின்றியும்,உறவினாலும், நட்பினாலும், ஆண் - பெண் இருபாலாரிடையே காதல் நிகழலாம். காதல் உணர்விற்குச் சாதியும், செல்வமும், கைம்மையும் எப்பொழுதும் தடையாக இருந்ததில்லை. காதல் என்னும் பயிர்செழிக்க மக்களாட்சி நல்உரமாக அமைகிறது.

* * *

அடிக்குறிப்புக்கள் :

1) வ.சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், முகவுரை.
2) க. வெள்ளைவாரணார், தமிழ் இலக்கிய வரலாறு, தொல்காப்பியம் ப-117.
3) வ.சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், ப-42.
4) "Who ever lov'd that lov'd not at first sight" Shakespeare, The comedies of Shakespeare 'As you Like it' p-718.
5) திருக்குறள், குறிப்பறிதல், 1100.
6) கம்பராமாயணம், பாலகாண்டம், மிதிலைக் காட்சிப் படலம், பாடல் 35.
7) பாரதிதாசன் கவிதைகள் தொகுதி -1, ப-2.
8) மேலது ப-21
9) பாரதிதாசன் கவிதைகள் தொகுதி 3, ப-13
10) மேலது, ப-5.
11) மேலது, ப-86.

12) மேலது, ப-113.

13) பாரதிதாசன், குடும்ப விளக்கு, பகுதி 3, ப-10.

14) பாரதிதாசன், காதல் நினைவுகள், ப-39.

15) பாரதிதாசன் கவிதைகள் தொகுதி 3, ப-142.

16) பாரதிதாசன் கவிதைகள் தொகுதி 1, ப-67.

17) மேலது, ப-68.

18 மேலது, ப-72.

19) பாரதிதாசன், காதல் நினைவுகள், ப-27.

20) பாரதிதாசன், எதிர்பாராத முத்தம், ப-10.

21) பாரதிதாசன், பாண்டியன் பரிசு, ப-67.


* * *

# யாரும் பிறக்கவும் இல்லை: பிறக்கப் போவதும் இல்லை:

கவிஞர் மங்களம் இளம்பரிதி

யாரானும் தலைதாழாச் செல்வான்!
பாராளும் மன்னனென வாழ்ந்தான்!
வீழ்ந்தாலும் வேராக வீழ்ந்தான்!
விழுதுகள் ஆயிரம் சமைத்தான்!

கொள்கையிலே குன்றெனவே நின்றான்!
சொல்பயிற்சி தமிழுக்குத் தந்தான்!
புல்லெனவே பகைப்புலத்தை நினைத்தான்!
புலியெனவே பொதுமை மலரப் பாய்ந்தான்!

யாரடா அந்த மனிதன்? நீ
பாரதிதாசன் என்று கூறடா!

வாளெனவே வார்த்தைகளை வீசி
வளம் செரிந்த தமிழ்மகளைக் காத்தான்!
கால்மகவாம் நூல்மகவை ஈன்று
களம்பலவே தமிழாலே வென்றான்!

சலசலப்புக்குச் சிறிதேனும் அஞ்சான்!
சலசலவென நதியாக நடந்தான்!
மலைமுகட்டில் மதியெனவே தவழ்ந்து
மலர்க்குழவி முகம்மலர வாழ்ந்தான்!

யாரடா அந்த மனிதன்? நீ
பாரதிதாசன் என்று கூறடா!

தீயெனவே தமிழ்காக்க நின்றான்!
தென்றலென திடுமென்று குளிர்வான்!
ஊரினிலே உலகினிலே அவன்போல
ஓர்கவிஞன் இல்லையெனச் சொல்வேன்!

சொத்துக்காய் சுகத்துக்காய் சிலபேர்
சொரணையின்றி பகைநத்திக் கிடப்பார்!
தூயதமிழ் வித்தினிலே மலர்ந்தோன்!
தூவெனப் பகைதுப்பிச் செல்வான்!

யாரடா அந்தக் கவிஞன்? நீ
பாரதிதாசன் என்று கூறடா!

பலமரத்துப் பறவைகளாய் வாழ்ந்து
பலனுக்குக் கவிஞனாய் கதைக்கும்
பலரில் இவனே பலாமரத்துக் கனியாக
பலன்நாடா தமிழுக்காய் உழைத்தான்!

என்பினிலே இதயத்திலே தமிழை! அட
என்றைக்கும் மூச்சாக வைத்தான்!
அன்பினிலே பண்பினிலே அன்னை? அட
அவனைவிடில் நமக்கிங்கே வேரில்லை!

யாரடா அந்தக் கவிஞன்? நீ
பாரதிதாசன் என்று கூறடா!

* * *

# தெய்வ தரிசனம்

கவிஞர் வாசு கணபதி

ஓர்நாள்-
நண்பகல் பன்னிரண்டு
மணிக்கு

வனத்தில்
வெட்டிச் சாய்த்த
பட்ட மரம்போல-
படுக்கையில்
தொப்பென வீழ்ந்தேன்
ஒரு
காய்கறி கூடைக் காரியிடம்
கீரையைப் பேரம் பேசி
வாங்கத் தெரியாத
துப்புக் கெட்ட
பேர்வழி என்று
என்னுடைய மனைவி
என்னைத் திட்டினாள்
என்று!

படுக்கையில்.....
ஒரு
குட்டித் தூக்கம் போட
குட்டித் தூக்கத்தில்
ஒரு
குட்டிக்கனா கண்டேன்!
நான் —
புகைப்படத்தில்
பார்த்தது போல
அப்படியே அப்படியே
அசலாக அசலாக...
பைந்தமிழ் வேந்தனாம்
பாரதி தாசனைப்
பார்த்துப் பரவசமடைந்தேன்

தேகத்தில் ஜிப்பாவும்
கழுத்தில் துண்டுமாக
முகத்தில் புன்சிரிப்பும்
மேலுதட்டில் மீசையுமாக!

அவரின் கண்களில்
அறிவின் சுடரொளி
அசலாகத் தெரிந்தது!

வண்ணத் தமிழுக்கு
வாய்க்கால் வெட்டி
கவிதைப் பயிரிட்ட
கவிஞரை
இருகை குவித்து
வணங்கினேன்!
நீண்ட நாட்களாக
என்
நெஞ்சில் ஓர் ஆசை
நின்று என்னை
வருத்தி வந்தது!

என்னுடைய ஆசையை
அவரிடம் சொன்னேன்
மெதுவாக... மெதுவாக...
ஒரு
தெய்வத்திடம்
பக்தன் ஒருவன்
வேண்டுதல் போல!

"பார்போற்றும்
பைந்தமிழ் வேந்தே
வணக்கம்!
நான்
ஓர்
பாமரன்"

கரும்பாட்டும் ஆலையில்
சிக்கிய கரும்புபோல்
உலக பந்தத்தில்
உழன்று உழன்று
உருக்குலைந்து இருக்கின்றேன்
நான்!

என்றாலும்
எனக்கோர் ஆசை
உண்டு!
உம்மைப் போல
நானும்
ஒரு
கவிஞனாக வேண்டும்
அதற்குத் தாங்கள்
ஆசி எனக்கு
அருள்க, என்றேன்

நான்
வேண்டுகோள்
விடுத்தவுடன்
கொஞ்சம்
புன்னகை புரிந்தார்
புத்தம்புது மலர்போல!

மாயவனின்
மோகனப் புன்னகையில்...
சீர்
தளை
அடி
தொடை
யாப்பு
என்று
கவிதை இலக்கணங்களைக்
கண்டேன்! கண்டேன்!

சிலபல
பன்னீர் துளிகள்
என்
உடம்பில் விழுந்தன-
விழித்துப் பார்த்தேன்ஒரு
வாளி நீரை
என்மேல் இரைத்து
என்னை எழுப்பிய
என்னுடைய இல்லாள்
என்முன் நின்றாள்
ஏளனத் தோடு!

'பட்டப் பகலிது
பகல் தூக்கம் போட்டு
படுக்கையில்—
பயித்தியம் போல
பிதற்றுவது என்னே?
என்றாள்!
என்—
தெய்வத்திடம்
நான் அருள் பெற்ற விதத்தினைச்
சொன்னால்
நம்பவா போகிறாள்
நங்கை?

ஒன்றுமே பேசாமல்
ஓரமாய் ஒதுங்கி
மேஜைமுன் அமர்ந்தேன்
பேனாவைத் திறந்து!
மடைதிறந்த வெள்ளம்போல
சீறிப் பாய்ந்தது
கவிதை உணர்வே!

அவரின் கண்களோடு
என்னுடைய கண்களைப்
பொருதப் பொருத்
பொங்கும் புனல்போல்
உணர்ச்சிப் பெருவெள்ளம்
ஆழ்மனம் விட்டு
ஓடோடி வந்தது

இனம் புரியாத
ஏதோர் சக்தி என்னை
உந்துவது போலவும்
கருத்துவளம் மிக்க
கவிதை வரிகள்
எனக்காகக்
கால்கடுக்கக்
காத்திருப்பது போலவும்
அறிந்தேன்!

பேசும் திறம் பெற்ற
ஊமையன் ஒருவன்
ஓயாமல் பேசுவது போல
கவிதை வரிகளை
என்னுடைய வாய்
மென்று துப்பியது!

பரவசத்தோடு
கூப்பிய கரங்களை
மேலே உயர்த்தி
'என்னைக்
கவிஞனாக உயர்த்திய
கலியுகக் கடவுளே
சரணம் நீயே'
என்று
தாசனின் கால்களில்
சடக்கென வீழ்ந்தேன்!

* * *

# அவன் பாடல் அறிவுக்குத் தோள்

செவ்வேள்

தோள சைத்துந டந்தனள் சக்தி! ஓர்
நாளில் பாரதி மண்டலம் நண்ணுமோர்
சூளெ டுத்ததைப் பாட்டிலி சைத்தனன்!
தாள சைத்தனள் தண்டமிழ்ப் பாவையும்!

மூச்செ லாந்தமிழ்! முத்துறை காட்டிய
பேச்சே லாந்தமிழ்! பேதைமை நீக்கிய
ஏச்செ லாந்தமிழ்! என்றுபா வேந்தனன்
ஓச்சி னான்அர சொண்டமிழ்ப் பாக்களால்

கோள்ப டைத்தனன்! கூறுநற் பாவலர்
கேள்ப டைத்தனன்! கேடுகள் போக்கிடுஞ்
சூள்ப டைத்தனன்! சொல்லறி வுக்கருந்
தோள்ப டைத்தனன் தூய்தமிழ்ப் பாட்டிலே

எண்மை யோடுமி யம்பினன் பாக்களை
நுண்மை யோடுநு வன்றனன் பாவலான்
வண்மை இன்றமிழ் மாமறை காட்டிய
இண்மை இவ்வணந் தேர்ந்தறி வூட்டினான்

அறிவி னாற்பிறர் அல்லலை நீக்குதல்
அறிவி னுக்கடை யாளமாய் நற்றமிழ்
மறைவ குத்ததை மாண்புடைப் பாக்களால்
உறவ குப்பனெம் மூர்ப்புரட் சிக்கவி!

அறிவு சான்றவர் ஆங்கிலங் கற்றவர்!
குறைம திப்புடை யார்தமிழ் கற்றவர்!
மறைவ ழக்கிது முன்னைநாள்! மற்றது
முறிவு பட்டது மொய்ம்புடைத் தாசனால்!

இசைய ரங்குகள் இன்றமிழ்ப் பாக்களின்
அசைய ரங்குக ளாயறி வித்தவன்
வசைய றுத்தபா வேந்தனற் பாவில் தேன்
பிசைய ஈந்தவப் பெற்றியென் சொல்வதே!

பாத்தி கட்டிநீர் பாய்ச்சுதல் போலவே
மூத்த வர்க்கிளை யோர்க்குப்பன் னூலிலும்
ஆத்தி சூடியால் அஞ்சினார்க் கும்மறி(வு)
ஈத்து வந்தனன் ஈண்டுபா வேந்தனே!

நறும லர்ச்சியின் நாள்மலர் போலவே
ஊறும்வ ளர்ச்சியி னோடறி வோங்கவே
பெறும்வ ளர்ச்சியெல் லாந்தமிழ்க் காக்கியோன்
மறும லர்ச்சியை வார்த்தனன் பாக்களில்!

நாட்டில் இற்றைநாள் நாளொரு மேடையாய்ப்
பாட்ட ரங்குகள் பல்கிய ஓர்நிலை
கூட்டி வைத்தவன் யாரெனிற் கூறுவேன்!
பாட்டு வேந்தனப் பாரதி தாசனே!

* * *

# பாரதிதாசனும் நகைச்சுவையும் ஓர் ஆய்வு

முனைவர் ஜா. மனுவேல்.

பாரதிதாசன் ஒரு சிறந்த கவிஞனே. பாரதியின் கவித்திறனைக் கண்டவுடனே அவர் தாசனின் திறத்தையும் காணவேண்டுமென்ற விருப்பமுண்டானது. உள்ளத்தில் உணர்ந்தாலும் பாரதிதாசன் ஒரு கவிஞனா? எனப் பலர் கேட்கின்றனர். கவிதையை அரசியல் கண்கொண்டு பார்க்கலாகாது. அதற்குத் தனிக்ககண், கலை, 'ஞானக்கண்' வேண்டும். அதனால்தான் சிவன் இரண்டு கண்களுக்கப்பால் மூன்றாவதொரு தனிக்கண் கொண்டு விளங்குகிறார்.

கவிஞனாவதற்குரிய இன்னும் ஓர் இயல்பு கவி உணர்ச்சியாகும். மக்கள் வாழ்க்கை நிலையைக் கண்டு அறியும் துடிப்பும், உணர்ச்சியும் பக்குவமும் கவிஞனுக்கு இருக்க வேண்டும். காந்திஜியின் வாரிசு நேரு என்றால் பாரதியின் வாரிசு பாரதிதாசன் எனலாம். இருவரும் தாம் உயிருடன் வாழும்போதே தங்களது வாரிசைத் தெரிந்து கொண்டனர். இப்போதைய கவிஞரெல்லாம் தம்மைப் பாரதி பரம்பரை என்று கூறிக்கொள்கின்றனர். எளிய பாடல் வகையில் உரிமை, பெண்விடுதலை, எனப் பாடுவோரெல்லாம் இப்பரம்பரை என்ற கருத்து பரவியுள்ளது. எனினும் யானையின் ஒரு கன்று போன்று இது வரைத்தோன்றிய பாரதியின் தோன்றல் பாரதிதாசன் ஒருவரே ஆவர்.

அரசியல் சமூகம் முதலிய பல துறைகளிலும் நேரு காந்திஜியுடன் அடிப்படையில் இணைந்து சிலவற்றில் வேறுபட்டார். ஆனால் பாரதிதாசன் அரசியல் போர் முனை ஆகியவற்றில் பாரதியுடன் சமயத்தைப் பொறுத்தவரை பாரதிதாசன், நேரு இருவரும் தன் முன்னோருடன் முற்றிலும் வேறுபடுகின்றனர். பாரதி சமயத்திலும் அரசியலிலும் இருந்து கொண்டே அவற்றுடன் உறவும் அன்பும் விடாமல் அவற்றைக் குறை கூறவோ தாக்கவோ செய்தார். ஆனால் பாரதிதாசன் அவற்றைப் பிரிந்து ஒருவகை வெறுப்பும் மனக்கசப்பும் கொண்டு தாக்குகிறார். இவற்றைத் திருத்த இந்நெறி இன்றியமையாததெனக் கருதுகிறார் போலும். எனவே தான் இவர்களுக்குப் 'புரட்சிக்கவி' என்ற பெயர் பரவி இருக்கலாம். இவரது முதல் கவிதைத் தொகுதியில் 'புரட்சிக்கவி' என்றதொரு சிறு காவியம் வருகின்றது. அதனைப் படித்தபின் அதன் அருமைகளை உணர்ந்தோர் "அக்கதையில் வரும் புரட்சிக் கவிஞனாகவே இவரையும் பாராட்டத் தொடங்கினாரோ?

புரட்சிக் கவிஞராக விளங்கிய பாரதிதாசனுக்கும், நகைச் சுவைக்கும் மிகவும் நெருங்கிய தொடர்பு இருப்பதைக் காணலாம். பாரதிதாசன் பாடல்களில் நகைச்சுவை மிளிர்கின்றன என்பதை இக்கட்டுரை காட்டும்.

**நகைச்சுவை :**

மனித மனத்திற்கு மகிழ்ச்சியைக் கொடுக்கவல்லது நகைச்சுவையாகும். மனம் விட்டுச்

சிரிக்கத் தெரிந்தவர்கள் வாழ்க்கையைத் துன்பமாக எடுத்துக்கொள்வதில்லை. வாழ்க்கை மகிழ்ச்சி நிறைந்தது என்று நினைப்பவர்களுக்கு வாழ்க்கையும் மகிழ்ச்சியாக அமைகிறது. துன்பம் நிறைந்தது என்று உணர்பவர்களுக்குத் துன்பமாக அமைகிறது. நகைச்சுவை உணர்பவர்களின் மன நிலையைப் பொறுத்து அதன் ஆளுமையும் வேறுபடுகின்றது.

வாழ்வில் ஏற்படும் அனைத்து இன்னல்களையும் தாங்கிக்கொண்டு முன்னேறும் மனிதனுக்குச் சிரிப்பே ஊன்றுகோலாகவும், படிக்கட்டாகவும் அமைகின்றது. சிரிப்பது எல்லோர்க்கும் எளிது. சிரிப்பை அறிந்து கொள்வதும் அதைப் பற்றி ஆராய்வதும் கடினம்.

நகைச்சுவை தோன்றுவதற்கும் அதை உணர்த்துவதற்கும் அடிப்படையாய் அமைவது மனித மனமாகும். அதனால்தான் நகைச்சுவையை உணர்வதிலும் அதை வெளிப்படுத்துவதிலும் மனிதனுக்கு மனிதன் வேறுபடுகிறான். இன்றைய நிலையில் எல்லாத் துறையிலும் நகைச்சுவை முழுமையாகத் தனது ஆளுமையைச் செலுத்துகின்றது எனலாம். இதழ்கள், நாடகங்கள், படக்காட்சிகள் முதலிய கலைத்துறைகளிலும் நகைச்சுவை சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றது. நகைச்சுவை ஒரு பொருளிலோ, நிலையிலோ இல்லை. காண்போர் மனநிலையில்தான் இருக்கிறது. அழகின் தன்மை மனிதனுக்கு மனிதன் வேறுபடுவது போன்று நகைச்சுவையின் தன்மையும் உணர்பவர்களின் மன நிலைக்கு ஏற்ப மாறுகின்றது. நிலையில்லாத வாழ்வுடைய மனிதன் தன் உள்ளேயுள்ள கடவுளைக் காணமாட்டாத குருடனாய்த்திரிவது திருநாவுக்கரச-ருக்குப் பெருஞ்சிரிப்பை ஏற்படுத்துகின்றது.

விலாவிறச் சிரித்திட்டேனே[1]

என்கிறார் நாவுக்கரசர். ஆனால் கண்ணால் காண முடியாத கடவுளை நம்பித்திரியும் மக்களின் மடமை; புரட்சி மனத்தினரான பாரதிதாசனுக்கு நகைச்சுவையை ஊட்டுகிறது.

சாணிக்குப் பொட்டிட்டு
சாமி என்பார் செய்கைக்கு"
நாணி உறங்கு நகைத்து நீ கண்ணுறங்கு[2]

என்பதை நோக்குமிடத்துக் கடவுளை நம்பாமல் இருப்பது திருநாவுக்கரசருக்குச் சிரிப்பையும், நம்புவது பாரதிதாசனுக்குச் சிரிப்பையும் ஏற்படுத்துகின்றன.

சிரிப்பின் முடிவு அழுகையிலும், அழுகையின் முடிவு சிரிப்பிலும் அமையும். இது இயற்கையின் நியதி. சிலர் அழுதுகொண்டே சிரிப்பார்கள்; சிலர் சிரித்துக்கொண்டே அழுவார்கள்' அப்படிப்பட்டவர்கள் பொதுவாக மனநிலையில் குறைவுடையவர்களே மிகுதியான மகிழ்ச்சியும் துன்பமும் ஏற்படுகின்ற பொழுது நகையும் அழுகையும் சேர்ந்து வருவதுண்டு.

அழுகிறான் சிரித்துக்கொண்டே[3]

என மிகுதியான நகைப்பு வந்தபொழுது அழுதுகொண்டே சிரிப்பதாகக் காட்டுகிறார் பாரதிதாசன். வாழ்வு முழுவதும் சிரித்துக்கொண்டே இருந்தவர்களும் இல்லை. அழுதுகொண்டே இருந்தவர்களும் இல்லை. சிரித்தாலும் கண்ணீர் வரும், அழுதாலும் கண்ணீர் வரும். சிரிப்பது உடல் நலத்திற்கு நல்லது. அழுவது மன நலத்திற்கு நல்லது. இரண்டும் ஒன்றோடொன்று தொடர்புடையது. மனிதருக்கு மனிதர் வேறுபடுவதுபோல சிரிப்பும் வேறுபடுகிறது.

நகையென்பது சிரிப்பு; அது முறு

நகுதலும் அளவே வலித்து

சிரித்தலும் பெருகச் சிரித்தலுமென மூன்றென்ப[4]

என நகையின் மூன்று பிரிவுகளைக் காட்டுவர். சிரிப்பை நாற்பத்துமூன்று அடைமொழிகளால் பாரதிதாசன் தனது படைப்புகளில் சுட்டுகிறார். இவை எல்லாம் புற நிலையில் தோன்றும் சிரிப்புகளாகும்.

## நகைச்சுவையின் பயன் :

உடல் நலத்திற்கும், மன நலத்திற்கும் நகைச்சுவை சிறந்த மருந்து எனலாம். இஸ்ரேல் நாட்டில் டெல்அவிவ் பல்கலைக்கழகத்தில் நகைச்சுவை பற்றி ஆராய்ச்சி செய்த டாக்டர் 'அவ்னர்சிவ்' தம்முடைய ஆராய்ச்சியின் முடிவில் நகைச்சுவையின் பயன்களாகக் கீழ்க்காண்பவற்றைக் குறிப்பிடுகிறார்.

1. நகைச்சுவை கல்வி மேம்பாட்டிற்குப் பயன்படுகிறது. நகைச்சுவையுடன் நடத்தப்படுகின்ற பாடங்கள் மாணவர் மனதில் ஆழப்பதிகின்றன.
2. நகைச்சுவை ஒரு தனிமனிதனுடைய திறமையையும் படைப்பாற்றலையும் மிகுதிப்படுத்துகின்றது.
3. விற்பனைப் பணி, அலுவலகப்பணி போன்றவற்றிற்கு நகைச்சுவை துணைபுரிகின்றது.
4. பெண்களை விட ஆண்கள் நகைச்சுவை மிக்கவர்களாக விளங்குகின்றனர்.[5]

## பாரதிதாசன் பாடல்களில் நகைச்சுவை :

சிரித்துச் சிந்திப்பதற்காக பாரதிதாசன் தமது கவிதைகளில் நகைச்சுவையைப் பயன்படுத்தியுள்ளார். புது உலகம் காண விழைகின்ற பாரதிதாசன் அறியாமையிலும், குருட்டு நம்பிக்கையிலும் ஆழ்ந்து கிடக்கும் மக்களின் நிலையை நகைச்சுவைக்கு உரிய பொருளாக்குகின்றார். தமது கொள்கையில் உறுதியாய் நிற்கும் பாரதிதாசன் சாதிப்பாகுபாடு, தீண்டாமை என்னும் கொடுமைகளையும் எள்ளி நகையாடுகிறார். மக்களைத் திருத்துவதற்காக இவர் கூறும் புரட்சிக் கருத்துக்களிலும் நகைச்சுவை காணப்படுகின்றது.

## எள்ளல் நகைச்சுவை :

சமுதாயத்தில் புகுந்துவிட்ட மூடப்பழக்க வழக்கங்களை எள்ளி நகையாடுகிறார் பாரதிதாசன். மூடப்பழக்கவழக்கங்கள் வளருவதற்குக் காரணமானவர்கள் "பார்ப்பனர்கள்" என்பது இவரது எண்ணம். பார்ப்பனர்கள் நடத்தும் சடங்கும் மந்திரமும் அவர்தம் வயிறு வளர்ப்பதற்கே அன்றி உண்மையான பயனை நல்குவன அல்ல என்னும் கருத்தை.

பெரியதொரு சடங்குண்டே மந்திரமுண்டே

அந்த எலாம் செய்யத்தான் வேண்டும் ஆனால்

பெரும்பாலும் அகட்டிடுவேன் கூலி மட்டும்

எந்தமட்டும் கொடுக்கணுமோ குடுக்க வேணும்

என்றுரைத்தான் எல்லோரும் சிரிப்பில் ஆழ்ந்தார்[6]

## இளமை நகைச்சுவை :

எழில்மேவிய இளமைப்பருவம் குறும்புகள் நிறைந்தது. இப்பருவத்தில் இளமை

காரணமாகச் செய்யும் செயல்கள் நகைச்சுவையை ஏற்படுத்தும். தன் இளமைகாரணமாகவும், பிறர் இளமை காரணமாகவும், என இரு நிலைகளில் இளமை வழி நகைச்சுவை பிறப்பதுண்டு. குடும்ப விளக்கில் முதியவர்தம் இளமைக் கால நிகழ்ச்சியாக ஒன்றைக் குறிப்பிடுகிறார். சமையல் செய்து கொண்டிருந்த மனைவியைக் காதல் வேட்கையால் தனியறையிலிருந்தவாறே அழைக்கிறார். அவர் சமையலில் ஈடுபட்டிருப்பதாகத் தோழி கூறுவதாகவும், முதியவர் பதில் கூறுவதாகவும் அமைந்த உரையாடல் நகைச்சுவையோடு செல்கிறது.

ஆக்குகிறாள் அடுப்பில் சோறு

கொதிக்கின்றதென்று கூறினாள் - இங்கே

குளிர்கின்றதோ எனக்கூறி அனுப்பினேன்

இறக்கும் நேரம் என்றாள் வந்து

வாழும் நேரமோ இங்கு மட்டும்?[7]

என சொற்களைக் கொண்டு நகைச்சுவை யூட்டுகிறார் பாரதிதாசன்.

### மடமை நகைச்சுவை :

மக்களின் அறியாமையால் ஏற்படும் நிகழ்ச்சிகளை நகைச்சுவையாக்கிக் காட்டுகிறார் கவிஞர். சஞ்சீவி பர்வதத்தின் சாரலி ல் வரும் குப்பனின் செயலும், பாண்டியன் பரிசில் வரும் பொன்னன் பேச்சும், இருண்ட வீட்டு மாந்தர்களின் செயல்களும் அறியாமையால் நிகழ்வனவாகும். நல்லமுத்து கதையில் வரும் அம்மாக்கண்ணு வெள்ளையப்பரிடம் காதல் கொள்ளுகிறார். தனது அன்பை வெளிப்படுத்த அம்மாக்கண்ணுவுக்குச் சொற்கள் கிடைக்கவில்லை. அறியாமை காரணமாகத் தனக்குத் தெரிந்த சொற்களையெல்லாம் சொல்லி தன் அன்பைப் புலப்படுத்துகிறாள்.

அம்மியும் நீங்கள் அடுப்பும் நீங்கள்

சட்டியும் நீங்கள் பானையும் நீங்கள்

வீடும் நீங்கள் மாடும் நீங்கள்

திகைப்படைந்து தெருவிற் போனால்

மரமும் நீங்கள் மட்டையும் நீங்கள்

கழுதை நீங்கள் குதிரை நீங்கள்

எல்லாம் நீங்களாய் எனக்குத் தோன்றும்.[8]

என்று அம்மாக்கண்ணு அறியாமையால் கூறுவது பெருஞ்சிரிப்பை உண்டாக்குகின்றது..

### உவமைகளில் நகைச்சுவை :

புரட்சிக்கவிஞர் தம்முடைய உவமைகளிலும் நகைச்சுவையைப் பொதித்து வைத்துள்ளார். நகைச்சுவையில் உவமை சேருகின்ற பொழுது சுவையும் கூடுகின்றது. அறியாமை நிரம்பிய இல்லத்தலைவியின் மனம் இருளில் ஆழ்ந்து கிடப்பது போன்று அவளது வீடும் இருண்டு காட்சி தருகிறது. இருண்ட வீட்டில் நவாபுக் குதிரை நாடு முழுவதும் சவாரி வந்து தரையில் புரளல் போன்று வீட்டுத் தலைவி புரண்டு படுத்து தூங்குகிறாள் என்பதைக் கவிஞர்.

நவாபுக் குதிரை நாடு முழுதும்

சவாரி வந்து தரையில் புரளல் போல்
படுத்துப் புரண்டு பிடித்தாள் தூக்கம்[9]

எனக் காட்டுகிறார்.

## இயற்கையில் நகைச்சுவை :

இயற்கையில் தம்மை இழக்காத கவிஞர் இல்லை எனலாம். சங்கப் புலவர் அனைவரும் இயற்கையழகில் தம்மை மறந்து பாடல் புனைந்தவர்களே. இயற்கையை நகையோடு நோக்கி அதன் நல்லழகில் தம்மை மறந்தவர் பாரதிதாசன். கவிஞரின் அழகின் சிரிப்பில் ஆலமரத்தில் தொங்கிய பாம்பை விழுதென்று பிடித்துப் பின்னர் பாம்பென்று அறிந்ததும் விட்டுவிட்டு அஞ்சி ஓடிய குரங்கின் அச்சத்தை,

கிளையினிற் பாம்பு தொங்க
விழுதென்று குரங்கு தொட்டு
விளக்கினைத் தொட்ட பிள்ளை
வெடுக்கெனக் குதித்ததை போல்
கிளைதொறும் குதித்துத் தாவிக்
கீழுள்ள விழுதை யெல்லாம்
ஒளிப்பாம்பாய் எண்ணி எண்ணி
உச்சி போய்த் தன் வால் பார்க்கும்.[10]

என கவிஞர் நகைச்சுவையோடு உணர்த்துகிறார்.

## இயல்பு நகைச்சுவை :

பாரதிதாசன் இயல்பிலேயே ஒரு நகைச்சுவையாளர். தாம் சிரிக்காமல் மற்றவர்களைச் சிரிக்கச் செய்வதில் திறமையானவர். அவர் எழுதும் பாடல்களில் இயல்பாகவே நகைச்சுவை அமைந்துவிடுகிறது. இருண்டவீடு காப்பியத்தில் வரும் பெரிய பையன் காலைக்கடன் முடிக்காமல் பிட்டையும் வடையையும் ஆவலாய் உண்ணத் தொடங்குவது முதல் இரண்டு பற்களை இழப்பது வரை,

நாவில் இடுகையில் நடுவயிறு வலித்தது
வெளிக்குப்போக வேண்டுமென்றுணர்ந்தான்
வடையின் சுவையோ விடேன் விடேன் என்றது
கொல்லையை நோக்கி செல்லவும் துடித்தான்
மெல்லவும் வடையை விழுங்கவும் துடித்தான்
வில்லம்பு போல மிக விரைவாக
நடுவிற் கிடந்த நாயை மிதித்துப்
பட பட வென்று பானையைத் தள்ளிக்
கன்றின் கயிற்றால் கால் தடுக்குற்று
நின்ற பசுவின் நெற்றியில் மோதி

இரண்டு பற்கள் எங்கேயோ போட்டுப்

புரண்டெழுந்தோடிப் போனான் கொல்லைக்கு.[11]

எனக்காட்டுவது அடக்கமுடியாத சிரிப்பை ஊட்டுவதாகவே அமைகின்றது.

**புரட்சிக் கருத்துக்களில் நகைச்சுவை :**

சமுதாயத்தைத் திருத்துவதற்குப் பயன்படும் வன்மையான புரட்சிக் கருத்துக்களையும் நகைச் சுவையுடன் கூறமுடியும் எனக் காட்டியவர் பாரதிதாசன். தமது நாட்டு விடுதலைச் செய்தி கிழவிக்கும் உணர்வைத் தருவதாகக் கவிஞர் காட்டுகிறார்.

பல்லிலாக் கிழவி கல்லுரல் இட்ட

மெல்லிலை காயினை மெல்ல இடிக்கையில்

விடுதலைச் செய்தி விளம்புதல் கேட்டதால்

தட தட என்றே இடிப்பட்டது கல்[12]

என்று கூறுவது நகைப்பிற்குரியது ஆகும்.

சமுதாயத்தில் சாதிப்பாகுபாடு உருவாவதற்குக் காரணமாய் அமைந்த பிறப்புக் கதையையும் அக்கதையை நாட்டு மக்களிடம் சொல்லி மக்களிடையே வேறுபாட்டையும் ஏற்படுத்தி உழைக்காமல் உயிர் வாழ்பவர்களைக் கவிஞர்,

முகத்தில் பிறப்பதும் உண்டோ முட்டாளே

தோளிற் பிறப்பார் உண்டோ தொழும்பனே

இடையிற் பிறப்பார் உண்டோ எருமையே

காலிற் பிறப்பார் உண்டோ கழுதையே

நான்முகன் என்பான் உளனோ நாயே

புளுகடா புகன்றவை எலாம் போக்கிலியே.[13]

என்று கூறும் கூற்று நகைப்பிற்குரியது.

புரட்சி வன்மையானது; நகைச்சுவை மென்மையானது. இரண்டும் ஒன்றுக்கொன்று 'முரண்' என்றாலும் இரண்டையும் இணைக்கும் புதுமையைப் பாரதிதாசன் தம் கவிதைகள் வாயிலாகப் புகுத்தியுள்ளார். நகைச் சுவையுடன் புரட்சிக் கருத்துக்களைப் புலப்படுத்தும் பாங்கு பாராட்டுதற்குரியது.

நகைச்சுவையைத் திறன் பெற்றோர் கையாளும்போது இலக்கியத்தில் கருத்துக்களின் வாகனமாகப் பயன்படும் ஆற்றலையும் அது பெறுகிறது. படித்தோர், பாமரர் அனைவரும் புரிந்துகொள்ளும் பாங்கில் எளிமையும், கேட்போர் மனத்தைப் பிணிக்கவல்ல இனிமையும் உடையது நகைச்சுவை. பாரதிதாசன் மிகத் தேர்ந்த புலமையாளர்; திறன்பெற்ற கவிஞர்.

மக்கள் மனதில் மண்டியிருக்கும் குருட்டு நம்பிக்கைகளையும் மூடப் பழக்கவழக்கங்களையும் அகற்றவும், அறியாமை இருளில் ஆழ்ந்து கிடப்போரைக் கரையேற்றவும் புரட்சிக் கவிஞரான பாரதிதாசன் துடிப்பது இயல்பு. சமுதாயத்தைச் சாடுகின்ற கவிஞரின் வேகத்தைச் சரிப்படுத்த அவர் படைக்கும் நகைச்சுவை பயன்படுகிறது.

## அடிக்குறிப்புக்கள்

1. திருநாவுக்கரசர், தேவாரம் - நாலாந்திருமுறை, பா.எ.728.
2. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் தொகுதி-I , ப.128.
3. பாரதிதாசன், கழைக்கூத்தியின் காதல் I, ப.32.
4. பேராசிரியம், தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.4.
5. News From ISRAEL, Vol XXV. No.1 January- 1978, P.12,13.
6. பாரதிதாசன், கண்ணகி புரட்சிக்காவியம், ப.13.
7. பாரதிதாசன், குடும்ப விளக்கு -5, ப/111.
8. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் தொகுதி III, ப.132.
9. பாரதிதாசன், இருண்ட வீடு, ப.34.
10. பாரதிதாசன், அழகின் சிரிப்பு, ப.40.
11. பாரதிதாசன், இருண்ட வீடு, ப.7.
12. பாரதிதாசன், காதலா? கடமையா?, ப.17.
13. பாரதிதாசன், குறிஞ்சித்திட்டு, ப.46.

* * *

# பைந்தமிழ்த் தென்றல் பாரதிதாசன்

பாவலரேறு ச. பாலசுந்தரம்.

தண்டமிழ் வளத்தைச் சீர்த்தியை உறவைத்
தனிப்பெருந் தன்மையை நெறியை
உண்டவர் வியப்ப ஓர்ந்தவர் உவப்ப
ஒளிபெறப் பகுத்தறி வதனான்
எண்டிசை நயப்ப இன்னிசைத் தேனா
இயம்பிய பாரதி தாசன்
ஒண்டிறற் கவிதைத் தென்றலாய் உலவும்
உண்மையை உருவகத் துணர்வாம்.



சிந்தனை முகில்கள் சூழ்ந்து சீரிய உணர்வு நீராய்
முந்துறும் அருவி பாய முத்தமிழ்ச் சாரல் தூற்றும்
விந்தைகொள் அறிவென் கின்ற வீறுசால் பொதியத் தின்கண்
பந்தியாய் எழுந்து வீசும் பாரதி தாசத் தென்றல்

மெய்தவழ் இசைகூத் தாக விரிந்தெழுந் தலைகள் பாயும்
மொய்தமிழ்ச் சொல்முத் துக்கள் முகிழ்க்குந்தென் கடலிற் பண்பாம்
நெய்தலங் கானத் தின்கண் நிறையொடு தோன்றித் தென்னர்
செய்தவப் பயனால் வீசும் தீந்தமிழ்க் கவிதைத் தென்றல்

ஓங்குதன் மானம் மாந்தர்க் குயிரினும் பெரிதென் றோதிப்
பாங்குடன் உலகோர் வாழப் பகுத்தறி வொளியைப் பாய்ச்சி
ஊங்குணர் வேறச் செய்த ஒப்பரும் பெரியார் என்னும்
தேங்கமழ் சந்த னத்தின் திண்ணிய கானந் தோய்ந்து

இருந்தமிழ்ச் சங்கப் பாக்கள் எனுமண முல்லைக் காட்டில்
பொருந்திஐந் திணைப்பண் பாடாம் பொலிவமை சுனைகள் மேவி
அருந்தமிழ் மரபாம் காதல் அகத்தொடு புறவாழ் வென்னும்
தரந்திகழ் சோலை சூழ்ந்து தவழும்பண் பாட்டுத் தென்றல்

ஓடையாய் ஊறிப் பொங்கும் உயர்தமிழ் உணர்வைத் தாக்கும்
கோடையின் கொடுமை நீங்கக் குதலையும் மழலை யும்போல்
மேடையில் மணந்து வீசி மெலிவினைப் போக்கிப் பொல்லா
வாடையை வென்றிங் கின்ப வாகையை வளர்க்குந் தென்றல்

அடிப்படைப் பண்பா டென்னும் அணிதமிழ்த் தாயின் மீது
பிடிப்புறக் கலக்க வந்து பேதுசெய் கொள்கை யென்னும்
தடிப்புவேர்க் குறுவொன் றாமல் தனித்தமிழ்க் கொள்கைச் சாந்தம்
கடிப்புறக் கலந்து முப்பால் கருத்தினை வீசும் தென்றல்



அயல் மொழிக் கலப்பென் கின்ற அம்மைநோய் தமிழின்மீது
மயலுறப் பற்றா வண்ணம் வந்தவர் மொழியா அன்றிச்
செயலுறு வளமை சான்ற செந்தமிழ்ச் செல்வமா என்(று)
உயர்வுற வினவி உண்மை உரைத்தொளி கமழுந் தென்றல்

பாண்டியன் பரிசை ஏந்திப் பைந்தமிழ்க் காதல் தாங்கி
ஈண்டெதிர் பாரா முத்தம் இட்டுளம் மகிழச் செய்யும்
காண்டகு கவிதைத் தென்றல் கைம்மையாம் கொடிய வெப்பம்
மாண்டிட வாழ்வை மீட்கும் வழிசொலும் மணவாய்த் தென்றல்

வாழ்வொடு வளத்தை நல்கும் வன்றொழி லாளர் என்னும்
காழ்மரம் வறுமை கூரக் கரவினால் சரிஞ்சி நிற்கும்
பாழ்மனக் கொடியார் என்னும் பசையிலாக் கோடை செய்யும்
ஏழ்மையின் இளைப்பை மாற்ற இயற்றமி ழிசைக்குந் தென்றல்

விந்தைமுத் தமிழாம் மார வேளினைச் சுமந்து தென்னர்
சிந்தனைக் கொடியிற் செய்யுள் தேமலர் விரிய வீறாம்
மைந்துறு தேமா வெங்கும் வளந்தரப் புரட்சி என்னும்
பைந்தமிழ்க் குயில்கள் கூவப் பரவுநற் கவிதைத் தென்றல்

இசைத்தமிழ் என்னும் வேனில் ஏந்திழை ஏந்தித் தெற்குத்
திசைப்பண்பா டென்னும் காதற் செம்மலுக் களிக்க வீரம்
விசைத்தெழும் தமிழ்ப்பற் றோடு வெல்பகுத் தறிவென் கின்ற
நசைப்புறு மழலை பேசி நடந்திடுங் குழவித் தென்றல்

மேற்றிசைக் கோடை நம்மை மெலிவித்த துயரும், ஈங்கே
கூற்றெனப் பனியைக் கொட்டிக் குமைந்திடச் செய்த வாடைக்
காற்றது தீங்கும் கொண்டல் கக்கிடுந் துன்பும் போக்கிப்
போற்றுதற் குவந்துவீசும் பொதியச் செந் தமிழின் தென்றல்

தீந்தமிழ் நாடொன் றற்கே சீரிய உரிமை பூண்டு
சாந்தமார் பொதியி லின்கண் தமிழொடு தோன்றிப் பாண்டி
வேந்தரின் விளங்கி வான வீதியில் உலவித் தேமாப்
பூந்தளிர் விரித்து முல்லை பொலிவுறு வீசும் இந்த

வளியுரு வான தென்றல் வளர்புகழ் தமிழ கத்துக்
களிமகிழ் பாண்டி தந்த கனிதமிழ்த் தென்றல் தென்னர்க்(கு)
ஒளிதரும் உறவால் ஞாலம் முழுமைக்கும் உரியதாகி
எளிமையோ டினிமை சான்ற இயற்றமிழ்ப் பொதியஞ் சார்ந்து

எண்வகை மெய்ப்பா டென்னும் எழில்கமழ் சாந்தந் தோய்ந்து
பண்கமழ் பாட லாகிப் பகுத்தறி வெனும்வா னத்தில்
வண்புற உலவி மாந்தர் மதியினை விரித்து நெஞ்சத்
தண்மலர் பொதுள வீசும் தனிப்பெருந் தமிழின் தென்றல்

இத்தகு தென்றற் காற்றை இதயத்தில் உலவச் செய்து
தத்துவ நெறியும் வீறு சான்ற நன்னடையும் பூக்க
ஒத்ததிங் கறிந்து பொல்லா உயர்வுதாழ் வகற்றி மாந்தர்
நித்திய வாழ்வுற் றோங்க நெஞ்சத்தால் விரும்பி வாழ்வாம்.



* * *

# உதிராப் புகழோன்....

பாவலர் மெய்யடியான்

இனமொழி நாடென சிந்தையில் தேக்கும்
இணையிலா செய்திறம் விந்தையாய்ப் பூக்கும்!
தனல்விழி பகையிடம் சுட்டிடக் கேட்கும்
தந்திரம் எதுவரின் தாசன்முன் தோற்கும்

வந்தனை செய்திடும் தாசனின் பாட்டு
சிந்திடும் வியர்வையின் சீர்உரைக் கூட்டு!
நைந்திடும் தோழரும் நலம்பட கேட்டு
மந்திர மடமைக்கு வைத்திடும் வேட்டு!

இன்சுவைக் காதலில் மேம்படும் ஓசை
தன்மொழி நாடெனில் தாவிடும் ஆசை!
என்மொழி நாடென இத்தரை நடிப்பார்
இனநலம் கருதியவர் எலும்பினை ஒடிப்பார்!

புதுமையில் தோன்றிய புரட்சிப் பாவலன்
பொதுமையில் பூத்த புதுமை நாவலன்
அதிராச் சிறப்புடை அருந்தமிழ்க் காவலன்
உதிராப் புகழுடன் விளங்கிடும் காவலன்

* * *

# பாவேந்தரும் இளங்கோவும்

சுவாமிக் கண்ணு செல்லையா

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞர். முத்தமிழ்க் காப்பியம் தந்த இளங்கோ இரண்டாம் நூற்றாண்டின் ஒப்பற்ற காப்பியப் புலவன். இளங்கோவின் நெஞ்சையள்ளும் சிலம்பு வேந்தரின் உள்ளத்தைத் தொட்டது, கண்ணகி புரட்சிக் காப்பியமாக மலர்ந்தது. இருப்பினும் கால இடைவெளி சில கருத்து மாற்றங்களையும் ஏற்படுத்துமல்லவா? அவ்வாறு சிலம்பினின்று கண்ணகி புரட்சிக் காப்பியம் வேறுபடும் போக்கினைச் சிந்திப்போம். "பழைய முறைகளையோ, புதிய கவிகளையோ நான் காப்பி அடிக்கவில்லை. எனக்கென ஒரு நடையைக் கண்டு கவிபாடுகின்றேன். இந்தக் காலம் என் கவிதையை ஒப்பாவிட்டால் பரவாயில்லை. நான் யாருக்கும் அஞ்ச வேண்டியதில்லை. சுதந்திரமாக என் வழி நடப்பேன்" என்று கூறிய புரட்சிக் குயில் ஷெல்லியைப் போன்று, தமது ஆழ்ந்த அறிவையும், சிந்தனைத் தெளிவையும், உள்ள உறுதியையும் முன்வைத்த புரட்சிப் பாவலர் கண்ணகி புரட்சிக்காப்பியத்தைப் பகுத்தறிவுப் பார்வையின் உந்துதலால் படைத்துள்ளார்.

திங்களையும், ஞாயிற்றையும் போற்றுகின்ற மங்கல வாழ்த்தோடு சிலம்பு தொடங்குகின்றது. பாவேந்தரோ திருமணத்தில் தொடங்குகின்றார். வேதாகம நெறிப்படி அங்கு திருமணம் நடக்கிறது. இங்கு தமிழ் முறைப்படி களவுக்குப் பின் காதல் என்பதை எடுத்துரைக்க 'சேந்தனார்' என்ற புதிய பாத்திரத்தை அறிமுகப்படுத்தியுள்ளார். திருமணத்தன்று அழகு மாதர் ஆட, பழந்தமிழ்ப் பண்பாட பில்லியங்கள் ஒலிக்கக் கண்ணகியும், கோவலனும் ஊர்வலம் வருகின்றனர்.

பணித்திடினும் பணிவல்லார் இயற்ற ஒண்ணா

பாவை ஒன்றும் வீரம் ஒன்றும் பெண்மாப்பிள்ளை

என்று பாவேந்தர் தன்னை மறந்து வியக்கின்றார். அங்கு வரும் தலைவன், தலைவியர் பெயர்களை ஒரு இயல்முழுக்கக் கூறியுள்ளார்.

அன்பரசி ஆணழகு கன்னல்பொன்னன்

ஆடுமயில் அறிவழகன் அன்னம் நல்லாள்

தென்னழகு தமிழப்பன் முத்து முல்லை

இப்படிப் பல. இங்கு பெயர்கள் தேவையில்லாதிருப்பினும் தமிழில் பெயர்களைச் சொல்ல வேண்டும் என்பதற்காகவே சொல்லியுள்ளார். இன்னும் ஆழ்ந்து சிந்தித்தால் அழகான தமிழ்ப்பெயர்கள் பல இருக்கும்பொழுது நீங்கள் எல்லாம் ஏன் இப்படிப் பெயர்

வைத்துள்ளீர்கள் என்று கேட்பது போலவும் இருக்கிறது.

திருமணத்தில் அடுத்த முக்கியத்துவம் பெறுவது விருந்து. விருந்தைப்பற்றி இரண்டு இயல்களில் பேசுகின்றார். உண்ட உணவைப்பற்றி இருவர் உரையாடுகின்றபொழுது, ஒருவன் வடையில் நெய் ஒழுகுகிறது என்றான். சாப்பாட்டைப்பற்றிப் பேசுவது காரணச் செயலாக இருப்பினும் தமிழ்மக்களின் விருந்தின் மேன்மையைக் கூறவே, சிலம்பில் கூறப்படாதிருந்தும், பாவேந்தர் விரித்துச் சொல்லியுள்ளார். இந்திரவிழா வருகின்றது. கோவலனும், மாதவியும் கடலாடச் செல்கின்றனர். கானல்வரி பாடுகின்றார்கள். இருவரிடத்தும் தவறில்லை. யாழின் மேல் ஊழ்வந்துற்றதால் பிரிவு நேர்ந்தது என்று சுட்டியுள்ளார். கோவலன் பாடிய பாட்டில் 'தன்னைக்' கைவிட்டு வேறொருத்தியை நாடுகின்றான் என்ற கருத்து உண்டு என்று வருந்துகிறாள் மாதவி. கோவலனோ மாதவி பாடிய பாட்டில் அவள் வேறொருவனைக் கருதினாள் என்ற குறிப்பிருப்பதாக நினைக்கின்றான். உடனே இணைந்திருந்த கையைப் பிடுங்கிக்கொண்டு எழுந்துபோய்விடுகிறான். "மாதவி பாடிய கானற்பாணி கனகவிசயர்தம் முடித்தலை நெரித்தது" என்று இளங்கோ கூறுவதை அவனும், அவளும் விளைத்த இத்தீமை தமிழன்னைக்கே ஆயிற்று என்று பாவேந்தர் பாடியுள்ளார்.

சிலப்பதிகாரத்தில் கண்ணகி, கோவலன், கவுந்தியடிகள் மூவரும் மதுரை செல்கின்ற வழியில் வம்பப்பரத்தையும், வறுமொழியாளனும் கண்ணகி கோவலனைப்பார்த்து "ஒரு தாய் மக்கள் கணவன் மனைவியராய் வாழ்வாரோ" என்று வினவவும் கவுந்தியடிகள் அவர்களை நரிகளாகச் சபிப்பதாகக் கூறப்பட்டுள்ளது. சாபம் விடுவது அதனால் உடனே நரிகளாக ஊளையிட்டுச் செல்வது இவற்றிலெல்லாம் நம்பிக்கை கொள்ளாத பாவேந்தர் இச்செய்தியைக் கண்ணகி புரட்சிக் காப்பியத்தில் குறிப்பிடவேயில்லை.

பாண்டிமாதேவி புணர்ச்சி காலத்தில் உடம்பில்பட்டு உறுத்தும் என்பதற்காக, பள்ளியறையில் ஒரு மூலையில் உள்ள பெட்டகத்தின் மேல் சிலம்பைக் கழற்றி வைத்துள்ளாள். துயிலெழுப்ப வந்தவர்களின் ஒருத்தியான வஞ்சி என்பவள் சிலம்பைத் திருடிச் சென்று தன் காதலன் கருங்கையனிடம் கொடுத்துவிடுகின்றாள். வஞ்சி என்ற இப்புதிய பாத்திரம் பாவேந்தரால் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. சிலம்பில் இப்பாத்திரம் இல்லை. கருங்கையனால் திருடன் என்று பழிசுமத்தப்பட்ட கோவலன் வெட்டப்படுகின்றான்; அதனைக் கண்ட ஊரார் நடுங்குகின்றார்கள். மதுரையின் நலங்கள் அனைத்தும் கொலையுண்டு போயின என்று அவர்கள் நாணத்தால் நடுங்குகின்றார்கள். இவ்வாறு தமிழ்ச்சான்றோர் வருந்துகின்ற நிகழ்ச்சி சிலம்பில் இல்லை. பாவேந்தரின் புதிய படைப்பாகும். இறந்துகிடக்கின்ற கோவலனைப் பார்த்து, வாழ்க்கை இன்பம் இனி எது, பொன்னைச் செய்யலாம், பொருளைச் செய்யலாம், சாதல் அடைந்து போய்விட்ட 'உன்னை' இனி உண்டாக்க முடியுமா? என்று பலவாறு புலம்பும் கண்ணகி "கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்" என்ற வார்த்தைகளைக் கூறவில்லை. பாவேந்தருக்கு இது முரண்பட்ட கருத்து, விதவை மணத்தை ஆதரிப்பவர் ஆதலால் கூறாது விட்டுவிடுகின்றார்.

தன் கணவனைக் கொன்றது தவறு என்று மன்னனிடம் முறையிடச் செல்கின்றாள்....... சிலம்புக் கண்ணகி. பாவேந்தர் படைத்த கண்ணகியோ என்ன நீ சொல்வது? என்று மன்னன் கேட்டவுடன்

என்னநீர் கொன்றதென" கேட்டுவிட்டு
சட்டம் எங்கே சட்டநெறி நின்றதெங்கே

என்று மறைமுகமாக மன்னனைச் சட்டம் தவறிவிட்டாய் என்று குறிப்பிட்டுள்ளாள்.

பெருமகிழ்ச்சி உலவாத நாட்டில் யாரும்
பிறந்தாலும இறந்தாலும் பெருமை இல்லை

என்ற அரிய கருத்தை இவ்விடத்தில் கண்ணகி வாயிலாகப் பாவேந்தர் கூறியுள்ளார்.

காப்பியப் போக்கிற்குத் தேவையில்லாதிருந்தும், சிலம்பில் குறிப்பிடாதிருந்தும் கண்ணகியைப் பாராட்டும்பொழுது, நகை போட்டுக் கொள்வதும், நல்ல உடை உடுத்திக்-கொள்வதும், கூத்துப்பார்க்கப் போவதுமே கடமை என்று எண்ணாமல், தன்னை அயல் ஆடவன் நெருங்காமல், தன்னை மணந்தவனை ஒரு தீமை நெருங்காமல், தன் பழங்குடிக்குரிய பெருமையைக் கெடுக்காமல் முயலுகின்ற நெஞ்சத்தைச் சோர்வு நெருங்காமல் காப்பவள் எவளோ, அவள்தான் இல்லக்கிழத்தி என்று மனையறத்தை மாண்புற நடத்தும் குடும்பத் தலைவியைக் குறிப்பிட்டுள்ளார்.

வடநாடு நோக்கிப் படையெடுத்துச் செல்லும் சேரமன்னன், பாடிவீடு அமைத்துத் தங்கியுள்ளான். அப்பொழுது ஒரு வீரன் வந்து, வட நாட்டிலிருந்து மன்னனைக்காண யாரோ வந்துள்ளார்கள், வரவிடவா? என்று கேட்டு நிற்கின்றான். அவர்கள் இன்னார் என்று ஆராய்க என்று கூறினான். அந்தச் சொற்களை அரசன் கூறி முடிக்குமுன், வீரன் அவர்கள் தமிழ்ப் பேசும் துறவிகள் என்று நடுக்கத்துடன் கூறுகின்றான். உடனே மன்னனும் நடுங்கி, துறவிகளை நோக்கி ஓடுகின்றான். வணங்குகின்றான்.

"பார்துறந்தும் தமிழ் துறவாத்துறவீர்" என்று அவர்கள் அடிவாழ்த்தி நிற்கின்றான். இதுபோன்ற நிலை சிலம்பில் இல்லை. தமிழ் என்றால் ஓடிவந்து வணங்கி நிற்கும் மன்னர்களைக் காட்ட நினைத்த பாவேந்தர் இப்படியொரு சூழ்நிலையை அமைத்துத் தந்துள்ளார்.

கதையமைப்பில் சிலம்பைத் தழுவிச் செல்வதுபோல கண்ணகி புரட்சிக்காப்பியம் அமைத்திருப்பினும் ஆங்காங்கே தான் சொல்ல வேண்டிய கருத்துக்களுக்கே முக்கியத்துவம் கொடுத்து பாவேந்தர் இந்நூலை எழுதியுள்ளர். பாவேந்தரும் இளங்கோவும் எடுத்துக்கொண்ட அடிப்படைக் கதையமைப்பு ஒன்றாக இருப்பினும் காலமாறுபாட்டிற்கேற்ப கருத்துக்கள் மாறுபடுதலை ஒரு சில எடுத்துக்காட்டுக்களால் உணர முடிந்தது.

* * *



பிரிந்து பிரிந்து செல்லும் வழியாய் - நாம்
பிரியத்துடன் நடப்போம் விரைவாய்

- பாரதிதாசன்

ஓவியம்: என். மனோகரன்

# பாரதிதாசன் பாடல்கள் ஒரு சமுதாயவியல் அணுகுமுறை

முனைவர் நா. நளினிதேவி

0 : 1 பால், சாதி, பொருளியல் அடிப்படையிலான மரபு வழிச் சமுதாய அமைப்பும், பகுத்தறிவற்ற சமயப்பற்றும், மூட நம்பிக்கையும் மண்டிக் கிடக்கும் நாட்டில் அவற்றுக்கெதிராகக் குரல் கொடுத்து மன்னன் நிதி ஆயினும் 'மதத்தலைவன்' நிதி ஆயினும் அது யார்க்கும் பொது என்று பாடியதாலேயே புரட்சிக்கவி ஆனவர் பாரதிதாசன். கொண்ட கொள்கையில் தெளிவும், உள்ளம் ஒன்றிய ஈடுபாடும் அவன் கவிதைகளைப் புரட்சிக்கனல் தெறிக்க வைத்தன. தீத்திறத்தார் பக்கமே சுட்டுப் பொசுக்கிய கண்ணகி ஆக்கிய தீ போல மறுவுடையோரைச் சுட்டு மாசற்றோரை மனம் குளிர வைத்தன. பேராசையும் பொறாமையும் கொண்ட உடன்-பிறப்புகளுக்குக் கற்றாரும் உற்றாரும் துணை நின்றபோது அறம் காக்க வில்லேந்திய அருச்சுனனைப் போல சாதி, சமய, பால், இனச் சழக்குகளைக் கொண்ட தம் மக்களோடு போராடி மானிடம் காக்கக் கவிதை வில்லேந்தி அஞ்சாமைத் தேர் ஏறிய அழகுத்தமிழ்ப் பாவலனுக்குப் பைந்தமிழே வலவனாகக் கீதை வேண்டாக் கொற்றவன் ஆனவன். அறிவுறுத்தலும், இன்பமளித்தலுமாகிய இரு பயனை நிறை பயனாகக் கொண்டு கவிதைச் சுவையுடன் காலத்தை ஊடுருவி நிற்கும் சமுதாயப் பார்வையையும் உள்ளடக்கிய கவிதைகள் ஆகையால் காலத்தை வென்ற இவரது கவிதைகள் பல்வேறு கோணங்களில் ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

0 : 2 இலக்கிய ஆய்வில் சமூகவியல் அணுகுமுறை இன்று வளர்ந்து வரும் ஒன்றாகும். சமுதாய மாற்றத்தை வலியுறுத்தும் பாரதி, பாரதிதாசனின் கவிதைகள், இச்சமுதாயவியல் அடிப்படையில் சி. கனகசபாபதி அவர்களால் ஆராயப்பட்டுள்ளன[1] சமுதாயவியல் கோட்பாடுகளான மேல்நிலை ஆக்கம், மேற்கத்திய ஆக்கம், புதுமை ஆக்கம், தேசியம், கீழ்நிலை ஆக்கம் என்பவை அவ்வாய்வில் இடம் பெற்றுள்ளன. இக்கோட்பாடுகளைப் போலவே 'சமநிலை ஆக்கம்' எனும் கோட்பாட்டை வரையறுத்துக் கொள்ளலாம்[2] சமநிலை ஆக்கம் என்பது பால், சாதி, பொருளியல் அடிப்படையில் வேறுபாடு இல்லாத சமன்மை நிலை காணும் முயற்சி ஆகும். ஆண்கள் பெற்றுள்ள உரிமைகள் யாவும் பெண்கள் பெற வேண்டும் எனவும், உயர்சாதியாரைப் போலக் கீழ்ச்சாதியினரும், பணம் படைத்தோரைப் போல வறியவரும் அனைத்து உரிமைகளையும் பெறவேண்டும் என்றும் விரும்பி அதன் அடிப்படையில் பாடுவது சமநிலை ஆக்கத்தின்பாற் படும்.

1 : 1 மகளிர், தொழிலாளர், தாழ்த்தப்பட்ட மக்கள் என்ற சமுதாயத்தின் தலையாய முக்கூறுகளின் சமன்மைநிலையைப் பாரதிதாசன் பல வகைகளிலும், மற்றெல்லாரையும் விடக் கடுமையாக வற்புறுத்தியுள்ளமை அவரது பாடல்களிற் காணப்படுகின்றது. சமுதாய விடுதலை இன்றி அரசியல் விடுதலை பெறமுடியாது என்று பாடியவர் பாரதிதாசன். இன்றும் அச்சமுதாய

விடுதலை இன்றி அரசியல் விடுதலையால் பயன் பெற இயலாமையை நமது நாற்பதாண்டுக் கால வரலாறு தெள்ளத் தெளிவாகக் காட்டி நிற்கின்றது.

1 : 2 மனித வாழ்வின் எல்லை சமன்மைச் சமுதாயம் என்பதில் பாரதிதாசன் உறுதியான கொள்கை உடையவர் என்பதைத்

தாழ்வில்லை உயர்வில்லை
சமமென்ற நிலை வந்தால்
வாழ்வெல்லை காண்போமடி சகியே
வாழ்வெல்லை காண்போமடி[3]

எனும் பாடல் அரண் செய்யும். இந்த எல்லையை எய்த மகளிர், தொழிலாளர் மற்றும் தாழ்த்தப்பட்ட மக்கள் உரிமை பெற வேண்டும், இவ்வுரிமையைப் பெறுதற்குத் தடையாக இருக்கும் அனைத்தையும் வேரோடு களைந்திட வேண்டும். சமுதாயத்தின் இம்முக்கூறுகளின் இழி நிலைக்குச் சமயமும், அச்சமயத்தை உருவாக்கிய உயர்சாதியினரும்தான் முழுக்காரணம் என்பது பாரதிதாசனின் ஆழ்ந்த கருத்து. ஆகையால் சமயத்தையும், உயர்சாதியினரையும் அறவே வெறுத்துப் பாடியுள்ளார்.

## 2 : 0 மகளிர் சமுதாயம் :

மகளிர்சமுதாயம் சமன்மை பெற அவர்கட்கெதிரான குழந்தை மணம், கைம்மை, திருமண உரிமை இன்மை, போன்ற கொடுமைகள் தடையாக நிற்கின்றன. இவையாவும் சட்டப்படி தடை செய்யப்பட்டிருந்தாலும் இன்றும் முழுமையாகச் சமுதாய ஒப்புதல் பெறவில்லை. பாரதிதாசன் இக்கொடுமை நீங்கப் பாடுவது மகளிர் சமன்மைக்கு வழிவகுக்கும் ஆகையால் இப்பாடல்கள் சமநிலை ஆக்கத்தின் பாற் படுகின்றன. இத்தகைய கொடுமைகள் சமுதாயத்தவறுகள் என்று பெண்களே உணரத் தொடங்கிய காலம் பாரதிதாசன் வாழ்ந்த காலம். எனவே தான்,

இன்று புவியில் பெண்கள் சிறுநிலையில் இருக்கவில்லை
விழித்துக் கொண்டார்[4]

என்றும் பெண்ணுக்கு உரிமையைச் சமுதாயம் கொடுப்பது வரை காத்திருப்பது தருமம் என்றில்லாமல் பாரதிதாசனின் பெண்ணொருத்தி 'நானே மேற்கொள்வேன்[5] என்கின்றாள்.

## 2 : 1 குழந்தை மணம் :

கூவத் தெரியாத குயிற் குஞ்சுகளாய், தாவாத சிறுமான்களாய், மேவாத அரும்புகளாய் உள்ள குழந்தைகள், முதியோருக்கு மணம் செய்விக்கப்பட்டு மங்கலநாண் இழக்கின்றன. அக்குழந்தைகளை ஒத்த பெண்கள் தந்தைக்கு மனைவியராகும் நிலையில் அவர்களது தொடரும் வாழ்நாட் கொடுமை நினைத்து பாரதிதாசன் கண்ணீரில் கரைகின்றார்.

இவளது
பின்நிலை எண்ணிப் பாட்டி பெரிதும்
அழுதகண்ணீர் வெள்ளம் - அந்தக்
குழந்தை வாழ்நாட் கொடுமையிற் பெரிதே[6]

எனும் பாட்டில் பாட்டி புலவரைத் தவிர வேறு எவர்?

## 2 : 2 கைம்மை நீக்கம் :

கணவனை இழந்த பெண்கள் மறுமணம் புரிவது சிறுமை எனும் குறுகிய மதியுடைய அறிவிலிகள் நீங்கிச் சமுதாயம் திருந்தும் நிலையே சமன்மைச் சமுதாயமாகிய சமநிலை ஆக்கத்திற்கான மற்றொரு வழி. அதிலும் வானிடை ஏறிக் கடலை வசப்படுத்திப் புன்மை நீக்கிப் புழுதி, குப்பை, உமியெல்லாம் பழரசம் போலாக்கிப் பயன்படுத்தும் அறிவியல் உலகில், மாலையிட்ட மணவாளன் இறந்துவிட்டால், அவளை ஆலையிட்ட கரும்பாக்கி உலக இன்பம் அணுவளவும் காணாவண்ணம் சாகச் செய்யும் அநியாயம் ஒழிக்கப்பட வேண்டும் என்கின்றார்.

மாண்டவள் மாண்ட பின்னர் அவளின்
மனைவியின் உளத்தை
ஆண்டையர் காணாத அடிமைப்பெண்ணின் கதி[7]

நினைந்து அகம் நொந்து பாடுகின்றார். 'கோதையர் மறுமணம் செய்யத்தூண்டுதலே மாண்பு[8] என்று வலியுறுத்துகின்றார்.

## 2 : 3 மண உரிமை :

வளமான சமுதாயத்துக்குக் குடும்பங்கள் நாற்றங்கால்கள். குடும்பத்திற்கு அடிப்படை திருமணம். இத் திருமணம் சமுதாய நிறுவனமாகக் கருதப்படுகின்றது. எனவே திருமண உரிமை பெறுவது சமுதாயச் சமன்மைக்கு இட்டுச் செல்லும் வழி ஆகிய சமநிலை ஆக்க முயற்சியாகும். இவ்வுரிமை இன்றிப்பெற்றோரின் கட்டாயத்தால் நடக்கும் பொருந்தா மணங்கள் சமுதாயச் சிதைவுக்கும், சீரழிவிற்கும் வழிகோலுகின்றன. ஆகையால் இப் பொருந்தா மணத்தை வலியுறுத்தும் சமூகச் சட்டமும், வழக்கமும் திரும்பவும் தலைதூக்காதபடி வேருடன் ஒழிய வேண்டும் என்ற கருத்தில்,

மண்ணாய்ப்போக! மண்ணாய்ப்போக
மனம் பொருந்தா மணம் மண்ணாய்ப்போக
சமூக சட்டமே! சமூக வழக்கமே[9]

எனக் கெடுமொழியுரைக்கின்றார்.

2 : 3 : 1 இவ்வடிப்படை உரிமையைப் பெறுதற்குப் பெண்களே துணிய வேண்டும் என்பதைக்

கல்யாணம் ஆகாத பெண்ணே உன்
கதி தன்னை நீ நிச்சயம் செய்க பெண்ணே[10]

எனும் தொடர்கள் மூலம் புலப்படுத்துகின்றார்.

2 : 3 : 2 இவை போன்ற ஒரு சாரான நீதிகள் ஒழிக்கப்பட்டாக வேண்டும். சம நீதி பெற்றிடப் பெண்களும் முயற்சி செய்தாக வேண்டும் என்பது பாரதிதாசன் கருத்து.

வல்லி உனக்கொரு நீதி நீ - இந்த
வஞ்சகத் தரகர்க்கு நீ அஞ்ச வேண்டாம்[11]
அதன் மேலும் ஞாயம் தராவிடில் விடுதலை மேற்கொள்[12]

எனும் பாடல்கள் இதனை அரண் செய்யும்.

2 : 3 : 3 ஆணும் பெண்ணும் சமம் என்ற பெர்னாட்சாவின் கருத்தே பாரதிதாசனின் கருத்து. பெண் அடிமை நிலைக்கு வைதீகமே காரணம் என்பதும் அவரது நம்பிக்கை.

குள்ளர்களே கேட்டீரோ ஷாவின் பேச்சை[13]
அடஞ்செய்யும் வைதிகம் பொருள்படுத்தாதே
சொற்கண்டு மலைக்காதே உன் பகுத்தறிவால்
தோஷம் குணம் அறிந்து நடப்பாய் துயர் கடப்பாய்
துணை பிடிப்பாய்-பயம் விடுப்பாய்[14]

என வரும் பாடல்கள் பெண்கள் பகுத்தறிவின் துணை கொண்டு சிந்தித்து அச்சம் தவிர்த்துத் துணிவுடன் செயல்படவேண்டும் என்பதை உணர்த்துகின்றன. பெண்கள் உரிமைக்குப் பெண்களே போராட முன்வர வேண்டும் என்பதுவே இந்நாளைய கருத்துமாகும்." [15]

2 : 3 : 4 கற்பு :

பெண்ணுக்கு மட்டுமான கற்பு சமன்மைக்கு வலுவான தடையாக இன்று உணரப் பட்டுள்ளது. கற்பு நிலை என்று சொல்ல வந்தார்; அதை ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவில் வைப்போம் என்று பாடினார் பாரதி.[16] இன்றைய அறிவியல் உலகில் சமன்மைச் சமுதாய மாற்றத்தை வலியுறுத்தும் எழுத்தாளர்கள் கற்பு என்பது 'Myth' என்ற முடிவுக்கு வந்துள்ளனர்.[17] பெண்ணுக்கு எதிரான கொடுமைகளைப் பாரதியைப் பின்பற்றி அவரை விடக் கடுமையான முறையில் பாடும் பாரதிதாசன் இன்று இருந்திருப்பின் பெண்ணுக்கு மட்டும் கற்பு என்ற அநீதியை அனல் பறக்கும் கவிதைகளால் சாடியிருப்பார். பாரதிதாசன் போன்ற அஞ்சாக் கவிஞர்கள் இன்று இல்லாமை பெண்ணுலகுக்கு ஏன் முழு உலகுக்குமே பேரிழப்பாகும்.

2 : 3 : 5 "பெண்ணும் ஆணும் தண்கடல் நிகர்த்த அன்பால் சமானத்தர் ஆனார் என்ற பண் வந்து காதில் பாயப் பருகு நாள் எந்நாளோ"[18] என்ற பாரதிதாசனின் ஏக்கம் சமநிலை ஆக்கத்தோடும் அவ்வேக்கம் தணிந்திட பேதமெனும் மதுவை உண்டு, பெண்ணுக்கொரு நீதி கண்டு., கண்ணில் ஒன்றைப் பழுது செய்து புவி கான்றுமிழும் பழி சுமந்து மகளிர் உரிமையை மறுப்பது மாண்பன்று என்று கண்டு அவர் முன்னேற்றத்தில் மகிழ வேண்டும். குழந்தைகளுக்கு மணம் செய்து கொல்வதும் போதனையாற் பெண்கள் பொது என்பதும் பொட்டுக் கட்டும் வழக்கமும் சீரன்று என்று உணர்ந்து விதவைக்கு மறுமணம் செய்ய உதவுவதும், கோதையர் காதல் மணம் செய்து கொள்வதும் சீர் என்று கொள்ள வேண்டும். என அவர் கூறும் வழிகளும் சமநிலை ஆக்கத்திற்படுவன ஆகும்.

## 3 : 0 தொழிலாளர் சமுதாயம் :

இது எனது எனும் கொடுமையைத் தவிர்த்து ஒரு பொருள் தனி எனும் மனிதனைச் சிரித்து உழைப்பவர்க்கு இவ்வுலகு உரியது என்று கூறும் பாரதிதாசனின் புதியதோர் உலகம் தொழிலாளரின் சமநிலை ஆக்கத்தைக் குறிக்கின்றது.

3 : 1 ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் இரத்தம் சிந்தி உருவான சித்திரச் சோலைகளும், நெல்விளை நன்னிலமும், தாமரை பூத்த தடாகங்களும், மாமிகு பாதைகளும், ஆர்த்திடும் யந்திரக் கூட்டங்களும் இவ்வுலகம் தொழிலாளர்களுக்கே என்பதற்குரிய சாட்சிகள். காடு களைந்து, நாடு செய்து, வீடு கண்டு, மலை பிளந்து, அலைகடலில் செல்லக் கப்பல் செய்து, ஆடை நெய்து, இரும்பு உருக்கிக் கோபுரம் முதல் குடை வரை செய்யும் இத்தொழிலாளர்கள் காணத்தகுந்தது வறுமை, பூணத்தகுந்தது பொறுமை என்பது கொடுமை.

3 : 2 கைத்திறனும் வாய்த்திறனும் கொண்ட பேர்கள் கண்மூடி மக்களது நிலத்தை எல்லாம் கொத்திக்கொண்டு ஏப்பம் இட்டு வந்ததால் கூலி மக்கள் அதிகரித்து, அவ்வேழை மக்கள் பொத்தல் கலமானார். ஆனால் அவரது உழைப்பில் உண்டு கொழுத்த முதலாளியரோ புனல் நிறைந்த தொட்டியைப் போல் ஆனார். அதிகரித்த தொகை தொகையாய்ச் செல்வமெல்லாம் அடுக்கடுக்காய்ச் சிலரிடம் போய் ஏறிக்கொண்டு சதிராட்டம் ஆட,தரித்திரரோ புழுப்போல் துடிக்கின்றனர். சிங்க ஏறுகள் போன்ற தொழிலாளர் முதலாளிகள் எனும் எலிகள் புசிக்க தம் உழைப்பையும் உதிரத்தையும் கொட்டுகின்றனர். இந்நிலைக்கு யாது காரணம்? அவர்களுடைய முன்வினை என்கின்றது ஒரு கூட்டம். அக்கூட்டத்தை நோக்கி,

> கடவுள் கடவுள் என்றெதற்கும் கதறுகின்ற மனிதர்காள்
> கடவுள் ஆணையாயின் அந்த கடவுள்தான் முன்னேற்றமோ
> உடைவெளுக்கும் தோழரை.....
> கடவுளாணை என்றுரைத்த
> கயவர் என்ற கூட்டமீதிலே
> கடவுள் என்ற கட்டறுத்துத்
> தொழிலு ளாரை ஏவுவோம் [20]

என்று கர்ச்சிக்கிறார். இனியும்

> புலிகள் நரிக்குப்
> புசிப் பளித்தே பெரும்
> புதரினில் தூங்கிடுமோ [21]

'வறுமை எமக்கு வலிமை உமக்கோ' என்று பாடி தொழிலாளர் எழுச்சியுற்று

> மதத்தின் தலைவீர் - இந்த
> மண்ணை வளைத்துள்ள அண்ணாத்தை மாரே
> . . . . . . . . . . . . . . . . . . . . . . .
> செப்புதல் கேட்பீர் - இந்தச்
> செகத் தொழிலாளர்கள் மிகப் பலர் ஆதலின்
> கப்பல்களாக - இனித்
> தொழும்பர்களாக மதித்திட வேண்டாம்
> இப்பொழுதே நீர் - பெரிது
> இன்பம் விளைந்திட உங்களின் சொத்தை
> ஒப்படைப்பீரே - எங்கள்
> உடலில் இரத்தம் கொதிப்பேறும் முன்பே [22]

என்று பாடித் தம் சமன்மைக்குக் கூட்டுறவும், பொதுவுடமையுமே வழிகள் என்று கண்டுணர்வது சமநிலை அங்கமாகும்.

> கூடித் தொழில் செய்தோர் கொள்ளலாபம் பெற்றோர்
> . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

பீடுற்றோர் மேற்கில் பிற நாட்டார் என்பதெல்லாம்

கூடித் தொழில் செய்யும் கொள்கையினால் தோழர்களே [23]

என்பது தொழிலாளர் ஒற்றுமை குறித்த அவரது கொள்கை ஆகும்.

3 : 3 மக்கள் எல்லாம் சமமாக அடைந்திட மாநிலம் தந்ததில் வஞ்சமில்லை. மக்களுக்குப் புவிப்பொருள் புதிது என்று அரசு ஆக்கிட வேண்டும் என்ற, சமநிலை ஆக்கக்கருத்தைப் பற்பல இடங்களில் வலியுறுத்தியுள்ளார்.

பொருளை எல்லாம் பொதுவாக எல்லார்க்கும் குத்தகை செய்யும் புதுக்கணக்கு, ஏழை முதலாளி என்று இல்லாமற் செய்வதாகும். தாழ்வு உயர்வு நீங்கிட இப்புதுக் கணக்குக்கு உள்ள தடைகளைப் போக்க வழிதேடும் பாரதிதாசன் தன் சிந்தனையின் முடிவில்

ஓடப்பராயிருக்கும் ஏழையப்பர்

உதையப்பர் ஆகிவிட்டால் ஓர் நொடிக்குள்

ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி

ஒப்பொப்பர் ஆகி விடுவர் [24]

என்று உணர்ந்து உணர்த்துகின்றார்.

4 : 0 **தாழ்த்தப்பட்ட மக்கள் சமுதாயம் :**

ஈழை, அசுத்தம், குப்பை, இலை எனத் தங்கள் தலையில் சுமந்து, கந்தை அணிந்து, இருகை விரித்து மெய் போர்த்து மொந்தையிற் கூழைப் பலர் மொய்த்துக் குடித்துப் பசித்துக் கிடந்து சந்தையில் மாடாய்ச் சந்ததம் தங்கிட வீடும் இன்றி வாழும் எளிய மக்களின் இழி நிலைக்கு உய்வு, உயர்வு தாழ்வற்ற எல்லோரும் சமம் என்ற சமன்மைச் சமுதாயமே. பிறப்பால் கூறப்படும் இந்த உயர்வுக்கும் தாழ்விற்கும் சமயமே காரணம். கடவுள் எல்லோருக்கும் பொது அன்றோ?

கடவுள் துவக்கிக் கொடுத்த - பல

கவிதைகள் பதிகங்கள், செப்பிய பேர்கள்

கடவுள் புவிக்கவதாரம் - அந்தக்

கடவுளின் தொண்டர்கள் லோக குருக்கள்

கடவுள் நிகர் தம்பிரான்கள் - ஜீயர்

கழுகொத்த பூசுரர் பரமாத்து மாக்கள்

கடவுள் அனுப்பிய தூதர் வேறு

கவிதைகளினாலும் சுகம் கண்டதுண்டோ ? [25]

ஆதிமுதல் இந்தத்தேதிவரை அடிமையும் மிடிமையும் தவிர்ந்ததில்லை; மேல்நிலையும் கண்டதில்லை. குடிக்கவும் குடி இருக்கவும் நீரும் வீடும் அற்று இருக்கும் மக்கள், சமநிலை பெற எழுச்சி பெற வேண்டும்.

மனிதரில் நீயுமோர் மனிதன் - மண்ணன்று

இமைதிற! எழுந்து நன்றாய் எண்ணுவாய்

தோளை உயர்த்து சுடர் முகம் தூக்கு

அறிவை விரிவு செய்! அகண்டமாக்கு

விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . ..

உலகு உண்ண உண்! உடுத்த உடுப்பாய்

புவியைப் பொதுவில் நடத்து [26]

கிலியை விடுத்துக் கிளர்ந்தெழுந்து இனியும் கெஞ்சும் உத்தேசமின்றி செயல்பட்டால் சொந்த வலிவுடையார் இன்ப வாழ்க்கை உடையவர் என்னும் வார்த்தைக்கு மோசமில்லை என்பது உறுதி.

ஒரு தாழ்ந்தோன் உயர்ந்தானை

ஒப்பக் கருக் கொள்ளுங்கால்

இரு சாதி மாந்தருக்குண்டோ? [27]

என்பவர்

என்றுதான் சுகப்படுவதோ-நம்மில்

யாவரும் சமானம் என்ற பாவனை இல்லை

ஒன்றுதான் இம்மானிடச் சாதி-இதில்

உயர்பிறப்பு இழி பிறப்பு என்பதும் உண்டோ

அன்றிருந்த பல தொழிலின் பெயர்

அத்தனையும் சாதிகள் என்றாக்கி விட்டார் [28]

சாதிகள் தொழில் அடிப்படையில் அன்றிப் பிறப்பால் அல்ல என்று தெளிவுறுத்துகின்றார்.

4 : 1 சமநிலைச் சமுதாயத்துக்குப் பாரதிதாசன் கூறும் சமநிலை ஆக்க முயற்சிகள் பகுத்தறிவும் சுயமரியாதை உணர்வும் ஆகும்.

உயர்வென்று பார்ப்பனர் சொன்னால் நீ

உலகில் மக்கள் எல்லாம் சமம் என்பாய்

சுய மரியாதை கொள் தோழா - நீ

துயர் கெடுப்பாய் வாழ்வில் உயர்வடையவே [29]

4 : 2 பாழ்படும் பழமை அகற்றிப் பகுத்தறிவால் நலம் வகுத்து அகிலமேல் சமதர்மம் அமைத்துச் சூழும் நற்பேதம் தொடராமல் சுயமரியாதையால் வாழ்வதே வாழ்வு. இவ்வாழ்வுக்கு மானிட தன்மையே உற்ற துணை.

மானிடத் தன்மையை நம்பி - அதன்

வன்மையினாற் புவி வாழ்வு கொள் தம்பி

மானிடம் என்பது குன்று - தனில்

வாய்ந்த சமத்துவ உச்சியினில் நின்று

மானிடருக் கினிதாக இங்கு

வாய்ந்த பகுத்தறிவாம் விழியாலே

வான்திசை எங்கணும் நீ பார் - வாழ்வின்

வல்லமை மானிடத் தன்மை என்றே தேர் [30]

என்று வள்ளுவருக்குப் பின்பு மனித ஆற்றலில் நம்பிக்கை வைத்துப்பாடியவர் பாரதிதாசனே எனில் மிகையில்லை.

*5 : 0* பாரதிதாசன் காணும் சமநிலைச் சமுதாயத்திற்கு அவரே பெயர் சூட்டுகின்றார்.

பேதமிலா அறிவுடைய அவ்வுலகத்திற்குப்
பேசு சுயமரியாதை உலகு எனப் பேர்வைப்போம்
ஈதே காண் சமூகமே! யாம் சொன்ன வழியில்
ஏறு நீ ஏறு நீ ஏறு நீ ஏறே
சமூகமே ஏறு நீ எம் கொள்கைக்கே [31]

என அடுக்கி அடுக்கிக் கூறுவது சமநிலை ஆக்க முயற்சியை வலியுறுத்துவதாகும்.

சூழ்கின்ற பேதமெல்லாம்
துணித்தே சமத்துவத்தின்
வாழ்கின்றார் வாழ்வே [32]

இன்பம் எனப் பாடி சமநிலை ஆக்கக் கோட்பாட்டிற்குத் தகுந்த சான்றுகளாக விளங்கும் கவிதைகளைப் படைத்த பாரதிதாசன் எல்லாத்துறையிலும் எவரும்நிகர் எனும் சமன்மைச் சமுதாயத்திற்குப் புரட்சியே வழி என்கின்றார்.

தக்கதோர் ஆட்சி மக்களின் மன்றம்
சரி நிகர் எல்லோரும் என்றோம்
பொய்க்கதை மறையெனப் புரட்டே
புரட்சியில் மலர்க இன்ப வாழ்வே [33]

இதற்குத் தடையாக நிற்கும் கொடியோர் செயலை அறுக்கக் கொலை வாளினை எடடா எனக் கோபம் கொண்டு பாடுகின்றார்.

*5 : 2* சமநிலை ஆக்கத்தின் பயனாகிய சமன்மைச் சமுதாயத்திற்கு அடிப்படையான சமயத்தையும் சமயத்தை உருவாக்கியோரையும் பிற திறனாய்வாளர்கள் காழ்ப்புணர்ச்சி [34] என்று மதிப்பிடும் அளவுக்குத் துணிவுடன்

செவ்விய மதுரம் சேர்ந்த நற் பொருளில்
சீரிய கூரிய தீஞ்சொல்லால்

பாடி அச்சமில்லை அச்சமில்லை என்று ஆர்த்த பாரதிக்கு ஒரே ஒரு சான்றாகத் திகழ்கின்றார் [35]. சமன்மைச் சமுதாயத்திற்கு மனிதனிடம் நம்பிக்கை கொண்டு புரட்சி வழி காட்டிச் சமநிலை ஆக்க முயற்சிகளால் சமன்மைச் சமுதாயம் ஆகிய சமுதாய மாற்றத்தைச் சிந்தையள்ளி நெஞ்சம் கொள்ளை கொள்ளும் செந்தமிழில் வலியுறுத்திய செம்மையானார். பால், இன, பொருளியல் சழக்குகள் நிறைந்த முடை நாற்றமெடுக்கும் சமுதாயம் சமன்மை மணம் பெறப் பாடிய கற்பூரப் பெட்டகம் பாரதிதாசன்.

அடிக்குறிப்புக்கள் :

1. சி. கனகசபாபதி, பாரதி-பாரதிதாசன் ஒப்பியல் திறனாய்வு.
2. கட்டுரையாளர், ராஜம் கிருஷ்ணனின் புதினங்களில் சமுதாய மாற்றம் முனைவர் பட்ட ஆய்வேடு (அச்சாகவில்லை).
3. பாரதிதாசன் கவிதைகள் 3 ஆம் தொகுதி, ப.196.
4. பாரதிதாசன் கவிதைகள் எழுச்சியுற்ற பெண்கள், ப.114.
5. மேலது.
6. மேலது, குழந்தை மணத்தின் கொடுமை, ப.109.
7. மேலது, கைம்மைக் கொடுமை, ப.109.
8. மேலது, ஆய்ந்து பார், 144.
9. மேலது, மூடத்திருமணம் , ப.110.
10. மேலது, பெண்ணுக்கு நீதி, ப.117.
11. மேலது
12. மேலது.
13. மேலது, பெண்களைப் பற்றி பெர்னாட்ஷா, ப.104.
14. மேலது, இறந்தவன் மேற்பழி, ப.119.
15. குயிலி ராஜேஸ்வரி, " பெண்களும், புதுமை நோக்கும்", தினமணிச் சுடர் (8.5.83).
16. பாரதியார் கவிதைகள், பெண்கள்விடுதலைக்கும்மி, ப.499.
17. ராஜம் கிருஷ்ணன், ஓசைகள் அடங்கிய பிறகு, ப.285.
18. பாரதிதாசன் கவிதைகள், ப.99.
19. பாரதிதாசன் கவிதைகள், தளை ஆறு, ப.133.
20. மேலது, ப.134 .
21. மேலது, நீங்களே சொல்லுங்கள், 157.
22. மேலது, தொழிலாளர் விண்ணப்பம், 138.
23. மேலது, கூடித்தொழில் செய்க, 135.
24. மேலது, உலகப்பன் பாட்டு ப.147.
25. மேலது, வாழ்வில் உயர்வு கொள், 140.
26. மேலது, உலகம் உன்னுடையது, ப.149.
27. பாரதிதாசன் கவிதைகள் 3ஆம் தொகுதி, ப.190.
28. மேலது, பக்.220.
29. பாரதிதாசன் கவிதைகள், வாழ்வில் உயர்வுகொள், ப.139.
30. மேலது, மானிட சக்தி, ப.145.
31. மேலது, முன்னேறு, ப.146.

32. பாரதிதாசன் கவிதைகள் *3* ஆம்தொகுதி, ப.*196*.

33. மேலது, ப.*82*.

34. மு. கோவிந்தசாமி, பாரதிதாசன் கவித்திறன், ப.*183*.

35. மேலது, ப. *184*.

* * *

# பாவேந்தரும் திரைப்படத் துறையும்

இரா. இரகுபதி

மக்கள் தொடர்பியல் துறையில் திரைப்படத்துறை ஆற்றல் மிக்கது; மக்களின் உள்ளங்களை ஒரு சேர ஈர்ப்பது; இன்று அரசியல் சமூக பொருளாதார மாற்றங்களை ஏற்படுத்துவதற்கும் காரணியாக அமைந்து வருவது இத்துறையாகும். இத்துறையின் தொடக்கமாக 1931ஆம் ஆண்டு 'மகாகவி காளிதாஸ்' எனும் திரைப்படம் முதல் பேசும் தமிழ்த் திரைப்படமாக மலர்ந்த போதும் அதற்குப் பின்னும் அறுபத்தேழு ஆண்டுகால அதன் வரலாற்றில் வ.ரா. சது.சு.யோகியார், சத்தியமூர்த்தி, அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், கவிஞர் கண்ணதாசன் போன்றோரும் மற்றும் பலரும் இத்துறையை வளப்படுத்தியுள்ளனர். இத்துறையில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனும் திரைப்பட உரையாடல், பாடல் போன்ற பணிகளில் ஈடுபட்டிருந்தார் என்பது பலரின் கவனத்திற்கு வராத ஒன்றாகும். திரைப்படத் துறையில் புரட்சிக் கவிஞரின் பணிகளைப் பற்றி விவரிப்பதும், கணிப்பதும் பற்றிய சிறிய ஆய்வுக் கட்டுரையே இது.

### முதல் நுழைவு :

பாரதிதாசன் 'பாலாமணி அல்லது பாக்தாத் திருடன்' vன்ற திரைப்படத்திற்கே முதன் முதலில் 1937ஆம் ஆண்டில் திரைப்படப் பாடல்களை எழுதினார். இப்படம் வடுவூர் துரைசாமி ஐயங்காரின் நாவலை வைத்துப் படமாக்கப்பட்ட படமாகும். டி.கே. எஸ். நாடகக் குழுவினர் தயாரித்த இப்படத்தின் கதாநாயகன் எஸ்.வி. சகஸ்ரநாமம் அவர்கள். டி.கே.எஸ். அவர்களின் வேண்டுகோளின்படி பாரதிதாசன் அவர்கள் இப்படத்திற்குரிய பாடல்களை எழுதினார்.

ஈரோட்டில் இருந்து கொண்டு இப்படத்திற்குரிய பாடல்களை எழுதும் போது கவிஞர் அதிக ஈடுபாடு கொள்ளாமல் இலக்கிய விவாதங்களில் மூழ்கி விடும்போது, பாடல்களைப் பற்றி யாராவது நினைவுபடுத்தினால் 'அது கெடக்குதப்பா' எழுதினால் போச்சு..... சினிமா பாட்டுத்தானே' என்று தன்னம்பிக்கையுடன் எடுத்துரைத்தாகத் தெரிகிறது. இருப்பினும்,

> ஆலமரம் உச்சியில் அழகான சிட்டுக் கூட்டம்
>
> ஆணும் பெண்ணும் சகவாசம் பண்ணும்
>
> ஓலை பண்ணும் சலசலப்பில்
>
> உயர இருக்கையிலே
>
> உடல் துள்ளுதே இது
>
> பயம் கொள்ளுதே

என்று இனிய ஓசை நயம் மிக்க பாடல்களைப் பாடியுள்ளார்.

## இராமானுஜர் :

வைணவத்தில் புரட்சி செய்த 'இராமானுஜர்' திரைப்படத்திற்கு வசனம் எழுதிய வ.இராமசாமி என்ற தமிழறிஞராகிய வ.ரா. அவர்கள், அப்படத்திற்குரிய பாடல்கள் எழுத வாத்தியார் சுப்புரத்தினம் அவர்கட்கு அழைப்பு விடுக்கிறார். இராமானுஜரைச் சமூகச் சீர்திருத்தச் செம்மலாகக் கண்ட பாரதிதாசன் அழைப்பை ஏற்று,

வாழிய எழில்
பாரத நிலம்
வாழியவே! பாரத
வீரர் சமூகம்
. . . . . . . . . . . .
மாமுனிவர்கள் தீரர்
அரசரெலாம் வாழ்ந்தனர்
நமை ஈன்றறருளினார்
தூய்மை தவிர்
விரோதிகளெனில்
தோளுயர்த்துவோம் நாம்

என்று பாரத நாட்டின் பெருமையைச் சொல்லும் பாடலைப் பாடியுள்ளார் பாவேந்தர். இன்னும் 'மனிதர்கள் சமமே என்று சொல்வோம் வளரும் பேதத்தை வெல்வோம்' என்று தம் கவிதைகளில் வெளிப்படுத்திய கருத்தைத் திரைப்பாடல்களிலும் பாடி சமூக ஏற்றத் தாழ்வுகளைச் சாடுகின்றார்.

நாதசுர இசைப் பேரறிஞர் திருவாவடுதுறை என். ராஜரத்தினம் அவர்கள் கதாநாயகனாக நடித்த 'கவிகாளமேகம்' என்ற படத்திற்குப் பாடல்கள் எழுதும்போது, திருவாவடுதுறையார் மெட்டிசைக்கும் அதே நேரத்தில் அதன் அடியொற்றிப்பாடலை எழுதிக் காட்ட துள்ளிக் குதித்துக் கவிஞரைக் கட்டிப் பிடித்துப் பாராட்டுவார் நாதசுரமேதை. "அக்காலத்தில் புகழ்பெற்றிருந்த இந்திப்பட மெட்டுக்களில் பாடல்கள் எழுதி அலுத்து விட்டது. சொந்தமா எதாவது நல்ல இசையில் நீ பாடேன் டி.என்.ஆர்.? நான் எழுதுகிறேன் என்றார் கவிஞர். திருவாவடுதுறையார்க்கு மகிழ்ச்சி. நிமிர்ந்து உட்கார்ந்து கனடாவில் பாடிக் காட்டினார். சிலமணித் துணிகளில் பாட்டை எழுதி முடித்தார்கள், கவிஞர். 'கொஞ்சும் கிளிகள் பார்' என்ற பாடலைப் பாடிப்பாடிக் களிப்புற்றார் ராஜரத்தினம்".

கவிஞரின் மகனார் மன்னர் மன்னன் தரும் இந்நிகழ்ச்சிக்குறிப்பு பாரதிதாசன் அவர்களின் விரைந்து பாடல் எழுதும் ஆற்றலையும், அதே நேரத்தில் அப்பாடல்கள் இசைப் பேரறிஞரும் மகிழ்வுற்றுப் பாராட்டும் வகையில் அமைந்திருந்தது என்பதையும் இவ்வகையில் அறிய-முடிகிறது.

## திரைக்கதை வசனம் :

கவி காளமேகம், சதி சுலோசனா, ஆயிரம் தலை வாங்கிய ஆபூர்வ சிந்தாமணி, பொன்முடி, சுபத்ரா, வளையாபதி போன்ற திரைப்படங்களுக்குத் திரைக்கதை உரையாடல்களைப் பாவேந்தர் எழுதியுள்ளார்.

கவிஞரின் திரைப்பட உரையாடல்கள் மக்களின் உள்ளங்களைக் கவர்ந்தது என்பதை 'சுபத்ரா' திரைப்படம் வந்தபோது புதுவைத் திரையரங்கில் 'வாத்தியார் வெளுத்துக் கட்டியிருக்காரு' என்று மக்கள் வாய்விட்டுப் பாராட்டியுள்ளனர்.

### பொன்முடி :

எதிர்பாராத முத்தம் என்ற இவருடைய குறுங்காப்பியத்தைப் 'பொன்முடி' என்ற பெயரில் கவிஞர் கதை வசனம் எழுத அப்படம் பெரும் வெற்றியைத் தேடித் தந்த திரைப்படமாகும். இது மாடர்ன் தியேட்டர் நிர்வாகத்தால் வெளிவந்தது. இப்படத்தில்,

பொன்முடி : மனம்போல வாழ்வு; பூங்கோதை, யாழும் ஒலியும் போல் இருந்தோம். பாழும் பகைமையால் பிரிக்கப்பட்டோம் என்றாலும் ஒலி மறக்கவில்லை யாழை! சந்திரனை மறைக்கும் நேரம்.....

பூங்கோதை : எவ்வளவு நேரம் விலகாமல் இருக்கமுடியும்? காதலை அழிக்கும் சக்தி கட்டுப்பாட்டுக்கு ஏது அத்தான்? நம்மைப் பிரித்து வைக்கும் நம் மனதை என்ன செய்ய முடியும்.

பொன்முடி: அந்த உறுதியே நமக்குக் கலங்கரை விளக்கம்; நமது வாழ்வும் தாழ்வும் நம்பிக்கையில் தான்! கண்ணே! பருவகாலம் பூரண அழகைப் பாலித்து விட்டது நமக்கு"

இப்படி கவிதைத் தேன் சிந்த தம் முத்திரையைப் பதித்துள்ளார் பாரதிதாசன். இன்னும் 'பழத்தோட்டம் அங்கே, தீராப் பசிக்காரி இவ்விடத்தில்' போன்ற தம் குறுங்காவியத்தில் வரும் கவிதை வரிகளையே எழுதி சொக்க வைக்கும் உரையாடலைத் தந்துள்ளார்.

### வளையாபதி :

இவர் அடுத்து கதை, வசனம் எழுதிய படம் ஐம்பெரும் காப்பியங்களுள் ஒன்றான 'வளையாபதி'யாகும். பெருவாணிகன் வளையாபதிக்கும் - சுந்தரிக்கும் குழந்தை இல்லை. இரண்டாம் தாரமாக சத்யவதியை மணக்கின்றான். முதல் மனைவி சுந்திரியோ திருமணத்திற்கு இசைவு தெரிவித்திருந்தாலும் அவள் மனம் சத்யவதியை வெறுக்கிறது. அதனால் படிப்படியாக சத்யவதியை ஒழிக்க சூழ்ச்சிகள் செய்கிறாள் சுந்தரி. இதுதான் கதை. இக்கதையின் திரைக்கதை உரையாடலைச் சுவை குன்றாமல் எழுதியுள்ளார் கவிஞர். காட்டாக,

வளையாபதி : அவள்தான் இன்றைக்கு பரிமாறட்டுமே!

சுந்தரி : இளையாள் கைப்பட்டால் இனிப்பாக இருக்கும், உங்களுக்கு வரவர சுந்தரி கசந்து விட்டாள்.

வளையாபதி : கசப்பும் இனிப்பும் கையில் இல்லை - சுந்தரி நடக்கும் பண்பில் இருக்கிறது.

சுந்தரி : பண்பு கெட்டவள் நான்! அன்பு மிக்கவள் அவள்! அப்படித்தானே?

வளையாபதி : காமாலைக் கண்ணுக்குக் கண்டதெல்லாம் மஞ்சள் நிறம்.

சுந்தரி : ஆமாம்........ இப்போது என்னைப் பார்த்தால் உங்களுக்கு அப்படித்தான் தெரியும். சுவைத்து எறிந்த சக்கை நான். சுவைக்க வேண்டிய செங்கரும்பு அவள்! இல்லையா?

வளையாபதி : அப்படித்தான் வைத்துக் கொள்ளேன்.

கதையின் பாத்திரங்களுக்கேற்ப உரையாடலை எழுதிச் செல்வதில் ஆற்றல் மிக்கவர் என்பதை இதன் மூலம் அறிய முடிகிறது. மேலும் நடைமுறையில் நம்பமுடியாத பல அதீத கற்பனைகள் கொண்ட ஒரு திரைப்படத்திற்குள் அடக்க முடியாது என்று எண்ணியிருந்த 'ஆயிரம் தலை வாங்கிய அபூர்வ சிந்தாமணி' யின் கதையைச் சுருக்கி, அதன் சுவை குன்றாது, தாம் எழுதிய உரையாடல்கள் மூலம் வெற்றிப்படமாக்கியுள்ளார் கவிஞர். தமிழிலேயே மிக நீளமான படம் இது தான்.

ஆனால் இந்தப்படத்தின் வெற்றி சுயமரியாதை இயக்க வட்டாரத்தில் சூடேற்றி விட்டது. 'புராண இதிகாசங்களை முழுமூச்சில் எதிர்க்கும் பாரதிதாசன், இம்மாதிரியான கதைகளுக்குப் பணியாற்றலாமா என்று கேட்ட போது "மக்களிடையே செல்வாக்குப் பெற்றுவரும் திரைப்படத்துறையில் ஒரு நுழைவு ஏற்படுத்தியிருக்கிறேன். பிராணநாதா, ஸ்வாமி, சஹியே, தவசிரேஷ்டரே போன்ற சொற்களை நீக்கி அருந்தமிழில் 'அத்தான்', 'தோழி', 'குருவே' என்று அழைக்க வைக்கிறேன். அசுரர்களாகக் காட்டப்பட்டு வந்தவர்களைத் தமிழறிந்த இரக்க சிந்தை உடையவராகப் படைத்திருக்கிறேன். இந்தத் தொடக்க நிலையில் இதைத்தான் செய்ய முடியும். இன்னும் முன்னேறி முற்போக்குக் கருத்துக்குச் சிறப்பான இடம் பிடிக்க முடியும்" என்று பதிலளித்தார் பாரதிதாசன்.

### தமிழ்நாட்டில் சினிமா :

பாரதிதாசன் தமிழ்நாட்டுத் திரைப்படங்களில்

> ஒன்றேனும் தமிழர் நடை யுடை பாவனைகள்
> உள்ள துவாய் அமைக்கவில்லை; உயிர் உள்ளதில்லை!
> ஒன்றேனும் தமிழருமை உணர்த்துவதா யில்லை
> ஒன்றேனும் உயர்நோக்கம் அமைந்தது வா யில்லை
> ஒன்றேனும் உயர்நடிகர் வாய்ந்தது வா யில்லை
> ஒன்றேனும் வீழ்ந்தவரை எழுப்பு வதில்லை

என்பதையும், தமிழ் நாட்டுத் திரைப்படங்கள் வட நாட்டார் போன்ற நடை, வட நாட்டார் மெட்டு, மாத்தமிழர் நடுவினிலே தெலுங்கு கீர்த்தனைகள், வடமொழிச் சுலோகங்கள் ஆங்கிலப் பிரசங்கம், வாய்க்கு வரா இந்துஸ்தான், ஆபாச நடனம் போன்ற குறைகள் நிறைந்தனவாய் உள்ளன; எல்லாம் பாழ்படுத்தும் முதலாளிவர்க்கத்தின் செயல் என்று பாடி வருந்துகின்றார். இக்குறை தீர பயன்தரும் முறையில் பல செல்வர்கள் கூடி, சுயநலம் அகற்றி இதயத்தில் அன்புதனைச் சேர்த்துப் படம் எடுக்க வேண்டும். அப்போது தான் 'செந்தமிழ் நாடென்னும் இளமயிலும் படமெடுத்தாடும். தமிழர் பங்கமெல்லாம் போகும்' என்ற நம்பிக்கையை வெளிப்படுத்துகின்றார்.

இப்படி திரைப்படத்துறையை முழுமையாகத் திறனாய்வு செய்து வெளிவந்த முதற்கவிதை இதுவாகத்தான் இருக்கும்.

கவிஞர் திரைப்படத்துறையில் ஈடுபடுவதற்காக, சென்னை வந்து 'பாரதிதாசன் பிக்சர்ஸ்' என்ற திரைப்பட நிறுவனத்தை நிறுவி 'பாண்டியன் பரிசு' என்ற வரலாற்றுக் காவியத்தைப் படமாக்கத் திட்டமிட்டு படம் பிடிக்கும் இடங்களை யெல்லாம் தேர்வு செய்தார். பாண்டியன் பரிசுத் தலைவனும் தலைவியும் ஒன்று கூடி ஆடிப்பாடுவதாக

விடியும் போது விடியட்டுமே
வெண்ணிலவே! பொழுது
விடியும்வரை அழுத மழை
வெண்ணிலாவே

என்று பாடலையும் இயற்றினார். ஆனால் பாவேந்தரின் இம்முயற்சி ஈடேறவில்லை.

அதன் பின் பாரதியார் வாழ்க்கையைத் திரைப்படமாகத் தயாரிக்கும் முயற்சியில் 'குரு பிக்சர்ஸ்' என்னும் நிறுவனம் தொடங்கப் பெற்றது. தம் நண்பர் விருதுநகர் சம்பந்தம் அவர்களைக் கவிஞர் தமக்கேற்ற வகையில் திசை திருப்பி விட்டார். குருபிக்சர்ஸ் பெயரில் 'பாரதியார்' திரைப்படம் பற்றி இதழ்களில் விளம்பரமும் வெளிவந்தன. இத்திரைப்படம் பற்றி பொதுவுடைமை இயக்கத்தலைவர் ப. ஜீவானந்தம் அவர்களின் உறவினர் யோகானந்தம் அவர்களுக்குப் பாரதிதாசன், சமீப காலம் வரை வாழ்ந்திருந்த ஒருவர் பாரதியார். ஆதலால் அவர் போல ஒருவரைத் தேடியாக வேண்டும். இது முக்கியம். அன்றியும் அரவிந்தர் முதலிய வேடத்திற்கும் ஆள் தேட வேண்டும். கம்பெனியில் ஷேர் எடுப்பதன் மூலம் ஆதரவு தருவோரை தேடித் தருவீர்கள் என்று நம்புகிறேன். இது தேசீயப் படம்; சமூகப்படம். பொது நன்மைக்கான உயர்ந்த தொண்டு, தமிழார்வம், நாட்டுநலம் விரும்புவோர் இதில் பங்கெடுத்துக் கொள்வார்கள்" என்று கடிதம் எழுதியுள்ளார். மேலும் பாரதியாராக நடிக்க பாரதிதாசனால் கண்டுபிடிக்கப்பட்டவர் பெயர் எஸ்.எஸ்.மாரிசாமி. அப்போது செய்தி இதழ் ஒன்றின் தொடர்பாளராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார். ஆனால் குரு திரைப்பட நிறுவன பங்குதாரர்களுக்குள் குழப்பம் ஏற்படவே, நிதி உதவியின்றி பாரதியார் வரலாற்றுத் திரைப்பட முயற்சியும் கைகூடவில்லை.

## முடிவுரை :

ஆனால் "போகாத வழியில் போய்க் கொண்டிருக்கும் திரைப்படத்துறையை நமது தமிழ்ச் சமுதாயத்துக்குப் பயன்படும் சீர்திருத்த புரட்சிக்கூடமாக மாற்ற வேண்டும்" என்ற கருத்தோடு பாவேந்தர் செயல்பட்டார். பாரதிதாசன் அவர்களின் இலக்கு திரைப்படத்துறையில் வந்திருந்தால் அத்துறை மேலும் துலக்கமாயிருக்கும். எனினும் பாரதிதாசன் திரைப்படப் பாடல்களில் வடசொல் கலப்பற்ற இனிய பாடல்களையும், உரையாடல்களில் வளமிகு செந்தமிழ் நடையையும் எழுதித் தொண்டாற்றியுள்ளார் என்பது வெள்ளிடைமலை.

* * *

## பயன்பட்ட துணை நூல்கள்


1. அறந்தை நாராயணன் - தமிழ்ச் சினிமாவின் கதை முதற்பதிப்பு: நவம்பர் 1987, நியூ செஞ்சரி புக் ஹவுஸ், சென்னை-600 098.
2. அறந்தை நாராயணன் - சுதந்திரப் போரில் தமிழ் சினிமா முதற்பதிப்பு - 1988, நியூ செஞ்சரி புக் ஹவுஸ், சென்னை-600 098.
3. டி.வி.ராமநாத் - திரை வளர்த்த தமிழ் முதற்பதிப்பு - 1987, டி.வி.டி பப்ளிஷர்ஸ், சென்னை-17.

4. மன்னர் மன்னன் - கறுப்புக் குயிலின் நெருப்புக் குரல் முதற்பதிப்பு-1985. முத்துப் பதிப்பகம், விழுப்புரம்-605 062.

5. முருகு சுந்தரம் - பாவேந்தர் நினைவுகள் முதற்பதிப்பு, 1979, அகரம், சிவகங்கை.

6. முருகு சுந்தரம் - அரும்புகள் மொட்டுகள் மலர்கள் முதற் பதிப்பு, 1980, அகரம், சிவகங்கை.

7. முல்லை முத்தையா - பார்புகழும் பாவேந்தர் முதல் பதிப்பு, 1984, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் , சென்னை-600 098.

8. பாரதி விழா சிறப்பு மலர் - தமிழ்நாட்டு கலை இலக்கியப் பெருமன்றம், 1988, குமரி மாவட்டம்.

* * *

# தமிழ்த் தேசியக் கவிஞர் பாரதிதாசன்

தெ. திருஞானமூர்த்தி

மொழியும் உழைப்புமே மனிதனைப் பிற விலங்குகளிடமிருந்து வேறுபடுத்திக் காட்டும் தனிக் கூறுகள் எனலாம். புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் மொழியை மூச்சாகக் கொண்டு வாழ்ந்த பெருமைக்குரியவர். உழைப்பு வாழ்விற்கு அடிப்படையானது. அது சமூக மாற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் அடிப்படையாய் அமைகிறது. இந்த உழைப்பை மக்களுக்குள் சரிப்படுத்தவும் சமூகத்தைச் சமப்படுத்தவும் கொடுக்கப்பட்ட குரலே பாரதிதாசனின் மொழிக்குரல் ஆகும்.

1891இல் பிறந்த பாரதிதாசன் தொடக்க காலத்தில் இந்திய தேசீய விடுதலைக்காக கதர், இராட்டினப் பாடல்களைப் பாடினார்.

> "அன்னியர் நூலைத் தொடோம்" என்ற சேதி
> அறைந்திடடா புவி முற்றும் - எங்கள்
> அறுபது கோடித் தடக்கைகள் இராட்டினம்
> சுற்றும் - சுற்றும் - சுற்றும்
>
> (பாரதிதாசன் கவிதைகள் - IV , ப.208)

என்று இந்திய தேசியத்தை வலியுறுத்திப் பாடிய புரட்சிக்கவிஞர் தமிழ்த் தேசியக் கவிஞரானது சமூகத்தின் போக்கில் ஏற்பட்ட இயங்கியல் மாற்றமாகும்.

பார்ப்பனீய மேலாதிக்கமே தமிழ் உணர்வுக்கு வித்திட்டது. பெரியாரால் கொண்டு வரப்பட்ட "வகுப்புரிமைத் தீர்மானங்கள் தொடர்ந்து தோற்கடிக்கப்படுகின்றன. 1919, 1920, 1921, 1922, 1923, 1924 ஆகிய எல்லா ஆண்டுகளிலும் காங்கிரசு மாநாடுகளில் இந்த வகுப்புரிமைத் தீர்மானங்கள் தொடர்ந்து தோற்கடிக்கப்பட்டன. அதன் பிறகு, தந்தைபெரியார் அவர்கள் இனிக் காங்கிரசில் எனக்கு வேலை இல்லை என்று கூறி வெளியேறுகிறார்", எனவே இச் சூழல் மாற்றத்தில் இந்திய தேசியம் பாடிய பாரதிதாசனும் இந்நிலைப்பாட்டை அங்கீகரித்துச் சமூக விடுதலையை முன் வைக்கிறார்.

இந்தியர்களுக்கு முதன்மை முரண்பாடாக நிலவும் மொழியும், சாதியும் கவிஞரை மிகவும் பாதித்தது. இம்முரண்பாட்டிற்கு அன்றைய அரசியல் இயக்கங்களான தென்னிந்திய நலவுரிமைச் சங்கம், நீதிக்கட்சி போன்றவை முக்கியத்துவம் கொடுத்தன. அதன் விளைவு அரசியல் விடுதலையை விட சமூக விடுதலையே முதன்மையானது என்ற கருத்தை மேலும் வலுப்பெறச் செய்தது. "அரசியல் விடுதலை மட்டுமே ஒரு நாட்டு மக்களின் வாழ்வில் மறுமலர்ச்சியை ஏற்படுத்தி விடுவதில்லை; சமுதாய விடுதலையும் வேண்டும்.

சொல்லப்போனால், சமுதாய விடுதலை என்பதே இறுதி இலட்சியம் அதை அடைவதற்கு நாம் புடையும் முதல்படிதான் அரசியல் விடுதலை"[2] என்பர்.

பன்னெடுங்காலமாக அடக்கி ஒடுக்கப்பட்ட பெரும்பான்மை மக்களுக்கு ஆங்கிலேய அரசால் சிறு நன்மைகள் ஏற்பட்டன. சாதிக்கொரு சட்டம் என்கிற நிலையை மாற்றி எல்லோருக்கும் ஒரே சட்டம் என்ற நிலையை ஆங்கிலேய அரசு கொண்டு வந்தது. மேலும் அவர்கள் மொழி ஆய்வும் தமிழர்கள் எழுச்சிபெற உதவியது. ஒன்று ஆங்கிலேய அரசால் சிறு நன்மைகள்; இரண்டு மொழி ஆய்வுகள் வழி வெளிப்பட்ட ஆய்வு முடிவுகள் இரண்டும் பார்ப்பன ர்- பார்ப்பனர் அல்லாதார் முரண்பாட்டை ஆரிய திராவிட அல்லது தமிழ் முரண்பாடாகக் கூர்மைப்படுத்தியது. பார்ப்பன எதிர்ப்புணர்ச்சி முதன்முதலில் தமிழ்நாட்டிலோ அல்லது தமிழ்நாட்டில் மட்டுமோ ஏற்பட்டதன்று, " இந்தப் பார்ப்பன எதிர்ப்புணர்ச்சி என்பது முதன் முதல் தமிழ்நாட்டில் தோன்றவில்லை. மகாராஷ்டிரத்தில்தான் முதன் முதலாக இந்த உணர்ச்சி தோன்றுகிறது"[3] என்பர். எனவே மொழி உணர்வும் சாதி எதிர்ப்பும் காலத்தின் தேவை எனலாம்.

மொழி என்பது மனித மனங்களைத் தட்டி எழுப்பும் ஆற்றல்மிக்க கருவி எனலாம். மொழி உணர்வு என்பது உயிருடம்பில் இரத்த ஓட்டம் போன்றது. சாதி, சமயம், பொருளாதாரம் போன்றவற்றால் வர்க்கங்களாகப் பிரிந்து கிடக்கும் சமூக அமைப்பில் ஏனைய உணர்வுகள் அடிப்படையில் மக்களை அணிதிரட்டுவது என்பது கடினமானதாகும். "மொழி என்பது மாந்தனின் உள்ளுயிரில் தோன்றி, உணர்வு வளர்ச்சிக்கேற்ப முகிழ்த்து ஒலி வடிவாய் வெளிவரும் ஓர் இயற்கை வெளிப்பாடு.... அஃது ஒரு சொற் கூட்டமென்றோ, வெறும் கருத்தைப் பரிமாறிக் கொள்ளும் கருவி மட்டுமென்றோ கொள்ளாது மக்களினத்தின் உள்ளுணர்வுகளோடு பின்னிப் பிணைந்து, பண்பாட்டால் அவ்வினத்தை வளர்த்தெடுக்கும் ஒரு வாழ்வியல் கூறு என்று அறிந்து கொள்ளுதல் வேண்டும்."[4] இந்நிலையை நன்குணர்ந்த புரட்சிக்கவிஞர் மொழிப் பெருமை பேசுகிறார். மாறாக பிறரை அடிமைப்படுத்துவதற்கோ, ஏளனப்படுத்துவதற்கோ அவர் குரல் அமையவில்லை.

> ஒரு மொழியால் ஓர் இனமாம் - அவ்
> வோரினமே ஒரு நாடாம்
> ஒரு நாடின்னொரு நாட்டைப் - போய்
> ஒடுக்குதல் ஒப்பாய் வாவா
>
> ஒருவன் வாழ ஒருவன்
> உழைக்க வேண்டும் என்னும்
> இருளைப் பிளப்பாய் வா வா - இங்
> கெவர்க்கும் ஒளியே வா வா.

(வேங்கையே எழுக, ப.18)

என்பதே புரட்சிக்கவிஞரின் எண்ணமாகும். எவன் காலிலும் வீழ்ந்து கிடப்பதும் எவன் தோளிலும் ஏறி அமர்வதும் குற்றமென்பதே பாரதிதாசன் கருத்தாகும். தன்மானத்தோடு வாழும் ஒருவனால்தான் பிறரின் மானத்தைப்பற்றியும் உணரமுடியும். ஆனால் சீமூக நடப்பு நிலைமையோ சாதி சமூக மதிப்பையும் பாதிக்கிறது.

"வாய்ப்பந்தல் போட்டு வெறும் வார்த்தைகளால் மழுப்பாமல் உண்மையான பொருளா-

தாரச் சுதந்திரம் ஏற்பட அபேதவாதிகள் அந்தரங்க சுத்தியாக விரும்பினால் சாதி உயர்வு தாழ்வை ஒழிக்கத்தான் வேண்டும். எனவே, சமூகச் சீர்த்திருத்தம் செய்யாமல் புரட்சி நடத்தவே முடியாது, ஒருக்கால் எதிர்பாராமல் புரட்சி வெற்றி பெற்றாலும் அவனது உண்மையான இலட்சியம் கைகூடவேண்டுமானால் சமூகச் சீர்திருத்தம் செய்துதான் ஆகவேண்டும்"[5] என்பர். அவ்வடிப்படையில் எழுந்ததே பாரதிதாசனின் பார்ப்பனிய எதிர்ப்பும் சாதி எதிர்ப்புமாகும்.

பாரதிதாசனின் மொழி உணர்வும் சாதி எதிர்ப்பும் தமிழின விடுதலையை அடிப்படையாகக் கொண்டதும் நிலவுடைமைக்கு எதிரானதுமாகும். "சாதியத்தின் ஆழமான பிடிப்பையும் இங்குள்ள தேசிய இனங்களின் தனித்தன்மைகளையும் கணக்கில் எடுத்துக் கொள்ளவேண்டும். இவற்றையெல்லாம் புறக்கணித்து ஒன்றுபட்ட பாரதம், வழிவழிப்பட்ட இந்தியப் பண்பாடு என்ற கிளிக்கூண்டுகளுக்குள் நின்று கொண்டு பெரியாரைப் புரிந்து கொள்ளமுடியாது"[6] என்ற கருத்து பாரதிதாசனுக்கும் பொருந்தும். "தமிழகத்தில் ஊன்றப்படுகின்ற மார்க்சியமும் பாட்டாளி வகுப்புப் புரட்சியும் தமிழ்த் தேசியத்துடன் ஒன்றிக் கலப்பதனால் மட்டுமே தமிழகம் ஒரு புரட்சியைக் காணமுடியும்"[7] என்பர். இக்கோட்பாட்டிற்கிணங்கவே பாரதிதாசன் பாடல்கள் தமிழ்த்தேசியத்தை வலியுறுத்துகின்றன.

தமிழுக்கு விலங்கிட்டுத் தாயகம் பற்றி
நமக்குள உரிமை தமக்கென் பர்எனில்
வழிவழி வந்த உன் மறத்தனம் எங்கே?
மொழிப்பற் றெங்கே விழிப்புற் றெழுக

*(பாரதிதாசன் கவிதைகள் தொகுதி-II, ப.113)*

என்று அடிமை நிலை அகற்ற எழுப்பப் பெற்ற குரலே பாரதிதாசன் குரலாகும்.

அடிமைப்பட்டுக் கிடக்கும் தமிழ்த் தேசிய இனம் எழுச்சி பெற வேண்டும் என்ற ஆவேசத்தில் நம்மொழி மீது சவாரி செய்யும் பிற மொழியைத் தாக்குகிறார். மொழி எழுச்சியும் பிறமொழித்தாக்குதலும் நிகழ்ந்துவிட்ட நிலையில் பிற இனக் கலாச்சார எதிர்ப்பும் அதற்குள் வந்துவிடுகிறது.அன்றைய நிலையில் ஆரியக் கலாச்சாரமே மிகுதியும் தமிழர் மீது ஆதிக்கம் செலுத்தியதாலும் ஆரியர்களே அனைத்துத் தரப்புகளிலும் மேலாண்மைக்காரராக இருந்தாலும் கவிஞரின் குரல் பீரங்கியாக வெடிக்கிறது. இது காலத்தின் கட்டாயம்.

பாரதிதாசனின் இலக்கு சர்வதேசியம் என்ற நோக்கை உடையது. கவிஞர் வாழ்ந்த கால சமூக முரண்பாடு இதில் மிகுதியும் ஈடுபாடு கொள்ள இடம் தரவில்லை என்றாலும் அவரது சர்வதேசியப்பார்வைக்கு ப் பின்வரும் பாடலே தகுந்த சான்றாகும்.

உரத்தினிலே குண்டுபுகும் வேளையிலும் மக்கள்
உயிர்காக்கும் மனப்பான்மை உண்டாக்க வேண்டும்
பெருநிலத்தார் எல்லோரும் ஒருதாயின் மக்கள்
பிறர்தமர் என் றெண்ணுவது பேதமையே அன்றோ

*(பாரதிதாசன் கவிதைகள் - II, ப.109)*

'அனைவரும் உறவினர்' 'ஆட்சியைப் பொதுமை செய்' என்பதுதான் பாரதிதாசனின் உள்ளம். வர்க்கங்களாகப் பிரிந்து கிடக்கும் சமூக அமைப்பில் கவிஞனின் படைப்பு என்பது காலத்தின் சவுக்காகத்தான் இருக்கமுடியும். மாறாக எல்லோரும் நல்லவர் என்ற கிழட்டு வேதாந்தமாக இருக்க முடியாது. இருக்கவும் கூடாது. வர்க்க சமுதாயத்தில் வர்க்க அன்பே தலையானது-மகத்தானது.

### அடிக்குறிப்புக்கள்

1. பொற்கோ, தமிழ் உணர்ச்சி தமிழ் வளர்ச்சி தமிழ் ஆட்சி, ப.26.
2. மா.இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப.37.
3. பொற்கோ, தமிழ் உணர்ச்சி தமிழ்வளர்ச்சி தமிழ் ஆட்சி, பக்கம் 23-24.
4. பெருஞ்சித்திரனார், 'தனித்தமிழ் இயக்கத் தோற்றமும் வளர்ச்சி வரலாறும்' ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு விழா மலர், ப.353.
5. பி.ஆர்.அம்பேத்கார், சாதியை ஒழிக்க வழி, ப.39.
6. இன்குலாப், மதிப்புரை , முதல் குடியரசு - சில பிரச்சினைகள் சில விமர்சனங்கள், ப.6.
7. .குணா, இந்தியத் தேசியமும் திராவிடத் தேசியமும், ப.24.

* * *

# கவிதையிலே சாடியவன்

கவிஞர் அறந்தை இறையரசன்

பொட்டிழந்து, பூவிழந்து விதவை என்றே
புராணத்தால் அலைக்கழிக்கப் பட்ட பெண்கள்
விட்டிருந்த மரியாதை மீண்டும் கொண்டு
வந்தவன்யார்? பாவேந்தன் அன்றோ! மூடர்
கட்டுவித்த பொய்க்கதையை கட்ட விழ்த்துக்
கவிதையிலே சாடியவன் பாவேந் தன்,தான்!
நெட்டிருப்புப் பாறைக்கு நெக்கா மலையாய்
நிலைத்திருந்த மூடத்தனம் தூளாக் கிட்டான்!

உள்ளிருந்தே கொல்லுகின்ற நோயைப் போலே
ஊடுருவி சாதிவெறி சமுதா யத்தில்
செல்லரிக்கும் செல்லரிப்பைத் தடுத்தான்; இந்த
செகம்அவனை எதிர்த்தாலும் சோர்ந்தி டாமல்
சிந்தையிலும் செயலினிலும் துணிந்தே நின்றான்
சிங்கத்தின் சீற்றம்போல் அடிமை வாழ்வை,
தீண்டாமை தனைஎதிர்க்கப் புறப்பட் டன்று
தெருவெங்கும் பகுத்தறிவு ஒளியைத் தந்தான்!

தொட்டுவரும் வரிகளெல்லாம் பாட்டுக் குள்ளே
துளைக்கின்ற துப்பாக்கிக் குண்டாய்; மேன்மை
கெட்டிருக்கும் சமுதாயப் போலி வாழ்வைக்
கிழித்தெறிந்து மனமாற்றப் புரட்சி செய்தான்

வல்லன்மை யோடேநம் நாடு இன்று
வாழ்வதற்கு அவனும்ஓர் கார ணம்தான்!
தெள்ளுதமிழ்ப் பாட்டாலே நீரைப் பாய்ச்சிச்
சீர்திருத்தம் செய்வித்த பெருங் கவிஞன்!

மதமென்னும் மதம்பிடித்த மதத்தா ருக்கும்
மனமாற்றம் அளித்தவனும் பாவேந் தன்,தான்!
மனிதர்களை மதிக்காத மதத்தால் நமக்கு
மரியாதை ஏதும்உண்டா? நன்மை உண்டா?
மதம்நமக்கு ஏன்என்றே வினவ லானான்
மடமைகளை மனிதர்க்கு எடுத்துச் சொன்னான்
உடமைகளைப் பொதுவாக்கி ஏழை மக்கள்
உரிமைதனைக் காப்பதற்கு வழி வகுத்தான்

கல்லாத பெண்களுக்குக் கல்வி என்னும்
கண்ணொளியைத் தந்தவன்யார்? கனக-சுப்பே!
நல்லநிலை அடைவதற்குக் குடும்ப பெண்கள்
நலம்பாடிச் சிறப்பித்தோ னும்தான், அவனே!
தொல்லைகளால் சூழ்ந்தாலும் வாழ்வில் எந்தத்
துயரங்களும் அவனைஅழித் திடவே இல்லை!
நற்றமிழின் சுவைநாளும் அருந்தி நமக்கு (ம்)
நறுந்தேனைப் பிழிந்துவைத்த கவிஞன் வாழி!



# நடப்பில் படிப்பு

கவிஞர்கோ கோவை. இளஞ்சேரன்

செல்லன்:

கீரிப்பிள்ளை கோலிவரக் கூடைக்குள்ளே தூங்கும்பாம்பைத் தொட்டே,
சீறிப்பாயப் படமெடுக்கச் சீண்டித்தூண்டி நிற்கவைத்து விட்டே,
சின்னவிளை யாட்டுச்சண்டை காட்டி — சில
சில்லரைக்கே ஓட்டைத்தட்டை . நீட்டி
பண்ணுகின்ற வித்தையொன்று பாராய்! — செல்லி,
பட்டறியும் பாடமுண்டோ கூறாய்?

செல்லி:

மோதிக்கொள்ளும் கட்சிகளின் முந்திக்கொண்டு மேடைபிடி சண்டை;
ஓதிக்கொண்ட உள்ளறையில் ஊதிக்கொண்ட ஊரறியும் தொண்டை,
மூன்றுபத்திச் சேதியிட்டுக் காட்டி — அதில்
மூவண்ணத்தில் அட்டைப்படம் தீட்டி
தோன்றுகின்ற இதழின்விளை யாட்டு, — செல்லா
தோய்ந்துவிட்டோம் நம்மகாசைப் போட்டு.

செல்லன்:

கொட்டையொன்று சுட்டிக்காட்டிக் கூடைக்குள்ளே மூடிவைத்த பின்னே!
நட்டுவிட்ட ஒட்டுக்கன்றை நாமும்காணக் காட்டிடுவான் முன்னே,
நட்டகன்றை வாங்கிவந்து வீட்டு — சிறு
நல்லதொரு தோட்டத்திலே போட்டு
ஒட்டுக்கனி தின்றதுண்டோ செல்லி? — இதை
ஒத்தபொரு ளைவிளக்கு சொல்லி!

செல்லி:

காலைக்காட்டித் தோளைக்காட்டிக் காளைகன்னி கட்டிக்கொள்ளும் தழுவல்;
சோலைகாட்டிச் சண்டைகாட்டிச் சொக்குதிரைப் படம்காட்டும் புளுகல்;
நாட்டிற்கிதில் தேட்டமேதும் இல்லை; — நம்
வீட்டிற்குள்ளே வீண்வளரும் தொல்லை;
வேட்டுவைத்தல், கற்பழிப்பு, கொள்ளை — செல்லா,
வீண்செலவு வேறுபயன் இல்லை.

செல்லன்:

தேயிலையில் சோளத்தட்டை தேக்கிவைத்த குப்பை, சாயம் கலப்பார்;
காய்மிளகில் கண்டவிதை, காடிஎண்ணெய் நல்லெண்ணெயில் அளப்பார்;
கொண்டுசெய்யும் இந்தவேலை குற்றம்; — அதில்
கூடியுள்ள கொட்டியார் சுற்றம்;
கண்டுவிட்டால் கட்டாயமாய்ச் சிறையே — செல்லி
கண்டபாடம் உண்டெனில்சொல் முறையே!

செல்லி:

நந்தமிழில் சொல்லிருக்க வந்தமொழி ஆங்கிலத்தைக் கலப்பார்;
செந்தமிழை எற்றியதாம் அந்தவட மொழிஅதிகம் அளப்பார்;
நந்தமிழ்ச்சொல் தேடிப்பார்க்கக் கதைப்பார்; — மொழி
நையக்கலப் படக்குற்றம் விதைப்பார்;
எந்தவகைக் குற்றக்கூண்டும் இல்லை; — செல்லா
என்றைக்கிதை மாற்றுவதோ தொல்லை?

செல்லன்:

கன்றிரண்டைப் போட்டமாடு கன்றிரண்டும் கொண்டபசி தீர்க்கும்;
ஒன்றுதைத்துத் தள்ளிவிட்டு ஒன்றுமட்டுமோ குடிக்கச் சேர்க்கும்?
பசிக்குள்ளே உண்டோவேறு பாடு? — ஒத்த
பரிவன்றோ கொண்டதந்த மாடு,
ஒசிந்தொன்றை நக்கிவிட்டுச் செல்லி — ஒன்றை
உதைக்காமல் விட்டதேனோ சொல்வாய்?

செல்லி:

மருமகள்தான் மாய்ந்துவிட மகனுக்கில்லை வாழ்வெனவே நெகிழ்ந்து,
உருகிவிட்ட அப்பனவன் ஓடியாடி மருகிபெற்று மகிழ்ந்தான்;
மருமகன்தான் மாய்ந்துவிட மகட்கே — ஒரு
மறுமணத்தை எண்ணவில்லை அவட்கே
உருகாத அப்பனைநீ செல்லா — உடன்
உதைக்காமல் விட்டதேனோ சொல்லாய்?

செல்லன்:

தென்றலிலே குளிரில்லை; தோப்பினிலே நிழலில்லை; சரியா?
மன்றலிலே மகளில்லை; மயிலாட்டம் தோகையில்லை; சரியா?
இயற்கையெலாம் இப்படியே செத்தால் — யார்
இரங்கிநின்று ஒப்பாரியே வைத்தார்?
துயர்க்குரலாய்த் தமிழகத்தில் ஏதும் — செல்லி
துய்த்ததுண்டோ உன்னுடைய காதும்?

செல்லி:

பாவேந்தர் நூற்றாண்டுப் பாட்டெடுக்கும் மேடையிலே முந்தி,
பாவேந்தர் ஏறிவந்து பதுங்கியோர் மூலையிலே குந்தி
வைத்துவிட்ட ஒப்பாரியைக் கேட்டேன் — அந்த
வயிற்றெரிச்சல் நான்பொறுக்க மாட்டேன்
வைத்திடவா ஒப்பாரியின் சொல்லை? — செல்லா,
"தமிழ்த்தெருவில் தமிழ்தானே இல்லை"

* * *

# பாவேந்தர் பாட்டின் பயன்

சோதிதாசன்

புதுவையிலே பிறந்தகவிச் சிங்கம்!
புகன்றபல பாக்களெலாம் தங்கம்!
மதுநிகர்த்த உயர்கருத்தால்;
மடமையினை ஒழித்தவன்
சொற்கள்! — வைரக்
கற்கள்!

பாட்டினிலே பெய்துவிட்டான் தேனை!
பகுத்தறிவால் கூட்டிவிட்டான் சேனை!
ஏட்டினிலே தமிழுணர்வை;
எடுத்தியம்பிக் காட்டிவிட்டான்
இன்பம் — ஒழியும்
துன்பம்!

பகையினையே எதிர்த்துநின்றான் வீரன்!
பழையநடை அகற்றிவிட்டான் சூரன்!
நகைச்சுவையைக் கவிதைகளில்;
நன்கமைத்து நமையிழுக்கும்
காந்தன்! — பாட்டு
வேந்தன்!

பாடிவைத்தான் எத்தனையோ சிந்து!
படித்தறிந்து நடந்துகொள்ள முந்து!
நாடிவரும் சீர்திருத்த
நற்கருத்தோ; நெஞ்சகத்தில்
தங்கும்! — மகிழ்ச்சி
பொங்கும்!

கவிதையிலே கனிச்சுவையைப் பெய்தான்!
கருத்தினிக்கும் காப்பியங்கள் செய்தான்!
புவிவியக்கும் புரட்சிநடைப்
பொதுவுடைமைப் பாத்தொடுத்து;
வந்தான்! — ஒளியைத்
தந்தான்!

உயர்கவிதை வான்புகழைத் தொட்டான்!
உவமைவிதை பாநிலத்தில் நட்டான்!
இயற்கையிலே அவன்படைத்த
இலக்கியங்கள் இவ்வுலகில்;
வாழும்! — நலங்கள்
சூழும்!

* * *

# என்னைக் கவர்ந்த கவிஞர்

இ. கோவிந்தராஜுலு

"இதயத்தெழுவது கவிதை! எங்கும் எதிரொலிப்பது கவிதை" எனறான் தமிழ்க் கவிஞன் ஒருவன்.

வாழ்வின் வனப்பு, விந்தைகள், ஏன் அதன் பயங்கர சக்திகள் இவை மனிதனிடத்தில் விளைவிக்கும் தாக்கத்தின் பிரதி பலிப்பு சொல்லோவியமாக வெளிப்படுவதுதான் இலக்கியம் என்பது என்கிறார், அறிஞர் ஒருவர்.

உண்மைதான், இலக்கியம் என்பது வெறும் கற்பனைப் படைப்பு மட்டுமல்ல, மனித வாழ்க்கையுடன் பின்னிப் பிணைந்து ஒன்றியிருப்பது. இலக்கியத்தின் இதயம் எனப்படுகிற கவிதை மனித வாழ்க்கையுடன் மலரும் மணமும் போல ஒன்றென பரிமளிப்பது என்றால் மிகையாகாது.

இந்தியத்திருநாட்டின் இலக்கிய கர்த்தாக்கள், குறிப்பாகக் கவிஞர்கள் தம்மை இயற்கைத் தாயின் சேய்களாகத்தான் பாவித்து ஐக்கியப்பட்டனர். பாதை ஒன்று. அதன் இருபுறமும் மனிதர்கள் இருவர் நிற்கின்றார்கள். மேனாட்டாரின் பார்வையில் பாதை அவ்விருவரையும் பிரித்திருக்கிறது எனத் தோன்றும் ; ஆனால் இந்தியன் - குறிப்பாக கவிஞன் குரல், "இல்லை, அந்தப்பாதை அவ்விரு மனிதர்களையும் ஒன்று சேர இணைத்திருக்கிறது" என ஒலிக்கும். காரணம், இந்திய மகனின் சிந்தனை சமுதாயத்தில் மற்ற மனிதர்களுடன், இயற்கையுடன், ஏன், இறைவனுடன் கூட - ஒருமைப்பாட்டுணர்வுடன் இயங்கும் தன்மையது.

1. பாவேந்தர் பாரதிதாசன் இந்த உயர்ந்த உணர்வால் உந்தப்பட்டுதான் உன்னதமான கவிதா மலர்களை மக்கட் சமுதாயத்திற்கு ஏராளமாக அள்ளித்தந்திருக்கிறார் எனலாம்.

தொடக்கத்தில் அவர் பாடிய "எங்கெங்கு காணினும் சக்தியடா " என்ற பாடல் எங்கும் எதிலும் அவர் கண்ட காட்சி அன்னை பராசக்தியின் அழகு - அற்புதங்கள் தான் என விவரிக்க வேண்டுவதில்லை.

பின்னால் இறை நம்பிக்கை யற்றவராக அவர் கவிதைகள் யாத்த காலத்தும், இயற்கையின் வனப்பு அவர் உள்ளத்தை விட்டு அகலவில்லை.

அந்தியிருளாற் கருகும் உலகு கண்டேன்;
அவ்வாறே வான் கண்டேன்; திசைகள் கண்டேன்;
பிந்தியந்தக் காரிருள் தான் சிரித்த துண்டோ?
பெருஞ் சிரிப்பின் ஒளி முத்தோ நிலவே நீதான்!

என்று பாடிய புலவர்,

உனைக்காணும் போதினிலே.........

....... உழைத்துழைத்துத்

தினைத்துணையும் பயனின்றிப் பசித்த மக்கள்

சிறிது கூழ்தேடுங்கால், பானை ஆரக்

கனத்திருந்த வெண் சோறு காணும் இன்பம்

கவின் நிலவே உனைக் காணும் இன்பம் தானோ!

என்ற பால் நிலவின் பேரெழிலென பெருமகிழ் வெய்தும் பாவேந்தர் பாட்டாளி மக்கள் தம் பெரு மகிழ்ச்சிப் பொழுதை எண்ணிக் களிப்படைகிறார்; ஆம், அதாவது அவர்தம் கவின் மனம் களிப்படைகிறது.

கலை நிமிர்ந்த தமிழ் மண்ணில்

கவி நிமரப்பாடியவன்

அலை நிமிர்ந்த தமிழ்க்கடலில்

அறிவுயரப் பாடியவன்

மலை நிமிர்ந்த நம் வாழ்வின்

மானத்தின் நற் கொடியின்

தலை நிமிரப்பாடியவன்

தமிழ் இதயத் தார் வேந்தன்

என்றும்,

விழுந்துயர்ந்த ஆல் நிழலில்

விளையாடும் பறவைகளாய்

அழகின்பப் பிள்ளை எலாம்

ஆடி வரப்பாடியவன்

என்றும் அமரகவி எஸ்.டி. சுந்தரம் அவர்கள் தொடுத்த பாமாலை புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார்க்கு சாலப் பொருத்தமானதன்றோ! காரணம், பாவேந்தர்தம் பாக்களின் பண்பு, பொருள், பயன் அனைத்தையும் தெளிவாக்குகின்றன அவை.

3. கனசு சுப்புரத்தினமாக இருந்தவர் 'பாரதிதாசன்' என்று தன் பெயரை மாற்றிக் கொண்டதற்குக்காரணம் மறுமலர்ச்சிக் கவிஞன் பாரதி பேரில் அவர் கொண்டிருந்த பற்று, பக்தி அவர்தம் வாழ்நாள் முழுவதும் இருந்ததவரிடம். எனவேதான்,

அழகொளி சேர பாரதியாராலே இந்நாள்

அழுந்தியிருந்திட்ட தமிழ் எழுந்த தென்றே

ஆணையிட்டுச் சொல்லி விடுவேன் அன்னை மீதே

என்றுதன் குரு நாதரைப் போற்றிப் பாடியதல்லாமல், பாரதி "மகாகவி", "உலககவி" என்று புகழாரம் சூட்டினார்.

ஆம்,

பாரதி நாட்டைப் பாடினார்;

பாரதிதாசன் தமிழ் வீட்டைப் பாடினார்;

முன்னவர் விடுதலைக் கோபுரத்தில் வீர விளக்கேற்றினார்;

பின்னவர் வாழும் வீட்டில் குடும்ப விளக் கேற்றினார்;

சுருண்டு போன நாட்டைத் துடித்தெழச் செய்தவர் பாரதி;

இருண்ட வீட்டில் எழில் விளக் கேற்றியவர் பாரதிதாசன்

பாரதி, பாரதிதாசன் இருவரும் குத்தகைக்குப் பாடாமல் குறிக் கோளுக்காகப் பாடியவர்கள்.

4. நமதருமைத் தாயகத்தின் வடக்கிலுள்ள இமயம் முடியாக, தென் கோடியிலுள்ள குமரி பாதமாக, மண் மேனியாக, அமையப் பெற்றவள் பாரதத்தாய். வீரர் உள்ளமே அவள் உடலுக்கு உவகையளிப்பது. இவ்வாறுதான் பாவேந்தர் இந்தியத்தாயைத் தன் கவிக்கண்ணால் கண்டு களித்துப்பாடினார். கதர் இராட்டினப்பாடலையும் யாத்தார் - "எங்கள் அறுபது கோடித்தடக்கைகள் ராட்டினம் சுற்றும்" என்று முழங்கியவர் அவர். "விடுதலை நீர் காண்பீர்" என இந்தியருக்கு நல்வாக்கு நல்கிய நன்னெஞ்சர் அவர்.

திலகர் செய்த உரிமைக் கிளர்ச்சியால்

கொலைமுதற் பற்பல குற்றம் சுமந்து

மாசிலா மனத்து மாட சாமியும்

அன்புறு பாரதி அரவிந்தர் முதல்

வன்முறையுடையரால் வருந்து வார்க்குதவியாய்ப்

பன்முறை புதுவையில் செத்துப் பிழைத்தேன்

............................ ஒருநாள்

சிறைக்கதவு திறக்கப்பட்டது; சென்றேன்

அறைக்கதவு புனிதப்பட்டது.

இப்படி தம்மைப் பற்றிப் பாடியுள்ளார் பாரதியின்தாசன்.

5. சுவாமி விவேகானந்தர் அடிக்கடி இளைஞர்களுக்கு வற்புறுத்தி வந்த உபதேசம் என்ன தெரியுமா? " ஏ, மனிதனே, நீ அளப்பிற்கரிய ஆற்றல் பெற்றவன். உன்னிடமுள்ள மாபெரும் சக்தியை நீ உணரவேண்டும். இந்த பரந்த உலகில் நீ நினைத்தால் உன்னால் எதையும் சாதிக்கமுடியும். நல்ல செயல் வீரனாகத் திகழவேண்டும்; திகழமுடியும். இது உறுதி. இதற்கு அடிப்படையானது என்ன அறிவாயா? நம்பிக்கை, தன்னம்பிக்கை, உனது வலிமையில் உனது பேராற்றலில் நம்பிக்கைகொள். அந்தத் தன்னம்பிக்கையே வாழ்வில் வெற்றிக்கு வழிகாட்டி."

இதோ பாரதிதாசன் என்ன கூறுகிறார்? பார்ப்போம்.

மானிடத்தன்மைக்கு வேறாய் - ஒரு

வல்லமை கேட்டிருந்தால் அதைக் கூறாய்

வல்லமை மானிடத்தன்மை என்றேதேர்

ஆம், மனிதனிடம், மனிதனிடமுள்ள மாபெரும் ஆற்றல் பேரில் கவிஞர் கொண்டுள்ள அசையாத நம்பிக் கையன்றோ.

சிற்றூரும் வரப் பெடுத்த வயலும் ஆறு
தேக்கிய நல் வாய்க்காலும் வகைப்படுத்தி
நெற்சேர உழுதுழுது பயன் விளைவிக்கும்
நிறையுழைப்புத் தோள் களெல்லாம் எவரின் தோள்?
கற்பிளந்து மலைபிளந்து கனிகள் வெட்டிக்
கருவியெலாம் செய் து தந்த கைதான் யார் கை?
பொற்றுகளைக் கடல் முத்தை மணிக்குலத்தைப்
போய் எடுக்க அடங்கிய மூச்சு எவரின் மூச்சு?

மனித மூச்சின் மாண்பினையே கண்டு வியக்கும் கவியுள்ளம் கனக சுப்புரத்தினத்தின் கனிந்த நெஞ்சம்.

பேரறிஞர் பண்டித ஜவகர்லால் நேரு மனிதனிடத்தில் கண்ட தன்னம்பிக்கை, வலிமை, எந்த இடர்ப்பாடுகளையும் எதிர்த்துப் போராடி வெற்றிகொள்ளும் மனத்திட்பம் முதலியன அவருக்கு மனித இனத்தின் பேரில் மாமதிப்பு கொள்ளச் செய்தது. காட்டில் விலங்குகளோடு விலங்கெனத் திரிந்த மனிதன் நாடோடியாகி, காடுதிருத்தி, கழனியாக்கி, பின் சிற்றூர்......... இப்படி இந்நாள் வரை எத்தனையோ மகத்தான சாதனைகளைச் செய்திருக்கின்றானல்லவா.

இந்தச் சாதனைக்குப் பின் எத்தனை சோதனைகளை, துன்பம், துயரம், இடர்ப்பாடுகள் இப்படி அவன் சந்தித்து எதிர்கொள்ள வேண்டியிருந்தவை எத்தனை எத்தனை? அவற்றை யெல்லாம், தோல்வி கண்டாலும் துவண்டு போகாமல் மேலும் மேலும் தன்முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டு முன்னேற்றங் கண்டான் மனிதன் இதற்கெல்லாம் அடிப்படையாக அமைந்தவை அவனது தன்னம்பிக்கை, தளரா உழைப்பு, வலிமை. இந்தப் பண்புகளைப் போற்றிப் புகழ்ந்தார் நேரு பெருமகனார்.

சுவாமி விவேகானந்தர் ஆன்மீகத் துறையில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர். தாய்த்திருநாட்டில் மக்களிடையே அஞ்ஞான உறக்கம் நீங்கி உயிர்ச்சக்தி பெற்ற சமுதாயம் மலரவேண்டும் என இளைஞர்களுக்கு அறைகூவல் விடுத்தார்.

பண்டித நேரு மத நம்பிக்கைபற்றி கவலைப்படாதவர். 'அக்னாஸ்டிக்' (agnostic) என்பார்கள் அவரை. அவரும் இந்தியச் சமுதாயம் மறு மலர்ச்சிபெற்று வீறு கொண்டு எழவேண்டும் என பேராவல் கொண்டார். அதற்காகத் தன் வாழ் நாளெல்லாம் அல்லும் பகலும் உழைத்தார்.

இவ்விருவர் செயல் வீரர்கள் எனலாம். சொல்லேர் உழவர் எனக் கூறப்படும் சிந்தனை வீரர், சொல் வீரர், கவிஞர் பெருமகனார் பாவேந்தர் போற்றி வலியுறுத்தி வந்தது மானிடத்தன்மை.

இவ்வாறு வேறுவேறு பாதையில் பயணம் செய்த இம் மூவரும் மனித மாண்பில் மாபெரும் நம்பிக்கை வைத்தனர்.

6. 'பிறப் பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. என்றும் தனக்கு நல்வழி காட்டும் ;திருக்குறளின் இந்த உயரிய உண்மையை அவருக்குப்பின் தோன்றிய பல பெரியோர்கள் மக்களிடையே வற்புறுத்தி வந்துள்ளனர். கி.பி. 1017 முதல் 1137 ஆம் ஆண்டுவரை வாழ்ந்த இராமானுஜர் ஆன்மீகத் துறையில் செய்த புரட்சி சொல்லில் விவரிக்க

முடியுமா? தான் நரகம் புக்கினும் இந்த நானில மாந்தர் அனைவரும் நலம் பெற வேண்டும் என்கிற பரந்த உள்ளங்கொண்டு, தான் அறிந்த ஆன்மீக ரகசிய தத்துவத்தினை ஊரார் அறிய திருக்கோட்டியூர் ஆலய கோபுரம் மீதேறி வெளிப்படுத்தினார். தமது வாழ்நாளின் இறுதிக் காலத்தில் தம் சீடர் களுக்கு அவர் உபதேசித்த அறிவுரைகளில் முக்கியமானவைகளில் ஒன்று, பாகவதர்கள் எனப்படும் அவர்தம் சீடர்கள் அனைவரும் சமமானவர்களே என்பதாகும். தீண்டத்தகாதவர்கள் எனக்கருதப்பட்டோர் தற்போது கர்னாடகம் என்கிற மாநிலத்திலுள்ள மேல் கோட்டை என்ற ஊரில் அவர் எழுப்பிய திருக்கோவிலில் பிரவேசம் செய்து இறைவனை வழிபட வகை செய்த பெரும் புரட்சியாளர்.

அவரைத் தன் நெஞ்சார சுவாமி விவேகானந்தர் மட்டுமல்லாது, புரட்சிக் கவி பாரதி-தாசனும் போற்றியுள்ளார்.

அவருக்குப் பின் நம் நாட்டின் பல்வேறு பகுதிகளில் பக்தி நெறியைப் பரப்பிய ராமதாஸ், துக்காராம், சண்டிதாஸ் போன்ற சான்றோர்களும் மக்கட் சமுதாயத்தில் சமத்துவ உணர்வினைப் புகட்டி வந்துள்ளனர்.

ஐரோப்பாவில் பிரெஞ்சு நாட்டில் பதினெட்டாம் நூற்றாண்டில் ஏற்பட்ட புரட்சியின் அடிப்படைத் தத்துவங்கள் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவமாகும். ஆம், சமத்துவம் சுதந்திரத்துடன் இணைந்து போற்றப்பட்டது.

மகாத்மா காந்தியின் சிந்தனையின் அடிப்படைத் தத்துவங்களில் ஒன்று மனிதன் என்பவன் உழைத்துத்தான் உண்ணவேண்டு மன்பது. ஆம், உழைப்பில் சமத்துவங்கண்டார் காந்தியடிகள்.

மகாகவிபாரதி எல்லோரும் சமமென்பது உறுதியாச்சு என்று எத்தனையோ முறை தமது பாடல்களில் முழுக்கமிட்டுள்ளார். ஏன், காக்கை குருவி எங்கள் ஜாதி என்று எங்கும் எதிலும் சகோதரத்துவத்தையும் காணும் சமரச சமத்துவ மனப்பான்மை பெற்றிருந்தார்.

அவரது சீடர் பாரதிதாசன், இறை நம்பிக்கை கொண்டவர் அல்ல என்றாலும், மக்கட் சமுதாயத்தில் அனைவரும் சமம் என்கிற அசையாத நம்பிக்கை கொண்டிருந்தார்.

> நலந்தரும் சமத்துவம் நாடுதல் மகத்துவம்
> நண்ணுவாய் சுதந்தரத்துவம்
> கலகமேன் சண்டைகளேன்
> கருத்தெல்லாம் பேதம் கொள்வதேன்

என்றார்.

> சாதிகள் இல்லையடி பாப்பா
> குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்

என்று அமர கவிபாரதி பாடி வைத்தார். புரட்சிக் கவியோ,

> தாழ்வில்லை உயர்வில்லை
> சமமென்ற நிலைவந்தால்
> வாழ்வெல்லை காண்போமடி

என்று ஒரு படி மேலே சென்று திட்டவட்டமாக முரசறைந்தார் என்றுதான் கொள்ள வேண்டும்.

சமத்துவம் என்பது அன்றாட வாழ்க்கையின் எல்லாத்துறைகளிலும், அம்சங்களிலும், --- அரசியல், பொருளாதார, சமுதாயத் துறைகளில் ---- மிளிர வேண்டும். ஏன், முன் கூறியபடி,

உழைத்து வாழ்தல், மிகமிக முக்கியம். குடும்ப வாழ்வில் வாழ்க்கைத் துணை நலம் தேடிக் கொள்-வதிலும், வாழ்க்கை நடத்துவதிலும் ஆணுக்குப் பெண் சரிநிகர் சமானமானவள் என்று முழங்கினார் மகாகவி பாரதி. பாரதியின் புரட்சிகரமான கருத்துக்களால் தாக்கம் கொண்ட பாரதிதாசன், உள்ளத்தாலும் உணர்வாலும் கணவன் மனைவி வாழ்வதே நல்லதொரு குடும்பம் என்றார்.

இதோ அவரது பலபாடல்களில் காணப்படும் நற்கருத்துக் குவியல்கள் :

எலிகள் புசிக்க எலாம் கொடுத்தே சிங்க
ஏறுகள் ஏங்கிடுமோ? இனிப்
புலிகள் நரிக்குப் புசிப்பளித்தே பெரும்
புதரினில் தூங்கிடுமோ?

உழைப்பிற்கு அவர் செலுத்தும் வணக்கம் இதோ:

கட்டத் துணியளித்தார் கல்லுழுது நெல்லளித்தார்;
வெட்டிக் காடெல்லாமே வீடாக்கித்தந்தார்!
எருக்கு முளைக்கும் இடர்ப்பாம்பின் பல்போல்
பருக்கைக் கல்வாய்த்தும் படுபள்ளம் வாய்த்தும்முள்
முட்டுநிலம் நேராக்கி முல்லை பரப்பிய தோர்
பட்டு மெத்தை போன்ற நிழற் பாதையளித்தார்
தரைமீது பட்டணங்கள் தந்தார்;..........
................ தங்கள் செல்வாக்கையெல்லாம்
இந்நாட்டை நீயாள ஈந்தார்

அப்படி யென்றால்,

ஒரு மனிதன் தேவைக்கே இந்தத் தேசம்
உண்டென்றால், அத்தேசம் ஒழிதல் நன்றாம்

என்று கவிஞர் தான் இயற்றிய புரட்சிக்கவி காப்பிய நாடகத்தில் அதன் நாயகன் உதாரன் வாயிலாக தேசம் என்பது அனைவருக்கும் உரித்தானது என்கிற சமத்துவ, சமதர்மக் கொள்கையினைச் சாட்டையடி கொடுத்து வலியுறுத்துகிறார் என்றே கூறலாம்.

திருமணம் உண்மையில் மணமிக்கதாக வாழ்வில் திகழ கணவன் மனைவி என்பவர் தாம் உவந்து ஒன்று சேரவேண்டும். இதோ கவிஞரே கூறுகிறார்.

ஒருவனும் ஒருத்தியுமாய் - மனம்
உவந்திடில் பிழையென உரைப்பதுண்டோ?
அரசென ஒருசாதி - அதற்
கயலென வேறொரு சாதி யுண்டோ?
. . .  . . .  . . .
என் மனம் காதலனைச் - சென்
றிழுத்தபின்னே அவன் இணங்கினதால்
அன்னவன் பிழையிலனாம்........

திருமணத்திற்கான தகுதி ஆண் பெண் இருவர் பரஸ்பர சம்மதமான விருப்பமேயன்றி, சாதி வேறுபாடோ, அதிகார அந்தஸ்து, செல்வம் செல்வாக்கு இவற்றாலுண்டாகும் வேறுபாடோ அல்ல என்று அழுத்தந்திருத்தமாக எடுத்துரைக்கிறார் புரட்சிப் புலவன்.

குடும்ப வாழ்க்கை நடத்துவதில் மரம் கணவன்; வேர் மனைவி, வேரினை மரம் வெறுத்தால், புறக்கணித்தால் பாழ் பட்டுப் போகுமன்றோ அக்குடும்பம். ஆம், நல்லதொரு குடும்பம் பல்கலைக் கழகம் என்பார் கவிஞர்.

பெண்ணுக்குக் கல்வி வேண்டும், பேச்சுரிமை வேண்டும்...... இப்படி பல விதத்தில் பெண்ணின் உரிமைக்காக வாதாடுபவராவர்.

பெண்ணடிமை தீருமட்டுப்
பேசுந்திரு நாட்டு
மண்ணடிமை தீர்ந்து வருதல்
முயற்கொம்பே!

என்பது கவிஞரது கணிப்பு.

இவ்வாறெல்லாம் விவரித்த புரட்சிக்கவிஞரது இலட்சியப் பெண் இல்லத்தரசி எப்படி குடும்ப விளக்காக அமைகிறாள்?

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகை சான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்

இல்லாள் அகத்திருக்க இல்லாதது ஒன்றுமில்லையல்லவா. காரணம்,

நாடிக் கொண்டேயிருக்கும்
குடித்தன நலத்தை நெஞ்சம்

ஆம் அவள் நெஞ்சமெல்லாம் நிறைந்திருந்திருப்பது தன் மணாளன் மக்கள், பெற்றோர் மற்றும் குடும்பத்தினர் அனைவரது தேவை, நலம்.........இவைதானே. பாவேந்தரது குடும்ப விளக்காம் இல்லத்தரசி .........“நந்தா விளக்குன்றன் நல்லறிவே - செந்திருவே" என்று வீட்டுப் பெரியவர்களால் போற்றிமதிக்கப்படுவாள்.

"அந்த வீடெல்லாம் இசையே; வீட்டில் நெஞ்செல்லாம் மெருகே; நெஞ்ச ஏடெல்லாம் அறிவே ; ஏட்டின் எழுத்தெல்லாம் களிப்பே" என்று குடும்பத்தினர் தம் களிப்பின் ஆதாரம் அவளது அறிவார்ந்த அன்புமயமான பணி - பாங்கு - என்பதனை நம் அனைவருக்கும் தெள்ளத் தெளிய விளக்குவதுபோல் பாடியுள்ளார். இதற்கு அடிப்படை அந்தக் குடும்பத்தில் நிலவும் ஆண் பெண் சமத்துவநிலை' அல்லவா?

7. கவிஞர் பாரதிதாசன் தேசியவாதியாக இருந்த நிலையிலும் சரி; பின்னால் பெரியார் ஈ.வெ.ராமசாமி அவர்களின் சமூக சீர் திருத்தக் கொள்கைகளில் நம்பிக்கை கொண்டு, அவற்றைப் பரப்புவதற்காகப் பாடல்களை யாத்த காலத்திலும் சரி, சமத்துவத்திற்கெதிரான சுரண்டல், ஆதிக்க சக்திகளை எதிர்த்துப் போர்க் குரல் எழுப்பினார்.

முழுநிலவு நேரத்தில் வெளியே முற்றத்தில் அமர்ந்திருந்த கவிஞருக்குத் தன் பின்னால் மெல்ல மெல்ல தழுவுவது தென்றலா, அல்லது தம் அருமை துணைவியா என்று கூட வேறுபாடு தெரியாத மென்மையான இதயமிருந்தும்,

தென்றலெனத் தம் கவிதைகளைப் படைப்பதற்கு மாறாக புயலென வீசும் மாசக்தி படைத்த கருவி யாக்கினார்.

கிலியை விடுத்துக் கிளர்ந்தெழுவார் இனிக்
கெஞ்சும் உத்தேசமில்லை - சொந்த
வலிவுடையார் இன்ப வாழ்வுடையார் இந்த
வார்த்தைக்கு மோசமில்லை

இது புரட்சிக் கவிஞரின் திடமான தீர்மானம்.

என்னதான் மனிதன் மரணத்தை எதிர்நோக்க அஞ்சிடினும், என்றேனும் ஒரு நாள் நிச்சயம் அதனைச் சந்தித்து உயிரிழக்க நேரத்தான் போகிறான். மாறாக, அவன் தானாக தன் உயிரழிவதற்குத் தயாராகி விட்டால், அமர வாழ்வு பெற்றுவிடுகிறான். எனவே சமுதாய நலனுக்காக மனிதன் தன் வாழ்வினைத் தியாகம் செய்யச் சித்தமாக இருப்பது சிறந்ததல்லவா, என்று ஜப்பானிய அறிஞர் ஒருவர் உரைத்திருக்கின்றார். பாவேந்தர்,

சாக்காடு பேரின்பம்
என் று நான் சாற்றிடுவேன்
தூக்கம் கெடலைத்
துயர் என்பீர் -- வாய்க்கும் நல்
தூக்கத்தை இன்பம் என்றீர்
அன்றோ? நெடுந்தூக்கம்
சாக்காடு இன்பம் என்றார்

வாழ்வும் சாவும் ஒன்றென மதித்த கவிஞர் அளிக்கும் அறிவுரைதான் என்ன?

தமைக் காக்க! தம் குடும்பம்
காக்க! உலகைத்
தமர் என் று தாமுழைக்க
வேண்டும்

ஆம், தமிழ், தமிழர், என்றெல்லாம் பாடிய பாவேந்தர் இந்தியத் திருநாட்டையோ, ஏன், இந்த வையகத்தையோ --மறந்தாரில்லை. இமயத்தில் ஒருவன் இருமினால் குமரியிலிருப்பவன் பொறுக்க மாட்டான் என்று ஏங்கிற்று அவர்தம் உயர்ந்த உள்ளம். இலக்கிய வாதி என்ற முறையில் சமஸ்கிருத மொழியிலிருந்த 'பில்ஹணீயம்' என்ற காப்பியத்தைத் தழுவி தம் சீர்திருத்த, சமத்துவக் கொள்கைகளைப்புகுத்தித்தான் 'புரட்சிக்கவி' என்ற காப்பிய நாடகம் இயற்றினாரவர்.

வையத்து நன்மைக்கே
வாழ்வென் றுணர்ந்தவனே
செய்யும் தொழிலில் திறம் காண்பான்- ஐயம்
அகலும்; அறிவில்
உயர்ந்திடுவான் - ஆன்றோன்
புகழும் அனைத்துள்ளும்
புதுமை திகழுமன்றோ!

இது அவரது புதுமைக்கான விளக்கம். சுருங்கக் கூறின்,

ஒன்றுதான் இம் மானிடச் சாதி

இதுதான் புரட்சிக் கவிஞரின் இறுதி இலட்சியம் எனக் கொள்ளலாமன்றோ?

வல்லமை தாராயோ இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே?

என்று மகாகவி பாரதி - கவிஞர் கனக சுப்புரத்தினத்தின் குரு பராசக்தியை வேண்டி நின்ற வரத்தின் பிரதிபலிப்பினை அந்த அருமைச் சீடனின் புரட்சியான புதுமையான கவிதையிலும் காண்கிறோம் இல்லையா.

காரணம்? காரணம் மிகமிக எளிதானது. தன் கருத்துக்களில் என்னதான் சீர்திருத்தம், புரட்சி என்பவை யெல்லாம் கொண்டிருந்தாலும், பாவேந்தர் பாரதி தாசன் அடிப்படையில் ஒரு உன்னத கவிஞன். இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய மாபெரும் இருகவிஞர்களில் ஒருவன். அந்தக்கவி உள்ளம்தான் அவரை குமரகுருபரர் பேரில் பெருமதிப்பு கொள்ளச் செய்தது. கவிச் சக்கரவர்த்தி கம்பனிடத்திலும் அவருக்கு மிக்க மரியாதை உண்டு எனக் கேள்விப் பட்டிருக்கின்றேன்.

நீள் விசும்பில் பிறைச்சந்திரனைப் பார்க்கிறோம். ஆனால் அதற்குத் தன்னுள் முழுமதி உள்ளது என்பது தெரிந்தாலும் தெரிய வில்லை என்றாலும் முழுமதியாக வளர்ச்சி பெற்று இந்த வையக மாந்தர்க்குத் தண்ணிலவும், தனிப் பெரும் மகிழ்ச்சியும் தரும் தன்மை பெற்றுள்ளதல்லவா.

கவிஞன் கனக சுப்புரத்தினம் என்றாலும், புரட்சிக்கவி என்றாலும், பாவேந்தர் என்றாலும் பாரதிதாசன் ஓர் கவிஞன் -- கவி உள்ளம் கொண்ட புலவன், மேதை, எனவே, நல் இதயங் கொண்டோரைத் தன் கவிதைகளால் ஈர்க்கும் பெற்றிபடைத்தவன்; புதுமை பெற்ற பெருமகனார்.

* * *

# வேறு வழியில்லா விட்டால்_ விழிப்பாகி விட வேண்டியதுதான்



கவிஞர் ஈரோடு தமிழன்பன்

☐ விழித்திருப்பவரின்

தூக்கம்

எங்குச் செல்லும்?

காற்றில் அசைந்து கொண்டிருக்கும்

மலர்களுக்கு?

மலர்களே

கனவுகளாக அல்லவா

இருக்கின்றன!

எதன் தூக்கத்திலோ சுடரும்

அவை-

இந்தத் தூக்கத்தை ஏற்குமா?

மேலும்

விழித்திருப்பவரின் தூக்கத்தில்

அவரின் நோய்கள்

முனகிக் கொண்டிருக்கலாம்!

☐ விழித்திருப்பவரின்

தூக்கம்

எங்குச் செல்லும்?

பகலின் கையில்

முடிந்து போகாத இரவிடம்?

அந்தத்

துண்டு இரவுகளின் முனை ளில்

பகலின் அடையாளம்

இருக்கிறதே அச்சுறுத்தலாய்!

தவிர

விழித்திருப்பவரின் தூக்கத்தில்

அவரே

ஒருவேளை நுழையலாம் அவசரமாய்!

☐ விழித்திருப்பவர்

தூக்கம்

எங்குச் செல்லும்?

இறப்பு எதிர்வு

நிகழ்வுகளின் இடைவெளிகளில்

ஓய்வெடுக்க?

வெள்ளமாக

ஓடிக்கொண்டிருக்கும் காலத்தில்

ஏது இடைவெளி?

அன்றியும்

விழித்திருப்பவரின் தூக்கத்தின்

பருவம்-

வாலிபமா? வயோதிகமா?

அலைகளை

அனுப்பி ஆராயக்

காலத்திற்கு ஏது காலம்?





வயோதிகம் எனில்
அதன்
ஈரக்கரை பிளந்து
இடம் கொடுக்கும்?

வாலிபம் எனில்
வழியில் எங்கேனும்
தள்ளி விட்டுப்
போகலாம்!

தூக்கங்களிலிருந்தும்
விடுபட்டுவிட்டார்களே!

மேலும்
வாழும் மனிதர்களின்
எச்சில் தூக்கங்களை - அவர்கள்
ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்!

□ விழித்திருப்பவர்
தூக்கம்
எங்குச் செல்லும்?

கடைசி மூச்சிலிருந்து
நெடுந்தூரம்
பிரிந்துவிட்ட
கல்லறைவாசிகளிடம்?

அவர்கள்தான்
விழிப்புகளிலிருந்து விடுபட்டது போலவே

□ விழித்திருப்பவர்
தூக்கம்
இப்போதைக்கு
அவரின் விழிப்பு அசந்துவிடும்
தருணத்தை எதிர்பார்த்து
அங்கேயே
இருப்பதுதான் நல்லது!

இல்லாவிட்டால்
வேறுவழியில்லை
விழிப்பாகி விடவேண்டியதுதான்!

* * *



# பாவேந்தர் — புரட்சிப் பத்து

எழுச்சிப்பாவலர் இலக்கியன்

வாழ்ந்து வளர்ந்த தமிழ்மொழி பின்னாளில்
தாழ்ந்து தளர்ந்து வாழ்விழந்த — போழ்து
புரட்சிமிகு பாவேந்தன் பொங்கி எழுந்தே
உரமளித்துக் காத்தான் உவந்து.

வாடித் தளர்ந்து வறுமையுற்ற ஏழையைப்
பாடி உயர்த்தினான் பாவேந்தன் — ஓடி
விழுந்த(து) அடிமை முடைநாற்ற வீச்சே!
எழுந்தது மக்களாற்றல் ஈங்கு.

வெட்கித் தலைகுனிந்து வெந்துய ரில்வீழ்ந்து
மட்கிமனம் குலைந்த பெண்ணினத்தை — எட்டி
உதைக்கும் பழிநிலையைப் பாவேந்தன், வெட்டிப்
புதைத்திட வந்த போர்வாள்.

போர்செய்து மாள்கின்ற பொல்லாச் செயலினை
வேரோ டழிக்கவந்த வேங்கையாய் — நேராய்ப்
புதிய உலகம் புதுக்கினான் யார்க்கும்
எதிரில்லாப் பாவேந்தன் ஈண்டு

இளமை வளங்கொழிக்கும் போதில், இனிமை
உளஞ்சேர் மணவாளன் மாண்டால் — தளராமல்
வாழ்வில் மறுமணம் வாய்த்தல் நலமென்றான்
தாழ்விலாப் பாவேந்தன் தான்.

இன்பத் தமிழ்க்கல்வி யாவரும் கற்றுவரின்
துன்பங்கள் நீங்கும் துணிவுவரும் — என்றே
தமிழ்க்கல்வி மாட்சிதனை உரைத்தான் எங்கும்
அமிழ்தப் பெருக்காய் அறி.

எழுத்தில் புரட்சியை ஏற்றிவைத்துப் பாடித்
தழைத்துவளர் கின்ற தமிழர்— கழுத்தறுக்க
வீதிகள் தோறும் விளங்கிடும் சாதிகளை
மோதி அழித்தான் முனைந்து.

வந்து நுழைந்த வடவரால் நம்கலைகள்
நொந்தழிந்து போகாமல் முந்திவந்து – எந்தமிழர்
வாழ்வின் நலங்காக்க நச்சரவுக் கொள்கையெலாம்
வீழ்ந்திறந்த திங்கே விரைந்து.

ஏற்றத் தாழ்வெல்லாம் எழுந்தோடப் பாவேந்தர்
சீற்றப் புலியாய்ச் சினந்தெழுந்து – போற்றும்
பொதுமை அறம்பாடப் பொங்கிய, இன்ப
மதுவெள்ளம் பாய்ந்தது பார்.

நாட்டுடன் நாடு பகைமை மிகக்கொண்டு
போட்டி யிடும்தன்மை போக்கிடவே – பாட்டுப்
புலவனாம் பாவேந்தன் பொங்கி எழுந்தே
உலகமைதி சொன்னான் உணர்ந்து.

* * *

# பாவேந்தரும் பைந்தமிழ்க் குறளும்

புலவர் செ. வரதராசன்

திருக்குறள் உறுதியும் தெளிவும் பொருளின்
ஆழமும் விரிவும் அழகும்

கருதிப்பார்த்து வியந்த பாரதியார், திருவள்ளுவர் பிறந்த தமிழினத்தையே போற்றிப் புகழ்கின்றார். 'இவரைப் போன்ற பாவலர் ஒருவரைப் பூமிதனில் யாங்கணுமே கண்டதில்லை; இவர் பிறந்ததாலேயே தமிழ்நாடு வான்புகழ் கொண்டது.' என்கிறார்.

அவர் வழிவந்த பாவேந்தரோ, 'வள்ளுவர் வழங்கிய முத்துக்கள்' என்ற கவிதையில்,

தெள்ளு தமிழ்நடை
சின்னஞ் சிறிய இரண்டடிகள்
அள்ளு தொறுஞ்சுவை
உள்ளுதொறும் உணர் வாகும் வண்ணம்
கொள்ளும் அறம்பொருள்,
இன்பம் அனைத்தும் கொடுத்ததிரு
வள்ளுவனைப் பெற்ற
தால்பெற்ற தேபுகழ் வையகமே!

என்று வான்புகழ்க் குறளின் சீர் நலம் போற்றி, மேலும்,

வெல்லாத தில்லை
வள்ளு வன்வாய் விளைத்தவற்றுள்
பொல்லாத தில்லை
புரைதீர்ந்த வாழ்வினி லே அழைத்துச்
செல்லாத தில்லை
பொதுமறை யான திருக்குறளில்
இல்லாத தில்லை
இணையில்லை முப்பாலுக் கிந்நிலத்தே!

என்று மாந்தர்க்கு மதிநலம் சேர்க்கும் பொதுமறைக் குறளின் திறம் விரிக்கின்றார்.

இவ்வறங் கூறும் திறம் வாய்த்த குறளே மாநகர் செல்லும் வழிக்கு ச் சிறப்புற்ற விளக்காகும், மனமாசறுக்கும் மருந்தாகும்! எனவே, அனைவரும் குறளைக் கற்பராக' கற்க இயலாதோர் சான்றோரிடம் கேட்டுத் தெளிவடைவீர்களாக' என்றும் அறிவுறுத்துகிறார்.

திராவிட நாட்டுளீர்! உங்கள் செயற்கெல்லாம்
அறமே அடிப்படை ஆதல் வேண்டும்,
செல்லும் வழிக்குத் திருக்குறள் விளக்கு!
மனமா சருக்கும் இனிய மருந்து
கசடறக் கற்க! கற்றிலார் அறிஞர்பால்
கேட்க! கேட்க!

என்று அனைவர்க்கும் வேண்டுகோள் விடுக்கின்றார்.

திருக்குறளில் ஆழ்ந்தகன்ற - நுண்ணிய பற்றுக்கொண்ட பாவேந்தர் தமது கவிதைகளில் பைந்தமிழ்க்குறள் மணத்தை ஆங்காங்கு மணக்கச் செய்யும் பாங்கு, நினைப்போர்க்கு இனிப்பைச் சேர்ப்பதாகும்.

பாவேந்தர் தமது எழுபதாம் ஆண்டில் தஞ்சைப் புலவர் இராமநாதருக்கு வாழ்த்துப்பா ஒன்று வழங்கினார். அப்புலவர், பாவேந்தரின் நூல்களை எடுத்துக் 'கவிஞரும் காதலும்' எனப் பெயர் கொடுத்துத் திறனாய்வு செய்ததன் மூலம் பாவேந்தரின் திறத்தை வையகம் காணச் செய்தார். இது புலவரின் நல்ல எண்ணத்தைக் காட்டுகிறதன்றோ? அந்த அவரது நல்ல எண்ணமே தாம் எழுபது ஆண்டிற்குப் பிறகும் தமிழ்-தமிழர், தமிழினத்தார், உலகத்தாரின் மாண்பிற்காக பணியாற்றிடும் நோன்பினை மேற்கொள்வதற்கான ஆற்றலைத் தந்திருப்பதாகப் பாவேந்தர் கருதினார். அப்போது

கூற்றம் குதித்தலும் கைக்கூடும்...!

என்ற குறளையும் எண்ணிப் பார்த்துள்ளார். எனவே,

என்றன் எழுபதாம் ஆண்டின் பின்னும்
நன்றுநான் வாழ்வதற் கான
நோற்றலின் ஆற்றல் தருவதாம்! வள்ளுவர்,
கூற்றம் குதித்தலும் கையேடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு "என் றருளினார்!

என்று கவிதை யாத்தார். என்றால், பாவேந்தர் என்றும் எப்பொழுதும் எந்தெந்த கருத்துக்களைக் கருதும் போதும் அவற்றைக் கவிதைகளாய் வடிக்கும்போதும் அவரது உள்ளத்தில் திருக்குறள் கருத்துக்களே ஊடுருவி, ஊற்றெடுத்து நின்று புதிய கருத்துக்களுக்கு ஆக்கம் தந்துள்ளன; அடிப்படைகளை வகுத்துள்ளன என்று செப்பலா மன்றோ!

ஆம்! பாவேந்தர் தமது மனையறங்காத்து, அதன் பயனாகப் பெற்ற மழலைச் செல்வங்களோடு மகிழ்ந்திடும்போதும் அவர்களுக்காகப் பிள்ளைத் தமிழ்ப்பாக்கள் இசைக்கும் போதும் அவரது உள்ளத்தில் குறள் சிந்தனையே குவித்திருந்தன என்பது குன்றின் மேல் விளக்காக விளங்குகிறது, காரணம்? கேளுங்கள்! நீங்களும் பாடுங்கள், இசையமுதின் இனிக்கும் ஓர் பாடலை!

அறிமி தென் றும் யாம் மறமி தென் றுமே

அறிகி லாத போ து - யாம்

அறிகி லாத போ து - தமிழ்

இறைவ னாரின் திருக்குறளிலே ஒரு சொல்

இயம்பிக் காட்டமாட் டாயா? - நீ

இயம்பிக் காட்ட மாட்டாயா?

இவ்வினிய பாடலில், திருவள்ளுவரை இறைவனாக்கி மகிழ்வதிலிருந்து, பாவேந்தரை வள்ளுவத்தின் செந்தண்மை எந்த அளவிற்கு ஈர்த்துள்ளது என்பதை காணலாம்.

### பிறப்பொக்கும் பெரும் பேறு :

பாவேந்தரின் படைப்புகளில் முதன்முதலில் வெளியிடப்பட்ட நூல் 'பாரதிதாசன் கவிதைகள்' ஆகும். அஃது பிற்காலத்தில் மூன்று தொகுதிகளாக வெளிவந்து, செந்தமிழ் இன்பத்தில் தமிழகத்தைத் திளைக்கச் செய்ததை நாம் அறிந்துள்ளோம்.

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் எனும்ஓர்

சிறப்புடைய நம்கொள்கை நானிலத்தின் செல்வம்

என்பது பாவேந்தரின் பாவாகும். பைந்தமிழ்க் குறளின்

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா

செய்தொழில் வேற்றுமை யால்

என்பதின் மறுபதிப்புத்தானே' இது!

'சஞ்சீவி பர்வதத்தின் சாரலும் 'வீரத்தா'யும் இச்சமத்துவ சமரச சன்மார்க்க நெறியின் அடிப்படையில் முகிழ்த்த கவிதைக் கதைகளேயாகும். குப்பனும் வஞ்சியும் சஞ்சீவி மலைக்குச் சென்று அங்கிருந்து பச்சிலையைத் தின்று அவர்கள் கேட்டதும் கண்டதுமான செய்திகளில் வையத்தில் பகை வகையான பொருந்தாக் கருத்துக்களும் சிறப்பிலாச் செயல்களும் திருந்தாத வாழ்க்கை நெறிகளும் விளக்கப்படும். அவற்றின் இடையிடையே வரும்,

செத்து மடிவதிலும் சேர்ந்து பிறப்பதிலும்

இவ்வுலக மக்களிலே என்னபே தங்கண்டாய்!

வாழ்கின்றார் முப்பது கோடி என்றால்

சூழ்கின்ற பேதங்கள் அந்தத் தொகை இருக்கும்

சாதிப் பிரிவுகளும் சமயப் பிரிவுகளும்

நீதிப் பிழைகள் நியமனப் பிழைகளும்

மூடப் பழக்கங்கள், எல்லாம் முயற்சி செய்தே

ஓடச் செய்தால் நமையும்ஓடச் செய்வார்!

என்பன போன்ற அடிகள், சாதி, சமயப் பற்றுகளில் ஈடுபட்டிருப்போர்க்கு எரியீட்டிகளாகும். ஆனால் யார் யார் என்னென்ன சொல்லியும், எங்கே மக்கள் ஏற்கின்றனர்?

'வீரத்தா' யில் அரசன் மகள் அமுதவல்லியும் தீங் கவிராசன் உதாரனும் காதல் கொண்டனர். அவர்கள் கடிமணம் கொண்டு வாழத் தடையாக இருந்தவை இப்பிறப்பிழிவுக் கொள்கைதாம்.

வேந்தன் சதுர்வருணம்
சீறும்எனில் இந்தஉடல் தீர்ந்தபின்னும் சீறிடுமோ?"
"அரசென ஒருசாதி அதற்கு
அயல்என வேறொரு சாதியுண்டோ?"
. ..        . . .        . . .
"இக்கால நால்வருணம் அன்றிருந்தால்
இருட்டுக்கு முன்னேற்றம் ஆவதன்றிப்
புக்கபயன் உண்டாமோ?

ஆம்! நால்வருணத்தில் நாலாயிரம் சாதிகள் அல்லவோ வகுக்கப்பட்டுள்ளன.

மேலும், இக்கவிதைத் தொகுப்புகளில் ஆங்காங்கு பொருந்தாத சாதி, சமய கடவுள் நிலைகளை மாந்தர் வெறுத்திட வேண்டும், விட்டிட வேண்டும்' என அறிவுறுத்திடும் எழுச்சி மிக்க - புரட்சி பொங்குகின்ற - புத்துணர்ச்சி வழங்குகின்ற கவிதைகள் பற்பல காணலாம்."

## பொங்கும் பொதுவுடைமை :

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை

என்பது பொதுவுடைமைக் குறளாகும்.

எல்லார்க்கும் தேசம் எல்லார்க்கும் உடைமை எலாம்
எல்லார்க்கும் எல்லா உரிமைகளும் ஆகுகவே!
எல்லார்க்கும் கல்வி சுகாதாரம் வாய்த்திடுக!

என்ற பாடல் வரிகள், வள்ளுவம் வகுத்திடும் பகுத்துண்டு பல்லுயிர் வாழ்தல் வேண்டும் என்ற பண்பாட்டிற்கு வழிவகுப்பனவன்றோ?

'உலக ஒற்றுமை'ப் பாடலில், 'சின்னதொரு கடுகு உள்ளம், கடுகுக்கு நேர்மூத்த துவரை உள்ளம், தென்னை உள்ளம், மாம்பிஞ்சுள்ளம் பலவும் விளக்கி,

தொல்லுலக மக்களெலாம் ஒன்றே என்னும்
தாயுள்ளம் தனிலன்றோ இன்பம்! ஆங்கே,
சண்டை இல்லை தன்னலந்தான் தீர்ந்ததாலே!

என்று பாடுகின்றார். 'பேரிகை' பாடலில்

இன்பம் எல்லார்க்கும் என்றே சொல்லிப்பேரிகை
எங்கும் முழக்கிடுவாய்!"
"சேமம் எல்லோர்க்கும் என்றே சொல்லிப்பேரிகை
செகம் முழக்கிடுவாய்!"
"செல்வங்கள் யார்க்கும் என்றே சொல்லிப் பேரிகை
திக்கில் முழக்கிடுவாய்!

என்று வரும் அடிகளும் நன்றாம் பொதுவுடைமைச் சமுதாயம் அமைக்க வந்த படிகள் தாமே!

ஓடப்ப ராயிருக்கும் ஏழையப்பர்
உதையப்பர் ஆகிவிட்டால், ஓர்நொடிக்குள்
ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி
ஒப்பப்பர்ஆ ய்விடுவார் உணரப்பாநீ!

இங்கு

ஈங்கை விதிரார் கயவர், பொடிறுடைக்கும்
கூன்கையர் அல்லா தவர்க்கு"

என்ற குறள் நினைவும் வருகின்றது.

புதியதோர் உலகு செய்வோம் - கெட்ட
போரிடும் உலகத்தை வேரொடு சாய்ப்போம்
பொதுஉடைமைக் கொள்கை திசைஎட்டும் சேர்ப்போம்
புனிதமோ டதைஎங்கள் உயிரெனக் காப்போம்!

என்பது வள்ளுவர் சிந்தனை வழியில் பாவேந்தர் கொண்ட கொள்கை உறுதியாகும்.

**கனியும் காதல் நலம் :**

காதல் அடைதல் உயிரியற்கை' அல்லவா? திருக்குறளில் வரும்

கண்ணொடு கண்ணினை நோக்கொக்கில் வாய்ச்சொல்
என்ன பயனும் இல

என்பது பாவேந்தர்க்கு மிகவும் பிடித்த குறளாகும். இக்கண்ணினை நோக்கும் காட்சியினை எவ்வாறெல்லாம் காட்டுகிறார்!

கண்ணின் கடைப்பார்வை காதலியர் காட்டிவிட்டால்
மண்ணில் குமரருக்கு மாமலையும் ஓர்கடுகாம்!

கண்ணை அவள் கண்ணி லிட்டுக்
கையேந்தி நின்றிட்டான்

கன்னி அனுப்பும் புதுப்பார்வை - அவன்
கட்டுடல் மீதிலும் தோளிலுமே சென்று
மின்ன லிட்டு மீண்டன

பாடம் படித்து நிமிர்ந்த விழி - தனில்
பட்டுத் தெரிந்தது மானின் விழி!

**முடுக்கும் மூடப்பழக்கம் :**

அறியாமையால், புரியாமையால், சிந்திக்காமையால், ஒருவன் மூடக் கொள்கைகளுக்கு ஆட்படுகின்றான்.

ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயனின்றே

மெய்யறி வில்லா தவர்க்கு

என்ற இத் திருக்குறள் ஒண்பாவிற்கு, 'ஒருவன், ஐம்புலனறிவும் நிறையப் பெற்றிருந்தாலும் உண்மையைச் சிந்தித்து அறியும் அறிவும், தெளிவும் பெற்று மெய்யறிவினை - தக்கன, தகாதனவற்றை, ஆய்ந்தறியும் பகுத்தறிவினை அடையப் பெறானாயின் அவனால் பயனேதும் இல்லை" என்பது பொருளாகும்.

இப்பகுத்தறிவு - உணர்வு இல்லாத நிலையே - செயல்களே நாட்டிற்கு நலன் விளக்காத தீமைகளையே விதைக்கின்றன என்பதால், நமது பாவேந்தர்,

மீளாத மூடப் பழக்க வழக்கங்கள்

பங்குஞ்செய் மூடப் பழக்க வழக்கங்கள்

உள்ள பகுத்தறிவுக் கொவ்வாத ஏடுகள்

"மூடப் பழக்கம் முடிவுற்ற கண்ணுறக்கம்

ஓடுவ தென்றோ? உயர்வது என்றோ?

மூடத் தனத்தை முடுக்கும் மதத்தைநீர்

மூலப் படுத்தகை ஓங்கிடுவீர்!

என்றெல்லாம் பாடுகிறார். மேலும்,

பண்டொழிந்த புத்தன், இராமாநுசன்,

முகம்மது, கிறிஸ்து - எனும்பல பேர் சொல்லிச்

சண்டையிடும் அறியாமை அறிந்தார்க்கில்லை!

சமூகமே! ஏறுநீ, எம்கொள்கைக்கே!

என்று 'முன்னேறு!' பாடலில் அனைவர்க்கும் வரவேற்பு வழங்கி அறிவு கொளுத்துவார்.

## பெய்பெனப் பெய்யும் மழை :

பெண்ணின் பெருமையைப், "பெண்ணின் பெருந்தக்க யாவுள? என்றுரைக்கும் பைந்தமிழ்க் குறள். பாவேந்தரோ, 'தொழுதெழுவாள்' கவிதையில்

நிலந் தொழேன் நீர்தொ ழேன்

வளிதொழேன்! எரிதொழேன்

அலங்கல்சேர் மார்பன் எந்தன்

அன்பனைத் தொழுவதன்றி

என்று தலைமகள் தன் தோழியிடம் கூறுவதாகக் கூறி

தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்

பெய்யெனப் பெய்யும் மழை!

என்ற திருக்குறளின் விளக்கத்தைக் கவிதை வரிகளில் தருகிறார்.

நாட்டில் எங்கும் வறுமை வாட்டுகிறது, குடிமக்கள் அரசியாரைப் பார்த்து, 'ஒழிந்தது

வறுமை! அன்பினால் உதவுக! ' என்று வருந்திக் கூறினார்களாம். அம் மவையோ மன்னனிடம்,

பிழைத்தது மழை அத்தான்; பெய்!

என்று கேட்டுக்கொண்டாளாம். அவ்வளவுதான், குடிமக்கள் அனைவர்க்கும் மன்னனின்கை, மழைபோன்று மழைக்க - அதாவது மழைகொட்டுவதுபோல, செந்நெல்லை வண்டிகளில் ஏற்றிச் சென்று மக்களுக்கு வழங்க ஏற்பாடு செய்திட ஆணை வழங்கினானாம்.

## அமிழ்தம் எது? :

பிழைத்தது மழை!" என் அத்தான்
பெய்! , என்றேன் குடிகட் கெல்லாம்
மழைத்தது மழைக்கை செந் நெல்
வண்டிகள் நடந்த யாண்டும்!

எப்படி, 'பெய்யென்ப பெய்யும் மழைக்குப் பாவேந்தர் தரும் விளக்கம்! இவ்வாறு, பாவேந்தர், தமது பாக்களில் பற்பல குறட்பாக்களுக்குத் தெளிவுரை வழங்கி இருப்பதை ஆங்காங்கு காணலாம்.

ஆம்!

வானின்று உலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்றுணரற் பாற்று

என்று வள்ளுவர் வழங்கும் அமிழ்தக் குறளுக்குப் பாவேந்தர் தமது பைந்தமிழ்க்கைகளால் எழுதிய உரைதனை, 'எது அமிழ்தம்' என்ற கவிதையில் தருவதும் உண்மையில் அமிழ்தமேயாகும்.

'அமிழ்து' என்ற சொல், 'அம்' சாரியை பெற்று 'அமிழ்தம்' என்ற சொல்லாகிறது என்று விளக்கம் தருகின்றார். அமிழ்தம், அம்ருதம் என்ற சொற்களைப் பாற்கடல் கடைந்ததாகச் சொல்லப்படும் கதைக்கு உரித்தாக்கிவிட்டு, 'மழையே அமிழ்து' என்ற விளக்கத்தைத் தருகின்றார். 'இதனைச் சாவா மருந்தென சாற்றுகின்றாரே! அது என்ன? ' என்று வினா எழுப்புகிறாள், தலைமகள்.

வான் பெய்து கொண்டிருக்கும் ஆதலினால், மண்ணுலுகம்
தான் சிறக்கும்!' என்று குறள் சாற்றியது கேட்டாயோ!

என்று எதிர் வினா ஒன்றில் பொருந்திய பதிலை உரைத்து, 'ஆண்டாண்டுதோறும் மழைபெய்துகொண்டிருப்பதால்தான் உயிர்கள் அழியாது வாழ்கின்றன. அதனாலும், மழையே அமிழ்தமாகின்றது'. என்று உணரவைக்கின்றார். தொடர்ந்து, "வாழ்வார்க்கு வானம் பயந் தாற்றால்.....", "உறுதோ றுயிர்தளிர்யாழ் தீண்டலால்......" ஆகிய குறட்பாக்களுக்கும் விளக்கம் அளிப்பது, உண்மையில் கற்றவர் யாவரும் உணர்ந்து களிப்பதற்குரியதாகும்.

## குறள் நெறித் திருமணம் :

'பாரதிதாசன் கவிதைகள், மூன்றாம் தொகுதியின் இறுதியில், தந்தை பெரியார் அறிமுகப்படுத்தி, பேரறிஞர் அண்ணாவால் சட்ட வடிவம் கொடுக்கப்பட்டு, இன்றும், கலைஞர், பேராசிரியர் போன்றவர்களால் நாள்தோறும் நடத்தப்பட்டு வருகிற தமிழ்த்திருமணம், தமிழர்

திருமணம், சீர்திருத்தத் திருமணம் என்றெல்லாம் சொல்லப்படும் பகுத்தறிவு வழித் திருமணத்திற்கு 'புரட்சித் திருமணத் திட்டம்' என்று ஒன்றினைப் பாவேந்தர் வடிவமைத்து வழங்கியுள்ளார்.

அதில், அவையத்தார், முன்மொழிதல், வழிமொழிதல், அவைத்தலைவர் உரை, வாழ்க்கை ஒப்பந்தம், அறமொழிகள், நன்றி கூறல் என்ற அமைப்புடன் அறிமுகப்படுத்தி, 'தெய்வந் தொழா அள்.......! 'அன்பும் அறனும் உடைத்தாயின்....!, 'தற்காத்துத் தற்கொண்டாற் பேணி" 'மங்கலம் என்ப.....!, 'வழங்குவது வீழ்ந்தக் கண்ணும்....! 'இளிவரின் வாழாத மானம்....! என்ற ஏழு குறட்பாக்களை எடுத்தியம்பி இப்புரட்சித் திருமணத்தைக் 'குறள் நெறித் திருமண" மாகவே வகுத்துக்காட்டி இன்புறுத்துகின்றார் என்றால், பாவேந்தர், பைந்தமிழ்க்குறளில் கொண்டுள்ள ஈடுபாட்டிற்கு எல்லையும் உண்டோ?

* * *

# கவிதையில் தெரியும் காட்சிகள்



தென்கச்சி. கோ. சுவாமிநாதன்

ஒரு பூனை இருந்தது.

அது தன்னை ஒரு புலி என்று நினைத்துக் கொண்டிருந்தது.

தன்னைப்பற்றிய தகுதிக்கு மீறிய நினைவோடு அந்தப்பூனை நடந்து போய்க் கொண்டிருக்கிறது

அப்போது வழியில் ஒரு யானை அமைதியாக நின்று கொண்டிருக்கிறது.

அந்த யானை பொறுமையாக நின்று கொண்டிருப்பதால் இந்தப் பூனைக்கு அதனருகில் சென்று வாலாட்டினால் என்ன என்று தோன்றுகிறது.

உலக இயல்பு தானே இது!

இந்தப் பூனை அந்த யானையின் பக்கமாகச் செல்கிறது. சுற்றிவருகிறது. உற்றுப்பார்க்கிறது.

"ஏ, யானையே! எல்லாருக்கும் ஒரு பக்கம்தான் வால் இருக்கும் உனக்கு மட்டும் என்ன, ரெண்டு பக்கமும் வாலா?" என்று கேட்கிறது.

வேண்டாத வேலைதானே இது!

இருந்தாலும் யானை பொறுமையாகப் பதில் சொல்கிறது:

"இல்லே! பின்னாடி இருக்கிறதுதான் வால்! முன்னாடி இருக்கறது தும்பிக்கை!"

பூனை விடவில்லை;

"அதுசரி! உன் தும்பிக்கை உருண்டையா இருக்கே! அது என்னத்துக்கு?"

"ஓ அதைக் கேக்குறீயா! ஊற்றுலே தண்ணி இருக்கும்லே, அதை உறிஞ்சிக் குடிக்கறதுக்கு!"

"சரி! அதைவிடு! எல்லார்க்கும் பல்லு வாய்க்கு உள்ளேதான் இருக்கும்! உனக்கு என்ன அது வெளியேவே வந்துட்டுது! அதுவுமில்லாமே இவ்வளவு பெரிசா, நீளமா இருக்கு?"

"அதுவா? ஒரு புலி என்கிட்டே சீறிக்கிட்டே வருதுன்னு வச்சிக்க! அப்போ அதைத் தாக்கறதுக்காக!"

இதைக் கேட்டதும் பூனை கேலியாகச் சிரிக்க ஆரம்பிக்கிறது.

"அதுசரி! மலை எங்கேயாவது பாயறது உண்டா? அது முடியாத காரியம்!"

"என் உடம்பைப் பார்த்துட்டுதானே 'மலை'ங்கறே! நான் பாய வேண்டிய அவசியமில்லே....ஆனா மத்தவங்களைப் பாயவச்சுடுவேன்... இப்ப உன்னைப் பாய வைக்கிறேன் பார்!" என்று அந்தப் பூனையைத் துதிக்கையால் அலட்சியமாகத் தூக்கி எறிகிறது யானை!

எங்கேயோ போய்விழுந்த அந்தப் பூனை இடுப்பைப் பிடித்துக்கொண்டே எழுந்து நின்று பார்க்கிறது. தூரத்தில் அந்த யானை இன்னமும் பொறுமையாக ஆனால் கம்பீரமாக நின்று கொண்டிருக்கிறது.

இப்போதுதான் பூனைக்கு ஞானோதயம் பிறக்கிறது.

யானை பாயவேண்டிய அவசியமில்லை!
அதற்கு நீண்ட தும்பிக்கை இருக்கிறது!

அது கற்றுக்கொண்ட பாடம்;
வலியாரிடம் வாயாடக்கூடாது!

இந்தக்காட்சி பாவேந்தர் பாரதிதாசன் கைவண்ணத்தில் ஒரு கவிதையாக உருவெடுக்கிறது.

இரண்டு பக்கமும் வாலா? என்றது பூனை
எதிரி லேதும் பிக்கை என்றது யானை
உருண்ட துதிக்கை ஏனோ என்றது பூனை
ஊற்று நீரை உறிஞ்ச என்றது யானை
திரண்டு நீண்ட பல் ஏன்? என்றது பூனை
சீறும் புலியைத் தாக்க என்றது யானை
இருண்ட மலை பாயா தென்றது பூனை
எடுத்தெறிந்தது பூனையைப்போய் யானை!

இந்தக்கவிதையில் பாடமும் இருக்கிறது; படமும் இருக்கிறது. இதைப் படிக்கவும் முடிகிறது; பார்க்கவும் முடிகிறது. அதுமட்டுமல்ல. காட்சிகளின் ஓசையைக் கூட கவிதையில் கொண்டுவரமுடியும் என்பதை மிகவும் சுலபமாகச் செய்துகாட்டியிருக்கிறார். அந்த மாபெரும் கவிஞர்.

இதைக் கவனியுங்கள் :

ஒரு வீடு.

முகப்பில் சில தூண்கள். உயரே உத்தரம். அங்கே ஒரு சிட்டுக்குருவி கூடு கட்டியிருக்கிறது. அதிலே இளம் குஞ்சுகள் சத்தம் போட்டுக்கொண்டிருக்கின்றன.

அக்காட்சியை ஓசை நயத்தோடு சொல்ல வருகிறார் கவிஞர்:

ங ஞண நமன

ங ஞண நமன

இரு குருவிகள் கூட்டுக்குள்!

இப்படி பாடின பாட்டுக்கள்!

அடுத்த காட்சி :

இந்த சமயத்தில் ஒரு பாம்பு மெதுவாக தூணில் ஏறி, உத்தரம் வழியாக குருவிக் கூட்டை நெருங்குகிறது.

இதோ அந்த ஒலியும் ஒளியும்:

யரல வழள

யரல வழள

என்றொரு பாம்பு தூரத்தில்

மெதுவாய் ஏறிய காலத்தில்....

சிறு பறவைகள் கவலை மறந்து கத்திக் கொண்டிருக்கின்றன. ஆபத்து பாம்பு வடிவில் நெருங்கிக் கொண்டிருக்கிறது. அடுத்து என்ன நடக்கப்போகிறது? ஆவல் அதிகமாகிறது.

இதோ அந்த இறுதிக்காட்சி :

கசட தபற

கசட தபற

எனப் பறந்தன சிட்டுக்கள்!

எதிரில் சன்னல் வெட்டுக்குள்!

அவ்வளவுதான். அவை தப்பித்து விடுகின்றன. காட்சி நிம்மதியாக முடிந்து விடுகிறது.

குருவிகளின் ஓசையையும், பாம்பு ஊர்ந்து செல்லும் தன்மையையும், சிட்டுக்கள் சிறகடித்துப் பறக்கும் ஒலியையும் - அந்த வரிகளைப் படிக்கும் போதே நம்மால் கேட்கவும் முடிகிறது.

அதே சமயத்தில் சின்னஞ்சிறு உள்ளங்களில் தமிழ்மொழியின் வல்லின - மெல்லின - இடையின எழுத்துக்களும் பதிவாகி விடுகின்றன.

இப்படி, படிக்கவும் - பார்க்கவும் - கேட்கவும் வைக்க கவிதையால் முடியும் என்று காட்டியவர் பாவேந்தார்

அந்தக் குயில் பறந்துபோகலாம்! - என்றாலும்

அதன் குரல் மறந்து போவதில்லை!

இலக்கிய வானத்தில் அது என்றைக்கும் எதிரொலித்துக் கொண்டேயிருக்கும்.

* * *



# தென்றலும் நீ: புயலும் நீ:

புலவர் பொன்னியின் செல்வன்

ஏ......

பாவேந்தனே!
நீ
கொடுத்துவிட்டுப் போனது
பீரங்கியும்
துப்பாக்கியும்.

எங்கள் பழக்கம்
தோசை சுடுவதில் என்பதால்
அதைத்-
தொடவே இல்லை!

"கொலை வாளினை எடடா"
என்று-
வாளைத்தந்தாய்
நாங்கள்
விரலே தேவை இல்லை
என்று-
வெட்டி விட்டோம்

உன் கொள்கைகளை
ரணப்படுத்துவதே
இப்போது-
எங்கள் கொள்கை.

தமிழைச் சுவாசிக்கச் சொன்னாய்,
காற்றே கலப்படமானதால்
காசத்தில்
குறைந்து கொண்டிருக்கிறோம்!

எங்களுக்கு
எங்களை அடையாளம்
காட்டிவிட்டுப் போனாய்;
எங்களைத்
தொலைத்துக் கொண்டிருக்கிறோம்;
என்றைக்கோ....
தேடப் போகிறோம்!

'புதியதோர் உலகம்' காண
புது ரத்தம் பாய்ச்சினாய்;
புதியதோர் கலகம் செய்து-
ஆயுள் ரேகையை
அழித்துக் கொண்டிருக்கிறோம்.

நீ தூக்கியது
பகுத்தறிவுக்குப் பல்லக்கு;
பல்லக்கிற்கும்
பாடைக்கும்-
வித்தியாசம் தெரியாமல்
நாங்கள் - தூக்கிக் கொண்டிருக்கிறோம்.

உன் எழுதுகோலை
குனிய வைத்து
தமிழை - நிமிர்த்தி வைத்தாய்;
நீ-
நிமிர்த்திய முதுகில்
அந்நியச்சுமை
இப்போது - அழுத்துகிறது!

நீ - தமிழுக்குத் தென்றல்!
அதன் பகைவர்க்கு-
புயல்!
தமிழ்த் தாயின் மீது
துச்சாதனங்கள்
தொடங்கிவிடும் அபாயம்!

எங்கள் முகவரிகள்
அழிக்கப்படாமல் - காக்க
ஏ..... குயிலே
கொஞ்சம் வந்துபோ.
இனி-அதனால்
உன் நூற்றாண்டு நாளில்
நூறு கைகளாவது உயரட்டும்;
அதில்-
எங்களைப் புதுப்பித்துக் கொள்கிறோம்.



* * *

# பாவேந்தரின் கடவுட் கொள்கை

து. வெள்ளமுத்து

இந்த நூற்றாண்டின் இணையற்ற கவிஞராகப் போற்றப்படுவர் புரட்சிப் பாவேந்தர் பாரதிதாசனார். அவர் புரட்சிக் கவிஞர் மட்டுமல்ல புத்துலகச் சிற்பியும் கூட. சிந்துக்குத் தந்தை; செந்தமிழ்த் தேனீ; குவிக்கும் கவிதைக் குயில்; இந்நாட்டைக் கவிழ்க்கும் பகையைக் கவிழ்க்கும் கவிமுரசு; மண்டும் மதங்கள் அண்டா நெருப்பு; அயலார் எதிர்ப்புக்கு அணையா விளக்கு; திறம்பாட வந்த மறவன்; புதிய அறம்பாட வந்த அறிஞன்" என்றெல்லாம் பாரதியைப் பலபடப் புகழும் அவரது புகழ்மொழிகள் அவருக்கே முற்றிலும் பொருந்தும். அவருடைய கடவுட் கொள்கை பற்றி ஆராய்வது அவர் ஒரு புரட்சியாளர் என்று நிறுவுவதற்குத் துணை செய்யும் .

புரட்சி என்றால் என்ன? புரட்சி என்ற சொல் புரட்டு என்ற வினையடியாகப் பிறந்த பெயர்ச் சொல். புரட்டுதல் என்றால் என்ன? மேல்கீழாகச் செய்தல் என்பது அதன் பொருள். கல்லைப் புரட்டு என்றால் கிடக்கின்ற கல்லின் மேற்பகுதி கீழாகவும், கீழ்ப்பகுதி மேலாகவும் இருக்குமாறு மாற்றிவை என்று பொருள். நீண்ட நெடுங்காலமாக உள்ள கருத்தை, செயலை, வழக்கத்தை மாற்றியமைப்பது கூடப் புரட்சிதான். இது கருத்துப் புரட்சி. நம் பாவேந்தர்கூட கனகசுப்புரத்தினமாக இருந்த தொடக்க காலத்தில் கடவுள் பற்றிப் பலபாடல்களைப் பாடியுள்ளார். 'சுப்பிரமணியர் துதியமுது'. போன்ற பாடல்கள் அதற்கு எடுத்துக்காட்டு. பாரதியார் முன்னிலையில் பாடிய முதல் பாட்டே கூட "எங்கெங்கும் காணினும் சக்தியடா" என்பதுதான். பாரதியின் இனிய எளிய தமிழ் நடையும், சமுதாயச்சீர்திருத்த எண்ணங்களும்தான் பாவேந்தரை அவர்பால் ஈர்த்தன. பாரதியின் மேல்கொண்ட அளவற்ற அன்புதான் தம் பெயரையே மாற்றிக் கொள்ளுமாறு செய்தது.

தந்தை பெரியார் அவர்களோடு ஏற்பட்ட தொடர்பு பெரியாரைத் தலைவராக ஏற்றுக் கொள்ளச் செய்தது. அதன் பிறகு பெரியாரின் கொள்கைகளைப் பரப்புவதே தன் கொள்கையாகக் கொண்ட பாவேந்தர் அதற்குத்தக பாடல்களை இயற்றினார். பெரியாரின் அனைத்துக் கொள்கைகளையும், அப்படியே ஏற்றுக் கொண்ட பாவேந்தர் பெரியாரின் கடவுட் கொள்கையினையும் அப்படியே ஏற்றுக் கொண்டார் எனக் கருதுவதற்கு இடமுண்டு. பெரியாரின் கடவுட் கொள்கை உலகறிந்த ஒன்று. கடவுள் இல்லை என்பதை ஆணித்தரமாகக் கூறி, 'கடவுளைக் கற்பித்தவன் முட்டாள், பரப்பியவன் அயோக்கியன், வணங்குபவன் காட்டுமிராண்டி" எனப் பதிவு செய்து வைத்துள்ளார். பாவேந்தரின் பாடல்களில் அவ்வளவு வேகம் காணப்படவில்லை என்றாலும், அதுதான் அவரது கருத்தும் என்பதற்குப் போதிய சான்றுகள் உள்ளன.

சேசுமுகமது என்றும், சிவனென்றும் அரியென்றும், சித்தார்த்தனென்றும் பேசிவளர்க்கின்ற

போரில் உன் பெயரையும் கூட்டுவர். அதற்கு நீ ஒப்ப வேண்டாம். கடவுள் என்று சொன்னால் இரு காதையும் மூடு. கோயில் என்று சொன்னால் ஒரு காதத்தில் ஓடு என்பது பாவேந்தர் பகுத்தறிவு உள்ள ஒவ்வொருவருக்கும் வழங்கும் அறிவுரையாகும். கண்ணுக்குத் தெரியாத கடவுள் கருங்குரங்கென்றும், அந்தக் கருங்குரங்கின் வாலில் மதம் என்ற கழுதையும், அக்கழுதையின் வாலில் சாதி என்னும் வௌவாலும் தொங்குகின்றன. என்றும் கருங்குரங்கின் வாலினை அறுத்துவிட்டால் சாதி சமயத் தீ ஒழிவதோடு கடவுளின் சுமையும் குறையும் என்றும் நகைச்சுவையாகக் கூறிக் கடவுளின் பெயரால் உள்ள சாதி சமயங்களைச் சாடுகிறார்.

"இல்லை என்பார்கள் சிலர், உண்டென்று சிலர் சொல்வார். எனக்கில்லை கடவுள் கவலை" என்பது அவரது கொள்கை முடிவு எனக் கொள்ளலாம். எழுப்புசுவர் உண்டென்றால் அதனை எழுப்பியவன் ஒருவன் இருக்க வேண்டுமல்லவா என்ற வினாவை அவராகவே எழுப்பிக்கொண்டு, கடவுள் இவ்வுலகத்தைப் படைத்தார் என்றால் கடவுளைப் படைத்தவன் ஒருவன் இருக்க வேண்டுமல்லவா என்று தருக்க முறையில் பதிலளிப்பது அவரது உயர்ந்த சிந்தனைத் தெளிவிற்குத் தக்க சான்றாகும்.

கடவுள் என்ற நாமதேயம்
கழறிடாத நாளிலும்
உடைமையாவும் பொதுமையாக
உலகு நன்று வாழ்ந்ததாம்.
கடையர் செல்வர் என்ற தொல்லை
கடவுள் பேர் இழைத்ததே

என்பதன் மூலம் ஏற்றத் தாழ்வுகள் இவ்வுலகில் அமைந்ததே கடவுள் பெயரால்தான் என்கிறார்.

ஊசிமுனையின் காதுக்குள் ஒட்டகம் நுழைய முடிந்தாலும் பணக்காரர்கள் சொர்க்கத்துக்குச் செல்ல முடியாது என்பது விவிலியம். அதனையே பாவேந்தரும் கூறுகிறார். ஓர் ஊரின் கோயில் பாதிரியார் நகைகள் அணிந்து ஆடம்பரத்துடன் யாரும் கோயிலுக்கு வரக்கூடாது என்றார். பக்தர்கள் வருகை நின்று போயிற்று. அதுகண்ட பாதிரியார் நகைகளை அணிந்துகொண்டு வரலாம் என்று விதி வகுத்தார். நகைபோட்ட பக்தர்கள் எல்லாம் அங்கு வந்து சேர்ந்தார்கள். ஆனால் ஏசுநாதர் மட்டும் வரவில்லை என்கிறார். கடவுளுக்காக நகைகளைத் துறக்க இயலாத மக்கள், நகைகளுக்காகக் கடவுளைத் துறப்பதற்குத் தயாராயுள்ளனர். இதன் மூலம் கடவுள் பெயரால் நடைபெறும் போலி வாழ்க்கையை அம்பலப்படுத்துகிறார்.

சிலர் இயற்கையைக் கடவுள் என்பார். அதைக் கூடப் பாவேந்தர் ஏற்கவில்லை.

குன்றின்மீது நின்று கண்டேன் கோலம் என்ன கோலமே
பொன்ததும்பும் அந்திவானம் போதம் தந்ததேடி தோழி
முன்புகண்ட காட்சி தன்னை முருகன் என்றும் வேலனென்றும்
கொன்பயின்றார் சொல்லுவார் அது குறுகும் கொள்கை

என்பதே அதற்குத் தக்க எடுத்துக் காட்டாகும்.

ஆலயம் சாமி என்று அமைத்தவர்கள் எல்லாம் மக்கள் அறிவை இருட்டாக்கி ஆள நினைத்தவர்கள். ஒரு மடாதிபதியின் கனவில் சிவபெருமான் தோன்றி மடத்தின் சொத்துக்களை எல்லாம் மக்களுக்குப் பொதுவாக்கி விட்டேன். திடமிக்க நீ இனி சிவத்தொண்டு மட்டும் செய்க என்று கூறியவுடன் மனங்கலங்கிய மடத்தின் தலைவர் சொத்துக்களுக்குப் பலத்த காவல்

போட்டார் என்று வேடிக்கையாகக்கூறி, சிவனே நேரில் வந்தாலும் அவனைப் புறந்தள்ளி சொத்துக்களுக்கே முன்னுரிமை தருவர் என்று போலி மதத் தலைவர்களின் உண்மை உருவைத் தோலுரிக்கிறார்.

தொடக்க காலத்தில் கடவுள் பற்றிய பாடல்களைப் பாடியுள்ள பாரதிதாசன், பாரதி, பெரியார் ஆகிய பெருமக்களின் தொடர்பினைப் பெற்றபிறகு சீர்திருத்த எண்ணங்களில் மனம் கொண்டு கடவுளைப் பற்றிக் கவலைப் படத் தேவையில்லை என்ற நிலையை அடைந்து, கடைசியாகத் திருமூலர் கூறிய "ஒன்றே குலம், ஒருவனே தேவன்" என்ற கொள்கையை ஏற்றுக் கொண்டவராகத் தோன்றுகிறார். அந்த ஒரு கடவுளும் உருவமும், பெயரும் இல்லாததாக, பற்றற்றதாக இருக்க வேண்டும் என்றும் உணர்த்துகிறார் என்பது அவரது பாடல்கள் மூலம் தெரிய வருகின்றது.

* * *

# சிமிழ்த்தெழுக: செய்க தமிழ்த் தொண்டு

-இரா. இளங்குமரன்.



ஆ ! வேந்தர் இவரேகாண்! அளப்பரிய வளநாட்டின்
கோவேந்தர் இவரேகாண்! "கொல்லேற்றுக் கோடஞ்சாய்!
கோவரிக்கும் கூரம்புக் கொடுமைக்கும் தானஞ்சாய் !
ஆளரியே றன்னவனே! அயராதே! அஞ்சாதே !
கொலைவாளை எடுத்திடுவாய் ! கொடும்பகையை ஒழித்திடுவாய்!
புலைவாழ்வைத் தகர்த்திடுவாய் ! புகழ்பூண்வாய் ! " என்றுரைத்த
நாவேந்தர்: நல்வேந்தர்: நங்களுயிர் ஆம்வேந்தர்:
பாவேந்தர்; பார்வேந்தர்; பைந்தமிழப் படைவேந்தர்;
சீர்திருத்தச் செழுவேந்தர்; போர்நிறுத்து பெருவேந்தர்;
கூர்பழுத்த கோடரியாய்க் கொழுந்தமிழர் நல்வாழ்வை 10
நேர்சிதைத்து வருகின்ற நெறிகெட்ட பகைவர்களைச்,
சூர்அறுத்த சுடர்வேலாம் சொற்படையால் சவட்டியவோர்
தேர்வேந்தர்; திருவேந்தர்; தெவிட்டாத தேன்பாகு
நீர்ஏந்தும்' என்றென்று நேயத்தால் வெள்ளமென்ப
பொழிந்துவந்த புகழ்வேந்தர்; பொருள்கருதிப் புகழ்கருதி
அழிவழியில் பாடாமல், அறவழியில் பாடியநற்
கோல்வேந்தர்; கொடைவேந்தர்; கொள்கைவளர் சீர்வேந்தர்;
ஆல்தந்த வீழ்தென்ன அருங்கவிஞர் பலர்தோன்ற
மேல்வந்த தாய்வேந்தர்: மிகக்குறுக லானவர்கள்
ஆலென்னப் பறந்தந்தோ, "ஆரியத்தை - பழம்புரட்டை - 20
சாத்திரமாம் கூளத்தை - சாதகபஞ் சாங்கத்தை -
தீத்திறத்து வழிபாட்டை - தீவைத்துச் சாய்க்கவரு
கொடிய "னெனக் குலைநடுங்கக்; கொள்கைவளர் கூட்டத்தார்,
'முடியரசர்' எனவாழ்த்த, முத்தமிழர் சொத்தாக,
மூவேந்தர் வழியாக, முட்டறுக்கு ம் அறிவாகக்,

காவேந்து கவியாக், கணையுதைக்கும் சொல்லாக,
மக்கள்நலக் கவியாக, மலர்புரட்சிக் கனலாகச்,
சிக்கறுக்கும் சேயாகச், செந்தமிழர் தந்தவத்தால்
வந்ததொரு மணியாக, வண்டமிழின் வாழ்வாகக்,
கொந்தவிழ்க்கும் தென்றலாக, வந்தமைந்தார் பாவேந்தர்; 30
புதுச்சேரி மண்ணுக்குப் புதுமையுண்டு புரட்சியுண்டு
மதுநேர்க்கும் கலையுண்டு மாத்தமிழக் கவியுண்டாம்;
இத்தனையும் செறிந்திருக்கும் எழில்மிக்க வகையுண்டாம்;
மெத்தவினவ மெய்ப்பிக்கும் மேதக்க சான்றாகத்
துன்னியவர் பலருண்டு; துலங்கியவர் சிலருண்டு;
மன்னியசீர்ப் பாவேந்தர் மற்றவருள் தலைநின்றார்;
வீட்டுக்கு மாமணியாய், விருப்புக்குத் தாசராய்,
நாட்டுக்குப் பாவேந்தாய், நற்புரட்சிக் கவியானார்;
துறைதோறும் துறைதோறும் தாய்த்தமிழ்க்குத் தொண்டாற்ற
முறையான திட்டங்கள் நீட்டியுளார்; தீட்டியுளார்; 40
காட்டியநல் வழிப்படியே, நாட்டொரே! நல்லோரே!
ஈட்டிகளைப் போற்சென்றே இலக்கறிந்து பணிசெய்க;
தமிழ்ப்புரட்சி தமிழ்வாழ்வு தமிழ்நாடு தழைத் தோங்கச்
சிமிழ்த்தெழுக! செய்கதமிழ்த் தொண்டு! 44

* * *



# நல்லதொரு பல்கலைதேர் கழகம்



பி. என். சண்முகசுந்தரம்

தான்பிறந்த சமுதாயம் தளர்ச்சி நீங்கத்
தாழ்வுற்ற தனிமனித உரிமை ஓங்க
ஏன்பிறந்தோம் என்றெண்ணி ஏங்கி நின்ற
நிலைமாற நெஞ்சத்தை நிமிர்த்தி நின்று
வானளந்த புகழ்படைத்த தமிழர்தங்கள்
வரலாற்றுச் சீர்மரபை நன்க றிந்து
தேன்கலந்த தமிழ்பேசும் தென்னாட் டாரை
தெளிவடையச் செய்திடவே உள்ளங் கொண்டார்.

மன்னராட்சி என்னவாட்சி? மாண்பு மிக்க
மக்களாட்சி மலரநச்சி 'பாண்டியன் பரிசை' த்
தன்னகத்து உருவாக்கித் தமிழ்க்கவி மழையாய்
தந்திட்டார் புரட்சிக் கவி தரணி எல்லாம்.
மன் றுபெரும் மக்களிடை சமத்து வம்தான்
தழைத்தோங்க நால்வருண பேத மெல்லாம்
என்றென் றும் இல்லென் று எடுத்துச் சொல்ல
காதலுக்குப் 'பில்கணீயம்' தமிழில் தந்தார்.

வாழ்வாங்கு வாழ்வென் று வள்ளுவர் சொன்ன
இல்வாழ்வு இல்வாழ்வாய் உள்ளம் நொந்து
வாழ்வார்க்கு வழிகாட்டி வல்ல குடும்பம்
நல்லதொரு பல்கலைதேர் கழக மென் று
ஆழ்ந்தாய்ந்து இல்லறத்தின் திறத்தை எல்லாம்
அறிந்திடவே அன்புடனே அறத்தின் பண்பும்
தாழ்ந்திருந்து கடனாற்றும் தலைவி மக்கள்
மாண்புகளைப் புகன்றிட்டார் "குடும்ப விளக்கில்"

இல்லாத கதைகட்டித் தமிழி னத்தை
இகழ்ந்தொ துக்கப் பார்ப்பாரை இனங்காட் டித்தெளி
வில்லாத தமிழுலகில் எழுச்சிக் காக
வேண்டுவதே அறிவுசார்ந்த உணர்ச்சி என் று
எல்லாரும் அறிந்துகொண்டு கல்வி கற்க
எள்ளளவும் கல்வியிலா "இருண்ட வீட்டை"
வல்லாங்கு விளக்கேற்றி வாழச் சொல்லி
வழிசொன்னார்; விழிபெற்று வாழச் சொன்னார்.

இன்பத்தைத் தேடியெங்கும் அலைதல் வேண்டா;
இவ்வுலக வாழ்வெல்லாம் இன்பம், இன்பம்.
துன்பத்தை மறந்திடவே இயற்கை அன்னை
தோற் றுவிக்கும் எழிற்கோலம் "அழகின் சிரிப்பு"
அன்புற்ற தமிழ்த்தாயின் அழகுச் சொல்லும்
அதனூடு பொதிந்து நிற்கும் அருமைப் பொருளும்
தன்பாட்டில் வெளிப்பட்டுத் தந்திடும் இன்பம்
"இசையமுதாய்ப்" பருகிடவே இயற்றித் தந்தார்.

வீரராக வாழ்ந்திருப்போம் வெற்றி சேர்த்து
வீணருக்கு உழைத்துழைத்து மாள மாட்டோம்
தீரராகச் சேர்ந்திருப்போம் திசைகள் எட்டும்
திகைப்புறநாம் செயற்படுவோம் ஒன் று கூடி
காரணத்தைக் கண்டறிவோம் கண்ட பின்னர்
சாத்திரங்கள் சமயங்கள் சாற் று கின்ற
நேரலாத நீதிகளை நெறியு மற்ற
நியதிகளை உடைத்தெறிவோம் பகுத்தறி வதனால்

மங்கையர்க்கு மதிப்பளிப்போம்; மனைவாழ் வினிலே
பங்குபெறும் பாவையர்க்குப் பயனொன் றுமிலா
பங்கமான கைம்மையினை வேர றுத்துப்
புதிதான மறுமணத்தைப் புகுத்தி அந்த
நங்கையரின் நல்வாழ்வில் நலமே விடவும்
நீதியற்ற சாதிமுறை நீங்கித் தமிழர்
சங்ககால வாழ்வுபெறச் சாதிக் கலப்பால்
ஒன் றுபட நூ றுகவிப் புரட்சி செய்தார்.

கலையான அத்துணையும் கவிதை யாலே
காலத்தால் அழியாமல் காத்து வந்த
நிலையான பே றுடைய நீதி சான்ற
நெறிகோடாத் தமிழ்நாட்டில் சரியாகப் பொருள்
விலைபோகா வேற்றாரின் செருக்கு அறுத்து
சீர்திருத்தச் செம்மலாம் புரட்சிக் கவிக்கு
மலைஞால நாட்டாரின் மருளோட் டிட்ட
மாகவிஞர் குமரனாசான் மற்றொவ் வாரே.

* * *

# புரட்சிக் கவியின் பார்வையில் நூலக இயல்

ஆ. மனோகரன்

"குயில் கூவிடும் மயில் ஆடிடும், நறுமணக் காற்று குளிர்ந்தடிக்கும், கண்ணாடி போன்ற நீர் ஊற்றுக்கள் மிகுந்திருக்கும். பூக்கள் மணங்கமழ, தேனீக்கள் இசைபாட, வேட்டுவப் பெண்கள் விளையாடப் போக, காட்டு மறவர் காதல் மணம் செய்திடுவார் சஞ்சீவி பர்வதத்தின் சாரல் தன்னில்" என்றார் புரட்சிக்கவி. ஆனால் சஞ்சீவி பர்வதத்தின் சாரலின் சுகந்தத்தினை, களிப்பினை, இன்னிசையை, கற்பனை நீருற்றினை, கூவிடும் புரட்சிக் குயிலினை, ஆடிடும் மயிலினை, கருத்தும் கற்பனையும் காதல் மணம் புரிவதை இவர் பாடல்களில் காணலாம் என்றால் மிகையன்று. அங்கிங்கெனாதபடி எங்கும் புரட்சிப் புதுமணம் கமழச் செய்த கவி வரைந்த வண்ணமிகு கோலம்தான் நூலக இயல் பாடல்கள்.

**நூல்கள் :**

நூல்களின் தன்மை பற்றி பாவேந்தர்
நீதி நூல் விளை! உயர் நூல் உரை
நிச நூல் மிக வரைவாய்

என்று பாடினார். தனிமனிதன் வாழ்வினில் நூல்கள் ஆற்றும் பணியினை, அவை தரும் புத்துணர்வினை, ஒளி காட்டும் சோதியாக அவை விளங்குவதைத்

தனித்தமைந்த வீட்டில் புத்தகமும் நானும்
சையோகம் புரிந்ததொரு வேளை தன்னில்
இனித்த புவி இயற்கையெழில் எல்லாம் கண்டேன்
இசை கேட்டேன்! மணம் மோந்தேன் சுவைகள் உண்டேன்
மனதாலே மிக்குயர்ந்த கவிஞர் நெஞ்சின்
மகா சோதியிற் கலந்த தெனது நெஞ்சம்
சனித்ததங்கே புத்துணர்வு! புத்தகங்கள்
தருமுதவி பெரிது! மிகப் பெரிது கண்டீர்

என்று பாடினார்.

தமிழ் வளர்ச்சியில் நூல்களின் பணி இன்றியமையாதது. எனவே நூல்கள் எளிய நடையில் இருக்க வேண்டும். சிந்தனைப் புதுப்புனல் பெருக வேண்டும். அவை செழுமை மிக்கதாக விளங்க வேண்டும். எளியோருக்கும் கல்வி அளித்திடல் வேண்டும். அனைத்துத் துறைகள் தமிழ்

நூல்களைத் தன்னகத்தே கொண்டு சிறப்படைய வேண்டும். அப்பொழுதுதான் ஏற்கனவே வளர்ந்த தமிழ் மேலும் வளரும் என்பதனை,

எளிய நடையில் தமிழ் நூல் எழுதிடவும் வேண்டும்
இலக்கண நூல் புதிதாக இயற்றுதலும் வேண்டும்
வெளியுலகில். சிந்தனையில் புதிதுபுதிதாக
விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்களெலாங் கண்டு
தெளிவுறுத்தும் படங்களொடு சுவடியெலாம் செய்து
செந்தமிழைச் செழுந்தமிழாய்ச் செய்வதுவும் வேண்டும்
உலகியலின் அடங்கலுக்கும் துறை தோறும் நூற்கள்
ஒருத்தர் தயை இல்லாமல் ஊரறியும் தமிழில்
சலசலவென எவ்விடத்தும் பாய்ச்சிவிட வேண்டும்.

என்று உரைக்கிறார்.

சமுதாயத்தின் சரிபாதியான பெண்கள் சமஉரிமை பெற்றிடல் வேண்டும் என்பதோடு நூல்களின் உதவியோடு ஆய்வுகளும் மேற்கொள்ள வேண்டும் என்று

அமுதவல்லி என் ஆசைக்கொருபெண்
தமிழிலக்கியங்கள், தமிழ் இலக்கணங்கள்
அமைவுற ஆய்ந்தாள்; அயல் மொழி பயின்றாள்
ஆர்ந்த ஒழுக்க நூல் நீதி நூல் அறிந்தாள்"

என்ற பாடலின் மூலம் தன் கருத்தினை வெளிக் கொணர்கிறார்.

இன்றைய நூல்கள் இளைஞர்தம் வாழ்வினைக் கற்பனை வானில் பறக்கச் செய்கின்ற வேளையில், வாழ்க்கையை வானளாவ உயர்த்திட

கற்கண்டு மொழியில் கற்கண்டு கவிதைகள்
வாழ்க்கையை வானில் உயர்த்தும் நூல்கள்
தொழில் நூல் அழகாய்த் தொகுத்தனர்.

என தமிழ்க்கவிஞன் தமிழ்க்கனவு காண்கிறான்.

## பருவ இதழ்கள்:

பருவ இதழ்கள் நாள்தோறும் புதிய செய்திகளோடு வலம் வருபவை. ஒளிதருபவை. எழுச்சி ஊட்டுபவை. சாதி, சமய, பொருளாதார பேதமின்றி ஒருமைப்பாட்டிற்கு வித்திடுபவை. எனவே,

காரிருள் அகத்தில் நல்ல
கதிரொளி நீதான்! இந்தப்
பாரிடைத் துயில்வோர் கண்ணிற்
பாய்ந்திடும் எழுச்சி நீதான்

ஊரினை நாட்ட, இந்த
உலகினை ஒன்று சேர்க்கப்
பிறந்த பத்திரிகைப் பெண்ணே

என்று புகழ் பாடுகின்றார்.

பருவ இதழ்கள் வளமான எண்ணங்களைச் சுமந்து வந்து மக்களிடையே அறிவு மழையாகப் பொழிவதால் குறுகிய எண்ணங்கள் விலகி இக்குவலயம் மேலும் செழிப்படைகிறது என்ற கருத்தினை,

அறிஞர் தம் இதய ஓடை
ஆழ நீர் தன்னை மொண்டு
செறிதரும் மக்கள் எண்ணம்
செழித்திட ஊற்றி ஊற்றிக்
குறுகிய செயல்கள் தீர்த்துக்
குவலயம் ஓங்கச் செய்வாய்
நறுமண இதழ்ப் பெண்ணே உன்
நலம் காணார் ஞாலம் காணார்

என்ற பாடல் வரிகளில் நாம் காணலாம்.

நாளை கிடைக்கும் பலாக் காயை விட இன்று கிடைக்கும் களாக்காயே மேன்மை பெற்றது என்பது பழமொழி. களாக்காய் சேகரிப்பது எளிதான செயல் அன்று. பலாக் காயிலே முள்ளிருக்கும். ஆனால் களாக்காய் சேகரிக்கச் செல்லும் வழியெல்லாம் கல்லும் முள்ளும் நிறைந்திருக்கும். ஏனெனில் களாக்காய் மலைகளிலும், காடுகளிலும் விளைகின்ற பொருளாகும். நம் நாட்டில் மக்களின் மத்தியில் நல்லெண்ணத்தை வளர்ப்பது கடும்புதர் விலக்கிச் சென்று களாப்பழம் சேர்ப்பது போலாகும். அப்பணியில் ஈடுபடுவோருக்குப் பருவ இதழ்கள் எவ்வாறு பயன்படுகின்றன என்பதை

கரும்புதர் விலக்கிச் சென்று
களாப்பழம் சேர்ப்பார் போலே
நெடும்புவி மக்கட்கான
நினைப்பினிற் சென்று நெஞ்சிற்
படும்பல நுணுக்கம் சேர்ப்பார்
படித்தவர் அவற்றையெல்லாம்
"கொடும்" என அள்ளி உன்தாள்
கொண்டார்க்குக் கொண்டு போவாய்

என்ற வரிகள் நினைவு படுத்துகின்றன.

வானிடை நிகழும் கோடி
மாயங்கள், மாநிலத்தில்
ஊனிடை உயிரில் வாழ்வின்

உட்புறம் வெளிப்புறத்தே
ஆன நற்கொள்கை, அன்பின்
அற்புதம் இயற்கைக் கூத்துத்
தேனிதழ் தன்னிற் சேர்த்துத்
தித்திக்கத் தருவாய் நித்தம்

வானியில், மண்ணியல், உயிரியல், அன்பின் வெளிப்பாடு, இயற்கையின் இன்ப ஊற்று முதலான பல பகுப்புகளின் செய்திகளைத் தொகுப்பாக அள்ளித்தருகின்ற கருவிதான் பருவஇதழ்களாகப் பரிணமிக்கின்றன என்பதை மேற்கண்ட பாடல் பறைசாற்றுகின்றது.

பருவ இதழ்களில் வரும் கதை சிறுகதையானாலும் அதன் கருத்தோ பெரியது. இன்றைய உலகில் நடைமுறைப்படுத்தப்பட்ட ஊழல் அம்பலத்தில் வருகிறதென்றால் யாராலே, கறைபடிந்த கரங்கள், கறைபடிந்த உள்ளங்கள் தூய்மை பெற்று பெருமை பெறுவது யாராலே; பருவ இதழால்தான் என்பதைச்

சிறுகதை ஒன்று சொல்லிப்
பெருமதி யூட்டும் நாளே
அறைதனில் நடந்தவற்றை
அம்பலத்திழுத்துப் போட்டு
கறையுளம் தூய்மை செய்வாய்
களைப்பிலே ஊக்கம் செய்வாய்
நிறை பொருள் ஆவாய் ஏழை
நீட்டிய வெறுங்கரத்தே

என்ற பாடல் அடிகளில் காட்டுகிறார்.

எளியோர், வலியோர், சிறியோர், பெரியோர் என்ற பேதமின்றி அனைவரும் பருவ இதழ் படித்தால் சிறப்பு தரும் வாழ்வு பெற்றார் என்பதனை

தெருப்பெருக் கிடுவோருக்கும்
செகம் காக்கும் பெரியோருக்கும், கை
இருப்பிற் பத்திரிகை நாளும்
இருந்திடல் வேண்டும்! மண்ணிற்
கருப்பெற் றுருப் பெற்றிளநடை
பெற்றுப் பின்னர் ஐந்தே ஆண்டு
வரப் பெற்றார், பத்திரிகை நாளும்
உண்டென்றால் வாழ்க்கை பெற்றார்.

என்று கூறுகிறார்.

### நூலகம்:

மனிதரிடையே இயல்பாகவே காணப்படும் எதனையும் அறியும் முயற்சியானது அறிவை வளர்த்துக் கொள்ளப் பயன்படுகிறது. சில நேரங்களில் அனுபவத்தின் மூலம் அறிவு பெறுகிறோம். நாம் அறிந்தவற்றை மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்ள விரும்புகிறோம். எனவே

நாம் அறிந்தவற்றை எதிர்காலச் சந்ததியினரும் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தினால் அவற்றை ஆவணங்களாகப் பாதுகாத்து வைக்கிறோம். பழங்காலத்தில் சிந்தனைகள் குகைகளிலும் உலோகங்களிலும், கற்களிலும் களிமண் துண்டுகளிலும் இலைகளிலும் வரைவுகளாகப் பாதுகாக்கப்பட்டிருந்தன. ஆனால் இன்றோ நம்முடைய சிந்தனைகளை வடிவங்களாக்கிப் புத்தகங்கள், பருவ இதழ்கள், காந்த இயல் பேழை, ஒலிப்பேழை, ஒலி மற்றும் ஒளிப் பேழை ஆகிய கருவிகளின் மூலம் வெளிப்படுத்துகிறோம். ஒரு குறிப்பிட்ட காலத்தின் சிந்தனைகளை அறிவதும், நமக்கு எந்த ஆவணங்கள் பொருத்தமானவை என்று தேர்வு செய்தும் அனைத்தையும் பெறுவதற்குப் பொருளாதாரத் தகுதி பெறுவதும், அவற்றைத் தேவைப்படும் நேரத்தில் பெறுவதும் தனிமனிதனால் இயலாத ஒன்றாகும். எனவேதான்

மனிதரெல்லாம் அன்பு நெறி காண்பதற்கும்
மனோபாவம் வானைப் போல் விரிவடைந்து
தனிமனிதத் தத்துவமாம் இருளை போக்கிச்
சகமக்கர் ஒன்றென்ப துணர்வதற்கும்
இனிதினியாய் எழுந்த உயர் எண்ணமெல்லாம்
இலகுவது புலவர்தரு சுவடிச்சாலை
புனிதமுற்று மக்கள் புது வாழ்வு வேண்டில்
புத்தகசாலை வேண்டும் நாட்டில் யாண்டும்

என்று வலியுறுத்துகிறார்.

இன்றைய நாளில் நாம் இலவச உணவு பெறுகிறோம். இலவச ஆடை பெறுகிறோம். இலவச கடன் கேட்கிறோம். ஆனால் புரட்சிக் கவியோ,

இலவச நூற்கழகங்கள் எவ்விடத்தும் வேண்டும்

என்று கேட்கிறார்.

## நூலக வகைப்பாட்டியல் :

தமிழ்நாட்டில் உள்ள கல்விநிலையங்களைப் போல நூலகங்கள் பெருக வேண்டும். நூலகங்களில் நூல்களைத் துறைவாரியாகப் பிரித்து அடுக்கி நுகர்வோருக்குப் பயன்தரும் வகையில் நூலகங்களை உருவாக்க வேண்டும் என்பதைப் பாவேந்தர்,

தமிழர்க்குத் தமிழ்மொழியில் சுவடிச்சாலை
சர்வகலா சாலையைப் போல் எங்கும் வேண்டும்
தமிழிலாப் பிறமொழி நூல் அனைத்தும் நல்ல
தமிழாக்கி வாசிக்கத் தருதல் வேண்டும்
அமுதம் போல் செந்தமிழிற் கவிதை நூல்கள்
அழகியவாம் உரைநடையில் அமைந்த நூல்கள்
சுமை சுமையாய்ச் சேகரித்துப் பல்கலைசேர்
துறை துறையாய்ப் பிரித்தடுக்கி வைத்தல்

எனப் பகர்கிறார்.

### நூலகங்களின் பணிகள்:

நூலகங்கள் கல்விநிலையங்களாக, தனிமனித மேம்பாட்டினை வளர்க்கும் இல்லங்களாக, பண்பாட்டு மையங்களாக, ஆவணங்களின் கருவூலங்களாக, புத்தகங்களை அளிக்கும், ஒளி நிலையங்களாக, விரிவாக்கப்பணி மையங்களாக குறிப்புதவி தரும் கொள்கை கோட்பாடுகளாக, குழந்தைகளை மகிழ்விக்கும் குளிர்தரு பூங்காக்களாக, முக்காலத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் முனிவனாக விளங்க வேண்டும் என்ற பொருள்பட

நாலைந்து வீதிகளுக் கொன்று வீதம்
நல்லதுவாய் வசதியாய் இல்லம் வேண்டும்
நூலெல்லாம் முறையாக ஆங்கமைத்து
நொடிக்கு நொடி ஆசிரியர் உதவுகின்ற
கோலமுறும் செய்தித்தாள் அனைத்தும் ஆங்கே
குவிந்திருக்க வகைசெய்து தருதல் வேண்டும்
மூலையிலோர் சிறுநூலும் புதுநூலாயின்
முடிதனிலே சுமந்து வந்து தருதல் வேண்டும்.

என்று இசைக்கிறார்.

### எந்நாளோ?

தனித்தமிழ் வித்தகன், புத்தம் புதுக்காலை, புரட்சிச்சோலை, புதியதோர் உலகம் காண புறப்பட்டவன் கனவிலே வாழ்ந்து கனவோடு மறைந்தான் என்பதற்கு

கைத்திறச் சித்திரங்கள்
கணிதங்கள் வான நூற்கள்
மெய்த்திற நூற்கள், சிற்பம்
விஞ்ஞானம், காவியங்கள்
வைத்துள தமிழர் நூற்கள்
வையத்தின் புதுமை என்னப்
புத்தக சாலை எங்கும்
புதுக்குநாள் எந்த நாளோ?

என்ற பாடலே சான்று. இன்றும் நாம் 'எந்நாளோ' என்ற கேள்வியில் தான் வாழ்கிறோம். கனவுக் கவிஞன் பாடிச் சென்றதை அவர்தம் நூற்றாண்டிலாவது நனவாக்க, நாமும் அரசும் முன்வரவேண்டும் என்பதே இளையதலைமுறையின் கனவு .

* * *

# கவிதை கனிந்த கதை

ஆர். எச். எஸ். மணி

கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும் மனித சமுதாயத்துடன் தொடர்புடையது. குழந்தை அழுவதே கவிதையாகத்தான் காட்சியளிக்கிறது. கவிதை தனிப்பட்ட மனிதனாலேயே முதன் முதலில் இயற்றப்பட்டது என்றும், மனிதர்கள் கூட்டமாகக் கூடியே கவிதை இயற்றினார்கள் என்றும் இரு கருத்துக்கள் நிலவுகின்றன.

பலர் கூடிக் கவிதை புனைந்ததைச் சங்க வரலாறு வாயிலாக அறியலாம். தனி மனிதன் படைத்ததைப் பல தனிப்பாடல்கள் காட்டுகின்றன. பாடல்கள் மகிழ்ச்சியிலும் பிறக்கும். மனக்கவலையிலும் பிறக்கும்.

ஏட்டில் எழுதா கவிதை முதல் அச்சில் வந்த கவிதை வரை இன்று நம்மிடம் உள்ளன. அவற்றுள் முருகியல் இன்பம் காண முயற்சிக்கிறோம். ஒருகவிதையைப் படிப்பதற்குமுன் அது இயற்றப்பட்ட காலம், அரசியல் சூழ்நிலை, கவிஞன் வாழ்ந்த வகை, அந்நாட்டு அக்கால மொழி, முதலியவற்றை அறிந்துகொண்டால் கவிதையில் பேரின்பம் காணவியலும்.

கலையிலும் இந்நிலைதான். கண்ணைக் கவரும் விண்ணை முட்டும் வண்ணக் கோபுரங்கள் கொண்ட கோயிலைப் பார்க்கிறோம். இவை பல்லவர்காலம், அவை சோழர்காலம், இவை பாண்டியர்காலம் என்று வரையறை செய்கின்றோம். அனந்தபுரியிலோ, தில்லைச் சிற்றம்பலத்திலோ, தென்காசியிலோ, மதுரையிலோ, செல்லும்பொழுது எந்நாட்டுச் சிற்பக்கலை என்ற கேள்வி நம்மிடம் எழுகின்றது. பல்லவ மன்னன் நரசிம்மன் வாதாபியின் மீது படையெடுத்துச் சென்று அந்த சாளுக்கியர் தொன்னகரத்தைத் துகளாக்குகின்றான். ஆனால் அந்நாட்டுக் கோவில்களின் கொள்ளை அழகில் உள்ளத்தைப் பறிகொடுக்கின்றான். தொண்டை நாட்டில் அக்கலைச் செல்வங்களை உருவாக்குகிறான். தான் அவற்றை உருவாக்கினவன் என்பதை அன்றும், இன்றும், என்றும் நிலைநாட்ட தூண்களின் அடியில் வாய்பிளந்து நிற்கும் சிங்கங்களைச் செதுக்கியுள்ளான். பல்லவர் வரலாற்றைப் படித்து அவர்காலக் கலைகளை நோக்கும்பொழுது கிடைக்கும் இன்பம் முத்துக் குளித்தலில் முத்துச்சிப்பி கிடைத்த மகிழ்ச்சியைப் போன்றதாகும்.

கடந்த காலத்தில் கவிஞர்கள் தோன்றினார்கள். ஆனால் கவிஞர்களின் கதையைக் கூறும் வரலாற்று ஆசிரியர்கள் தோன்றவில்லை. கல்லிலும் கர்ண பரம்பரைக் கதைகளிலும், புதையுண்ட நகரங்களிலும் வரலாறு புதைக்கப்பட்டுள்ளது. ஒரு சிறந்த வரலாற்றாசிரியன் பல காலகட்டங்களிலும் தோன்றாததின் தீமைகளை அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். இன்று வரலாற்றிற்குரிய மூலங்கள் கிடைக்கின்றன. ஆனால் வரலாறு கிடைக்கவில்லை.

தற்காலப்படைப்புக்களை எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு புதினத்தைப் பற்றிச் சிந்திப்போம். சான்றாகப் பார்த்தசாரதியின் "குறிஞ்சி மலரைச்" சுட்டுவோம், நா. பா.வின் வாழ்க்கை வரலாற்றை அறிந்தவர்களுக்குச் சுவையூட்டுவது போல, மதுரை மாநகரையும் அதன் சுற்றுப்புறங்களையும் அறிந்தவர்கள் அப்புதினத்தைச் சுவைப்பதை போல இன்னொரு வாசகனுக்குக் " குறிஞ்சி மலர்" சுவையைத் தர இயலாது.

இக்காலத்தின் கோலத்தையும் படைப்பாளியின் சூழலையும் இன்று அறிய முடியும். நூற்றாண்டு காணும் கவிஞர் பாரதிதாசனையோ கண்ணதாசனையோ அவர்களுடைய படைப்புக்களையோ பற்றி கூடுதல் விவரங்கள் நமக்குக் கிடைக்கும். அவர்களுடைய படைப்புக்கள் இருக்கின்றன. அவர்களுடைய உறவினர்கள் இருக்கின்றார்கள், நண்பர்கள், நண்பர்களின் நண்பர்கள், அவர்களுடைய இயக்கங்கள், அவர்கள் தொண்டாற்றிய அரசியல் கட்சிகள், அவர்கள் இறந்தாலும் அவர்களுடைய குரல்களை, உருவங்களை உள்ளடக்கிக் கொண்டுள்ள புதிய அறிவியல் கருவிகள் முதலியன அவர்கள் வாழ்க்கை, கவிதை பற்றிய செய்திகளை அறியத் துணைசெய்கின்றன.

பாரதிதாசன் பெயர்க் காரணம் எல்லாருக்கும் தெரியும். புதுவை பெருமாள் கோவில் வீதி 95ஆம் எண் வீடு கவிஞர் வாழ்ந்தவீடு. இன்று அது காட்சிக் கூடம். கவிஞரின் மகனார், மகளார் இன்று உயிருடன் இருக்கின்றார்கள். சில கவிதைகள் எப்படிப் பிறந்தன என்பதை அவர்களிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம்.

கவிஞரின் ஒரு கவிதையை எடுத்துக் கொண்டு அது எப்படி பிறந்தது என்று பார்க்கலாம். கவிஞர் ஒரு சிறந்த குழந்தைக் கவிஞர். குழந்தைக் கவிஞர் என்று கூறியவுடன் கவிஞர் வயதில் மிக இளையவர் என்று எண்ணிவிடக் கூடாது. குழந்தைகளுக்காகப் பாடக்கூடிய கவிஞர் என்று ஏற்றுக் கொள்ள வேண்டும்.

கவிஞருக்கு ரமணி என்ற பெண் குழந்தை உண்டு. ரமணிக்குச் சிறு பிராயம். சிறு பிராயத்தில் பாடசாலைக்குச் சென்று கல்வி கற்க வேண்டும். இன்று குழந்தைகள் பாடசாலைக்குப் போவதைப் பார்க்கிறோம். முதுகில் ஒரு மூட்டையும் வளைந்த உடலும் தள்ளாடும் நடையும் தான் சிறு வகுப்புக் குழந்தைகளின் சின்னங்களாகக் காட்சியளிக்கின்றன.

எந்தக் குழந்தையுமே பாடசாலைக்குச் செல்ல விரும்புவதில்லை. எந்தப் பெரியவரும் அலுவலகத்திற்குச் செல்ல விரும்புவதில்லை. சூழ்நிலை காரணமாக விருப்பமில்லாத வேலையிலும் ஒரு சாண் வயிற்றிற்காக ஒட்டிக் கொண்டுள்ளோம். பாலர் பள்ளிக்குக் குழந்தை செல்ல மறுக்கின்றது. அந்தக் கல்வியை அது வெறுக்கின்றது. விடுதலை வேட்கையே அடிப்படைக்காரணம். புதிய சூழ்நிலை அதற்கு ப் பயத்தை அள்ளி அள்ளித் தருகின்றது.

ரமணிக்கும் இதே நிலைதான். கல்வி கற்கக் கல்வி நிலையத்திற்கு அவள் செல்லவில்லை. கவிஞர் வீட்டில் நாம் இந்நிகழ்ச்சியைப் பார்க்கின்றோம். காலை நேரம். ரமணி பள்ளிக்கூடம் செல்லவில்லை. அவள் பள்ளிக்கூடம் போகவேண்டுமென்றால் வழிகள் பல உள்ளன. அவளை அடிக்கலாம். அவளை இழுத்துக்கொண்டு கல்வி நிலையத்திற்குச் செல்லலாம். அவளைப் பயமுறுத்திப் போகச் செய்யலாம். அன்பு வழியில் அவளிடம் பக்குவமாகச் செய்தியைக் கூறிப் போகச் செய்யலாம். கவிஞர் என்ன செய்கிறார் பாருங்கள்.

"ரமணி! நீ பாடசாலைக்குப் போக வேண்டும். இதை நான் சொல்லவில்லை! உன் அம்மா சொன்னாள். உனக்குத் தலையை நன்றாக வாரினாள். பின்னினாள். பிச்சிப்பூச்சூடினாள். எல்லா அலங்காரமும் செய்துவிட்டாள். அவள். உன்னைப் பெற்ற தாய். நீ கல்வி கற்பதில் அவளுக்கு விருப்பம் அதிகம். எனவே புத்தகத்தை எடுத்துக்கொண்டு போகவேண்டும்" என்கிறார் கவிஞர்.

"தலைவாரிப் பூச்சூடி உன்னைப் பாடசாலைக்குப் போவென்று சொன்னாள் அன்னை" என்று கவிஞர் பாடுகிறார். ரமணி இதைக் கேட்கிறாள். அம்மா போகச் சொன்னாலும் அப்பா அவர் கருத்தைக் கூறலாமே என்பது ரமணியின் எண்ணம். தந்தையாரும் தன் கருத்தைக் கூறிவிட்டார். உச்ச நீதிமன்றம் தன் கருத்தைத் தெரிவித்து விட்டது. அதைக் கேட்டவுடன் ரமணிக்கு அதிர்ச்சி ஏற்பட்டுவிட்டது. அவள் பள்ளிக்குச் செல்லவேண்டும் என்பதுதான் அப்பாவின் ஆசை. இதையறிந்தவுடன் சிலைபோல நின்று விட்டாள். கண்களிலிருந்து முத்துக்கள் உருண்டோடுகின்றன. பாடலின் வரிகளைப் பாருங்கள்.

சிலை போல ஏன் அங்கு நின்றாய்? - நீ
சிந்தாத கண்ணீரை ஏன் சிந்துகின்றாய்?

கண்ணீரைச் சிந்துவதால் பயனில்லை. எதற்குமே அழாத பெண் நீ. பள்ளிக்கூடம் போக வேண்டுமென்று சொன்னால் நீ ஏன் கண்ணீர் சிந்த வேண்டும்? நல்ல பெண்ணல்லவா. உனக்குக் கற்பதன் பயன் தெரியாதா? நான் ஒரு ஏழைத் தமிழாசிரியர். அதுவும் தெரியாதா? செவிச் செல்வம் மட்டும் உடையவன் நான். இன்று பெருந்தனக்காரர்களால் கல்வியை விலைக்கு வாங்க முடியும். அங்கு சாதியில்லை, சமயமில்லை, சண்டையுமில்லை. ஆனால் கவிஞர் இப்பாட்டை எழுதுகின்ற காலத்தில் கல்வியை விலைக்கு வாங்க இயலாது. எனவே ரமணியிடம் கவிஞர் "விலை போட்டு வாங்கவா முடியும் - கல்வி" என்று கேட்கிறார்.

இந்நிலையில் பாடசாலைக்குச் செல்லலாம் என்ற எண்ணம் அதாவது ஒரு அரை மனது அவளுக்கு வருகின்றது. இங்கு தான் அந்தக் குழந்தைக் கவிஞரின் உயரிய பாங்கினைப் பார்க்கிறோம் . கவிஞரின் உளவியல் கோட்பாட்டினைப் பார்க்கிறோம். ஒரு குழந்தையிடம் எந்த முறையில் எடுத்துக் கூறினால் அது நம் கருத்துக்களை ஏற்றுக் கொள்ளும் என்று சிந்திக்கும் அறிவு சான்ற ஆற்றலைப் பார்க்கிறோம். நாம் இந்தச் சூழ்நிலையில் காணும் முடிவும் கவிஞர் கண்ட விடையும் வேறுவேறுதான். குடும்பத் தலைவன் என்ற நிலையில் குழந்தையையும் அடித்து, மனைவியையும் துன்புறுத்தி, அடுப்பில் நீரையும் விட்டு, சோற்றுப் பானையையும் உருட்டும் குடும்பத் தலைவர்களைத்தான் சாதாரணமாகச் சந்திக்க இயலும்.

ஆனால் கவிஞர் குழந்தையிடம் அறிவுரை கூறுகிறார். கல்வி என்பது எளிதான ஒன்று யாரும் எப்பொழுதும் எந்த இடத்திலும் கல்வி கற்கலாம். கற்றவை நிற்க வேண்டாமா? அதற்கும் வழி இருக்கின்றது. அது எளிமையானது. "வேளை தொறும் கற்று வருவதால் படியும்" என்பது கவிஞர் வாக்கு. 'ஓதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம்" என்பதன் எதிரொலியல்லவா இது.

கல்வி எப்படிப்பட்டது? அதன் நிறம் மணம் குணம் தெரியுமா? கவிஞர் கருத்துப்படி கல்வி "மலை வாழை"யைப் போன்றது. வாழையின் சிறப்பே அது தனக்காக வாழாததுதான். மா, பலா, வாழை என்ற முக்கனிகளுள் வாழை ஒன்று. மாவும், பலாவும் கனிகளைத் தந்து கொண்டே வளரும். வாழை குலையைத் தந்துவிட்டு அது இறந்துவிடும். மலை வாழை சிறந்த பழங்களைத் தரும். பழங்கள் சிறிதாக இருக்கும். ஆனால் சுவையோ கூடுதல். எளிதில் உண்ணலாம். எத்தனை பழங்கள் வேண்டுமென்றாலும் தின்றாலும் மீண்டும் பழம் கிடைக்காதா என்ற ஆவலைத் தான் தரும். அத்தகைய மலை வாழைக்கு இணையானது கல்வி. அதனை வாயார உண்ண வேண்டும் என்று அறிவுரை கூறுகிறார் கவிஞர். செவி வழிச் செல்லும் கல்வியை வாய்வழி உண்ணவேண்டும் என்று கூறும் திறன் போற்றுதற்குரியது.

மலை வாழை யல்லவோ கல்வி - நீ
வாயார உண்ணுவாய் போயென் புதல்வி

என்பது கவிஞர் வாக்கு.

இந்தக் கவிதையை ரமணியிடம் கவிஞர் பாடினார் என்பதை அறிந்து சுவைக்கும் பொழுதும், பாடசாலை போகாத மகளைப் பாடசாலைக்குச் செல்லும்படிச் செவி அறிவுறுத்தினார் என்பதை அறிந்து ரசிக்கும் பொழுதும், குழந்தைகளுக்கான அறிவுரை இது என்று உணர்கிறோம்.

கவிஞர் அரசியலில் ஆழ்ந்த ஞானமுடையவர். தான் கடைப்பிடிக்கும் கொள்கைகளை, தான் விளங்கிக்கொண்ட பல்வேறு இசங்களைத் தொண்டர்கள் கேட்கும்பொழுது பாமரனும் விளங்கிக் கொள்ளும் வகையில் கவிதையில் விளக்குவார். பால் கறக்கும் 2 பசுமாடுகளை வைத்துக் கொண்டு கவிஞர் விளையாடும் சித்து விளையாட்டைப் பார்ப்போம். இரு பசுக்களில் ஒன்று தனக்கும் மற்றொன்று அயல்வீட்டுக் காரனுக்கும் என்பது சோசியலிசமாம். இரு பசுக்களில் ஒன்றை விற்று ஒரு காளையை வாங்குவது காபிடலிசம். இரு பசுக்களையும் அரசு ஏற்றுக்கொள்ள தனக்குத் தேவையான அளவு பாலைப் பெறுவது கம்யூனிசம். இருபசுக்களையும் அரசு பறிமுதல் செய்ய தேவையான பாலைப் பணங் கொடுத்துப் பெறுவது பாசிசம். இரு பசுக்களையும் பறிமுதல் செய்த பிற்பாடு அதன் உடையவனை ஒழித்துக் கட்டுவது நாசிசம். இரு பசுக்களின் பாலை யார்க்கும் பயன்படாமல் கழிவுநீரில் கொட்டுவது நியூடிலிசம். இனிப் பாடலைப் பாருங்கள்.

இரண்டு கறவைகள் உன்னிடமிருந்தால்
அண்டை வீட்டானுக்கு ஒன்றளித்தல் சோசலிசம்
கறவைகள் இரண்டில் கடிதொன்றை விற்று
காளை வாங்குவது காபிடலிசமாம்.
ஆ இரண்டினையும் ஆள்வோர்க்கு விற்றுத்
தேவைக்குப் பால் பெறச் செப்பல் கம்யூனிசம்.
பகலிரு கறவையைப் பறித்த ஆள்வோரிடம்
தொகை தந்து பால் பெறச் சொல்வது பாசிசம்
உரியவன் தன்னை ஒழித்தே அவனின்
கறவை இரண்டையும் கைப்பற்றல் நாசிசம்
இரண்டு கறவையால் திரண்ட பால் அனைத்தையும்
சாக்கடைக்கு ஆக்குவதான் நியூடிலிசம்.
எதனை இவற்றில் ஏற்பாய்?
அதனை உன்நாட்டுக்கு ஆக்குக தோழனே

கவிஞரின் நூற்றாண்டு விழாவை ஒட்டி நாம் செய்ய வேண்டியன-கவிஞர் பற்றிய எல்லாச் செய்திகளையும் உற்றார் உறவினர், அரசியல் கட்சிகள், இயக்கங்கள், பத்திரிகைகள் என்ற பல நிலைகளில் சேகரித்து நூலாக்கி வெளியிட வேண்டியது அவர் பெயர் தாங்கும் பல்கலைக் கழகத்திற்குரிய முதன்மைக் கடனாகும். இப்பொழுது இதனைச் செய்யவில்லையென்றால் கடந்த காலத்தைப் போல நிகழ்காலத்திலும் ஒரு வரலாற்றை இழந்துவிட்டவர்களாகி விடுவோம். இழந்தபின் நின்று அழுவது பீடன்று.

* * *

# மக்கள் கவி

கருணாசேகர்

பாரதிதாசன் ஒரு மக்கள் கவி. இது பாரதிதாசனுடைய எழுத்திலும், எண்ணத்திலும் வண்ணமென இழையோடிக் கிடப்பது 'எல்லாருக்கும் எல்லாம்' என்பதான சமத்துவ கொள்கை ஒன்றே. அவர் உலக மக்களின் வாழ்வும் வளமும் ஓங்க வேண்டும் எனச் சங்கநாதம் முழங்கியவர்.

தொல்லுலக மக்களெல்லாம் ஒன்றேயென்னும்

தூயவுள்ளம், அன்புள்ளம், பெரிய உள்ளம்

உலக மக்களையெல்லாம் ஒருங்கிணைத்துப் பார்க்கும் பரந்த உள்ளம், தூய உள்ளம், அன்புள்ளம், பெரிய உள்ளம் பாரதிதாசனுக்கு உரியது. ' எல்லோரும் ஒன்றே' இங்கு அனைவரும் சமமே' எனும் கொள்கை எங்குப் புத்துயிர் பெறுகிறதோ, அற்றைக்கணமே அவ்விடம் பொதுவுடைமை பூத்துவிட்டது எனலாம் - அந்த நிலை இந்த நாட்டிலே மலர வேண்டும் எனத் தணியாத தாகம் கொண்ட மக்கள் கவிஞனாகப் பாரதிதாசன் விளங்கினார். எனவேதான் அவரது பாடல்களில் எல்லாம் அடிநாதமாக ஆணிவேராக அமைந்திருப்பது பொதுவுடைமையெனும் சித்தாந்தமே.

ஓடப்பராயிருக்கும் ஏழையப்பர்

உதையப்பர் ஆகிவிட்டால்

ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி- ஒரு நொடிக்குள்

ஒப்பொப்பர் ஆகிவிடுவார்.

எனும் அவரது பாடல் உறங்கிக் கிடக்கும் உலக மக்களுக்கெல்லாம் ஓங்கி ஒலித்த பொதுமைப்பாடல். மக்கள்தம் சுயநிலையை உணர வைக்கும் ஒரு சூரியப் பாடலாக அது சுடர்விடுகிறது. மேல்-கீழ், உயர்வு-தாழ்வு எனும் அனைத்தும் பொருளாதார ஏற்றத் தாழ்வு களால் ஏற்பட்ட சீர்கேடுகளே. பொருளாதாரம் சமத்துவம் எய்தி விட்டால், மக்கள் சமத்துவம் தானே மலர்ந்து விடும் என்பது பாரதிதர்சனின் திண்மையான எண்ணம். இக்கருத்து அவரது ஒவ்வொரு காவியத்திலும், கவிதையிலும் மேன்மை பெற்றிருப்பது அனைவரும் அறிந்த ஒன்று.

'வீரத்தாய்' நாடகமுடிவில் சுதர்மன் "எல்லார்க்கும் உடைமையெலாம்; எல்லார்க்கும் எல்லா உரிமைகளும் ஆகுகவே" என முழக்கமிடுகிறான். புரட்சிக் கவியில் செல்வமெலாம் உரிமையெலாம் நாட்டாருக்கே" என்ற கருத்து தலைமை பெறுகிறது. பாரதிதாசன் கவிதைகள் யாவற்றிலும் 'பொதுவுடைமை' எனும் பூங்காற்றே வீசுகிறது.

பாரதிதாசன் தன்னுடைய 'பாண்டியன் பரிசு' எனும் காவியத்தில் ஒரு மக்கள் கவியாக ஒளிர்வதை அக்காப்பியத்தின் வழியே அறிய முற்படுகிறது இக்கட்டுரை. பாண்டியன் பரிசு

காவியத்தின் கதைச் சுருக்கம் வருமாறு:-

தலைவன் வேலன்; திருடர்களின் தலைவன் வீரப்பனின் மகன். தலைவி அன்னம்; கதிர் நாட்டு இளவரசி; கதிர் நாட்டரசை வேழ நாட்டரசன் ஆளும் ஆசையில் படை யெடுக்கிறான். படைக்குத் தலைமை ஏற்றுச் செல்பவன் நரிக்கண்ணன். கதிர் நாட்டரசியின் அண்ணன். அன்னத்தின் தாய் மாமன். மைத்துனன் நாட்டின் மேலே படை எடுக்கிறான். வேழ நாட்டரசனையும், அரசியான தன் தங்கையையும் வஞ்சத்தால் கொல்கிறான். பின்னர் இவன் அன்னத்தால், கொல்லப்படுகிறான். "பாண்டியன் பரிசு" என்னும் பேழை களவு போகிறது. அது வேலனின் தந்தையிடம் சிக்குகிறது. இதன் வழி வேலன், அன்னம் காதல் "பாண்டியன் பரிசைக் கொண்டு வருபவர் யாராக இருந்தாலும் அன்னத்தை மணக்கலாம் எனப் பறையறிவிக்கப்படுகிறது. இதன் பொருட்டு அனைவரிடையேயும் போர்கள், வீரச் செயல்கள், சூழ்ச்சிகள் எழுகின்றன.

இறுதியில் வேலன் பரிசுடன் அன்னத்தை அடைகிறான். பிறகு வேலனுக்கு முடிசூட்டலும் மணவிழாவும் நிகழ்கிறது.

'வீரத்தாய்' 'பில்கணியம்'' போன்றவற்றில் பொதுவுடைமை யை முடிவாகக்காட்டும் கவிஞர் பாரதிதாசன், இக்காப்பியத்தில் முடியரசை முடியரசாகவே முடித்திருப்பது அவரது கொள்கைக்கு முரணானதாகத் தோன்றலாம். ஆனால் அது அவ்வாறு கொள்ளல் தகாது. ஏனெனில், அவர் எடுத்துக் கொண்ட கதைத்தளம் (Plot) வரலாற்று காலத்தது; வரலாற்று காலத்தில் நிகழும் ஒரு கதையைப் பொதுவுடைமைக் கொள்கையுடன் முடிப்பது என்பது பொருத்தமற்றதாகும். அவ்வாறு முடிப்பின் காலவழுவாக முடியும். இதனை எண்ணி கவிஞர் பாரதிதாசன் ஒரு புதுமையைக் கையாளுகிறார். சமுதாயத்தின் கடைநிலையில் உள்ளவனும் சாதாரணமான குடும்பத்தில் பிறந்தவனுமான வேலனை கதிர் நாட்டரசனாக ஆக்குகிறார். இதன் மூலம் தன் கருத்தை நிறைவேற்றிக் கொள்கிறார்.

'எல்லாரும் எல்லாம் பெறவேண்டும்' எனும் கவிஞரின் வேட்கை, வேலன் எனும் கதாபாத்திரத்தின் வாயிலாக வெளிப்படுகிறது.

'மீட்படையா மக்கட்கு மீட்பும், விழிப்படையா மக்கட்கு விழிப்பும்' நல்க வேண்டும் எனும் கவிஞரின் எண்ணப்பாங்கே காவியமெங்கும் பரவிக்கிடக்கிறது.

அன்னம் தம் மூதாதையர் பரிசளித்த பாண்டியர்பேழையைக் கொண்டு வருபவருக்கு 'நானும் என் நாடும் உரிமை' என்கிறாள். இதைக் கேட்ட நரிக் கண்ணன் பரிசைக் கொண்டு வருவோன் நோயால் இடருற்றோன்' என்றால் எனக்கேட்கிறான். அதற்கு அன்னம்

தனியரசு போக்காத நோயை நானே
தவிர்க்கின்ற பேறுபெற்றால் மகிழ்வேன்

எனக் கூறுகிறாள். இது தனியரசை நோயாகக் கருதும் ஆசிரியரின் கருத்தாக மலர்கிறது. 'இகழ்சாதி ஒப்புவதோ' என அவனின் கேள்விக்கு 'இவ்வுலகில் எல்லோரும் நிகரே' எனும் அன்னத்தின் மறுமொழியானது மக்கள் கவியின் சித்தாந்தத்தைச் சிறப்பித்துக் காட்டுவது எனலாம்.

அன்னம் காப்பியத்தலைவன் வேலனை பாண்டியன் பரிசை மீட்டு வர வேண்டுகிறாள். அப்போது வேலன்,

எனை ஈன்ற தந்தைக்கும் தாய்க்கும்
இனம் ஈன்ற தமிழ்நாடு தனக்கும்

தினையளவு நலமேனும் கிடைக்கும் என்றால்

செத்தொழியும் நாள் எனக்குத் திருநாளாகும்

எனக்கூறுகிறான். சிறிதளவே நன்மை கிடைக்கும் எனில் அதற்காக நான் சாகிற நாளே என் வாழ்வின் திருநாளாகும் என்பது கவிஞரின் மக்கள் நலப்பற்றை மதிப்புரை செய்வதாக உள்ளது.

இருட்டறையில் உள்ளதடா உலகம் சாதி

இருக்கின்றதென்பானும் இருக்கின்றானே

மருட்டுகின்ற மதத்தலைவர் வாழ்கின்றாரே

வாயடியும் கையடியும் மறைவதெந்நாள்

சுருட்டுகின்றார் தம் கையில் கிடைத்தவற்றைச்

சொத்தெல்லாம் தமக் கென்று சொல்வார்தம்மை

வெருட்டுவது பகுத்தறிவே

சாதியின் பெயரால், மதத்தின் பெயரால், அரச பரம்பரையின் பெயரால் மக்கள் படும் இகழ்ச்சிகளும் இன்னல்களும் போர்களும் கவிஞரின் இதயத்தைச் சுடுகின்றன. பகுத்தறிவு ஒன்றே அதனை நீக்கும் வழி எனக்கூறும் கவிஞர், 'பகுத்தறிவு' என்பதைப் 'பொதுவுடைமை' எனும் பொருளிலே குறிப்பதாகக் கொள்ளலாம்.

எல்லாருக்கும் எல்லாம் என்றிருப்பதான

இடம் நோக்கி நடக்கின்ற திந்தவையம்

கல்லாரைக் காணுங்கால் கல்வி நல்காக்

கசடருக்குத் தூக்குமரம் அங்கே உண்டாம்

இல்லாரும் அங்கில்லை; பிறன் நலத்தை

எனதென்று தனியொருவன் சொல்லான் அங்கே

நல்லாரே எல்லோரும் அவ்வையத்தில்

'எல்லாருக்கும் எல்லாம்' என்ற கவிஞரின் இலட்சியம் இங்கே முற்றுப் பெறுவதை அறியலாம். தான் பெற நினைக்கிற தன்னிகரில்லா உலகில் "இல்லாரும் இல்லை, பிறன் பொருளைத் தனதென்று சொல்பவனும் இல்லை" எனும் கவிஞருடைய வரிகள் பொதுவுடைமையைச் சுட்டி நிற்பதை அறியலாம். பாரடையும் தீமையெலாம் விலகி நல்ல பயனடைய வேண்டுமெனில் 'எல்லாருக்கும் எல்லாம்' எனும் பொதுநிலை தோன்ற வேண்டும். அந்நாளே கவிஞருக்குப் பொன்நாள் என்பதையே இக்காவியம் எடுத்துரைக்கிறது.

எல்லோரும் ஒரு நிலை

எல்லோரும் ஒரு நிறை

எல்லோரும் ஒரு விலை

எல்லோரும் இந்நாட்டு மன்னர்

எனும் மகாகவியின் புரட்சி வரிகள், புதுமைக் கோலங்கள் பாரதிதாசனுக்குள்ளும் கருவாக இருந்து அவரது கவிதைகளுக்கு ஒளி கூட்டுகிறது. இக்கொள்கை பாரதிதாசனின் பாண்டியன் பரிசிலும் படர்ந்து நிற்பதில் வியப்பில்லை. 'எல்லாருக்கும் எல்லாம்' என்ற பொதுமைக் கொள்கையைத் தனது கவிதைக் கொள்கையாக வாழ்க்கைக் கொள்கையாகக் கொண்ட புத்துலகக் கவிஞன் பாரதிதாசன் ஒரு 'மக்கள் கவி' என்பதில் மறுப்பேதும் இருக்க இயலுமோ?

* * *

# புரட்சிப் பாவேந்தர்

பேரா. அ.செகதீசன்

'புதுவை'யம் படைத்திட்ட புலமை மையம்;
புடையிருட்டுப் படைகோலும் பாம்பா திக்க
மதப்புதர்க்கு முன்எழுந்த வாள்வ ளாகம்;
மாத்தமிழின் நலத்தையெலாம் தமிழ்மண் ணுக்கே
வதுவைசெய்த பதிவகம்; நந் தமிழி னத்து
வரலாற்றுப் பெட்டகம்; தன் மானம் காக்க
எதுவரையுண் டோஅதற்கு மேலும் சென்ற
எழுச்சிப்பா வளம்,புரட்சிக் கவிஞர் வேதம்!

தீவுத்திட் டாய் ஒதுங்கித் தாயகத்தின்
தென்றலையே திரைகட்டித் திளைத்து, வஞ்சச்
சோவியுருட் டிச்சூறை யாடி யோரைச்
சுற்றியெடுத் தெற்றியதே "குறிஞ்சித் திட்டு!"
காவுகொடுக் கப்பிறந்த ஆடு மாடாய்க்
கவிழ்ந்ததலைக் கூட்டமாய்த் தமிழி னந்தான்
பாவமூட் டைப்பலிக்கே சாயக், காக்கும்
"தமிழச்சி யின்கத்தி" யாகப் பாயும்!

ஓரியக்க மும்காணா தெத்து றையும்
ஊமையெனக் கிடந்துழன்ற தமிழ மக்கள்
போரியக்க மாகத்,தாய் மொழியி யக்கும்"!
புரட்சியியக் கப்படையே "தமிழியக்கம்"!
யாரியக்கம்? எனப்பெரியார் இயக்கம் என்றே
ஆகும்"சஞ் சீவிபர்வ தத்தின் சாரல்"
நேரியக்கம் செயும் கொள்கை முழக்க மெல்லாம்
நெஞ்சியக்கம்; என்றுமுள்ள பணியி யக்கம்!

சாதியிருட் டேபடிந்து கிடக்கும் என்றால்
  தடம்விரிந்த உலகெனினும் இருட்ட றையாம்;
நீதியிருட் டடிப்பாகச் சிறுத்துப் போகும்!
  நெஞ்சுக்கு நீதியென நெகிழ்ந்தால், ஏழ்மை
மோதிருட்டுச் சாக்கடையின் "இருண்ட வீடு"ம்
  முன்னேற்றத் திருநாடாம், என்று தீமை
கோதியரித் தெடுத்துவெளிக் காட்டி, நாட்டுக்
  "குடும்பவிளக்(கு)" ஏற்றிவைத்த கவிதைக் கோவில்!

ஓடப்பர் என்றைக்கும் உழைப்பு வர்க்கம்;
  உயரப்பர் உழைக்காமல் கொழுக்கும் கூட்டம்!
கூடவிய லாஇந்தக் கீழ்மேல் மட்டம்
  சமதர்மக் கோல்தட்டில் கூடல் எந்நாள்?!
"ஓடப்பர் உதையப்பர் ஆகி விட்டால்
  ஒப்பப்பர் அனைவருமே ஆவர்!" என்னும்
தேடப்போம் புரட்சிக்கோர் எச்ச ரிக்கை;
  திறம் மாறாப் பொதுவுடைமைச் செயற்கோ ரிக்கை!

பெயரளவாம் பேச்சளவாம் புரட்சி, பின்னும்
  பிசுபிசுத்துப் போகாமல் காட்சி யாகச்
செயலளவில், ஆம்,மக்கட் புரட்சி யாகச்
  சிலம்பு,மணி மேகலையின் பெண்க ளுக்குப்
புயலெழுத்தால் பெரும்புரட்சித் தலைமை தந்தே
  பொருள்மாற்றி, மறுமலர்ச்சிச் சமுதா யத்தை
வயற்பழமைக் காப்பியத்தில் வைத்து, மக்கள்
  வழிஆட்சிப் பயிர்வைத்த நாவேர் வேந்தர்!

புதுவையிலே புரட்சிமுர சொலிகொ டுத்த
  பூங்"குயில்"! இரவலாய்க் காக்கைக் கூட்டில்
பதுங்கித்தன் குஞ்சுபொரித் தெடுத்த தில்லை!
  பகுத்தறிவின் பாசறையாய், வெளிப்ப டையாய்
மதிக்கின்ற கொள்கைக்காய் வாழ்வைத் தந்து
  "மண்ணுக்கிவ் வுடல், உயிரோ தமிழுக்" கென்றே
குதிக்கின்ற படைப்பாட்டு மடைதி றந்த
  குலத்தலைமை நடைப்புரட்சிக் கவிதை வேந்தர்!

# தமிழனுயிர் நீயன்றோ.....



ம. சுந்தரமூர்த்தி

உலகாளும் தமிழ்ப் பாட்டால்
கவியாள வந்தவனே!
பலகாலும் தமிழ்ப்பாட்டை
பண்டிதர்கள் பாழ்படுத்தி
ஆள்படைத்தோர் வால் பிடிப்போர்
வாழ்வதற்கு இடம் கொடுத்த
வேர் பிடிக்காச் சுதந்திரத்தில்
சீழ்பிடித்த மரபுகளை
நேர்படுத்திப் பாடாமல்
நெஞ்சுரமும் இல்லாமல்
சீர்கெடுத்து நிற்கையிலே
சீற்றமுற்று நீ மட்டும்
ஏர்பிடிக்கும் உழவனுடன்
தொழிலாளர் கூட்ட(ம்) வரை
வாழ்வதற்கு உரிமைகேட்டு
வகைவகையாய்ப் பாட்டியற்றி
தாழ்வுற்ற குடிகளுக்காய்
தளராமல் குரல்கொடுத்தாய்
மாள்கின்ற மக்களுக்கு
மனத்தெம்பை நீயளித்தாய்
சூழ்கின்ற தமிழ்ப்பகையை
சூளுரைத்துக் கொல்லுதற்கு
சூட்சுமமாய் வழியுரைத்தாய்
சோதரரை ஒருங்கிணைத்தாய்
ஆளுகின்ற வர்க்கங்கள்
அதிகாரப் பேயாட்டம்
ஆடுகின்ற நிலைமாற்றும்
அதிசயத்தை 'புரட்சிக்கவி'

ஆக்கிவைத்துப் புரியவைத்தாய்
கவித்தேனைத் தேக்கிவைத்தாய்
தாக்கிவரும் கவியிலெல்லாம்
சீர்கேட்டை நீக்கிவைத்தாய்
பேதமில்லா வாழ்க்கையிலே
பெருமையுண்டு என்பதனை
போதமென உரைத்தவன்நீ
ஆதவனாய் உதித்தவன்நீ
காதலினைப் பாடினாலும்
காட்டினையே பாடினாலும்
சாதலில்லாப் பெருவாழ்வு
சமத்துவத்தால் என்றுரைத்தாய்
தனித்துவமும் சமத்துவமும்
தடையின்றி பேசினாலும்
அனைத்துலகும் ஒன்றாகி
அதன்கீழே நாம்வாழ
உலகத்து ஒற்றுமையை
ஓயாது உரைத்தவன் நீ
கலகத்தை வெறுத்திட்டு
கரம்சேர்க்க அழைத்தவன் நீ
தமிழெனது உயிரென்று
தமிழுயிராய் வாழ்ந்தவனே!
தமிழுனது உயிரென்றால்
தமிழனுயிர் நீயன்றோ
ஞாலத்தில் உனதுபுகழ்
ஞாயிறென ஒளிரட்டும்
காலத்தின் மடிவிலும் நின்
கவிப்புகழே நீளட்டும்.



***

# பாரதிதாசன் குறுங்காப்பியங்களில் மரபு மாற்றம்

முனைவர் தா.வே. வீராசாமி

பாரதிதாசன் என்ற பெயரைக் கேட்டவுடன் சீர்திருத்தமும் மறுமலர்ச்சியும் எழுச்சி பெற்றிலங்கும். புரட்சிக்கவி என்று போற்றப்பெற்ற கவிஞர் பில்கணன் எழுதிய கவிதைக்கு இந்த நூற்றாண்டிற்குரிய புதிய உணர்வை ஊட்டியதை உணர்ந்த தமிழக மக்கள் கனக சுப்புரத்தினமாக விளங்கிய கவிஞரைப் புரட்சிக் கவியாகவே ஏற்றுக் கொண்டனர். அரசியலில் விடுதலை பெற்றுச் சமுதாய உரிமை அடைய தேசியக் கவி பாரதியின் நெறியில் தம்மைப் பாரதிதாசனாகப் படைத்துக் கொண்ட கவிஞரின் படைப்புகளில் பெண்ணுரிமை தலைநிமிர்ந்து வளர்ந்துள்ளதை யாவரும் அறிவர். குறிப்பாக அவருடைய கவிதைகளில் முதல் தொகுதியில் மூன்று குறுங்காப்பியங்களாக விளங்கும்

1. சஞ்சீவி பர்வதத்தின் சாரல்
2. புரட்சிக்கவி
3. வீரத்தாய்

ஆகிய படைப்புகளில் பெண்ணுரிமை வளர்ச்சி பெற்றுத் தாயின் கடமையில் புதுமை எழுச்சி பொங்கி வழிகிறது.

புரட்சிக் கவி என்ற பெயரிலேயே பாரதிதாசன், மரபில் மாற்றம் செய்துள்ளார் என்பது விளங்கும். ஆனால் முற்றிலும் மரபையே அழித்து விட்டாரா என்றால் இல்லை என்ற விடையைத்தான் பெறுகிறோம். மனித வாழ்வில் ஆக்கம் தருகின்ற மரபு நெறிகளை அழியாமல் காப்பதும் அழிவு தருகின்ற மரபுப் போக்குகளை நீக்கிவிடுவதும்தான் எதிர்கால மனித வாழ்வுக்கும் ஏற்றம் தரும். இதற்கு என்றும் துணைபுரிகின்ற கவிஞர்களும் அவர்களின் படைப்புமே சமுதாய மதிப்பைப் பெற்று வாழும். இதற்கு எதிராக அமைபவை எவ்வளவு சிறந்த இலக்கிய வடிவைப் பெற்றிருந்தாலும் எதிர்காலத்தின் வளர்ச்சிக்குத் துணை செய்யாத காரணத்தால் இருளுக்குள் மூழ்கிவிடுவதை யாரும் தடுக்க முடியாது. இவ்வடிப்படையில் காணும் போது பாரதிதாசனின் மூன்று குறுங்காப்பியங்களும் காலத்திற்கேற்ற மாறுதல்களை வரவேற்றுள்ளன; காலத்திற்குதவாத பழைய மரபுகளை ஒதுக்கியுள்ளன.

மூன்று குறுங்காப்பியங்களில் சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் காதலர் இருவரிடையே நிகழும் நிகழ்ச்சிச் சிக்கல் உள்ளது. புரட்சிக்கவியிலோ காதலுக்கு மேல்குடி மக்களால் ஏற்படும் சிக்கல் அமைந்துள்ளது. வீரத்தாயிலோ அரசுரிமைச் சிக்கல், அரசியல் காரணமாகப் பெண்ணின் முயற்சிக்குப் பல்வேறு முனைகளிலிருந்து தடைகள் எழுகின்றன. இத்தகைய சிக்கலைப் பழைய மரபுப்படி படைத்திருந்தால் குறுங்காப்பியப் படைப்புகளே வேறு வடிவம் பெற்றிருக்கும். காதலர் கூட்டுறவில் எழும் ஐயங்களில் களவு மணப்பின்னணியில் தலைவி பெரிதும்

பேசாநிலையிலேயே காதல் நாடகத்தை நடத்திச் செல்வாள். அவர் கருத்தைத் தெரிவிக்கும் வாயிலாகத் தோழி என்ற துணைமாந்தர் படைக்க வேண்டிய நிலை ஏற்படும். தலைவன் தலைவியின் பெயர்கள் கூடச் சுட்டப்பெறா. தலைவன் கூற்றே களவு மணத்தில் தலையெடுத்து நிற்கும். எந்த நிலையிலும் தலைமகள் தலைமகனின் அறிவு, பிறப்பு, செல்வம் போன்றவற்றிற்கு ஒத்த நிலை காணப்பெறுமே தவிர உயர்நிலை பெற்றுத் தலைவி விளங்குதற்கு இடமில்லை. அக்காலச் சமுதாயத்தில் பெண்களிருந்த நிலைக்கு ஏற்பக் களவிலக்கணம் உருவாக்கப் பெற்றிருந்ததால் பண்டைய அக இலக்கியத்தலைவி தலைமகனைவிடக் குறைந்த நிலையிலேயே உருவாக்கப் பெற்றிருந்தாள்.

ஆனால் இந்த மரபினை மாற்றம் செய்கிறார் புரட்சிக்கவி. சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் குப்பன், வஞ்சி ஆகிய காதலர்களின் ஊடல் காட்சி, குறிஞ்சிப்பின்னணியில் உருவாகியதில் மரபு மாற்றம் பெறவில்லை.

குயில் கூவவும் மயிலாடவும் வேட்டுவப் பெண்கள் விளையாடவும் காட்டு மறவர்கள் காதல் மணம் செய்யவும் சஞ்சீவிபர்வதம் அகவொழுக்கத்திற்குரிய குறிஞ்சியாய் அமைந்து கருப்பொருள்கள் களவு மணம் பெருகுதற்கு வழி செய்கின்றன. இவ்வழி, பண்டைய தமிழர் கண்ட மரபு எள்ளளவும் சிதையாமல் தளிர்த்து நிற்கிறது.

பண்டைய தலைமகன் தளைகளணிய இளந்தளிர்களைக் கையுறையாகக் கொண்டு தருவான். அதனைப் பெற மறுப்பது தோழி வாயிலாகக் ' குறியாள் கூறலும் படைத்து மொழி கிளவியும் கொண்டு மறுத்தலும் பின் தளையெதிர்தல் வாயிலாக ஏற்கச் சொல்லும் நிலையும்' வெளிப்படும் (இறையனார் அகப்பொருள்12).

ஆனால் புரட்சிக் கவியின் படைப்பிலோ இம்மரபு மாற்றம் பெறுகிறது. வஞ்சியே குப்பனிடம்

> காதலரே!
> அன்று நீர் சொன்னபடி அவ்விரண்டு மூலிகையைச்
> சஞ்சீவி பர்வதத்தில் தையலெனக் கூட்டிப்போய்க்
> கொஞ்சம் பறித்துக் கொடுத்தால் உயிர்வாழ்வேன்
> இல்லையென்றால் ஆவி இராது' என்றாள்.

இந்நிகழ்ச்சியைக் காணும்போது தலைவியே கையுறையை வாய்விட்டுக் கேட்கிறாள். அது இருக்கட்டும் இடத்திற்குத் தன்னையும் கூட்டிச் செல்ல வேண்டுமென்கிறாள். இத்தகைய 'கையுறைவலிதிற் பெறும்' மரபுமாற்றம் வேண்டும் என்றே செய்த மாற்றமா அல்லது கவிஞர் கூற நினைக்கும் கொள்கை விளக்கத்திற்கு ஏற்ற மாற்றமா எனில் கவிஞர் பரப்பநினைக்கும் பகுத்தறிவுக் கொள்கைக்கு ஏற்ற துணையாக இம்மரபு மாற்றம் நிகழ்கிறது. அத்துடன் நில்லாமல் தலைவி கேட்ட கையுறை மீது கொள்ளும் ஆசையைத் தணிக்க விரும்புகிறான் குப்பன். வஞ்சியோ வற்புறுத்தி அம்மூலிகையை வேண்டி நிற்கிறாள். கையுறை மறுத்த பழைய நிலை இதில் மாறுகிறது.

இதனால் பெற்ற கையுறையால் பெறப்போகும் பகுத்தறிவுக்கொள்கையின் பெருமை விளங்குதற்காக இம்மரபு மாற்றம் முளைக்கிறது. அதன் முதற் குரலாய்க் கேட்பதுவே.

> பெண்ணுக்குப் பேச்சுரிமை வேண்டாம் என்கின்றீரோ?
> மண்ணுக்குக் கேடாய் மதித்தீரோ பெண்ணினத்தை?
> பெண்ணடிமை தீருமட்டும் பேசுந் திருநாட்டு
> மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே

என்று பெண்ணுரிமைக் குரலெழுப்பித் தன்னுடன் குப்பன் வராவிடில் தானே சென்று ஏறி மூலிகையின் உண்மை அறிவதாகக் கூறும் போது பெண்ணினம் தலைவனிடம் இதுவரை கையுறை பெற்றநிலை மாறி தானே முயன்று பெறவேண்டும் என்ற தன்னாற்றல் பெண்ணாற்றலாய் வெளிப்படும் போக்கு, மரபு மாற்றமாய் உருவாகிறது.

முன்னர் எழுந்த இலக்கியங்களில் கையுறையாம் தழை,

மாவுற்ற புண்ணிற் கிடுமருந்தே நின்கை வார்தழையே
(பாண்டிக்கோவை, 121)

கானக வாழ்நருங் கண்டறி வாரிக் கமழ்தழையே
( பாண்டிக்கோவை, 122)

... புனையிற் பொல்லாது ... மலையத்து மாந்தழையே
( பாண்டிக்கோவை, 125)

எந்நிலத் தெம்மலை மேல் இச் சந்தனத் தீந்தழையே
(பாண்டிக்கோவை, 126)

எனப் பலவாறு கேள்வி கேட்பதற்குரியதாய் விளங்கியது.

சஞ்சீவிபர்வதத்தில் பெற்ற மூலிகை இலை உலகமாந்தர் பேசுதல் போல் செந்தமிழில் குப்பனும் வஞ்சியும் தங்கள் செவியில் கேட்டனர். பிரான்சில் நிறபேதமில்லாததையும் நானிலத்தில் எல்லாரும் நன்றாய் இருக்க நல்ல அமெரிக்கன் நினைப்பதையும் இந்தியாவில் மூடப்பழக்க வழக்கங்களை இந்தியாவிலிருந்து ஓட்ட வேண்டும்' என்ற புதிய எண்ணங்கள் பூப்பதற்குக் காதல் மணக் கையுறை உதவுவது தெரியும். கையுறை பெற்று காதல்மணம் தடையுறாமல் இன்பம் காண எண்ணும்போது,

சஞ்சீவி பர்வதத்தை வேரோடு பேர்த்து வரவேண்டும் என்ற குரல் கேட்டுக் குப்பனாம் தலைமகன் பயந்து கோதை முகம் பார்க்கிறான். இப்பார்வையில் பண்டைய மரபு வீழ்கிறது. என்றும் தோல்வியே காணாத தலைமகனையே காட்டி வரும் தமிழ் மரபிற்கு எதிராகக் குப்பனின் அச்சத்தைப் புரட்சிக்கவி காட்டுகிறார். அவன் கோழைத் தன்மைக்குரிய அடிப்படைக் காரணம் மூடப்பழக்க வழக்கத்தில் மூழ்கியமையே எனக் கூறாமல் கூறியுள்ளார். அத்தகைய அச்சம் அகல வஞ்சியின் அறிவு மொழியால்,

சஞ்சீவி பர்வதத்தைத் தாவிப் பெயர்க்கும்
மனிதரும் இல்லை, மலையும் அசையா

எனத் தெருட்டுகிறாள். ஆயினும் அறியாமை இருளில் மூழ்கிய தலைமகன் குடல் அறுந்து போனதுபோல் துடிதுடிக்கிறான். அப்போது, அறிவுலகப் பெண்ணாம் வஞ்சி 'எது உண்மை? எது பொய்? என்ற அறிவு விளக்கு ஏற்றி நிற்கிறாள். அதுவரை கேட்டது இராமாயணக்கதை என அறிந்த குப்பன் தெளிவு பெறுகின்றான். உண்மைக் காட்சியைக் காண மூலிகை தரவே நம்பத் தகாதவெலாம் நம்பவைத்துக் கெடுக்கும் மூடப்பழக்க வழக்கத்திற்கு முடிவுகட்ட வேண்டும் எனக் குப்பன் அறிவு பெறுகிறான். இந்நிகழ்ச்சியால் பெண் உரிமை பெற்று ஆணின் மடமையை அகற்றப் புதியகாதற் கையுறை விளங்க வேண்டும் என்று எண்ணும் மரபு மாற்றம் விளங்குகிறது.

வடமொழியில் பதினொன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த பில்கணன் காஷ்மீரத்தில் பிறந்து இந்தியாவின் வட பகுதியில் தன் இலக்கிய இலக்கணப் புலமையைக் காட்டி வந்தான். இப்பில்ஹணன் சௌரா சுரதபஞ்சசீகம் என்ற நூலை இயற்றியதாகக் கூறுவர். சிலர் இதனை

சோராவோ, சுந்தரனோ இயற்றியதாகவும் கூறுவர். (சாகித்திய அக்காதெமி வெளியிட்ட இந்திய இலக்கியக் களஞ்சியம் I பக். 520-1). இந்நூலில் களவு மணம் பற்றி ஐம்பது பாடல்கள் உள்ளன. அந்தணனாம் பில்கணன் இளவரசி சசிகலாவைக் காதலிக்க (இவள் பெயர் சந்திரகலா, சந்திரலேகா, யாமினி பூர்ணதிலகா, வித்யா எனவும் காணப்பெறும்). அதற்காக, அவனைக் கொல்ல அரசன் ஆணையிடக் கொலைக் களத்திற்குக் காதலன் செல்லும்போது தன் காதல் உணர்வுகளைப் பாடல்களாய் வெளிப்படுத்தியதைக் கேட்டு அரசன் அக்காதலர்களை ஒன்று சேர்க்க வழி செய்கிறான் என்பது பழைய மரபுக்கதை.

புரட்சிக் கவி படைத்த காப்பியத்தில் இளவரசியின் பெயர் அமுதவல்லியாகவும் கவிஞன் பெயர் உதாரனாகவும் மாறுகின்றன. இம்மாற்றம் வெறும் பெயர் மாற்றம் மட்டுமே. காதல் கனிவதன் முன் இருட்காட்டை அழித்த நிலவைப் பார்த்து உதாரன் இருவிழியால் தழுவி மனத்தால் உண்டு உணர்வு தூண்டிவிட

நீலவான் ஆடைக்குள் உடல்மறைத்து
நிலா வென்று காட்டுகின்றாய் ஒளிமுகத்தை

என்று பாடும்போது உருவக அணி மரபு நிலையில் அழகுற வெளிப்படுகிறது. ஆனால் அத்துடன் நிற்காமல்

நித்திய தரித்திரராய் உழைத்துழைத்துத்
தினைத்துணையும் பயனின்றிப் பசித்த மக்கள்
சிறிது கூழ் தேடுங்கால் பானை ஆரக்
கனத்திருந்த வெண்சோறு காணும் இன்பம்
கவின்நிலவே உனைக்காணும் இன்பம் தானோ

என்று பாடுகிறார் புரட்சிக்கவி. நிலாவில் பெண்முகத்தைக் காணும் மரபும் இதில் உள்ளது. அதற்கு மேலும் ஏழை மக்கள் காணும் வெண்சோறு நிறைந்த பானையாகக் காட்டும்போது,

'அன்புள்ளம் பூணுகின்றேன்' என்ற புரட்சிக் கவியின் சொல்லுக்குப் பொருள் புரிகிறது. மக்களில் உழைப்போர் பக்கம் கவிமனம் பாய்வதைக் காட்டும்போது இலக்கியப் படைப்பிலே புதிய மரபு எழுவதைக் காண்கிறோம்.

இத்துடன் நிற்கவில்லை. பழைய கதையில் இளவரசியின் பங்கு மிகமிகக் குறைவே. ஆனால் புரட்சிக் கவியிலோ புதிய பெண் உருப்பெறுகிறாள். பழைய மரபுப் பெண் மாற்றம் அடைந்து புதிய வடிவம் கொள்கிறாள்.

திரையை விலக்கி உதாரனை அமுதவல்லி காணும்போது காதல் மனத்தில் முதல் முயற்சி தலைவியிடம் தோன்றுமாறு புரட்சிக்கவி வழி செய்கிறார். எல்லா அகவொழுக்கங்களிலும் தலைவன் முன்னடி வைத்து நடக்க இதில் அமைந்துள்ள இம்மாற்றம் களவு மணத்தில் எழும் ஐயத்தின் களமாக உதாரனின் மனம்,

மின்னற் குலத்தில் விளைந்ததோ? - வான்
வில்லின் குலத்திற் பிறந்ததோ?

எனக் கேட்கிறது. அவன் ஐயம் நீங்க 'அமுதவல்லியன்றோ' என நேர்விடை இறுக்கிறாள், தலைவி. அத்துடன் உதாரனுக்கும் தனக்கும் இடையே ஆளவந்தார் எழுப்பிய நடைக் கோட்டையையும் தகர்க்கிறாள். இது சஞ்சீவிபர்வதச் சாரலில் காணும் வஞ்சி கண்ட வழியே!

புதிய மரபின் வளர்ச்சி! மேலும்,

குணமுள்ளார், கொஞ்சவரும் கோதையரைக் காதற்
பிணமாக்கித் தாங்கள் பிழைக்க நினைப்பாரோ
என்று தன் காதல் எரிதலுக் காற்றாமல்
சென்று தன் தஞ்சம் தெரிவித்தாள் சேல்விழியால்

எனச் சொல்கிறது குறுங்காப்பியம். இந்நிகழ்ச்சியில் ஆணிடம் பெண் தன் காதலைச் சொல்லுவதுடன் அவன் ஆற்ற வேண்டிய கடமையையும் வலியுறுத்துகிறாள். இவ்வாறு அவன் கடமையைச் செய்யாவிடில் சாவுதான் முடிவு எனவும் எடுத்துரைக்கிறாள். தமிழிலக்கியத்தில் இத்தகைய புதிய போக்கைப் பாரதியாரின் குயில், மாட்டிடம்

காதலுற்று வாடுகின்றேன் காதலுற்ற செய்தியினை
மாதருரைத்தல் வழக்கமில்லை என்றறிவேன். ஆனாலும்
என்போல் அபூர்வமாங் காதல் கொண்டால் தானா வுரைத்தல்
அன்றிச் சாரும் வழியுளதோ?

எனக் கூறும் காதல் புரிதற்குரிய ஆண்மைக்கு மாறாக உதாரன் 'ஊராள்வோன் கூர்வாளும் வண்ணமுடிச் செல்வாக்கும் வந்து மறிக்குதடி' எனப் பின்னோக்கிச் செல்லும் அச்சத்தை வெளிக்காட்டுகிறான். இத்தகைய அகவொழுக்கத் தலைவனைப் பண்டைய தமிழ்க் காதல் படைக்கவில்லை. அத்தகைய அச்சங்கொள்வதற்குக் காரணம் நால் வருணமும் மேதினியை ஆள் வருணமும் ஆம். தன் செயலற்ற நிலையில் அழுது விம்மும் அவல நிலையும் பண்டைய தமிழ்த் தலைவன் படைப்புக்கு மாறானது.

ஆணின் அச்சத்தை அகற்றும் வகையில் புரட்சிக்கவி படைத்த பெண்ணின் நல்லாள் வெளிப்படுகிறாள். வாளை உருவி வெட்டினாலும் தையல் உள்ளம் என்றும் வேந்தன் சதுர் வருணம் சீறும் எனினும் உடல் தீர்ந்த பின்னும் சீறிடுமோ எனத் தன் தளரா உள்ளத்தை எடுத்துரைப்பது பெண் படைப்பின் சீர்மையைப் புலப்படுத்தும். சட்டப்படியும் தன்னைக் கொல்லமுடியாது என்று அவள் கூறியதில் பெண்ணுரிமை காக்கச் சட்டத்தின் துணையை நாடும் அறிவொளி ஒளிவீசுகிறது.

சாதி உயர் வென்றும் தனத்தால் உயர்வென்றும்
போதாக் குறைக்குப் பொதுத் தொழிலாளர் சமூகம்
மெத்த இழிவென்றும் மிகுபெரும்பா லோரை எல்லாம்
கத்தி முனைகாட்டிக் காலமெல்லாம் ஏய்த்துவரும்
பாவிகளைத் திருத்தப் பாவலனே நம்மிருவர்
ஆவி களையேனும் அர்ப்பணம் செய்வோம்.

என்ற முடிவெடுத்துச் சமுதாய நலத்திற்குத் தம்மையே அர்ப்பணிக்கத் துணியும் சமூக நலம் நாடும் காதலாக மறுமலர்ச்சி பெறும் வகையில் புரட்சிக்கவி எழுகிறது.

மன்னன் உதாரனனைச் சிரச்சேதம் செய்ய ஆணை பிறப்பித்ததும் மலை பிளந்ததுபோல் அமுதவல்லி அரசனுக்கு அதிகாரம் இல்லை என்று எழுப்பும் ஒலி இதுவரை தமிழிலக்கிய 'அகப்பொருட் தலைவியர் குரலில் எழாத ஒலி! அதற்கும் மேலே ஒரு படி சென்று அரசன் தன்குடிக்கு ஊறிழைத்தால் அதை ஊர்மக்களிடம் உரைத்தல் கடன் என அவன் செய்ய வேண்டிய

கடமையையும் எடுத்துரைக்கும்போது ஒரு வகையில் கண்ணகி, நெடுஞ்செழியனுக்கெதிராக எழுப்பிய குரலொலியைக் கேட்க முடிகிறது. மன்னவன் தந்தையே ஆனாலும் முறைதவறி நடவாமல் தன் வழக்கை மக்களிடம் கூறி நியாயம் பெற வேண்டும் என்று புதுமரபைத் தோற்றுவிக்கிறார் புரட்சிக்கவி.

'புரட்சிக்கவி' எனும் குறுங்காப்பிய இறுதியிலே காதலர்களை மக்கள் கொலையாளிகளிடமிருந்து மீட்பதுடன் நாட்டாரே நாடாளும் உரிமையையும் எடுத்துக்கொள்ளுகின்றனர். இத்தகைய நெறியில் முடிஅரசு குடியரசாக மாறும் பாங்கில் பிரெஞ்சுப் புரட்சியின் மணம் கலப்பதை உணர்கிறோம். தமிழ் மரபைப் பிரெஞ்சு மரபு மாற்றுவதைக் காண்கிறோம். இதற்குக் காரணம் புரட்சிக் கவிஞர் அன்று பிரெஞ்சு ஆட்சியின் கீழமைந்த புதுச்சேரியில் வாழ்ந்ததுதான் என எண்ண வழி உளது.

தமிழ் மரபிலே புறநானூற்றில் மூதின் மகளிர் பற்றிப் பல பாடல்கள் உள்ளன. 'கெடுக சிந்தை கடிதிவள் துணிவே' (புறம்.279). என்ற ஒக்கூர் மாசாத்தியார் பாடலில் காணும் வீரப்பெண்ணின் உயிரோவியம் இலக்கிய உலகில் நிலைபெற்ற படைப்பாகும். கழாஅத் தலையார் (புறம். 288), அள்ளூர் நன்முல்லையார் (புறம்.306), கோவூர்கிழார் (புறம்.308) போன்றோர் பாடல்கள் தாயின் அசையா உள்ளத்தைக் காட்டும். பொன்முடியாரின் 'ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே' (புறம். 212) என்ற பாடலில் ஒரு தாயின் தலைப்பட்ட மனநிலையுடன் உலகம் எவ்வாறு கடனாற்றும் நிலையில் நிற்க வேண்டும் என்பதையும் நன்கு கூறும். இப்புலவரின் பாடலிலே தோய்ந்த புரட்சிக் கவிஞர் தம் 'எதிர்பாராத முத்தத் தலைவனுக்கும் பொன்முடி எனவே பெயர் சூட்டியுள்ளமை ஈண்டு நினையத்தகும்.

சங்க காலத்தில் இங்ஙனம் கண்ட மூதின் மகளிரை யெல்லாம் ஒருரு ஆக்கினாற் போல ஐயனாரிதனாரின் புறப்பொருள் வெண்பாமாலையில் வாகைப்படல மூதின் முல்லைத்துறையில்

> அடல்வே லாடவர்க் கன்றியுமவ்வில்
>
> மடவரன் மகளிர்க்கு மறமிகுத்தன்று (பு. பொ. வெ. 175).

என்று காட்டும்போது வீரக்குடியில் பிறந்த பெண்டிர் சினத்தைச் சிறப்பிக்கும் பாங்கு புலப்படுகிறது. இவர்களெல்லாம் தாய்மையின் வீரத்திற்கு எடுத்துக்காட்டாக இலக்கியத்திலும் இலக்கணத்திலும் விளங்குகின்றனர்.

இத்தகைய தாய்மார்களின் வடிவமாகச் சீவகசிந்தாமணியின் தலைமகனாம் சீவகனின் தாய் விசையை திருத்தக்கதேவரின் ஒப்பற்ற படைப்பாய் உள்ளார்.

> வண்டின முகபடாமணிந்து வார்மதம்
>
> உண்டுகுத் திடுகளிற் றுழவன் றன்மகள்
>
> பெண்டிர்தம் பெருநலங் கடந்து பெற்றபேர்
>
> விண்டலர் கோதைக்கு விசையையென்பவே - (சீவக. 182).

என்று கூறும்போது ' அப்பெயர் பெண்டிர் நலம் கடந்து பெற்ற காரணப் பெயர் என்க ' என நச்சினார்க்கினியர் கூற்றுக்கொண்டு அத்தாயின் பெருமை பெறப்படும். தமிழ்ப் பெருங்காப்பியப் பெண்மகளாம் விசையை, வாழ்வில் கணவனை இழந்து பெற்ற மகனை வளர்க்க இயலாது, பின்னர்க் காலச் சூழலால் நலம் பெற்றுய்கிறாள். இத்தகைய சிந்தாமணிக்கதை, புரட்சிக்கவிஞர் உள்ளத்தை இளமையிலேயே தொட்டதால் தொடக்ககாலத்தில் எழுதிய நாடகம் அவருடைய 'சிந்தாமணி' யாக உருவெடுத்தது.

குடும்பத்தின் தலைவி தன் தலைவனையும் பெற்று மக்களையும் காப்பது கடன். சங்ககாலப்

பொன்முடிகண்ட நெறி அதுவே. ஆயின் காப்பியக் கதையில் வரும் விசையை கணவனை இழந்து பெற்ற மகனையும் வளர்க்க இயலாது கைவிட்ட நிலை ஏற்படுகிறது. இதற்குமாறாகப் புரட்சிக்கவிஞரின் 'வீரத்தாய்' என்ற பத்துக்காட்சிகளில் அமைந்த கவிதை நாடகம் உருவாகியுள்ளது.

வீரத்தாயில் காணும் மணிபுரி மன்னன் ஒருவகையில் சிந்தாமணியில் காணும் சச்சந்தன் போல் மதுவில் ஆழ்ந்துகிடக்கச் சேனாபதி காங்கேயன் ஆட்சியைக் கைப்பெற்ற நினைக்கும்போது அமைச்சன்

அரசியோ வீரம் உறுதி அமைந்தாள்!

தரையினர் மெச்சும் சர்வக்லையினள்!

என எச்சரிக்கை செய்தாலும் சேனாபதி அவள் ஒரு பெண் என அலட்சியம் செய்கிறான். அதில் பெண்ணினத்தை ஆண்கள் புல்லென மதிக்கும் நெறி வெளிப்படுகிறது. ஆட்சிக்குரிய இளவரசனைக் கல்வியற்ற மூடனாக வளர்க்கத் திட்டமிடும் சேனாபதியின் சூழ்ச்சிக்கு எதிராக வளர்கலைகள் பலப்பலவும் சொல்லித்தரும் நல்லாசிரியக் கிழவராக அமைந்து வீரம் விளைய வழி செய்கிறாள் விசையை. அன்பு நெறிகாட்ட வேண்டிய நாள் அண்மையிலுள்ளதாக நம்பிக்கையும் ஊட்டுகிறாள்.

சேனாபதிக்குத் துணைபோகும் கிழவராய் அமைந்து அவன் சூழ்ச்சிகளை அறிகிறாள். அவற்றை வெல்ல மற்றுமுள்ள அரசர்க்கெல்லாம் ஓலைவிடுத்துக் காங்கேயன் பின்னிய வலையை அறுக்க முயல்கிறாள். இது மணிமகுட விழாவில் வெடிக்கிறது. சேனாபதியின் பொய்முகம் கிழிகிறது. தனக்கு உதவுவதுபோல் கிழவர்தான் இளவரசுக்குப் பல்கலையும் சேர்ப்பதைக் கண்டு இளவரசனை எதிர்த்தபோது சேனாபதியைப் புறமிட்டு ஓடச்செய்கிறாள் கிழவர் வடிவிலிருந்த விசையை.

புரட்சிக் கவியில் பொதுமக்கள் முன் உதாரன் தன் வழக்கை எடுத்துரைத்தது போலக் கிழவன் வடிவில் வந்த விசையை தன் வழக்கை வெள்ளிநாட்டு வேந்தன், கொன்றை நாட்டுக்கோமான், குன்றநாட்டுக் கொற்றவன் போன்ற மன்னர்கள் முன் சேனாபதியின் வஞ்சனையை எடுத்துக்கூறி வெளிப்படுத்தினாள். அதைக்கேட்ட மன்னர்கள் விசையையின் செயற்கருஞ் செயலைப் போற்றினர்.

அன்னையும் ஆசானும் ஆருயிரைக் காப்பானும்

என்னும்படி அமைந்தீர்! இப்படியே பெண்ணுலகம்

ஆகும்நாள் எந்நாளோ? அந்நாளே துன்பமெல்லாம்

போகும்நாள்

என வாழ்த்தினர். விசையை மகனாம் இளவரசனுக்கே முடிசூட்ட எண்ணினர்.

இதுவரை நடந்த செயலெல்லாம் தாயொருத்தி தம் மகனின் வாழ்வைக் காத்த பாங்கு ஆகும். வேல் கை கொடுத்துச் செருமுகம் நோக்கிச் செல்கென விடுத்த புறநானூற்றுத் தாயின் வளர்ச்சிநிலை விசையையின் வடிவம். மாற்றார் சூழ்ச்சியை மங்கச் செய்து புதிய ஆட்சியை உருவாக்கி உதவுகின்றாள். இளரவசனுக்கு முடிசூட்ட நினைத்தபோது விசையை தான் உருவாக்கிய மகன் வாயிலாகத் தன் கருத்தைக் கூறாமல் கூறுகிறாள். விசயையின் குரலாக இளவரசன் சுதர்மன் மணிபுரி மக்களுக்குச் சொந்த உடைமை; ஆதலினால் அதனைக் குடியரசுக்கு உட்படுத்த விரும்புகிறான். அதிகாரப் பேராசைகொக்கரித்தால் மக்கள் புலி போல் பாய்வர். மக்கள் எழுச்சிபெறக் காங்கேயன் செய்த தீதும் ஒருவகையில் நன்மை செய்தது.

ஆதலால் அவனுக்குத் தீதொன்றும் செய்ய வேண்டாம் என்று கூறுகின்றான்.

எல்லார்க்கும் தேசம், எல்லார்க்கும் உடைமை எலாம்
எல்லார்க்கும் எல்லா உரிமைகளும் ஆகுகவே!
எல்லார்க்கும் கல்வி சுகாதாரம் வாய்த்திடுக!
எல்லார்க்கும் நல்ல இதயம் பொருந்திடுக!

எனக்கூறி முடிவாக

வில்லார்க்கும் நல்ல நுதல்மாதர் எல்லார்க்கும்
விடுதலையாம் என்றே மணிமுரசும் ஆர்ப்பீரே!

எனக் கூறுவான். இக்குரல் சுதர்மனின் குரலாக ஒலித்தாலும் அந்த ஒலியின் அடிநாதமாக விசையையின் குரலே ஒலிக்கும்.

மகனை உருவாக்கும் மறக்குடிமகள் நிலையிலிருந்து உயர்ந்த விசையை செயலாற்றும் இயக்கமாக மாறுவது புரட்சிக் கவிஞர் செய்த மாற்றம். அம்மாற்றத்தை மேலும் வலிமை பெறும் வகையில் முடியாட்சியைக் குடியாட்சியாக மாற்றி ஆண் பெண் அனைவருக்கும் ஒத்த விடுதலை கிடைக்க வழிகாட்டும்போது பழைய மரபின் மாற்றம் நன்கு தெரிகிறது. பில்கணீயத்தில் மக்கள் தம் ஆட்சியைத் தாமே கைப்பற்றியது ஒரு நிலை. வீரத்தாயில் தன்குடிக்குரிய ஆட்சி உரிமையை மக்கள் உரிமையாக மாற்றுவதற்குத் தாயுள்ளம், சொல், செயல் ஆகியவை துணைபுரியும் வகையில் புரட்சிக்கவிஞர் கவிதை நாடகத்தைப் படைத்துள்ளார்.

மூன்று குறுங்காப்பியங்களும் கவிஞரின் கவிதைத் திறனை உணர்த்துவன. படைப்பாற்றலை வெளிப்படுத்துவன. எனினும் காலத்துக்கேற்ற மரபு மாற்றத்தைப் பெண்ணின் அறிவுடைமையிலும் மன்னராட்சியை மக்களாட்சியாக மாற்றும் மாட்சியிலும் அம்மாற்றத்தைத் தாம் பெற்ற மக்கள் வழியே பூக்கச் செய்வதாகும். புதிய மரபுமாற்றத்தைப் புரட்சிக்கவி இவ்வாறு செய்துள்ளார்.

* * *

# ஈழத் தமிழரின் பார்வையில் பாரதிதாசன்

மா. க. ஈழவேந்தன்

தமிழகம் காலத்திற்குக் காலம், காலத்தின் தேவையை நிறைவு செய்கின்ற முறையில் தமிழ் அறிஞர்களைக் குறிப்பாகக் கவிஞர்களை உருவாக்கி உள்ளது. இவர்கள் ஒவ்வொருவரும் தமிழகத்திற்கு அண்மையிலுள்ள ஈழத்தில் தம் தனித் தாக்கத்தை ஏற்படுத்தி உள்ளனர். இக்கவிஞர் வரிசையில் இருவரை இங்கு நினைவு கொள்கிறோம். ஒருவர் பாரதி, மற்றொருவர் அவரின் தாசன் பாரதிதாசன்.

முன்னையவர், இந்திய விடுதலைக்குக் குரல் எழுப்பினார். பின்னையவர் அடிமையில் ஊறிக்கிடந்த தமிழ்ச் சமுதாயத்தைத் தட்டி எழுப்பத் தன் கவிதைகளைப் பயன்படுத்தினார். இந்தியா விடுதலையை வேண்டி நின்றதுபோல் "இலங்கையர்" என்ற உணர்வினால் உந்தப்பட்டு இலங்கையின் விடுதலையை வேண்டி நின்ற இலங்கைத் தமிழர்களுக்குப் பாரதியின் பாடல்கள் தேவைப்பட்டன.

இலங்கையும் இந்தியாவும் விடுதலை பெற்ற பின்பு வெள்ளையர் ஆட்சிக்குப் பதில் வட இந்தியர் ஆட்சி தலை தூக்கியது. இதை எதிர்த்துக் குரல் எழுப்ப வேண்டிய நிலைக்குப் பாரதிதாசன் தள்ளப்பட்டார். அதுபோல் சிங்கள வல்லாண்மையை எதிர்த்து ஈழத் தமிழ் மக்கள் குரல் எழுப்பிய போது பாரதியை மிஞ்சுகின்ற அளவிற்குப் பாரதிதாசனின் பாடல்கள் ஈழத்தமிழ் மக்களின் தேவையை நிறைவு செய்தன.

பாரதி 1882இல் தோன்றி 1921இல் தனது 39 ஆவது அகவையில் இறைவனடி எய்தினார். பாரதிதாசனோ 1891 ஏப்ரல் 29இல் தோன்றி, 1964 ஏப்ரல் 21இல் தனது 73ஆவது அகவையில் ஓரளவு நிறை வாழ்வு எய்திய நிலையில் மறைந்தார்.

### பாரதிதாசனின் தோற்றம் :

பாரதிதாசனை, அவரின் கவிதைகள் வாயிலாகப் பார்ப்பதற்கு முன்பு அவருடைய தோற்றத்தை, அவருடைய ஆளுமையை முதலில் நினைவு கொள்ளல் நலம். பாரதிதாசனுடைய தோற்ற எழுச்சியைக் கவிஞர் மதிவண்ணன் மிக ஏற்றமுற எடுத்துக் காட்டுகிறார். அவர் காட்டுகின்ற முறை, பாரதிதாசனை அப்படியே படம் பிடித்துக் காட்டுவது போல் அமைந்திருப்பதால் அப்பாடலை அப்படியே இங்குத் தருகிறோம்.

காந்தம் போல் நமை இழுக்கும் கவிதைக் கண்கள்!
கச்சிதமாய் பதித்தது போல் நறுக்கு மீசை!
வாய்ந்த எழில் தோள்மேல் சால்வை! போலி
வைதீகம் எதிர்க்கின்ற வைர நெஞ்சம்!

நீந்துவதோ எப்போதும் எதிர் நீச்சல்தான்!

நெருப்பு வரிக் கவிதையிலோ புலிப் பாய்ச்சல்தான்!

சேர்ந்திவைகள் ஒன்றான சங்கமம் தான்!

சுப்புரத்தினக் கவிஞன்! அன்னோன் வாழ்க!

தமிழ் இலக்கிய உலகிற்குப் பாரதிதாசன் பங்களிப்பு எத்தகையது என்பதையொட்டித் தமிழறிஞர்கள் பலர் பல்வேறு நிலையில் சுவைபட ஆராய்ந்துள்ளனர். அவர்கள் ஒவ்வொருவருடைய ஆய்விலும் ஆழமுண்டு, அகலமுண்டு. எனினும் இக் கட்டுரைக்குப் பாரதிதாசன் பற்றிப் பேராசிரியர் அன்பழகன் அளித்துள்ள தீர்ப்பு எம் நெஞ்சைத் தொடும் முறையில் அமைந்துள்ளதினால் அதனை அப்படியே இங்குக் கையாள்கிறோம். இதோ அவர் செப்பிய செம்மொழிகள்!

## பகுத்தறிவுச் சுடர் :

" கவிதை உலகில் அவர் ஒரு முடிசூடா மன்னர். புரட்சி உணர்வில் அவர் ஒரு தமிழ் நாட்டு ஷெல்லி. இயற்கையைப் பாடுவதில் வால்ட் விட்மன். வரலாற்றைக் காவியமாக்குவதில் அவர் இளங்கோ. வருணனையில் சொல்வளத்தில் அவர் கம்பர். காலத்தின் தேவையில் அவர் பாரதி ".

நம்முடைய உள்ளத்தில் அவர் என்றும் பாவேந்தர் - புரட்சிக்

கவிஞர் - இனமுரசு - தன்மான வீரர் - பகுத்தறிவுச் சுடர்

இக்கூற்று பாரதிதாசனின் பணியை ஏற்றமுறச் சுருக்கி விளக்குகிறது.

## புதுச்சேரியின் பங்களிப்பு :

தமிழகத்தின் அண்மைக்கால வரலாற்றில் புதுச்சேரி தனியொரு சிறப்பான இடத்தை வகிக்கின்றது. வெள்ளையர் ஆட்சி நிலவிய காலத்தில் அவ்வாட்சியை எதிர்த்துப் பாரதி குரல் எழுப்பியதன் விளைவு, பிரெஞ்சு ஆட்சிக்குட்பட்டிருந்த புதுச்சேரியில் தஞ்சம் புகும் நிலைக்குப் பாரதி தள்ளப்பட்டார். 1906ஆம் ஆண்டு தொட்டு, 1918ஆம் ஆண்டு வரை புதுச்சேரியில் பாரதி வாழ வேண்டிய நிலை ஏற்பட்டது.

இப்பன்னிரண்டு ஆண்டுகளில் பாரதிக்கும் புதுச்சேரியில் தோன்றி வாழ்ந்த பாரதிதாசனுக்கும் இடையில் ஏற்பட்ட இதய இணைப்பு, கவித்துவ கருத்துப் பரிமாறல், தமிழ் இலக்கிய உலகிலேயே ஒரு திருப்பு முனையை ஏற்படுத்தியது.

## பாரதியும் பாரதிதாசனும் :

"பாட்டிற்கு ஒரு புலவன் பாரதி " எவ்வளவு தூரம் பாரதிதாசனை ஆட்கொண்டார் என்பதற்குப், பாரதி பற்றி பாரதிதாசன் பாடிய பின்வரும் பாடல் சான்று கூறும்.

பைந்த மிழ்த்தேர்ப் பாகன் அவனொரு

செந்தமிழ்த் தேனீ, சிந்துக்குத் தந்தை

குவிக்கும் கவிதைக்குயில்!. இந்நாட்டினைக்

கவிழ்க்கும் பகையைக் கவிழ்க்கும் கவிமுரசு!

நீடு துயில் நீக்கப் பாடி வந்தநிலா

காடு கமழும் கற்பூரச் சொற்கோ!

கற்பனை ஊற்றாம் கதையின் புதையல்
திறம்பாட வந்த மறவன், புதிய
அறம்பாட வந்த அறிஞன், நாட்டிற்
படரும் சாதிப் படைக்கு மருந்து.
மண்டும் மதங்கள் அண்டா நெருப்பவன்
அயலார் எதிர்ப்புக் கணையா விளக்கவன்
என்னென்று சொல்வேன் என்னென்று சொல்வேன்!

இப்பாடல் மூலம் பாரதிதாசன் பாரதியைப் படம் பிடித்துக் காட்டினும் இப்பாடலில் கையாண்டுள்ள கருத்துக்கள் பாரதிதாசனுக்கும் முற்றும் பொருந்தும்.

## பார்ப்பனீயத்தைச் சாடிய பாரதியின் தாசன் :

பாரதிதாசனைப் போல் பார்ப்பனீயத்தைச் சாடிய கவிஞன் தமிழகத்தில் வேறு எவரும் தோன்றவில்லை. இருந்தாலும் பாப்பனக் குலத்தில் தோன்றிய பாரதிக்கு அவர் தாசனாக விளங்கினார். பார்ப்பனக் குலத்தில் பாரதி தோன்றினாலும் "பார்ப்பானை அய்யர் என்ற காலமும் போச்சே" என்று பாடியவர் பாரதி. பார்ப்பனரில் இருவர் பைந்தமிழ்ப் பற்றுடையவர். ஒருவர் பாரதி, மற்றையவர் சூரிய நாராயண சாத்திரி என்ற தன் இயற்பெயரை பரிதிமாற் கலைஞர் என்று மாற்றிய தமிழ் அறிஞர். எனவேதான் இருவர் மீதும் பாரதிதாசனுக்கு த் தனிப் பற்றும் பாசமும் இருந்தது.

தமிழகத்தில் எத்தனையோ புலவர்கள் தோன்றி உள்ளனர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு சிறப்பு உண்டு. அவற்றை நாம் குறைத்து மதிப்பிட விரும்பவில்லை. ஆனால் பாரதிதாசன் ஒருவர்தான் தமிழைத் "தெய்வ நிலைக்கு" மேலாகத் தன் உயிரென ஓம்பிய கவிஞனாக விளங்கினார். அவருக்குத் தமிழ் மீது இருந்த எல்லையற்ற பற்றினை எடுத்துக் காட்டுவதற்கும், தமிழே அவர் வாழ்வை உந்துகின்ற உயிர் ஆற்றலாக விளங்கியது என்பதற்கும், நிறையச் சான்றுகள் உண்டு. எனினும், அவற்றுள் ஒரு சிலவற்றை இங்கு நாம் எடுத்துக் காட்ட விரும்புகிறோம்.

தமிழை என்னுயிர் என்பேன் கண்டீர்

உயிரை உணர்வை வளர்ப்பது தமிழே,

தமிழ் எங்கள் உயிருக்கு நேர்
அளப்பிலா உவகை ஆடல் தமிழே
நீ என்றன் ஆவி.

உண்ணல் உடுத்தல் உயிர்த்தலெனச் செந்தமிழை
ஆமென்று நாட்டுக

தமிழ் எங்கள் உயிர் என்பதாலே வெல்லும் தரமுண்டு
தமிழர்க்கு இப்புவி மேலே.

எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு
மங்கை தரும் சுகமும் மாத்தமிழுக்கு ஈடாமோ?

செந்தமிழ் உயிரே நறுந்தேனே
செயலினை மூச்சினை நைந்து உனக்களித்தேனே

நைந்தாயெனில் நைந்து போகுமென் வாழ்வு
　　நன்னிலை உனக்கெனில் எனக்குந் தானே.

கனியிடை யேறிய சுளையும் முற்றல்
　　கழையிடை யேறிய சாறும்,
பனிமலர் ஏறிய தேனும் காய்ச்சுப்
　　பாகிடை ஏறிய சுவையும்,
நனிபசு பொழியும் பாலும் - தென்னை
　　நல்கிய குளிரிள நீரும்
இனியன என்பேன் எனினும் தமிழை
　　என்னுயிர் என்பேன் கண்டீர்.

பாரதிதாசன் வாழ்வோடு தமிழ் எவ்வளவு தூரம் பின்னிப் பிணைந்துள்ளது என்பதை மேற்குறித்த பாடல்கள் எடுத்துக் காட்டுகின்றன.

ஆனால் தமிழுக்கு வெறுமனே புகழ் மாலை சூட் டுவதாலோ பாமாலை சூட்டுவதாலோ அது வாழப்போவதில்லை. ஒரு மொழியின் வாழ்வு அம்மொழியைப் பேசுவோர் அதனை எவ்வளவு தூரம் பேணிக் காக்கின்றனர் என்பதைப் பொறுத்தே அமையும். பாரதிதாசன் வாழ்ந்த காலத்தில் ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்கள் ஓரிடத்தில் குறிப்பிட்டதற்கமைய "தமிழனுக்குத் தேசியம் என்றால் இந்தி, அனைத்துலக மொழி என்றால் ஆங்கிலம், இசை என்றால் தெலுங்கு, வழிபாடு என்றால் வடமொழி, அடுக்களையில் கூட அருந்தமிழ் ஆட்சி செலுத்துமா என்பது கேள்விக்குறி". இந்த அளவிற்கு அனைத்துத் துறைகளிலும் வேற்றுமொழிகள் தலைதூக்கத் தமிழை மறந்து தமிழன் வாழ்ந்த வரலாறே அன்று நிலவிய சூழ்நிலையாகும்.

இதை மாற்றியமைக்க வேண்டிய பொறுப்பில் இயல்துறை மறைமலை அடிகளாரிடமும், இசைத்துறை பாரதிதாசனிடமும் ஒப்படைக்கப்பட்டது. எனினும் பண்டைய தமிழ் இசையின் பெருமையை முதலில் ஆய்வு நிலையில் எடுத்துக் காட்டிய பெருமை 'யாழ் நூல்' தந்த ஈழத்து விபுலானந்த அடிகளையே சாரும்.

துறைதோறும் தமிழ் துலங்கினாலன்றி தமிழோ தமிழனோ தலைதூக்க முடியாது என்பதை உணர்ந்த பாரதிதாசன் தமிழனின் அன்றாட நிகழ்ச்சிகள் அனைத்திலும் தமிழ் இடம் பெறும் நிலையை உருவாக்க ஓயாது உழைத்தார்.

"நாயினும் கீழாய் நந்தமிழ் மக்கள் நலிவதை நான் கண்டும் ஓயுதலின்றி அவர் நலம் பேணி உழைத்திட நான் தவறேன்" என்று அவர் பாடியதற்கமைய தன்னை மறந்திருந்த தமிழனுக்கே தமிழுணர்வை ஊட்டும் பணியில் பாரதிதாசன் ஓய்வின்றிப் பாடுபட்டார்.

தூக்கத்தில் ஆழ்ந்திருந்த தமிழனைத் துடித்து எழுந்து துறைகள் தோறும் தமிழை வாழ்விக்கின்ற பணியில் அவனை ஈடுபடுத்திய பெருமை பாரதிதாசனையே சாரும். பாரதிதாசன் தோன்றியிராவிடில் இத்தகைய பேருணர்ச்சி தமிழகத்தில் உருவாகி இருக்குமா என்பது பெருங் கேள்வியே ஆகும்.

'எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத தமிழென்று சங்கே முழங்கு' என்று அவர் பாடியபோது, உணர்ச்சி முற்றிலும் அழிந்திருந்த தமிழன் கூட உணர்வு பெற்று, தமிழனாக வாழ முயன்ற வரலாறு தமிழகத்தில் ஏற்பட்டதனை நடுநிலை வழுவாது வரையும் ஆசிரியர்கள் ஏற்றுள்ளனர்.

### இசையில் தமிழ் :

ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி உவப்பிலா இன்பத்தினை நல்கு கின்ற ஆற்றல் தமிழ் இசைக்கு இருந்தபோதும் தமிழ் இசையை விடுத்து, புரியாத செத்த வடமொழிக்கும், தெலுங்கிசைக்கும் கைத்தாளமிட்டு மகிழ்ந்த தமிழனின் அறியாமையைக் கண்டு, எண்ணி ஏங்கினார் பாரதிதாசன்.

தமிழ் இசைத்துறையில், தமிழ் தலை தூக்க வேண்டும் என்று விரும்பிய பாரதிதாசன் தமிழ் நாடகத்துறையிலும் நல்ல தமிழ் ஆட்சி செலுத்த வேண்டும் என விரும்பியதோடு தமிழில் நாடகங்களையும் எழுதி வழங்கினார்.

### வாணிகத்தில் வளமான தமிழ் :

தமிழன் பணியாற்றும் துறைகள் பல. அவற்றுள் வணிகத்துறை முதன்மை வாய்ந்தது. இந்த வணிகத் துறையில் வண்டமிழ் வளமோடு விளங்க வேண்டும் என வேண்டி நின்றார். வணிகர் தம் முகவரியை வரைகின்ற பலகையில் ஆங்கிலமா வேண்டும்? எனக்கேட்ட அவர், "மாணுயர்ந்த செந்தமிழால் வரைக என அனைவருக்கும் சொல்ல வேண்டு"மென வேண்டுகோள் விடுத்தார்.

உணவு தரும் விடுதி என நல்ல தமிழ் இருக்கையில் கிளப் என்று ஏன் இயம்ப வேண்டும்? எனக் கேட்ட அவர், பட்டுத் துணிக்கடைக்கு "சில்க் ஷாப்" எனப் பலகையைத் தொங்க விடுவதால் என்ன பயன் ஏற்பட்டுள்ளது என அவர் கேட்கின்ற போது ஒவ்வொரு தமிழனும் வெட்கித் தலைகுனிய வேண்டிய நிலை உருவாகிறது.

"பவன்", "மண்டல்" போன்ற தேவையற்ற பிறமொழிச் சொற்கள் தமிழகத்தில் பயிலா வண்ணம் தமிழே எங்கும் இடம் பெறச் செய்ய வேண்டும் என மொழிந்த பாரதிதாசன், ஆங்கிலச் சொல்லோ, இந்தி மொழியோ, வட சொல்லோ தமிழிற் கலந்து தமிழை அழிக்காது காக்க வேண்டுமென அறிவுறுத்தினார். "பிராமணர்கள் உண்ணும் இடம்" எனும் பேச்சில் என்ன தான் உவப்புக் கண்டீர் தமிழ் மானம் ஒழிந்திடுதே. அய்யகோ உணர்வீர் நன்றே என அவர் அலறித்துடித்த போது எம்முணர்வை மிஞ்சுகின்ற அளவிற்கு எம் உள்ளம் துன்பத்தில் மூழ்கியது.

### கல்லூரிகளில் கன்னித்தமிழ் :

இன்றைய தமிழினத்தின் அடுத்த தலை முறையை - வழித் தோன்றல்களை உருவாக்கித் தருபவை கல்லூரிகள் - அவற்றைவழி நடத்தும் கல்லூரித் தலைவர்கள் திசை மாறித் தமிழினத்தையே பாழடிக்க முயன்றபோது, பாரதிதாசன் நெஞ்சம் பதைபதைத்தது. அவர் உள்ளத்தில் ஊறிய துன்ப உணர்ச்சி உணர்வற்ற தமிழனையும் உணர்வு பெறும் முறையில் பின்வரும் பாடலாகப் பெருக்கெடுத்து ஓடுகிறது.

கல்லூரித் தலைவரை நான்
கேட்கின்றேன் கனித்தமிழின்
பேரைச் சொன்னால்
சொல்லூறிப்போகாதோ
வாயூறிப் போகாதோ
தூய் தமிழ்க்கு
வல்லூறாய் வாய்த்தீரோ

வளம் செய்யும் எண்ணமெனில் நீர்பிறந்த
நல்லூரின் நன்மொழியால்
அல்லாது நடந்திடுமோ
நவில்வீர் இன்றே"

## தமிழ்த் திருமணம் :

தமிழ் இசையிலும் தமிழ் நாடகத்திலும் தமிழ் தலைமை தாங்க வேண்டும் என விரும்பிய பாரதிதாசன், கல்லூரியில் அனைத்திலும் கன்னித் தமிழே அரசோச்ச வேண்டும் என விரும்பிய பாரதிதாசன், தமிழனுடைய திருமணங்களில் வடமொழி வல்லாண்மை செலுத்துவது கண்டு நெஞ்சம் நொந்து - 'விவாக சுபமுகூர்த்தம்' என வெளிப்படுத்தும் மண அழைப்பில் மேன்மை என்ன? என்று கேட்கிறார். மேலும், "அவாள், இவாள்" என்று அழைக்கும் பார்ப்பனரை இடித்துரைத்த அவர், உவகை பெறத் தமிழன் மனம் விழையுங்கால் உயிரற்ற வடசொல் உச்சரிப்பு கவலையினை ஆக்காதோ என மணவிழா காண்போரைப் பார்த்து அவர் விடுக்கின்ற வினா, பொருள் பொதிந்த வினாவாக விளங்குகிறது.

"பார்ப்பான் போய் அடிவைத்த வீட்டில் எல்லாம் ஊனம் தான் அல்லாமல் உயர்வு என்ன கண்டு விட்டார். இந்நாள் மட்டும்' என இது காலவரை பட்ட பட்டுணர்வை எடுத்துரைத்து "மணமக்கள் தம்மைத் தமிழர் வாழ்த்தும் வண்தமிழ்க்கே இணையாக பார்ப்பான் சொல் வட மொழியா தமிழர் செவிக்கின்பம் ஊட்டும்" எனக் கேள்விக்கு மேல் கேள்வி கேட்டுத் தன்னிலை மறந்திருந்த தமிழனைத் தட்டி எழுப்பும் தன்மை எம் நெஞ்சைத் தொடும் நிகழ்ச்சியாக அமைகிறது. எனவே தான் வினா எழுப்பியவர் விடை தருகின்ற முறையில் 'மணமக்கள் இல்லறத்தை மாத்தமிழால் தொடங்கிடுக நல்கும் இன்பம், இன்பம்' எனத் தெளிவும் துணிவும் அமைந்த முடிவினை மொழிந்து செல்கிறார்.

## இன்பத் தமிழால் இறைவனைப் பாடுக :

மேற்குறித்த துறைகள் அனைத்திலும் தமிழ் புறக்கணிப்பட்டதை அறிந்து துன்பக் கடலிலே மூழ்கிய பாரதிதாசன் இறை வழிபாட்டுத் துறையை நோக்குகிறார். எங்கும் நிறைந்தவன் இறைவன்; எல்லாம் வல்லவன் இறைவன் என்றும் ஓசை ஒளியெல்லாம் ஆனாய் நீயே என்றும், தமிழோடு இசை பாடல் மறந்தறியேன் என்றும் அடியார்களால் ஓதி உணரப் படுகின்ற இறைவனுக்குத் தமிழ் தெரியுமா என்று கேட்கின்ற தமிழனின் மடைமையை எண்ணிக் கண்ணீர் விடுகின்ற பாரதிதாசன் "உயிர் போன்ற உங்கள் தமிழ் கடவுளுக்கே உவப்பதால் இல்லை போலும். உயிர் போன்ற உங்கள் தமிழ் உரைத்தக்கால் கடவுளதை ஒப்பார் போலும்; பயிரழிக்கும் விட்டிலெனத் தம் வழியே படுத்த வந்த, வடமறைதான் செய்தீர் வாழ்த்துவதற்கும், தேவை என்று சொல்வதற்கும்" என்று குடைந்து குடைந்து வினாக்களைத் தொடுக்கின்ற நம் பாரதிதாசன்,

மடி கட்டிக் கோயிலிலே
மேலுடைய இடுப்பினிலே
வரிந்து கட்டிப்
பொடி கட்டி இல்லாது
பூசியிருகை கட்டிப்
பார்ப்பானுக்குப்

படிகட்டித் தமிழரெனப்
படிக்கட்டின் கீழ் நின்று
தமிழ் மானத்தை
வடிகட்டி அவன் வடசொல்
மண்ணாங்கட்டிக் குவப்பீர்
மந்திரம் என்றே

என்ற வினாவினை எழுப்பி அடிமை நிலையில் ஆழ்ந்திருந்த தமிழனுக்கு அடிகொடுத்து எழுப்பினார்.

### பக்திக்குரிய மொழி பைந்தமிழ் :

பக்திக்குரிய மொழி பைந்தமிழ் (**Tamil is the language of Devotion**) என்று தமிழால் உலகாண்ட தனிநாயக அடிகளார் கூறியதற்கமைய இன்பத்தமிழால் இறைவனைப் பாடி அன்பைப் பெருக்க ஆயிரம் ஆயிரம் பாடல்கள் அருந்தமிழில் இருக்கின்றபோது. செத்த வடமொழியால் இறைவனை வழிபட்டு வாழ்வு பெற எண்ணும் தமிழனை நாம் எப்படித்தான் வர்ணிப்பது? எனவேதான்,

சொற்கோவின் நற்போற்றித்
திருஅகவல் செந்தமிழில்
இருக்கும் போது
கற்கோயில் உட்புறத்தில்
கால் வைத்த தெவ்வாறு
சகத்ரா நாமம்?
தெற்கோதும் தேவாரம்,
திருவாய் நன்மொழியான
தேனிருக்கச்
செக்காடும் இரைச்சலென
வேத பாராயணமேன்
திருக்கோயில் பால்?

இப்படியெல்லாம் எடுத்துரைத்துத் தமிழனுக்கு அறிவுரை கூறிய நிலையிலும் ஒரு சில கோயில்கள் நீங்கலாக, ஏனைய அனைத்திலும் "குருடும் குருடும் குருடாட்டம் ஆடிக் குழிவிழுமாறே" என்று திருமூலர்கூறியதற்கமைய. பொருள் புரிய வடமொழி வழிபாடே இடம்பெற்றிருப்பதால் உணர்வற்ற தமிழனைத் தட்டி எழுப்ப முடியுமா என்ற கேள்வியையே எம்மைக் கேட்க வைக்கிறது.

### தமிழ் தலைதூக்க தமிழாய்ந்த முதல்வர் வேண்டும் :

"அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி" என்று புறநானூறு புகன்றதற்கு அமைய ஆட்சியாளர் சிந்தனைக்கு ஏற்பவே குடி மக்களின் சிந்தனையும் அமைவது இயல்பு.

எனவேதான் "தமிழாய்ந்த தமிழன்தான் தமிழ் நாட்டின் முதலமைச்சாய் வரவேண்டும்.

தமிழ்ப்பகைவன் முதலமைச்சாய் வராது தடுத்தல் வேண்டும்" என்று நம் பாரதிதாசன் தம் விடுதல் அறியா விருப்பினையும் எச்சரிக்கைகளையும் வழங்குகிறார்.

அவர் மேலும் கூறுகையில் "தமிழறியான் தமிழர் நிலை, தமிழர் நெறி,தமிழறிஞர்களின் தேவை வாழ்வுதனை அறிதல் உண்டோ?' என்ற வினாவினைக் கேட்டு அவை எந்நாளும் உருவாக்கப்போவதில்லை என்பதை மிகத் தெளிவாக எடுத்துரைக்கிறார். தமிழறிந்த தமிழன் ஆட்சி செலுத்தினால்தான் தமிழ்க் கல்வி தமிழ் நாட்டில் கட்டாயம் எனும் சட்டம் நிறைவேற்றப்படும். அதோடு, தமிழ் பயின்றவன் அரசுப் பணியிலும் அமர்ந்து அரசோச்ச முடியும் என்றும் ஆணித்தரமாக அறைகிறார்.

## தமிழ் உணர்வும் அறிவும் உள்ளவர்தான் ஏடு எழுத வேண்டும் :

தமிழை வளப்படுத்த தமிழ் உணர்வு வேண்டும் எனக் கூறுகின்ற பாரதிதாசன் 'இலக்கணமும் இலக்கியமும் தெரியாதான் ஏடு எழுதல் கேடு நல்கும்' என எச்சரிக்கிறார். அதே வேளையில், தமிழ் ஏட்டினை எழுத தமிழ்ப்பகைவனைப் பணிக்கு அமர்த்தின், "தலைக்கணையில் நெருப்பிட்டுத் தலை வைத்துத் துயில்வது போல் பகைவனைப்போல் நிலைப்புற்று தமிழ் ஏட்டில் ஆசிரியனாக்குவது" என்று கூறி, நம்மை விழிப்புணர்ச்சியோடு இருக்கும்படி அறிவுரை கூறும் இக்கவிஞன், "கலைப் பண்பும் உயர் நினைப்பும் உடையவரே ஏடு எழுதும் கணக்காயர்களாக" இருத்தல் வேண்டும் என ஏடெழுதுவோரின் தகைமையை ஏற்றமுற எடுத்துரைக்கிறார்.

இன்று தமிழகத்தில் தமிழ் இலக்கணமும் இலக்கியமும் தெரியாது தமிழைக் கொலை செய்வோர்கள் ஒரு புறமும், தமிழால் பிழைப்பினை நடத்திக் கொண்டு தமிழையும் தமிழரையும் மெல்லச் சாகடிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருப்போரையும் நாம் காண நேருகின்ற போது பாரதிதாசன் நம் நினைவலைகளில் மோதத்தான் செய்கிறார்.

எனவேதான், தமிழின் வாழ்வு பற்றியும் தமிழரின் வாழ்வு பற்றியும் எண்ணிப் பார்க்கின்ற நாம், உணர்வும் அறிவும் இணைந்திருப்போர் தான் தமிழ்த் துறையில் அமர்த்தப் படவேண்டும் என்பதை நினைவு கொள்வோமாக.

## வடநாட்டின் வஞ்சனை :

தமிழ்நாடு தலையெடுப்பதைத் தடுத்து நிறுத்துகின்ற முறையில் வஞ்சனைச் செயல்களில் வடநாடு காலந்தோறும் ஈடுபட்டு வந்துள்ளது. அன்று வடமொழி வல்லாண்மையைச் செலுத்த முயன்ற வடநாடு, பின்பு இந்தியைத் திணித்துத் தமிழையும் தமிழனையும் உருக்குலைக்கின்ற அழிவு முயற்சியில் ஈடுபட்டிருப்பது கண்கூடு. **எனவேதான்** நம் பாரதிதாசன் "வடநாடு தென்னாட்டை வீழ்த்தச் செய்த வஞ்சங்கள் சிறிதல்ல தம்பி! இடைநாளில் மட்டுமா பார்த்தார், சென்ற இரண்டாயிரத்தாண்டு பார்த்தார்!" என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழை அழிப்பதில் வடநாடு திட்டமிட்டுச் செயற்படுகிறது என்பதைப் பாரதிதாசன் தெளிவுற எடுத்துக் காட்டுகிறார்.

அது மட்டுமல்ல, தமிழ் நாடு வந்த வட நாட்டார், தமிழால் செழித்து வாழ்வினில் உயர்ந்தபின், தமிழையே பழித்து நம் செயல்கள் ஒழுக்கங்களைக் கெடுத்த வரலாற்றினையும் வரிசைப்படுத்தி வரைந்துள்ளார் நம் பாரதிதாசன். எனினும் இன்றைய தமிழன் வட நாட்டின் வஞ்சனைப் போக்கினை உணர்ந்துள்ளான். இதனால் தான் வட நாட்டார் வல்லாண்மை தமிழகத்தில் தலைதூக்க முடிவதில்லை. பாரதிதாசன் ஊட்டிய உணர்வே இவ்விழிப் புணர்ச்சிக்கு அடித்தளமாக அமைகிறது.

## ஈழத்தமிழர் இதயத்தில் இடம்பெற்ற கவிஞன் :

பாரதிதாசன் தமிழகத்தை மட்டும் எண்ணிப் பார்த்ததில்லை. 20 கல் தொலைவிலுள்ள ஈழத்தை அவன் மறந்ததில்லை. வீரத்தமிழன் என்ற தலைப்பில் இலங்கைவேந்தன் இராவணனை நம் புரட்சிக் கவிஞர் உணர்ச்சியின் உச்ச நிலைக்கு எம்மை அழைத்துப் பின்வருமாறு பாடுகின்றார்.

தென்திசையைப் பார்க்கின்றேன் என் சொல்வேன், என்றன்
சிந்தை யெலாம் தோள்க ளெல்லாம் பூரிக்குதடடா!
அன்றந்த இலங்கையினை ஆண்ட மறத்தமிழன்
ஐயிரண்டு திசை முகத்தும் தன் புகழை வைத்தோன்
குன்றெடுக்கும் பெருந்தோளான் கொடை கொடுக்கும் கையான்
குள்ளநரிச் செயல் செய்யும் கூட்டத்தின் கூற்றம்
என்றமிழர் மூதாதை என்றமிழர் பெருமான்
இராவணன்காண் அவன்புகழை இவ்வுலகம் அறியும்
வீழ்ச்சியுறு தமிழகத்தில் எழுச்சி வேண்டும்.
விசையொடிந்த தேகத்தில் வன்மை வேண்டும்
சூழ்ச்சிதனை வஞ்சகத்தைப் பொறாமை தன்னைத்
தொகையாக எதிர் நிறுத்தித் தூள் தூளாக்கும்
காழ்சிந்தை மறச்செயல்கள் மிகவும் வேண்டும்
கடல்போலச் செந்தமிழைப் பெருக்க வேண்டும்
கீழ்ச் செயல்கள் விட வேண்டும் இராவணன்றன்
கீர்த்தி சொல்லி அவன் நாமம் வாழ்த்த வேண்டும்.

## வீரத்தின் விளைநிலம் ஈழத்தமிழர் :

மேற்குறித்த முறையில் இராவணனை நம் பாரதிதாசன் வாழ்த்துகிறார் ஏதோ தனி மனிதன் இராவணனை வாழ்த்துகிறார் என்பது பொருளல்ல. மாறாக; ஈழத் தமிழரின் வீரத்தை எண்ணிப் பார்த்தே பாரதிதாசன் இப் பாடலைப் பாடுகிறார். எம் கூற்றுக்கு வலிவூட்டுகின்ற முறையில் மற்றுமோர் இடத்தில் 'சிங்களம் சேர் தென்னாட்டு மக்கள் தீராத தீரர் என்று ஊது ஊது சங்கே என்றும், வெங்கொடுமைச் சாக்காட்டில் விளையாடும் தோள் எங்கள் வெற்றித் தோள்கள் என்றும் கங்கையைப் போல் காவிரி போல் கருத்துக்கள் ஊறும் உள்ளம் எங்கள் உள்ளமென்றும்' ஈழத் தமிழரை வாழ்த்துகின்ற போது, எவ்வளவு தூரம் ஈழத்து மக்கள் உள்ளத்தோடு அவர் உள்ளமும் ஒன்றி இருக்கிறது என்பது நாம் உணரத்தக்கதாக இருக்கிறது. இத்துடன் ஈழத் தமிழரை வீரத்தின் விளைநிலமாகவும், கருத்துக்களின் கருவூலமாகவும் அவர் காண்கிறார் என்பதனையும் நாம் இங்குச் சுட்டிக் காட்ட விரும்புகினறோம்.

## பாரதிதாசனும் காசி ஆனந்தனும் கண்ட கனவு நனவாகும் :

"கொலை வாளினை எடடா மிகக் கொடியோர் செயல் அறவே! குகைவாழ் ஒரு புலியே. உயர் குணமேவிய தமிழா" என்று கொடியோர் செயலை வீழ்த்த கொலை வாளினை எடுக்கும்படி அவர் அன்று கட்டளையிட்டார்.

அவர் அன்று கூறியது போல் ஈழத் தமிழர் சிங்களக் கொடியோர் செயல் அற கொலை வாளினை ஏந்திக் குகை வாழ் ஒரு புலியாகவும், குணமேவிய தமிழனாகவும் இன்று விளங்குவது நாம் காணத் தக்கதாக இருக்கிறது.

புரட்சிக் கவிஞன் பாரதிதாசன் வழியில் வந்த உணர்ச்சிக் கவிஞன் காசி ஆனந்தன் தனக்கே உரிய தனி நடையில் "மறவர் படைதான் தமிழ்ப்படை குல மானம் ஒன்று தான் அடிப்படை வெறி கொள் தமிழர் புலிப்படை அவர் வெல்வோர் என்பது வெளிப்படை" என்று பாடுகிறபோது பாரதிதாசனின் வீரக் கவி மரபு, ஈழத்தில் இன்று நிலைத்துவிட்டது என்பதை நாம் எண்ணிப் பார்த்து, உவகையில் மூழ்கத்தக்கதாக இருக்கிறது.

பாரதி கண்ட கனவு பாரத விடுதலை. இக்பால் கண்ட கனவு பாகிஸ்தான் தோற்றம். பாரதிதாசன் கண்ட கனவு தமிழ் நாட்டின் எழுச்சி. அதுபோல் அவர் வழிவந்த காசி ஆனந்தன் கண்ட , காண்கிற கனவு தமிழீழ விடுதலை, "பூத்ததடா தமிழ் ஈழம் புலர்ந்ததடா தமிழன் வாழ்வு" என்று இக்கவிஞன் காண்கின்ற கனவு நனவாவதை உலகின் எந்தச் சக்தியும் தடுக்க முடியாது.

ஈழத் தமிழர் இதயத்தில் இடம்பெற்ற பாரதிதாசன் புகழ் வாழ்க.

* * *

# நலம் பாடும் நம் கவிஞர்

டாக்டர் இரா. கலைக்கோவன்

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞர்களுள் ஒருவரான பாரதிதாசன் தமிழ் நோக்கும் சமுதாயப் பார்வையும் கொண்டிருந்தாற் போலவே அறிவியல் நாட்டமும் பெற்றிருந்தமைக்கு அவரது கவிதை வரிகளே கனிந்த சான்றுகளாகின்றன. தம்முடைய கவிதை நூல்கள் பெரும்பாலானவற்றில் வாய்ப்பமைந்த இடங்களில் எல்லாம், நேரிடையாகவும் மறைமுக மாகவும் அறிவியல் உண்மைகளைத் தொட்டுக்காட்ட அவர் தவறவேயில்லை. மேலோட்டப் பார்வையில் எளிய செய்திகளாய்த் தோன்றினாலும், அறிவியல் நோக்கோடு அணுகிப் பார்ப்போருக்கு, அவ்வரிகளில் பாரதிதாசன் வெளிப்படுத்தியிருக்கும் நலவிழைவு தெள்ளிதின் விளங்கும்.

மருத்துவ உலகில் தூய்மையைத் தனியர் தூய்மையென்றும், சூழல் தூய்மையென்றும் இரு பெரும் பிரிவுகளாய்ப் பிரிப்பர். இவற்றுள் தனியர் தூய்மை உடல் தூய்மை, உள்ளத் தூய்மை இரண்டையும் கொண்டதாகும். பாரதிதாசன் தன்னுடைய கவிதைகளில் இம்மூவகைத் தூய்மையையும் மனிதநலம் வேண்டிப் பாடியுள்ளார்.

### பாரதிதாசன் பாடும் உடல் தூய்மை :

உடல் தூய்மையைப் பற்றிப்பேசும் மருத்துவ நூல்கள் அது தொடர்பான பழக்க வழக்கங்களையே முதன்மைப்படுத்திக் காட்டுகின்றன. உணவு, நீர் அருந்துதல், செரிமானக் குறைவு, மலச்சிக்கல், எடை, களைப்பு, சினம், உறக்கம், உடைகள், குளியல், உடற்பயிற்சி என்று பல்வேறு பிரிவுகளாய் உடல் தூய்மை பகுக்கப்பட்டுள்ளது. புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் இந்தப் பிரிவு நிலைகளையெல்லாம் உணர்ந்தறிந்தவராய்த் தம்முடைய கவிதைத் தொகுதிகளில் பல இடங்களில் இவை ஒவ்வொன்றையும் இனம் காட்டி உரிய அறிவுரைகளை எடுத்து வைக்கிறார்.

உடையினில் தூய்மை - உண்ணும்
உணவினில் தூய்மை - வாழ்வின்
நடையினில் தூய்மை - உன்றன்
நல்லுடல் தூய்மை சேர்ப்பின்
தடையில்லை வாழ்நாள் ஒவ்வொன்றும் இன்பம்
தரும்நாள் ஆகும் நீ என்றும்
தூய்மை சேரடா தம்பி

இந்தப் பாடலில் உடைத்தூய்மை, உணவுத் தூய்மை, நடைத்தூய்மை, நல்லுடல் தூய்மை என்ற நான்கு செய்திகள் பேசப்படுகின்றன. அறிவியல் அறிஞர்கள் எதைச் சொன்னாலும் அதற்குக் காரண காரியங்களை விளக்கிக் காட்டுவது மரபு. ஆனால் கவிஞர்கள் அப்படி விளக்கிக் கொண்டிருக்க முடியாது; அது தேவையும் இல்லை. அதனால்தான் உடைத்தூய்மை இல்லாது போனால், அவ்வுடையில் படியும் வியர்வைப் பிசுக்கும், அழுக்கும் தூசுகளும், தோலில் உண்டாக்கக் கூடிய நோய்களையெல்லாம் பாரதிதாசன் பட்டியலிடவில்லை. அதற்குப் பதிலாக வெள்ளுடை விரித்து மேனி துடைத்தல், வெள்ளிய உடை கழற்றி வேற்றுடை அணியச் செய்தல் போன்ற தூய்மைநலம் போற்றும் கருத்துக்களை எடுத்து வைக்கிறார். உடைத் தூய்மையோடு உறங்கும் இடத்தின் தூய்மையையும் குடும்ப விளக்கின் மூலமாக நமக்குக் காட்டுகிறார். மெத்தை, தலையணைக்குத் தூய்மையான வெள்ளை உறை இடுதல், தூய பல் விரிப்பு கொண்டு அவற்றைத் தூசு படியாமல் காத்தல் என்பவெல்லாம் படுக்கையறைத் தூய்மை குறித்த பாரதிதாசன் கருத்து மலர்வுகளாகும். உளவியல் அறிஞர்கள் நல்லுறக்கத்திற்கான அடிப்படைத் தேவைகளுள் ஒன்றாய்த் தூய்மையான படுக்கையைக் குறிக்கிறார்கள். களைப்பாக வந்து படுக்குமிடத்தில் 'மெழுகு போல அழுக்குப் படிந்த தலையணை இருந்தால் தூக்கம் எப்படி வரும்? அதையும் இருண்ட வீட்டில் சுட்டிக்காட்டி அத்தகு தலையணையில் தலைவைத்துத் தூங்கும் மனிதரையும், அவர் குடும்பத்தையும் சுத்திக்காட்டி நலச்சீரமைப்புக்கு வழிகோல முயற்சிக்கிறார் பாரதிதாசன்.

உணவு, சமைத்ததாக இருந்தாலும் வேறுவிதமாக இருந்தாலும் அதன் தூய்மை குறையாது உட்கொள்ளப்படாவிட்டால் நோய்கள் தொடர்கதையாகும். மூடி வைக்கப்படாத உணவுப் பண்டங்களில் மொய்க்கும் ஈக்கள் பரப்பும் நோய்கள் ஒன்றா இரண்டா!

மொய்த்த ஈயொடு முதல்வர் தின்றார்

என்ற இருண்ட வீட்டு வரியில் ஈ மொய்த்த உணவின் தீமைகளைக் குறிப்பாய்ச் சுட்டும் பாரதிதாசன்,

ஈக்கள் புழுக்குமிடம் தூய்தாகிப் போமோ!

என்றும்,

ஈ முன்கால் சோற்றிலையில்
இட்டாலும் தீமையம்மா

என்றும் பிறிதோரிடத்தில் கடிந்து கொள்கிறார்.

"ஈயின் காடும் எலும்பின் காடும்", என்று இல்லத்தின் தூய்மையற்ற சூழலைச் சாடி, அச்சூழலில் குழந்தை தவழ்வதைக் கண்டு சினக்கும் பாரதிதாசனின் நலநோக்கு நம்மை வியப்படைய வைக்கிறது.

உண்பதற்கு முன்னாலும், உண்டபிறகும் கைகளைக் கழுவவேண்டும் என்பது அடிப்படை நலக்கோட்பாடாகும். கைகளைக் கழுவாது உண்பதனால் பூச்சி நோய்கள் பெருகும். தமிழகத்தின் தனிப்பெரும் சொத்தான அமீபியாசிஸ் என்னும் நோய், விரல் நகங்களின் இடுக்குகளில் ஒளிந்து உணவருந்தும்போது உட்செல்லும் பூச்சி முட்டைகளாலேயே பெருகுகிறது. அஸ்கேரியாசிஸ் என்னும் பூச்சி நோயும் இப்படித்தான் பரவி செரிமானக் குறைவையும், வயிற்றுக் கடுப்பையும் உண்டாக்குகின்றது. கைகளைத் தூய்மையாக்கிக் கொண்டே சாப்பிட வேண்டும் என்பதை,

அலம்புக கைகால் வந்தே

அமரப்பா சாப்பிடப் பா!

என்ற வரிகளிலும், உண்டபின்னும் கைகளைப் பேருக்குக் கழுவாமல், நன்றாகக் கழுவித் தூய்மையாக்கிக் கொள்ள வேண்டும் என்பதை, 'அவர் கைக்கு நீர் ஏந்தி, நெய்ப்பசை அகற்ற உவர்க்கட்டி தன்னை உதவு' என்ற வரிகளிலும் பாரதிதாசன் சொல்லிச் செல்வதை நோக்கும் போதும்,

தேகத்தில் வேண்டும் சுகாதாரம்

அசுத்தமும் இருட்டும் புறத்தும்நல் அகத்தும்

அகற்றுக நீதமிழா ஆனந்தம்உனை நந்தும்

என்னும் இசையமுது வரிகளைப் படிக்கும்போதும் தூய்மையில் அவருக்கிருந்த நம்பிக்கையும், ஈடுபாடும் தெளிவாய்த் தெரிகின்றன.

பழம் உண்பது, காய்ச்சிய நறுநீர் குடித்தல் போன்ற உணவியல் கோட்பாடுகளையெல்லாம் பாரதிதாசன் வலியுறுத்துவது சிறப்புக்குரியதாகும். உடல் எடை ஒரே சீராக இருக்கவேண்டும் என்று கருதுவார் போல மூன்று வேளையும் மோர் அருந்தச் சொல்கிறார். மோர் அருந்துதல் பசியைத் தணித்து, மிகுதியாய் உண்பார்தம் உணவளவைக் குறைத்திடும் என்பதும், மோரில் எடைகூட்டும் சத்துக்கள் இல்லையென்பதும் அறிவியல் உண்மைகளன்றோ!

உடல் தூய்மை மிகமிக இன்றியமையாதது. தேய்த்துக் குளிக்காதவர்கள் பல்வேறு நோய்களுக்கு ஆளாகிறார்கள். உடலில் வியர்வைத்துளைகள் கீழ்நோக்கியே இருக்கின்றன. அதனால் குளிக்கும்போது கீழிருந்து மேல் நோக்கித் தேய்த்து அத்துளைகள் திறந்து கொள்ளுமாறு செய்து அழுக்குப்போகக் குளிக்க வேண்டும். தோலடிச் சுரப்பான சீபம் தோலின் மேற்பகுதியில் மெழுகுபோல் படிவதால் இளஞ்சூடான நீரில் குளிப்பது நல்லது. நீரின் சூடு இம்மெழுகுப் படலத்தை முற்றிலுமாய் அகற்றி, வியர்வைத்துளை அடைப்பை நீக்கித் தோலுக்குப் புத்துணர்வூட்டுகிறது. நலமான தோல் வேண்டுமானால் குளியல் ஒழுங்காக, முழுமையாக, அறிவியல் பூர்வமாக நடைபெற வேண்டும். இத்தனைச் செய்திகளையும், 'தீமையில்லாத வெந்நீர் அண்டாவில் தேக்கி வைத்து' என்ற ஒருவரியில் அடக்கிவிடுகிறார் பாரதிதாசன். குடும்ப விளக்கில் கதிர் விழிக்காத இளங்காலையில் எழும் தலைவி, கொல்லையடைந்து, குளிர் புதுப்புனலை மொண்டு, முகத்தைத் துலக்கி வாய் கொப்பளித்துப் பிறகே இல்லக் கடமைகளைத் தொடங்குகிறாள். குழந்தைகளைக் குளிப்பாட்டுவதும், கணவனுக்கு நீர் கூட்டி வைப்பதும், மாமனார் மாமியார்க்குக் குளிக்க வெந்நீர் இடுவதுமென ஒரே காவியத்தில் குளியல் செய்திகளையும், உடல் தூய்மைக் கருத்துக்களையும் பாரதிதாசன் தந்துவிடுகிறார்.

### உள்ளத்தூய்மை :

உடல் தூய்மையைப் பாடும் பாரதிதாசன் உள்ளத் தூய்மையையும் உணர்ந்தே போற்றியுள்ளார். உள்ளம் நல்லுணர்வுக் களமாக விளங்க வேண்டுமென்பதற்காக அழகின் சிரிப்பைக் கண்டவர் அவர். மேலைநாட்டு உளவியல் அறிஞர் உளநலம் பற்றிய கட்டுரையொன்றில், உளநலத்துக்கு முதன்மையான அடிப்படை அமைதியும் அழகுமான இயற்கைச் சூழலே என்று கூறியிருப்பதைப் பாரதிதாசனின் படைப்பு வரிகளோடு ஒப்பிடும்போது காடு, வான், குன்றம், ஆறு, கடல், தென்றல் என்று இயற்கையின் அத்தனை அழகுகளையும் அவர் பாடியதன் உட்கருத்து தெளிவாய் விளங்கும். வேட்ஸ்வொர்த் போன்ற பெருங்கவிஞர்கள் எல்லாம் இயற்கையை வழிகாட்டியாகவும், ஆசிரியனாகவும், நண்பனாகவும்,

கண்டு மகிழ்ந்த நிலைகளை இன்று உளநோய் மருத்துவர்கள் பெரிதும் போற்றுகிறார்கள். இந்த உளப்பாடே உள நலத்துக்கு உறுதியூட்டும் பான்மையது. இதைத்தான் பாரதிதாசன் அழகின் சிரிப்பிலும், சஞ்சீவி பர்வதத்தின் சாரலிலும் பின்பற்றுகிறார்.

மருத்துவநூல்கள் உளநலம் பற்றிப் பேசும்போது அன்பையும், அரவணைப்பையுமே முதன்மைப்படுத்துகின்றன. தன்னை நேசித்தல், பிறரை நேசித்தல், கூட்டுறவாய் வாழப் பழகுதல், குழந்தைகளை அன்போடு போற்றி வளர்த்தல், அவர்தம் உள உரத்துக்கு வலிவூட்டல் போன்ற பற்பல உளநல வழிகள் நூல்களில் பேசப்படுகின்றன. பாரதிதாசனின் குடும்பவிளக்கு குழந்தைகளை எப்படி வளர்க்க வேண்டும், அவர்களிடம் பெற்றோர் எத்தகு அன்பு காட்டவேண்டும் என்பதற்கெல்லாம் அளவு கோலாய் அமைய, இருண்டவீடு எதுஎது கூடாது என்பதற்கு எடுத்துக்காட்டாகிறது. பள்ளி செல்லும் தன் பிள்ளைகளின் பின்னழகு பருகும் குடும்ப விளக்கின் தலைவி இலக்கியல் நிறைவுடை சீர்மைத் தாயாய் இலங்குதல் பார்க்கையில் பாரதிதாசனிடம் நமக்குப் பக்தி பிறக்கிறது.

பிள்ளைகளின் வளர்ச்சியில், மனப்போக்கில் கருத்து கொண்டவர் பாரதிதாசன். அதை அவரது கவிதைகள் பல எதிரொலித்தபோதும், பிஞ்சுகளுக்காகவே அவர் படைத்த ஆத்திச் சூடி, இளையோர் இலக்கியம் போன்ற நூல்கள் மிகத் தெளிவாக உணர்த்துகின்றன. ‘அனைவரும் உறவினர், நீனிலம் உன் இல்லம், வையம் வாழ வாழ்’ என்ற அவரது ஆத்திச் சூடிச் சிந்தனைகள் உலகளாவிய உயிர்நோக்குடையவை.

## சூழல் தூய்மை :

இலக்கியங்களும், ஆகமங்களும் இணைந்து கொண்டாடும் ஐம்பூதத் தொகுப்பில் வானும், நெருப்பும் மனிதக் கைகளை மீறியிருப்பவை. நிலம்,நீர், காற்று என்று நம்மைச் சூழ்ந்து நிற்கும் மற்ற மூன்றையும், கெடுக்க வேண்டிய அளவுக்குக் கெடுத்துவிட்ட நிலையில் இனியும் கெடுத்தால் இல்லையென்றாவோம் என்ற அச்சம் எழுந்திட நம்மிடைப் பிறந்த நல்ல சிந்தனையே சுற்றுச் சூழல் விழிப்புணர்வு. உலகளாவிய நிலையில் இந்த எண்ணவோட்டம் கடந்த முப்பதாண்டுகளாகவே முனைப்போடு பேசப்பட்டபோதும் சிந்தனையென்னவோ ஐம்பதாண்டு-களாகவே இருந்து வந்திருக்கிறது. அதற்கு மருத்துவ நூல்களே போதுமான சான்றுகளாகும்.

பாரதிதாசன் வாழ்ந்த காலத்தில்‘சுற்றுச் சூழல் காப்பு’ அன்றாடப் பேச்சாக இல்லையென்பது உண்மைதான். அதனாலேயே அவரது கவிதை நூல்களில் அந்த வீச்சு அதிக அளவில் இல்லாமல் போனது என்பதும் உண்மைதான் என்றாலும் அந்த நாளிலேயே, தேவை இரும்புப்பிடியாய் இறுக்காத அந்தக் காலத்திலேயே சுற்றுச் சூழல் உணர்வோடு பாரதிதாசன் பாடிய இடங்களைப் பரிவோடு தேடுபவர்கள் பார்த்தறியமுடியும். அறிவுக்கு எட்டியதைத்தான் கண் பார்க்கும் என்பார்கள். சுற்றுச் சூழல் நோக்கோடு தேடும்போது அழகின் சிரிப்பில் தொடங்கி இளைஞர் இலக்கியம் வரை எத்தனை இடங்கள்!

நிலம், நீர், காற்று இம்மூன்றையும் மாசுபடாமல் காப்பாற்ற வேண்டும் என்ற கருத்தின் அடிப்படை நோக்கம், இம்மூன்றும் மனித வாழ்வுக்கு மிக இன்றியமையாதவை என்பதுதான். இந்த இன்றியமையாச் சூழலின் சிறப்பினைத், தன்மையை, அழகை மனிதன்உணர்ந்து கொண்டாலன்றோ, அதை மாசுபடாது காப்பதென்பது கைகூடும். இந்த அடிக்கோட்பாட்டை உணர்ந்தவர் என்பதால்தான் பாரதிதாசனால் அழகின் சிரிப்பைக் காட்ட முடிந்தது. ‘நகையோடு நோக்கடா எங்கும் உள்ளாள்; நல்லழகு வசப்பட்டாள் துன்பமில்லை’ என்று தொடங்கிக் கடல், காடு, குன்றம், ஆறு, ஞாயிறு, வான், ஆல் என்று ஒவ்வோர் இயற்கையிடமாய்க் காட்டித் தென்றலையும் காட்டி அவற்றின் சிறப்புகளையும், அவை எப்படி

எப்படி மனிதர்க்கு நலம் செய்கின்றன என்பதையும் குறிப்பாய்ச் சுட்டும் பாரதிதாசனின் நுண்ணறிவு போற்றற்குரியதாகும்.

'இவ்வையம் முழுவதும் வாழ்வில் செம்மை வழங்கிற்று கடல்; நற்செல்வம் வளர்க்கின்ற கடல்; கடலினை வாழ்த்தாய் தம்பி' என்றும் வரிகள் கடலின் பெருமைகளையும், மனிதன் கடலிடம் காட்ட வேண்டிய நன்றியுணர்வையும் புலப்படுத்துவதுடன், இத்தகு கடலைக் கழிவுகள் கொட்டிக்கெடுத்து விடாதே என்று மறைமுகமாக எச்சரிக்கை செய்வதையும் உணரமுடிகிறது. 'கோடையின் வெப்பத்திற்கு மருந்தாகி, அயர்வினுக்கு மாற்றாகிப் புறத்தே இன்ப மூட்டும்' தென்றலைப் போற்றும் வரிகளில் காற்றின் சிறப்பைக் காட்டுகிறார் கவிஞர். 'பயன் தந்து நிற்கும் காடே' என்று காட்டை விளக்கி முடிக்கும் கடைசி வரி காடுகளின் பயன்பாடுகளை, அழகை மனித மனத்தில் அழுத்தமாய் எழுதி விடுகிறதே. குழந்தைகளுக்கும் மரம், செடி, கொடிகள் வளர்க்க வேண்டியதன் அவசியத்தைப் பாரதிதாசன் உணர்த்திவிடுகிறார்.

'தெருவெல்லாம் மரம் வளர்'

'தென்னையின் பயன் கொள்'

'பூச்செடி வளர்த்திடு'

'தீங்கனி வகை விளை'

என்றும் வரிகள் எத்தனை ஆழமான சுற்றுச்சூழல் நோக்குடையவை, இன்றைக்குக் காடுகள் அழிவது கண்டு கதறித்துடிக்கும் அறிவியலாளர்கள் 'மரம்நடுக' என்று மன்றாடுவது கேட்டு, அரசுகள் போட்டி போட்டுக்கொண்டு மர விழாக்கள் நடத்திடும் காட்சி காணும்போது பாரதிதாசனைப் பாராட்ட சொற்கள் கிடைக்கவில்லை. மரங்கள் குறைந்தால்தான் கரிவளி மிகுதியாகிக்காற்றுமண்டலக் குறைபாடுகள் தோன்றியுள்ளன. ஓசோன் துளை, அமிலமழை என்று ஒவ்வொன்றாய்ச் சூழல் கேடுகள் பேரச்சம் தருமளவில் பெருகுவதற்கும் காடழிப்பே காரணம். இதையெல்லாம் நாட்பட்ட நிலையில் உணர்ந்தவர்களாய்க் காப்பு ஏற்பாடுகளில் கவனம் திருப்பியுள்ள உலகத்தார் முன்னிலையில், பாரதிதாசனின் வரிகள் இளநகை செய்வதுபோல் தோன்றுகிறது. அப்பெருமகனாரின் அன்பு வேண்டுகோளை அன்று அலட்சியம் செய்ததன் பயனை இன்று அனுபவிக்கிறோம்.

'காற்றைத் தூய்மை செய்' என்று நேரடியாகவே கட்டளையிடும் பாரதிதாசன், 'காற்றைத் தூய்மை செய்வதாவது, தான் வாழும் சுற்றுப்புறத்தைத் தூய்மையாக, அழுகியவை, கழிவடை சேராது காத்தல்' என்று விளக்கம் வேறு தருகிறார். 'கண்ட இடத்தில் துப்பாதே' என்ற அவரது அறிவுரை அறிவியல் முக்கியத்துவம் வாய்ந்தது. இருமல், தும்மல், உமிழல் போன்ற செயற்பாடுகளினால் வாயிலிருந்து வெளிப்படும் எச்சில், சளி இவற்றால் ஏற்படும் சொட்டுத்துகள் தொற்று பரப்பும் நோய்கள் ஒன்றிரண்டல்ல. மிகக் கடுமையான நோய்களான எலும்புருக்கி நோய், தொண்டை அடைப்பான், ப்ளூ காய்ச்சல், நியுமோனியா, பல்வேறு வைரஸ் நோய்கள் போன்றவை துப்புவதாலும், தும்முவதாலுமே பெருமளவில்பரவி பலரை நோய்வாய்ப்படுத்துகின்றன. இந்தக் கொடுமைகளிலிருந்து மனிதன் தன்னைக் காத்துக்கொள்ள வேண்டுமென்றால், பாரதிதாசனின் அறிவுரையை மறை வாக்காய்க் கொண்டு பின்பற்றல் வேண்டும்.

உங்கள் தெரு வீட்டின் முன்னே

மாடு கட்டி இருக்கும் - அங்கு

உள்ள சாணி சிறுநீரில்

கொசுக்கள் நோயைப் பெருக்கும்

அங்கங்கே வீட்டெதிரில்
குப்பைக்கூளம் கிடக்கும் - எனில்
அதனை நாயும் கோழியும் போய்க்
கிளறிக் காற்றைக் கெடுக்கும்.

தம் குழந்தை தெருவில் பகலில்
வெளிக்குப் போகக் கண்டு - நல்ல
தந்தையாரும் இருட்டினிலே
செய்வர் அந்தத் தொண்டு

பன்றி தெற்குத் தெருவில் வந்தது
பாட்டையில் உள்ள கழிவை உண்ண
என்னகழிவு தெருவில் இருக்கும்
இருக்கும் பிள்ளைகள் வெளிக்கிருந்தனர்

என்ற பாரதிதானின் பாடல்வரிகள் மக்களுக்குச் சூழல்நலம் உணர்த்த எழுதப்பட்ட சுந்தரத் திருவரிகளாகும். சுகாதாரக் கேடான மாட்டுத் தொழுவங்களால் நேரக் கூடிய துன்பங்களை மருத்துவ நூல்கள் பட்டியலிடுகின்றன. புரூசெல்லோசிஸ், கால், வாய், நோய், ஹைடேட்டிட்சிஸ்ட் நோய், நாடாப்புழு நோய் என்று பல்வேறு நோய்கள் மாடு, நாய் முதலியவற்றிடமிருந்து மனிதனுக்குத் தொற்றக்கூடும். இத்தொற்றுகளுக்கு நலமற்ற சூழல்களே காரணமாய் அமைகின்றன. வீட்டுக் குப்பைகளை வீதிகளில் கொட்டுவதும், வீதிக்குப்பைகள் அடிக்கும் காற்றில் வீட்டுக் குப்பைகளாவதும் ஆங்காங்கே நடக்கும் அன்றாடக் காட்சிகள்தாம். இந்த அவலங்களின் மொத்த விளைவுகளையும் இதில் நாயும், கோழியும், பன்றியும் சேர்ந்து கூட்டாய் நடத்தும் நலக்கேட்டுக் கோலாகலங்களையும் குறிப்பாய் உணர்த்தியுள்ள பாரதிதாசனின் நலநோக்குப் பார்வையும், தூய்மைக்காப்பு ஆர்வமும் குறிப்பிட்டுப் பாராட்டத்தக்கவை.

காற்றையும் உடலையும் கெடுக்கும் புகைப்பழக்கத்தையும் பாரதிதாசன் சாடுகிறார்.

புகைச் சுருட்டில் இளமை பறிபோகும்
பொல்லாங்கு உண்டாகும்
முகமும் உதடும் கரிந்து போகும்
முறுக்கு மீசையும் எரிந்து போகும்
மூச்சுக் கருவிகள் முற்றும் நோய் ஏறும் பிள்ளை
முத்தம் தரு நேரத்தில் வாய் நாறும்.
ஓய்ச்சல் ஒழிவில்லா இருமல் சீறும் நல்
ஊரோ உன்னைச் சீ என்றே கூறும்

சிகரெட், பீடி, சுருட்டு போன்றவற்றில் உள்ள வேதிப் பொருட்கள் நலக்கேடு விளைவிக்கும் நச்சுத்தன்மை கொண்டவை. இவற்றால் தலைவலி, மயக்கம், நெஞ்சுவலி, மூச்சுத்திணறல், நாட்பட்ட இருமல், நுரையீரல் புற்று என்பன ஏற்படலாம். உலகில் ஏற்படும் திடீர் இறப்புகளுள் ஐந்து விழுக்காட்டிற்குப் புகைப்பதே காரணமென்று மருத்துவ வல்லுநர்கள் கூறுகிறார்கள். அதிகமான புகைப்பழக்கம் நரம்புத்தளர்ச்சி, பார்வை மங்கல் போன்ற

நலிவுகளையும் உண்டாக்கவல்லது. இப்புகைப் பழக்கத்தை எப்படியாவது ஒழித்திட விரும்பியே, பாரதிதாசன், 'புகைப்பாரை ஊரும் சீயென்று ஒதுக்கும் காண்' என்று எச்சரித்துப் பார்க்கிறார். சிற்றூர்களைவிடப் பேரூர்களிலேயே புகைபிடிப்பவர்கள் அதிகமாய் இருப்பது கண்கூடு. மேலும் பேரூர்களில் இளையோர் பலர் இதை ஒரு நாகரிகமாகவும்கருதிச் செய்கின்றனர். இதையெல்லாம் கருத்தில் கொண்டே, 'கட்டுடம்பு வற்றிப்போகக் கையில் வெண் சுருட்டுப் பெட்டியோடு உலவ வேண்டும். இதன் பேர்தான் பேரூர்' என்று நலநோக்கோடு நக்கல் செய்கிறார் பாரதிதாசன்.

இளைஞர் இலக்கியத்தில் ஓரிடத்தில் 'காலிலே சேற்றை அப்பாதே' என்ற அறிவுரை கிடைக்கிறது. மேலோட்டமாகப் பார்க்கும்போது இதில் ஒன்றுமில்லையெனத் தோன்றும். ஆனால் மருத்துவ வல்லுநர்களே இந்த அறிவுரையின் முக்கியத்துவத்தினை அறிவார்கள். ஆன்கிலோசிஸ் என்னும் தொல்லை தரும் புழுநோய் சேற்றில் கால் பதித்து நடப்பதாலேயே உண்டாகின்றது. ஆன்கிலோசிஸ் என்னும் இக் கொக்கிப்புழு நோய் இரத்தசோகையை உண்டாக்கி உடல்நலத்தைப் பெரிதும் பாதிக்கக்கூடியதாகும். சிற்றூர்ப் புறங்களிலேயே இந்நோய் பெருமளவில் காணப்படுகிறது. சேற்றுப்பாங்கான இடங்களில் மிதியடி இல்லாமல் நடப்பவர்கள் கால்களில் இப்புழுக்கள் ஏறி உடலுக்குள் சென்று நோயை உண்டாக்குகின்றன. இந்நோயைத் தவிர்க்க வேண்டுமானால் சேற்றுப்பகுதியில் நடக்கக்கூடாது. அப்படியே நடந்தாலும் காலில் பட்ட சேற்றை உடனடியாகக் கழுவுதல் வேண்டும். மிதியடியின்றி வெளியில் செல்வது கூடவே கூடாது.இதைத்தான் குடும்ப விளக்கில் வீட்டவர் மிதியடி அணிந்து வெளிச் செல்வதைச் சுட்டுவதன் மூலம் பாரதிதாசன் பாங்குறக் காட்டுவார்.

மக்கள் வாழிடங்களின் ஏழ்மைச் சூழலை 'வேங்கையே எழுக' என்ற பாடலின் மூலம் காட்டிடும் பாரதிதாசன் அதற்கு மாற்று காண முனைப்போடு முயல்க என்று குரல் கொடுக்கிறார்.

> போக்கு வரவகன்ற பொட்டல்களிலும் - புழுப்
> பூச்சி உலவுகின்ற சாலைகளிலும்
> சாக்கடை, கழிவன போக்கறையிலும் - பெற்ற
> தாய்மடியில் பிள்ளையழக் கல்லடுக்கியே
> ஆக்கி வடித்தெடுக்க அடுப்பெரிப்பார் - உண
> வருந்தி அவ்விடம் துயில்புரிந்திடுவார்
> நீக்கத் தெரிந்ததில்லை தங்கள் குறையை - எனில்
> நீங்கள் புரிந்ததென்ன ஆளவந்தீரே?

அறிவியலின் உச்சத்தைத் தொட்டுக் கொண்டிருக்கும் இந்த நாளின் கண்டுபிடிப்புகளுள் ஒன்று ஒலி மாசுறும் நிலை. நம் செவிகள் ஏற்கக் கூடிய அளவைக் கேட்கும் ஒலி மீறினால் செவிப்புலன் இழப்பேற்படுவதுடன் உடல்நலக் கேடுகளும் உண்டாகித் தொடரும். உடலின் உறுப்புகள் சிலவற்றின் இயக்கமுறைகள் செயலிழப்பதுடன் மன அதிர்ச்சியும் ஏற்படுகிறது. சமுதாயத்தில் நாம் பழகும் ஒழுங்கு முறைகளுக்கு இடையூறாகி நம்முடைய பழக்கவழக்கங்களில் விரும்பத்தகாத பல மாற்றங்களையும் இந்த ஒலிக்கேடு ஏற்படுத்துவதாகச் செவிப்புலன் மருத்துவ வல்லுநர்களின் ஆய்வுமுடிவுகள் தெரிவிக்கின்றன. தொழிற் சாலை ஓசைகள், பேருந்துகளின் காற்றொலிப்பான்கள், ஒலிபெருக்கிகளின் அலறல் போன்றவை எழுப்பும் ஒலி அளவுகள் நம் உடல் உறுப்புகள் தாங்கக் கூடிய ஒலியாற்றலைவிட மிக அதிகமாக இருக்கின்றன. நாள்தோறும் இதுபோன்ற அளவிற்கு அதிகமான ஒலியினைக் கேட்டுக் கொண்டிருந்தால், இரத்த அழுத்த மாறுதல்கள், இதயத் துடிப்பு மாறுதல்கள் போன்ற பெருந்துன்பங்கள் தோன்றக்கூடும்.

இதையெல்லாம் தவிர்க்கக் கருதியே பாரதிதாசன், 'பாட்டை நிறையப் பலவகை வண்டிகள் காட்டுக் கூச்சல், கடமுடா முழக்கம், கேட்டால் காதே கெட்டுப் போகும், ஈட்ட ஆலைகள் இருபது கூவும்" என்று பட்டணம் பற்றிக் கூறுகையில் பரிவோடு சொல்லி வைத்தார்.

தனியார் நலத்தில் தொடங்கி, சூழல் நலம் வரையிலும் இன்றைய அறிவியல் வல்லுநர்கள் எதை எதையெல்லாம் கொள்ளுதல் வேண்டும் என்று குறிப்பிட்டுக் காட்டியுள்ளார்களோ அவற்றையெல்லாம் தம் பாடல்வரிகளில் இலக்கிய நயத்தோடு இடம்பெறச் செய்து கூடாதவற்றையும் அக்கறையோடு சுட்டி, முப்பது ஆண்டுகளுக்கு முன்னரே நலவாழ்வு நம்கையில்தான் என்று தமிழில் முழங்கியிருக்கிறார் புதுவைக்குயில் பாரதிதாசன். முன்னோக்குச் சிந்தனையும், நல விழைவுப் பார்வையும் கொண்டு புரட்சிக்கவிஞர் படைத்துத் தந்திருக்கும் இந்த நலக்காப்பு வரிகள் நாளும் நம் நெஞ்சில் நிழலிட்டுக் கொண்டிருந்தால் அவர் கணிப்புப்படியே நலவாழ்வு நமதாகும்.

* * *

# பாவேந்தர் படைப்புக்களில் மணம்

முனைவர் இராதா செல்லப்பன்

சமுதாய மறுமலர்ச்சி பற்றியும், அதிலும் பெண்கள்முன்னேற்றம் கருதியும் பாவேந்தர் பாரதிதாசன் ஆழமாகச் சிந்தித்துப் பல கருத்துக்களைக் கவிதைகளாகவும் கட்டுரைகளாகவும் வடிவமைத்துத் தந்துள்ளார். இப் புரட்சிகரமான கருத்துக்களே அவருக்குப் புரட்சிக்கவி என்ற பட்டத்தையும் தேடித் தந்திருக்கின்றன. ஆண்,பெண் இருவரையும் ஒருசேர அடக்கிய சொல்லே சமுதாயம் என்பது. குடும்பத்தை உறுப்பாகக் கொண்டது சமுதாயம்; தனிநபரை உறுப்பாகக் கொண்டது குடும்பம். எனவே, சமுதாய மறுமலர்ச்சி என்பதில் தனிநபர் வாழ்க்கை முக்கியமான பங்கை வகிக்கிறது. கல்வி, பொருளாதாரநிலை, மண வாழ்க்கை, குடும்ப உறவுகள் முதலானவை தனிநபரின் வாழ்க்கை நிலையை நிர்ணயிக்கும் கூறுகளாக உள்ளன. திருமணம் என்பது அவனது/அவளது வாழ்க்கையின் முக்கியமான ஒரு திருப்புமுனை. இக்கட்டுரையில் திருமணம், அது தொடர்பான உறவுகள் ஆகிய கூறுகளைப் பற்றிய பாரதிதாசன் கருத்துக்களே ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

### காதலும் திருமணமும்:

'காதல்' என்ற நோக்கில் பல புதுமைக் கருத்துக்களைத் தந்துள்ளார் பாவேந்தர். எடுத்துக்காட்டாக, இளையோர் காதலையே மரபுப் புலவர்கள் பாடியிருக்க, 'முதியோர் காதல்' என்ற புதிய பாடுபொருளைத் தந்ததோடல்லாமல், கூறும் பாணியிலும் படிப்போர்தம்மை நெக்குருக வைக்கிறார். சங்ககாலத் தலைவி தன் காதலை வெளிப்படுத்தும் இயல்பினள் அல்லள் என்று கூறுமுகத்தான், நாணம் என்ற பண்பிற்கேற்ப அவள் தன் காதலை வெளிப்படையாகப் புலப்படுத்துக் கூடாது என்ற அக்கால இலக்கியம் வற்புறுத்துகிறது. பாவேந்தர் 'தலைவி' நகைமுத்தோ நெடுநாள் பிரிவிற்குப் பிறகு தலைவனைக் (வேடப்பன்) கண்டவுடன் "இறந்தேன் நான் பிறந்தேன்" என்கிறாள். அத்துடன் "நம் திருமணம் எப்போது?" என்றும் வினவுகிறாள்.

> மணம், காற்று, நீ ழல்
> இவற்றிடை ஒன்று கேட்பேன்
> திருமணம் எந்நாள்? நாம், மேல்
> செயத் தக்கதென்ன? என்றாள். (1974 அ:13)

தலைவி, தலைவனிடம் காதலை வெளிப்படுத்தும் நிலையில் புரட்சி செய்த கவிஞர், அத்துடன் அவர்களது சுதந்திரத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டார். பல காதலர்கள் தம் பெற்றோரிடம் சென்று தங்கள் எண்ணங்களைச் சொல்லும் துணிவு பெறவில்லை ('காதற் பெருமை' என்ற கவிதையிலே, தலைவி தன் பெற்றோரிடம் தானே நேரடியாக வெளிப்படுத்திய காதல் வெற்றி பெற்றதாகக் காட்ட வில்லை) .

நகைமுத்தை விரும்புகின்றேன்

நாளைக்கே மணக்க வேண்டும்

வகை செய்க அப்பா என்று

வாய்விட்டு நானா சொல்வேன்?

நிகரற்றாய் உன்பெற் றோர்பால்

நீசொன்னா லென்ன? என்றான்.

மகளுக்கு நாண மில்லை

என்பார்கள்; மாட்டேன் என்றாள் (1974 அ:13)

தம் மகன்/மகளது காதலைப் பெற்றோர் மூன்று வழிகளில் அறிந்து கொள்வதாகக் காட்டுகிறார் பாவேந்தர். ஒன்று தலைவி தோழியிடம் அறத்தொடு நிற்றல். 'பெற்றோர் இன்பம்' என்ற கவிதையில் நல்லி தன் காதலைத் தோழியின் வாயிலாகப் பெற்றோரிடம் தெரிவிக்கிறாள். இவர்கள் இலட்சியப் பெற்றோர்கள். தம் மகள் தன் துணைவனைத் தானே தேர்ந்தெடுத்துக் கொண்டாள் என்றறிந்து இறும்பூது எய்துகின்றனர். நடைமுறையில் இத்தகைய பெற்றோர்களைக் காண்பதறிது.

......................அவள் வாய்

இன்னான் இடத்தில் என்அன் பென்று

சொன்னதால் இன்பம் சூழப் பெற்றோம் (1983 : 60)

தலைவன்-தலைவி காதலை அறிந்த மூன்றாம் நபர் அவர்கள் பெற்றோருக்கு அறிவுறுத்துவது போலக் காட்டியிருப்பது மற்றொருமுறை. குடும்ப விளக்குக் காதலர்கள் நகைமுத்து-வேடப்பன் பேசுவதைத் தற்செயலாக கேட்ட பெருமாள் தாத்தா அவர்களை ஒன்று சேர்க்கும் நோக்குடன் பெற்றோரை அணுகுகிறார். மூன்றாவதாக, கவிதைத் தலைவி சரோசாவே தன் காதலைப் பெற்றோரிடம் தெரிவிக்கிறாள். இது காதற் பெருமை என்ற கவிதையில். கவிஞர் காட்டும் 'காதல்கள்' பெரும்பாலும் திருமணத்தில் முடிவதாகவே காட்டப்படுகின்றன. அவை பெற்றோர் சம்மதத்துடன் நடத்தப்படும் திருமணங்களாகவே இருப்பது சிறப்பு. மணவழகனும் மாவரசனும் தம்முள் கோபமும் பகையும் கொண்டிருக்கும் காலத்தில் தங்கள் குழந்தைகள் தம்முள் காதல் கொண்டனர் என்பதை அறிகின்றனர். குழந்தைகளின் நல்வாழ்வின் பொருட்டு, தம் பகையை மறக்க இருவருமே முன் வருகின்றனர். மணமகனின் பெற்றோர்,

என்பிள்ளை உள்ளம், அவன்

ஈன்றகிளிப் பிள்ளையுள்ளம்

ஒன்றானால் எங்கள்

பகையும் ஒழியாதோ (1974 அ : 14-15)

என்றும்

மணமகளின் பெற்றோர்

மணவழகன் தன்மகனும், என்றன்

இணையிலா மகளும் இணைந்தார் என்றால்

பெற்றவர்க் கிதிலும் பேரின்பமேது (1974 அ : 27)

என்றும் கூறிப் பேருவகை எய்துகின்றனர். காதல், திருமணத்தில் முடிவதைக் காட்டும் கவிஞர்

காதல் தோல்வியையும் காட்டுகிறார். மேற்கூறப்பட்ட காதல், பெற்றோர் நல்லுறவுடன் இருந்தபோது தோன்றிய காதல். பகையும் பின்னர் தோன்றிய ஒன்று. இக்காதல் வெற்றி பெற்றதாகக் காட்டும் பாவேந்தர், பகைக் காலத்தில் தோன்றிய காதலைத் தோல்வியடையச் செய்கிறார் 'காதலும் சாதலும்' என்ற கவிதையிலே. பகை அரசு குடும்பங்களைச் சார்ந்த செல்லியும் செங்குன்றூர் இளவரசனும் கொண்ட காதல் தோல்வியைத் தழுவுகிறது *(1980 : 113).*

காதல் வெற்றிக்குக் காரணமான இலட்சியப் பெற்றோர்களைக் காட்டும் பாரதிதாசன், காதல் தோல்வியடையக் காரணமாக நிற்கும் உலகியல் பெற்றோரையும் காட்டுகின்றார். 'காதற் பெருமை' என்ற கவிதையிலே *(1990 :76)*, சரோஜாவும் கஜராஜும் காதலர்கள். இவர்கள் தம்முள் ஓங்கிய காதலினைப் பெற்றோரிடத்திலே எடுத்தியம்புகின்றனர். அவர்களோ அதற்கு ஒப்பவில்லை. சரோஜாவை அவள் பெற்றோர் அயலான் ஒருவனுக்கு மணமுடிக்கத் திட்டமிட்டனர். மணநாளும் நெருங்கியது. தன் மனதில் மாற்றானுக்கு இடங்கொடுக்க விரும்பாத சரோஜா தற்கொலை செய்துகொள்கிறாள். காதலனும் சாவில் அவளைப் பின்பற்றுகிறான். சங்ககாலத் தமிழர் வாழ்வில் நடைபெறும் 'உடன்போக்கு' கவிஞருக்கு உடன்பாடில்லை போலும். 'காதல் திருமணமே' உகந்தது என்ற கோட்பாடு பாவேந்தருக்கு உண்டு எனினும், காதலுக்குப் பெற்றோர் உடன்படாவிட்டால் அக்காதல் திருமணத்தில் முடிவதாக அவர் காட்ட விரும்பவில்லை எனலாம். பெற்றோரே பார்த்து ஏற்பாடு செய்யும் திருமணத்தைப் பற்றிய கருத்துக்கள் பாவேந்தர் படைப்புகளில் அதிகமாக இடம் பெறவில்லை. தலைவனும் தலைவியும் உவப்பத் தலைகூடி, இடந்தலைப்பட்டுப் பின்னர் பெற்றோர் அனுமதியுடன் நடக்கும் மணத்தையே பாவேந்தர் படைக்கக் காண்கிறோம் இதற்கு சங்க இலக்கியக் காதல் அவர் மனத்தைக் கவர்ந்ததன் பாதிப்பைக் காரணமாகச் சொல்லலாம். சிலப்பதிகாரத்தைப் புதுமையாக்கி அவர் படைத்துள்ள 'கண்ணகி - புரட்சிக் காப்பியத்தில்' கண்ணகி திருமணத்தில் அவர் செய்த மாற்றம் இக் கருத்தை அரண் செய்கிறது. இளங்கோவடிகள் கண்ணகி கோவலன் திருமணத்தை ஏற்பாட்டுத் திருமணமாகக் கூறுவார். பாரதிதாசனோ, அவ்விருவரும் முதலில் காதல் கொண்டு, அதன் பின்னரே திருமணம் நடைபெற்றதாகக் காட்டுவார்.

தன் கணவனைத் தேர்ந்து கொள்ளும் உரிமையைப் பெண் எடுத்துக்கொள்ள வேண்டும் என்பது அவர் கருத்து. திருமணம் ஆகாத பெண்ணுக்கு, 'உன் கதியை நீ நிச்சயம் செய்துகொள்' என்று அறிவுரை தருகிறார். 'பெண்ணுக்கு நீதி' என்ற கவிதையிலே.

> வல்லமை பேசியுன் வீட்டில் - பெண்
>
> வாங்கவே வந்திடு வார்கள்சில பேர்கள்;
>
> நல்ல விலை பேசுவார் - உன்னை
>
> நாளும் நலிந்து சுமந்து பெற்றோர்கள்
>
> கல்லென உன்னை மதிப்பார் - கண்ணில்
>
> கல்யாண மாப்பிள்ளை தன்னையுங் காட்டார்
>
> வல்லி உனக்கொரு நீதி - இந்த
>
> வஞ்சகத் தரகர்க்கு நீ அஞ்ச வேண்டாம்
>
> . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
>
> உன் கண்ணைக் கருத்தைக் கவர்ந்தவன் நாதன் *(1990:116)*

திருமணத்தில் பெண்ணின் 'சம்மதம்' மிகவும் முக்கியம் என்பதைப் பல இடங்களில் காட்டியுள்ளார். திருமண நிச்சயம் நடைபெறுமுன், பெரியோர் முன்னிலையில் மணமக்கள் தங்கள் சம்மதத்தைத் தெரிவிக்குமாறு கூறுகிறார் பெருமாள் தாத்தா. அதுவும், பெண்ணிடத்தில்

முதலில் கேட்கிறார். இங்கு, 'மௌனம் சம்மதம்' என்ற கோட்பாடு செயலற்றுப்போயிற்று.

இன்ப நகை முத்தே
உன்கருத்தை யானறிவேன்
என்றாலும் இங்கே
இருப்பார் அறிந்திடவே
அன்பால் உரைத்திடுவாய் *(1974 அ: 31)*

மணப்பெண் சரோஜாவின் சம்மதமின்றி ஏற்பாடு செய்த திருமணம் தற்கொலையில் முடிந்ததும் இங்கு குறிப்பிடுவதற்குரியது. மணவாளன் யாரென்றே தெரியாமல் மணம்புரியும் பெண்களின் பிரச்சினை கேலிக்கூத்தாக முடிவதை ஒரு நகைச்சுவையாகக் காட்டுகிறார். மணவாளன் யாரென்றறியாமல் தன் கழுத்தை நீட்டினாள் மணப்பெண். அதற்குச் சூழ்நிலை காரணமாக அமைந்தது. வரதட்சணைப் பிரச்சனையால் திருமணத்தன்று மணம் நின்றுவிட, அதே முகூர்த்தத்தில், பெண்ணுக்கு மணம் நடத்த நிச்சயிக்கிறான் அவள் தந்தை. இந்த அவசர முடிவைத் தனக்குச் சாதகமாக்கிக் கொள்கிறான், ஒரு குரங்கைத் தன் பிள்ளைபோல் வளர்க்கும் சிக்கண்ணன். முக்காடிட்டு மேனி மறைத்த குரங்கிற்கும் பெண்ணிற்கும் திருமணம் நடக்கிறது. இக்காட்சி இடம்பெறுவது 'குலத்தில் குரங்கு' நாடகத்தில் *(1980 அ).*

### கூவத் தெரியாக் குயிலின் குஞ்சும், கூவ முடியாக் குயிலும் :

மணமக்களின் முழுச் சம்மதமும் இல்லாமல் நடக்கும் திருமணங்கள் பெரும்பாலும் தோல்வியைத் தழுவுகின்றன என்பதற்குக் குழந்தை மணமும் , பொருந்தா மணமும் காட்டும் கவிதைகள் எடுத்துக்காட்டுகளாய் உள்ளன.

சின்னஞ்சிறு குழந்தைகளுக்குத் திருமணம் செய்து வைக்கப்படும் சமூகக் கொடுமையைச் சாடுகிறார். நாட்டிலே விதவைகளின் எண்ணிக்கை பெருகுவதற்குக் குழந்தை மணமும் ஒரு முக்கிய காரணம் என்ற சமூகவியலாரின் கருத்தும் இங்கு குறிப்பிடத்தக்கது. 'குழந்தை மணத்தின் கொடுமை' என்ற கவிதையிலே *(1990:115)* ஏழே வயதான ஒரு சிறுமி, மணவாழ்க்கை முடிந்துபோன கைம்பெண். இந்த இளஞ்சிறுமியைக் கூவத் தெரியாத குயிலின் குஞ்சு, தாவாச் சிறு மான், மோவா அரும்பு என அறிமுகப்படுத்துகிறார்.

இக்கவிதையிலே கூவத் தெரியாத குயிலின் குஞ்சை இனம்காட்டிய புலவர், கூவ முடியாத நிலையில் இருக்கும் குயிலையும் சுட்டுகிறார். இங்கு பொருந்தா மணம் செய்து கொண்டு தவிக்கும் பெண்கள் சுட்டப்படுகின்றனர். பொருந்தா மணத்தின் காரணமாகப் பாதிக்கப்படுபவர்கள் பெண்களே.

குறட்டைவிட்டுக் கண்கள் குழிந்து
நரைத்தலை சோர்ந்து, நல்லுடல் எலும்பாய்ச்
சொந்த மருகக் கிழவன் தூங்கினான்!
இளமை ததும்ப, எழிலும் ததும்பக்
காதல் ததும்பக், கண்ணீர் ததும்பி
என்மகள் கிழவனருகில் இருந்தாள்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
தொண்டுக்கிழவன் விழிப்பான் என்று
கெண்டைவிழிகள் மூடாக் கிளிமகள்
காதலுந்தானும் கனலும் புழுவுமாய்

ஏங்கினாள் ......................... (1990 : 110)

இங்கு, கூவ முடியாக் குயிலை 'மூடத்திருமணம்' என்ற கவிதையில் பார்க்கிறோம். சிறு வயதுப் பெண்ணை வயது முதிர்ந்த ஒருவனுக்கு மணமுடிப்பதைப் பெண்மைக்குச் செய்யும் அநியாயம் என்பதை உணராத சமுதாயத்தைச் சாடுகிறார்.

சமூகச் சட்டமே! சமூக வழக்கமே!
நீங்கள், மக்கள் அனைவரும்
ஏங்காதிருக்க, மண்ணாய்ப் போகவே! (1990 : 111)

**விதவை நிலை :**

மணவாழ்வில், கணவன் இறந்தபின் பெண் படும்பாட்டைப் பாவேந்தர் பல இடங்களில் விளக்குகிறார். எடுத்துக்காட்டாக, கணவனை இழந்த ஒரு பெண்ணைச் சமூகம் நற்கோலமிழக்கச் செய்து, சகுனத்தடையென்று - ஒதுக்கி உணவு வகைகளைக் கட்டுப்படுத்தி வசதிகளைக் குறைத்து வாட்டி வதைக்கும் நிலையைக் 'கைம்பெண் நிலை' (1990 : 118) காட்டுகிறது. சமூகத்தால் ஒதுக்கி வைக்கப்படும் விதவைகளுக்கு ஆதரவாகப் புரட்சிக் குரல் கொடுக்கிறார்.

தன்கணவன் செத்துவிட்டபின் மாது
தலையிற்கைம் மைஎன ஓர் - பெருந்
துன்பச் சுமைதனைத் தூக்கி வைத்தார்; பின்பு
துணைதேட வேண்டாம் என்றார் (1990 : 106)

சமூகத்தினருக்கு அவள் நிலையை எடுத்துக் கூறுகிறார்.

மாலையிட்ட மணவாளன் இறந்துவிட்டால்
மங்கைநல்லாள் என்ன செய்வாள்? அவளை நீங்கள்
ஆலையிட்ட கரும்பாக்கி உலக இன்பம்
அணுவளவும் அடையாமல் சாகச் செய்தீர் (1990 : 120)

அவளை வாழவிடுங்கள் என்று வேண்டுகோள் விடுக்கிறார். சமுதாயக் கட்டுப்பாட்டினை உடைத்தெறிய அழைக்கிறார்.

காதல் சுரக்கின்ற நெஞ்சத்திலே - கெட்ட
கைம்மையைத் தூர்க்காதீர் - ஒரு
கட்டழகன் திருத்தோளினைச் சேர்ந்திடச்
சாத்திரம் பார்க்காதீர். (1990 : 107)

வாழ்க்கைத்துணை இறந்தபின் இப்படித்தான் வாழவேண்டும் என்ற சமூக நியதியில் சமத்துவமின்மை காணப்படுவதும் சுட்டப்படுகிறது. ஆணுக்கொரு நீதி! பெண்ணுக்கொரு நீதியா? என்று வாதம் செய்கிறார். கொதித்தெழுகிறார்.

பேடகன்ற அன்றிலைப்போல், மனைவி செத்தால்
பெருங்கிழவன் காதல்செயப் பெண் கேட்கின்றான்
வாடாத பூப்போன்ற மங்கை நல்லாள்
மணவாளன் இறந்தால்பின் மணத்தல் தீதோ (1990 : 82)

கப்பல் உடைபட்டுக் கணவன் இறந்தான் என்ற சொற்கேட்டுக் கைம்மைக்கோலம் பூணுகிறாள் கண்ணம்மை. பல மாதங்களுக்குப் பின் கணவன் உயிர் பிழைத்துத் திரும்பி வருகிறான் - புது மணப் பெண்ணுடன். அத்துடன் அமையவில்லை. தன்னைவிட்டுப் பிரிந்திருந்த மனைவி தனது கற்பை நிரூபிக்க வேண்டுமென்று ஆணையிடுகிறான். இந்நிகழ்ச்சி 'கற்பின் சோதனை' என்ற கவிதையில் இடம்பெறுகிறது.

> இப்பத்து மாதமாய்க் கற்புநீ தவறாமல்
> இன்னபடி வாழ்ந்து வந்தாய்
> என்பதனை எண்பிக்க எங்களிரு வர்க்கும்நீ
> ஈந்துவா உணவே *(1983 : 136)*

விதவைகள் திருமணம் பற்றிய பலவகைக் கண்ணோட்டங்களை அவரது பாடல்கள் தருகின்றன. காதல் வயப்பட்ட ஒரு விதவைப் பெண்ணின் மனத்திலும், அவளை மணக்க விரும்பும் ஆணின் மனத்திலும் ஏற்பட்ட தாக்கங்களைப் பற்றி ஆராய்கிறார். 'மாந்தோப்பு மணம்' என்ற கவிதையில் அப்பெண் தன்னை மணக்க விரும்புவோனிடம் முதலில் தன் நிலையை எடுத்துரைக்கிறாள்.

> பெருஞ்சீமான் மணந்தான் செத்துவிட்டான் எனில்
> அன்னது நான்செய்த குற்றமன்று *(1990 : 67)*

அவனோ, ஒரு கணம் சமூகக் கட்டுப்பாட்டை நினைந்து மருண்டு பின் தெளிந்து அவளை ஏற்க முடிவு செய்கிறான்.

'கைம்மை நீக்கம்' என்ற கவிதையோ பெண் சமூக விதிகளைக் கண்டு தயக்கம் காட்டுவதாகவும், காதலன் அவளது மனத்தை மாற்றும் முயற்சியில் ஈடுபடுவதாகவும் காட்டுகிறது.

> கருத்தொருமித்த போது
> கட்டுக்கள் என்பதேது *(1990 : 121)*

இதற்கும் மேலே இன்னொருபடிபோய், கொண்ட கணவனே தான் இறக்கும் தறுவாயில், தன் மனைவியிடம் அவள் விரும்புபவனை மணந்து கொள்ள அறிவுறுத்துவதாகவும் காட்டுகிறார் 'இறந்தவன் மேற்பழி' என்ற கவிதையில்.

> கடும்பிணி யாளன் நான் இறந்தபின் மாதே
> கைம்பெண்ணாய் வருந்தாதே, பழி என்றன் மீதே
> . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
> ஆசைக்குரியவனை நாடு - மகிழ்வோடு
> நலம்தேடு. *(1990 : 119)*

இவரது கவிதைகளிலே, எந்த ஒரு விதவையும் மறுமணம் செய்ய மறுப்பதாகவோ, ஆண் அவளை ஏற்றுக்கொள்ள மறுப்பதாகவோ காட்டப்படவில்லை. அவர்களைச் சூழ்ந்திருக்கும் சமூகத்தினரே இதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். காதலர்களின் தாய்மார்களின் எதிர்ப்பு 'காதற் குற்றவாளிகள்' என்ற தலைப்பில் வெளிப்படுகிறது. இங்கு 'பெண்ணுக்குப் பெண்ணே எதிரி' என்ற கருத்துக்கோட்பாடு வெளிப்படுகிறது. குடும்பமே ஒன்று சேர்ந்து சமூகக் கட்டுப்பாடு என்ற பெயரில் விதவை மணத்தை, அவளது காதலை எதிர்க்கிறது. காதலர்கள்

சாவைத் தழுவுகின்றனர். இவ் வுண்மை வெளிப்படுவது 'காதலைத் தீய்த்த கட்டுப்பாடு' (1990 : 81) என்ற கவிதையில். சமூகக் கட்டுப்பாட்டை உடைத்தெறியும் வன்மை 'பணத்திற்கு' உண்டு என்ற உலக நடப்பையும் காட்டுகிறார், 'பணமும் மணமும்' என்ற கவிதையிலே. பெண் 'விதவை' என்பதை மறக்க வைக்கும் அளவிற்குப் பெண்ணிற்கு வரதட்சணை அதிகமாக அளிக்கப்படும் நிலையில் அவளைத் தன் மகனுக்குத் திருமணம் செய்யத் தடையொன்றும் தெரிவிக்கவில்லை தந்தை மஞ்சினி (1983:63). விதவை மணம் கலப்பு மணமாகவும் காட்டப்படுகிறது. இருபத்தைந்தே வயதான இளம் விதவை ரத்தினமுத்து விரும்புவதோ ஜோசப்பை. பெற்றோர் மகிழ்வுடன் அவர்களை வாழ்த்துகின்றனர். இந்நிகழ்ச்சி இடம் பெறுவது 'வேல் பாய்ந்த இருதயம்' கவிதையிலே (1980:69).

### குடும்ப உறவு :

திருமணம் சார்ந்த உறவுகளுள் கணவன் - மனைவி உறவும், மாமி -மருமகள்; மாமன்-மருமகள் முதலான உறவுகளும் முக்கியமானவை. இவ்வுறவுகளின் நல்ல தொடர்பை அடியொற்றியே குடும்பத்தில் அமைதியும் மகிழ்ச்சியும் ஏற்படும்.

### கணவன்-மனைவி உறவு :

'பெண்-ஆண் என்ற இரண்டுருளையில் நடக்கும் இன்ப வாழ்க்கை' என்ற கூற்றிலிருந்து கவிஞரின் ஆண்-பெண் சமத்துவக் கோட்பாட்டை அறிய முடிகிறது. குடும்ப வாழ்வில் மனைவியின் முக்கியத்துவத்தைக் கீழ்க்காணும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன .

அவனியிலே ஒருவனுக்கு மனைவியின்றேல்
　　அவனடையும் தீமையை யார் அறியக்கூடும்?
கவலையுற ஆடவர்கள் நாளும் செய்யும்
　　கணக்கற்ற ஊழல்களை யெல்லாம் அந்த
நவையற்ற பெண்களன்றோ விலக்குகின்றார்!
　　நானிலத்தில் மார்தட்டும் ஆடவர்கள்
சுவைவாழ்விற் கடைத்தேறத் தக்கதான
　　சூஷுமமும் பெண்களிடம் அமைந்ததன்றோ (1990:105)

மணவாழ்க்கையில் ஈடுபட்ட தங்கம், மணவழகன் காதல் வாழ்க்கையை மிகவும் அற்புதமாகக் குடும்ப விளக்கிலே சித்தரிக்கிறார். அவர்கள் ஒருவருக்கொருவர் காட்டும் அன்பு அவர்தம் வாழ்க்கையைப் பூஞ்சோலையாக்குகிறது. ஒரு நியதிக்கும் உட்படாத அன்பிற்குக் கட்டுப்படாத மணவாழ்க்கை தோல்வியில் முடிந்ததையும் ' இருண்ட வீட்டில்' காட்டுகிறார்.

கணவனது இன்ப துன்பங்களிலே பங்குகொண்டு, வாழ்க்கையில் எதிர்நீச்சல் போடக் கைகொடுக்கும் மனப்பக்குவம் நிறைந்தவள் தங்கம். அவள் கணவனை மாவரசன் பிறர் முன்னிலையில் காரணமின்றி அவமானப்படுத்துகிறான். அதனால் மிகவும் துயருற்ற மணவழகன் தன் வருத்தத்தை அவளோடு பகிர்ந்து கொள்கிறான். அவளும் அவனைப் புரிந்துகொண்டு ஆறுதல் கூறி கோபத்தைத் தணிக்க முயலுகிறாள்.

நண்புளார் தீமைநாடினும் அதனைப்
பண்புளார் பொறுப்பர், வகைமை கொள்ளார்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

அத்தான் மறப்பீர்! அகம் நோகாதீர் *( 1974: அ : 18)*

மனைவிக்குத் தன் மீதுள்ள அன்பை மதிக்கத் தெரிந்த கணவன் மணவழகன்.

எனக்கினியாள்! என்னிரண்டு கண்களே போல்வாள்;
நவையில்லாள், நான்வாழத் தன்னுயிர் நல்கும்
நாட்டத்தாள்; அவளாலே என் வாழ்க்கை காத்தேன்
அவளாலே நல்லொழுக்கம் தவறாமை காத்தேன்;
அவளால் என் குடும்பம் மாசிலதாய்ச் சற்றும்
கவலையிலா தாயிற்று; நன்மனைவி உடையார்
கூடலுலகப் பெரும்புகழும் வாழ்நாளும் உடையார் *(1974 அ : 115)*

இளமையிலே காதலாகிக் கசிந்து இல்லறம் நடத்திய இவர்தம் அன்பு முதுமையில் ஆற்றொழுக்காகச் செல்வதையும் காட்டுகிறார். 'காதல்' என்பது மனத்தளவில் நிகழும் ஓர் அழகிய இராகம் என்ற கருத்தைக் கூறத்தான் முதியோர் காதலையும் காட்டுகிறார் எனலாம். கிழவன் மணவழகனும் கிழவி தங்கமும் காலைவேளையில் அருகருகே அமர்ந்து பேசிக்கொண்டிருக்- கிறார்கள். கிழவன் தன்னுடன் அமர்ந்திருப்பதில் கிழவிக்கு நாணம் ஏற்படுகிறது. யாரேனும் பார்த்துவிடுவரோ என்ற அச்சம்.

அதோ நகை முத்து வந்தாள்
நமைக் காண்பாள் அகல்வீர் என்றாள் *( 1974 அ:114)*

இந்நாணம் பெண்மைக்கு மட்டும் உரியதாகக் காட்டவில்லை. கிழவனும் இந்த நிலைக்கு ஆளாகிறான். தன் மனையாளுக்குப் பொரிமா கொடுக்க ஆசைப்படுகிறான். யாராவது பார்த்துவிடுவார்களோ என்று அஞ்சி அதனை மறைத்து யாருமறியாமல் அவளிடம் கொடுக்கிறான்.

பொரிமா இடையில் மறைத்தும்
தன் துணை மேலுள அன்பை மறைத்தும்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .கிழவர் துணைவியின்
அருகுபோய்ப் பொரிமா அவளிடம் நீட்டி
உண்ணென்று வேண்டி நின்றார்
உண்டாள்; நாணிப் பிரிந்தார் உவந்தே *(1974 அ:107)*

கிழவியும், பேரன் தனக்குத் தந்த மலைப்பழத்தைத் தாத்தாவிற்குக் கொடு என்று சொல்லி, அவன் கொடுக்கிறானா என்று பார்த்துத் திருப்திப்படுகிறாள். வயது முதிர்ந்த அவர்கள் ஒருவரையொருவர் குழந்தைபோல் கவனித்துக் கொள்ளும் காட்சி மனத்தைக் கவ்வுகிறது.

புதுமலர் அல்ல; சாய்ந்த
புற் கட்டே அவள்உடம்பு!
சதிராடும் நடையாள் அல்லள்
தள்ளாடி விழும்மூதாட்டி!

மதியல்ல முகம்அ வட்கு
வறள் நிலம்! குழிகள் கண்கள் !
எதுஎனக் கின்பம் நல்கும்!
'இருக்கின்றாள்' என்பதொன்றே (1974 அ : 100)

என்ற அடிகள் முதியோர் காதலுக்கு இலக்கணம் கூறி நிற்கின்றன.

குடும்பத்தில் ஓய்வு ஒழிவின்றி உழைக்கும் 'நல்ல' மனைவியைக் குடும்ப விளக்காகக் காட்டுகிறார் கவிஞர். விடிகாலையில் எழுந்து சிறு குழந்தை முதல் முதியோர் வரை அனைவருக்கும் பணிவிடை செய்வதில் இன்பம் அடைபவளாக வருணனை செய்கிறார். அத்துடன் வீட்டு வேலைகள், தையல் வேலை, தச்சுவேலை, கொல்லுவேலை முதலிய பலவற்றையும் திறம்பட நிர்வகிக்கும் சகலகலாவல்லி தங்கம். பெண் என்பவள் இப்படி இருப்பதால்தான் இல்லறம் சிறக்கும் என்று கூறிய பாவேந்தர் இதிலுள்ள நடைமுறைச் சிக்கலையும் உணருகிறார். அதனைத் தங்கத்தின் வாயிலாக உணர்த்துகிறார்.

சமைப்பதும் வீட்டு வேலை
சலிப்பின்றிச் செயலும் பெண்கள்
தமக்கே ஆம் என்று கூறல்
சரியில்லை ! ஆடவர்கள்
"நமக்கும்அப் பணிகள் ஏற்கும்"
என்றெண்ணும் நன்னாள் காண்போம் (1974 : 70)

இங்கு இப்பெண் காலம் கனியட்டும் என்று பொறுமையோடு காத்திருக்கிறாள். பாதிக்கப்பட்ட பெண் கூற்றாக வரும் இவ்வுண்மை மற்றோரிடத்தில் ஆடவன் கூற்றாக வெடிக்கிறது. 'குடும்ப விளக்கும் குண்டுக்கல்லும்' என்ற நாடகத்தில் தங்கத்தைப் போன்ற பெருமையுடைய தலைவி தில்லைக்கண். அவள் நாடோறும் சுமக்கும் வேலைப்பளுவை எண்ணிப் பொருமுகிறான் மகன் கண்ணப்பன். கல்விக் கழகக் கூட்டமொன்றில் சொற்பொழிவாற்றும் சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத்திக் கொள்கிறான். வீட்டு வேலைகளைத் தவிர, கணவனுக்குப் பணிவிடை என்ற பெயரால் அவள் பொறுப்பு அதிகப்படுவதையும் சாடுகிறான்.

கணவர்க்கு வெந்நீர்கடிய விளவி
உடம்பு குளிப்பாட்டி உணவை ஊட்டி
வெற்றிலை வைத்துப் பொத்தல் உடையைத்
தைத்துக் குடையை விரித்துக் கொடுத்து
வெளியில் அனுப்பி . . . . . . . . . . . (1978 : 99)

அன்பு என்ற போர்வையில் பெண்களை அடிமைப்படுத்தும் வேலை வாங்கும் பண்பாட்டைக் கண்டு பொங்கியெழுகிறான். மனையக வேலைகளை, மனைவியின் வேலைகள் என்று முத்திரை குத்தி ஒதுக்காமல், கணவனும் பங்கேற்க வேண்டுமென்பதைக் கண்ணப்பன் வாயிலாக உணர்த்துகிறார். 'குறடு கழுவிக் கோலம் போடுகிறாள் மனைவி, தவலை துலக்கித் தண்ணீர் போடக் கூடாதா என்ன?' என்று தொடங்கி கேள்விக் கணைகளைத் தொடுக்கிறார் கவிஞர். குடும்பவிளக்கில் மனைவி, கணவனது கடையிலே பொறுப்பாகச் செயலாற்றுவதையும் கவிஞர் காட்டுவது குறிப்பிடத்தக்கது. மனைவி, கணவனது வேலைகளிலே பங்கேற்பதுபோல, கணவனும் மனைவியின் வேலைகளிலே பங்கேற்க வேண்டும் என்ற கவிஞரின் விருப்பம் புலனாகிறது. உதவி என்ற ஒன்றைச் செய்யாவிடினும், கணவன் தொல்லை தராமல்

இருக்கலாகாதா? தன் வேலைகளைத் தானே செய்யலாகாதா என்றும் வினவுகிறார். கண்ணப்பன் 'கைக் கெட்டுந் தொலைவிலுள்ள விசிறியை எடுக்க. . . எண்ணெய்தேய்க்க . . . . சீயக்காய் தேய்க்க. . . .' ஆள் தேவைப்படும் தந்தையைச் சாடுகிறான். குடும்பத்தினருக்கும் அகால நேரத்தில் வரும் திடீர் விருந்தாளிகளுக்கும் இருக்கும் உணவைப் பரிமாறிவிட்டுப் பட்டினி கிடக்கும் பெண்மையையும் அதைக் கண்டுகொள்ளாத குடும்பத்தினரையும் கடிகிறார். கண்ணப்பன் இடித்துரைத்ததால் மனம் திருந்துகிறார் தந்தை. அடுத்து மற்றொரு காட்சியையும் நம் கண்முன்னே விரிக்கிறார் பாவேந்தர். 'துணைவர்க்கு இலக்கணம்' என்ற கவிதையிலே, 'விருந்தாளிகள் இன்னும் சிறிது நேரத்தில் வருவார்கள்; அவர்களுக்கு விருந்து தயார் செய்ய வேண்டும்' என்று கணவன் மனைவியிடம் தெரிவிக்கிறான். இது உலகியல் நடப்பு. இப் புதுமைக் கணவனோ ஆணையிடுவதோடு அமையாமல் அவளுக்கு வேண்டிய உதவிகளையெல்லாம் செய்து கொடுக்கிறான். கணவன்-மனைவி உறவில் இத்தகைய சமத்துவ உறவை எதிர்பார்க்கிறார் பாரதிதாசன். மேற்கூறிய மூன்று கணவன்மார்களின் இயல்புகளில் படிநிலை வளர்ச்சியைக் காட்டுகிறார். குடும்பவிளக்கும் மனையக வேலைகளைப் பகிர்ந்து கொள்ளாத கணவன்; 'குடும்பவிளக்கும் குண்டுக்கல்லும்' படைப்பில் மகன் இடித்துரைக்கக் கேட்டு மனம் திருந்திய கணவன்; 'துணைவர்க்கு இலக்கணத்தில்' தானே மனமுவந்து மனைவிக்கு உதவி செய்யும் கணவன்.

### பிற திருமண உறவுகள்:

ஒரு பெண்ணிற்குத் திருமணமானவுடன் ஏற்படும் புது உறவுகள் பல. அதில் மாமியார், நாத்தனார் உறவுகள் பெரும்பாலும் முரண் உறவுகளாகவே இருப்பதை நடைமுறையில் காண்கிறோம். பாவேந்தரோ இவற்றை முரண் உறவுகளாகக் காட்டாமல், ஒத்துப்போகும் உறவுகளாகவே காட்டுகிறார். இவர்கள் உறவு என்றும் இன்பமாய் இருக்க தனிக்குடித்தனம் அமைப்பதே சிறந்த வழி என்ற குறிப்பையும் தருகிறார். தனியில்லம் வேண்டுமென நகைமுத்துவைக் கேட்க வைக்கிறார்.

எங்கள் மணமுடித்துத்
தட்டா மல்ஈக
தனியில்லம் என்றனளே (1974 அ :31)

உலக அனுபவமிக்க பெருமாள் தாத்தாவின் மூலமாகத் தம் கருத்தையும் வெளியிடுகிறார்.

மாமிகொடு மைக்கு
வழியில்லை; மைத்துனர்கள்
தாமொன்று சொல்லும்
தகவில்லை. தன் துணைவன்
ஏமாற்றி னான்தன்
இளையவனை என்று சொல்லும்
தீமையில்லை; (1974 அ : 32)

தன் கணவனைப் பெற்றவர்கள் என்ற மதிப்பினைக் கொடுத்து மருமகள் வாழவேண்டும் என்ற கருத்தையும் வெளிப்படுத்துகிறார் .

நானவர்க் கன்னை போல்வேன்
எனதத்தான் தனையும் பெற்று

வாழ்ந்தநாள் எண்ணும் போதில்
தனிக்கடன் உடையேன், நானோர்
தவழ்பிள்ளை அவர்கட் கென்றாள் ( 1974 : 17)

இங்கு மருமகள், வயதான தன் மாமன் மாமியைத் தன்னைப் பெற்றவர் போல் நினைத்துப் பேணுவது குறிப்பிடுதற்குரியது.

தளர்ந்த கிழவியை
அடுப்பில் விட்டுத் தடித்த மருமகள்
கொழுந்த னோடு கொஞ்சினாள் என்று
வையம் இகழுமே (1974 அ :111)

என்று மனிதநேயம் கொண்ட - சமுதாயத்திற்கு அஞ்சும்- மருமகளைச் சித்தரிக்கிறார்.

மருமகளிடத்தில் தன் அன்பை வெளிப்படுத்துவதிலும் மாமியார், சற்றும் சளைத்தவளல்ல. நகைமுத்து கருவுற்றபோது, மாமியார் தங்கம் தன் வீடு, தன் மகள் வீடு என்று 'நீடு மணிப்பொறி ஆடுங்காய் போல்' அலைகிறாள். மாமனோ, இனிப்புப் பலகாரங்கள் வாங்கி வந்து 'ஈந்து போவான்' எதற்குப் போகிறான்? 'இன்னமும் வாங்கிட.' இவர்கள் அன்பின் கரைகண்டவர்கள்.

## நன்மக்கட்பேறு :

ஆண் குழந்தை பிறந்தால் மகிழ்ச்சி ; பெண் பிறந்தால் இகழ்ச்சி. இது சமூக வழக்கம். பெண் குழந்தை வெறுப்பு என்பதைக் கேட்டுக் கேட்டு வெறுத்துப்போன காதுகளுக்கு ஓர் இனிய ரீங்காரம் பாரதிதாசன் பாடலடிகள். நகைமுத்து கருவுற்றிருக்கிறாள். அவள் மாமியாரிடம் ஒரு பெரியார் கேட்கிறார் 'பெண்ணே பிறந்து விட்டால் எங்கே ( பாடுவீர்? என்று, அதற்கு மாமி அளித்த பதில்,

மண்ணில் பட்டால் மாசுபடும் என்று என்
கண்ணில் வைத்தே காப்பேன் ஐயா (1974 அ : 62)

'ஒரு தாயின் உள்ளம் மகிழ்கிறது' கவிதையில் வரும் தாய் ஆண் குழந்தையையும் பெண் குழந்தையையும் சமமாகவே கருதுகிறாள். மகளையும் பெருவிருப்புடன் சீராட்டுகிறாள்.

சீரெல்லாம் பெற்றேன் மகளே - உன்னைப்
பெற்றதால் செந்தமிழ்ச் சீரெல்லாம் பெற்றேன் (1978 அ :17)

தன் மகன் சான்றோன் என்பதைக் கேட்டுப் பெரிதுவக்கும் தாயைக் காட்டுகிறார் வள்ளுவர். பாரதிதாசனோ, மகள் சான்றோள் என்று கேட்டுவக்கும் தாயையும் காட்டுகிறார்.

இன்றுதான் உன்னைப் பெற்ற பயன்பெற்றேன்
நன்று கற்றவள் உன்மகள் - என்னக் கேட்ட இன்றுதான்!
(1978 அ :21)

பெண்குழந்தை வெறுப்பிற்கு 'வரதட்சணைக் கொடுமை'யும் ஒரு முக்கிய காரணம். தான் பெற்ற பெண்ணிற்கு ஏதோ கொஞ்சம் கொடுத்துத் திருமணம் செய்து அனுப்ப வேண்டும் என்று நினைக்கும் பெற்றோர்கள் இருப்பதையும் சுட்டி, இங்கே பெண்ணுக்குத் தமது சொத்தில் பங்களிக்க எண்ணும் தந்தையை அறிமுகப்படுத்துகிறார் நகைமுத்தின் தந்தை மாவரசன் மூலம்.

பெண்ணுக்குச் சொத்துரிமை
இல்லைஎன்பர் நான்தருவேன் (1974 அ : 32)

என்று சமூக நடப்பியலையும் கூறி, புரட்சிக் கருத்தையும் தருகிறார். சொத்துரிமை பெற்ற பெண் பலவித இன்னல்களிலிருந்தும் விடுபடுகிறாள் என்பதைக் கவிஞர் வலியுறுத்த விழைகிறார். 'பெண்கள் விடுதலை' (1983 அ :141-146)யில் பெண்ணை அவளது கணவனும் அவன் பெற்றோரும் மிகவும் கொடுமைப்படுத்துகின்றனர். அச் சூழலில், கணவனது சொத்தில் பாதியுரிமை அவன் மனைவிக்கும் உண்டு என்று ஏற்பட்ட சட்டம் அவளுடைய வாழ்வில் ஒரு திருப்புமுனையை ஏற்படுத்தியது. இச்சட்டம் அவளது அந்தஸ்தை உயர்த்தியது. கணவனும் பிறரும் அவளைத் துன்புறுத்துவதை விட்டொழித்தனர்.

இவ்வாறு, திருமணம், திருமண உறவுகள் பற்றிய பல புதுமைக் கருத்துக்களைக் கூறிய பாவேந்தர் மக்களைச் சிந்திக்க வைக்கிறார். பாவேந்தர் காதல் திருமணத்திற்கு மட்டுமே அதிக முக்கியத்துவம் கொடுத்துள்ளது, நடைமுறைக்குப் பொருந்துவதாகுமா? என்பது சிந்தித்தற்குரியது. அதே சமயம், மணமக்களின் முழுசம்மதத்துடன் நடைபெறும் திருமணமே உகந்தது என்ற கருத்தை அவர் பல இடங்களில் வலியுறுத்தியுள்ளது குறிப்பிடுவதற்குரியது. இக்காலத்தில் கூட்டுக் குடும்ப வாழ்க்கை முறை சிதைந்து, தனிக் குடித்தன முறைக்கு முக்கியத்துவம் ஏற்பட்டு வருவது, பாவேந்தர் கருத்து வலிமை பெற்று வருவதைக் காட்டுகிறது. குடும்பப் பொறுப்புகளில் கணவன் - மனைவி சமபங்கேற்க வேண்டும் என்பது அவர் கொள்கை. பொருளாதார நிலையை மேம்படுத்தும் நோக்கில், பெண்கள் பலரும் வெளியே பணிக்குச் செல்லும் ஒரு பெரும் சமுதாய மாற்றம் ஏற்பட்டுள்ள இக்காலத்தில், பெண்களின் வேலைப் பளுவைச் சமன் செய்ய 'துணைவர்க்கு இலக்கணம்' கூறும் பாரதிதாசன் கருத்துக்கள் பெரிதும் உதவும்.

* * *

## மேற்கோள் நூல்கள் :


| | | |
|---|---|---|
| பாரதிதாசன் | 1974 | குடும்ப விளக்கு (பகுதி 1 & 2) ஆறாம் பதிப்பு, பாரிநிலையம், சென்னை. |
| | 1974 அ | குடும்ப விளக்கு (பகுதி 3,4 & 5) மூன்றாம் பதிப்பு, பாரிநிலையம், சென்னை. |
| | 1978 | தலைமலைகண்ட தேவர், பூம்புகார் பிரசுரம். |
| | 1978 அ | ஒரு தாயின் உள்ளம் மகிழ்கிறது, பூம்புகார் பிரசுரம். |
| | 1980 | கோயில் இருகோணங்கள், பூம்புகார் வெளியீடு. |
| | 1980அ | ஏழைகள் சிரிக்கிறார்கள், பூம்புகார் பிரசுரம். |
| | 1983 | பாரதிதாசன் கவிதைகள் - தொகுதி 2, 10-ஆம் பதிப்பு, பாரி நிலையம். |
| | 1983 அ | குயில் பாடல்கள், இரண்டாம் பதிப்பு, பூம்புகார் பிரசுரம். |
| | 1990 | பாரதிதாசன் கவிதைகள் - தொகுதி 1. 29-ஆம் பதிப்பு, பாரி நிலையம். |


* * *

# இரு புரட்சிக் கவிகள்

முனைவர் கி. இராசா

பாரதிதாசன் தமிழகத்தின் புரட்சிக் கவிஞர் என்று அழைக்கப் படுவது போல் நஸ்ருல் இஸ்லாம் வங்காளத்தின் புரட்சிக்கவி என்று அழைக்கப்படுகிறார். இருவர்தம் வாழ்க்கைப் போக்கிலும் வியத்தகு ஒற்றுமைகள் காணப்படுகின்றன. இருவரது படைப்பாற்றலும் அவர்களது வாழ்க்கைப் போக்கிற்கு ஏற்ப, ஏற்ற இறக்கங்களைக் கொண்டுள்ளன. கவிதைகளில் மட்டுமின்றி, படைப்புக்கலையின் பல்வேறு பரிணாமங்களிலும் இருவரும் தம் சிந்தையைச் செலுத்தியுள்ளனர்.

பாரதிதாசனும் *(1891-1964)*, நஸ்ருல் இஸ்லாமும் *(1899-1962)* சம காலத்தவராவர். பாரதிதாசனும் *(1918)* நஸ்ருலும் *(1919)* கவிதையுலகில் காலூன்றிய காலகட்டத்தில் இந்திய விடுதலைப் போர் அனல் வீசத் தொடங்கியிருந்தது. இருவருமே இந்த அனலினால் ஈர்க்கப்பட்டனர்.

கனக சுப்புரத்தினம் தனது இயற்பெயரை பாரதியாரின் தொடர்புக்குப்பின் *(1909)* - பாரதியாரின் செல்வாக்கினால் 'பாரதிதாசன்' என மாற்றிக் கொண்டார். அரவிந்தர், வ.வே.சு. ஐயர் ஆகியோரிடமும் பாரதிதாசன் தொடர்பு கொண்டிருந்தார். *1917*-ஆம் ஆண்டு ஜூன் *17*-ஆம் தேதி மணியாச்சி புகைவண்டி நிலையத்தில் கலைக்டர் ஆஷ் சுட்டுக் கொல்லப்பட்டார். இதற்குப் பயன்பட்ட துப்பாக்கி பாவேந்தர் அனுப்பியதே என்று குறிப்பிடுவர். பாரதிதாசனுக்கு இளமையில் தேசிய விடுதலைப் போராட்ட உணர்வு மிகுந்திருந்தது என்பதற்கு அகச் சான்றுகள் உள. 'ரவிவர்மா பரமசிவப் படபாரதி' என்ற கட்டுரையில்,

> பாரதியார் பாடி வெளியிட்டிருந்த சுதேச கீதங்கள்
> புதுச்சேரியில் படித்தவர்களிடையே உலவியிருந்தது ...
> சுதேச கீதங்களை நான் படித்து வந்தேன். ராகத்தோடு
> முணுமுணுத்து வந்தேன்.... அதன் பிறகு கொஞ்சம்
> விஷயமான உணர்வோடும், 'நான் ஓர் இந்தியன்' என்ற
> அகம்பாவத்தோடும் அப்பாடல்களைப் பாட முடிந்தது நாளடைவில்

என்று குறிப்பிட்டுள்ளார்.

*1920*-இல் பாரதிதாசன் சத்தியாகிரகப் போராட்டத்தில் ஈடுபடுகிறார். அடுத்த எட்டு ஆண்டுகளில் - *1928*-இல் சிறுவர் சிறுமியர் தேசிய கீதம், தொண்டர் நடைப்பாட்டு, கதர் இராட்டினப் பாட்டு ஆகிய விடுதலை இயக்கப் பாடல்களைப் பாவேந்தர் வெளியிடுகிறார். இதற்குப் பின்னர் அவரது வாழ்க்கை ஒரு திருப்புமுனையைக் காண்கிறது. பாரதியை அடியொற்றி நாட்டு விடுதலைக்காகவும் சமூக விடுதலைக்காகவும் கவிதைகள் இயற்றிய பாவேந்தர், பாரதியின் மறைவுக்குப் பின்னால் *(1921*-க்குப் பின்*)* சமூக விடுதலை காண்பதிலேயே

முழு மூச்சுடன் செயல்பட்டார் எனலாம். இதன் விளைவாக *1931*-இல் 'சுயமரியாதைச் சுடர்' என்ற சிறு நூலை வெளியிட்டார். *1933*-இல் நடந்த நாத்திகர் மாநாட்டின் வருகைப் பதிவேட்டில் 'நான் ஒரு நிரந்தரமான நாத்திகன்' என்று கையெழுத்திட்டுத் தன்னை சுயமரியாதைஇயக்கத்தில் முழுவதுமாக ஈடுபடுத்திக் கொண்டார்.

இதே காலகட்டத்தில் வங்காளத்தில் இலக்கியத்தை வளர்ப்பதற்கு வாய்ப்பான சூழலை அங்கிருந்து வெளிவந்து கொண்டிருந்த பத்திரிகைகள் ஏற்படுத்தித் தந்தன. இதனால் நஸ்ருல் இளமையிலே கவிதைகள், கருத்துக் கட்டுரைகள் இவற்றைப் பத்திரிகைகளுக்கு எழுதி அனுப்பிக் கொண்டே இருந்தார். ஒவ்வொரு இதழிலும் அவை தொடர்ந்து வெளிவந்துகொண்டிருந்தன. இக்காலத்தில் மதங்களின் உயர்வு, சமய ஒருமைப்பாடு, சமூக முன்னேற்றம், காதல் போன்ற பல்திறப் பாடுபொருட்களில் நஸ்ருல் கவிதை யாத்தளித்தார்.

இளமையில் பாரதிதாசன் கொண்டிருந்த இறையுணர்வும், நஸ்ருலின் சமய நம்பிக்கையும் ஒப்பிட்டு நோக்கத்தக்கன. பாரதிதாசன் எழுதி முதலில் வெளிவந்தது சமயம் சார்ந்த கவிதை நூலாகும் (ஸ்ரீமயிலம் சுப்பிரமணியர் துதியமுது:*1926*). நஸ்ருலின் முதல் கவிதையே (முக்தி: *1919*) அவர் சமயவாதிகளின் அருட்திறங்கண்டு வியந்தவர் என்பதை உணர்த்துகிறது. சுயமரியாதை இயக்கத்தின் தொடர்புக்குப் பின்னர் பாரதிதாசன், சமயத்தின் பெயராலும் சாதியின் பெயராலும் நடைபெற்ற கொடுமைகளுக்குக் குரல் கொடுக்கத் தொடங்கினார். நஸ்ருலின் பிற்கால வாழ்விலும் சமய, சாதிப் பூசல்களை எதிர்க்கும் கருத்து உருவானது என்றாலும் அவை பாரதிசானின் கருத்துக்கள் போல வன்மைபெறவில்லை. பாரதிதாசனின் குறிக்கோளே சமுதாயக் கொடுமைகளை எதிர்ப்பதாக விளங்கியது. சமயம் தொடர்பான நஸ்ருலின் பிற்காலக் கவிதைகள் இந்து-இசுலாமியச் சமயங்களில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகளையும் பிரிவுகளையும் களைந்து ஒருமித்த சமுதாயம் காணவேண்டும் என்ற கவிஞரின் கனவையே பிரதிபலிக்கின்றன எனலாம்.

பாரதியாரின் மறைவுக்குப் பின்னர் பெரியாரின் சுயமரியாதைக் கொள்கைகளால் பாரதிதாசன் ஈர்க்கப்பட்டதுபோல, நஸ்ருலின் கவிதையாற்றலைக் கண்டு வியந்த வங்காளப் பொதுவுடைமைக் கட்சித் தலைவர் முசாபர் அகமது (**Mussaffar Ahamad**) நஸ்ருலின் கவிதைகள் பல பத்திரிகைகளில் வெளிவருவதற்கு ஊக்கினார். முசாபர் அகமது அளித்த இந்த ஊக்கம், பொதுவுடைமையைப் போற்றி பல கவிதைகளை எழுதுவதற்கு நஸ்ருலுக்குத் தூண்டுகோலாய் அமைந்தது. இதனால் வங்காள வாசகர்களுக்கு நஸ்ருல் விரைவில் பிரபலம் ஆனார். இச்சூழலில் வங்காள தேசத்தின் முதல் பொதுவுடைமைக் கவிஞராக நஸ்ருல் பரிணமித்தார். இக்காலத்தில் இந்தியாவெங்கும் கொந்தளிப்பு நிலை உருவானது விசாரணையின்றி எவரையும் தண்டிப்பதற்கு வழிவகை செய்யும் ரவுலட் சட்டத்தை (**Ruwlatt Act: 1919**) எதிர்த்து காந்தியின் தலைமையில் சத்தியாகிரகப் போராட்டம் நடைபெற்றது. இதே ஆண்டில் ஜாலியன் வாலாபாக்கில் அப்பாவி மக்கள் ஆங்கிலப் படைகளால் மூர்க்கத்தனமாகப் படுகொலை செய்யப்பட்டனர். (*13* ஏப்ரல், *1919*). நஸ்ருலின் உள்ளத்தைக் கலக்கிய இக் கொடுமைகள், அவர்தம் கவிதையாக்கத்தைத் தேசிய விடுதலை இயக்கத்தின்பால் திருப்பின. வங்காளத்தில் செழித்து வளர்ந்த பல பத்திரிகைகளுக்குத் தேசபக்திப் பாடல்களை எழுதிக் குவித்தார் நஸ்ருல். தேசபந்து சித்தரஞ்சன்தாஸ் சிறையில் அடைக்கப்பட்டதும் வங்காளமே கொதித்தெழுந்தது; நஸ்ருல் சிலிர்த்தெழுந்தார். இச்சிலிர்ப்பில் விளைந்ததுதான் அவரது அழியாத 'புரட்சிக் காரன்' (**Bidrohi : The Rebel**) என்ற கவிதை.

வீரனே முழங்கு –
என்றும் நிமிர்ந்திருக்கும் என்சிரம்!
என் நிமிர்ந்த சிரங்கண்டு நாணி,

இமயமும் தலைதாழ்ந்தது கண்டாய்
வீரனே முழங்கு –
பிரபஞ்சத்தின் முகடு தன்னைப் பிளந்து
சந்திரன் சூரியன் கிரணங்களைக் கடந்து,
ஈரேழுலகும் ஊடுருவிச் சென்று
பரமனின் பீடந் தன்னையும் துளைத்து
நிமிர்ந்துயர்ந்த எனைக்கண்டு வியப்பான் பிரமன்!
எந்தன் நெற்றியில் ஜொலிக்கிறது பார்
உருத்திரன் தீட்டிய வெற்றித் திலகம்.

என்று தொடங்கும் 'புரட்சிக்காரன்' கவிதை மக்களின் நாடி நரம்புகளிலெல்லாம் விடுதலை உணர்வினை அலை அலையாய்ப் பாய்ச்சியது. இந்தக் கவிதையால் நஸ்ருல் 'புரட்சிக்கவி' என்றழைக்கப்பட்டார். இவ்வாறு வங்காளத்தில் நிலவிய அரசியல் சூழல் நஸ்ருலைத் தேசிய உணர்வு மிக்க கவிஞராக மாற்றியது. சமுதாயக் கொடுமைகளை எதிர்க்கும் புரட்சிக் கருத்துக்களைத் தம் கவிதைகளில் வெளிப்படுத்தியமைக்காக பாரதிதாசன் 'புரட்சிக்கவிஞர்' என்று சிறப்பிக்கப்பட்டார். நாட்டு விடுதலை உணர்வைத் தூண்டும் 'புரட்சிக்காரன்' எனும் கவிதையைப் பாடியதால் நஸ்ருல் புரட்சிக்கவிஞர் என்று அழைக்கப்படுகிறார்.

பாரதிதாசன், நஸ்ருல்இஸ்லாம் இருவரும் படைப்பிலக்கியத்தின் பல்வேறு பரிணாமங்களிலும் தம் திறமையை நாட்டியுள்ளனர். பாவேந்தர் இசையில் பெரிதும் ஈடுபாடு உடையவர். 'சுதேச கீதங்களை நான் இராகத்தோடு முணுமுணுத்து வந்தேன்' என்ற அவரது கூற்றாலேயே இதை உணரலாம். இவர் தமது பல பாடல்களுக்கு இசைக்குறிப்புகளைத் தந்துள்ளார்.

(எ.டு.) பாரதிதாசன் கவிதைகள் - தொகுதி 1.

| தலைப்பு | இராகம் | தாளம் |
|---|---|---|
| 1. காட்சியின்பம் | பியாக் | துதுஷ்ரரூபகம் |
| 2. விரகதாபம் | ஆனந்த பைரவி | ஆதி |
| 3. தமிழின் இனிமை | ஆனந்த பைரவி | ஆதி |
| 4. இன்பத் தமிழ் | சங்கராபரண ஜன்பயம் | மிசிரசாப்பு |
| 5. தமிழ் உணர்வு | காடனா | மிசிரஏகம் |
| 6. தமிழ்ப்பேறு | சஹானா | திஷ்ரம் |
| 7. எங்கள் தமிழ் | பிலஹரி | ஆதி |
| 8. தமிழ்க்காதல் | எதுகுல காம்போதி | திஷ்ரம் |

நஸ்ருல் தமது *14*-வது வயதிலேயே 'லேட்டோ' (**Leto-band**` எனும் கிராம இசை, நாடகக் குழுவிற்குத் தலைவனாயிருக்கும் தகுதியைப் பெற்றிருந்தார். இரு கட்சிப் பாடகர்கள் (வினாவும் விடையும்) இடம் பெறும் 'கவிகான் (**Tarja and Karir dal**) குழுவில் நஸ்ருல் முக்கிய இடம் வகித்தார். பாடல் இயற்றுவது, இசையமைப்பது, தானே பாடுவது, இசைக் கருவிகளை மீட்டுவது ஆகிய இசைப்பாடற்கூறுகள் அனைத்திலும் இளமையிலேயே வல்லவராக

Whose life is misery, and fear and care;
Whom the morn wakens but to fruitless toil;
Whoever hears his famished offspring's scream

**(Queen Mob, II.114-16)**

Shalley and Bharathidasan have expressed their firm faith in the dawn of "a brighter morn" which will ameliorate the pitiable plight of the poor. In his poem "Ninkale Collunkal" (Say it Yourselves), which is in the form of an address to the gardens, fields and machines, Bharathidasan affirms his faith in man's power in taming nature and establishing a civilized world:

O beautiful, blooming gardens
How many of my comrades
Have spilled their blood into your roots
To tame and make you enchanting
...............................
O roaring and rambling machines
Shall I trace your origin?
Were you all not born out of
The hard labour of the working class?
...............................

O earth, are you not the proof
of the sweat and toil of the working class?
Then why are the rich so callous
to the hunger of the workers?

Should the lions give all their share
to the rats and pine?
Should the tigers feed the foxes well
And sleep in bushes in hunger?

No more fear; no more begging
The workers shall arise
And prove to the world
That their own might can make them live happily.

**(Bharathidasan Kavithaikal Vol. I. pp.156-57)**

Bharathidasan stresses the need for co-operative endeavour among the labourers. In the beginning of the twentieth century trade union movements were started in order to organise the workers in industries, following an awareness created among them by leaders like Thiru V.Kalyanasundaram. Bharathidasan juxtaposes their present plight with what they ought to be. In his poem "Ulagam Unnutaiatu" (The world is Yours), he tells them that they are born not "to cringe, creep and crawl much lower than a dog could do" but to live like other men. He advises them to break all barriers and walls and unite as one family-- the family of humanity:

Demolish the wall between your home and that of your neighbour;
Remove the curtains amidst the streets,
Unite the nations and march ahead;
Ascend the mountain sky-high,
Ascend higher and further;
Behold the people of the earth
Behold the expanse of your kind!
Behold the battalion of your brethren
Rejoice at the sight of ocean of humanity
...............................
Merge with it making a confluence
And cry joyously: "I am the ocean of humanity"

**(Bharathidasan Kavithaikal, Vol.I, 149.)**

Shelley hopes that soon there will be the dawn of a new millennium when everything will be for the good of mankind. In that dawn to come the forces of tyranny, oppression, cruelty will disappear. The picture that the poet further draws of 'the new world' is very fine to conjure and worth quoting here:

> A brighter morn awaits the day
> When every transfer of earth's natural gifts
> Shall be a commerce of good words and works;
> When poverty and wealth, the thirst of fame
> The fear of infamy, disease and woe
> War with million horrors, and fierce hell
> Shall live but in memory of time
> Who, like a penitent libertine shall start,
> Look back., and shudder all his younger years.
>
> **(Queen Mob, 11.251-59)**

Bharathidasan's pro-communist ideas are expressed in the poem "Ulakappan Pattu" (The Song of Mr.World). Ulakappan is the personification of the world and is imagined as a feudal lord who apportioned the lands among the people on oral agreement. As a result some of the tenants have grabbed much while all others are left with little property and in poverty. The poet calls mr. World to the Court of Reason accusing him as the cause of inequality, and warns him to take immediate steps to distribute the property of the world equally to all the people.

> If the poor, now seen with begging bowls
> Rise up to retaliate the blows
> Just in a moment the rich and the poor will change
> A new society of all equals will emerge.
>
> **(Bharathidasan kavithaikal, Vol.,I, p.147.)**

Bharathidasn and Shelley seek to demolish the false idols by their sledge hammer blows. And it is their effort in poetry to reform the world of its evil forces and usher in a new utopia of peace and plenty for all. This reformative zeal in Bharathidasan is peculiarly his own and is shared only by Shelley among the Romantic poets. Both of them build pictures of a world of 'perfection' and good order and seek to translate or transmute them into practice or reality. Shelley's and Bharathidasan's method of reformation is to direct the attetnion of the reformers to an idealised picture of the world. Through *Prometheus Unbound* and *Kurinchithittu* the poets inform the readers that the world should be free from the domination and control of tyrants, oppressive despotic rulers, and people should breath freely. They desire that the dignity of the individual soul and human personality be maintained. They fervently plead that the tillers and workers in the fields and factories should get their just dues. They seek to bring in order of society in which equality, liberty and justice would be the watchwords of social life. They are for the socialistic pattern of society without the attending evils associated with the communistic way of living. They uphold peace and oppose war and armaments. They have planned a society based on liberty and love, brotherhood of manking, and the victory of good over evil.

In *Prometheus Unbound* Shelley presents Prometheus as an embodiment of all that is good in suffering humanity. Jupiter is the tyrant crushing humanity under his iron heel. The revolt Prometheus is in fact the revolt of Shelley himself against the tyranny of ruling monarchs. Prometheus, in Aeschylus's drama, is depicted as defying, and then, at last, being stricken down. shelley's Prometheus is a successful rebel against the power of Jupiter since he brings about his dethronement from the tyranical seat of power. Prometheus is helped by Demogorgon and it is Demogorgon who overthrows Jupiter. Prometheus, the Titan, is a symbol of mankind struggling for perfection; Jupiter is an embodiment of traditional beliefs and insitutions dominating as evil in our universe.

In Bharathidasan's *Kurinchithittu,* people are shown to be living in a secular, peaceful and prosperous life. They retain their ancient Tamil culture. The Islanders keep themselves aloof and have no link with the outside world. But the problem starts when the present king, Tiraiya Mannan establishes a one-way traffic with India and starts visiting the country often. The islanders are afraid of this new relationship. Their fear becomes true.

The king on his return brings with him an Aryan woman and two religious leaders. The impact of the new world spoils the very atmosphere of the old world. The peace of the island is shattered. However, before it is too late, a republic is established and peace is restored. Bharathidasan recommends a constitutional form of government and the work ends with the establishment of a republic. The concluding part of the poem informs the form of state desired besides prescribing the duty of the people:

> Planning a good scheme is our duty
> Eradicating all that is evil is our duty
> Enriching the country is our duty
> Ensuring the security of Tamil is our bounden duty
> Establishing a life'
> Transcending religion, caste and government, is also our duty.

So long as people remain passionless and put up with evil there can be no revolution. And changing a social order without a revolution is rather impossible. Therefore writers are duty-bound to infuse emotion in the hearts of people through their writings. Understanding the power of the people, Bharathidasan recommends revolution as a means in several of his poems like *Puratchikavi* and *Veerathai* to achieve not only the political but also economic and social goals. Political revolutions are often caused by economic disparity and inequality of opportunities among the people of a society. In *Katala katamaiya* people are shown to be leading a happy and contented life because each of them is assured of a house, land, an occupation, plough and bulls as his share in the republic.

* * *

# சிரிப்பு

# ஓர் அறிவியல் நோக்கு....

முனைவர் கா. மீனாட்சி சுந்தரம்

மனிதனுக்கு இயற்கை ஈந்த சில பேறுகளுள் சிரிப்புணர்வும் சிரிப்புநிகழ்வும் சிறந்த இடம் பெறுகின்றன. மனத்தில் தட்டப்படும் அதிர்வுகளுக்கேற்ப உடலில் ஏற்படும் மிக நுணுக்கமான நெளிவு மாறுதல்களைத் தமிழிலக்கண இலக்கியப் புலவர்கள் மெய்ப்பாடு என்பர். மனத்தில் ஏற்படும் அதிர்வு மெய்யில்படுவதால் அது மெய்யினில் மாற்றத்தை இலைமறை காயாக ஏற்படுத்துகிறது. அப்படி மனத்தின் மீது மோதி அதிர்வுகளை உண்டாக்கும் எண்ணங்களை உருவாக்கிக் காட்டுவது எளிமையன்று. ஆகவே அந்த எண்ணங்களால் ஏற்படும் அதிர்வு விளைவுகளுக்குப் பெயர்தந்து புரிந்துகொள்ள விளக்குகிறோம். அவ்வாறு ஏற்படும் உணர்வுகளையும் அதிர்நிகழ்வுகளையும் தமிழர் எட்டுவகையாகக் காட்டுவர். அவைகள் உணர்ச்சி பூர்வமாக இருப்பதால் அவற்றைச் சுவைகள் என அவர்கள் பெயரிட்டுள்ளனர். துன்பமோதல் ஏற்படும்போது அவல அதிர்வு தோன்றும். அழுகை பிறக்கும். ஆகவே அவலச் சுவை உணர்வும் நிகழ்வுமாக அதுஆகின்றது. அதேபோல சிரிப்புணர்வும் சிரிப்புநிகழ்வும் மனிதனுக்கு மகிழ்வு மோதலால் அதிர்வு தோன்றி இயல்பாய் அமைகின்றன. இந்தச் சுவையை நகைச்சுவை என அழைப்பர்.

பொன் சுடச்சுட ஒளிவிடும். காய்ச்சக் காய்ச்ச உருகி அழகிய மின்னல் வீச்சுக் கவர்ச்சியுடையதாகி பொன் அணிகளாக்க அது தன்னை நகையாக்கிக் கொள்ளும் தன்மை உடையது. அப்போது அந்த அணிகளை நகை" எனக் கூறிமகிழ்வர் தமிழர். நகைச்சுவை என்பதில் வரும் 'நகை' பேச்சில் இடம் பெற்றுச் சிறப்பதைக் காணலாம். இதைச்சிரிப்பு எனஇக்காலத்தில் கூறி மகிழ்கிறோம். சிரிப்புக்கும் நகைக்கும் சிறிது வேறுபாடு இருப்பினும் ஒன்றை ஒன்று அவாவாமல் இருப்பதன்று. சில நேரங்களில் இரண்டும் ஒரே பொருளிலும் வழங்கும். இந்தச் சிரிப்புச் சுவையை இலக்கியங்களில் தோய்த்து இழைத்து அறிஞர்கள் கற்பவனைக் கவர்வார்கள். பாவேந்தர் பாரதிதாசனார். "அழகின் சிரிப்பு" என இயற்கையின் சிரிப்பை எழிலுறக் காட்டியுள்ளதைக் கற்பார் அறிவர். அவ்வாறாயின் அறிவியலார் இச்சிரிப்பைக் பற்றி என்ன கூறுகின்றனர்? சிரிப்பின் விளைவுகளைப் பற்றி அறிவியலார் ஆராய்ச்சி நடத்தியுள்ளனர். மேலும் தொடர்ந்து ஆய்வுகள் நிகழ்ந்த வண்ணமாயும் உள்ளன. மக்களின் நுரையீரல்களையும் பிறஉடலுறுப்புக்களையும் சிரிப்பு வலிமையுறச் செய்கிறது என்பது அவர்கள் கண்ட முடிவாகும். அது உடல் நலத்தைக் கெடுக்கின்ற மனப்புழுக்கத்தை - இறுக்கத்தைக் குறைக்கும். தசைகளை இளைப்பாறச் செய்யும். முக்கியமான உயிர் உறுப்புகளுக்குப் பயிற்சி ஊட்டும். விருப்பமில்லாமல் வலிந்துசிரிக்கும்போ.து கூட அஃது உடல் உள்ளம் இரண்டிற்கும் நலமிக்க விளைவுகளை ஏற்படுத்துகிறது. சிரிப்பவன் நீண்ட நாள் வாழ்கிறான் என ஒரு மருத்துவ ஆய்வாளர் கூறுகிறார்.

சிரிக்கத் தெரிந்தவன் மனிதன் மட்டுமே. வேறு எந்த விலங்கிற்கும் இந்த ஆற்றல் இல்லை. மனிதன் ஒருவனே சிரிப்பூட்டவும் அதைக் கேட்டு நகைக்கவும் தெரிந்தவன். எனினும் சிரிப்பிற்கு ஈடான உடலியல் வினைகள் பிற விலங்குகளிலும் உண்டு என மானிடவியலார் நிறுவுகின்றனர். ஜேன் குட்டால் (Jane Goodall) என்ற மானிடவியலார், சிம்பன்சி குரங்குகளும் வாலில்லாக் குரங்குகளும் விளையாட்டுணர்வை ஒரு வகைச் சிரிப்பின் மூலம் காட்டுகின்றன எனக் கூறுகிறார்.

மனிதன் வாய்திறந்து, மனம் திறந்து சிரித்தால் உடலிலும் உள்ளத்திலும் பின்வரும் நல்மாற்றங்கள் ஏற்படுகின்றன. 1) நுரையீரல் புத்துணர்வு பெறுகிறது. 2) மூச்சுமண்டலம் தூய்மை அடைகிறது. 3) உள்ளக்கிளர்ச்சிக்கு நலமிக்க வடிகாலாக அமைகிறது. 4) அதிகமான சக்தி வெளியேற்றப்பட ஒரு வாய்ப்புக் கிடைக்கிறது. 5) சோம்பல் உணர்வை நீக்குகிறது. 6) சமூகத் தேக்க உணர்வைப் (Social Constipation) போக்குகிறது. 7) வெட்க உணர்வு, மன இறுக்கம், கவலை -இவைகளை நீக்க உதவுகிறது. 8) கடந்த காலத் துன்ப நினைவுகளை மறக்கச் செய்யும் மருந்தாகக் காலம் இருப்பது போலவும், ஒளிமிக்க எதிர்காலக் கனவுகளை வளர்க்கும் நம்பிக்கை போலவும், மனிதனின் நிகழ்காலத் துன்பத்திற்கு மாற்றாக இருக்கிறது.

உளவியலறிஞர் டாக்டர் ஹெர்மன் ரைபர் (Dr. Herman Ryber) "சிரிப்பும் நகைச்சுவையுணர்வும், மனிதர் இயற்கை பிறழ்ந்த நிலையிலோ நகைச்சுவையுணர்வற்ற நிலைமையிலோ இருக்கும்போது இருமடங்கு முக்கியத்துவம் பெறுகின்றன" என மருத்துவர் கருத்தரங்கு ஒன்றில் எடுத்துக்காட்டியுள்ளார். மேலும் அவர், சாவும் கேடும் தம்மைச் சுற்றியிருந்த போதும், சிரித்து மகிழ ஏதேனும் ஒன்று இருந்தவரை இரண்டாம் உலகப்போரின் போது நிலைமை கட்டுப்பாட்டிலிருந்தது எனப் படைத்தலைவர்கள் கூறியதைச் சுட்டிக் காட்டியுள்ளார். இதை ஒத்த வேறொரு சான்றை உடல்நல அறிவியல் பேராசியர் டாக்டர்.ரோஸ்.எல். கோசர் (Dr. Rose. L. Cosr) எடுத்துக் காட்டுகிறார். தம் நண்பர்களையும் தம்முடைய சுற்றுப்புறத்தையும் விட்டுவிட்டுப் புதிய இடத்திலும் தெரியாத எதிர்காலத்தைக் கொண்டுள்ள நோயாளிகளுக்குச் சிரிப்பே ஒரு பாதுகாப்பாக உள்ளது. இத்தகைய சூழ்நிலைகளில் நிறைவின்மையை வெளியேற்றும் வடிகாலாக மட்டுமின்றி மற்ற நோயாளிகளுடன் தொடர்பு கொள்ளும் கருவியாகவும் ஒரு கூடிவாழும் வினையைச் (Social function) சிரிப்பு ஆற்றுகிறது என்கிறார் அந்தப் பேராசியர்.

ஒருவர் ஒரு நகைச்சுவையைச் சொல்லும்போது அது கேட்போருக்குச் சிரிப்பூட்டுமா எனக் கேள்வி எழுவது இயல்பு. நகைச்சுவை, சொல்வோரின், அனுபவத்தை ஒட்டிய ஒத்த அனுபவமில்லையாயினும், கோபங்கொண்ட நிலையில் இருப்பினும், பகைமையுணர்வு கொண்ட தன்மையில் இருப்பினும், அந்த நகைச்சுவை அவனுக்குச் சிரிப்பை ஏற்படுத்தாது. எதைக்கண்டாலும் ஐயுறும் தெளிவில்லா மனத்துடன் போராடுபவனுக்கு எதுவும் சிரிப்பூட்ட முடியாது. அதேபோல துன்பநிலையில் உள்ளவரிடத்திலும், ஒன்றைப்பற்றி ஆழமாகச் சிந்திப்பவரிடத்திலும் நகைச்சுவையுணர்வு இருப்பது அருமை. ஆயினும் இப்பேர்ப்பட்ட நிலையிலும் ஒருவனைச் சிரிக்கச் செய்ய முடியுமானால் நோயாளிகள் தங்கள் கூட்டுமுயற்சியால் பலவீனத்தை வென்று தாமிழந்த தனித்தன்மையைப் பெற்று விடுவார்கள்.

சிரிப்பூட்டும் நிலைகள், சிரிப்பின் பலவடிவங்கள் ஆகிய இவை உளவியலாய்வுக்கு உற்சாக மூட்டுபவையாம். அவைகள், நகைச்சுவையைக் கேட்போரின் பொது அனுபவத்தைப் பொறுத்து அமைகின்றன. ஓசையற்ற சிரிப்பு (Soundless Laughter) என்று ஒன்று உண்டு. இவ்வகைச் சிரிப்பைத் தமிழிலக்கியத்தில் கலித்தொகையில் "கண்ணினும் முகத்தினும் நகுபவள்" எனக்கூறிப் புலவர் ஒரு பெண்ணின் ஓசையற்ற வெளிப்பாடு இல்லாத கண்ணிலும் முகத்திலும் ஏற்படும்

ஒளிமிகு நெளிவுகளைக்காட்டிச் சிரிப்பைச் சுட்டுகிறார்.

சுவையான நூல் ஒன்றினைத் தனிமையில் படிக்கும்போது ஏற்படும் உள்ளார்ந்த மகிழ்ச்சி அந்த ஓசையற்ற சிரிப்பாகும். "உற்சாகமான நிகழ்ச்சிகளைப் பற்றிய நம் பகற்கனவுகளில் அது சிறிய அளவில் புறத்தில் குமிழியிடுகிறது" என அந்தோணி சாப்மேனும் ( Antony Chapman) ஹீயு புட்டும் (Hugh Foot) கூறுகின்றனர். "நகைச்சுவையும் சிரிப்பும்" (Humour and laughter) என்ற தம் நூலில் "தேர்ந்த நூலாசிரியர் ஒருவர் சிலவேளைகளில் ஒரு கதைக்குள் தம்மை ஆழ்த்தி விடுவார். அங்கு விந்தையான நிகழ்ச்சிகளை நம் கண் முன்னால் நாம் காண்பதும் கூடும்" என அவர்கள்எழுதிச் செல்கின்றனர்.

இன்னொருவர் அருகிலிருக்குபோது சுவையான நூலை ஆழ்ந்து படித்துக் கொண்டிருக்கும் ஒருவர், அந்த இன்னொருவரிடம் சொல்வதாக இல்லாவிட்டாலும், தன்னை மறந்த அடிமன நிலையில் தன் இன்பத்தைப் பரிமாறும் வகையில் அவருக்குக் கேட்குமாறு தன்னை மறந்து வாய்விட்டுச் சொல்லும்போது நகைச் சுவையின் துய்ப்பு மேலும் வலுவடையும்; மாறுதலும் பெறும். நகைச்சுவைத் துணுக்கை உரக்கப் படிக்காமல் நம்மால் இருக்க முடியாது என்ற நிலையிலும் அதைக் கேட்டு இன்னொருவர் தாமாகச் சிரிக்கும்போது சிரிப்புணர்வு ஏற்படுகிறது.இதைதான் உளவியலார் ஓர் அனுவத்தைப் பகிர்ந்து கொள்ளும் சமூகப் பண்பு" (Social Phenomenon) என்கிறார்கள்.

சிரிப்பு ஒரு மனிதனின் மனநலத்தையும் ஆளுமையையும் அறுதியிட்டுக் காட்டும் எனலாம். ஒரு பித்தனின் சிரிப்புக்கும் நலமுள்ளவனின் சிரிப்புக்கும் உள்ள வேறுபாட்டை நாம் அறிவோம். சிரிக்கும் திறன், ஒருவன் சூழ்நிலைக்கேற்ப அவன் தன்னை அமைத்துக் கொள்ளும் ஆற்றலைக் காட்டும். மற்றவர்கள் சிரிக்கும் சூழலில் ஒருவன் மட்டும் தனித்து வாய் மூடியிருந்தால் அவர் மன நலம் ஐயத்திற்குரியதாகும். ஒரு நகைச்சுவை ஒருவருக்குப் பிடிக்காமலோ அதில் சிரிப்பதற்கு ஏதுமில்லாமல் இருக்குமாயின் அவரிடம் தவறில்லை. ஆனால் தொடர்ந்து எல்லா நகைச்சுவைகள், கேலிப்படங்கள் அல்லது சிரிப்பூட்டும் சூழல்-இத்தனையும் ஒருவரிடம் சிரிப்பைத் தோற்றுவிக்கவில்லை எனில் உளப்பூர்வமாய் அவரிடம் ஏதோ குறையுண்டு.

செய்தித்தாள்கள், வார இதழ்கள் முதலியவற்றில் வரும் நகைச்சுவைகளையும் கேலிப்படங்களையும் துய்த்து மகிழ்வோர் பொதுவாகப் போதிய மன நலத்தோடு இருப்பார்கள். நகைச் சுவையை ஒதுக்குவோர் கூட மனநலத்தோடு இருக்கலாம். எனினும் அவர்களும் சிரித்து விட்டால் தங்கள் பெருமைக் குறைவும் கட்டுப்பாட்டுத்தளர்வும் ஏற்படும் என்று அஞ்சியே அவர்கள் அப்படி இருக்கிறார்கள். சிலர், நகைச்சுவைப் பகுதிகளைக் கண்டும் படித்தும் துன்பவுணர்வை எதிரொலிப்பராயின் அவர் ஆழ்ந்த கவலைக்கு ஆளானவர் என்பது தெளிவு.

சிரிப்பு இயற்கையாக வெளிப்படும் ஒரு வினையாகும். எனினும் கல்வியின் மூலம் அதை வளர்த்தவோ மாற்றவோ முடியும். குழந்தைகள் அழுவதும் சிரிப்பதும் ஒரே தன்மையன என்றும் பலவேளைகளில் அழுவதற்கு மாற்றாய் அவர்களுக்குச் சிரிக்கக் கற்றுக்கொடுக்க முடியும் என்றும் இளந்தாயர்களிடம் நடத்தப் பெற்ற ஆய்வுகள் உறுதி செய்கின்றன.

முப்பது ஆண்டுகளுக்கு மேலாகச் சிரிப்பைப் பற்றியும் அதன் காரணங்கள் பற்றியும் ஆராய்ந்து வரும் டாக்டர் சார்லஸ் ஆர். கிருனர் (Dr. Charles R.Gruner) என்னும் பேராசியர் சிரிப்பைப் பற்றிய விளக்கங்கள் முழுவதையும் தம்மால் அறிய முடியவில்லை என ஒப்புக் கொள்கிறார். "சிரிப்பைப் புரிந்து கொள்ளல்" (Understanding Laughter) என்னும் தம் நூலில் அவர், "குழந்தைகள் வளர வளர அதிகம் பண்படுகிறார்கள். சிரிப்பதற்கான நிலைகளும் பெருகுகின்றன. முதலில் உடல் நிலை வெற்றிகளைக் (Physical Success) கண்டு

சிரிக்கிறார்கள். கை, கால் முடமானவர்களையும் ஊனமுற்றவர்களையும் கண்டு சிரிக்கிறார்கள். பிறகு சொல்லாடுவதிலும் சமுதாய உணர்விலும் வளர்ந்து விடுகதைகள் புதிர்கள் முதலியவற்றைக் கேட்டும், சொல்லியும் சிரிக்கிறார்கள். இதற்குப் பின்னால்தான் துணுக்குகளைப் படித்தும் கேட்டும் சிரிக்கும் ஆற்றல் பெறுகிறார்கள்" என எழுதுகிறார்.

நமக்குச் சாதகமான ஒரு தோற்றத்தைச் சிரிப்பு நமக்கு நல்குகிறது என்ற நாமறிந்த உண்மையையும் ஆய்வு உறுதிப்படுத்துகிறது. எளிதாகவும் அடிக்கடியும் சிரிக்கும் குழந்தைகளைத் தாம் பெரியவர்கள் 'அழகான குழந்தை' என்றும் 'நல்ல பாப்பா' என்றும் கொஞ்சுகிறார்கள். அழுமூஞ்சிக் குழந்தைகளை யார் பாராட்டுகின்றனர்? ' தேம்பி அழும் குழந்தை நொண்டி' எனப் பாவேந்தரின் குரு பாடுகிறாரல்லவா? இத்தகைய கணிப்பே பெரியவரான பின்பும் தொடர்கிறது.

நுட்பமான நகைச்சுவையுடன் கூடிய சிரிப்பே ஒருவனுடைய நுண்ணறிவைக் காட்டும் உறுதியான வழி என்று ஆய்வு கூறுகிறது. நுண்ணியம் என்பார் அளக்கும் கோல் கண் என்பார் வள்ளுவர். ' மெல்ல நகுவது' எத்துணை கருத்துக்களைப் பொதித்துவைத்துக் கொண்டுள்ளது! நுண்ணறிவு மிகுதியாக உள்ளவர்களிடம் நகைச்சுவையும் நிறையப் பிறக்கும் எனினும் நகைச்சுவையுணர்வும் மற்ற கலைகளைப்போல மனத்தைப் பொறுத்ததே. எதைக்கேட்டாலும் பொருளில்லாமல் தொடர்ந்து சிரித்தால் பாராட்டுக்குப்பதில் ஏளனமே கிடைக்கும்.

நகைச்சுவையுணர்வை வரையறுக்க இயலுமா? இயலாது. எப்படி எந்த அளவில் சொல்வது என்பதை அவரவரே காண வேண்டும். உடற்பயிற்சி செய்வதைப் போல நம் இயற்கைக்கேற்றதை, நமக்கு ஒத்ததை, நாமே தேர்ந்து எடுக்க வேண்டும். ஆனால் எது எப்படியாயினும் எல்லார்க்கும் "நல்ல, சத்துமிக்க மருந்து சிரிப்பே" என்பதில் ஐயமில்லை.

சிரிப்பு உடலுக்கு உள்ளத்திற்கும் தெம்பூட்டி நலம் சுரக்கிறது. உடலியல் நிகழ்ச்சிகளைப் பாதிக்கும் நரம்பு இறுக்கங்களை நீக்குகிறது. கவலைகளையும் வெறுப்புணர்வுகளையும் மனத்திலிருந்து நீக்கித் தெளிவாக்குகிறது. முழுமை பெற்ற நலத்தையும் மன நிலையையும் தந்து நமக்குத் துணைபுரிகிறது. இவ்வாறு அறிவியல் ஆய்வாளர் கூறுவது எவ்வளவு உண்மை! நயனுடைய உலகப் பேரறிவாளர் திருவள்ளுவர் "இடுக்கண் வருங்கால் நகுக" என்று கூறும் மருத்துவத்தின் பெருமையைப் பெற்ற நாம் பெருமை கொண்டு அந்நெறி வாழ்ந்து இன்பமாய் வாழ வேண்டாவா? என்றும் புன்முறுவலுடன் வாழ வழி காட்டுகிறார் வள்ளுவர். கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பை எடுத்த பொற்பாதத்தார் என்றும் நமக்கு இன்பத்தை வழங்குவாராக.

* * *

# ஒலிபெயர்ப்பும் கலைச்சொல்லாக்கமும்

முனைவர் மா. சு. திருமலை

*1.* நம் நிலைமை இரண்டுங்கெட்டான் நிலைமை. நாம் அங்கேயும் இல்லை; இங்கேயும் இல்லை; இரண்டு ஸ்டூல்களில் காலுள்ளவன் விழுந்துதான் ஆகவேண்டும். நம் நிலைமை தன் வாலையே ஆப்பறைந்து கொண்ட குரங்கின் நிலைமை. அதுமட்டுமல்ல, தன் வாலையே பார்த்துப் பயந்ததாம் பாரதிதாசனின் குரங்கு. அதுவும்கூட நம் நிலைமைதான். தடவித்தடவித்தான் பார்க்க வேண்டியுள்ளது. தடவத் தடவக் கை என்னமோ ஏதோ என்று உணரக்கூட முடியாத அளவுக்கு மாறிக்கொண்டே போகிறோம். இருப்பினும் உள்ளத்தில் தைரியம் வருவது குருட்டுத்தனமாக அமையாமல் தெளிவின் அடிப்படையில் வரவேண்டும்.

*2.* ஒலிபெயர்ப்பு என்பது ஒலிபெயர்ப்பு என்ற அளவிலேயே பார்த்து முடித்து விடக் கூடியதன்று. ஏன், எதை, எப்படி என்ற கேள்விகளோடு, ஒலிபெயர்ப்பு என்பது அறிவியல் கற்பிப்பதின் நோக்கத்தோடும், முறையோடும், கற்போரின் குறிக்கோளோடும், கற்பிக்கும் வகுப்போடும் சேர்த்துக் காணப்படவேண்டிய ஒன்று. ஒலிபெயர்ப்பு இல்லாமலேயே நமக்கு வேண்டியதைச் சாதித்துவிட முடியாதா என்பதும் கவனிக்கப்பட வேண்டிய ஒன்று. இன்றைய எழுத்துத்தமிழின் போக்கும், பல்வேறு நடைநயங்களும், இன்று பேச்சைப் பேசும்போதும் எழுத்தை எழுதும்போதும், நாம் formal-non-formal என்றவாறு பேசும் எழுதும் முறைகளும் மிகவும் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டும்.

*3.* இன்று நாம் தமிழைப்பேசும்போது, எழுதப்படிக்கத் தெரிந்தவர்களாகிய நாம் தமிழைப் பேசும்போது ஆங்கிலச் சொற்களை விரவிப் பேசுவதுதான் பெரும்பாலோர் செய்வது. பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பொதுவிடங்களிலும் இதுவே நிலை என்றாகிவிட்டது. ஆங்கிலச் சொல் ஆங்கில உச்சரிப்பைப் பெரும்பாலும் கொண்டிருந்தால் பேசுவோரின் தரம் உயர்ந்ததாய்க் கணிக்கப்படுகிறது. ஆக, ஆங்கிலச் சொல் ஆங்கில ஒலியிலே இருப்பது நம் கொள்கை. இரண்டாம் நிலையில், ஆங்கிலச்சொல் தமிழ் எழுத்திலேயே எழுதப்பட்டாலும் ஆங்கில ஒலியிலேயே உச்சரிப்பது என்ற நிலையும் இப்போது மிகவும் சரளமாகிவிட்டது. அதாவது, எப்படி க என்ற எழுத்திற்கு இயல்பாகவே k என்ற ஒலியையும், g/h என்ற ஒலியையும் இடத்திற்குத் தக்கவாறு தமிழ்ச் சொல்லில் பயன்படுத்துகிறோமோ அதே போல பிறமொழிச் சொல் தமிழில் வழங்கும்போது பிறமொழி உச்சரிப்பில் சொல்வதும் இன்று இயல்பாகிவிட்டது. ஆனால் இந்தத்திறன் சொல்லிக் கொடுத்தாலொழிய, கற்றுக் கொண்டாலொழிய வராத திறன். போலச் செய்தல் என்ற அடிப்படையில் ஓரளவே பெற்றுக் கொள்ளக் கூடியதிறன்; கற்பிக்க வேண்டிய கட்டாயம் உண்டு. இது ஆங்கிலத்தைக் கற்பதாலும், வகுப்பறையிலும் பிறவிடங்களிலும் ஆசிரியர்/ஆராய்ச்சியாளர் ஆகியோர் பேசுவதைக் கவனித்துப் போலச் செய்வதாலும் ஏற்படுகிறது என்று சொல்லலாம்.

4. மேற் சொன்னதை மனதில் வைத்துக் கொண்டு பார்த்தால் எப்படி வேண்டுமானாலும் ஒலி பெயர்ப்புச் செய்யலாம் என்று தோன்றலாம். ஆனால் எப்படியானாலும் ஒலிபெயர்ப்புச் செய்யலாம் என்றால், விதவிதமான எழுத்துக் கூட்டல் முறைகள் தமிழுக்குள் வந்து, ஆங்கில முறை, ஜெர்மன் முறை என்று பலமுறைகளை நாமும் நம்மாணவர்களும் நம்மையறியாமலேயே கற்கவேண்டிய சுமை ஏற்படலாம். இப்போழுதே புதுப்புது எழுத்துக் கூட்டல் முறைகள் அவரவர் விருப்பத்திற்கேற்றவாறும், அவரவர் நடைக்காகவும் வந்து குளறுபடி செய்கின்றன. மொழி சமூகச் சொத்து. அதைத் தனிநபர்கள் ஓரளவுக்குத்தான் மனம்போன போக்கில் பயன்படுத்த முடியும். இவற்றைப்பற்றி பேச இங்கே இடமில்லை. என்றாலும், நாம் விதவிதமாய் எழுத்துக்கூட்டல் செய்து ஒலிபெயர்ப்பில் நம் சுதந்திரத்தைக் காட்டினாலும், ஒலிபெயர்ப்பு என்பது ஓரளவாவது ஆங்கிலச் சொல்லின்/மேலைநாட்டு மொழிச் சொல்லின் ஒலிக்கும், நாம் தமிழில் ஒலிபெயர்ப்புச் செய்யும்போது அமைகிற எழுத்துக் கூட்டலுக்கும் (ஸ்பெல்லிங்) தொடர்பு இருக்க வேண்டும். அத்தொடர்பே நம் மனதில் சொல்லுக்குரிய மூல உச்சரிப்பை, ஆங்கிலத்தில் அமைகிற உச்சரிப்பைக் கொண்டுவரும். அதாவது, என்கருத்துப்படி மூல உச்சரிப்பை மனதில் கொண்டுவருதல் ஒலிபெயர்ப்புச் செய்தலின் மிக முக்கியமான குறிக்கோள் ஆகும். இது பிற்காலக் கல்விக்கும், ஆராய்ச்சியாளரின் inter-personal communicationக்கும், ஆராய்சிக்குமே பெரிதும் பயன்படும் குறிக்கோளாகும். எப்படிப்பார்த்தாலும், ஓரளவாவது ஒற்றுமை என்பதை ஒத்துக் கொண்டால் முடிந்த அளவு ஒற்றுமை என்ற நிலையையும் ஒத்துக்கொள்வோம்.

5. முடிந்த அளவு ஒற்றுமை என்ற கருத்து நம் தமிழ்மொழியின் எழுத்துக் கூட்டலுக்கும், தமிழ் ஒலியனியலுக்கும் உட்பட்டு அமைவதா, அன்றி ஆங்கில நெறிக்கு உட்பட்டு அமைவதா என்பதையும் நாம் மனதில் கொள்ள வேண்டும். தமிழ் ஒலியனியலுக்கு உட்படுதல் என்றால் எந்தத் தமிழ் நடை ஒலியனியலுக்கு உட்படுதல் என்ற கருத்தையும் நாம் கவனிக்க வேண்டும். ஒரு மொழியின் எழுத்துக் கூட்டல் இன்னொரு மொழியின் சொல்லினுடைய உச்சரிப்பை முழுக்க முழுக்க வெளிக்கொணர்வது முடியாத காரியம். தமிழுக்கும் மலையாளத்திற்கும் இடையிலேயே இந்த த் தகராறு இருக்கும்போது, ஆங்கிலத்திற்கும் பிரெஞ்சிற்கும் இடையிலேயே இந்தத் தகராறு இருக்கும் போது, வெவ்வேறு குடும்பத்தைச் சேர்ந்த தமிழும் ஆங்கிலமும், வெவ்வேறு மொழிவரலாற்றையுடைய தமிழும் மேலை நாட்டு மொழிகளும் ஒலியை உச்சரிப்பதில் வேறுபட்டே அமையும். ஒரு மொழியின் எழுத்துக் கூட்டல் இன்னொரு மொழியின் உச்சரிப்பை முழுக்கக் கொண்டுவரமுடியாது. தமிழைப் பொறுத்தவரையில், ஆங்கிலக் கல்வி பின்புலத்தில் அமர்ந்துகொண்டே இருப்பதால் உச்சரிப்பில் ஓரளவு ஒற்றுமை வர ஏதுவுண்டு. ஆகவே தமிழ் ஒலியனியனுக்கு உட்பட்ட ஆங்கிலச் சொல்லுக்கான தமிழ் எழுத்துக் கூட்டல் பின்புலத்தில் அமைகிற ஆங்கிலக் கல்வியின் துணையால் பொருத்தமான உச்சரிப்பைப் பெற இடமுண்டு.

6. இனி எந்த எந்தக் கலைச்சொல்லுக்கு ஒலிபெயர்ப்பு வேண்டும் என்பதையும் நாம் மனதில் கொள்ள வேண்டியுள்ளது. Derivatioal processes க்கு உட்படும் கலைச் சொற்களை எந்த மட்டும் ஒலிபெயர்ப்பது என்பதையும் மனதில் கொள்ள வேண்டியுள்ளது. எல்லா Derivational Process க்கும் ஒலி பெயர்ப்புச் செய்வதா? அல்லது Derivational Processஐத் தமிழ்ப்படுத்திவிட்டு, அடிப்படைக் கலைச் சொல்லை மட்டும் ஒலிபெயர்ப்பு செய்வதா என்பதையும் நாம் மனதில் கொள்ளவேண்டியுள்ளது.

7. ஒலிபெயர்ப்பு என்பது எல்லாக் கலைச்சொல்லுக்கும் செய்யப்பட வேண்டியதில்லை. ஆங்கில மற்றும் ஐரோப்பிய மொழிகளில்கூட, ஒலிபெயர்ப்பு எல்லாக் கலைச்சொல்லுக்கும் செய்யப்படுவதில்லை. அந்த அந்த மொழியில் இயல்பாய் அமைந்த கலைச் சொல்லை அப்படியே வைத்துக் கொள்கிறார்கள். வேண்டிய இடத்தில் மொழிபெயர்ப்பையும்,

பிறமொழிச்சொல்லை அப்படியே ஏற்கின்ற இடத்தில் ஒலிபெயர்ப்பையும் பின்பற்றுவதைப் பார்க்கிறோம். ஆகவே, தமிழில் கூட மொழிபெயர்த்தால் நீண்டு போகும் என்றாலோ, கருத்துப்புலப்படுத்தம் தடைப்படும் என்றாலோ, தமிழ் எழுத்திலேயே இயல்பாக ஒலிக்கவும் எழுதவும் அப்பிறமொழிச் சொல்லைச் செய்யலாம் என்றாலோ, மேலும் இவை போன்ற காரணங்களாலோதான் மொழிபெயர்ப்பைவிட்டு ஒலி பெயர்ப்புக்குப் போவது நல்லது. மொழிப்பெயர்ப்புக்கும் ஒலி பெயர்ப்புக்கும் இடையே அமையும் தகுதி தகுதியின்மை பற்றி முன்கூட்டியே நாம் சிந்தித்துக் கொள்வது நல்லது.

*8.* மேலும் ஒலிபெயர்ப்புச்சொல் வகுப்பின் அடிப்படையிலும் பயன்படுத்தப்படலாம். முந்திய வகுப்புகளில் மொழிபெயர்ப்பும், பிந்திய வகுப்புகளில் ஒலிபெயர்ப்பும் என்பது ஒரு முறை. இன்னொரு முறை மொழிபெயர்ப்பும் ஒலிபெயர்ப்பும் ஒருங்கே தமிழ் எழுத்தில் தரப்படுவது. மற்றுமொரு முறை ஒலிபெயர்ப்புச் சொல் தமிழ் எழுத்திலும், மூலச் சொல் ஆங்கில எழுத்திலும் அமைவது. இம்முறைகளின் தகுதி தகுதியின்மை கற்போரின் குறிக்கோளைப் பொறுத்து அமையும். ஆராய்ச்சிபோன்றவற்றில் ஈடுபடப்போகிறவர்களுக்கு ஓரளவாவது மூலச் சொல்லுடன் தொடர்பு வேண்டும். மூலச்சொல் வரும் இடங்களில் அதன் கருத்தை உடன்புரிந்துகொண்டு, தத்தம் நிலையில் தமிழ்ச் சொல்லோடு பொருத்திப்பார்த்து, ஆராய்ச்சியில் மேலும் முன்னேறுகிற நிலையில் உதவவேண்டும். தமிழுக்குள்ளேயே ஆராய்பவர்களுக்கு இம் மூலச் சொல்லில் ஓரளவு அறிமுகம் இருந்தால் போதும்.

*9.* எப்படிப் பார்த்தாலும் அடிப்படைச்சொல், derivational சொல் என்று வேறுபடுத்திப் பார்ப்பது மிகவும் தேவை என்று தோன்றுகிறது . அறிவியல்மொழியைப் பொறுத்தவரையில் அடிப்படைச் சொல derivational சொல் என்பவை கருத்தின் அடிப்படையில் பெரும்பாலும் கணிக்கப்படவேண்டியவை; சொல்லின் உருவம் (form), சொல் எந்த இலக்கண இயல்பை கொண்டு இருக்கிறது என்ற அடிப்படைகளின் மீது கணிப்பு அமைவதில்லை. அடிப்படைக் கருத்து அடிப்படைச் சொல்; அடிப்படைக் கருத்தின் மாற்றங்கள், விரிவாக்கம், derivation. ஒன்றிரண்டு ஒட்டுகளால் இவ்விரிவாக்கங்கள் தரப்படமுடியும் என்பதால் இவ்விரிவாக்க ஒட்டுகளையே பயன்படுத்துவது நல்லது. அடிப்படைச் சொல் ஒலிபெயர்ப்பாகவும் ஒட்டுகள் தமிழாகவும் அமைதல் மேலும் கருத்தின் விரிவாக்கத்திற்கேற்றபடி சொல்லின் விரிவாக்கம் அமைய உதவும். இம்முறையைப்பல விடங்களின் பின்பற்றத்தவறி, முழுக்க முழுக்க வடமொழிச் சொல்லையும் ஒட்டையும் ஒலிபெயர்க்கிற பிற திராவிடமொழிகளில் விரிவாக்கம் பளு மிகுந்ததாக அமைந்துவிடுகிறது. அந்நிலையை நாம் தமிழில் தவிர்க்க முடியலாம்-மேற்சொன்ன அடிப்படைச் சொல் ஒலி பெயர்ப்பும் ஒட்டுகள் தமிழிலும் என்று தீர்மானித்துக் கொண்டால்.

*10.* இதுவரை நான் மேற்கூறிய கருத்துக்கள் எல்லாவற்றையும் தமிழ்ப்புலவர்கள் பண்டு-தொட்டுப் பயன்படுத்தியே வந்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் எல்லாரும் பிறமொழி எழுத்தொரீஇ ஒலிபெயர்ப்புச் செய்தனர். பிற மொழி எழுத்தையும் சேர்த்துக் கொண்டு, பண்டைய ஒலிபெயர்ப்பு, மொழிபெயர்ப்பு முறைகளையும் சேர்த்துக் கொண்டு, தமிழ் விவிலியநூல் பேச்சுத்தமிழ் கருத்துப்புலப்படுத்தத்தில் சிறந்து விளங்குகிறது. ஒரு சில இடங்களில் டகர ரகரச் சொற்களையும் லகரச் சொற்களையும் தமிழ்ப்படுத்தியும் தமிழோசைப்படுத்தியும் ஒலிபெயர்ப்புச் செய்தாலும், டகர ரகரங்கள் விடுதலை பெற்றுப் பயன்படுத்தப்படுகின்றன. லகரமும் விடுதலை பெறுகிறது. ஆயின் தமிழிலே இதுவரை பிறமொழித் தொடர்பிருந்தபோதும் மொழிக்கு முதலில் வராத ஒலிகளும் (அவற்றின் எழுத்துகளும்) வழங்குவதில் விடுதலை கொடுக்கப்பெறவில்லை. மொழிபெயர்த்தால் நீண்டுபோகும், பொருள் புரியாது போகும் என்றெல்லாம் உணரப்பெற்ற சொற்கள் ஈசோப்புத் தண்டு போன்றவை - பிறமொழியிலேயே அமைந்து தமிழில் தமிழ் எழுத்தால் மட்டும் கொடுக்கப்-படுகின்றன. எங்கெங்கே தமிழ் ஒலிக்கும் ஆங்கில ஒலிக்கும் முரண்வரும் என்று நினைக்கிற

இடங்களிலெல்லாம், விவிலிய மொழிபெயர்ப்பு வேறொரு மொழியில் தமிழ் ஒலிக்குப் பொருத்தமான ஒலியைக் கண்டு பிடித்துப் பயன்படுத்துகின்றது. ஆனால் ஆங்கிலமோகமோ யாக்கோபுவை ஜாக்கப்/ ஜேக்கப் என்றே தமிழிலும் எழுதத்தூண்டுகிறது, இன்று. கிரந்த எழுத்துக்களை விவிலிய நூல் பயன்படுத்திய போதிலும், எங்கெங்கே தமிழ் எழுத்துக்களாலேயே மூலஒலியைக் கொண்டுவரமுடியுமோ அங்கங்கே தமிழ் எழுத்துகளுக்கே முதன்மை தருகிறது. இவ்வாறு கவனமாக ஒலிபெயர்ப்புச் செய்ய வேண்டுமென்றால், தமிழ் ஒலியிலேயே பிறமொழி மூலச் சொல்லின் ஒலியையும் இணைத்துத்தர வேண்டுமென்றால், ஒலி பெயர்ப்புச் செய்கிறவர்களும் மொழிபெயர்ப்புச் செய்கிறவர்களும் வேறுவகையில் தங்களைத் தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டும். இது முடிகிற காரியமா? முடிகிற காரியமோ இல்லையோ, மொழி சமூகச் சொத்து என்று நினைப்பவர்கள் கட்டாயம் செய்து கொள்ள வேண்டிய செயல் இது.

*11.* தமிழ் ஒலியனியலுக்குத் தக்கவாறு தமிழ் நெடுங்கணககைத திருத்தம் செய்கிற எண்ணமும் பலருக்கு உண்டு. தமிழ் ஒலியனியலுக்குத் தக்கவாறு என்று சொல்வதை விட தமிழ் ஒலியியலுக்குத் தக்கவாறு என்றே இவர்களுடைய முயற்சியை வருணிக்க வேண்டும். என்னைப் பொறுத்தவரையில் அறிவியல் தமிழுக்காக எழுத்துச் சீர்திருத்தம் என்பது சரியான இயக்கம் அல்ல. நம் மொழியின் ஒலிகளுக்குள்ளேயே பிறமொழிச் சொற்களை எழுதுவதுதான் சரி என்று நான் கருதுகிறேன். இதற்கான காரணம் மேலே ஐந்தாம் பத்தியிலேயே வந்துவிட்டது.

*12.* ஒலி பெயர்ப்பு என்ற கருத்தை நாம் முதலில் விளக்கிக் கொள்ளவேண்டும். ஒலி பெயர்ப்பா, எழுத்துப் பெயர்ப்பா, நமக்கு வேண்டியது என்ன? ஒலிபெயர்ப்பு என்றால் என்ன பொருள்? **Translation** என்றால் பொதுவாக எழுத்துப் பெயர்ப்பைத்தான் குறிக்கிறோம். ஒருமொழியிலுள்ள எழுத்தை இன்னொரு மொழியிலுள்ள எழுத்துக்குப் பெயர்ப்பது **Translation.** இவ்வாறு பெயர்க்கும்போது ஒரு மொழியின் எழுத்து குறிக்கும் ஒலியையே இன்னொரு மொழியின் எழுத்து குறிக்கும்படியாக அமைக்க வேண்டும். எழுத்து மற்றும் ஒலிகள் இரண்டு வெவ்வேறு மொழிகளில் ஒரே இயல்பைக் கொண்டதாக அமைய இடம் இல்லை. ஆகவே எழுத்தைப் பெயர்க்கும்போது அது குறிக்கும் ஒலியை நிலைத்தபடி காக்க வேண்டுமானால் ஒரு சில எழுத்து மரபுகளையும் நாம் உண்டாக்க வேண்டியுள்ளது. இதைத் தமிழ்ச்சொற்களஞ்சியத்தில் **(Tamil Lexicon)** தெளிவாகக் காணலாம். இம்மரபுகள் அறிவியல் கலைச்சொல்லாக்க முயற்சிகளில் இன்னும் சரியாக அமைக்கப்படவில்லை -- அதாவது ஆங்கிலச் சொல்லையோ மேலை நாட்டுச் சொல்லையோ தமிழ் எழுத்தில் பெயர்க்கும் போது பின்பற்றப்படவேண்டிய மரபுகள் விரிவாக ஆராயப்படவில்லை. இருப்பினும், மரபுகள் உண்டு. எடுத்துக்காட்டாக, ஆங்கிலச் சொல்லைத் தமிழில் எழுதும் போது ணகரமும் ளகரமும் அதிக அளவு பயன்படுகின்றன. **Chlorine** என்ற சொல்லில் உள்ள லகரம் தமிழில் எழுதும்போது ளகரமாகிவிடுகிறது. இத்தகைய மரபுகளை நாம் மனதில் கொள்ள வேண்டும்.

சீனமொழியிலும் சப்பானிய மற்றும் கொரிய மொழிகளிலும் அமைந்துள்ள எழுத்துமுறையில் ஒவ்வோர் ஒலிக்கும் தனித்தனி எழுத்து கிடையாது. ஏன் இந்திய மொழிகளில் கூட அசைக்கு எழுத்து என்ற அடிப்படைவிதிதான் அதிக அளவு பயன்படுகிறது. அசைக்கு ஓர் எழுத்து அன்றி ஒரு கருத்துக்கு ஓர் எழுத்து என்ற மொழிகளிலிருந்து ஓர் எழுத்துக்கு ஓர் ஒலி என்ற மொழியில் ஒலி பெயர்ப்பு செய்வது சிரமமான காரியம். அதற்கென்று தனிமரபுகளோ, உத்திகளோ ஏற்படுத்தப்பட வேண்டும். பொதுவாக நாம் தமிழில் வழங்கும் அறிவியல் சொற்கள் ஓர் எழுத்து ஓர் ஒலி என்ற வழக்கில் இருக்கும் மொழிகளில் இருந்தே வருகின்றன. ஆகவே அவ்வளவு சிரமம் ஒலி பெயர்ப்பில் இல்லை. என்றாலும் நம் மொழியோ ஓர் அசைக்கு ஓர் ஒலி என்ற விதியைப் பெரும்பாலும் பின்பற்றுகிற மொழி. அகவே இங்கும் இருவேறு நிலைகளைப் பார்க்கிறோம்.

இன்னுமொருமுறை – ஒலிபெயர்க்காமல் மொழிபெயர்த்தல்; கருத்தைத் தருதல். சீன-மொழியில் கருத்துக்கு எழுத்து வடிவம் வருவதால் பழைய காலத்தில் தனிமனிதர்களின் பெயர்களைக்கூட ஒலிபெயர்க்காமல் மொழிபெயர்த்தே ஆங்கிலத்தில், மேலைநாட்டு மொழிகளில் எழுதினார்கள். பலவிடங்களில் தமிழ்மக்கள் பெயர்களைக் கூட ஒலிபெயர்க்காமல் மொழிபெயர்த்த மொழி பெயர்ப்பு நூல்களும் உண்டு.

இன்னுமொருமுறை பழங்காலத்து நூலைப் பழங்காலத்து எழுத்திலிருந்து புதிய காலத்து எழுத்திற்குப் பெயர்ப்பது. மற்றுமொருமுறை ஒலி/எழுத்துப் பெயர்ப்பு செய்தபின்,அந்தச் சொல்லுக்கு அருகிலேயே அதன்பொருளையும் மொழிபெயர்த்துத்தருவது. இதைப் பழைய ஏற்பாட்டில் அடிக்கடி காணலாம்.

நாம் ஒலிபெயர்ப்பு செய்ததை நாமே வாசிக்கும் போது நமக்குப் புரியாமல் போய்விடும்! இதையும் மனதில் கொண்டே ஒலிபெயர்ப்பும்/ எழுத்துப்பெயர்ப்பும் செய்ய வேண்டும். குறில்/நெடில் வேற்றுமை, இது போன்ற பிறவேற்றுமைகள் ஒலிபெயர்ப்பிலும் எழுத்துப் பெயர்ப்பிலும் தெளிவான மரபுகளைக் கொண்டிராவிட்டால், அம்மரபுகள் எளிதிலே புரிந்து கொள்ளும்படியாக அமையாவிட்டால், பயன்படாவிட்டால், ஒலிபெயர்ப்பும் எழுத்துப் பெயர்ப்பும் குழப்பத்தில்கொண்டு விட்டுவிடும். தமிழில் இருப்பதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அதன்பின் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்ததை மீண்டும் தமிழில் மொழிபெயர்க்கும் போது ஏற்படும் குழப்பமும் செய்தி இழப்பும் போன்ற செயல்கள் ஒலிபெயர்ப்பிலும் நிகழ இடமுண்டு. சீன மொழியில் உள்ள பெயர்களை ஆங்கிலத்தில் ஒலி பெயர்த்தபின் அதைச் சீனர்கள் மீண்டும் அடையாளம் கண்டு கொள்வது சிரமம் என்று 1861லேயே மாக்ஸ் முல்லர் கூறியுள்ளார். நாம் தினமும் புகைவண்டி நிலையங்களில், முன்பின் தெரியாத, கேள்விப்பட்டிராத புதியபெயர்களை வாசிக்கும் போது அடைகிற அனுபவம்தான் இது!

இன்னுமொன்றையும் மனதில் கொள்ள வேண்டும். ஒருசில சொற்களை ஒலிபெயர்ப்புச் செய்வதே முடியாத காரியமாகி விடலாம். வேறு சில சொற்கள் ஒலிபெயர்ப்புச் செய்தால் தன் உருவத்தை இழந்து விடலாம், அடையாளம் காண்பது கடினமாகிவிடும். இவற்றையும் நாம் மனதில் கொள்ள வேண்டும்.

13. ஒலி பெயர்ப்பிலும் மொழிபெயர்ப்பின் குணம் அமைய வேண்டும்-- மொழிபெயர்ப்பு என்றால் **to change into another language retaining the sense.** ஒலிபெயர்ப்பு என்றால் ஒரு மொழியின் எழுத்தில் இருந்து இன்னொரு மொழியின் எழுத்துக்கு மாறவேண்டும்– **retaining the sense as well as sound** ஆக, மொழிபெயர்ப்பைவிட ஒலிபெயர்ப்பு இன்னொரு படியையும் கொண்டிருக்கிறது என்பதை நாம் மறந்து விடக்கூடாது. (இன்னொரு படியையும் கொண்டிருப்பதாலே மொழிபெயர்ப்பை விட ஒலிபெயர்ப்பு கடினமான வேலை என்று நாம் சொல்ல முடியாது.) இரண்டும் வெவ்வேறு குறிக்கோள்களை உடையன. இருப்பினும் ஒலியையும் கருத்தையும் விடாது ஒலிபெயர்ப்பதற்குத் தனித்திறன் வேண்டும்.

ஒரு காலத்தில் **Translation** என்ற சொல்லுக்குப் பெயர்ப்பு என்ற பொருளே அதிக அளவு வழக்கில் இருந்தது. மொழிபெயர்ப்பு என்ற பொருள் பெயர்ப்பு என்ற தலைப்பின்கீழ் அடங்கிப் பயன்பட்டது. **Translate, Translation** என்ற சொற்கள் ஓரிடத்தில் இருந்து இன்னோர் இடத்திற்கு ஒரு பொருளையோ மனிதனையோ விலங்குகளையோ பெயர்த்துக் கொண்டு வைப்பதற்கே பெரும்பாலும் பயன்பட்டது. இதோ, கீழ்க்கண்ட பொருள்களைப் பாருங்கள்:

1. **To transfer, transport, especially to remove a bishop form one see to another or a bishop's seat from one place to another.**

2. To remove a dead body, or remains of a said, or by extension, a hero or great man, from one place to another.

3. To carry or convey to heaven without death

4. To remove the seat of a disease from one person, or part of the body, to another.

5. Physics: To remove a body from one point or place to another without rotation.

அதாவது, translation என்ற சொல்லுக்குப் பல பொருள்கள் தொடக்க காலத்தில இருந்தே வந்திருக்கின்றன. ஆனால் இப்பொருள்கள் எல்லாவற்றிலும் Transliteration ஒரு கூறாகவே அமையவில்லை. இதற்கு என்ன காரணம் என்று தெரியவில்லை. ஊகங்கள் கூறலாம். இங்கே இடம் இல்லை என்பதால் விட்டு விடுகிறேன். இருப்பினும் மொழிபெயர்ப்பு, ஒலிபெயர்ப்பு, எழுத்துப்பெயர்ப்பு இவை மூன்றையும் அவற்றின் இயல்பு கருதி தனித்தனியாக நாம் பார்க்க வேண்டும். Transliteration முழுக்க முழுக்க ஒரு மொழியைச் சார்ந்த எழுத்தையும் ஒலியையும் சுற்றி அமைய Translation என்பது பிற செய்திகளையும பற்றி அமைகிறது. இச்செய்திகள் செய்திப் பரிமாற்றச் செய்கைகளாகவும் இருக்கலாம். செய்திப் பரிமாற்றத்திற்குத் தொடர்பில்லாதவைகளாகவும் அமையலாம். Translation என்பது interpretation of a conduct in lingustic as well as nonverbal means என்பதற்கும் பயன்படுகிறது:

(அ) The rogue had a trick of translating out of the shops as well as the language (Fielding 1731).

(ஆ) Can You translate your words into action?

இத்தகைய இயல்புகளும் பணிகளும் ஒலிபெயர்ப்புக்கோ எழுத்துப் பெயர்ப்புக்கோ இல்லை.

என்னுடைய முந்திய நூல் ஒன்றில் ஒலிபெயர்ப்பையும் எழுத்துப்பெயர்ப்பையும் வேறுபடுத்திக் காட்டியிள்ளேன் (M.S. Thirumalai 1979: Language in Science,, Geetha Book House, Mysore):

Transcription : ஒலிபெயர்ப்பு

This denotes rendering the sounds of a source language into a target language form. Except in the case of Tamil whose script has no(Justifiably so) provision for voiced and aspirated stops, transcription from one major Indian language into another is relatively easier as scripts of there major Indian languages have more or less the same organization. The phonetic quality could be tremendously different, however.

Transliteration : எழுத்துப்பெயர்ப்பு

It is the process of rendering the letters of one adphabet in the letters of another with a different alphebetical system. No transliteration is needed among languages sharing the same alphabet such as German and English ....... In some cases rendering a name may entail both transliteration and transcription.

நம்முடைய அறிவியல் தமிழிலும் இவ்விரண்டையும் வேறுபடுத்திக் காணவேண்டும். வேறுபடுத்திக் காண்பதோடு இரண்டையும் ஒரு சொல்லிலேயே பயன்படுத்துகிற தன்மையையும் அனுமதித்தாக வேண்டும். ஒலியும் எழுத்தும் குறைந்திருந்த போதிலும் தமிழ்நெடுங்கணக்கும் தமிழ் மொழியும் திறன் வாய்ந்த கருவிகளே. திறன் வாய்ந்த கருவிகளாக அமைவதற்குக் காரணம் தமிழ்மொழியின் மரபுக்குள்ளேயே விதவிதமான உத்திகள் புதைந்து கிடக்கின்றன. அவ்வாறு புதைந்துள்ளவற்றில் ஒரு சிலவற்றை முன்பே குறித்தேன். மேலும் பலவற்றை இங்கே காட்ட இடமில்லை. ஒன்றை மட்டும் மனதில் கொள்ள வேண்டும் -மொழியை வளர்த்தலும், அறிவை வளர்த்தலும், அறிவியலைப் புரிந்து கொண்டு தமதாக்கிக் கொள்ளுதலும் எளிமைப் படுத்தப்படலாம், ஆனால் அவை கடின உழைப்பில்லாமல் எளிமைப்படுத்தப் படமுடியா. இங்கேதான் தன் வாலையே கண்டு பயந்த குரங்கு மீண்டும் மீண்டும் நினைவுக்கு வருகிறது.

* * *

# வளரும்! வாழும்!

கவிஞர் கடலூர் மணிமாறன்

புதுச்சேரி மண்ணுக்குப் பெருமை சேர்த்த
புரட்சிப்பா வேந்தன் நீ! மக்கள் நெஞ்சில்
புதுமைகளை விதைத்தவன்நீ! இளையோர் மாட்டுப்
புத்துணர்வை ஊட்டிவந்த புலவன் நீயே!
மதியிலியாய் மனம்போன போக்கில் வாழ்ந்த
மாந்தருக்கு மனவெழுச்சி தந்த வன்நீ!
விதியனைத்தும் சதியென்று விளக்கி மக்கள்
விழிப்புக்குப் புதுவிடியல் வகுத்த வன்நீ!

செந்தமிழை உயிரென்றாய்! நாளும் உன்றன்
செயல்மூச்சை உவந்தளித்தாய்! தமிழர் வாழ்வில்
நொந்தழிந்த நிலைமாற்றும் எண்ணங் கொண்டு
நுட்பமுடன் வழியுரைத்தாய்! தமிழி னத்தின்
வெந்துயரை மாற்றுதற்கு வெகுண்டெ ழுந்தாய்!
வெள்ளம்போல் பாடல்களைப் பாய விட்டாய்!
"வந்தார்க்கோ நாமடிமை?" என்று கேட்டு
வளமான சிந்தனையின் 'உரைகல்' ஆனாய்!

சாதிமதச் சழக்குகளைக் கடிந்தாய்; நாட்டின்
சாத்திரமும் கோத்திரமும் ஆகா தென்றாய்,
நீதிநெறி நேர்மையெலாம் தழைக்க வேண்டி
நெருப்புவரிப் பாட்டெழுதி நெஞ்சில் நின்றாய்!
தீதியற்றிப் பிழைத்தோரைச் சுரண்டி வாழும்
தேர்ச்சியினைப் பெற்றவரைச் சாடி வந்தாய்!
மாதரின எழுச்சிக்கே முரசம் ஆர்த்த
மறவன்நீ! பாரதியின் இளவல் நீயே!

காப்பியங்கள் கதைப்பாடல் தொகுதி யாவும்
காலத்தால் அழியாமல் நிலைக்கச் செய்தாய்!
மூப்பறியாத் தமிழுக்கு வளங்கள் சேர்க்க
முனைப்புடனே குரல்கொடுத்தாய்; எளியோர் வாழ்வை
ஏப்பமிடத் துடித்தோரை எதிரி யாக
எண்ணிவந்தாய்! இரண்டகத்தை வீழச் செய்தாய்!
காப்புறுதி நீதந்தாய்! தமிழர் வாழ்வைக்
கரைசேர்க்கும் கலங்கரையின் விளக்கம் ஆனாய்!

இருட்டறையில் கிடந்துழலும் உலகத் தாரின்
இழிவுகளைத் துடைப்பதற்கே துடித்தாய்! நாளும்
புரட்டுகளை, பொய்மைகளை நடப்புக் கொவ்வாப்
புளுகுகளை அம்பலத்தில் ஏற்றி விட்டாய்!
உருட்டலுக்கும் மிரட்டலுக்கும் அஞ்சிச் சாகும்
ஊமைகளும் ஆமைகளும் உணர்ச்சி கொள்ளப்
புரட்சியெனும் கலைதந்தாய்! ஏழை யர்பால்
பொதிகைமலைத் தென்றலெனக் கனிவு கொண்டாய்!

போற்றும்அழ கின்சிரிப்பைப் புனைந்தாய்! ஞாலம்
புகழ்குறிஞ்சித் திட்டளித்துப் "பரிசும்" தந்தாய்!
ஏற்றமிகு குடும்பத்தின் மாண்பைக் காட்ட
எழிற்குடும்ப விளக்கினை நீ தந்தாய்! நாட்டின்
தூற்றலுக்கே இலக்கான இருண்ட வீட்டைத்
துல்லியமாய்ப் படைத்தவன்நீ! நன்மை யோங்கும்
மாற்றத்தை மறுமலர்ச்சி தன்னை நாளும்
மகிழ்ச்சியுடன் வரவேற்றாய்! மதிப்புப் பெற்றாய்!

அறம்சொன்னாய்; அறியாமை இருளைப் போக்கும்
அறிவொளியைக் கைகளிலே ஏந்திக் கொள்ளும்
திறம்சொன்னாய்! தீந்தமிழர் வாழ்வை மாய்க்கும்
தீமைகளைச் சுட்டெரிக்கும் திண்மை தந்தாய்!
புறம்தந்த வீரத்தைப் புதுக்கி விட்டே
போராட்ட உணர்வுகளைப் பட்டை தீட்டி
உரம்தந்தாய்! ஒண்டமிழர் உயர்வுற் றோங்கும்
ஒளிதந்தாய்! வழிதந்தாய்! உண்மை தந்தாய்!

குயிலாகக் கூவிவந்தாய்! சிலநே ரத்தில்
குமுறுகின்ற எரிமலையாய்க் கனன்றாய்; ஆற்றல்
புயலாகத் திகழ்ந்தாய்நீ! பழமைப் போக்கைப்
பூண்டோடு பொசுக்குகின்ற தீயாய் ஆனாய்!
உயர்தமிழ்க்குக் கேடுசெய்வோர் எவரா னாலும்
ஒழிப்பேனென் றரிமாவாய் முழங்கி வந்தாய்!
அயர்வின்றித் தளர்வின்றி மயக்கம் இன்றி
அறிவியக்கப் பாசறையின் கருத்தைச் சொன்னாய்!

எக்கணமும் இந்தியிங்கே நுழைதல் கூடா;
எந்தமிழே அரசோச்ச வேண்டும் என்றாய்!
முக்கழகத் தொட்டிலிலே தவழ்ந்த சேயாம்
முத்தமிழைக் காப்பதுவே கடமை யென்றாய்!
நக்கீரர் போலிங்கே கொடுமை காணின்
நறுக்கென்றே இடித்துரைத்தாய்! எந்நே ரத்தும்
வக்கணைகள் சொல்லுவதைத் தொழிலாய்க் கொண்டோர்
வாயடங்க வன்மைமிகு மறுப்பைத் தந்தாய்!

புதையலெனும் பனுவல்களைப் படைத்த நீயோ
புலவருக்கும் புலவரெனத் திகழ்ந்த துண்மை!
விதைநெல்லாய் இருந்தவன்நீ! நம்மி னத்தின்
வெற்றிக்கே முழுமூச்சாய் உழைத்தாய்! வாழ்வில்
பதைப்போரும் பழிப்போரும் விளக்கம் கொள்ளப்
பகுத்தறிவுச் சுடர் தந்தாய்! தமிழ்ப்பண் பாட்டைச்
சிதைப்போரைச் சினந்தவன் நீ! பன்னூ றாண்டு
சிதையாமல் நின்புகழோ வளரும்! வாழும்!

* * *

# தமிழக அரசின் சத்துணவுத் திட்டத்தின் முக்கியத்துவம் _ ஓர் ஆய்வுக் கண்ணோட்டம்.

முனைவர் ஜே. கே. பிள்ளை

நம் நாட்டில் கட்டாயக் கல்விச் சட்டம் அமலாக்கப்பட்ட நிலையிலும் பள்ளி வயதுக் குழந்தைகள் அனைவரும் பள்ளியில் சேராமைக்கு முக்கிய காரணம் வறுமை நிலை என்பது அனைவரும் அறிந்த உண்மை. பள்ளிகளில் ஏழைக் குழந்தைகளின் வருகையை அதிகரிப்பதற்காகவும் அவர்களின் தேக்கம், வியர்த்தம் (stagnation & Wastage) இவற்றைக் குறைப்பதற்காகவும் இலவசப் பாடப்புத்தகங்கள். சீருடைகள் வழங்கும் திட்டம், மதிய உணவுத் திட்டம் போன்ற பல திட்டங்கள் நடைமுறைப் படுத்தப்பட்டுள்ளன. ஏழைக்குழந்தைகளின் பசிப்பிணியைப் போக்கி அவர்களின் கவனத்தைப் படிப்பிற்குத் திருப்புவதற்காகக் கொண்டு வரப்பட்ட மதிய உணவுத் திட்டம், சென்னையில் முதன் முறையாக திரு. தியாகராயர் அவர்களால் 1925ஆம் ஆண்டு துவங்கப்பட்டது. பலமுறை திருத்தி அமைக்கப்பட்டுப் பல்வேறு விதமாக செயல்பட்டு வந்த சத்துணவுத் திட்டங்கள் அனைத்தையும் ஒருங்கிணைத்து 1.7.1982 அன்று தமிழக அரசு கீழ்க்கண்ட நோக்கங்களுடன் புதிய சத்துணவுத் திட்டத்தை நடைமுறைப்படுத்தியது.

### சத்துணவுத் திட்டத்தின் நோக்கங்கள்:

1. குழந்தைகளுக்குத் தேவையான ஊட்டச் சத்தில் மூன்றில் ஒரு பங்கை அளித்து அவர்களின் ஆரோக்கியம், உடல் வளர்ச்சி, கற்கும் திறன் இவற்றை வளர்த்தல்.
2. குழந்தைகளைப் பள்ளி செல்ல ஊக்குவித்தல், பள்ளியில் மாணவர் வருகையை அதிகரித்தல்.
3. குழந்தைகளின் மத்தியில் சமூகப் பழக்கவழக்கங்களை வளர்த்தல்; பலதரப்பட்ட ஜாதி வேறுபாட்டு எண்ணங்களைக் களைதல்.
4. மாணவர்களிடையே நல்ல உணவுப் பழக்கத்தையும், உடல் சுத்தம், சுற்றுப்புறச் சுத்தம் இவற்றின் அவசியத்தை அவர்கள் அறியும்படி செய்தல்.
5. குழந்தைகளுக்கும், பெற்றோர்களுக்கும், சமுதாயத்தினருக்கும் நலவாழ்வு, சத்துணவு இவை பற்றிய கல்வியறிவை வழங்குதல்.

6. வறுமைக்கோட்டிற்குக் கீழ் வாழும் மகளிர்க்கு வேலை வாய்ப்பு அளித்தல்.

7. ஏழைகள் மத்தியில் படிப்படியாக சமூக பொருளாதார மாற்றத்தைக் கொண்டு வருதல்.

## ஆய்வின் முக்கியத்துவம் :

சத்துணவுத் திட்டம் பொதுமக்களுக்குப் பலவகையிலும் உதவியுள்ளது. ஏழைப் பெண்கள் வேலைவாய்ப்புப் பெற்றுள்ளனர். பள்ளிகளில் மாணவர்களின் வருகை அதிகரித்து, கல்வித் தரத்தை உயர்த்தி உடல் ஆரோக்கியத்தை மேம்படச் செய்துள்ளது. பள்ளிப் படிப்பை இடையில் நிறுத்தும் மாணவர்களின் எண்ணிக்கையைக் குறைக்க வழிவகை செய்துள்ளது. ஆனால் இத்திட்டத்தின் விளைவுகளை மதிப்பீடு செய்வதற்கான ஏற்பாடுகள் ஏதும் நிர்ணயிக்கப்படவில்லை. எனவே இத்திட்டத்தினால் பயன் பெறும் மாணவர்களின் சேர்க்கை, வருகை, கல்விச் சாதனை இவற்றில் ஏற்பட்டுள்ள மாற்றங்களைக் கண்டறியும் நோக்குடன்"சத்துணவுத் திட்டத்தின் முக்கியத்துவம்" என்ற ஓர் ஆய்வினை நடத்தினோம்.

## ஆய்வின் முக்கிய நோக்கங்கள்:

1. இத்திட்டத்தின் மூலம் பயன் பெறும் பெரும்பான்மையோர் யார்?

2. இத்திட்டத்தினால் பின் தங்கிய நிலையிலுள்ளோர் பயனடைகிறார்களா?

3. இத்திட்டம் மாணவர்களின் சேர்க்கை, வருகை, கல்விச் சாதனை (**enrichment, attendance and achievement**) இவற்றில் மாறுதல்களை ஏற்படுத்தியுள்ளதா?

4. இத்திட்டம் ஆதிவாசிகள்/பழங்குடி வகுப்பினைச் சேர்ந்த (**SC/ST**) மாணவ/மாணவிகளின் சேர்க்கை, வருகை, கல்விச் சாதனை இவற்றில் ஏதாவது மாற்றங்களை ஏற்படுத்தியிருக்கிறதா?

5. இத்திட்டத்தைச் செயல்படுத்துவதில் பணியாளர்களுக்குள்ள இடர்ப் பாடுகள் யாவை?

## ஆய்வு நடத்தப்பட்ட முறை :

இந்த ஆய்வு 1987 முதல் 1990 முடிய 3 ஆண்டுகள் தொடர்ச்சியாக மேற்கொள்ளப்பட்டது. ஆய்விற்காக மதுரை வருவாய் மாவட்டம் தேர்வு செய்யப்பட்டது. மதுரை வருவாய் மாவட்டத்தில் மதுரை, மேலூர், பெரியகுளம், உசிலம்பட்டி ஆகிய நான்கு கல்வி மாவட்டங்கள் அடங்கியுள்ளன.

மேற்கூறிய கல்வி மாவட்டங்களில் மொத்தம் 27 சரகங்கள் உள்ளன. இந்த சரகங்கள் கல்வித்தரத்தில் மேம்பட்டவை, பின்தங்கியவை, பொருளாதாரத்தில் மேம்பட்டவை, பின்தங்கியவை, ஆதிவாசிகள் மிகுதியாகக் காணப்படும் சரகங்கள் என்று இந்த ஆய்விற்காக வகைப்படுத்தப்பட்டன. மதுரை வருவாய் மாவட்டத்தில் மொத்தம் 1655 சத்துணவு மையங்கள் செயல்பட்டு வருகின்றன. இவற்றில் 440 மையங்கள் ஆய்விற்காகத் தேர்வு செய்யப்பட்டன. தேர்ந்தெடுக்கப்பட்ட மையங்களுள் 56 மையங்கள் நகர்ப்புறத்தைச் சேர்ந்தவை. 384 மையங்கள்

கிராமப்புறத்தில் செயல்படுபவை.

ஆய்விற்காகத் தேர்வு செய்யப்பட்ட மையங்களின் பட்டியல்

| மதுரை வருவாய் மாவட்டம் | கல்வி மாவட்டம் | சரகம் | சத்துணவு மையங்களின் எண்ணிக்கை | தேர்வு செய்யப்பட்ட மையங்கள் | நகர்ப் புறம் | கிராமப் புறம் |
|---|---|---|---|---|---|---|
| | மதுரை | 5 | 308 | 100 | 20 | 80 |
| | மேலூர் | 4 | 378 | 100 | 12 | 88 |
| | உசிலம்பட்டி | 6 | 512 | 120 | 12 | 108 |
| | பெரியகுளம் | 12 | 457 | 120 | 12 | 108 |

தேர்வு செய்யப்பட்ட பள்ளிகளில் மாணவர்களின் சேர்க்கை, வருகைச் சதவீதம் போன்ற விபரங்கள் பள்ளிப் பதிவேடுகளிலிருந்து சேகரிக்கப்பட்டன. மாணவர்களின் கல்விச் சாதனையை அளவிடுவதற்குத் தகுந்த தேர்வுகள் நடத்தப்பட்டன. பள்ளி நிர்வாகிகள், ஆசிரியர்கள், பொதுமக்கள், பெற்றோர்கள், சத்துணவு அமைப்பாளர்கள் இவர்களின் கருத்துக்கள் தகுந்த படிவங்களில் பெறப்பட்டன. சத்துணவுத் திட்டத்தினால் பயன்படும் மாணவர்களின் சமூகப்பொருளாதார நிலை, உடல் ஆரோக்கியம் பற்றிய புள்ளி விவரங்களும் சேகரிக்கப்பட்டன. சேகரிக்கப்பட்ட புள்ளி விவரங்களைப் பட்டியல்படுத்தி ஆராய்ந்த போது கீழ்க்கண்ட உண்மைகள் கண்டுபிடிக்கப்பட்டன.

## ஆய்வின் மூலம் கண்டறிந்த உண்மைகள்:

1. ஆய்வின் மூலம் அறியப்பட்ட முக்கியமான கண்டுபிடிப்பு என்னவென்றால் கல்வியின் தரத்தில் மேன்மை பெற்றுள்ள பகுதிகள், பொருளாதாரத்திலும் மேன்மை பெற்று காணப்படுகின்றன. மேலும் இப்பகுதியில் வாழும் மக்களில் பெரும்பான்மையினர் உயர்ந்த வகுப்பினைச் சார்ந்தவர்கள். ஆதிவாசிகள் மற்றும் பழங்குடியினர் மிகுதியாக வாழும் கல்விச் சரகங்கள் பொருளாதாரத்திலும், கல்வித் தரத்திலும் பின்தங்கிய நிலையில் காணப்படுகின்றன.

2. 1982இல் சத்துணவுத் திட்டம் நடைமுறைக்கு வந்ததிலிருந்து மதுரை மாவட்டத்திலுள்ள பள்ளிகளில் மாணவர் சேர்க்கையில் வியக்கத்தக்க உயர்வும், ஒழுங்கான வருகைப் பதிவும் காணப்படுகிறது. 5 முதல் 14 வயது குழந்தைகளின் சேர்க்கையும், வருகையும் அதிகரித்துள்ளன. 1990ஆம் ஆண்டிற்குள் 5 முதல் 14 வயதிற்குட்பட்ட கிராமப்புற மாணவர்களில் 95 சதவீதத்தினர் பள்ளியில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள்.

3. சிறுவர்களைப் போல் சிறுமியர்களிடையேயும் பிறஇனத்தினரைப் போல ஆதிவாசிகள் பழங்குடியினரிடையேயும் சேர்க்கை வருகையில் இதே நிலை காணப்பட்டது.

4. பள்ளியைவிட்டு இடையில் நீங்கும் குழந்தைகளின் எண்ணிக்கையில் குறைவு

ஏற்பட்டுள்ளது. ஆனால் பள்ளியை விட்டு இடையில் நீங்கும் குழந்தைகளின் எண்ணிக்கையில் 60 சதவீதத்தினர் ஆதி திராவிடர், பழங்குடியினர் என்பதும் கண்டுபிடிக்கப்பட்டது.

5. கடந்த 3 ஆண்டுகளில் குழந்தைகளின் கல்விச் சாதனையை ஆராய்ந்த போது 5ஆம் வகுப்பு படிக்கும் மாணவர் 8ஆம் வகுப்பு மாணவரைவிட சிறந்து விளங்குகின்றனர். சிறுமியரை விட சிறுவர்களின் கல்விச் சாதனை சிறப்பாகக் காணப்பட்டது. பல்வேறு இனத்தைச் சேர்ந்த மாணவர்களின் கல்விச் சாதனையை ஒப்பிட்டுப்பார்த்த போது உயர்ந்த வகுப்பினைச் சேர்ந்த மாணவர்கள் முதலிடத்தையும், பிற்பட்ட வகுப்பினைச் சார்ந்த மாணவர்கள் இரண்டாம் இடத்தையும். தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியினைச் சேர்ந்த மாணவர்கள் கடைசி இடத்தையும் பெறுகின்றனர். மேலும் கல்வியிலும் பொருளாதாரத்திலும் உயர்ந்து விளங்கும் பகுதிகளைச் சேர்ந்த மாணவர்கள் கல்விச் சாதனையில் முதலிடத்தையும் பின்தங்கிய பகுதிகளைச் சேர்ந்த, தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியினர் அதிகம் வாழும் பகுதியினைச் சேர்ந்த மாணவர்கள் கடைசி இடத்தையும் பெறுகின்றனர்.

6. நிர்வாகத்தினர், ஆசிரியர்கள், பொதுமக்கள், பெற்றோர், மாணவர்கள் ஆகியோரில் 80 சதவிகிதத்தினரின் கருத்து என்னவெனில் இத்திட்டம் எல்லாக் குழந்தைகளுக்கும் குறிப்பாக கிராமப் பகுதியில் வாழும் பிற்படுத்தப்பட்ட குழந்தைகளுக்கு ஊக்கம் தருவதாக உள்ளது என்பதாகும். கிராமங்களில் 95சதவிகிதக் குழந்தைகள் பள்ளிக்குச் செல்லத் தொடங்கியுள்ள-தாகவும், ஒழுங்காக பள்ளிக்குச் செல்வதாகவும், நல்ல பழக்க வழக்கங்களை மேற்கொள்வதாகவும் மேற் குறிப்பிட்ட அனைவரும் கருதுகிறார்கள். ஆசிரியர்கள் சிறப்பாகக் கற்பித்தலையும். தலைமை ஆசிரியர்கள் வருகைப் பதிவைச் சரிவர பராமரித்தலையும் மேற்கொண்டால் இத்திட்டத்தில் சிறப்பான பலனை எதிர் நோக்கலாம் என கருத்துக் கூறியவர்கள் 24 சதவிகிதத்தினர்.

7. திட்டத்தைச் செயல்படுத்துவர்களில் 80சதவிகிதத்தினர் உணவுப் பண்டங்கள், தேவையான பொருட்கள் ஆகியவற்றின் அளவிலும், தரத்திலும் மற்றும் சமையலறை வசதி, கிடங்கு வசதி ஆகியவற்றிலும் திருப்தி தெரிவித்துள்ளனர். ஆனால் பணியின் நிலை, குறிப்பாக ஊதியம் மற்றும் விடுப்பு வசதி ஆகியவை குறித்து அதிருப்தி தெரிவித்துள்ளனர்.

8. சத்துணவு உண்ணும் குழந்தைகள் பொது உடல் நலத்திலும் எடை உயரம், போன்றவற்றிலும் சராசரி அளவையும் அதற்கு மேற்பட்டும் உள்ளனர். ஆனால் அதே பகுதியைச் சார்ந்த சத்துணவு உண்ணாத குழந்தைகள் அதாவது பள்ளிக்குச் செல்லாத குழந்தைகள் உடல் நலத்தில் சராசரிக்குக் கீழ் உள்ளனர்.

## ஆய்வினைப் பற்றி ஆராய்ச்சியாளரின் கருத்துகள்:

ஆய்விற்காகச் சேகரிக்கப்பட்ட புள்ளி விவரங்களில் மாணவர்களின் கல்விச் சாதனை பற்றிய விவரங்கள் மட்டுமே நம்பத் தகுந்தவை. ஏனென்றால் அவை ஆராய்ச்சியாளர் நேரடியாக நடத்திய தேர்வுகளின் முடிவுகளாகும். மாணவர்களின் சேர்க்கை, வருகை பற்றிய விவரங்கள் பள்ளிப் பதிவேடுகளில் சற்று அதிகமாகவே காண்பிக்கப்பட்டுள்ளது என்பது ஆராய்ச்சி-யாளரின் கணிப்பு. ஆய்விற்காக தேர்வு செய்யப்பட்ட கிராமப்புறப் பள்ளிகளில் 25சதவீத மாணவர்கள் மதிய உணவு சாப்பிட்டபின் பிற்பகல் பள்ளியில் தங்குவதில்லை. ஆசிரியர்களும் அதை வலியுறுத்துவதில்லை. இத்தகைய மாணவர்களின் ஒழுங்கற்ற வருகை ஆராய்ச்சியாளரின் நேரடி பார்வையின் போது பல பள்ளிகளில் கண்டுபிடிக்கப்பட்டன.

மேலும் சத்துணவுத் திட்டத்திற்காக வழங்கப்படும் உணவுப் பண்டங்கள் தவறுதலாகப் பயன்படுத்தப்பட்டதாகப் புகார்கள் கிடைத்தன. சில சமயம் மையங்களுக்குக் குறிப்பிட்டுள்ள

அளவை விட குறைந்த அளவில் உணவுப் பண்டங்கள் விநியோகிக்கப்படுவதாகவும் தகவல்கள் கிடைத்தன.

சில கிராமப்புறப் பள்ளிகளில் குழந்தைகளுக்குத் தேவையான அளவு காய்கறிகள் மதிய உணவில் வழங்கப்படுவதில்லை. மேலும் சில பள்ளிகளில் மாணவர்கள் விறகு பொறுக்குவதற்காக அனுப்பப்படுகிறார்கள். மையங்களுக்கு வழங்கப்படும் விறகின் அளவு போதுமானதாக இல்லாததால் மாணவர்கள் விறகு சேகரிக்க அனுப்பப்படுவதாகக் காரணம் கூறப்பட்டது.

மாணவர்கள் தவறாமல் பள்ளிக்கு வருவதற்காகவும், சிறப்பாகக் கல்வி கற்பதற்காகவும், அரசு பல திட்டங்களை அமல்படுத்தியுள்ள நிலையிலும் பள்ளிகளில் மாணவர்கள் சேர்க்கை, வருகை பற்றிய விவரங்கள் தவறாகப் பதிவு செய்யப்படுகின்றன என்பது பொது மக்களால் அடிக்கடி கூறப்படும் புகாராக உள்ளது. அரசிடமிருந்து அதிக அளவில் உணவுப் பண்டங்களைப் பெறுவதற்காகவும் பள்ளிகளில் நியமனம் செய்யப்பட்டுள்ள ஆசிரியர்கள்; சத்துணவுப் பணியாளர்கள் இவர்களின் பதவிகளைத் தக்க வைத்துக் கொள்வதற்காகவும் மேற் குறிப்பிட்டுள்ள தவறுகள் நடைபெறுவதாக ஆராய்ச்சியில் கண்டறியப்பட்டது.

கல்வித் தரத்திலும், பொருளாதாரத்திலும் மேம்பட்ட நகர்ப்புறக் கல்வி மாவட்டங்களில் உள்ள பள்ளிகளில் மாணவர்கள் வருகையைச் சீர்படுத்த கண்டிப்பான விதிமுறைகள் வகுக்கப்பட்டுள்ளன. ஆசிரியர்கள் நேர்மையுடன் பணியாற்றுகிறார்கள். தலைமை ஆசிரியர்கள் சிறந்த முறையில் பள்ளி நிர்வாகத்தை நடத்துகிறார்கள். எனவே இப்பள்ளிகளில் மாணவர்களின் கல்விச் சாதனையும் சிறப்பாக உள்ளது. இப்பள்ளிகளில் பராமரிக்கப்படும் பதிவேடுகளும் நம்பத் தகுந்தவை என்பது ஆராய்ச்சியின் போது கண்டுபிடிக்கப்பட்ட உண்மை. மதுரை வடக்கு, மதுரை தெற்கு, திருப்பரங்குன்றம், மேலூர் ஆகிய கல்விச் சரகங்களில் உள்ள பள்ளிகளும் பெரியகுளம் நகராட்சியை சேர்ந்த பள்ளிகளும் மேற்கூறியவாறு சிறந்த முறையில் செயல்படும் பள்ளிகளுக்கு சான்றுகளாகும்.

## ஆராய்ச்சியின் மூலம் பெறப்பட்ட பொதுவான கருத்துக்கள் :

தமிழக அரசின் சத்துணவுத் திட்டம் பின்தங்கிய வகுப்பினரின் குழந்தைகளையும் கிராமப்புறத்தில் வாழும் குழந்தைகளையும் பள்ளியில் சேரத் தூண்டும் சிறந்த ஊக்குவிப்புத் திட்டமாகும். இத்திட்டம் மாணவர்களின் சேர்க்கை, வருகைச் சதவீதம் இவற்றை அதிகரிக்கச் செய்துள்ளது. பொதுவாக மாணவர்களின் கல்விச் சாதனையில் ஓரளவு முன்னேற்றம் காணப்பட்ட போதிலும் சமூகப் பொருளாதார நிலைகளில் பின் தங்கிய கிராமப்புறப் பகுதிகளில் வாழும் பழங்குடி வகுப்பைச் சேர்ந்த மாணவர்கள் சக மாணவர்களைக் காட்டிலும் கல்வித் தரத்திலும் பின் தங்கிய நிலையிலேயே உள்ளனர்.

## பரிந்துரைகள்:

சத்துணவுத் திட்டம் செயல்படுத்தப்பட்ட பின் குழந்தைகளின் சேர்க்கை அதிகரிக்கப்பட்டு, அவர்கள் ஒழுங்காக பள்ளிக்கு வந்து கொண்டிருந்தால் அவர்களுடைய கல்விச் சாதனையிலும் கண்டிப்பாக முன்னேற்றம் காணப்படவேண்டும். ஆனால் கிராமப் புறங்களிலும் சமூகப் பொருளாதார நிலைகளில் பின்தங்கிய பகுதிகளில் வாழும் ஆதிவாசிகள் மற்றும் பழங்குடி வகுப்பினைச் சேர்ந்த மாணவர்களின் கல்விச் சாதனை சக மாணவர்களின் கல்விச் சாதனைக்குச் சமமாக இல்லை என்பது ஆராய்ச்சியின் மூலம் கண்டறியப்பட்டது. எனவே தற்போது செயல்பட்டு வரும் சத்துணவுத் திட்டம், இலவசப் பாடப்புத்தகங்கள் சீருடைகள் மற்றும் பிற

பொருள்கள் வழங்கும் திட்டங்கள் மட்டும் போதுமானவை அல்ல. சமூக பொருளாதார நிலைகளில் மேம்பட்ட குடும்பத்தைச் சார்ந்த மாணவர்கள் தங்கள் வீட்டுச் சூழலில் பெறும் கற்றல் அனுபவங்களை ஆராய்ந்து அறிந்து அது போன்ற அனுபவங்களைத் தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடி மாணவர்களும் பெற வழிவகை செய்யும் சிறப்புப் பயிற்சித் திட்டங்களைச் செயல்படுத்த வேண்டும்.

கடமை உணர்வும் சேவை மனப்பான்மையும் உடைய ஆசிரியர்களைத் தேர்வு செய்து பின்தங்கிய கிராமப்புற பகுதிகளில் நியமனம் செய்வதன் மூலம் அப்பகுதியில் உள்ள குழந்தைகளின் ஒழுங்கான வருகையையும் கல்வித் தரத்தையும் உயர்த்தலாம்.

சத்துணவு மையங்கள் சிறந்த முறையில் மேற்பார்வையிடப்பட வேண்டும். சத்துணவு ஏழைக் குழந்தைகளுக்குச் சரியான அளவிலும் சரியான முறையிலும் வழங்கப்படுகிறதா என்பதும் ஒழுங்காக கவனிக்கப்படவேண்டும்.

* * *

# மாணிக்கத்தின் பழஞ்சொல் ஆட்சியும் புதுச்சொல் மாட்சியும்

முனைவர் தமிழண்ணல்

ஒரு மொழியில் நிலைபேறுடைய சொற்களுமுண்டு; வந்து கலந்து பழகிப் பிறகு பிரிந்துபோகும் சொற்களுமுண்டு. ஒரு பெருநகரில் நிலையாக வாழ்பவர்போல், வந்துபோகும் மக்கட்தொகையும் கணக்கிலடங்காததாக இருக்கும். அதனையே இதற்கு உவமையாகக் கூறமுடியும். அயற்சொல் கலப்பென்பது வாழும் மொழிகளனைத்திற்கும் இயல்பாக நேரும் ஒன்றேயாம். சிலர் அயல்சொற்கள் கலந்துவிட்டனவே என்று மிகவும் வருந்துவது தேவையற்றதாகும். மற்றும் சிலர் 'தனித்தமிழாவது, பார்த்தீரா எத்தனை மொழிச்சொற்கள் கலந்துவிட்டன' என்று எள்ளி நகையாடுவதற்கும் இதில் இடமில்லை. ஏனெனில், பிறமொழிச் சொற்கலப்பு என்பது குறிப்பிட்ட சமுதாய மக்கள் நாகரிகத்தில் முதிர்ந்து, வாணிகம் தொழில் முதலியன நிமித்தம் உலகில் பலருடன் பழகுகிறார்கள் என்பதற்கும், அவர்தம் மொழி உயிருடன் இயங்குகிறதென்பதற்கும் ஓர் அடையாளமாகும்.

ஓர் ஆறு, காவிரிபோல் கங்கையைப்போல் ஓடிக்கொண்டிருக்கிறதென்றால், அதில் பல கிளையாறுகள் ஓடிவந்து கலத்தல் இயல்பேயாகும். சிலபோது சிறுசிறு வாய்க்கால்கள், கழிவுநீர்கள் கூடக் கலந்துவிடும். ஆயினும் அப் பேராறு அவையனைத்தையும் தன்னுள் அடக்கிக்கொண்டு, தன் நிறம், சுவை, மணம் இவற்றை அவற்றிற்களித்து, மீதூர்ந்து ஓடும. மொழியும் காலந்தோறும் வந்து கலக்கும் பிறமொழிச் சொற்களைத் தன்வயப்படுத்திக் கொள்ளவேண்டும். தமிழ் மொழி இத் தன்வயப்படுத்தலை, தொல்காப்பியர் காலந்தொட்டு நேற்றுவரை நன்கு கடைப்பிடித்து வந்ததனாலேதான் தன் கன்னிமை கெடாதிருக்கிறது.

இருபதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட புரட்சிகரமான பெரும் மாறுதல்களினால், தமிழ் பிறவற்றைத் தன்னகப்படுத்திக் கொள்வதுபோல், பிறமொழிகளின் ஆதிக்கம் மேலோங்கி, அவை தமிழைத் தன்னகப்படுத்தும் நிலைமை முற்றியது. இதனை மாற்றவே, பாவேந்தர் பாரதிதாசன் 'தமிழியக்கம்' என்ற எதிர்ப்புப் போர்முரசைக் கொட்டினார். கொஞ்சம் அதிவேகமாகவே, கடும் சொற்களால் பலரையும் தாக்கிப் பாடினார். வடமொழியைக் குறிப்பிட "நம் உரிமைதனைக் கடித்தது அப் பாம்பு" என்றார். சில பெரும் புலவர்களைப் பெயர் குறிப்பிடாமல் குறிப்பிட்டு "தாள் ஒன்றும் அற்றதுவோ, மறுப்புவிட" என்றும் "இந்தக் கொம்பன் யார் என்று கேட்க ஆளில்லையா, புலவர் கூட்டந்தன்னில்" என்றும் "காப்பியர்கள், அகத்தியர்கள் கெடுப்பினும் கெடாத தமிழ்" என்றும் ஏதேதோ கடிந்து பாடினார். அவையனைத்தும் சூறாவளியை எதிர்த்த புயல்மொழிகளே தவிர, யாரும் ஆத்திரப்பட வேண்டியனவல்ல.

### பாமரத் தமிழும் பண்டிதத் தமிழும் :

எளிய நடையிலெழுதினாலும் மிகமிகப் பாமரர் நடையில் வெளியிட்டாலும் செவ்விய நடையிலெழுதினாலும் கடுந்தமிழிலேயே இயம்பியிருந்தாலும் சொல்லும் செய்தியையும் கேட்பவனின் தகுதியையும் பொறுத்திருக்கிறது. அது தேவைப்படுமிடத்தில் அது போய்ச் சேரவே செய்யும் . மொழிக்குப் பயன் தொடர்புறுத்துதலேயாம். புதுக்கவிதையை இரசிப்பவன் கம்பராமயாணத்தையும் சுவைக்கக் கூடும்; சுவைக்க வேண்டும். ஏன், ஒன்றில் மட்டும் அருவருப்பையும் வெறுப்பையும் நாம் ஊட்டிக் கொண்டே இருக்கவேண்டும்? மக்கள் பல தரத்தினர். சொல்லும் கருத்துக்களும் பலநிலையின; எனவே வெளிப்பாடும் பல முறையினவாக இருப்பதில் வியப்பில்லை.

தமிழில் ஒரு மாறான போக்குச் சிலரால் வளர்க்கப்படுகிறது. எல்லோரும் பாமரர்க்காகப் பாமரத் தமிழில் பாமரராய் நின்று எழுதவேண்டுமாம். பாரதியார் கும்மியும் சிந்தும் பாடிய அதே நிலையிலா, மணக்குளத்து வினாயகரின் நான்மணிமாலையைப் பாடியுள்ளார்? அதனைப் படிக்கச் சிலரேனும் உளரன்றோ? சிறுகதை எழுதும் நடையிலா, ஆய்வுரையையும் எழுத வேண்டும்? ஒரு செந்தமிழ்ச் சொல்லைக் கண்டாலும் 'பண்டிதத் தமிழ்' என நகையாடுவார்; பண்டிதரைக் கேலிக்கு ஆளாக்கவில்லை; தம்மைத்தாமே தாழ்த்திக்கொள்கின்றனர்.

### மறுமலர்ச்சியும் மரபு மீட்சியும் :

இம் மறுமலர்ச்சிக் காலத்தில் சில மரபுமீட்சிகள் ஏற்படவேண்டுமென்று முனைவர் வ.சுப. மாணிக்கம் விரும்புகிறார். அஃது இயல்பேயாம். இன்று காணும் தமிழ்த்திரைப்படம் போலவா முப்பது ஆண்டுகளுக்கு முற்பட்ட படம் இருந்தது. இன்று பலப்பல நல்ல தமிழ்ச்சொற்கள் வழக்கில் பல்கிப்பெருகிக் காணப்படுவதெல்லாம் மரபு மீண்டுவருகிறது என்பதற்கு அடையாளம்தானே? புதுக்கவிஞர்கள் மட்டுமே, சொற்கலப்பில் படுகேடு விளைவித்து வருகின்றனர். ஒன்பதாம் நூற்றாண்டில் கம்பன் 'என்றுமுள தென்தமிழ்' என்றது, இன்றும் நீடிக்கிறதே என இவர்களுக்கு வருத்தம் போலும்! இவர்கள் தாம் நிலைபெறவேணும், தமிழ் நிலைபெறவேண்டும் என்று எண்ணவேண்டாமா? இவர்களின் வரம்புமீறில் சொற்கலப்பு, ஒலிக்கலப்பு, வரிவடிவக் கலப்பெல்லாம் தற்கொலைக் கொப்பாகும் என்று சொன்னாலும் இவர்களுக்கு விளங்குவதில்லை.

### பழஞ்சொல் காத்தல் -புதுச்சொல் படைத்தல் :

பேராசிரியர் மாணிக்கமவர்கள் செறிவுள்ள, கருத்தாழமிக்க, எடுக்க எடுக்கக் குறையாத திட்பநுட்பங்களடங்கிய செம்மைத் தமிழில் எழுதவேண்டுமென்று விழைகிறார். அவரைப் பலரும் விரும்பிப் படிப்பதற்கு, அவர் தரும் அரியபெரிய கருத்துக்களும் ஒரு காரணமாகும். அவர் கட்டுரைகளைத் தொட்டால் ஓர் ஒளிபிறக்கும், ஓர் உண்மைகிடைக்கும் என்று ஒவ்வொரு தமிழ் மாணவனும் அவாவுகின்றானே! அதனோடு அவரது செவ்விய, தீவிய செழுந்தமிழ்நடையில் ஓர் உயிரோட்டமும் மிளிர்கிறது. இனிப்பிற் கலந்து மருந்தைப் புகட்டுவதுபோல, அதில் ஆய்வுக்கருத்துக்களாகிய இனிமையை வைத்துச் செழுந்தமிழ் நடையைப் பயிலவிடுகிறார் பேராசியர்.

'இலக்கணம் என்ற <u>அவப்பார்வையால்</u> அறிஞருலகம் தொல்காப்பியத்தை மதிக்கவில்லை' என்பார் அவர். "<u>இவறல்</u> இல்லாச் சொல்வளம் வேண்டும்" என்பார். தமிழர் <u>செய்தவத்தில்</u> தொல்காப்பியம் முழு நூலாகக் கிடைத்தாம். இவைபோலத் திருக்குறட் சொல்லாட்சிகளையும்

மற்றும் சங்கம், சிலம்பு, கம்பன் சொல்லாட்சிகளையும் ஆங்காங்கு இவர் உரைநடையில் காணலாம். தொல்காப்பியர் 'நெறிமை' என ஆளுமிடமுண்டு. அதுபோல இவர் தெளிமை, தமிழ்மை முதலிய பல சொற்களை ஆள்வார். 'அரில்கள் குறையும்', 'அரில் இன்றி ஆய்தல்வேண்டும்' என இவ்வாறு குற்றம் எனும் பொருளில் ஆள்வார். இவை 'அரில்தபத் தெரிந்து' என்ற தொல்காப்பியப் பாயிரத்தை நினைவூட்டும். 'கீழறை' செய்வாரை இவர் மிகவும் கடிந்துரைப்பார். உரிச் சொற்களையும் இடைச்சொற்களையும் மீள ஆளவைக்கும் முயற்சியை, தவப் பெரிது, நனி எளிது என்ற ஆட்சிகளில் காணலாம். 'மறுத்திருப்பார் மன்' எனமுடித்து, மறுக்காதொழிந்ததைக்காட்டி,' மன்னுக்கு மன்னும் வாழ்வுதருவார் மன்னிய (நிலைபெற்ற) என்ற ஆட்சியை அடிக்கடி காணலாம். பனுவல், பைஞ்ஞிலம், களரி, பொற்பு, பொத்து (குற்றம்), செம்பாகம் என்றிவ்வாறு வரும் சீர்த்திமிக்க செஞ்சொற்களை ஆள்வதில், தணியாத ஆர்வம் கொண்டவர் இத் தமிழ்மகனார்.

## சொல்லாக்கம் :

இப் பேராசிரியருடைய நூல்களில் பக்கத்திற்கொரு புதுச்சொல்லாவது படைக்கப் பட்டிருக்கும். சிலபோது வலிந்தோ, மிகையாகவோ, வேண்டுமென்றோ படைப்பதாகவும் தோற்றுமளவு-பெரும்பகுதி தோற்றாமலே எழுதிப்போக வல்லவர்- சொற்படைப்பில் இவர் ஆர்வம் காட்டுவதேன்? தமிழ் மாணவர்கள் இவ்வாறு தமிழிலேயே-தமிழுக்குள்ளேயே சொற்களைப் படைத்துப் பல்க விட்டுப் பழகவேண்டும் என இவர் விரும்புவதால்தான்- அப் பயிற்சியைத் தம் நூல்களைப் படிப்பார்க்குப் பயிற்றத்தான் அவர் இவ்வாறு படைத்துச் சென்றுள்ளார் என அறியமுடிகிறது. 'மேய்ப்பி' என ஆநிரை மேய்க்கும் பெண்களைக் குறிப்பர். திறனாய்வு என்பதைத் திறன் என்றே நிறுத்தி, திறனி, திறனுதல், நேர்திறன், எதிர்திறன், புரைத்திறன், திறனுக்கு, திறனாடிகள், திறனுங்காலை, திறன்கடந்தவர் என இவ்வாறு ஆங்காங்கு ஆள்வதன்மூலம் ஒரு புதிய சொற்குழுமத்தையே அவர் நமக்கு விட்டுச்சென்றுள்ளார். சமுதாயம், சமுகம், சாதி, இனம் எனப் பலவாறு பேசினோம். குமுகாயம் எனவும் பேசிப்பார்த்தோம். இவரோ உலகாயம், குழுவாயம், குலவாயம், மன்னாயம் போலும் பல ஆயங்களைப் படைத்துத் தமிழ்ச் சொல்வளம் ஈட்டுகிறார். உலகவழக்கு எனும் மொழிவழக்கை இவர் ஒழிவழக்கு, எழுவழக்கு, அழிவழக்கு, இழிவழக்கு எனப் பிரித்துப் புதுச்சொற்களால் குறிப்பிட்டுக் காட்டுகிறார். அறிஞர்போல் நெறிஞர், படைஞர், ஆய்ஞர் என வருவன பலவாகும்.

## சுருக்குதல் :

இவ்வாறு படைக்கும்பொழுது சொற்சுருக்கத்தையே இவர் நாடுகிறார். நீண்டநெடிய சொற்களைச் சுருக்கித் தரவே முற்படுகிறார். சொற் சுருக்கமும் பொருட் பெருக்கமும் இவர்தம் எழுத்துமுறைகளாகும். சிலபல பக்கங்களில், ஒன்றிரண்டு கட்டுரைகளில், இவர் தனிநூல்களாக விரிக்கக் கூடிய செய்திகளைத் தொகுத்துத் தந்துவிடுகிறார். அதுபோலவே சொல்லாட்சியிலும் சிக்கனம் இவர்தரும் சிறந்த முதலீடாகும். சிக்கனமும் ஒரு வருமானம் என்பரன்றோ?

'இந்த எழுத்து மொழிக்கு முதல் வரமாட்டாது' என்று நீட்டி முழக்கமாட்டார் இவர். 'முதலாது' என எதிர்மறை வினையாக முடித்துவிடுவார். நூற்பாவிலிருந்து, நூற்பா எழுதும் என்னாமல் 'நூற்பிக்கும்' எனக் குறைப்பார். 'புத்தமிழ்' என இவர்புதுத் தமிழைச் சுட்டுவார். புத்தமிழிலேயே புதுத் தமிழிருக்கும்போது, 'து' வேறு எதற்கு என எண்ணினார் போலும், குமுதம் இதழார் 'புதுத்தகம்' கண்டதை, இதனுடன் ஒப்பிடுக. குமுதமேயாயினும் முறையான வளர்ச்சிநிலை காட்டும்போது போற்றுகிறோம் அல்லவா? அவர்கள்தான் 'லைட்ஸ் ஆன்' போடுகிறார்கள். 'வெளிச்சத்திற்கு வரும் செய்திகள்தானே அவை? 'கவர் ஸ்டோரியாமே? அட்டைப்படக்கதை எங்கே போயிற்று? 'முகப்புக்கதை' தானே? 'ஸ்பெஷல்கள்' போடாமல்

சிறப்பிதழ்கள் போட்டால், இவர்களுடைய இதழ்கள் விற்பனை ஆகாமலா போய்விடும்?

தானெடுத்து மொழிதல் என ஓரிடத்துக் கூறும் பேராசிரியன், தொடர்ந்து வரும்போது 'தன்னெடுப்பு' என அதை முடித்துவிடுவார். கேட்ட அளவில், பார்த்த அளவில் என்பனவற்றை 'கேட்டளவில்' 'பார்த்தளவில்' என அகரம் தொகுத்தல் விகாரமாகவே அமைத்து, எழுதிவிடுகிறார். கேட்ட அளவில், கேட்டவளவில் என எளிமைநோக்குவதைவிட கேட்டளவில் எனச் சுருங்கவுரைப்பதையே அவர் மனம் நாடுகிறது. இதனை அவரிடமுள்ள மாறா இயல்பு என்றே கூறிவிடலாம். சுருக்குக, இன்னும் சுருக்குக என்பதும் அவர்தம் சொற்கோள் ஆகும். உலக அறம் என்னாது 'உலகறம்' என்றே போதுமென ஆள்வது அவர்மனம். தெரிவிக்கும் என்பதைத் தெரிக்கும் என முடிப்பர். கற்பவர்களைக் கற்பிகள் என்றே குறிப்பிடுவதைக் காணலாம். மூல ஆசிரியர் மூலாசிரியராதலாலும் வாதமிடுதல் வாதீடா-தலாலும் இச் சுருக்கப்படைப்பு மேலும் புலப்படும்.

## உலக வழக்கு நடை :

இங்ஙனம் 'செங்கடுமொழி' எனத் தொல்காப்பியம் ஆள்வதற்கு ஒப்ப, இவர் செவ்விய செறிவுடைய சொற்களையே ஆள்பவரென்றும், உலக வழக்கினை அறவே மறப்பவறென்றும் எண்ணிவிடுதல் தகாது. பொருட்பொருத்தமுடைய இடங்களில் நம்மிலும் வலிதாக, அழுத்தமாக விரைவாகப் பேச்சுவழக்குச் சொற்களை எடுத்தாளும் இயல்பு இவரிடம் உண்டு. இடக்குமுடக்கு, குறுக்கு மறுக்கு, எதிர்குதிரான எனவரும் இணைமரபுத் தொடர்களை இவர் மொழிநடை தழுவிக்கொள்ளும். 'பளிச்சென்று' என ஒலிக்குறிப்பையும் ஆள்வர். சின்னாபின்னப்பட்டு என்பதைச் சின்னமும் பின்னமும் பட்டு எனத் தெளிவாக ஆள்வர். வங்கியிருப்பு, ஆட்பேர் மாகாணம், எதிரிடைபேசுதல், 'கம்மென' இருப்பது, மட்டமா என்றினைய பல சொற்களைத் தகுந்த இடங்களில் காணலாம்.

மேலே கண்ட காட்டுக்கள் எல்லாம் 'தொல்காப்பியக் கடல்' எனப் பெயரிய பேராசிரியரின் ஒரு நூலிலிருந்து எடுக்கப்பட்டவற்றில், சில சொற்களாகும். அந் நூலுக்கு முன்னுரை எழுதிய, பதிப்புச் செம்மல், முனைவர் ச. மெய்யப்பனவர்கள் "மாணிக்கனாரின் புதிய சொல்லாக்கங்கள் தமிழுக்குப் புதுவரவும் ஆக்கமும் ஆம். இந்தத் தலைமுறையில் இவரைப் போல் புதிய சொற்களைப் படைத்தவர் இலர். வாழுஞ்சொற்களைப் படைப்பதில் வல்லவர்; பழஞ்சொல் புதுப்பிப்பதிலும் வல்லவர்' எனக் குறிப்பிடுவது மிகவும் பொருத்தமாகும்.

பல இடங்களில் இவரது சொல்லாக்கங்கள், மொழிநடைப்பாங்குடன் பின்னிப் பிணைந்து, கருத்து வெளிப்பாட்டை அழுத்தமுறத் தருகின்றன. அதனால் இவர் ஆளும் அல்லது படைக்கும் சொற்களைத் தனியே பார்க்கும்போது நெருடாகத் தெரிபவைகூட, படித்துச் செல்லும்போது காவிரியிடை அலைபோல எளிதாக இனிதாக ஓடிச்செல்கின்றன. அப்போது அவை நமக்குக் கடினமாகப் படுவதே இல்லை. அதுவே இவர்தம் கருத்து வெளிப்பாட்டுச் சிறப்பும் நடைச் சிறப்புமாம். 'நாம் இவ்வாறு கிளி பேசுகிறோம்' எனவரும் தொடரைப் படித்துப்போகும்போது, கிளிபோலச் சொன்னதையே சொல்லிக் கொண்டிருக்கிறோம் என இயல்பாகவே நம் மனம் உணர்ந்துகொள்கிறது. அத்தகையாரைப் 'புலமைக்கிளிகள்' என்பர் பேராசிரியர். அறிஞர்கள் 'கிளி' எனப்படுவதும் ஒரு சிறப்புத்தான்போலும்!

"மனித மன்பதை வளர்ந்துகொண்டே மாறுபடும்; மாறுபட்டுக் கொண்டே வளரும். மன்பதை மாறிக்கொண்டு செல்வதுபோல, அம் மன்பதைக்குரிய மொழியும் மாறிக்கொண்டுதான் செல்லும்" என்று மொழியின் இயற்கை தெரிவிக்கும் பேராசியர், அம் மாற்றம் மொழியிடமுள்ள மாறாத சில பிறப்பியற்கைகளையும் மாற்றி விடலாகாது என்று விழிப்புணர்த்துவர்.

சொற்களில் 'மருவிய உருமாறிகள்' உண்டென்றும் அவற்றிற்கு 'இலக்கணவீறு' தரக்கூடாது என்றும் அவர் வரன்முறை வகுத்தவற்றை நம் அறிஞர்கள் ஒருகணம் சிந்தித்தருளவேண்டும். தமிழுக்கு மரபுமீட்சி என்பது, மறுமலர்ச்சியின் வளர்ச்சியே என அவர்கள் ஒப்புக்கொள்ள வேண்டும். மேலைநாட்டுக் கோட்பாடுகள் சிலவற்றை, அரைகுறையாகப் படித்தொப்புவிக்கும் புலமைக் கிளிகளாகாது, புரைதீர்ந்த நன்மை பயக்கும் புலமைப் பேரறிஞர்கள் ஆகுக என வேண்டுவோமாக! மறைந்த மாணிக்கனார்க்குச் செயத்தக்க கைம்மாறு அதனினும் பிறிதொன்றல்லை.

* * *

# புது நோக்கு

புலவர் தி.நா. அறிவுஒளி

பார்வையிலே புதுநோக்கும் பார்க்கும் நோக்கப்
  பரப்பினிலே புதுநோக்கும் பார்க்கும் வாழ்க்கைச்
சீர்மையிலே புதுநோக்கும் சேர்க்கும் கொள்கைச்
  சிறப்பினிலே புதுநோக்கும் தீர்க்கும் நோய்மைத்
தீர்வினிலே புதுநோக்கும் தீய்க்கும் ஆண்மைத்
  திறத்தினிலே புதுநோக்கும் வாய்க்கும் மேன்மைக்
கூர்மையிலே புதுநோக்கும் சேர்க்கும் வாய்மைக்
  குறிக்கோளில் புதுநோக்கும் கொள்க நாடே!

நோய்களுக்கு விளக்கத்தை நோவாமல் சொல்வார்;
  நோயறிஞர் போயொழிந்தால் நோயொழியும்; வாழ்வோம்
பேய்களுக்குப் பதவிநலம் பட்டமெல்லாஞ் சேர்த்தால்,
  பேய்த்தன்மை ஆட்டுவிக்கும், பெருவெறிகள் சூழும்
தோய்கள்ளாம் பழமைகளைத் தொலைத்தொழிப்பீர்! வாழுந்
  தூய்மைநலம் மிகத்துலங்கும். நலம்பூக்கும் நாட்டில்
மாய்வதற்குப் பயில்வாரோ? வாழ்வதற்கே கற்பார்.
  மாண்புறலே பேராண்மை; வாழ்வொழுங்கே கற்பாம்.

நூற்றாண்டு நூற்றாண்டாய் வறுமையிலே வாடும்
  நோய்க்கூட்ட மாய்வறியர் தேய்கின்றார் நாட்டில்
ஆற்றாமல் ஆக்கத்தை அரசியலார் மேலும்
  ஆர்ப்பாட்ட ஆட்டமிட்டுத் தோய்கின்றார் வாழ்வில்
போற்றாமல் குறிக்கோளைப் பொய்,கயமை போற்றிப்
  புழுக்கூட்டம் போல்மக்கள் விழுந்தழிய, மேலோர்
நேற்றாண்ட வேந்தர்போல் நெடுநலங்கள் துய்ப்பார்
  நினைப்பாரோ மக்கணலம்; நீள்புரட்சி உய்வாம்.



முத்தெடுத்த மாமறவன் கூழாங் கல்லை
முத்தென்று ஒப்புவனோ? முன்னே தேமாங்
கொத்தெடுத்துக் கனிசுவைத்தோன் வேம்பைத் தின்ன
விரும்புவானோ? வியப்புமிக்க செல்வம், பெண்டிர்
சொத்திவற்றைச் சுவைக்காமல் விடுவார் யாரே?
சூழ்நிலைக்கும் சுவைகட்கும் தோற்பார் பல்லோர்
கொத்தடிமை யெல்லாமும் குலைக்க நெஞ்சம்
கோட்டையாய் நிமிர்ந்துவிட்டால் கூனல் உண்டோ

உடலொடுங்கி உணர்வொடுங்கி உயிரொடுங்கி வாழும்
உருக்குலைந்த ஓவியங்கள் உணர்வுபெறல் என்றோ
கடலொடுங்கி அடங்குதல்போல் கயமையெலாம் ஓய்ந்து
கடமைநலங் கமழவளங் கலையினெழில் போலே
கெடலொடுங்கிக் கிழநினைப்புக் கிழிந்தொடுங்கி ஆண்மை
கிளர்ந்தெழுந்து புரட்சியுணர் வெழுச்சிமிக வோங்கி
முடமொடுங்கி மடமொடுங்கி முழுப்புரட்சி வாய்க்க
முளைத்தெழுக முழுப்போரே! முரண்பகைகள் சாய்த்தே

முகத்திரையைக் கிழித்தெறிந்தால் முழுஉருவந் தெரியும்;
முள்ளாகப் பிறர்வருந்த முரண்செய்தல் புரியும்.
அகத்திரையைக் கிழித்தால்தான் அவரவர்தம் உண்மை
அகவடிவம் புலனாகும். அதுவரையும் பொய்மை
மிகப்புகழ்ந்து போற்றிடுவோம் மேன்மையென எண்ணி.
மேற்பூச்சில் மயங்காமல் மிகநுட்ப மாகத்
தகஉண்மை ஆய்ந்துணருந் தக்க மணம் வேண்டும்
தவறில்லா நலமடையத் தகுதிநலந் தேர்வீர்!

* * *



# வட இந்தியாவில் ஆழ்வார்கள்



முனைவர் ரங்கநாயகி மஹாபத்ரா

உலகப் பேரிலக்கியங்களின் நடுவே சிறப்பிடம் பெறும் வகையில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே காதலையும், வீரத்தையும் பாடியுள்ளது தமிழ் . சமஸ்கிருதம், பாலி, பிராகிருதம் போன்ற மற்ற தொன்மொழிகளைப் போலன்றித் தமிழில் சமயத்தின் செல்வாக்கு பல நூற்றாண்டுகளுக்குப் பின்பே பெருகியதெனினும் தமிழின் பக்தி இலக்கியம் இந்திய இலக்கிய வரலாற்றிலும் சமுதாய வரலாற்றிலும் பல முக்கியமான திருப்பங்களுக்குக் காரணமாயிற்று.

வைணவ சமயமும், பாகவதமென்னும் பக்தி நெறியும் தமிழ் நாட்டிற்கு வெளியேயிருந்து வந்தவையெனினும் ஆழ்வார்களின் தமிழ்ப் பாசுரங்களே வட இந்தியாவின் இலக்கிய மொழிகள் அனைத்திற்கும் பக்தி இலக்கியமென்ற புதிய வகையை அறிமுகம் செய்தன. அதுவரை இந்து சமயமும் தத்துவமும் வடமொழிக்கே உரியதாக இருந்த நிலை மாறி மக்களின் மாநில மொழிகளில் இலக்கியமாகவும் மறு பிறப்புப் பெற்றன.

சமயம், போர், கலை, வாணிகம் ஆகிய பல துறைகளில் பல நூற்றாண்டுகளாகத் தமிழ் நாட்டிற்கு வட இந்தியாவுடன் இருந்த தொடர்பு பனிரெண்டாம் நூற்றாண்டில் சமயத்துறையில் மீண்டும் புதுப்பிக்கப்பட்டது. ராமானுசர் காலம் முதல் தென்னகத்திலிருந்து அலை அலையாகப் பாய்ந்து வந்த வைணவ பக்தியெழுச்சிகள் வட இந்தியாவில் பேராதரவு பெற்றன. ஆழ்வார்களின் பக்திப் பெருக்கோடு வேத நெறியை இணைத்து விசிட்டாத்வைதமென்ற தம் வைணவ நெறியை இந்தியா முழுவதிலும் கொண்டு சென்ற ராமானுசர் வடக்கே காச்மீரம், கிழக்கே நேபாளம், மேற்கே துவாரகையென வைணவப் பக்திப் பேரரசை நிறுவனார். தமிழிலக்கியத்திற்கே உரிய அகத்துறை வழிநின்ற ஆழ்வார் பாசுரங்களில் வேதப் பொருள் கண்டு சமயம் பரப்பிய அவரது கண்ணோட்டம் தமிழிலக்கியத்தை முதன் முதலாக வட இந்தியாவிற்கு அறிமுகப்படுத்தியது. தமிழ் நாட்டிலேயே நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திற்குத் திராவிட வேதமென்னும் பெருமை தந்து கோயில் வழிபாடுகளில் வடமொழிக்கு மேலாகச் சிறப்பான இடத்தைக் கொடுக்கச் செய்தது அவர் முயற்சியே. தென்தமிழும் வடமொழியும் இணைந்த புதியதோர் இந்திய ஒருமைப் பாட்டையும், இந்திய சமய இலக்கியத்திற்கு ஒரு புதிய பரிமாணத்தையும் அவரது ஸ்ரீ வைணவ சமயம் தந்தது.

ராமானுசர் வழிநின்று அவர் மாணவர்களும் பின் வந்த வைணவ சமயக் குரவர்களும் ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களுக்கு எழுதிய உரைகள் ஊரூராக வைணவம் பரப்பின; ஆழ்வார் புகழ் பாடின, தமிழ்ப் பாசுரங்களில் உள்ள பக்தித் தத்துவக் குறிப்புகள் இவ்வுரையாசியர்களின் இருமொழிப் புலமையால், வாதத்திறமையால், பக்திப் பெருக்கால், இலக்கிய மெருகும், இந்தியப் பொதுமையும் பெற்றன. 12ஆம் நூற்றாண்டு முதல் இன்றுவரை

வெவ்வேறு மாநிலங்களில் வெவ்வேறு சூழ்நிலைகளில் தோன்றிய வைணவப் பக்தி இயக்கங்கள் அனைத்துமே ஒவ்வொரு வகையில் ஆழ்வார்களின் பாசுரங்களுக்கும் அவற்றின் உரையாசிரியர்களுக்கும் கடன்பட்டனவே. தமிழ் வைணவ இலக்கியங்களை வளப்படுத்திய இவ்வைணவ ஆசான்கள் மணிப்பிரவாளமென்ற புதியதொரு நடையையும் ஸ்ரீ வைணவத்திற் கென்றே உருவாக்கினர். வைணவ சமயத் தொண்டையே தம் பிறவிப்பயனாக ஏற்ற பல ஆசான்கள் ராமானுசரால் ஆங்காங்கு நிறுவப் பெற்ற மடங்களில் வைணவத் தொண்டோடு தம் தமிழ்ப் பண்பாட்டையும் காத்து வந்தனர். வடநாட்டில் துவாரகை, பிருந்தாவனம், பத்ரி என்று நூற்றெட்டுத் 'திவ்விய தேசங்' களுக்குப் புனிதப் பயணம் செய்கையில் ஆங்காங்கு தம்மை ஆதரித்த அரசர்கள் அல்லது வள்ளல்களின் வேண்டுகோளின்படி அங்கேயே தங்கித் தமிழ்நாட்டு மரபில் திருமால் கோயில்களை நிறுவி, ஆழ்வார்கள் புகழ் பரப்பி, அவ்வம் மாநிலத்து மொழிகள் கற்றுத் திவ்வியப் பிரபந்தங்களை விளக்கித் தமது ஸ்ரீ வைணவக் கொள்கைகள், பழக்க வழக்கங்கள், தமிழ்நாட்டு நோன்புகள், கோயில் வழிபாட்டு முறைகள் ஆகியவற்றைப் பரப்பி வந்தனர். பிறசமயத்தார் படையெடுப்புகள், அவர்களால் தங்கள் கோயில்களும், வழிபாடுகளும் சிதைவுறல், அமைதியற்ற வாழ்க்கை ஆகியவற்றால் துன்பமுற்றிருந்த வட இந்திய மக்களுக்குப் பக்தித் தத்துவங்களும், நம்பிக்கையூட்டும் பக்திப் பிரச்சாரங்களும், கண்நிறைந்த இறை வழிபாடும் புதிய எழுச்சியைத் தோற்றுவித்தன. இறை வழிபாட்டுக்கெனத் தம் வாழ்வை ஒதுக்கிய வைணவ ஆசான்களும் தம் பெரும் புலமையால், ஒழுக்கத்தால், பக்தி வாழ்க்கையால், கற்றவர்கள், பாமரமக்கள் ஆகிய அனைவருடைய மதிப்பிற்கும் உரியவராய் விளங்கினர். இத்தமிழ் ஆசான்கள் தாம் பணிசெய்ய வந்த நிலத்து மொழிகளிலும் தேர்ச்சி பெற்றுத் தலைமுறை தலைமுறையாகத் தமிழர் குடியேற்றங்களாகத் தம் குடும்பங்களோடு வங்கத்திலும், ராஜஸ்தானத்திலும், உத்தரப்பிரதேசத்திலும் பல நூற்றாண்டுகளாகத் தமிழ்ப் பண்பாட்டைப் பரப்பி வருகிறார்கள்.

வங்கத்தில் புரூலியா மாவட்டத்துக் கதி பேரோ (Gadi Bero) வில் பஞ்சகோட் அரசனின் வேண்டுகோளுக்கிணங்கி அவன் கட்டிக்கொடுத்த ஆதிகேசவப் பெருமாள் கோயிற் பணி புரிந்து வாழும் 60 குடும்பங்கள் 400 ஆண்டுகளாகத் தமிழ்க் குடியேற்றமாக இன்றும் உள்ளன. உத்தரப் பிரதேசத்தில் யமுனை நதிக் கரையில் கண்ணனை வழிபடப் பிருந்தாவனத்துக்கருகில் மதுராவில் கோவர்த்தனக் குன்றில் தங்கியிருந்த நாதமுனிகளின் பேரர் யாமுனாசாரியரின் சமயப் பரம்பரையில் 16ஆம் நூற்றாண்டுமுதல் மீண்டும் கிளைத்த வைணவ ஆசான்களே இன்றும் அங்கு கோவர்த்தன பீடத்தின் தலைமை வகிப்பவர்கள். காஞ்சியிலிருந்து அங்கே சென்ற பெரும் புலமை பெற்ற இரங்காசாரி என்பவரே முதன் முதலாக ஆழ்வார்களின் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தையும், உரைகளையும், மற்ற மணிப்பிரவாள நூற்களையும், வடமொழியில் பெயர்த்து வட இந்தியாவிற்குத் தமிழிலக்கியத்தைத் தந்தனர். அவரது மாணவர்களாகிய பலமொழி பேசும் வட இந்தியர்கள், பஞ்சாபிலும், குஜராத்திலும், இராஜஸ்தானத்திலும், உத்தரப்பிரதேசத்திலும், வங்கத்திலும் (நேபாளத்திலும்) பீகாரிலும் கடந்த நூற்றைம்பது ஆண்டுகளில் ஸ்ரீ வைணவத்தையும், ஆழ்வார்களையும், திவ்வியப் பிரபந்தங்களையும் வட இந்தியா முழுவதிலும் நிலைக்கச் செய்திருக்கின்றனர். திரு இரங்கதேசிக சுவாமி எனப்படும் தம் ஆசானுக்குக் காணிக்கையாக அவருடைய வட இந்தியச் சீடர்கள் (சமணராக இருந்து ஸ்ரீ வைணவராக மாறிய வணிகர்கள் மூவர்) வட இந்தியாவிலேயே பெரிய கோயிலாக முற்ற முழுக்கத் தமிழ்நாட்டுப் பாணியில் ரங்கமன்னார்-கோதைப் பிராட்டிக்குப் பிருந்தாவனத்தில் (ஆக்ரா, மதுரா, டில்லி நடுவே) பல லட்சக்கணக்கில் செலவு செய்து கோயில் கட்டித் தந்திருக்கின்றனர். அக்கோயிலைச் சார்ந்த பணியில், சுமார் 30 தமிழ்க் குடும்பங்கள் தலைமுறை தலைமுறையாக உள்ளன.

ஒரிசாவில் பூரியிலிருந்து 17 மைலில் உள்ள ஆலால நாத் (ஆழ்வார்நாத் என்பதின் திரிபு)

என்ற கோயில் (திருமகள் நில மகளோடும் நின்ற கோலத்திலிருக்கும் திருமாலின் கோயில் - தென்னிந்தியப் பாணிச்சிற்பம்) நெடுநாள் முன்பு, அங்குவந்த ஆழ்வார் (திருமங்கை யாழ்வாராக இருக்கக் கூடும் என்று கருதுபவர் உளர்) ஒருவரின் வருகையைக் குறிக்கக் கூடும்.

தமிழ்ப் பக்தி இயக்கத்தின் வட இந்தியத் தாக்குரவை இருவகையாக ஆயலாம்.

1. வட இந்திய மக்களின் வாழ்க்கையில் ஏற்பட்ட, ஏற்பட்டு வரும் தாக்குரவுகள்.

2. வட இந்திய மொழி இலக்கியங்களில் ஏற்பட்ட, ஏற்பட்டு வரும் தாக்குரவுகள்.

### 1. வாழ்க்கைத் தாக்குரவு :

1. இராமானுசர் காலத்திலேயே அவரால் தொடங்கப் பெற்று இன்றுவரை தொடர்ந்து ஸ்ரீ வைணவப் பணி நடைபெற்று வரும் இடங்களில் சிறப்பாக ஒரிசாவின் பூரியைக் குறிப்பிட வேண்டும். கலிங்கத்துப் பரணி எழக் காரணமான மன்னன், தீவிர சைவனான குலோத்துங்கனின் ஆட்சியிலிருந்து வெளியேறிய இராமானுசர் கருநாடகத்தில் ஆதரவு பெற்றுப் பிறகு நாடெங்கும் புகழ் பெற்றுக் காச்மீரத்திலிருந்து ஒரிசா வந்தபோது பூரியில் சில காலம் தங்கினார். அப்போது பூரியின் அரசன் அனந்த வர்ம சோழ கங்கன். கலிங்கப் போரில் குலோத்துங்கனிடம் தோற்றவன்; ஆனால் குலோத்துங்கனின் உறவினன். அவனுடைய பட்டத்தரசி ஜெயங்கொண்ட சோழதேவி குலோத்துங்கனின் மகன் வீரசோழனின் புதல்வியாவாள். இராமானுசருக்குப் பூரியில் பேராதரவு கிடைத்தற்கு ஒரு காரணம் தமிழ்ப் பெண்ணான அரசி என்றும் கூறலாம். புகழ்பெற்ற ஜெகந்நாதர் பெருங்கோயிலைக் கட்டிய அனந்தவர்மன் இராமனுஜருக்குத் தந்த ஆதரவிற்கும், இராமானுஜரின் ஸ்ரீ வைணவத் தாக்குர விற்கும் ஒரியர்களின் வாழ்க்கையில் எண்ணற்ற சான்றுகள் உள்ளன.

ஜெகந்நாதர் கோயிலின் நெடிய கோபுரத்தின் உச்சியில் ஸ்ரீ வைணவத் திருச்சின்னமும், உள்ளே இலக்குமி கோயிலில் இராமானுசர், பன்னிரு ஆழ்வார்கள், பிற வைணவ ஆசான்கள் ஆகியோரின் அழகிய வண்ண ஓவியங்களும், ஒரியமொழியில் அவர்கள் பெயர்களும், சுவர்களில் இராமானுசர் பௌத்தர்களை வாதில் வென்ற காட்சியின் ஓவியமும் கண்முன்னே நிற்கும் சான்றுகள். கோயிலின் வழிபாட்டு முறை, உணவு வகைகள், கோயிலின் ஒரு பகுதியின் பெயரான 'கொயிலி (கோயில்) வைகுண்டம்' என்பது, ஒரியர்களின் மார்கழிமாத நோன்பு, தின்பண்டங்கள் போன்ற பலவும் பண்பாட்டுத் தாக்குரவுகளைக் காட்ட வல்லன. வட இந்திய மொழிகளில் 'முழங்கை வழிவரை' உண்ணுவதைக் குறிப்பிடவே ஒரு வினைச்சொல் உள்ள மொழி ஒரிய மொழி ஒன்றே யாகும். (hāppiḍu )

இராமானுசர் காலந் தொடங்கி இன்றுவரையும் நிறுவப்பட்ட பல்வேறு மடங்களிலும், முறையாக ஆழ்வார்கள், ராமானுசர் வழிபாடுகள், திருப்பாவை மற்றும் மற்ற திவ்வியப் பிரபந்தங்கள் ஓதுதல், மடத்துப் பிள்ளைகளுக்கு ஸ்ரீவைணவ சமயப் பயிற்சி, தமிழே அறியாதவர்களே எனினும் வழிபாட்டிற்குரிய (திருப்பல்லாண்டு, திருப்பாவை முதலிய குறிப்பிட்ட சில) பிரபந்தங்களிற் பயிற்சி ஆகியவற்றைக் காணலாம். மடத்துத் தலைவர்கள் பெரும்பாலும் இந்திமொழி பேசுபவர்களே. சிறு வயதிலிருந்தே ஸ்ரீ வைணவ மடங்களிற் பயிற்சி பெற்றுத் திருவரங்கம் போன்ற இடங்களில் தங்கிச் சமயத்துறைப்புலமை பெற்றவர்கள். மார்கழி மாதத்தில் பாவை நோன்பு இம் மடங்களில் முறையாகக் கொண்டாடப் பெறும். ஆழ்வார்களின் பிறந்த நாள் விழாக்களும், மற்றும் தமிழக ஸ்ரீ வைணவ மடங்களிலுள்ள வழிபாடுகளும் நடைபெறும். காஞ்சி, நாங்குனேரி, திருவரங்கம் போன்ற தென்னக மடங்களையே தங்கள் தலைமையலுவலகங்களாக இவர்கள் கொள்கின்றனர்.

ஒரிசாவை விடச் சிறப்பாக, ஆர்வத்துடன், இவற்றையெல்லாம் கடைப்பிடிப்பதை உத்தரப் பிரதேசம், இராஜஸ்தான், பீகார், மகாராஷ்டிரம் ஆகிய இடங்களில் காணலாம். பீகாரில் மட்டுமே 360 ஸ்ரீ வைணவ நிலையங்கள் (கோயில், மடம் அல்லது சமயப் பயிற்சி நிலையம்) இருப்பதாகத் தெரிய வருகிறது. வட இந்தியாவில் பெரும்பாலும் இலக்குமி நாராயணனாகவே திருமாலை வழிபடுவர். ஆனால் ஸ்ரீ வைணவம் செல்வாக்குப் பெற்றுள்ள இடங்களில் சிறப்பான இடங்களில் பீகார், உத்தரப் பிரதேசம், பம்பாய் போன்றவற்றில் 'திவ்விய தேசம்' என அழைக்கப்படும் முறையான ஸ்ரீ வைணவ ஆலயங்களும் (சாத்திரப்படி கட்டப்பட்டவை) முற்ற முழுக்கத் தமிழ்நாட்டுத் திருமால் கோயிலின் அனைத்து வழிபாட்டு முறைகளும், நோன்புகளும், வழிபாடு செய்யப் பயிற்சிபெற்ற தமிழரையே அமர்த்தியிருத்தலும், காணப்பெறும். அவ்வூர் மக்கள் இந்தி, மராட்டி, போஜபுரி, மார்வாரி, குஜராத்தி ஆகிய எந்த மொழி பேசுபவராயினும் எந்த அன்னிய உணர்வுமில்லை. இத்தகைய கோயில்களில் மிகச் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை,

1) உத்தரப் பிரதேசத்துப் பிருந்தாவனில் ஸ்ரீ ரங்கநாதர் கோயில். கண்ணனை அடைய நோன்பு நோற்ற கோதை இங்கே இரங்கமன்னாரின் தேவியாக அருகே காட்சி தருகிறாள். பிருந்தாவனத்தைக் காணவில்லையென்ற அவள் ஏக்கம் தீரக் கட்டப்பட்ட கோயில். ஸ்ரீ ரங்கத்திலிருந்தே இறையுருவங்கள், கோயில் வாகனங்கள் ஆகியவை வருவிக்கப்பட்டன.

2) பீகாரில் சரித்ரவன் என்ற இடத்தில் உள்ள திருவைகுண்டநாதர் கோயில்.

3) பம்பாய் பனசவாடிலில் உள்ள வெங்கடேசர் கோயில்.

4) இராஜஸ்தானத்துப் புஷ்கரத்தில் (அஜ்மீர்) உள்ள வெங்கடேசர் கோயில்.

5) கல்கத்தாவில் உள்ள வைகுண்டநாதர் கோயில்.

இலட்சக் கணக்கில் பொருட்செலவு செய்து நூற்றுக்கணக்கான இவ்வாலயங்களைக் கட்டியும், ஆதரித்தும் மற்றும் ஸ்ரீவைணவ மடங்களுக்குதவியும், ஆய்வுநிலையங்களை நடத்தியும் வட இந்தியாவில் இத்தகைய பண்பாட்டுறவு நிலைபெற உதவி வருபவர்கள் ஸோமானி, பாங்கட், காப்ரா போன்ற சில வட இந்திய வணிகர் குடும்பத்தினர். கல்கத்தாவிலுள்ளது போல தனிப்பட்ட சிலரும் தமது ஈடுபாட்டால் தமது உடல், பொருள், ஆவி யனைத்தும் ஸ்ரீ வைணவச் சேவையில் ஈடுபடுத்தியதுமுண்டு. சுருக்கமாகக் காட்ட வேண்டுமானால் கீழ்க்காணும் பட்டியல் வட இந்தியாவில் ஸ்ரீவைணவக் கோவில்கள், மடங்கள், ஆய்வுநிலையங்கள் ஆகியவை உள்ள முக்கியமான இடங்களைக் காட்டும். பூரியில் உள்ள ஒன்றிரண்டுதவிர மற்ற அனைத்துமே பெரும்பாலும் கடந்த நூற்றாண்டுக்குள் எழுந்தவை.

இராஜஸ்தானம், உத்திரப்பிரதேசம், பீகார் ஆகிய இடங்களில் ஸ்ரீவைணவர் எண்ணிக்கையும், புதிய கோயில்களும் பெருகிய வண்ணமுள்ளன என்பதும் குறிப்பிடத் தக்கது.

| ஒரிசா -- 23 | மேற்குவங்கம் -- 14 | பீகார் -- 50 |
|---|---|---|
| பூரி - 22 | சுதிபேரோ - 1 | பக்ஸர் |
| கட்டாக் - 1 | கல்கத்தா - 10 | பஸாவ், |
| | மூர்ஷிதாபாத் - 3<br>முதலியன | கயா, பாட்னா,<br>அர்ரா, முதலியன |

| <u>உத்தரப் பிரதேசம்--56</u> | <u>மத்தியப்பிரதேசம்--16</u> | <u>ராஜஸ்தானம்-25</u> |
|---|---|---|
| பிருந்தாவனம்--15 | குவாலியர் | அஜ்மீர் |
| மதுரா - 4 | இந்தோர் | ஜெய்பூர் |
| அயோத்தியா-10 | ரீவா | ரோல் |
| காசி -- 4 | அலிராஜபூர் | டிட்வானா |
| அலகாபாத் --12 | முதலியன | ஜோத்பூர் |
| ரிஷிகேசம் -- 11 | | முதலியன |
| முதலியன | | |

| <u>மகாராஷ்டிரம் -17</u> | <u>குஜராத் -- 7</u> | <u>இமாலசலப் பிரதேசம்-3</u> |
|---|---|---|
| பம்பாய் | துவாராகா | |
| புனா | பரோதா | தேரிகட்வால் -2 |
| ஷோலாப்பூர் | காரோசா | பத்ரி ஜோஷிமத் |
| நாசிக் முதலியன | முதலியன | |

| <u>பஞ்சாப்</u> | <u>டில்லி - 2</u> |
|---|---|
| அமிர்தசரஸ் | (இவைதவிர நேபாளத்திலும் 12 உள்ளன) |
| பியானி | |

மேற்கண்ட இடங்களில் உள்ள கோயில்கள், மடங்கள், சமயச் சொற்பொழிவுகள் ஆகியவை வட இந்தியாவின் தென்னகம் பற்றிய 'அன்னிய' உணர்வு விலக மிக உதவுகின்றன. இவற்றாலெல்லாம் தமிழர்பால் உயர்ந்த எண்ணமும் மதிப்பும் ஏற்படுகின்றன. இராமானுசர் மேல் உள்ள பக்தியாலும், கண்ணனை அடைந்த கோதையை இலக்குமியாக ஏற்றுக் கொள்வதால் திருவரங்கத்தின் மேல் உள்ள பக்தியாலும், ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் நிகழ்ந்த இடமெல்லாம் தமிழ்நாட்டில் என்ற எண்ணத்தாலும் வட இந்தியர்கள் தமிழகத்துக் கோயில்களைக் கண்டு வணங்கி வருவதை மிகப் பெரிய பேறாக நினைக்கிறார்கள். தமிழ் நாட்டு வைணவ, இந்து சமயத் தலைவர்களை மிகப் பக்தியோடு அன்போடும் வரவேற்று ஆதரிக்கிறார்கள். குறைந்த பட்சம் வட இந்தியாவில் வைணவரிடையே மொழி, சாதி, மாநிலம் போன்ற வேற்றுமைகள் மறக்கப்படுகின்றன. வங்கம், நேபாளம் போன்ற இடத்தவர் கூட ஸ்ரீவைணவரானதும் மரக்கறியுணவுக்கு மாறி விடுகிறார்கள். வழிபாடு, சடங்குகளிலும் தாக்குரவு உள்ளது. குறிப்பாக ஈமச்சடங்கில் தமிழ்நாட்டு ஸ்ரீவைணவத் தாக்கத்தினால் 'வைகுண்டோற்சவம்' என்று தனியாகக் கடைப் பிடிக்கப்படுகிறது.

தீட்சை பெறும்போது பெயர்களும் மாறுகின்றன. பஞ்சாபைச் சேர்ந்தவர். ரங்கநாதர் என்றும் இராஜஸ்தானப் பெண்மணி கோதா என்றும், நேபாளப் பெண்மணி இரங்கநாயகி யென்றும், பெயர் வைத்திருப்பது பரவலாகக் காணப்படுவது. வட இந்திய ஸ்ரீ வைணவர்கள் நெற்றியில் தவறாமல் சமயச் சின்னத்தை அணிவார்கள். கோயில்கள், மடங்களைச்

சேர்ந்தவர்கள் அந்தந்த மொழிக்குரிய உச்சரிப்புக் கலவையாகத் தமிழ்ப் பிரபந்தங்களை ஓதுகிறார்கள். மொத்தத்தில் இந்தியா முழுவதிலும், வெளியே நேபாளத்திலும் கூட மக்களில் ஒரு சிறுபகுதியினர் ஆழ்வாரடியார்களாகி உள்ளனர். ஆண்டு முழுவதும் நாட்டின் அனைத்துப் பகுதியிலிருந்தும் தென்னகக் கோயில்களை வழிபட வரும் வட இந்தியரின் பக்தியுணர்வைப் புரிந்து கொள்ள இச்செய்திகள் உதவலாம். நேபாளத்திலிருந்து வந்து பிருந்தாவனத்தில் தங்கி அரங்கமன்னாரைக் கண்டு வணங்கிக் கண்ணீர் மல்கப் பிரியா விடை பெறும் எளியமக்கள் எண்ணிலாதவர். வாழ்வில் ஒரு முறையேனும் திருவரங்கத்தைக் காண வேண்டும் என்ற ஏக்கமும் பலருக்குண்டு . வட இந்தியரோடு உண்மையான, நெருக்கமான உறவு, மொழி கடந்த உறவு ஏற்பட இவை உதவியிருப்பது மிக உண்மை.

## 2. இலக்கியத் தாக்குரவு :

12ஆம் நூற்றாண்டில் கர்நாடகத்தைச் சேர்ந்த சேன அரசர்கள் வங்கத்தில் அரசாண்டபொழுது அவர்கள் வாயிலாகவும் தென்னக வைணவம் கிழக்கில் பரவியது. இலட்சுமண சேனனென்ற அரசனின் அவைக்களக் கவிஞர் ஜயதேவர் தமிழ்நாட்டிலும் பிரபலமான 'அஷ்டபதி யென்னும் 'கீத கோவிந்தத்தை' இயற்றியவர். அகச்சுவை பொங்கும் இப்பக்திப் பாடல்களின் செல்வாக்கைக் கிழக்கிந்திய இலக்கியப் பரப்பு முழுவதிலும் காணலாம். வங்கத்தில் ஏறக்குறைய நானூறு ஆண்டுகள் வைணவப் பக்தி இலக்கியமே இலக்கியமாக இருந்தது. கிழக்கிந்தியாவில் பெருங்கவிஞர்களான சண்டிதாஸ், வித்யாபதி ஆகியோரின் 'பதாவளி' இலக்கியங்கள் திருப்பாவையோடு பல ஒற்றுமைகள் உடையவை. ரவீந்திரரின் 'கீதாஞ்சலி' யிலோ அவர் தம் 'ஜீவன தேவதையை' நோக்கிப் பொழியும் பெருங்காதலும், தேடலும், ஏக்கமும் ஆழ்வார்கள் பாசுரங்களையே நினைவுறுத்தும்.

வங்கத்துச் சைதன்யரின் கௌடிய வைணவ தத்துவத்தை 'ஹரிபக்தவிலாசம்' என்ற நூலாக (15-16ஆம் நூற்றாண்டு) எழுதிய கோபால பட்டர் திருவரங்கத்தைச் சேர்ந்தவரென்பர். சைதன்யர் நான்கு மாதங்கள் திருவரங்கத்தில் ஒரு வைணவக் குடும்பத்தோடு தங்கித் திருமலை வழிபாடு செய்தார் (திருவரங்கக் கோயிலின் முன் சைதன்யரின் நினைவுச் சின்னமும் உள்ளது). ஊர் திரும்புகையில் அக்குடும்பத்திலிருந்து கோபால் பட்டரைத் தம் சீடராக அழைத்துச் சென்றார். வங்க நூல்களில் கோபாலரைத் திராவிட பண்டிதர் என்று குறிப்பிடுகின்றனர். எனவே ' ஹரி பக்த விலாசத்தில்' ஸ்ரீ வைணவ வழிபாட்டு முறைகள் நிறைந்திருப்பதில் வியப்பொன்று மில்லை. எனினும் இவையாவும் பொதுவான சில செய்திகளே. (மேற்கு வங்கத்து மாயாப்பூரில் சைதன்ய ஆலயத்தில் இராமனுஜருக்குச் சிலை வைக்கப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கது. மற்றும் பல கௌடிய வைணவ சமயத் தலைவர்களும் தாம் முக்கியமான கௌடிய நூல்களில் குலசேகராழ்வார் போன்ற பலர் பாடல்களைப் பயன்படுத்தியுள்ளதாகக் கூறுகின்றனர்).

## தமிழ் வைணவ இலக்கியங்களில் நேரடியான தாக்குரவு :

தமிழ்ப் பக்தி இலக்கியங்கள் வட இந்தியாவில் சமய நோக்கிலேயே அறிமுகப்படுத்தப் பட்டன. அதுவும் வடமொழி வாயிலாகத்தான் தமிழை அறிமுகப்படுத்த முடிந்தது. ஒரு கால கட்டத்தில் வடமொழியே கலை, கல்வி, தத்துவம், சமயம் ஆகிய அனைத்துத்துறையிலும் ஊடக மாகவும், தமிழ்நாட்டிற்கு வெளியே தொடர்பு மொழியாகவும் விளங்கியது. அதுவும் சமயத்துறையில் இன்றியமையாததாக விளங்கியது.

வட இந்திய மொழிகளில் தமிழ்ப் பக்தி இலக்கியங்கள் பெற்றுள்ள இடத்தைப் பின் வருமாறு வகைப்படுத்தலாம்.

1) ஆழ்வார்களின் பிரபந்தங்கள், மற்றும் ஸ்ரீ வைணவ நூல்களை வடமொழி மற்றும் (இந்தி, வங்காளி, ஒரியா, நேபாளி, பஞ்சாபி ஆகிய) மாநில மொழிகளில் வெளியிடுதல்/ அச்சிடுதல்.

2) ஆழ்வார் பிரபந்தங்கள் அவற்றிற்கெழுதப்பட்ட உரைகள் ஆகியவற்றின் வடமொழி மற்றும் மாநில மொழிகளில் மொழி பெயர்ப்பு.

3) மேற்கூறிய மொழிகளில் வட இந்தியரால் எழுதப்பட்ட ஸ்ரீவைணவ விளக்க நூல்கள், வரலாறுகள், பாடல்கள், நாடகங்கள், முதலியன.

4) ஸ்ரீ வைணவம் தொடர்பாக வெளியாகும் இதழ்கள், ஆராய்ச்சி நூல்கள் முதலியன.

### வங்காளி மொழி :

கோவர்த்தன பீடத்து ஸ்ரீரங்கதேசிகரின் ஆளுமையால் உருவான பலப்பல சீடர்களுள் அயோத்தியைச் சேர்ந்த பலராம் சுவாமிகள் கல்கத்தாவில் இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் பல பேரறிஞர்கள் ஸ்ரீ வைணவம் தழுவக் காரணமாக இருந்தார். அவர்களுள் தலை சிறந்தவர் இந்து பூஷன் வசு என்ற மிகப் பெயர் பெற்ற மருத்துவர் - கவி ரவீந்திரரின் குடும்ப மருத்துவர். இவர் தம் மருத்துவத் தொழில், பெரும் வருவாய் எல்லாவற்றையும் துறந்து ஸ்ரீ வைணவத் துறவியாகி *1951* இல் திருச்சியில் (திருவரங்கத்தில்) தங்கித் தமிழும், நாலாயிரப் பிரபந்தம் முதலிய வைணவ சமய நூல்களும் கற்று *1946* இல் தம் செல்வத்தையெல்லாம் இலக்குமி நாராயணன் கோயில் கட்டி, ஆசிரமம், இலவச மருத்துவ மனை, பள்ளி ஆகியவற்றில் ஈடுபடுத்தினார். *1975* இல் மறையுமுன் வங்காளி மொழியில் *60* ஸ்ரீவைணவ நூல்களை மொழி பெயர்த்தும் வெளியிட்டும் மிகவரிய தொண்டு செய்தார். இவர் துறவேற்று ஏற்ற பெயர் யதீந்திர ராமானுஜ தாசர்.

| | குறிப்பிடத்தக்க இவரது சில நூல்கள் | (வங்காளி) பக்கங்கள் |
|---|---|---|
| 1. | சகஸ்ர நீதி (நம்மாழ்வார் திருவாய் மொழி) மூலமும், உரையும் தமிழ் ஒலிபெயர்ப்பும் விளக்கமும் இவரது எல்லா மொழிபெயர்ப்பு நூல்களிலும் உண்டு | 742 |
| 2. | சடகோபாழ்வாரும் அவரது திவ்விய பிரபந்ததங்களும் (மற்ற மூன்றும்) | 152 |
| 3. | திருப்பல்லாண்டு (பெரியாழ்வார்) | 130 |
| 4. | தொண்டரடிப்பொடி (பக்தாங்கிரிரேணு) ஆழ்வாரும் அவரது திவ்விய ப் பிரபந்தங்களும் | 42 |
| 5. | திருப்பாணாழ்வாரும் அவரது திவ்வியப் பிரபந்தங்களும் | 32 |
| 6. | மதுரகவியாழ்வாரும் அவரது திவ்வியப் பிரபந்தங்களும் | 30 |
| 7. | முதலாழ்வார் மூவரும் அவரது திவ்வியப் பிரபந்தங்களும் | 130 |

8. ஸ்ரீ விரதம் - (திருப்பாவை, பெரியவாச்சான் பிள்ளை உரையுடன்) 352

9. ஸ்ரீ வைஷ்ணவ தத்துவமும் தர்மமும் (திருவாய்மொழி யின் 'ஈடு' உரை வங்கமொழிச் செய்யுள்களில்) 850

10. நாச்சியார் திருமொழி

11. திருமங்கை ஆழ்வார் - 500 பாசுரங்கள் (அச்சில்)

12 உபதேச ரத்தின மாலை - (மணவாள மாமுனி) 80

13. ஆழ்வார்கள்

14. ராமானுஜ நூற்றந்தாதி - நரசிம்ம ராமானுஜதாசர் (யதீந்திரரின் சீடர், தற்போதைய ஆசிரமத் தலைவர்)

(வங்கமொழியில் மொழிபெயர்ப்பாளரின் கவனம் கவர்ந்தவை (இதற்கு முன்) திருக்குறளும், சிலப்பதிகாரமும் மட்டுமே. அவையும் ஆங்கிலம் வாயிலாகவே)

முன்கூறப்பட்டவை தவிர யதீந்திர ராமானுஜாசாரியரால் மொழிபெயர்க்கப்பட்டவை :

1. இராமானுஜரின் ஒன்பது நூல்களும் (வடமொழியிலிருந்து)
2. யாமுனாசாரியரின் இரண்டு நூல்கள் ( " )
3. மணவாள மாமுனிகளின் உரையோடு பிள்ளை லோகாசாரியரின் ஸ்ரீ வைணவ நூல்கள் (மணிப்பிரவாளத்திலிருந்து .)

கிழக்கு வங்காளத்தைச் சேர்ந்த சீனிவாசாச்சாரியார் என்ற மற்றொரு வங்க ஸ்ரீவைணவத்துறவி நாங்குநேரி வானமாமலை மடத்தில் தங்கிப் படித்துப் பிற்காலத்தில் நேபாளத்தில் ஸ்ரீ வைணவம் பரப்பியவர். நேபாளி மொழியிலும் ஸ்ரீ வைணவம் தொடர்பாக எழுதியுள்ளார். இவரால் வங்கமொழியில் பெயர்க்கப்பட்டு யதிந்திரரால் வெளியிடப் பெற்றவை.

1. கூரேசரின் பஞ்சஸ்தவி
2. கூர நாராயண ஜீயரின் சுதர்சன சதகம்
3. தேவராஜ முனியின் விலட்சண மோட்சாதிகாரம்.
4. லோகாசாரியரின் அர்ச்சிராதி மார்க்கம்.

மேற்கண்டவை தவிர 1906ஆம் ஆண்டு முதல் இன்று வரை 16 வங்கமொழி நூல்கள் ராமானுஜரின் வாழ்க்கை வரலாறு பற்றியும், ஆழ்வார்கள் பற்றியும், தென்னக வைணவமும், வங்க வைணவ இலக்கியம் தொடர்பாகவும் வெளியிடப்பட்டுள்ளன. அவற்றில் இரண்டு, நாடகங்கள்.

## வங்காளி ஸ்ரீ வைணவ மாத இதழ் :

யதீந்திரரால் தொடங்கப் பெற்ற 'உஜ்ஜீவன்' என்ற இவ்விதழ் 35 ஆண்டுகளாக வெளி வருகிறது. யந்திரரின் 'பலராம தர்ம சோபான்' என்ற ஆசிரமத்திலுள்ள நூலகத்தில்

ஸ்ரீவைணவ நூல்கள் - ஏறத்தாழ 4000 - அனைத்து மொழிகளிலும் உள்ளன.

## வடமொழி பெயர்ப்புகள் :

(உலகத் தமிழ் நிறுவன வெளியீடான Bibliography of Translation என்ற நூலில் குறிப்பிடப்பட்டவை இங்கே இடம் பெறவில்லை)

1. திருப்பாவை ஸ்வாபதேஷ் - ராமபிரபன்னாசாரியர் அகமதாபாத்
2. ஸ்ரீ கோதாம்பா கிருத விரதானுஷ்டானம் "
3. சகஸ்ரகீதி - (திருவாய்மொழி) அகமதாபாத்
4. பிரபன்னாம்ருதம் (ராமானுஜசரிதை) அனந்தாசாரியார்.

தமிழிலிருநதும் மணிப்பிரவாளத்திலிருந்தும் வட மொழிக்கு முதன் முதலில் அறிமுகம் செய்த ஸ்ரீ ரங்க தேசிகரின் நூல்கள் இவற்றிலிருந்தே மற்ற வட இந்திய மொழிகளுக்குச் சென்றன.

1. சகஸ்ரகீதி - நம்மாழ்வார் திருவாய்மொழி
2. திருப்பாவை
3. திருப்பல்லாண்டு - பெரியாழ்வார்.
4. பகவத் விஷய வியாக்யானம் - முப்பத்தாறாயிரப்படி
5. திருப்பாவை வியாக்யானம் - மூவாயிரப்படி
6. " " - ஆறாயிரப்படி
7. ஸ்ரீ வசன பூஷணம் - லோகாசாரியர் (மணவாள மாமுனிகள் உரை)
8. பிரமேய சேகரம்
9. பிரபன்ன பாரிஜாதம்
10. நிகமனப்படி
11. பறந்தபடி
12. அர்த்த பஞ்சகம்
13. அர்ச்சிராதி மார்க்கம்
14. முமுட்சுப்படி

(நன்றி - ஸ்ரீ ரங்கநாதர் கோயில் நூலகம், பிருந்தாவனம்)

## இந்தி :

1. குருபரம்பரையும் தனியனும் கேசவ சாஸ்திரி
2. ஸ்ரீ சுதர்சனாஷ்டகம் (வேதாந்த தேசிகர்) பதிப்பாசிரியர்- அனந்தசந்தேஷ்
3. பஞ்சஸ்தவி "

| | | |
|---|---|---|
| 4. | சுத்யத்ரயம் | " |
| 5. | ஆளவந்தார் அஷ்டோத்தரம் | " |
| 6. | அர்ச்சிராதி மார்கம் | " |
| 7. | அர்த்த பஞ்சக் | " |
| 8. | ஸ்ரீ விரதம் - திருப்பாவை | பீகார் அரசு வெளியீடு |
| 9. | நாலாயிரத் திவ்விய பிரபந்தம் (பல பகுதிகளாக) | சாந்தி நிகேதன் வெளியீடு |
| 10. | சகஸ்ரகீதி (திருவாய்மொழி) | சம்பத்குமாராசாரியார் |
| 11. | ஸ்ரீ பாஷ்யம் | சிவப்பிரசாத் திவிவேதி |
| 12. | முமுட்சுப்படி | " |
| 13. | யதிராஜ வைபவம் | |
| 14. | ஸ்ரீ கூரேச விஜயசாரம் | |
| 15. | முகுந்தமாலா ஸ்தோத்ரம் | |
| 16. | மோட்சமாலா | |
| 17. | உபதேச ரத்னமாலா | |
| 18. | பஞ்ச ரகஸ்யம் | |
| 19. | நிகமனப்படி | |
| 20. | ஸ்ரீ ராமானுஜாசார்ய ஸ்வாமிஜி மகாராஜ் | |
| 21. | தத்வ த்ரயம் | |
| 22. | தத்வ சேகர் | |
| 23. | வர்த்தாமாலா | |
| 24. | திருப்பல்லாண்டு | |
| 25. | பிரபன்னாம்ருதம் | |
| 26. | ஸ்ரீ வெங்கடேஷ் சரித்ரம் – தொடர் செய்யுள் - பண்டித யுகல கிஷோர் மித்ர, பிருந்தாவனம். | |

இவைதவிர 'அனந்த சந்தேஷ்' என்ற இந்தி ஸ்ரீவைணவ மாத இதழில் 18 ஆண்டுகளில் ஆயிரக் கணக்கான கட்டுரைகள், கோதா சாலீசா, ராமானுஜ மஹாத்மியம், போன்ற போற்றிகள், நம்மாழ்வார் போன்ற ஆழ்வார்களுக்கு அஞ்சலிகள், நூற்றெட்டுத் திருநாமங்கள், ஆண்டாள், பெரியாழ்வார், பல ஸ்ரீ வைணவ அடியார்கள் வரலாறுகள் ஆகியவை வெளியிடப் பட்டுள்ளன.

## மாத இதழ்கள் :

1 அனந்த சந்தேஷ் – பதிப்பாசியர் கேசவ சாஸ்திரி ஸ்ரீ ரங்கமந்திர் (பிருந்தாவனம்)

2 தேசிக சுதா -- ஸ்ரீ திரிதண்டி சுவாமி வேதாந்த ராமானுஜாசாரியார் (பீகார்)

**ஆய்வுகள்:** காசியிலும், அலகாபாதிலும், பிருந்தாவனத்திலும் ராமானுஜர் 'ஆய்வு நிலையங்கள் ' உள்ளன. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் வேதாந்த தேசிகரின் நூல்கள் ஆகியவற்றோடு 'ஒப்பாய்வுகளும்' முனைவர் பட்டத்திற்கான பல ஆய்வுகளும் செய்யப் பட்டுள்ளன. கம்பராமாயணத்தில் இந்தி மொழிபெயர்ப்பு [2 பாகங்கள் பாடல்கள் திரு. ராஜகோபாலன் - இயக்குநர் - இந்தி நடுவண் நிலையம். ஆக்ரா -- (ஓய்வுபெற்றார்) ] பீகார் மாநில அரசால் வெளியிடப் பெற்றதும் இங்கே குறிப்பிடத் தக்கது.

அனந்த சந்தேஷ் இந்தி இதழில் வெளியாகும் கட்டுரைகளில் திருமஞ்சனம், சாத்துபடி, திருமாளிகை, பொங்கல் முதலிய உணவுகள் ஆகிய பல தமிழ்ச் சொற்கள் ஆளப்படுகின்றன. இவற்றை மொழிபெயர்க்க முடியுமென்றாலும் இவற்றை ஸ்ரீ வைணவக் குறியீடுகளாகவே விரும்பிப் பயன்படுத்துகிறார்கள்.

## நேபாளி :

| | | |
|---|---|---|
| 1. | ஆசார்ய குண ரத்னமாலா - திரு. ராகவேந்திராசாரி | காத்மந்து (நேபாளி) |
| 2. | ஸ்ரீ விரதம் -- திருப்பாவை | " |
| 3. | கோதாம்பா விரதக்ருத்யம் (உரையுடன்) | " |
| 4. | சகஸ்ரகீதி -- (திருவாய்மொழி) | சூடாமணி சாஸ்திரி |

## பஞ்சாபி :

ஸ்ரீ பாஷ்யம் ஸ்ரீ மதி உரை — ஸ்ரீ சதர்சனாசாரியார் (பஞ்சாபி)

## ஒரியா :

ஆளவந்தார் அஷ்டோத்தரம்

ஸ்ரீ ராமானுஜ (சரித்திரம்)

ஆண்டுதோறும் ஸ்ரீ வைணவ மாநாடுகள் வட இந்தியாவிலும் நேபாளத்திலும் நடை பெறுகின்றன. தென்னிந்தியாவிலிருந்து ஸ்ரீ வைணவ சமயத் தலைவர்களும், சமய அறிஞர்களும் சிறப்பான நிகழ்ச்சிகளுக்கு அழைக்கப் பெறுகின்றனர். வட இந்தியாவிலிருந்தும் காஞ்சிக்கும், திருவரங்கம், நாங்குனேரி முதலிய இடத்து வைணவ சமய நிகழ்ச்சிகளுக்கும் தவறாது வந்து தங்கள் பங்கைச் செய்கின்றனர்.

* * *

# அறிவியல் மொழியாய் ஆக வேண்டாமா.....?

புலவரேறு அரிமதி தென்னகன்

உயிரென்றோம் உணர்வென்றோம் தாயின் மேலாம்
உயர்வென்றோம் செந்தமிழை; நீர்பாய்ந் தாலும்
பயிர்கருகும் விதமாக ஆன தன்றிப்
பயனாக வளர்ச்சியென்ன கண்டோம்! மத்தால்
தயிர்கடைந்தால் வெண்ணெயினைக் காண்போம்; வெற்றுத்
தண்ணீரைக் கடைந்திட்டால், அதுதான் மிஞ்சும்!
அயராமல் உழைப்பதுவாய், உணர்ச்சி நூலால்
ஆடையினை நெய்தணிந்தால் நிர்வா ணந்தான்!

மூத்தமொழி என்றார்கள் உலகம் கண்ட
முதன்மைமொழி என்றார்கள் மூன்று வேந்தர்
காத்தமொழி என்றார்கள் இலக்கி யங்கள்
கண்டமொழி என்றார்கள்; கேட்டோம், சொன்னோர்
தோத்திரமாய்க் கொண்டாரே அன்றி, ஈங்கே
தொண்டென்ன செய்தார்கள்! எங்கும் ஆட்சி
மாத்தமிழே என்றோமே, 'மம்மி டாடி'
மயக்கத்தில் சிற்றூரும் மயங்கும் அன்றோ!

வெற்றுணர்ச்சிக் கால்நட்டுப் பந்தல் போடும்
விளையாட்டே முடியாது; தமிழ்முன் னேற்றப்
பொற்கோயில் கோபுரத்தைக் கட்டிக் காணும்
புரட்சியினை வாய்க்கூச்சல் புரிதல் இல்லை!
பற்றென்று சொன்னோமே, பற்றிக் கொண்ட
பற்றென்ன? பற்றாலே விளைந்த தென்ன?
அற்புதங்கள் அறிவியலில் நொடிக்கு நூறாய்
அணிவகுக்கும்; நாமென்ன தமிழில் கண்டோம்!

அறிவார்ந்த சிந்தனைதான் வேண்டும்; வெற்றாய்
அருச்சனைகள் செய்வதனை விடுதல் வேண்டும்
திறமார்ந்த மொழியாகத் தமிழை ஆக்கும்
தேவையினைக் காலத்தின் ஆவல் தீர்க்கும்
முறைதேர்ந்து செயவேண்டும்; பழங்க யிற்றால்
முகில் கிழிக்கும் விண்ணூர்தி இழுக்கும் போக்கு
கறையார்ந்த மடமையென உணர்தல் வேண்டும்
கணக்கறியாப் புதுமையெலாம் தமிழில் வேண்டும்!

கட்டுமரம் போதுமெனில் இனமுன் னேற்றம்
கனவாகும்; பிறகேது மொழியின் ஏற்றம்!
தொட்டுவிட்ட துறையெல்லாம் புதுமை பொங்கும்
தொடமாட்டோம் எனும் புதிய தீண்டா மைக்குக்
கட்டுண்டோம் எனில், நாமே மறைவோம்; பின்னர்
காலத்தின் பகையாகி மொழியும் மாளும்!
திட்டமிட்டு விஞ்ஞான வளர்ச்சி நோக்கில்
தீந்தமிழை உருவாக்கி உயர்வோம் நாமும்!

மருந்துக்கும் பயன்படுத்தும் காலம் உண்டு
மரபுக்கும் பொருந்துமிது; சுவைத்தே உண்ணும்
விருந்துக்கும் அளவுண்டு; இலக்க ணத்தின்
விளைவுக்கும் தகுந்ததிது; விஞ்ஞா னத்தால்
வருந்தகுதி நந்தமிழ்க்கும் வருதல் வேண்டும்
வழக்கமெனப் பழக்கமெனத் தடுக்கும் கூட்டம்
திருந்தத்தான் வேண்டுமினி! தமிழைப் போற்றித்
தெய்வமொழி எனல்,புகழ்மைச் சிறையே யாகும்!

உடைமாற்றம் உண்ணுகிற உணவில் மாற்றம்
உணர்வுகளில் பலமாற்றம்; சமுதா யத்தை
மடை மாற்றும் மனமாற்றம் கொள்வோம்; ஆனால்
மரபினிலே சிறுமாற்றம் மொழியை ஏற்றும்
தடை,மாற்றும் என்றாலோ ஏற்க மாட்டோம்;
தகர்ந்தாலும் இலக்கணத்தை மாற்ற மாட்டோம்!
விடை, மாற்றித் தான்சொல்வேன் என்றால் காலம்
வியந்திடலாம்; கேள்வியதில் மாற்றம் இல்லை!

அருமைமிகு செந்தமிழே என்றோ தாமல்
அறிவியல்சேர் புதுமொழியே என்றே போற்றும்
பெருமைகளைச் சேர்த்திடுவோம்; கலைகள் யாவும்
பெற்றளிக்கும் அன்னைமொழி என்னும் காலம்
விரைந்திடவே செயல்புரிவோம்! அடிமை நீக்கும்
விடுதலைக்குத் தியாகங்கள் செய்ததேபோல்
பரந்தமனத் தால், மொழியைப் புதுக்கும் போது
பயன் கருதி மரபுகளில் மாற்றங் காண்போம்!

மாற்றங்கள் உயிரியற்கை, புதுமை பூத்து
மணம் பரப்பல் உலகியற்கை; மொழியும் மாறி
ஏற்றங்கள் பெற்றதற்குச் சரித்தி ரத்தின்
ஏடுகளே சாட்சிகளாம்! "மரபை மட்டும்
போற்றுங்கள்; புதுமைகளும் வந்தால் என்ன;
போகட்டும்" என்பதிலோர் பொருளே இல்லை!
தூற்றுங்கள்; மொழிப்பகைவன் என்னும் குண்டால்
துளையுங்கள்; கவலையிலை! உண்மை வெல்லும்!

* * *



# நெய்தல் பாடலும் நடுக்கடல் வருணனையும்

ச. முருகானந்தம்

அறிஞர் மு. வரதராசன் தமது 'பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை' எனும் ஆராய்ச்சி நூலில் சங்க இலக்கியத்தை ஆய்ந்துள்ளார். சங்கப் பாடல்கள் காட்டும் இயற்கை, நிலம், வானம், நிலத்தில் காணலாகும் உயிரினம், பயிரினம், அக்கால மக்களின் இயற்கையோடியைந்த வாழ்வு ஆகியன ஆராய்ச்சியின் உறுபயனாகத் துலக்கம் பெற்றன. சான்றோர் இலக்கியத்தை ஆக்கியளித்த புலவர்களின் புலமாகிய பாடுதுறை, பாடுபொருள் இன்ன பிற செய்திகளையும் இவர்தம் ஆய்வால் அறிய வருகிறோம்.

நிலம் என்னும் பெருந்தலைப்பின் கீழ், 'நெய்தல்' என்னும் சிறுதலைப்பின் கீழ் மு.வ. கூறும் கருத்து சிந்தனையைத் தூண்டுவதாக உள்ளது. முதலில் அறிஞரின் ஆய்வுரையைக் காண்போம்.

"நெய்தல் திணைப்பாடல்கள் சங்க இலக்கியத்திலே நிரம்ப உண்டு; அவற்றிலே நெய்தல் நில வருணனைகளும் உண்டு. எனினும், கடற்கரைச்சார்பே பெரிதும் பாடப்பட்டுள்ளதே யன்றிக் கடல் உட்பரப்பு பற்றிய வருணனை காண்பது அருமையாக உள்ளது......

" தமிழகம் வடதிசை தவிர்த்த ஏனை மூன்று திசைகளிலும் கடலால் சூழப்பட்ட நாடு; பண்டைக் காலந் தொட்டுக் கடற்பயணத்திலே தமிழர்கள் தேர்ச்சி பெற்றிருந்தார்கள் என்பதும் உண்மை. எனினும் கவிதை உலகினருக்கு மட்டும் ஏனோ பேரளவில் கற்பனைக் கவர்ச்சியைக் கடல் ஊட்ட வில்லை......

"மனித வாழ்வின் அமைப்பிலே கடலுக்கும் பெரும் பங்கு உண்டு என்பதில் ஐயமில்லை எனினும் கடற் பயணம் பற்றிய குறிப்புகள் பழந்தமிழ் இலக்கியத்தில் காணக் கிடைப்பது அருமையாகவே உள்ளது. இது மிக வியப்பான ஒரு செய்தியாகும். கடலைப் பற்றிப் பெரும்பாலும் எல்லோருமே குறிப்பிடுகிறார்கள்; உண்மைதான்; எனினும் அந்தக் குறிப்புகளெல்லாம் கடற்கரையையோ, கடற்கரைச் சோலையையோ, உப்பங்கழியையோ, அல்லது இரவெல்லாம் நெய்தல் நிலச் சிற்றூர்களில் கேட்கும்படி மோதி முழங்குகின்ற அலையையோ வருணிக்கும்போது சிறு குறிப்புகளாகவே வருகின்றன....

"சங்க காலப் புலவர்களில் நெய்தல் நிலக்காட்சிகளை நிரம்பப் பாடியவர்கள் அம்மூவனார்; உலோச்சனார், நல்லந்துவனார் ஆகிய மூவராவர்; நெய்தல் நிலத்திலேயே வாழ்ந்தவர்கள் என்று கொள்ளத்தக்க இப்புலவர்களும் நெய்தல் நிலத்துப் பறவைகள், மரம் செடி கொடிகள் முதலியவற்றைப்பற்றி நிரம்பத் தெரிந்தவர்கள் என்று கொள்ளும் அளவில்தான் நிற்கிறார்கள்; ஷெல்லியைப்

போலவோ பைரனைப் போலவோ நடுக் கடல் வருணனையைப் பாடவே இல்லை..... பண்டைத் தமிழர்கள் கீழ்த்திசையிலும் மேலைத் திசையிலும் கடல் கடந்து சென்று அயல் நாடுகளில் வாணிகத் தொடர்பினை நிலை நாட்டியிருந்தனர். ஆயினும் கரைக்கு அப்பால் உள்ள கடலிடை நிலவும் காட்சியோ, அன்றிக் கடற்பயணமோ பாடல்களில் சிறப்பான இடம்பெறும் அளவுக்குச் சங்கப் புலவர்களைக் கவரவில்லை என்றே சொல்ல வேண்டியுள்ளது.

"கடற்கரை பற்றியும் துறைமுகங்களில் நடை பெற்ற வாணிகம் பற்றியும் மிக விரிவும் விளக்கமும் கொண்ட வருணனைகள் சங்கப் பாடல்களிலே உண்டு. ஆயினும், கடலினை நேராக வருணிக்கும் இடங்கள் அருகியே காணப்படுகின்றன" (அடிக்கோடுகள் இக்கட்டுரையாசிரியரால் இடப்பட்டன)[1] .

மேற்காட்டிய மு.வ. வின் ஆராய்ச்சியுரை நீண்ட மேற்கோளாயினும் இக் கட்டுரைக்கு அவசியத் தேவையாக அமைவதால் இப்பகுதி முழுவதும் எடுத்தாளப்படுகிறது. இவ்வாய்வுரையில் கூறும் கருத்து வெளிப்படை. கடற்சார்ந்த பகுதிகளின் வருணனைகளைக் காண முடிகிற அளவுக்கு நடுக்கடல் அனுபவங்களைக் காணமுடியவில்லை என்கிறார் மு.வ. கடற்பரப்பில் மிதக்கும் படகுகள் (கலித்தொகை 149) பற்றி அம்மூவனார் பாடியிருப்பினும் அவை நடுக்கடலில் மிதப்பன எனக் கூற வியலாது. துறைமுகத்தில் நங்கூரம் பாய்ச்சி நிறுத்தப்பட்ட கப்பல் பெரும்புயற் காற்றில் சிக்கி நங்கூரக் கயிற்றை அறுத்துக்கொண்டு சுழலில் சிக்கியமையை நக்கீரர் காட்டுகிறாரென்றாலும் (மதுரைக் காஞ்சி 375 - 383) இதுவும் நடுக்கடல் காட்சியன்று. உலோச்சனாரும் மருதன் இளநாகனாரும் நடுக்கடலில் காட்சிகளை ஓரளவுக்குத் தந்திருக்கின்றனர். நடுக்கடலில் பரதவர் எறியுளி கொண்டு பெருமீனை வேட்டையாடுவதை உலோச்சனாரும் (அகநானூறு 210) தொலைவில் தெரியும் கலங்கரை விளக்கத்தை இலக்காகக் கொண்டு இயங்கும் பெரிய கப்பலை மருதன் இளநாகனாரும் (அகநானூறு 255) படைத்துக் காட்டியுள்ளனர். சங்க இலக்கியமாக நமக்குக் கிடைத்திருக்கிற அத்துணைப் பாடல்களில் இவ்வாறாக நடுக்கடல் அனுபவக் காட்சிகள் அருகியே காணப்படுதல் மு.வ. வின் வியப்புக்குக் காரணமாகி உள்ளது. அதுமட்டுமல்லாமல் கவிதை உலகினர்க்குக் கற்பனை உணர்ச்சியைக் கடல் ஊட்டாததன் காரணத்தை அவர் விதந்துரைக்க முற்பட்டபோது 'ஏனோ ஊட்டவில்லை' எனக் கூறியமைதி உறும்படிச் செய்திருப்பதையும் காண்கிறோம். ஆய்வாளரை இங்ஙனம் வியப்புக்கும் திகைப்புக்கும் ஆளாக்கிய இந்த இடமே இக்கட்டுரை கருக்கொண்ட இடமாகும்; இக்கருத்துச் சிக்கலை விடுவிக்கும் முயற்சியில் சிந்தனையோட்டத்தைத் தூண்டிய இடமும் இதுவேயாகும்.

இக்கருத்துச் சிக்கலிலிருந்து விடுபடுவதற்கு முன்னால் நமது இலக்கிய மரபுகள் பற்றிய செய்திகளை மீள்பார்வை பார்த்தல் நலம். தொல்காப்பியர் முதலான இலக்கணிகள் படைத்துக் காட்டியுள்ள முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகியவற்றுள் மூன்றாவதாகச் சுட்டப்படும் உரிப்பொருளே முதன்மையானது என்பதை அறிஞர் அறிவர். உரிப்பொருளைச் சிறப்பாக வெளிப்படுத்த முதற்பொருளும் கருப்பொருளும் துணை செய்கின்றன. நாட்டிய மங்கையின் கலை வெளிப்பாட்டுக்கு மேடையும் நல்லிசைக் கருவிகளும் துணையாதல் போலவும் நிலவுக்கும் நட்சத்திரக் கூட்டங்களுக்கும் நீலவானம் பின்புலமாயிருந்து காட்சிச் சிறப்புக்கு உதவுதல் போலவும் உரிப் பொருளின் சீரிய வெளிப்பாட்டுக்கு நிலம், பொழுது ஆகிய முதற்பொருள்களும் தெய்வம் முதலாகிய கருப்பொருள்களும் உதவுகின்றன; இதனாலேயே திணை எனும் சொல் முதலில் நிலத்தைக் குறித்து பின்னர் அந்நிலத்தில் வாழும் மக்களின் ஒழுக்கத்தை குறிப்பதாயிற்று. இச் சொல் இவ்வாறு இரு பொருள்களுக்கும் உரித்தான போதிலும் பின்னாளில் நிலத்தைப் புறந்தள்ளி ஒழுக்கத்தை முன்னிறுத்தி நிற்பதாயிற்று. ஒழுக்கத்தைச் சொல்வதற்கு நிலமும் ஒரு பின்புலம். காட்சிச் சிறப்புக்குப் பின்புலம் அவசியம். பின்புலத்தை

இயைபுப் பின்புலம், எதிர்ப் பின்புலம் அல்லது பகைப் பின்புலம் என இருவகைப் படுத்தலாம். மனதுக்கு இனிமை தரும் மலைச்சாரல் இன்ப வேட்கையை எழுப்பும்; கடும் பாலை பிரிவுத் துயரை மிகுவிக்கும். ஆகவே இவற்றை இயைபுப் பின்புலங்கள் எனலாம். ஓவியப் புலவர் இரவிவர்மா தீட்டிய 'தனிமையில் சகுந்தலை' எனும் ஓவியம் இயைபுப் பின்புலத்தின்-பாற்பட்டதாகும். உறுதிமொழியை மறந்த துஷ்யந்தனால் கைவிடப்பட்ட சகுந்தலை, தனிமையில் சோகமாய் ஒரு குத்துப் பாறைமேல் அமர்ந்திருப்பது போன்ற ஓவியத்தின் பின்புலத்தில் வறண்ட நிலப்பரப்பும் அதில் ஓர் ஒற்றைப் பனை மரமும் வரைந்திருப்பது சகுந்தலையின் தனிமையை, சோகத்தை மிகுதிப்படுத்திக் காட்ட வல்லதாகும். இளங்கோவடிகள் தமது சிலப்பதிகாரக் காப்பியத்தில் (அந்தி மாலை சிறப்புச் செய்காதை) மாதவி முதலிய புணர்ந்தோர் இன்பமும் கண்ணகி முதலிய பிரிந்தோர் துன்பமும் ஒருங்கே தொகுத்துக்காட்டி எதிர்ப் பின்புலம் அல்லது பகைப் பின்புலப் பின்னணியில் காட்சிச் சிறப்பைக் கூட்டியிருக்கிறார். நக்கீரர் தமது நெடுநல்வாடையில் மன்னனுக்கு மனைவியையும் மன்னனையும் ஒருவர்பின் ஒருவராக ஒருங்கே காட்டி அவர்தம் நினைப்புகளையும் நடவடிக்கைகளையும் எதிர்ப் பின்புலப் பின்னணியில் விளங்கச் செய்திருக்கிறார். ஆக, உள்ள உணர்வுக்கும் மெய்ப்புலப்பாட்டுக்கும் பின்புலங்கள் கணிசமாக உதவுதல் ஓர் இலக்கிய உத்தி எனத் தெளியலாம். இலக்கிய மரபறிந்தோர் இவ்வுத்தியைப் பயன் கொண்டே புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் எனும் ஒழுக்கங்களை அருமையாகப் புலப்படுத்துகின்றனர்.

மேற்சொன்ன ஒழுக்கங்களுக்கு முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய நிலங்கள் இடமாகக் கொள்ளப் படுகின்றன. கடும்பாலையில் காதலர்ப் புணர்ச்சியும் கவினுறு சோலையில் காதலர்ப்பிரிவும் யதார்த்தமாக நிகழக் கூடியனவாயினும் நமது சான்றோர் இலக்கியம் பெரிதும் நாடக வழக்கைத் தழுவியதாகலின் கவினுறு சோலையில் காதலர்ப் புணர்ச்சியும் கடும்பாலையில் காதலர்ப்பிரிவும் காட்டுதலே மரபாக அமைந்தன. பாலைத் திணையில் நீர்வழிப் பிரிவுகளைப் பாடுதலும் கடல்வினை முற்றிய தலைவர் தம் வரவை முல்லைத் திணையில் பாடுதலும் அவ்வழிப் புணர்ச்சிகளைக் குறிஞ்சித்திணையில் பாடுதலும் வழக்காறில்லை. அகத்திணை என்பது ஒருபால் நிலத்திணையாகவே உள்ளது என்பர் அறிஞர் வ.சுப. மாணிக்கம்.[2] மரபு வழிப்பட்ட பின்புலங்களாகப் புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் எனும் ஒழுக்கங்களுக்கு முறையே மலையும் மலைசார்ந்த இடமும், காடும், காடுசார்ந்த இடமும், வயலும் வயல்சார்ந்த இடமும், கடலும் கடல்சார்ந்த இடமும், முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து நல்லியல்பு இழந்து நடுங்கு துயர் உறுத்து கரிந்த கள்ளிக் காட்சிச் சூழலும் அமைகின்றன. மேற்சுட்டிய பின்புல நுணுக்கம் சிந்தனைக்கு விருந்தாக அமைந்திருத்தல் ஆழ்ந்து நோக்கத் தக்கதாகும். மலை, காடு, வயல், கடல் ஆகியன மட்டும் சுட்டப் படாமல் அவை 'சார்ந்த இடங்கள்' கவனமாகச் சுட்டப் பட்டிருத்தலின் நோக்கம் நினைக்க நினைக்க இன்பம் பயப்பதாகும். இவ்வாறே ஒழுகலாறு பற்றிச் சுட்டப்படும் இடங்களிலெல்லாம் 'நிமித்தம்' எனும் சொல்லாட்சி தவறாது இடம் பெறுதலைக் காணலாம். காட்டாக புணர்தலும் புணர்தல் நிமித்தமும், இருத்தலும் இருத்தல் நிமித்தமும் ஊடலும் ஊடல் நிமித்தமும் இரங்கலும் இரங்கல் நிமித்தமும் பிரிதலும் பிரிதல் நிமித்தமும் எனும் சொற்றொடர் ஆட்சிகளில் காணப்படும் ஒழுகலாற்று நிமித்தங்களைப்போல நிலங்களைச் சார்ந்த இடங்கள் மிகவும் முக்கியத்துவம் உடையன. சரியாகச் சொல்வதானால் புணர்தலைக் காட்டிலும் புணர்தல் நிமித்தமும் இருத்தலைக் காட்டிலும் இருத்தல் நிமித்தமும் ஊடலைக் காட்டிலும் ஊடல் நிமித்தமும் இரங்கலைக் காட்டிலும் இரங்கல் நிமித்தமும் பிரிதலைக் காட்டிலும் பிரிதல் நிமித்தமும் இலக்கிய ஆசிரியனின் இலக்கிய வெளிப் பாட்டிற்கு உதவக்கூடிய அற்புதமான இடங்களாகும். இதுபோலவே மலையைக் காட்டிலும் மலைசார்ந்த இடமும், காட்டைக்காட்டிலும் காடுசார்ந்த இடமும் வயலைக்காட்டிலும் வயல் சார்ந்த இடமும் கடலைக் காட்டிலும் கடல் சார்ந்த இடமும் முக்கியத்துவம் உடையன. பெருங் கல்மலையும்

குறுங்காட்டகமும் செந்நெல் வயலும் நடுக்கடல்தளமும் காதலர் காதல் உள்ளத்துடன் இயங்கும் இடங்களாகமாட்டா; அவை தொழிற்களங்கள்; காதற்களங்களல்ல.

யதார்த்த இலக்கியமாகிய நாட்டுப்புறப் பாடல்கள் தொழிற்களங்களில் காதல் உணர்வு, காதற்செய்கை ஆகிய புலப்பாட்டுப் போக்கைக் காட்டுகின்றன. ஆனால் கடுமையான மரபுகளையொட்டி 'இன்னது செய்க, இன்னது செய்யேல்' எனும் நெறிமுறைகளை அனுசரித்துப் பாடப்பட்ட சங்கப்பாடல்களுள் இதுபோன்ற நெகிழ்வுகளைக் காணல் அரிது. நிற்க. தொழிற்களங்களைச் சார்ந்த குடியிருப்புப் பகுதிகளும் இவற்றை யொட்டிய இயற்கைப் பிரதேசங்களுமே தலைமகள் இயங்குவதற்கு அணித்தாய், தோதாக அமைந்த இடங்களே அதாவது 'சார்ந்த இடங்களே', நம்புலவர் பெருமக்களால் காதல்களங்களாகக் கொள்ளப்படுகின்றன. தலைமகள் இயங்கும் இடங்களும் அவள் கட்புலம் காணும் பகுதிகளுமே காதற் பிரதேசங்கள் எனல் மிகவும் பொருத்தப்பாடுடையதாகும்.

சங்கப்புலவர்களின் நோக்கம் மலை, காடு, வயல், கடல், ஆகியவற்றின் வளங்காட்டுதல் அன்று. மலையின் திட்பமும் மலைவாழ் உயிரினம், பயிரினம் பற்றி விளக்கிப் பட்டியலிடுதலும் குறிஞ்சித்திணை பாடவந்த புலவரின் நோக்கமல்ல. இவ்வாறே காட்டுச் செழுமையும் காடுவாழ் உயிரினமும் பயிரினமும் பற்றிப்பாடுதலோ, நிலத்தின் இயற்கை, மண்ணின் வகைமை, நன்செய்ப்பயிர்களின் விளைவு பற்றிப் பாடுதலோ, கடல் தொழில் வகைமை, தொழிற்களச்சிரமம் பற்றி வெளிப்படுத்தலோ புலவர்களின் நோக்கமாக அமையவில்லை. குறிஞ்சிப்பாட்டு முதலான பாடல்களில் கோட்டுப்பூ, காட்டுப்பூ, மரப்பூ, செடிப்பூ, கொடிப்பூ எனப் பல்வேறு வகைப்பட்ட பூக்களை ஒருங்கே தொகுத்துக் காட்டி ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழரின் பயிரின அறிவு குறித்து மலைப்பு உண்டாக்கிய கபிலரின் நோக்கமும் புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாகிய தலைமகளின் ஒழுகலாற்றை முன்னிறுத்துவதேயாகும். உரிப்பொருள் புலப்பாட்டுக்கு உறுதுணை செய்யும் எனும் நோக்கில் பயன்கொள்ளப்பட்ட இயற்கைப் புனைவுகளை நாம் அறிகிறோமாயினும் அவை உபவிளைவுகளேயன்றி முழு முதற் பாடுபொருள் அல்ல. மலையைச் சார்ந்த சிறுகுடி, காட்டைச் சார்ந்த சேரி, வயலைச் சார்ந்த ஊர், கடலைச் சார்ந்த பாக்கம் ஆகிய இடங்களிலே வாழும் மக்களின் அன்பொழுக்கத்தை இதிலும் சிறப்பாக மகளிரின் இன்பச் சிறப்பை, இருத்தற் பொறுமையை, ஊடற்புலவியை, இரங்கல் அவலத்தை, பிரிவுத்துயரத்தைப் பாடுபொருளாக்குதலே புலவரின் புலப்பாட்டு நெறியாக இருந்தமை கவனிக்கத் தக்கது. இவர்தம் சிறந்த புலப்பாட்டுப் புலமைக்கு இயற்கைத் தளங்களின் பொருத்தப்பாடுடைய வருணனைகள் உதவிய போக்கும் கவனத்துக்குரியது. ஆங்கில இலக்கியப் புலவர்கள் உள்ளிட்ட மேலைத் தேயப் புலவர்களில் சிலர் இயற்கையை இயற்கைச் சிறப்புக்காகவே பாடிய போக்கைக் காணலாம். சான்றாக வில்லியம் வொர்ட்ஸ்வொர்த்தின் 'டேபொடில்ஸ்' (**The Daffodils**) போன்ற கவிதைகளைக் கொள்ளலாம். நமது சங்கப் புலவர்கள் இவ்விடத்தே இவர்களிலிருந்து வேறுபடுகின்றனர். இயற்கையை இயற்கைக்காகவே பாடாமல் இவ்வியற்கையைப்பின்புலமாக்கித்தாம் பாடவந்த பாடுபொருளின் இதிலும் சிறப்பாகச் சீரிய புலப்பாட்டுக்கு உதவும் வகையில் கொள்ளுவன கொண்டு தள்ளுவன தள்ளி இயற்கையைப் பயன் கொள்ளும் இனிய போக்கை அறியலாம்.

மலைச்சாரல் சூழலின் காட்சி விளக்கங்கள், புணர்தல், புணர்தல் நிமித்தச் செய்கைகளுக்குச் சிறப்புக் கூட்டின. மாலைக்காலக்காட்டின் கோலமும் ஆங்கே தொழிற்பட்டிருக்கும் ஆடவரை வீடுநோக்கி உந்தித் தள்ளும் காட்சிச் சூழலும் இருத்தல், இருத்தல் நிமித்தச் செய்கைகளுக்கு வலிவு சேர்த்தன. இங்ஙனமே பிற நிலக் காட்சிகளும் மற்ற ஒழுக்கங்களுக்குத் தகுதியான பின்புலம் அமைத்துக் கொடுத்து உதவி புரிதலைக் காண்கிறோம். நீண்ட கடற்கரைச் சோலையும் விரிந்து பரந்த கடற்கரைச் சூழலும் வெண்தலைப் புணரி கரைசேரும் காட்சியும் அக்கரையகத்தே விளங்கும் உயிரினமும் பயரினமும் தலைமகனை எதிர்நோக்கிக் கரைமுகத்தே

காத்திருக்கும் தலைமகளின் இரங்கலை மிகுவித்துப் பாடவந்தபுலவரின் புலப்பாட்டுத் தொழிலை லகுவாக்கித் தருதலை அறிகிறோம். இரங்கல் எனும் ஒழுக்கத்தைச் சிறப்பாகப் புலப்படுத்த கடல்சார்ந்த இடங்களே போதுமானவையாய் இருந்தமையாலேதான் சங்க இலக்கிய நெய்தற்புலவர்கள் நடுக்கடல்காட்சிகளைக் காட்டினர் இல்லை. நடுக்கடற்காட்சியாய்ப் பெருங்கப்பலின் பயணத்தைச் சுட்டிய மருதன் இளநாகனாரின் பாடல் (அகநானூறு 255) நெய்தல் திணையைப் பாடமுயன்று வழுவிப் பாலைத் திணையின்பாற்பட்ட போக்கைக் காண்கிறோம். இதனாலேயே அறிஞர் வ.சுப. மாணிக்கம் திணைவழுப்பட்ட இக்கடற் செலவுப்புனைவை நயமில்லை என்பர்[3]. நடுக்கடற் செலவைப் புனைந்துரைக்கும்போது அது முதல், கருப்பொருள்களால் நெய்தல் திணையாய் இருந்தபோதிலும் உரிப்பொருள் அடிப்படையில் பிரிவுத்தொனிக்கு மாறி பாலைத்திணைப் பாடலாகிவிடுகிறது. இதனாலேயே சங்கப் புலவர்கள் நடுக்கடற் செலவுகளை, அனுபவங்களை, காட்சிகளை விளக்கவில்லை. நெய்தல் திணை பற்றிய முந்நூற்று நாற்பத்தேழு பாடல்கள் சங்க இலக்கியங்களில் இருந்த போதிலும் மேற்காட்டிய அகநானூற்றுக் காட்சியைப் போல நிறைய காணுதல் இயலாது. நெய்தல் திணையைச் சார்ந்து முப்பது பாடல்களைப் பாடிய உலோச்சனாரிடம் இன்னும் மிகுதியாகக் கடற்காட்சிகளை மு.வ. எதிர்பார்த்துக் காட்டாமற் போனதற்குரிய காரணமும் இதுவேயாகும்.

> "நெய்தல் நில வருணனைத் துறையில் அம்மூவனார் ஆற்றியுள்ள பணி பெரிது; மிகப் பெரிது. ஆயினும் அவருடைய வருணனைகள் எல்லாம் கடற்கரை, கழி, கடற்கரைச் சோலை ஆகியவற்றோடு நின்று விடுகின்றன என்பதையும் குறிப்பிட வேண்டியுள்ளது. கீழ்க் காற்றால் எழுகின்ற அலைகள் கரைநோக்கி வந்து மணல் மேட்டைச் சிதைக்கும் செயலைப் பாடுகின்றார். கடல் நீரகத்து நண்டினால் தாக்கப்படும் மீன்பற்றிக் குறிப்பிடுகிறார். கூரிய காலொடு விளங்கும் அன்னமும் பெரிய கடற்கரையில் வாழ்ந்து கரிய கிளையுடைய புன்னையில் தங்கும் சிறு வெண்காக்கையும் கழி நீரில் உணவு தேடி உண்டு தங்கும் குருகும் இவரால் சுட்டப்படுகின்றன. இவ்வாறு பன்முகமாக இவர்தம் நோக்கம் படர்கின்றதாயினும் கடல்நடுவே செல்லவில்லை. கடல் நடுவில் எழக்கூடிய புயலும் சூறாவளியும் இவர் பாடலில் காணவில்லை. நாவாய் ஏறிக் கடல் கடக்கும் காட்சியும் அத்தகைய பயணத்தில் ஏற்படக்கூடிய இடுக்கண்களும் இவர் பாடலில் இல்லை. கடற் பயணத்தில் இவர்க்கு அனுபவம் இல்லை என்பதே நாம் கொள்ளத் தக்க முடிபு.
> (அடிக்கோடுகள் இக்கட்டுரையாசிரியரால் இடப்பட்டன.)[4]

அம்மூவனார் முதலான நெய்தல் திணைப்புலவர்கள் கடற்பயண அனுபவம் இன்மையால் நாவாய் ஏறிக் கடல் கடக்கும் காட்சிகளையும் கடற்பயண அனுபவங்களையும் பாடவில்லை எனக்கூறும் மு.வ.வின் ஆய்வு முடிபு பொருத்தப்பாடுடையது எனக் கூறவியலாது. பயண அனுபவம் இன்மையால் பாடவில்லை என்பதைக் காட்டிலும் பாடுபொருள் சிறப்புக்கு உதவாது என்பதால் பாடவில்லை எனக்கொள்வதே பொருத்தமுடையதாகும். பாடுபொருள் சிறப்புக்கு உதவாது என்பது மட்டுமன்று, பாடினால் அது வழுவின்பாற் கொண்டு சேர்த்துவிடும் என்பதாலும் சங்கச் சான்றோர் அங்ஙனம் பாடாமல் தவிர்த்தனர் எனக் கொள்ளலாம்.

இரங்கல் ஒழுக்கத்தைப் பாடும் புலவர்க்குக் கடற்கரையில் இருக்கும் தலைமகளின் எண்ணவோட்டத்தை, செயற்பாட்டைக் காட்டினால் போதும். நடுக்கடல் அனுபவங்கள் அவர்தம் பாடுபொருளுக்குப் பின்புலமாகும் அவசியமற்றன என்பதோடு பாடவந்த திணையையே மாற்றிவிடும் அபாயமும் உண்டு என்பதையும் மனங்கொள்ள வேண்டும். இன்னொரு செய்தியையும் இங்கே இணைத்துப் பார்ப்பது நலம். அனைத்துத் திணை ஒழுக்கங்களும் மகளிர்தம் செயற்பாடுகளையே பிரதானப்படுத்துகின்றன. சந்திக்கவரும் தலைமகனைச் சந்திக்கக் காத்திருக்கும் குறிஞ்சித் தலைவியையும், பிரிந்த தலைமகன் சொல்லிச்

சென்ற காலம் வரும் துணையும் ஆற்றியிருக்கும் முல்லைத் தலைவியையும், தலைமகனது பரத்தையர் ஒழுக்கத்தால் புலர்ந்தூடிய மருதத்தலைவியையும் கடற்தொழில் மேற் சென்று திரும்பிவரும்காலம் நீட்டித்த வழிக் கலங்கிக் கையற்று இரங்கி நிற்கும் நெய்தல் தலைவியையும், நீண்ட பிரிவுக்கு ஆட்பட்ட பாலைத் தலைவியையும் நமது இலக்கியங்கள் பிரதானமாகப் பேசுகின்றன. இதற்குத் தக, இரங்கல் ஒழுக்கத்தைக் காட்ட முயலும் புலவர்கட்குக் கடற்கரைப் பாக்கம், கடற்கரைச் சோலை, கடற்கரைக் கழி, கடற்கரைக் கானல் எனும் இடங்களில் இயங்கும் தலைமகளின் உணர்வுகளையும் அவளது உணர்வுகளை நேரிடையாகவும் மறைமுகமாகவும் தூண்டக்கூடிய அவளது கட்புலம் காணும் உயிரின பயிரினக் காட்சிச் சூழல்களையும் நிலம், பொழுது எனும் முதற்பொருள், தெய்வம் முதலாகிய கருப்பொருள் பிண்ணணியில் நுணுக்கமாகச் சொற்சித்திரம் தீட்டுதல் போதுமானதாகும். முந்நீர்ச் செலவு மகடுக்கு இல்லையாதலால் இதுகுறித்து அனுபவங்களும் சிந்தனையோட்டங்களும் அவளுக்கு இல்லை என்பதும் ஒரு சிறப்புக் காரணமாகக் கொள்ளலாம். கடற்செலவு புலவர்க்கு இல்லை என்பதைக் காட்டிலும் இக்கடற்செலவும் இதுதொடர்பான அனுபவங்களும் நெய்தல் தலைவிக்கு இல்லை என்பது மிகவும் அழுத்திச் சொல்லவேண்டிய செய்தியாகும். புலவர்தம் நோக்கில் தலைமகளின் உணர்வுகளையும் எண்ணங்களையும் பாடுதலைவிட, அத்தலைமகளின் நோக்கில் மேற்கூறியனவற்றை எண்ணிப் பார்த்தலும் வெளிப்படுத்துதலும் சிறப்புடையன. கூடுவிட்டுக் கூடுபாயும் இக்கற்பனைக் கலை கைவரப் பெற்ற கலைஞரே புலவராவார். இப் புலமைத் தொழிலில் முற்றிச் சிறந்தோரே சங்கச் சான்றோர் ஆதலின் இவர்தம் படைப்புகளில் தலைமகள் கட்புலம் காணும் காட்சிகளும் இவ்வனுபவக் காட்சிகளின் அடிப்படையில் கற்பனைக் கண்கொண்டு மனக்கண்ணில் காணும் காட்சிகளும் மட்டுமே காணக்கூடியனவாக உள்ளன.

இதுமட்டுமின்றி, இலக்கிய மரபும் தன் பங்கைக் கணிசமாகச் செலுத்தியுள்ளது. சங்க இலக்கியங்களில் எவற்றைச் சொல்வது எவற்றைச் சொல்லாது விடுப்பது எனும் வரன்முறை அழகு உண்டு. அவசியமான வருணனையும் அளவான வருணனையும் சங்க இலக்கியத்தின் பல்வேறு சிறப்புகளுள் ஒன்று. இவர்தம் படைப்புச் செய்யுள்களில் அவசியமற்றனவற்றைச் சேர்த்தலும் இல்லை: அவசியமான வருணனைகளில் அளவு மீறுதலும் இல்லை. புலமைத்திறம் முற்றாத புலவர் ஒருகால் அளவு மீறியன, அவசியமற்றன சேர்த்துப்பாடியிருந்தாலும் பின்னர்வந்த தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் இப்படிப்பட்ட வழுவமைந்த செய்யுள்களைத் தமது தொகுதிக்குள் சேர்க்காது விலக்கித் தள்ளியிருப்பர் எனல் உறுதி.

ஆய்வு முடிவுகள்:

1. கடற்கரையிலிருக்கும் நெய்தல் தலைவியின் இரங்கல் ஒழுக்கத்தைச் சிறப்பாகப் பாட அவள் கட்புலம் படும் காட்சிகளே போதும்; நடுக்கடல் வருணனைகள் தேவையற்றன. பாடு பொருளான காதல், ஒழுக்கம், இவ்வொழுக்கத்தில் ஒன்றான இரங்கல் உணர்வுப் புலப்பாட்டுக்குக் கடல்சார்ந்த, கடற்கரைப் பகுதி வருணனைகளே போதுமானவை.

2. நடுக்கடல் வருணனை நிலத்தால் நெய்தலாயினும் பெருங்கடற் செலவு பிரிவை விளக்குவதால் இஃது உரிப்பொருள் அடிப்படையில் பாலைத் திணையாகி வழுவின் பாற்படும் அபாயமுண்டு. ஓர் ஒழுக்கத்துக்கு ஒரு நிலம், ஒரு நிலத்துக்கு ஓர் ஒழுக்கம் எனும் கடுமையான வரையறை மரபு சங்க இலக்கியத்துக்கு உண்டு. ஆதலின் நெய்தல் நிலத்துக்கு உரியதாக இரங்கல் ஒழுக்கமே புலவரின் பாடுபொருளில் துலங்குவதாயிற்று.

3. இவற்றால் சங்கச் சான்றோரில் மருதன் இளநாகனார் நீங்கலாக மற்றையோர் நெய்தல் திணைப்பாடல்களில் நடுக்கடல் வருணனைகளை மிகக் கவனத்தோடு பாடாது தவிர்த்தனர். மரபுமீறிப் பாடிய மருதனிளநாகனாரின் அகநானூற்றுப் பாடல்

இதனால் கடல் பாலையாகி திணை வழுவாக அமைந்தது.

4. இப் பின்னணியில் அறிஞர் மு.வ. அவர்களின் நடுக்கடல் வருணனை எதிர்பார்ப்பும் அது கிட்டாத போது அடைந்த வியப்பும் இதற்குக் காரணம் கூற முற்பட்டபோது கூறமுடியாது கொண்ட திகைப்பும் இம்மேல் விளக்கக்கட்டுரையில் தேவையற்றன என்பது துலக்கமாகிறது.

அடிக் குறிப்புகள்:

1. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பக்.307-309.
2. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.184.
3. மேலது, ப. 185.
4. மு.வரதராசன், மு.நூ., பக்.61-62.

பயன்பட்ட நூல்கள்:


1. அகநானூறு, பாகனேரி தன வைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம், 1961.
2. ஓவியத்தென்றல் இரவிவர்மா, மதுரை பாரியகம், 1968.
3. கலித்தொகை, பாகனேரி தனவைசிய இளைஞர்தமிழ்ச் சங்கம் , 1967.
4. குறிஞ்சிப்பாட்டு, சென்னை நியூசெஞ்சுரிபுக் ஹவுஸ், 1981.
5. சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், சென்னை அதிபத்தர் பதிப்பகம், 1978.
6. சிலப்பதிகாரம், திருநெல்வேலி சைவசிந்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1977.
7. தமிழ்க்காதல், சென்னை பாரி நிலையம்(வி.உ), 1962.
8. தொல்காப்பியம், திருநெல்வேலி சைவசிந்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1967.
9. நம்பியகப் பொருள், திருநெல்வேலி சைவசிந்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1971.
10. நாட்டுப்புறப் பாடல்கள், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை , 1987.
11. நெடுநல் வாடை, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1981.
12. பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, சென்னை பாரி நிலையம், 1964.
13. மதுரைக் காஞ்சி, நியூ சஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1981.
14. **Wordsworth's poems (Ed.Philip Wayne), Everyman's Library, London, 1955.**


* * *

# எண்ண மலர்கள்



**கவிஞர் புதுமைவாணன்**

நடந்துவரும் உலகத்தில் இன்பந் தேடி
நடப்பவர்நாம்; புதுமைக்குள் புதுமை தேடி
கிடைக்காதா விழிவாய்க்குச் சோறு என்றே
கேட்பவர்நாம்; முன்னேற்றப் பாதைகள் நாம்
மடமைகளைச் சாகடிப்போம்; அறிவை நெஞ்ச
வயலுக்குள் பயிர்செய்வோம்; நமது வாழ்வில்
கடமையினைக் - கண்ணியத்தைக் - கட்டுப் பாட்டைக்
கடைப்பிடிப்போம் நாமுயர்ந்து வானாய் நிற்போம்

ஏன்என்ற கேள்வியே நமக்கு ஆசான்
எதிரிருக்கும் உலகமே நமக்குப் பள்ளி
வானமும் வையமும் காற்றும் நீரும்
வாழுகின்ற முறைகூறும் அடையா ளங்கள்
வான்புகழின் உச்சியிலே நமது வாழ்வின்
வரலாற்றை உழைப்பாலே வரைந்து நிற்போம்
மேன்மை யென்ன மிகப்பெரிதா? இல்லை; தூசின்
மிகச்சிறிது உழைப்போரைக் கண்டால் அஞ்சும்

தனக்காக வாழாதான் அறிவி னோடு
தாளாண்மையால் உலகில் உயர்ந்து நிற்பான்
இனங்காக்க முனைந்திடுவோன் அன்பு நெஞ்ச
இனிப்புக்குள் இவ்வுலகை நடக்க வைப்பான்.
வணக்கத்தின் அடையாளப் பணிவும்; நெஞ்ச
வயதென்னும் அனுபவமும் உடையோன் மக்கள்
மனதுக்குள் குடியிருப்பான் - சிலையாய் நிற்பான்
மண்மீது புகழ்உடலால் நிலைத்து நிற்பான்.

வழிந்துவரும் கண்ணீரே சில நேரத்தில்
வலிமையினை நம்நெஞ்சில் சேர்த்து வைக்கும்
உலைத்தீயால் துன்பமுற்ற பொங்கற் பானை
உருசிமிகுந்த உணவு தரும்; என்றும் தீய
உளங்கொண்ட பகைவர்களால் நமது வாழ்வில்
உறுதிகளும், உணர்வுகளும் தோன்றித் தோன்றி
நல வாழ்வில் நமைச்சேர்த்து வைக்கும் அந்த
நல்லபகை வளர்ந்திடட்டும் வாழ்ந்திடட்டும்

மணற்கேணி தொட்டணைத்தே ஊறும்; மக்கள்
மனம் விரும்பிக் கற்றவரை கல்வி சேரும்
சினங்கொண்ட நெஞ்சுக்குள் அன்பிராது
சிற்றினத்தின் நட்பாலே மேன்மையில்லை
தினம் முயலும் முயற்சியால் வெற்றி கிட்டும்
திசையெங்கும் புகழ்எட்டும் மனிதனாக்கும்
கிணற்று நீர் நாய் நக்கிக் குறைந்திடாது
கிளிப்பேச்சு உனக்கெதற்குக் குயில்நீ பாடு

வான்வயிற்றுப் பிள்ளைதான் உலக மென்ற
வரலாற்றை நாமறிவோம் அதனாலேதான்
மீன்வானம் கருமேக மார்பினாலே
மேலிருந்து மழைப்பாலைச் சொரிந்துநிற்கும்
தேன்மலர்கள் செடிகொடிகள் தாய்க்கு நன்றி
தெரிவிக்கும் வகையினிலே வானைப் பார்க்கும்
மேன்மையெலாம் செய்நன்றி மறந்திடாத
மேலான குணத்தாலே அமையு மிங்கே

பிறக்கின்ற போதுநாம் நமக்கு என்றே
பெற்றுவரும் பொருளென்ப தொன்று மில்லை
இறக்கின்ற போதுமட்டு மென்ன நம்மால்
எதையெடுத்துக் கொண்டுசெல முடியுமிங்கே?
சிறப்பென்னும் புகழ்தவிர வேறு ஏதும்
சிற்றுயிர்க்கு உற்றதுணை ஆவதில்லை
புறக்கவர்ச்சி பொய்யுலக மயக்க மெல்லாம்
பொல்லாங்கை யேகொடுக்கும் நமது வாழ்வில்

கரும்புக்குள் இனிக்கின்ற சுவையும்; எட்டிக்
காய்க்குள்ளே மறைந்திருக்கும் கசப்பும்; முல்லை
அரும்புக்குள் தூங்குகின்ற மணமும்; புற்றில்
அடங்கியுள்ள பாம்பின்வாய் விடமும்; இந்த
பெரும்புவியின் மண்வயிறு நமக்களிக்கும்
பெருவியப்புக் குறியாகும் அதை யுணர்ந்து
கரும்பாவோம் - கனியாவோம் நமது வாழ்வைக்
கசப்பாக்கிக் கொள்ளாமல் தேனாய் நிற்போம்.

தின்னத்தான் பழம்பழுக்கும்; வண்டின் கூட்டம்
தேடிவரத்தான் மலர்கள் அழகை நீட்டும்
பண்ணிசைத்துப் பாடுதற்கே பாட்டு; வாழ்வில்
பயன்விளைத்துக் காட்டுதற்கே நூல்கள்; என்றும்
அண்ணாந்த வானத்தில் கதிரோன் தோன்றி
அகிலத்தை முறையாக நடத்து மிங்கே
மண்மீது பிறந்திட்ட மனிதன் கூட
மற்றவரை வாழ்வித்து வாழ்தல் வேண்டும்.

* * *





# வீரமாமுனிவரும் வேதநாயகரும்

முனைவர். பா. வளன் அரசு

## முன்னுரை:

இனிமையும் எளிமையும் பொருந்திய தமிழ்மொழி பன்னீராயிரம் ஆண்டுகளாக வளர்ந்து வருகிறது. நூற்றுத் தொண்ணூற்றாறு வேந்தர் பத்தாயிரம் ஆண்டுகளில் மூன்று சங்கங்களை நிறுவித் தமிழுக்குத் தனிப்பெருந் தொண்டாற்றியுள்ளனர். ஐந்தாம் நூற்றாண்டில் வச்சிர நந்தி உருவாக்கிய திராவிட சங்கம் முதலாய பிற்காலத் தமிழ்ச் சங்கங்கள் பலவாகும். சமணம், பௌத்தம், சைவம், வைணவம், இசுலாமியம், கிறித்தவம் ஆகிய ஆறு சமயங்களும் தமிழுக்கு வீறு கொண்டு விழைந்து உழைத்துள்ளன. கிறித்தவச் சான்றோருள் அயல்நாட்டவரும், இந் நாட்டவரும் தமிழ்த் தொண்டராகத் திகழ்கின்றனர். பதினெட்டாம் நூற்றாண்டில் தமிழ்நாட்டுக்கு வருகைதந்து முப்பத்தாறு ஆண்டுகள் *(1711 - 1747)* ஒப்பற்ற பணிகளால் தமிழ்த்தாய்க்கும் கிறித்தவத் திருமறைக்கும் அணிகள் பல சேர்த்தவர் இத்தாலிய நாட்டு ஏந்தல் வீரமாமுனிவர்; பத்தொன்பதாம் நூற்றாண்டில் திருச்சிராப்பள்ளிக் குளத்தூரில் தோன்றி, மயிலாடுதுறை வட்டாரத்தில் திருமறைப்பற்றும், தீந்தமிழ் உணர்வும் மிக்கவராக வாழ்ந்தவர் *(1826 - 1889)* வித்தகர் வேதநாயகர். ஒரு நூற்றாண்டு இடைவெளி இருபெருந் தமிழ்த் தொண்டர்க்கும் உண்டு. "கிறித்தவ சமயமும் தமிழ்மொழியும் தழைத்தினிதோங்கத் தக்கவாறு அயராது செயலாற்றிய ஆண்மையாளர்" என்று போற்றத்தகுந்த வீரமாமுனிவரையும் வேதநாயகரையும் ஒப்பிடுவது ஏற்புடைய செயலாகும்.

## ஒருமையும் பெருமையும்:

தைரியநாதர் என்னும் பெயருடன் அறிமுகமான வீரமாமுனிவர் பெயர் நான்கைந்து திருத்தொண்டர்களுக்கும் வழங்கப்பட்டு வந்ததாக அருளாளர் பெசி அடிகளார் "வீரமாமுனிவர் காலமும் எழுத்தோவியங்களும்" என்னும் ஆங்கில நூலின் இறுதியில் குறித்துள்ளார் *(ப.175)*. மலர்களின் தந்தை, வீர ஆரியன், விழுமிய துறவி, செந்தமிழ்த் தேசிகர் என்று பல்வேறு பெயர்கள் வீரமாமுனிவர்க்கு வழங்கப்பட்டாலும் ஒருமையும் பெருமையும் வாய்ந்த புகழுடன் வீரமாமுனிவர் துலங்குகிறார். வேதநாயகர் என்னும் பெயரால் தமிழிலக்கிய வரலாற்றில் மூவர் காட்சி தருகின்றனர். நீதிபதி வேதநாயகர் ( மயிலாடுதுறை), வேதநாயகக் கலைஞர் (தஞ்சாவூர்), போதகர் சார்ச்சு சேர்வை வேதநாயகர் (சென்னை) ஆகிய மூவருள்ளும் வேதநாயகர் என்றால் மயிலாடுதுறைப் பெரியாரையே குறிக்கும். "தொன்னூல் விளக்கம்" எழுதிய வீரமாமுனிவரை மதுரைப் புலவர் பெருமக்கள் "திரு மதுரைச் செந்தமிழ்த் தேசிகர்" என்று போற்றியுள்ளனர். "நீதி நூல்" நல்கிய வேதநாயகரைச் "செந்தமிழ்க் குரிசில்" என்ற திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் அவர்கள் புகழ்ந்துள்ளனர். வீரமாமுனிவர் மீது துரை சுந்தரமூர்த்தி

கலம்பகம், பாடினார்; பண்ணை சண்முகம் 'பிள்ளைத் தமிழ்' எழுதியுள்ளார். வேதநாயகர் மீது "குளத்தூர்க் கோவை" யினை மீனாட்சி சுந்தரனார் இயற்றியுள்ளார். "தண்ணந்தமிழ் வலோன்" என்று வீரமாமுனிவரும், "தன்னேரிலாத் தமிழ் வேதநாயகன்" என்று வேதநாயகரும் இன்றும் புகழ் பெறுகின்றனர். சுத்தானந்த பாரதியார் வீரமாமுனிவரை எழுசீர் ஆசிரிய விருத்தத்தாலும் வேதநாயகரை அறுசீர் ஆசிரிய விருத்தத்தாலும் பாடிப் பரவியுள்ளார்;

வீரமா முனிவர் தைரியநாதர் விரிதமிழ்க் கலைமணம் கமழும்
ஆரமா முனிவர் அகத்தியர்போலே அருளினார் அரியநன் நூல்கள்
சாரமாந் தேம்பா வணியினைத் தொடினுந் தமிழ்மணம் கமழுமென் கரமே
ஈரமா நெஞ்சில் இடம்பெற நட்டால் இன்பமாய் மலருமென் வாழ்வே.

வீரமாமுனிவரை அவருடைய விழுமிய எழுத்தோவியத்தால் போற்றும் சுத்தானந்த பாரதியார், வேதநாயகரை அவருடைய பண்புகளால் பாராட்டுகிறார்.

பஞ்சத்தில் வருந்தும் ஏழை பட்டினி தீர்த்த வள்ளல்,
வஞ்சத்தை எதிர்த்த வீரன், இலஞ்சத்தைக் கடிந்த தூயன்
அஞ்சிடா தறமு ரைத்தான்; அநீதியைப் பொருது வென்றான்
விஞ்சிய மேதை வேத நாயகன் மேன்மை வாழ்க.

## துறைதோறும் முறையான தொண்டு:

வீரமாமுனிவரின் தமிழ்த்தொண்டு பலதிறத்தது எனினும் பன்னிரு வகையாகும். கடித இலக்கிய வளர்ச்சி, உரைநடை மறுமலர்ச்சி, சிற்றிலக்கிய எழுச்சி, காப்பிய ஆக்கம், இலக்கணப் படைப்பு, அகராதி அமைப்பு, மொழியியல் முனைப்பு, சிறுகதைத் தோற்றம், எழுத்து வரிவடிவச் சீர்திருத்தம், சித்த மருத்துவ ஏற்றம், இலத்தீன்-தமிழ் உறவுப் பாலம், வள்ளுவத்தை வையக நூலாக்கும் முயற்சி ஆகியவை குறிப்பிடத் தக்கவை. வேதநாயகரின் தமிழ்த்தொண்டு நீதித் தமிழ், சட்டத் தமிழ், இசைத் தமிழ், புதினத் தமிழ், சமயத் தமிழ், பெண்ணுரிமைத் தமிழ் என்று பல்வேறு துறைகளில் பளிச்சிடக் காண்கிறோம். பன்மொழிப் புலமையும் திருமறைக் கொள்கைப் பிடிப்பும் தீந்தமிழ் மரபுணர்வும் பிற சமயத்தாரை மதிக்கும் மனப்பக்குவமும் இலக்கண நுட்பமும் கொண்ட வீரமாமுனிவர் மரியன்னை இலக்கியம் என்னும் புத்திலக்கியத்தைத் தோற்றுவித்தார்; மும்மொழிப் புலமையும் திருமுறை ஈடுபாடும் தீந்தமிழ் நாட்டமும் பிற சமயத்தாருடன் கலந்துரையாடும் வித்தகமும் சட்டத்துறை நுட்பமும் வாய்ந்த வேதநாயகர் மரியன்னை இலக்கியத்தை மெருகேற்றிப் பேணிப் போற்றினார். வீரமாமுனிவர் 'அன்னை அழுங்கல் அந்தாதி' தந்த ஆன்றோராவார்; வேதநாயகர் 'திருவருள் அந்தாதி' தேவமாதா அந்தாதி ஆகியவை இயற்றிய சான்றோராவார். அடைக்கல மாலையும் அடைக்கல நாயகி வெண்கலிப்பாவும் வீரமாமுனிவரின் தண்டமிழ் மாலைகளாகும்; திருவருள் மாலை, தேவ தோத்திர மாலை ஆகியவை வேதநாயகரின் பக்திச் சிறப்பைப் புலப்படுத்தும் ஏடுகளாகும். பரமார்த்த குருவின் கதையும் வாமன் சரித்திரமும் வீரமாமுனிவரின் கதைப் பனுவல்களாகும்; பிரதாப முதலியார் சரித்திரமும் சுகுண சுந்தரி சரித்திரமும் வேதநாயகரின் "வசன காவியம்" என்னும் புதினங்களாகும். திருக்குறளை முதன் முதலில் 1730ஆம் ஆண்டில் இலத்தீனில் மொழிபெயர்த்து உலகுக்கு அறிமுகப்படுத்தியவர் வீரமாமுனிவர்; பன்னீராண்டு நீதிமன்றத் தீர்ப்புரைகளைத் தமிழில் மொழிபெயர்த்து 1862ஆம் ஆண்டில் "சித்தாந்த சங்கிரகம்" என்னும் சட்ட நுட்பக் களஞ்சியம் நல்கியவர் வேதநாயகர். மறுமலர்ச்சி உரைநடையில் "தமிழ்ச் சிறுகதையின் தந்தை" யாக வீரமாமுனிவரும் "தமிழ்ப் புதினத்தின் தந்தை" யாக வேதநாயகரும் விளங்குகின்றனர். பரமார்த்த குருவின் கதைகளும் வாமன் சரித்திரமும் முறையே கொடுந்தமிழ் நடைக்கும் செந்தமிழ் நடைக்கும் சான்று கூறும் வகையில் அமைந்துள்ளன; பிரதாப முதலியார்

சரித்திரமும் சுகுண சுந்தரி சரித்திரமும் முறையே கல்விப் பெருமையினையும் சோம்பலின் கேட்டினையும் அறத்தின் திறத்தோடு புலப்படுத்துகின்றன. திருக்காவலூர்க் கலம்பகம் எழுதிய வீரமாமுனிவர் பெண்பாற் கலம்பகம் எழுதிய முன்னோடியாவார்; பெண்மதிமாலை, பெண் மானம், பெண் கல்வி ஆகியவற்றை நல்கிய வேதநாயகர் பெண்ணுரிமைக்கு முதல் முழக்கமிட்டு, சுப்பிரமணிய பாரதியாருக்கும் முன்னோடியாக மிளிர்கிறார். வீரமாமுனிவர் திருக்கடையூர்த் திருச்சபைக்கு எழுதிய நிருபம் முதல் திருச்சபைக் கணிதம் முடிய முப்பத்தைந்து ஏடுகளை அருளியுள்ளார்; வேதநாயகர் நீதிநூல் முதல் தேவதோத்திர மாலை முடிய பதினாறு நூல்களை நல்கியுள்ளார்.

### மரியாள் புகழ்பாடும் மாந்தர்:

"தமிழ்க் கத்தோலிக்கப் புலவர் கோ" என்று நல்லூர் ஞானப்பிரகாசர், வீரமாமுனிவரை வியந்தும் நயந்தும் பாராட்டியுள்ளார். ("கத்தோலிக்கப் பாதுகாவலன்", யாழ்ப்பாணம், 2.6.1917 இதழ்). புதுவை சவரிராயலு நாயகர் வேதநாயகரைப் புகழும்போது, "நற்றவர் வேதியர் அரசர் புகழ்ந்தேத்தப் பாவாணர் நன்கு வாழ்த்தப் பெற்ற குளத்தூர் வேதநாயகன்" எனக் கூறுவர். இயேசுவை ஈன்ற அன்னை மரியாளைப் 'பெரிய நாயகியாகவும்' 'அடைக்கல நாயகி' யாகவும் போற்றிப் பாராட்டி முறையே ஆரியனூரிலும் திருக்காவலூரிலும் திருக்கோவில்களை உருவாக்கி அவர் அருளால் தேம்பாவணியும் திருக்காவலூர்க் கலம்பகமும் எழுதியவர் வீரமாமுனிவர். தேம்பாவணியில் முந்நூற்றுக்கும் மேற்பட்ட அழகுத் தொடர்களை அமைத்துள்ளார். "எஞ்ஞான்றும் மாறாக் கன்னி" (5:35)", "வழுவா மறைமொழியாள்" (6:50), "மூவுலகிற்கெல்லாம் மெய்கொள்நாயகி" (10:30), "சுருதியே வடிவாய்த் தோன்றிய தாய்" (36:35) என்று வீரமாமுனிவர் தேம்பாவணியுள் மரியாள் மாண்பு மொழிகுவர். மேலும் திருக்காவலூர்க் கலம்பகத்துள், "வினைத்தீ ஆற்றும் மேல்நாயகி" என்றும், "மறைநூல் தேற்றும் மாநாயகி", என்றும், "உயிர்நோய் மாற்றும் வான்நாயகி" என்றும் விளம்பியுள்ளார் (55). நன்மை கொள் வாரியாகவும் நலம் பொழி மாரியாகவும் திகழும் தேவதாயைப் புகழும் வேதநாயகர், பெரிய நாயகி அம்மன் பதிகம் பாடும்போது, மனோன்மணி முதல் தாவீதுகுல சிரோமணி முடிய இருபத்து மூன்று அடைமொழிகளை வடமொழித் தொடர்களாக அடுக்குவர். தேவ மாதா அந்தாதியுள் தேவமாதா முதல் பணிமாதா முடிய முப்பத்தேழு பெயர்களால் பாடிப் பரவியுள்ளார். காப்பியத் தலைவன் வளனார் வாய்மொழியால் மரியாளின் மாண்பு தேம்பாவணியுள் தெளிவுறுத்தப்படுகிறது:

> துய்உலாம் இந்துஉலாம் சொக்குஉலாம் பாதமும்
>
> சேய்உலாம் பானுஉலாம் சீர்உலாம் தேகமும்
>
> மீஉலாம் மின்உலாம் மின்உலாம் சென்னியும்
>
> ஓய்விலாது இற்றுஎலாம் உற்றமா மாட்சியாய் (9:8)

மேலும், "கனிவார் கடல், ஒளிஆர் சுடர், அருள் ஆர்முகில்" (9:75) என்றெல்லாம் போற்றிப் புகழப்படுகிறார் மரியாள். வேதநாயகர் தேவமாதா அந்தாதியுள் வெண்பா யாப்பில் விண்டுரைத்துள்ளார்:

> ஓதற்கு அரியவளே! உத்தமியே! புத்தமுதே!
>
> போதக் கடலே! புராதனியே! - சாதுக்கள்
>
> வந்தனையே செய்யும் மனோகரியே நீஎன்பால்
>
> வந்துஅனையே ஈவாய் வரம் (57)

மேலும், "இனிய குயிலே, இரத்தினமே, தேனே, கனியே, கனகமே, காவே" என்றெல்லாம் அடுக்கி

மொழிகிறார் (83). இறைவனின் அன்னை மரியாளை வணங்காதவர் கல்விப் பயன் காட்டுக்கு எறித்த கதிர் நிலவாகவும் பாழ் வீட்டுக்கு வைத்த விளக்கு ஆகவும் பயனற்றுப் போகும் என்பர் (91). "இவ் வந்தாதியின் ஒவ்வொரு கவியிலும் ஒரு தனிநயம் மிளிர்கின்றது; தத்துவம் ஒளிர்கின்றது; பக்தி பொங்குகிறது" என்று அருளாளர் மரியதாசன் மொழிவது கருதத்தக்கது.

## இல்லறமும் நல்லறமும்:

" அலைவுற்ற உயிர்க்கெல்லாம் ஆதரவாம் திருமணம்" (5:1) என்பார் வீரமாமுனிவர். கணவன் மனைவியரிடையே ஐயுறவு தோன்றும் போதும் அல்லல் நேரும் போதும் எவ்வாறு பொறுமையாக வாழ வேண்டும் என்பதை வளனார் மரியாள் வாழ்வியலால் புலப்படுத்துகிறார். "பெண்டிர் வாழப் பிறந்தமையால் மனப்புண்கள் ஆற வழி கண்டேன்" என்று கூறும் வேதநாயகர், பிரதாப முதலியார் சரித்திரத்துள் சுந்தரத்தண்ணி வழியாக ஒழுக்கத்தையும் பண்புச் சிறப்பையும் புலப்படுத்துவர். ஞானாம்பாள் வாயிலாகக் கற்பும் அறிவும் வலியுறுத்துவர். பிரதாபன் மூலமாக ஆண்மை, கண்ணியம், கடமை ஆகியவற்றைத் தெளிவுறுத்துவர். "தேவனை நினையாத உள்ளம் யாரும் -பாவமும் பழிகளும் படிந்திடும் பள்ளம்" என்று "பெண்மதி மாலை" பேசும். பெண் கல்வியினையும் பெண் மானத்தையும் வலியுறுத்தியதோடு, 1869ஆம் ஆண்டு தாமே மகளிர் பள்ளியை நிறுவி, பின்னர் மயிலாடுதுறை நகராட்சியினர் பொறுப்பேற்று நடத்தச் செய்தார்.

## தமிழ்ப்பற்றும் தொண்டுள்ளமும்:

வீரமாமுனிவர் தேம்பாவணியுள் "அளஞ்செயும் தமிழ்ச்சொல்" (பாயிரம் 3), "வண்தமிழ்" (பாயிரம் 6), "ஒல்லும் அருந்தமிழ்" (1:73), "பண்தமிழ் உரைத்ததே போர்" (9:133) என்றெல்லாம் தமிழ்ப்பற்றினைத் தெளிவுறுத்துவர்; தமிழ் மரபுக்கேற்ப வளனார் வரலாற்றை எடுத்து விளம்புவர். ஈசாக்கு, யோசேப்பு போன்ற பெயர்களை முறையே நகுலன், வளன் எனத் தமிழாக்குவர்; இறைவனைக் குறிப்பிடும் "பெருந் தச்சன்" போன்ற சமயத் தமிழ்க் கலைச் சொற்களை உருவாக்கி வழங்கியுள்ளார். 'சமூக உல்லாசம்' என்னும் புதுத்துறையும் 'மணிமாலை' என்னும் புத்திலக்கிய வகையும், எட்டுவகைப் புத்தணிகளும் வீரமாமுனிவரின் வண்டமிழ்க் கொடைகளாகும். பாலத்தீன் நாட்டு வயல்வெளிகளில் நெற்கதிர் அறுத்திடுவோர் பாடும் பாட்டு தமிழ்ப்பாட்டு என்பர்.

வேதநாயகர் தாய்மொழியைப் பேணிப் போற்றத் தூண்டுவர்; "அகத்தியர் நாவிலே பிறந்து, ஆரியத்தின் மடியிலே வளர்ந்து, ஆந்திரம் முதலிய மொழிகளின் தோழமை பெற்று, சங்கப் புலவர்களுடைய நாவிலே தவழ்ந்து, வித்துவான்களுடைய வாக்கிலே விளையாடி, திராவிட நாடெங்கணும் தனியாட்சி செலுத்தி வந்த தமிழரசியை இப்போது இகழலாமா? நம்மைப் பெற்றதும் தமிழ்; பேணி வளர்த்ததும் தமிழ்; நம்மைத் தாலாட்டித் தூங்க வைத்ததும் தமிழ்; மழலை மொழியில் தாய் தந்தையரை மகிழ்வித்ததும் தமிழ்; அன்னை பாலோடு புகட்டினதும் தமிழ்; நாம் பிள்ளைப் பருவத்தில் பேசத் தொடங்கியதும் தமிழ்; நம் முன்னோர் பேசியதும் தமிழ்; வீட்டு மொழியும் தமிழ்; நாட்டு மொழியும் தமிழ். இப்படிப்பட்ட அருமையான தமிழ்மொழியை விட்டுவிட்டு வேற்று மொழியில் பயில்வது விந்தை" என்று விளக்கியுரைப்பர். ஆங்கிலேயர் போன்ற ஐரோப்பியர் தங்கள் சொந்தமொழியைப் போற்றிவரும் போது, நம்மவர் தமிழ்மொழியையும் தமிழ்ப் புலவர்களையும் இழிவுபடுத்துவதை எண்ணி வருந்துகிறார். தாளாத தமிழார்வமும் துடிப்பும் கொண்டு அத்தகையோரைக் கண்டிக்கிறார்:

ஆங்கிலம் ஒன்றையே கற்றார் - அதற்கு
ஆக்கையோடு ஆவியும் விற்றார்

தாங்களும் அந்நியர் ஆனார் - தெய்வத்

தமிழின் தொடர்பற்றுப் போனார்!

மேலும் பிரதாப முதலியார் சரித்திரம் என்னும் புதினத்துள் ஞானாம்பாள் வழக்கறிஞர் பெருமக்களிடம் பேசுவது போன்று கூறுவது குறிப்பிடத்தக்கது. (இயல் 42):

"தமிழ் படிக்காதவர்கள் தமிழ்நாட்டில் வசிக்க யோக்கியர்கள் அல்லர். அவர்கள் எந்த ஊர்ப் பாசைகளைப் படிக்கிறார்களோ, அந்த ஊரே அவர்களுக்குத் தகுந்த இடம். ஆகையால் சுய பாசையைப் படிக்காமல் இங்கிலீசு மட்டும் படிக்கிறவர்களை இங்கிலீசு தேசத்துக்கு அனுப்பிவிடுவோம். பிரெஞ்சு மட்டும் படிப்பவர்களைப் பாரிசுப் பட்டணத்துக்கு அனுப்புவோம். இலத்தீனுக்கும் சமற்கிருதத்துக்கும் சொந்த ஊர் இல்லாதபடியால் அந்தப் பாசைகளைப் படிக்கிறவர்களை அநாம கரணத் தீவுக்கு அனுப்புவோம்."

## இன்பத்தமிழும் நாட்டுப்புற இலக்கியமும்:

வீரமாமுனிவர் தம் தேம்பாவணியுள் வண்ணம் தொண்ணூறு வழங்கியவர்; சந்த நயங்களால் காப்பியச் சுவையைப் பெருக்கியவர், கித்தேரியம்மாள் அம்மானை என்னும் நாட்டுப்புறக் காப்பியம் நல்கியவர். வேதநாயகர் கீர்த்தனைகள் வரியிலாக இசைத் தமிழை ஏற்றமுறச் செய்தார். சத்திய வேதக் கீர்த்தனைகள், சருவசமய சமரசக் கீர்த்தனைகள் வாயிலாக ஆன்ம நேய ஒருமைப்பாட்டை வள்ளலார் வழியில் எடுத்தியம்பியுள்ளார். தமிழிசைக்கு வாய்ப்பளித்த பெருமையும் வாழ்வளித்த அருமையும் பொருந்தியவர். நலுங்குப்பாட்டு, சோபனல்பாட்டு ஆகியவற்றில் இலக்கியச் சுவை கலந்து வழங்கியவர் வேதநாயகர்:

மைத்துனரே இன்றுமுதல் மகராசர் நீரே

கொத்தார் குழலி எங்கள் குயிலைக் கொண்டீரே

உழவுத்தொழில் செய்துமக்கு உடம்பெல்லாம் சேறு

ஊத்தை கழுவப் பற்றுமோ ஒன்பது ஆறு

பழங்கூழ் உண்ட உமக்குப் பாலுடன் சோறு

பயப்படாதிரும் உமக்கு ஆயுசு நூறு

வழக்கறிஞர் தொழிலையும் வாழ்வையும் நகைச்சுவை நயத்துடன் நவில்கிறார்.

சுப்பையரோ அபத்தமூட்டை - அந்தச்

சுந்தரையர் வழக்கிலே தொள்ளாயிரம் ஓட்டை

அப்பையர் கற்பிப்பார் பொய்ச்சீட்டை - அந்த

அனந்தையர் கட்டுவார் ஆகாசக்கோட்டை

அண்டப் புரட்டன் அந்தவாதி - அகி

லாண்டப் புரட்டன் அப்பா அவர் பிரதிவாதி

சண்டப் பிரசண்டன் நியாயவாதி - நாளும்

சாத்திரப் புளுகன் கட்சிக்காரன் என்னும் கியாதி

நீதிமன்றப் பணிகள் தம்மைச் "சூழ்நிலையின் கைதி"யாக்கி செய்தியினையும் சித்திரித்துள்ளார்:

போதும் போதும் உத்தியோக கனமே - இதில்

ஏதுசுகம் நமக்கு மனமே

எந்த நேரமும் ஓயாத வேலை - இதில்
என்ன பெற்றோம் முத்துமாலை
அந்த உத்தியோகமும் ஆலை - அதில்
அகப்பட்டநான் கரும்பு போல - போதும் போதும்

**நிறைவுரை:**

தமிழ்மொழிக்கும் நாட்டுக்கும் சமுதாயத்துக்கும் செம்மாந்த செயலாற்றிய வீரமாமுனிவரும் வேதநாயகரும் தங்கள் பல்வேறு பணிகளால் தமிழ்த்தாய்க்கு அணிகள் செய்துள்ளனர். அவர்தம் செயல்களால் மக்கள் தக்க பயன் பெற்றுள்ளனர்; இறைப்புகழும் பெருகியுள்ளது. திருமறைப் பெருமையும் உயர்ந்துள்ளது. இன்னல்கள் எத்தனை எதிர்த்து வந்தாலும் கொண்ட குறிக்கோளின்படியே தொண்டாற்றிய அப்பெருமக்களின் வழியே நாமும் பணியாற்ற வேண்டும்; தொண்டு தொடர்வதால் துறைதோறும் புகழ் பரவும்; தமிழகம் தலைநிமிர்ந்து வாழும்.

* * *

# கவிதை நடை...

முனைவர் அ. ஆலிஸ்

சமுதாயத்தில் பேச்சுமொழி, எழுத்துமொழி ஆகிய இரண்டன் மூலமும் சுட்டிச் சொல்லியோ விளக்கிச் சொல்லியோ கருத்துப் பரிமாற்றங்கள் நிகழ்த்தப்படுகின்றன. 'செய்தி தெரிவித்தல்' என்பதுவே பேச்சுமொழி, எழுத்துமொழி இரண்டன் நோக்கம் என்றாலும் எழுத்துமொழியில் குறிப்பாக படைப்பிலக்கிய மொழியில் பேச்சு மொழியினின்று மாறுபட்டு மெருகூட்டிச் சொல்லுதலின் மூலம் கேட்போனைப் பாதிக்கும் வகையில் செய்தி தெரிவித்தல் என்ற போக்கே மிகுதியாகக் கையாளப்படுகிறது. இலக்கிய மொழியில் கூறுவோன் தான் கூறவரும் கருத்தை வெளிப்படுத்தத் தெரிந்தெடுத்துக் கொண்ட இலக்கிய வடிவத்திற்கேற்ற வகையில் கேட்போனை ஈர்த்து இறுதிவரை அச்செய்தியுடன் ஒன்றவைக்கும் ஒரு நோக்கம் முதன்மையாகிறது. இந்நோக்கத்திற்கேற்ப கேட்போனை ஈர்க்கும் வண்ணம் தன் கருத்தை வெளிப்படுத்த கூறுவோன் கையாளும் கூறுகள் ஒருவரது கருத்து வெளிப்பாட்டு முறையிலிருந்து பிறரது கருத்து வெளிப்பாட்டு முறையை வேறுபடுத்துகின்றன. தான் எடுத்துக்கொண்ட கருத்தைக் கேட்போனை ஈர்க்கும் வண்ணம் வெளிப்படுத்த ஒருவர் கையாளும் கூறுகள் நடையியற் கூறுகள் ஆகும். படைப்பிலக்கியங்களுள்ளும் நாவல், சிறுகதை, உரைநடை ஆகிய உரைநடை இலக்கியங்களை விடவும் கவிதை மொழியின் அமைப்பு பேச்சு மொழிக் கூறுகளினின்றும் உரைநடைக் கூறுகளினின்றும் மாறுபட்ட- திட்டமிட்டு ஆக்கப்படும் சில கூறுகளைக் கொண்டு விளங்குகிறது. அத்தகைய கவிதை மொழியில் காணப்படும் நடையியற் கூறுகள் சிலவற்றை இக்கட்டுரை ஆராய்கிறது.

**நடை:**

நடை என்பதற்குப் பலரும் பலவாறு விளக்கம் தருகின்றனர்.

கவிஞனது அனுபவம் அவனது நடையைப் பாதிக்கும் என்பதனை, "கவிஞன் எழுதுவதற்குத் தெரிந்தெடுத்துக் கொள்ளும் சொற்கள், விளக்கங்கள், வலியுறுத்தும் கருத்துக்கள் முதலியன கவிஞன் கொண்டிருக்கும் மதிப்புக்களையும் அவனது அனுபவங்களையுமே காட்டுகின்றன; அவனது நடையின் மூலம் அவனது இயல்பைத் தெரிந்துகொள்ள முடியும்; கவிஞனது நடையும் அவனது அனுபவமும் பின்னிப் பிணைந்த ஒன்று"[1] என்பார் ஈஸ்ட்மேன். நடை ஒருவரது உள்ளப்பண்போடு ஒன்றியது என்பதனை மு.வ., "புலவரின் உள்ளத்தில் உண்மையும் உறுதியும் சிறந்து விளங்கினால் அவருடைய நடை திட்பமும் நுட்பமும் அமைந்ததாகும். அவருடைய உள்ளத்தில் ஆர்வம் மிகுதியானால் நடையின் ஆற்றலும் மிகுதியாகும்"[2] என்பார்.

நடை என்பது "கவிஞனின் தனித்தன்மை, கவிஞன் உணர்த்தும் உத்தி, இலக்கிய உச்சநயம்"[3] என்ற மூன்றும் ஆகும் என்பார் மிடில்டன் மர்ரே. ரிஃபட்டரே, "கவிஞன் தன் கவிதையில் தான்

கூறவந்த பொருள் தெரிவிக்கப்பட்டு விட்டதா என்பதை மட்டுமன்றி அப்பொருள் குறித்த தனது கருத்து வாசகனால் பகிர்ந்துகொள்ளப்பட்டதா என்பதையும் உறுதிப்படுத்திக் கொள்கிறான். எனவே கவிதையில் படிப்போனுக்குத் தன் கருத்தை உணர்த்துவதிலும் படிப்போன் உணருவதிலும் உள்ள முறையை அளவுபடுத்தும் கூறுகள் நடைக் கூறுகள்"[4] என்பார். "தன் அனுபவத்தைக் குறியீடாக வடித்துச் சொல்வதற்கு ஏற்ற சொற்பரப்பிலிருந்து ஓரளவு பொருத்தமான சொல்லைத் தெரிவு செய்தல் நல்ல நடை; இத்தகைய தேர்ந்தெடுக்கும் பணி படைப்போனின் வேலையைச் சிக்கலாக்குகிறது"[5] என்பார் வார்பர்க். என்க்விஸ்ட் தரும் வரைவிலக்கணங்களின் வழியே நடை என்பது " 1. எண்ணம் அல்லது கருத்து எனும் கருவினைச் சுற்றி அமைந்துள்ள ஒரு கூடு; 2. வேறுபட்ட வடிவங்களுக்கிடையே ஒன்றைத் தெரிந்தெடுக்கும் உத்தி; 3. ஒரு படைப்பாளியின் அல்லது படைப்பிலக்கியத்தில் காணப்படும் தனிமைக் கூறுகளின் ஒட்டுமொத்தம்; 4. மொழியின் இயல்பான கட்டமைப்பிலிருந்து மாறுபட்ட பிறழ்ச்சிகள்; 5. சொற்றொடர் அடிப்படையிலின்றி முழுப் படைப்பிலுமுள்ள மொழியியற் கூறுகளுக்கிடையே காணப்படும் உறவுகள்"[6] ஆகும். "கவிஞன் தனித்தன்மையை மொழியில் கலப்பதுதான் நடை"[7] என்பார் ஹட்சன். "சொற்கள், தொடர்க்கட்டமைப்பு ஆகியவற்றின் நல்ல தெரிவே சிறந்த நடை"[8] என்பது ஈஸ்ட்மேனின் கருத்து.

"கவிதை சொல்லப்பட்டிருக்கும் முறையாலேயே பொருள் புரிகிறது"[9] என்பார் வார்பர்க்.

"பொது மொழியினை இலக்கிய மொழியாக மாற்றும்போது ஏற்படும் மரபுப் பிறழ்ச்சிகளே நடையியல் சிறப்புக் கூறுகள்" என்பார் ஹாலிடே. ஸ்பிட்சர் என்பவரும் பொதுப் பயன்பாட்டு முறையிலிருந்து பிறழ்ந்த கருத்து வெளிப்பாட்டு முறையே நடைச் சிறப்பாகக் கருதுகிறார்.[10] எனவேதான் இவர் மொழியியல், இலக்கிய வரலாறு ஆகிய இரண்டனுக்கும் இடையே உள்ள வெற்றிடத்தை மொழிநடை நிரப்பும் என்று நம்புகிறார். கவிஞன் ஆக்கும் பொது மரபிலிருந்து மாற்றம் பெறும் இலக்கிய நடைப் பிறழ்ச்சிகள் அக்கவிஞனால் எடுத்து வைக்கப்படும் ஒரு வரலாற்று முயற்சி என்பார் இவர். ரெனிவெல்லக், "பொதுவான இடம், பொதுவான மொழிக் கூறுகள் ஆகிய இரண்டுமே இலக்கியக் கட்டமைப்பின் பகுதிகள்"[11] என்பார்.

இவ்வறிஞர் பெருமக்களது கருத்துக்களை வகைப்படுத்தினால் நடை என்பது,

கவிஞரின் அனுபவம், மனநிலை, வாழ்க்கைப் பின்னணி முதலியவற்றின் பிரதிபலிப்பு.

படைப்பாளியின் தனித்தன்மைகளின் பிரதிபலிப்பு.

கவிஞன் உணர்த்தும் பாங்கு

இலக்கியத்தின் சிறப்புக் கூறுகள்.

என்ற நான்கையும் அடிப்படையாகக் கொண்ட ஒன்று எனலாம். சுருங்கக் கூறின் கவிஞன் தான் எடுத்துக்கொண்ட கருத்தைத் தன் அனுபவம் தோன்ற தனக்கேயுரிய முறையில் வெளிப்படுத்தும் பாங்கும் அத்தகைய வெளிப்பாட்டு முறைக்கு உதவும் மொழிக் கூறுகளும் நடையினைக் கணிக்க உதவும் எனலாம். இதனடிப்படையில் தமிழ்க் கவிதை நடையினைப் பின்வரும் முறைகளில் அணுகலாம்.

கால நடை

ஆசிரியரின் நடை

நடை காலத்தோடு நெருங்கிய தொடர்புடையது. சங்க காலத்தில் ஆசிரியப்பாவும் வெண்பாவும், இடைக்காலத்தில் விருத்தப்பாவும், தற்காலத்தில் புதுக் கவிதையும் காலச்

சூழலுக்கேற்ப கூறவந்த கருத்தை வெளிப்படுத்த உதவிய பா வடிவங்கள் ஆவன. சமயச் சார்பற்ற சங்க இலக்கியங்களை ஒரே வகையான நடை, ஓசை உடைய ஆசிரியப்பாவிலும், உலகத்திற்கு அறிவிக்கும் அறக் கருத்துக்களைக் குறுகிய வெண்பாவிலும் உணர்ச்சிப் பெருக்கான பக்திப் பாடல்களை வெவ்வேறு வகை நடை, வகை வகையான ஓசையுடைய விருத்தப்பாவிலும் பல்வேறு கருத்துக்களை உரைநடையிலும் நடப்பியல் சிக்கல்களைப் புதுக்கவிதைகளிலும் என்று படைப்பாளிகள் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு வடிவங்களின் மூலம் தத்தம் கருத்துக்களை வெளியிட்டனர். காலச் சூழலும், படைப்பாளியின் வடிவம் குறித்த நோக்கமும் இத்தகைய மாற்றத்திற்கான காரணங்கள். இவ்வாறு பாவடிவில் மட்டுமல்லாது ஒலிநிலை, சொல்நிலை, தொடர்நிலை ஆகிய மூன்று நிலைகளிலும் கால நடையினை அணுகலாம். சான்றாக தற்காலத் தமிழில் ல,ட ஆகிய ஒலியன்கள் மொழி முதலில் வழங்குதல் தற்காலத் தமிழ்க் கவிதைகளிலும் காணப்படுதல் சங்கச் செய்யுட்களில் காண இயலாத ஒன்று. அதேபோல் சங்கச் செய்யுட்களில் மகளைக் குறிக்க நற்றாய், செவிலித்தாய் கூற்றுப் பாடல்களில் பயன்படுத்தப்படும் அஞ்ஞை *(அகநானூறு 145)*, சிறுமுதுக்குறைவி *(அகநானூறு 17)*, மடத்தகுவி *(அகநானூறு 369)* போன்ற சொற்களைத் தற்காலத் தமிழ் இலக்கியங்களில் காண முடிவதில்லை.

படைப்பாளியின் நடையை அதாவது தனி ஒரு கவிஞனின் நடையை அறிய உதவும் முறை புள்ளி நடையில் (**Stylostatistics**) ஆகும். புள்ளி நடையியல்,

கவிஞன் விரும்பிப் பயன்படுத்தும் கூறுகள் (**Preferable**)

கவிஞன் திரும்பத் திரும்பப் பயன்படுத்தும் கூறுகள் (**Frequent**)

என்று இரு முறைகளில் ஒலிக்கட்டமைப்பு, சொல்லாட்சி, தொடரமைப்பு ஆகிய மூன்று நிலைகளில் கணிக்கப்படலாம்.

இவ்வாறு காலநடை, ஆசிரியனின் நடை என்ற இரு கோணங்களில், தமிழ்க் கவிதைகளில் கருத்தை வெளிப்படுத்தும் பாங்கினை ஆராயும்போது தமிழ்க் கவிதை நடைக் கூறுகளாகப் பின்வருவனவற்றை வகைப்படுத்தலாம்.

கருத்திற்கேற்ற நடை

பா வடிவத்திற்கேற்ற நடை

பயின்று வரல்

பொருத்தமான சொற்களைக் கையாளுதல்

விருப்பக் கூறுகள்

கற்பனையும் குறிப்பும்

நீக்கல் உத்தி

சொற் சுருக்கம்

நிலை மாற்றம்

இவ்வொன்பது கூறுகளையும் தனித்தனியே சுருக்கமாகக் காண்போம்.

### கருத்திற்கேற்ற நடை :

கவிஞன் தான் பேச எடுத்துக்கொண்ட கருத்திற்கேற்ப நடைக் கூறு சிற்சிலவிடத்து மாறுபடுகிறது. சான்றாகச் சங்க அகப்பாடல்களில் நீண்ட கலவை வாக்கியங்களைப் பயன்படுத்திப் பாடலின் இறுதிப் பகுதிவரை கருத்தை வளர்த்துச் சென்று பாடலைப் படிப்போரது ஆர்வத்தை வளர்த்துச் செல்லும் முறை காணப்படுகிறது. அகப் பாடல்களில் தலைவன் தலைவியின் களவு வாழ்க்கை தொடர்பான தனி மனித உணர்ச்சிகளைப் பாடுதல் பெரிதும் நோக்கமாகிறது. குறிப்பாக தலைவியின் நிலையைப் புரிய வைக்கும்பொருட்டு கேட்போனின் கவனத்தை இறுதிவரை ஈர்க்க ஆர்வநிலை உத்தி கையாளப்படுகிறது. இதற்குக் கலவை வாக்கியம் பயன்படுத்தப்படுகிறது. சான்றாக, அகநானூற்றில் 170ஆம் பாடலில் தலைவி தூதுவிடும் சூழலில், முதல் மூன்று வரிகள் தனக்குத் தூது செல்வதற்கு யாரும் இல்லை என்ற நிலையையும், ஏழாவது வரியில் யாரிடம் (தலைவனிடம்) தூது செல்லவேண்டும் என்பதும் எட்டாவது வரியில் தூது செல்லப் போகின்றவர் யார் (அலவன்) என்பதும் படிப்படியாகக் கூறப்படுகின்றன. இறுதி மூன்று வரிகளில்தான் "நள்ளென் யாமத்து நின்னுறு விழுமம் களைந்தோர் தன்னுறு விழுமம் நீந்துமோ எனவே" என்று தூதின் மூலம் சொல்லப்பட வேண்டிய கருத்து கூறப்படுகிறது. இறுதி இம்மூன்று வரிகள்தான் கூற்று நிகழ்த்துபவரையும் அவரது காதல் ஒழுக்கத்தையும், நிலையையும் புலப்படுத்துகின்றன. ஆனால் இதற்கு மாறாக புறப் பாடல்களில் கூறும் கருத்து பெரும்பாலும் அவ்வப்போது முடியும் தொடர்களின் மூலம் விடுவிக்கப்படுவதால் இறுதிவரை கருத்தினை அறியும் ஆவலைத் தூண்டும் தன்மையற்றதாய் ஆகிவிடுகின்றது. இதற்குக் காரணம் 'மன்னனைப் புகழ்தல்' என்ற கூறு பெரும்பாலும் புறப் பாடல்களின் நோக்கமாக இருப்பதாகலாம். புறம் 51இல் "நீர்மிகிற் சிறையுமில்லை; தீ மிகின் மன்னுயிர் நிழற்றும் நிழலுமில்லை; வளிமிகின் வலியுமில்லை; வழுதி கொண்டி வேண்டுவனாயிற் கொள்கெனக் கொடுத்த மன்னர் நடுக்கற்றனரே அளியரோ அளியர் அவன் அளி இழந்தோரே" என்ற வரிகள் அவ்வப்போது முடியும் தொடர்களாக அமைந்து கருத்தை வெளிப்படுத்துகின்றன. ஆர்வ நிலை உத்தி என்ற அமைப்பு புறப் பாடல்களை விட அகப் பாடல்களில் பெரிதும் கையாளப்படுதல் இவ்விரு நூல்களிலும் பேசப்படும் கருத்திற்கேற்பத் தொடரமைப்பு மாறுபடுவதையே காட்டுகிறது.

### பாவடிவத்திற்கேற்ற நடை :

கவிஞன் பயன்படுத்தும் பாவடிவத்திற்கேற்ப அவன் பயன்படுத்தும் சொற்களும் தொடர்களும் மாறுபடுவதுண்டு.

சான்றாக, பெண் என்னும் தலைமைப் பெயருக்குத் தமிழ், கன்னி என்ற இரு அடைமொழிகள் பயன்படுத்தப்படுவதனைக் கொள்ளலாம். இங்கு பெண் என்னும் தலைமைப் பெயர் ஓரசைப் பெயர். இப் பெயரைச் சிறப்பிக்க தமிழ் என்ற அடைமொழி சேர்ந்து ஈரசைச் சொல்லாகவும், கன்னி என்ற அடை சேர்ந்து மூவசைச் சொல்லாகவும் ஆக்குகிறது. அதுவே பாவடிவத்திற்கேற்பத் தேவையானவிடத்துப் பயன்படுத்தப்படுகிறது.

"கள்வர் மனம்போல் காரிருள் சூழும்
வேளையில்"

(க.தா. கவிதைகள்: I & II : 16-17)

"இலக்கியக் காதல் வழக்கம் போல
எல்லாம் நடக்க"

(க.தா.கவிதைகள்: I & II: 13-14)

என்ற இரு சான்றுகளிலும் உவம உருபுகள் முறையே புளிமா என்ற வாய்பாட்டுச் சீரில் மாச்சீரை உண்டாக்க அதாவது அசையை நிரப்ப ' போல்' என்றும், தேமா என்ற வாய்பாட்டுச் சீரை அமைக்க போல என்றும் அமைந்து நடையை வேறுபடுத்துகின்றன. எனவே மரபுக் கவிதைகளில் பாவடிவத்திற்கேற்ற வகையில் கையாளும் சொற்கள் வேறுபட்டு நடையை மாற்றுகின்றன எனலாம்.

**பயின்றுவரல் :**

கவிதையில் ஒருமுறை வந்த ஒலியனோ, சொல்லோ, தொடரோ மீண்டும் மீண்டும் தொடர்ந்து வரும் அடிகளில் இடம் பெறுதல் **(Repitition)** கவிதையின் ஒரு நடைக் கூறாக அமைகிறது. இவ்வுத்தி பயின்றுவரல் எனப்படும். நாட்டுப்புற இலக்கியங்களில் இவ்வமைப்பு போற்றப்பட்டது. கலித்தொகையில் தாழிசை அமைப்பு கருத்தை வலியுறுத்துவதற்காகத் திரும்பத் திரும்ப வரும் முறை காணப்படுகிறது. இவ்வமைப்பு கவிதையைத் தொடர்ந்து ஆர்வத்துடன் சுவைப்பதற்கும் கவிதையை எளிதில் மனதில் பதிய வைப்பதற்கும் ஏதுவாக இருக்கிறது.

**ஒலி நிலை:**

குறிப்பிட்ட ஒலியன் சீரின் அல்லது அடியின் முதலில் ஒன்றிவரத் தொடுக்கும் மோனை, தொடர்ந்து வரும் அடிகளில் அல்லது ஒரு அடியின் சீர்களில் இரண்டாம் ஒலியன் ஒன்றிவரத் தொடுக்கும் எதுகை, தொடர்ந்து வரும் அடிகளில் ஈற்றில் உள்ள ஒலியன் (அல்லது அசை அல்லது சீர்) ஒன்றி வரும் இயைபு, ஒரு குறிப்பிட்ட ஒலியன் திரும்பத் திரும்பத் தொடர்ந்து வரும் அடிகளில் வரும் வண்ணம் ஆகியன கவிதையின் ஒலிநிலையில் கையாளப்படும் மிகச் சிறந்த உத்திகள்.

"பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவ மனுங்கச்
செஞ்செவிய கஞ்சநிகர் சீரடியளாகி
அஞ்சொலிள மஞ்ஞையென அன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்"

(கம்பராமாயணம்; ஆரண்ய காண்டம் சூர்ப்பனகைப்படலம்; 24)

என்ற பாடலில் மெல்லெழுத்து மிகுந்த வந்து ஒருவித ஓசையை நல்கி ஒரு பெண்ணின் நடையின் மென்மையினை உணர்த்தப் பயன்படுகிறது என்று உரையாசிரியர்கள் கருத்துக் கூற வண்ணம் என்ற நடைக் கூறு வழி வகுக்கிறது. ஒலி நிலையில் கையாளப்படும் இவ்வுத்திகள் கவிதையை எளிதில் மனதில் பதிய வைத்து கவிதைக்குச் சிறந்த ஓசை நயத்தைத் தருகின்றன.

**சொல் நிலை :**

குறிப்பிட்ட சொல் அல்லது ஒரே வாய்பாட்டுச் சொல் பயின்று வருமாறு கவிதையை அமைப்பது தமிழ் இலக்கியங்களில் காணப்படும் ஒரு உத்தி எனலாம். இவ்வமைப்பு குறிப்பிட்ட ஒரு கருத்திற்கு முக்கியத்துவம் கொடுக்க வழிவகுக்கிறது. திருக்குறளிலும் இவ்வமைப்பு காணப்படுகிறது.

"தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்" (குறள் : 202)

என்ற குறளைச் சான்றாகக் கூறலாம். தீமையை வலியுறுத்த இங்கு 'தீய' என்ற சொற்பகுதி பயின்று வருமாறு செய்து கருத்தைச் செறிவாகக் கவிஞர் புலப்படுத்தியுள்ளார்.

மேடையேறி நின்றிடில் ஓர் எழில்

மெய்சிலிர்க்கப் பேசிடில் ஓர் எழில்

தாடை தாங்கும் தாடி அசைந்திடில்

தனிப்பெரும் எழில் கருநிறத் தமிழ்

ஆடை காற்றில் அசைந்திடில் ஓர் எழில்

அடி எடுத்து நடந்திடில் ஓர் எழில்

ஈடிலாத நம் ஈ.வெ. ராவினுக்(கு)

இது புறத் தெழில்! என்னில் உள்ளமோ

(கண்ணதாசன் கவிதைகள் I & II: 165 : 21-28.)

என்ற பாடலடிகளில் பெரியார் திரு. ஈ.வெ. ராமசாமி அவர்களின் ஆளுமையை வலியுறுத்த 'எழில்' என்ற சொல் திரும்பத் திரும்ப வருகிறது. இவ்வாறு சொல் பயின்று வருதல் கவிஞர் கூறவந்த கருத்தை வலியுறுத்திக் கருத்தைச் செறிவாகப் புலப்படுத்தவும் கவிதையில் ஓசை நயத்தை அமைப்பதற்கும், கவிதையை எளிதில் மனதில் பதிய வைக்கவும், பாடலின் இறுதியில் இயைபை உருவாக்கவும் பயன்படுகிறது எனலாம்.

ஒரு கவிஞரின் கவிதையில் மீண்டும் மீண்டும் இடம்பெறும் அடைமொழிகளையும் திரும்பத்திரும்ப வரும் கூறு கள் (**Redundant Features**) என்ற அடிப்படையில் இவ்வகையில் சுட்டலாம். கண்ணதாசனின் முதல் ஆறு கவிதைத் தொகுதிகளுள் தமிழ் என்ற அடைமொழி 22 தலைமைப் பெயர்களுக்குத் திரும்பத் திரும்ப வருவதனைக் காணமுடிகிறது. மரபுக் கவிதைகளைப் பயின்று தமிழ்ப்புலவர் பட்டம் பெற்றமை, திராவிட முன்னேற்றக் கழகக் கொள்கைகளில் தம் வாழ்வின் முற்காலத்தில் ஈடுபாடு, தமிழ் நெறி மீது ஆறாத காதல் ஆகிய இவரது வாழ்க்கைப் பின்னணியின் விளைவாக இவர் மனதில் உயர்ந்த இடம் பிடித்திருந்த தமிழ் என்னும் சொல் மொழி என்பதற்கு மட்டுமல்லாது எல்லாப் பெயர்களுக்கும் அடையாக வருகிறது. தமிழ் வாசம், தமிழ்த் தவம் என்னும் இடங்களிலெல்லாம் தமிழ் என்னும் சொல் தன் பொருளை இழந்து உயர்ச்சினைக் குறிப்பதற்காகவே வந்துள்ளது.

## பொருத்தமான சொற்களைக் கையாளுதல் :

தகுந்த இடத்தில் தகுந்த சொற்களைக் கையாளும் திறத்தினாலேயே கவிதைகள் சிறக்கின்றன. "சொல்வல்லமை வாய்ந்தது; சான்றாக ஒரு சொல் ஒரு பேரணியை ஆரம்பித்துவைக்க முடியும். மற்றொரு சொல் அதே பேரணியில் செல்பவர்களைப் பார்த்துக் கல்லெறிய வைக்கச் செய்யும்"[12] என்பார் எஸ். அய். ஹயகவா. "சொற்கள் மாயத் தன்மையுடையவை; பயன்படுத்துபவர்களின் மனதைப் பாதிக்கின்றன; வெறும் வார்த்தைகள்தானே என்று நாம் அவமதிக்கலாம். ஆனால் மனதின் எண்ணத்தைச் செம்மைப்படுத்தவும் உணர்வுக்கு வடிகாலாகவும் ஆசைகள் செயல்கள் முதலியவற்றை நெறிப்படுத்தும் வல்லமை படைத்தவையாகவும் அமைகின்றன"[13] என்பார் அல்டஸ் ஹக்ஸ்லி. இன்னவகைப் பயன்பாட்டிற்கு இன்னின்ன சொற்கள் என்று பிரித்தறிதல் அவசியம் என்பார் அவர். உரைநடையிலோ பேச்சு மொழியிலோ பொருளை வெளிப்படுத்த உதவும் கோப மொழி, மகிழ்ச்சி மொழி, ஒருகோட்ட மொழி போலவே கவிதையிலும் சில குறிப்பிட்ட சொற்கள் கவிஞனது கருத்துக்களை வெளிப்படுத்துகின்றன. "மனநிலையின் நெகிழ்ச்சியினை அவரவர் எடுத்தாளும் சொற் களே காட்டுகின்றன"[14] என்பார் இ. சுந்தரமூர்த்தி. எனவே பொருத்தமான இடத்தில் பொருத்தமான சொற்களைக் கையாளும் திறத்தினாலேயே கூறவந்த பொருள் திறம்பட வெளிப்படுத்தப்படுகிறது. தன் காதலியின் அன்பற்ற தன்மையைச் சுட்டிக்காட்ட விழையும் காதலன்,

உன் கருமிக் கண்களுள்

என்னைக்

கண்ணீராகச் சேர்த்துக் கொள் *(பால்வீதி, ப.21)*

என்று கூறுமிடத்து கண் என்ற தலைமைப் பெயருக்குக் கருமி என்ற அடைமொழியைப் பொருத்தமாகப் பயன்படுத்துவதைச் சான்றாகக் கூறலாம். பாரதிதாசனின் சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் மூலிகை வேண்டும் என்று குப்பனிடம் வஞ்சி கேட்கிறாள். மலையின் உச்சியினைப் பார்த்து குப்பன் மலைக்கிறான். அவன் மலைப்பதனைக் கண்டு கோதை சிரிக்கிறாள். அதைக் கண்ட குப்பன் அவளது அவமதிப்பைப் பொறுக்கவியலாமல் மலையின் மேல் சென்று மூலிகை பறிக்க விரைகின்றான். இக் காட்சி,

வஞ்சி அப்போது மணாளன் மலைப்பதனைக்

கொஞ்சம் அவமதித்துக் கோவை உதடு

திறந்தாள் திறந்து சிரிக்குமுன் குப்பன்

பறந்தான்

*(பாரதிதாசன் கவிதைகள் முதல் தொகுதி, ப. 4)*

என்று காட்டப்பட்டுள்ளது. இங்கு குப்பனது விரைவைக் காட்ட 'பறந்தான்' என்றசொல் முற்றிலும் பொருத்தமுடைய சொல்லாக அமைகிறது.

**விருப்பக் கூறுகள் :**

ஒவ்வொரு கவிஞனுமே தனக்கு பிடித்த சொற்கள், அல்லது சொற்றொடர்களை விரும்பிப் பயன்படுத்தும் போக்கு பொதுவாகக் கவிதையில் காணக்கூடிய ஒரு அமைப்பு ஆகும். இவ் விருப்பக் கூறுகள் அவ்வக் கவிஞனை இனங்காண உதவும். பாரதிதாசனின் பாடல்களில் திட்டவட்டமாக அடித்துக்கூறும் தொடரமைப்பு விரும்பிப் பயன்படுத்தப்படும் கூறாக அமைகிறது.

பெண்ணடிமை தீருமட்டும் பேசுந் திருநாட்டு

மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே

*(பாரதிதாசன் கவிதைகள் முதல் தொகுதி, ப. 3)*

பொங்கு தமிழர்க் கின்னல் விளைத்தால்

சங்காரம் நிஜம்

*(பாரதிதாசன் கவிதைகள் முதல் தொகுதி, ப. 100)*

போன்ற வரிகளைச் சான்றாகச் சுட்டலாம். கலைஞர் கருணாநிதியின் படைப்பிலக்கியங்களில் 'எத்திப் பிழைப்போர்', 'கட்டாணி முத்தாள்', 'குள்ள நரிச் செயல்', 'கூனல் உள்ளம்', 'சிறு நரி' முதலியன கவிதைப் படைப்புக்களிலும் 'குலத்தைக் கெடுக்க வந்த கோடாரிக் காம்பு', 'தலையில் சம்மட்டி கொண்டு அடித்தது போல்', 'மலைக்கும் மடுவுக்குமென,''புளகாங்கிதம் அடைந்தார்' போன்ற சொற்றொடர்கள் உரைநடை இலக்கியங்களிலும் அவர் விரும்பிப் பயன்படுத்தும் கூறுகளாக அமைவதைக் காணலாம். கண்ணதாசன் கவிதைகளில் குறிப்பிட்ட சொல் திரும்பத் திரும்பப் பாடலடிகளில் வரும் அமைப்பும், எச்சத் தொடர், பெயர்த் தொடர், வினாத் தொடர்

ஆகிய தொடரமைப்புக்களும் கவிஞரால் விரும்பிப் பயன்படுத்தப்படுகின்றன.

### கற்பனையும் குறிப்பும் :

'செய்தி தெரிவித்தல்' என்ற நோக்கம் மட்டுமல்லாது அதையே புனைந்து மெருகூட்டிச் சொல்லுதல் என்ற அமைப்பு கவிதையில் சிறப்பிடம் பெறுக. இத்தகைய புனைந்து சொல்லும் போக்கிற்குக் கவிஞனின் கற்பனைத் திறனே மிகுதியும் உதவுகிறது. கற்பனையின் விளைவாகக் கவிதைகளில் ஒன்றனை மற்றொன்றுக்கு ஒப்பிட்டுச் சொல்லும் உவமையும் அதையே சற்று மாற்றிச் சொல்லும் உருவகமும், குறிப்பிட்ட வர்ணனையின் மூலம் பேசப்படும் பாத்திரத்தின் பண்பைப் பெற வைக்கும் உள்ளுறையும் கூறவந்த பொருளை நேரடியாகவன்றிக் குறிப்பாகப் புலப்படுத்துகின்றன.

பாரதிதாசன் தமிழைத் தமிழ் எங்கள் அறிவு, உணர்வை மேம்படுத்தும் ஒன்று, உயர்வுக்குக் காரணி, உரிமைக்கு அடிப்படை, கவிதையின் அடிக்கருத்து என்று ஒப்பிட்டுச் சொல்லும் இடங்களில் நேரடியாகப் பொருள் ஓரளவு பொருந்தினாலும் தமிழ் மொழியைத் தேன், அமுது, பழம், நிலவு, மணம், வாழும் ஊர், அசதியை மாற்றும் மருந்து, பிறவிக்குத் தாய், இதயத் தீ, பிறவியின் நல்வாய்ப்பு, சுவைச் சொற்களுடையது, வெல்லச் செய்யும் இயல்புடையது, வளம், ஒளி, என்று உருவகிக்குமிடத்துத் தமிழ் என்றவுடனே அவர் உணர்ச்சிவசப்படும் போக்கைக் காட்டுவதுடன் அவரது மிகுதியான தமிழ்ப் பற்றையும் காட்டுகிறது எனலாம். இத்தகைய வர்ணனையே பாடலடிகளுக்கு உயிர் தருவனவாய் அமைந்து கவிஞனுக்குப் புகழ் சேர்க்கின்றன. இத்தகைய கவிதைகளே மக்கள் மனதிலும் நீங்கா இடம் பிடிக்கின்றன. மிக அதிகமான கற்பனையினால் விளைந்த உருவகமும் எளிய நடையுமே இத்தகைய கவிதையின் புகழுக்குக் காரணம் எனலாம்.

இதுவே இன்றைய புதுக் கவிதைகளில் உவமையைச் சொல்லிப் பொருளைப் பெறும் குறியீடாகப் பயன்படுத்தப்படுகிறது.

> புறத் திணைச் சுயம்வர மண்டபத்தில்
>
> போலி நளன்களின் கூட்டம்
>
> கையில் மாலையுடன்
>
> குருட்டு தமயந்தி
>
> (பால்வீதி, ப.72)

இங்கு போலித் தலைவர்கள் அமர்ந்திருக்க, கண் பார்வையற்ற பெண் ஒருத்தி அவர்களுள் ஒருவனைத் தன் கணவனாகத் தேர்ந்தெடுக்க மாலையுடன் நிற்கிறாள் என்ற கருத்து நம் நாட்டுத் தேர்தல் முறையை எள்ளி நகையாட குறியீடாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு குறிப்பாகப் பொருள் புலப்படுத்தும் முறையும் கவிதை நடையில் இடம் பெறுகிறது.

### நீக்கல் உத்தி :

பேச்சு மொழியில் அல்லது நீண்ட உரைநடை வரிகளில் கூறும் கருத்து பாடலடிகளில் கூறப்படும்போது பாடலடிக்கேற்பச் சில கூறுகள் நீக்கப்படுகின்றன. "இத்தகைய நீக்கல் உத்திக்குப் பாடலின் அளவு முக்கிய காரணமாகிறது"[15] என்பார் ஜெ.நீதிவாணன்.

> தீம்பழப் பலவின் சுளைவிளை தேறல்

என்ற வரியில் 'விளைந்த' என்ற பெயரெச்சம் 'விளை' என்று பெயரெச்ச விகுதி நீக்கப்பட்டுப்

பயன்படுத்தப்பட்டுள்ளதனைச் சான்றாகக் கூறலாம்.

### சொற் சுருக்கம் :

விரித்துக் கூறும் உத்தி கவிதைகளில் தேவையானவிடத்துப் பயன்படுத்தப்பட்டாலும் சுருக்கிச் சொல்லுதல் கவிதை நடைக்கே உரிய கூறாக அமைகிறது. குறைந்த சொற்களில் அதிகக் கருத்துக்களைக் கூறும் இத்தகைய நிலையே கவிதையில் ஒரு செறிவைத் தருகிறது எனலாம். வாழ்வின் தோல்வியை,

ஆலகாலத்திற்கே
பாற்கடல் கடைந்தோம்
அமுதம் வந்தது
அவசரமாய்க் குடித்து
விக்கிச் செத்தோம் (பால்வீதி, ப.59)

என்ற வரிகள் மிகச் சுருக்கமாகக் கூறுவதைக் காணலாம்.

### நிலைமாற்றம் :

"எண், பால், திணை முதலான இலக்கணக் கூறுகள் தமக்குரிய இயைபினைப் பெறாமல் மாறுபட்ட இயைபினைப் பெறும்பொழுது அங்கு நிலைமாற்றம் நிகழ்ந்திருக்கிறதெனலாம்"[16] என்று ஜெ.நீதிவாணன் தம் நூலில் சுட்டும் நிலைமாற்றமும் கவிதை நடையை உருவாக்குகிறது எனலாம். உயர்திணைப் பெயர்கள்மேல் அஃறிணைப் பண்பு ஏற்றப்படுவதும் அஃறிணைப் பொருட்களின் மேல் உயர்திணைப் பண்பு ஏற்றப்படுவதும் சங்க இலக்கியத்தில் உள்ளுறைகளில் காணப்படும் திணைமாற்றத்திற்குச் சான்று.

எண், பால், திணை முதலான இலக்கணக் கூறுகள் இயைபில்லாமல் அமைதல் தவிர பொதுவாகக் கவிஞன் பொது வழக்கிலிருந்து பிறழ்ந்து மாறுபடுத்திச் சொல்வதின் மூலம் வேறுபடுத்திக் கொள்ளும் உத்தியையும் இவ்வகையில் சேர்க்கலாம்.

.............. வண்ணமலர்ச் சோலையிலே
எண்ணம் வேறாகி இருக்கின்றேன் நான்' என்று
கண்ணை அவள் கண்ணிலிட்டுக் கையேந்தி நின்றிட்டான்
(பாரதிதாசன் கவிதைகள் முதல் தொகுதி, ப. 2)

என்பதைச் சான்றாகக் கூறலாம். இங்கு 'நின்றிட்டான்' என்பது மாறுபட்ட வழக்காக அமைகிறது. இவ் வினைமுற்று பேச்சு வழக்குச் சொல்லாக இருப்பினும் கவிதை நடையில் மாறுபட்டு ஒலிப்பதைக் காணமுடிகிறது.

கவிஞன் தெரிந்தெடுத்துக்கொள்ளும் கருத்தினைத் தன் அனுபவம் தோன்ற தனக்கேயுரிய முறையில் வெளிப்படுத்தும் பாங்கும் அத்தகைய வெளிப்பாட்டு முறைக்கு உதவும் மொழிக் கூறுகளும் நடையினைக் கணிக்க உதவுகின்றன. காலம், கருத்து, பாவடிவம், ஆசிரியனின் பின்னணி ஆகியவை கவிதை நடையைப் பாதிக்கின்றன. பயின்றுவரல், பொருத்தமான இடத்தில் பொருத்தமான சொற்கள், கவிஞனின் விருப்பக் கூறுகள், கற்பனையின் விளைவான குறிப்பு, நீக்கல் உத்தி, சொற்சுருக்கத்தின் விளைவான செறிவு, நிலை மாற்றம் ஆகியன கவிதை நடையை உருவாக்கும் முக்கியக் கூறுகள் எனலாம்.

அடிக்குறிப்புக்கள் :


1. Richard M. Eastman, Style, P.4.
2. மு. வரதராசன், இலக்கியத் திறன், ப. 238.
3. J. Middleton Murry, The Problem of Style, P.7.
4. Riffaterre, Scientific Stylistics, David Lodge, Language of Fiction, P.53.
5. J. Warburg, Appropriate Choice, David Lodge, op.cit. P.61.
6. Enkvist , Linguistics and Style, ஜெ. நீதிவாணன். நடையியல், ப.22.
7. Hudson, "An Introduction to the study of Literature". கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைப் பழைய மாணவர் மன்ற வெளியீடு, ப.166.
8. Richard M. Eastman, op.cit. P.6.
9. J. Warburg, Appropriate Choice, David Lodge, op.cit.P.61.
10. Spitzer, The title essay in Linguistics and Literary History: Essays in Stylistics (Princeton, 1948) David Lodge, op.cit P.55.
11. Renewelleck, Style in Language, David Lodge, op. cit.P.55.
12. S.I. Hayakawa, Language in Thought and Action, P.3.
13. Aldous Huxlay, Words and their meanings, S.I. Hayakawa, op. cit. P.3.
14. இ. சுந்தரமூர்த்தி, "நடையின் வகைகள்" தமிழாய்வு-மு.வரதராசன் நினைவு மலர், ப.87.
15. ஜெ. நீதிவாணன், op.cit. P.111.
16. மேலது, ப.119.


* * *

# கவியரசரின் கனவுகள்



முனைவர் இரா. மோகன்

'புவியனைத்தும் போற்றிட வான்புகழ் படைத்துத் தமிழ் மொழியைப் புகழில் ஏற்றும் கவியரசர் தமிழ்நாட்டுக்கு இல்லை எனும் வசை' பாரதியால் கழிந்தது உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை. ஆனால், சுவை புதிய, பொருள் புதிய, வளம் புதிய, சொற் புதிய, சோதி மிக்க, எந்நாளும் அழியாத நவ கவிதைகளை உலகிற்கு நல்கிய அந்த மகாகவி எத்தனையோ இனிய கனவுகளைத் தம் உள்ளத்தில் தேக்கி வைத்திருந்தார்; அவற்றை நிறைவேற்றி வைக்கும் வரம் தருமாறு கடவுளரிடம் அவ்வப்போது வேண்டினார். அங்ஙனம் கவியரசர் கண்ட கனவுகள் சிலவற்றைக் குறித்து இக் கட்டுரையில் காண்போம்.

**'நூறாண்டு வாழ வேண்டும்' :**

நூறு வயது வரை இன்பமாக வாழ வேண்டும் என்ற கனவு பாரதியின் மனத்தில ஆழமாகக் குடிகொண்டிருந்தது. அவர் தம் கவிதைகளிலும் கட்டுரைகளிலும் வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் இக் கனவினை வெளியிட்டார். 'நோவு வேண்டேன், நூறாண்டு வேண்டினேன்' என அவர் 'விநாயகர் நான்மணி மாலை' யில் பாடினார். 'வேண்டும்' என்ற தோத்திரப் பாடலில் அவர் தமக்கு வேண்டியவற்றைப் பட்டியலிட்ட போது, 'தனமும் இன்பமும் வேண்டும், கனவு மெய்ப்பட வேண்டும்' என்று பாடினார்; 'சக்தியே நம்மைச் சமைத்தது காண் நூறாண்டு பக்தியுடன் வாழும் படிக்கு ' என்று 'மகாசக்தி வெண்பா'வில் பாடினார்; 'பொய்யோ? மெய்யோ?' என்ற வேதாந்தப் பாடலுக்கு எழுதிய குறிப்புரையில் 'நமக்கு இவ்வுலகத்தில் வேண்டியவை நீண்ட வயது, நோயில்லாமை, அறிவு, செல்வம் என்ற நான்கும். இவற்றைத் தரும்படி தத்தம் குல தெய்வங்களை மன்றாடிக் கேட்க வேண்டும்' என்று எழுதினார். 'மனிதனுக்கு இயற்கை வயது நூறு. ஆகையால் ஐம்பது வயதாகும் வரை ஒருவன் இளமை தீர்ந்தவனாக மாட்டான்' என்னும் கருத்தினைக் கொண்டிருந்த கவியரசர், நூறு ஆண்டுகளில் எவ்வளவோ காரியங்களைச் செய்து முடிக்கலாம் என்று உறுதியாக நம்பியிருந்தார். ஆனால், 'நாம் ஒன்று நினைக்க, தெய்வம் இன்னொன்று நினைக்கும்' என்னும் வாக்கு, அவரது வாழ்வில் உண்மை ஆயிற்று; முப்பத்தொன்பது வயது முடிவதற்குள் மகாகவியின் வாழ்க்கையே முடிந்து போயிற்று!

**'கனக்கும் செல்வம் வேண்டும்' :**

அடுத்து, செல்வ வளத்தோடு வாழ வேண்டும் என்ற கனவு பாரதிக்கு நிரம்ப இருந்தது. இக் கனவினைக் குறித்தும் அவர் தம் படைப்புக்களில் பல இடங்களில் வெளியிட்டுள்ளார். 'கனக்கும் செல்வம் நூறு வயது இவையும் தர நீ கடவாயே! என்பது கணபதியிடம் அவர் கேட்கும் வரம். 'விநாயகர் நான்மணி மாலை' யிலேயே பிறிதோர் இடத்தில் அவர் 'நீண்ட புகழ்'

வாணாள், நிறைசெல்வம், பேரழகு-இவற்றை வேண்டுமட்டும் ஈவாய் விரைந்து' என்று வேண்டினார். இன்று அலுவலகக் கோப்பில்'விரைவு' (Urgent) என்றும், 'நனி விரைவு' (Very Urgent) என்றும் எழுதுவது போல், பாரதி தம் பாடலில் விநாயகப் பெருமானிடம் 'வேண்டுமட்டும் விரைந்து' தருமாறு வேண்டினார். 'யோக சித்தி' என்னும் தோத்திரப் பாடலில் 'நின்னைச் சில வரங்கள் கேட்பேன் அவை நேரே இன்று எனக்குத் தருவாய்' என்று சக்தியிடம் வரம் கேட்ட போதும் பாரதி மறவாமல், 'தொழில் பண்ணப் பெருநிதியம் வேண்டும்' என்று கேட்டார். அவரது கற்பனையில் தமிழ்நாடு 'செல்வம் எத்தனை உண்டு புவி மீதே - அவை யாவும் படைத்த நாடாக விளங்கியது. 'இல்லை என்ற கொடுமை -உலகில் இல்லையாக வைப்பேன்!' என்றும், 'வறுமை என்பதை மண்மிசை மாய்ப்பேன்!' என்றும் திடமான தன்னம்பிக்கையோடு முழங்கிய கவியரசரின் வாழ்வில் வறுமை இறுதி வரை ஓடி விளையாடியது; ஒரு பொழுதும் ஓய்ந்திருக்கவில்லை. இல்லாமையால்-வறுமைக் கொடுமையால்-விளையும் அவலத்தைக் கவியரசர் தம் 'ஞான ரத' த்தில் வித்தியாசமாகப் படைத்துக் காட்டியுள்ளார். பின்மாலைப் பொழுது; ஆனந்தகரமான கடற்காற்று; தெளிவும் இன்பமும் நடமிடும் சூழல்; 'ஆகா! இப்போது போய் ஸ்நானம் செய்து விட்டு, நேர்த்தியான ஒரு குதிரை வண்டியில் ஏறிக்கொண்டு, கடற்கரை ஓரமாகத் தெற்கே அடையாற்றுக்குப் போய், வழியெல்லாம் காளிதாசனுடைய சாகுந்தலத்தையேனும் அல்லது ஓர் உபநிஷத்தையேனும் கொண்டு போய்ப் படித்து இன்பமடைந்து கொண்டே திரும்பினால் நல்லது' என்ற சிந்தனை உண்டாகிறது பாரதிக்கு. ஆனால், தம்மிடம் குதிரை வண்டி கிடையாது என்ற விஷயம் அப்பொழுது தான் அவரது நினைவிற்கு வருகின்றது. 'அடடா! மிகுந்த செல்வம் இல்லாததனால் உலகத்தில் பலவிதமாகிய இழிவான இன்பங்கள் மட்டுமல்ல - உயர்ந்த இன்பங்கள் கூடப் பெறுவதற்குத் தடை ஏற்படுகிறதே!' என்று எண்ணி ஏங்குகிறார் பாரதியார். இல்லாமைக் கொடுமையின் இந்த வித்தியாசமான கோணத்தை இதுவரை எவரும் படம்பிடித்ததில்லை; இவ்வகையில் கவியரசரே முன்னோடியாக விளங்குகிறார்.

'வையத் தலைமை ஏற்க வேண்டும்' :

'நமக்குத் தொழில் கவிதை, நாட்டிற்கு உழைத்தல், இமைப் பொழுதும் சோராது இருத்தல்' என்று முடிந்த முடிவாகத் தம் தொழிலையும் வாழ்க்கை நிலையையும் வரையறுத்துப் பாடிய பாரதியின் ஆழ்மனத்தில் கவிதைக் கலையின் மேல் அளவற்ற மோகம் இருந்தது; அவர் தம் கவிதை முயற்சிகளைக் குறித்துப் பற்பல கனவுத் தொழிற்சாலைகளைக் கட்டி வைத்திருந்தார். அவர் 'தீயே நிகர்த்த ஒளி வீசும் தமிழ்க் கவிதைகள்' பாடவேண்டும் என விரும்பினார்; 'என் நாவில் பழுத்த சுவைத் தெண்டமிழ்ப் பாடல் ஒரு கோடி மேவிடச் செய்குவையே!' என்று விநாயகப் பெருமானிடம் வேண்டினார்; 'நினக்கு ஒரு விண்ணப்பம் செய்திடுவேன், எள்ளத்தனை பொழுதும் பயனின்றி இராது என்றன் நாவினிலே வெள்ளமெனப் பொழிவாய்' என்று தெள்ளுகலைத் தமிழ் வாணியிடம் வரம் வேண்டினார்; 'நமது பாட்டு மின்னலுடைத்தாகுக; நமது வாக்கு மின்போல் அடித்திடுக' என்று 'வசன கவிதை' ஒன்றில் எழுதினார்; 'காட்டு நெடுவானம் கடலெல்லாம் விந்தையெனில், பாட்டினைப் போல் ஆச்சரியம் பாரின்மிசை இல்லையடா! எனக் 'குயில் பாட்'டில் பாடினார். கவிதைக் கலையைப் பொறுத்த வரையில் பாரதிக்கு இரண்டு கனவுகள் இருந்தன. ஒன்று, தம் பாட்டுத் திறத்தாலே இவ் வையத்தைப் பாலித்திட வேண்டும் என்று விழைந்தார்; பிறிதொன்று, பாடும் திறம் கொண்ட தமக்கு வையத் தலைமை ஏற்கும் வாய்ப்பு கிடைக்க வேண்டும் என்று கனவு கண்டார். 'அடி, உன்னை கோடி முறை தொழுதேன் - இனி வையத் தலைமை எனக்கு அருள்வாய்!' என்று சக்தியிடம் வரம் கேட்டார் அவர். என்றாலும், 'அக்ஷர லக்ஷம் பெறுமான பாக்களை' எழுதிய பாரதி தம் வாழ்நாளின் பெரும்பகுதியை உற்சாகம் குன்றிய நிலையில் தான் கழிக்க நேர்ந்தது. 'சி. சுப்பிரமணிய பாரதியாரைத் தமிழ்நாட்டார் அறிவார்கள், ஆனால், அவர் பெருமையை

உள்ளபடி அறிந்தவர்கள் மிகமிகச் சிலரேயாவர்' எனப் பரலி சு. நெல்லையப்பர், பாரதியின் 'கண்ணன் பாட்டு' முதற்பதிப்புக்கு எழுதிய முகவுரையில் எழுதியதே நூற்றுக்கு நூறு உண்மையாக இருந்தது.

## 'தமிழ்நாட்டில் ஒரே சாதி!':

'சாதி இரண்டொழிய வேறில்லை' என்றார் ஔவையார்; 'சாதிப் பிரிவினிலே தீ மூட்டுவோம்' என்றார் சிவவாக்கியர். அவர்களை அடியொற்றி, 'சாதிகள் இல்லையடி பாப்பா-குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்' என்றும், 'சாதிக் கொடுமைகள் வேண்டாம்-அன்பு தன்னில் செழித்திடும் வையம்' என்றும் பாடினார் கவியரசர். அவர் கனவு கண்ட தமிழகத்தில் தொண்ணூறுக்கு மேற்பட்ட சாதிகள் இல்லை; ஒரே ஒரு சாதி தான் இருந்தது. அதற்கு அவர் வைத்திருந்த பெயர் 'தமிழ்ச் சாதி' - 'மனித சாதி' என்பதாகும். 'பாமரராய், விலங்குகளாய், உலகனைத்தும் இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு நாமமது தமிழர் எனக் கொண்டிங்கு வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்வீர்!' எனத் தமிழச் சாதியின் இழிநிலை குறித்து நெஞ்சு பொறுக்காமல் பாடினார்; 'விதியே, விதியே தமிழச் சாதியை என் செய நினைத்தாய், எனக்கு உரையாயோ?' என்று விதியிடமே மனம் நொந்து கேட்டார்; 'மழை பெய்கிறது, ஊர் முழுதும் ஈரமாகிவிட்டது. தமிழ் மக்கள், எருமைகளைப் போல, எப்போதும் ஈரத்திலேயே நிற்கிறார்கள், ஈரத்திலேயே உட்கார்ந்திருக்கிறார்கள், ஈரத்திலேயே நடக்கிறார்கள், ஈரத்திலேயே படுக்கிறார்கள்; ஈரத்திலேயே சமையல், ஈரத்திலேயே உணவு, உலர்ந்த தமிழன் மருந்துக்குக் கூட அகப்பட மாட்டான்' என்று 'வசன கவிதை' ஒன்றில் வேதனையோடு எழுதினார். அவர் கனவு கண்டதெல்லாம் தமிழ்நாட்டில் 'தமிழ்ச் சாதி' என ஒன்றே இருக்க வேண்டும் - தமிழன் நெஞ்சில் உரமும் நேர்மைத் திறமும் கொண்ட 'உலர்ந்த தமிழ'னாய் விளங்க வேண்டும்- தமிழ் நாட்டில் தமிழ் மொழி தலைமை பெற்றுத் தழைத்திட வேண்டும்-தமிழ்நாட்டில் அகர முதல் னகரப் புள்ளி இறுதியாக எல்லா விவகாரங்களும் தமிழ்மொழியில் நடக்க வேண்டும் என்பதுதான். அவர் கனவு நனவானால், தமிழ்நாட்டில் கல்வி சிறக்கும்; செல்வம் கொழிக்கும்; புகழ் மண்டும்; இன்பம் விளங்கும்.

* * *

# நெஞ்சம் குமுறுதடா!

துரை. லோகநாதன்

குழவி அழுவதால் குவலய மலர்ந்திடு
பழமை இனிமை பாரினி லுண்மை
பிழையதன் பின்னர்ப் பிழை பெருகின்
இழைத்திடு மழுகை இதுஎன் தேவை!
இளமை மழலை தந்திடு மொழியும்
வளமிகு இன்பினை வகுத்திட லுண்டு.
கலைபல காணும் காளை நிலைதனில்
நிலையில் சொல்லும் நியதி யாமோ!
இன்பொன் றெண்ணி இல்லறம் நாடுதல்
அன்பொன் றாமோ? அறமு மாமோ!
தன்மனை நீங்கிப் பிறர்மனை நயத்தல்
பின்னுறு பிழையை முன்னமே காட்டும்
வன்மனச் செயலினை வளர்நல் லுள்ளம்
தன்னுடன் கூட்டாத் தகையது வேண்டும்.
ஈன்றார் அன்பினி லிருந்திட நாளும்
தோன்றிட எவரும் வேண்டு முலகிலே
பண்பினில் அன்பும் பயிலும் கல்வியும்
எண்ணும் செயலினில் எழுச்சியைக் கூட்டும்
கண்ணு மிமையெனக் கலந்திடு முள்ளமும்



பின்னிடு வாழ்வில் இருந்திடு மன்பாய்.
வறுமை நிலையது வாடிட நாளும்
உறுதி யொன்றினை ஒல்லும் வகையினில்
பெறுதி நாளும் பெருகிடு வளமும்
இறுதி பயவா நலமும் வளரும்
செல்வ மென்பது கல்விச் செல்வமே!
வல்லமை ஆக்கி வளர்த்திடு தினமே!
கற்றலின் நன்று கடுதின் அடக்கம்
சொற்றலில் நன்று சொல் திறம்பாமை!
உற்றநல் கல்வியும் உயர்ந்த துணையே
சிற்றுயிர் சிறக்கப் பிறப்பது மதுவே!
பட்டினி கிடப்பினும் பண்பா டாமை
விட்டிடல் வேண்டா வீயாப் புகழைக்
கூட்டிட நாளும் கூட்டுக முயல்வை
ஏட்டினில் கருத்தினை எழுப்பிட நாளும்
ஊட்டுக நன்தமிழ் உளம்புக நன்றே!
ஆண்மை நல்லறி வுடைமை; யதனில்
உண்மை உயர்நா அடக்க(ம்); மென்னும்
பண்பொடு பணிவு பலபடக் கண்டால்
பிணிபடா உள்ளம் பிறந்திடு மெவர்க்கும்
முன்னோர் செயலால் முளைத்த செல்வமும்
பின்னோ னழிவதை எங்ஙனம் கூறுதும்!
என்னே உலகம் எழுதெழி லுண்கண்
தன்மன அன்பினால் தனிநீர் பெருக்கி
அழுவ தொன்றே அமைந்த உலகம்
பழுதில் நிலையினைப் பார்த்திட வேண்டுமோ!
அறிவை அறிந்தே அணுகுக அதன்வழி
உறும்நல் இனநலம் உயர்வது கூட்டும்

பயனில் சொல்தனைப் பலபட நீக்குக
கயமை நட்பினை விட்டிடின் பிழைப்பீர்
சுறுசுறுப் புள்ளம் சுமையது கூட்டா
வறுமை உள்ளம் புலமை கூட்டும்
அன்பினி லெல்லாம் அடங்கிடு நாளினில்
அன்பிலா நிலையும் அமைதல் எதற்கோ!
மூதுரை பலவும் மூப்பில் நூலும்
ஓதும் நிலையில் உளமே கொண்டால்
எண்ணம் எழுச்சி எங்ஙனம் சிதறும்?
தண்ணிய உலகம் தவிக்குமா? தவறினால்,
பிஞ்சு உளமும் பிழையது கண்டே
நெஞ்சம் குமுறும் நிலைய திங்கே! (பாவேந்தர்)
நெஞ்சம் மகிழும் நிலையது என்றோ!

* * *



# தொன்மம் ஒரு விளக்கம்

முனைவர் தான்யா நடராசன்

**தொன்மம் - புதுச் சொல்லாக்கம்:**

தொன்மமாவது புராணம்; புராணமாவது பழங்கதைகள்; பழங்கதைகளாவது மிக்க பழமையானதும், அடிப்படையானதுமான மனித ஆன்மீக வாழ்வு பற்றிய வரலாற்றைக் குறிப்பது.

தொன்மை தானே உரையொடு புணர்ந்த பழமை மேற்றே

என்ற தொல்காப்பிய நூற்பா இக்கருத்துக்களையே சொல்கின்றது.

சிறப்புப் பொருளை உணர்த்தவல்ல சில சொற்கள் தனக்குரிய பொருளைக் காலப்போக்கில் இழந்து பொதுப் பொருளைக் குறிக்கும் சொல்லாய் மாறிவிடுவதுண்டு. அப்போது, இழந்த சிறப்புப் பொருளை உணர்த்தவல்ல புதுச் சொல்லாக்கம் தேவைப்படுகின்றது. 'தொன்மம்' என்ற புதுச்சொல்லும் இத்தகு மொழி வளர்ச்சி மாற்றச் சூழலில் உருவாக்கப்பட்டதேயாகும். "'தொன்மம்' என்ற சொல், 'மித்து' (Myth) என்ற ஆங்கிலச் சொல்லுக்கு ஈடாகக் கையாளப் பெறுகிறது. 'தொன்மம்' என்ற சொல்லாக்கம், கருதிய பொருளின் கருத்துணர்த்தும் சொல்லாக உளது."[1]

ஒரு மனிதனை வளர்ப்பது எது? அழிப்பது எது? மனிதன் எதைச் சார்ந்து, யாரை நம்பி வளர்ந்து வாழ்ந்து கொண்டிருக்கிறான்? என்ற வினாக்களுக்கான விடையாகப் பழங்கதைகள் பேசின. சொல்லிப் புரியவைக்க முடியாத வாழ்வின் நுண்பொருளுணர்வை மிக எளிதாகப் புரியவைக்கும் உறுதுணையாகத் தொன்மங்கள் தோற்றம் பெற்றுள்ளன. மக்களால் மக்களுக்காகப் புனைந்த படைப்புகள் அவை.

**தொன்மம் - களம் :**

தொன்ம ஆய்விற்குரிய களம் உலகமுழுவதும் தழுவியதாய் உள்ளது; எந்நாட்டு இலக்கியமும் தொன்ம உணர்வுகளுடனே வளர்க்கப் பட்டுள்ளது. தொன்மம் பேசாத நாடு இவ்வுலகில் இல்லை என்பதே உண்மை. இலக்கியத் திறனாய்வைப் போலவே, தொன்ம ஆய்வும் மேலை நாடுகளில் முதிர்ந்த வளர்ச்சி கண்டுள்ளது. என்றாலும், உலகம் தழுவியதாகிய களங்களினுள்ளும், குறிப்பாக இந்திய இலக்கியங்களே சிறந்த களமாகப் போற்றப்பட்டு வருகின்றது.

**தொன்மம் - தோற்றம் :**

தொன்மம் தெய்வ நிலையில் போற்றப்பட்டு வருகின்றது; தெய்வங்களே தொன்மங்களின்

பாத்திரங்களாயிருந்தனர்; தெய்வ நம்பிக்கை ஊற்றெடுத்த பின் தொன்மம் எழுந்ததா? தொன்மம் தோன்றிய பின் தெய்வநம்பிக்கை வளர்ந்ததா? என்ற கேள்விக்குப் பதிலளிப்பது சிக்கலானதன்று.

கற்பனையில் பிறப்பிடமாகவும், முயற்சியின் வளர்ப்பிடமாகவும், ஊக்கி சக்தியாகவும், காணமுடியாத கேள்விக்கெல்லாம் விடை கண்டறிந்து விடவேண்டும் என்ற ஆர்வத் துடிப்பின் இதயமாகவும் தொன்மம் பிறந்துள்ளது. மானிடவியல், சமூகவியல் வரலாற்றை உற்று நோக்குவார்க்கு இக்கருத்து எளிதில் புலனாகும். ஒரு வீரன் எந்த பெரிய சக்தியையும் வெல்லுகின்ற ஆற்றல் மிக்கவனாய் இருக்க வேண்டும் என்ற கற்பனையில் முருகனையும், சூரபதுமனையும் படைத்து மகிழ்ந்தனர் மக்கள். ஆசைகள் அறுத்தவனும், தீய சக்திகளை அழிப்பவனுமாய்ச் சிவனையும், அழிப்பவனும் காப்பவனுமாகிய எல்லாமாக இருக்கும் 'பிரமம்' என்ற சக்தியையும் படைத்து மனநிறைவு கண்டனர். இவ்வாறு தன்னிகரில்லாத் தலைவர்களைப் படைப்பதும், அத் தலைத் தெய்வமனைத்தும் பிரமத்துள் அடக்கம் என்ற மெய்ப் பொருளடிப்படையாகக் கொண்டும் வாழ்ந்து வந்தனர். ஒன்றையொன்று விஞ்சியாதாகிய ஆற்றல் வடிவமாய்த் தான் விளங்க வேண்டுமென்கிற பேராசையுணர்வுக்கு உருவம் கொடுத்தனர்; அவ்வுருவங்களில் தன் இலட்சியப் பண்புகளைப் பிரிக்க முடியாததாக்கிப் பேருவகை கொண்டனர்; தொன்மங்களின் இலட்சியப் பாத்திரங்களை நினைந்து நினைந்து அவ்விடத்தைத் தாம் எட்டிப் பிடிக்க முயன்றனர்.

நான் எப்படிப் பிறக்கிறேன்? எப்படி வாழ்கிறேன்? எப்படி வளர்கிறேன்? நாளை என்னிலைமை எப்படிப்பட்டதாயிருக்கும்?, ஆயிரக்கணக்கானவர்களுள் ஒருவன் மட்டும் வீரனாய், வலிமிக்கவனாய், அறிவுடையனாய் விளங்குவதற்குக் காரணம் என்ன? இன்று நடுங்கி எழுந்து பொங்கி வெடித்த பூமி பலநாள்கள், ஆண்டுகள் அமைதியாய் இருக்கிறதே! ஏன்? நீர் எப்படி வந்தது? இந்த மண்ணுலகப் பிறப்பின் இரகசியம் என்ன? இப்படி வாழ்வின் உலகின் பல அடிநிலைக் கருத்துக்களை உணர முற்பட்டதன் விளைவாக, மனிதக் குழுவின் கற்பனை-யாற்றலால் தொடக்ககாலத்தில் பல்வேறு பண்புகளிலான பழங்கதைகள் பிறந்தன.

தன் முன்னால் நடக்கின்ற எண்ணற்ற நிகழ்வுகளை அறிதொறும் அறிதொறும் பல புதிய உண்மைகளை அறிய முடியாத அறியாமையும் தன்னைச் சூழ்ந்து வருவது கருதி மனிதன் வியப்புலகில் மயங்கித் தவிக்கிறான். உலகை உணர்கின்ற அறிவு தனக்கு மிகவும் குறைவு என்று கருதியவன். எல்லாமும் உணர்ந்திருக்கின்ற ஒருவன் இருப்பான் என்றும் நம்பினான். அந்த நம்பிக்கையின் விளைவாகத் தெய்வப் பண்புமிக்க தலைசிறந்த பாத்திரங்களும், பழங்கதைகளும் தோற்றுவிக்கப்பட்டன.

### தொன்மமும் - மனிதவியலும் :

பல்வேறு இன மக்களையும் உள்ளுணர்வால் இணைக்கின்ற ஆற்றலையுடையதாய் தொன்மம் வளர்ந்துள்ளது; தொன்மம் மனித உணர்வுகளில் இரண்டறக் கலந்து வாழ்க்கையின் நோக்கத்தைப் புரிய வைப்பதற்கான முயற்சி செய்தது; வாழ்க்கையின் பல்வேறு பண்புகளை விளக்கிக் காட்டும் ஒரு விடிவெள்ளியாய்த் தொன்மம் வழிவழி போற்றப்பட்டு வந்துள்ளது. எங்கிருப்பவரையும் இணைத்துப் பார்க்கும் விழைவோடு பல்வேறு தொன்மங்கள் பல்வேறு பகுதிகளில் தோன்றி வளர்ந்துள்ளன. மனித உழைப்பு, மனிதப் பண்புகள், மனிதச் சிந்தனை ஆகியவை எண்ணிப் பாராத பரப்பளவில், எட்டிப் பிடிக்க முடியாத உயரத்தில் வளர்ந்து முன்னேற வேண்டும் என்ற உயர்ந்த எண்ணத்தின் விளைவுகள் தொன்ம இலட்சியப் பாத்திரங்கள் ஆவர்.

நம் முன்னோரின் சிந்தனை வளர்ச்சி வரலாற்றைக் காட்டும் கண்ணாடியாகப் பழங்கதைகள் விளங்கி வருகின்றன. தொடக்ககாலச் சிந்தனையின் வடிவமாகத் தொன்மம் விளங்கினாலும் அத்தொன்மம் யாவும் மனித ஆற்றல் முழுமைக்கும் வடிவம் கொடுத்துப் பார்ப்பதால், மனித சமூகம் உள்ள மட்டும் நிலைத்து வாழும் பேறு பெற்றனவாகத் தொன்மம் திகழ்கின்றது. சக்தி முழுமையும் பெற்ற ஓர் உருவத்துக்கு, தெய்வம், தேவு, இறை - உள்ளிருப்பவன், கடவுள் - உள்ளங்கடந்து அறிவு, அன்பு வயமானவன் என்ற சொற்களால் உணர்த்தினர்.

காலந்தோறும் மாறிவரும் உற்பத்திப் பொருள்களின் வெவ்வேறு வடிவத்தையும், அதன் விளைவாக மக்களிடையே மாறுபடுகின்ற புதியதாய் வளருகின்ற உறவு முறைகளின் வளர்ச்சியையும் கண்டு வியந்த மனிதக் குழுவுக்கு இந்த உலகம் எதை நோக்கிச் சென்று கொண்டிருக்கின்றது; இந்த உலக வாழ்க்கை எதற்காகச் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றது? மனித இனம் எப்படிப் பாரம்பரியமாய் உருப்பெற்று வளர்கின்றது? மனித வாழ்க்கையில் காணும் மாற்றமும், வளர்ச்சியும், தேய்வும், அழிவுப் பொருளும், ஆக்கப் பொருளும் எவ்விடத்தில் சென்று முற்றுப்பெறும்? என்பன போன்ற வியப்புக்குரிய வினாக்கள் தோன்றின. இந்த வினாக்களுக்கும் மனிதனே விடை தேடிக் கண்டுபிடிக்கும் பொறுப்புக்குரியவனாகின்றான். அக்கண்டுபிடிப்பில் தளராமல் தன்னை ஈடுபடுத்திக்கொள்ள, ஆன்மீக பலம் தேடிக்கொள்ள தக்க துணையாகவும், வழிநடத்திச் செல்லும் பாத்திரங்களாகவும் பழங்கதைகளில் படைத்துக் கொண்டனர். மரபுதொட்டு அழியாமல் நம்மைத் தொற்றிப் பற்றி வருகின்றன இத்தொன்மங்கள்.

உள்ளுணர்வாலும் அறிவாலும் மனிதன் எப்படியெல்லாம் மாறிமாறிதத்தன்னை வளர்த்துக் கொள்ள முயன்றிருக்கின்றான் என்பதன் படிமமாகத் தொன்மம் விளங்குகின்றது. தீய பண்புகளின் வடிவமாக மனிதன் விளங்குகின்ற போது, அத்தீய பண்புகளை அழித்துக் கொன்றுவிட முற்படவேண்டுமென்றும், அத்தீய பண்புகளைத் தானாக அழித்துக் கொள்ள முற்படாதபோது, வேறு ஒரு தெய்வப்பண்பு மிக்க சக்தியுள்ள ஒருவனால் அழிக்கப்படும் என்றும் நமக்கு உணர்த்துகின்ற குறியீட்டுப் பாத்திரங்கள் பல படைக்கப்பட்டுள்ளன. மனிதனின் தீயபண்புகள் அன்று முதல் இன்றுவரை மாறாமலும், மேலும் வளர்ந்து தொன்மத்தின் நோக்கத்தைப் பெருமைப்படுத்தக் கூடியதாகவும் உள்ளன.

## தொன்மம் - சமயம் - அற்புதச் செயல்கள் :

தொன்மம் சமயம் சாராமல் பிறப்பெடுத்தது; ஆனால் சமயம் சார்ந்தே அது வளர்ந்தது; வளர்ந்து வருகின்றது. இன்று தொன்மமும், சமயமும் பிரிக்க முடியாததாகவே இருந்து வருகின்றன. ஆன்மீக உலகின் கற்பனைக் கதைகளாகத் தொன்மம் விளங்கினாலும், "குறிப்பிடத்தக்க உண்மைகளையும் நன்மைகளையும் தொன்மம் (Myth) தன்னுள் தேக்கி வைத்துள்ளது."[2]

சைவ,வைணவ சமயங்கள் அருளையும், அன்பையும் அடிநிலையாகக் கொண்டு தொன்மத்தை வளர்த்தன; சமண, பௌத்த சமயங்கள் ஊழ்வினையை அடிநிலையாகக் கொண்டு தொன்மத்தை வளர்த்தன.சமண,பௌத்த சமய காலமாகிய பல்லவர் காலத்தில் தொன்மம் நிறைந்த புராணக் காப்பியங்களை அறிமுகம் செய்ததோடு, அதிகம் வளர்ந்த காலமும் அவர்களுடையதே. மணிமேகலை, தொன்மங்களின் பரப்பு முயற்சியில் முதலிடம் பெறுகின்றது. பெண் துறவறம், வேற்றுருவம் கொள்ளல், யானைத்தீப் பசி அடைதல், மணிமேகலா தெய்வம் மணிமேகலையை வான்வழித் தூக்கிச் செல்லல், முன்பிறவியை உணர்தல், உதயகுமாரன் கொலைக் காரணத்தால் சிறையிலிடப்பட்ட மணிமேகலை அரசமாதேவியால் இழைக்கப்பட்ட துன்பங்கள் யாவும் தன்னை அணுகவிடாமல் வெற்றி கொள்ளல் ஆகிய யாவும் தொன்ம வளர்ச்சியின் உச்ச நிலையைக் காட்டுவதாக அமைகின்றன.

'ஊழ்', 'வினை' என்ற குறியீட்டுச் சொற்கள் முன் பின் காரியங்களின் இணைப்பையும், ஒன்றையொன்று சார்ந்து தொழில்கள் அரைகுறையாகவும், நிறைவாகவும் நடைபெறுகின்ற தொடர்பையும், காரண காரியத் தொடர்பை முக்கியப்படுத்துவதன் கருத்துப் படிமமாகவும் விளங்குகின்றன.

ஆட்டிப் படைக்கின்ற பசிப்பிணியைப் போக்கும் தொண்டுணர்வையும், அறிவாலும், ஆன்ம பலத்தாலும் வஞ்சமிகுந்த ஒருவரால் அடைகின்ற துன்பங்களை வெல்ல முடியும் என்ற ஆன்ம உறுதிப்பாட்டையும், சமூகத்துக்குக் கேடு விளைவிக்கின்ற தீய ஒழுக்கநெறிப் பாரம்பரியம் வளராமலிருக்கப் பெண்துறவறம் கொள்ளும் அவசியத்தையும் உணர்த்தவல்ல கருத்துப் படிமங்களே மணிமேகலைத் தொன்மங்கள். சைவசமயத்தைச் சார்ந்த திருநாவுக்கரசரின் அற்புதச் செயல்கள் பெரியபுராணக் கதைகளில் இடம் பெறும் நம்ப முடியாத கதை நிகழ்ச்சிகள் யாவுமே தலைசிறந்த தொன்மங்களாகப் பேசப்படுகின்றன. திருஞான சம்பந்தரின் அற்புதச் செயல்கள் 'உருவு கண்டு எள்ளாமை வேண்டும்' என்ற கருத்தை உணர்த்தவல்லதாகும்.

## மெய்ப்பொருள் :

ஒவ்வொரு பழங்கதைக்குமுரிய விளக்கமும், குறிக்கோளும் பின்வந்த சித்தர்களாலும், சமய உரையாசிரியர்களாலும் ஊடுருவிப் பார்த்து உணர்ந்து கூறப்பட்டன. இந்தத் தொன்ம விளக்கங்கள் 'மெய்ப்பொருள்' என்று கற்பிக்கப்பட்டது. மெய்ப்பொருளாவது, என்றும் நிலைத்து நிற்கும் மனித வாழ்க்கைக்குத் தேவையான, இன்றியமையாத, அடிப்படையான ஒழுக்க நெறிகளைப் பேசுவதாகும்.

இன்றைய மனிதாபிமானம், மனிதநேயம் என்ற சொற்களின் பொருள் விளக்கமாகவே அன்பும், அருளும் புனைந்து பேசப்பட்டது. மனித நடமாட்டமுள்ளவரை, 'அன்பு' 'அருள்' என்ற பண்புகள் அழியாததும், நிலைபேறுடையதும், மனிதகுலத்தை வாழ்விக்கக் கூடியதும் ஆகும்.

ஒவ்வொரு மனிதனும் தெய்வப் பண்புடையராகத் தன்னை வளர்த்துக் கொள்ள வேண்டுமென்கிற பெருநோக்கோடு புனையப்பட்ட பழங்கதைகள் யாவும் மனித மேம்பாட்டைக் கருதியும், மனித வாழ்க்கைக்குரிய பண்பாட்டுப் பழக்க வழக்கங்களின் அடிநிலை உண்மைகளைப் போற்றியும் அமைந்தவையாகும்.

ஆணவமுள்ளவன் சர்வாதிகாரம் செய்கிறான்; மாயைக்கு உட்பட்டவன் என்றும் அறிவிலியாய் இருட்டுலகில் வாழவேண்டியவனாகின்றான்; தீவினைச் செயல்களில் ஈடுபடுபவன் பல்வேறு துன்பங்களை அடைவதுடன், பாரம்பரியமாகத் தொடர்ந்து வரும் தன் மக்களையும் அத்துன்பம் தொடர வழியமைக்கின்றான். எனவேதான் சமயமெல்லாம் மும்மலம் எரித்தலின் அவசியத்தைப் பல கதைகளின் மூலமாக மக்களுக்கு உணர்த்த முற்பட்டன.

வைணவ சமயத்தின் நேசக் கடவுளான திருமாலுக்கு மெய்ப்பொருள் பண்பின் பத்து அவதாரங்களைத் தந்து மகிழ்ந்தனர். பத்து அவதாரங்களும் பத்து காட்சிப் படிமங்களாயும், கருத்துப் படிமங்களாயும் விளங்குவன.

'தூணிலும் இருப்பான்; துரும்பிலும் இருப்பான்' என்று கூறி சிங்க முகமும், மனித உடலும் கொண்ட புதுவடிவத்தில் திருமால் அவதரித்ததாகக் கூறப்படும் பிரகலாதன் கிளைக்கதை நமக்கு என்ன உணர்த்துகின்றது. வடிவம் என்பது புதுப்புது படிவங்களைப் பெற்றும் வரலாம் என்ற உண்மையையும், உலகின் எல்லாப் பொருளும் மதிக்கத் தகுந்தவை என்ற தத்துவத்தையும் உள்ளிறுத்திப் பேசும் கதை நரசிம்மாவதாரக் கதையாகும்.

மனிதன் பல்வேறு பண்புகளின் வடிவமாய்ப் பிறந்து வாழ்ந்து கொண்டிருக்கின்றான். 1. ஆவேசமுள்ள மனிதன் - பரசுராமன் அவதாரம். 2. ஆற்றல்மிக்க மனிதன் - இராமன், கண்ணன் அவதாரம் என்பதை விளக்க வந்தவை சில அவதாரங்கள். உலகத் தோற்றம் பற்றிய தொன்மைக் குறிப்பு 'வராக அவதாரம்'. இந்த உலகம் புதையுண்டு போவதை எந்த மனிதனும் விரும்பமாட்டான்; (உலகம் நிலையில்லாதது! என்ற கருத்து பிற்காலச் சிந்தனை வளர்ச்சி) என்றாலும், இவ்வுலகம் என்றும் நிலை பெற்றிருக்க வேண்டும் என்ற கருத்துப் படிமம் 'வராகவதாரம்' ஆகும்.

அதேபோல், இந்த உலகம் கடல்கோளாலும், நில நடுக்கத்தாலும், இன்னும் பல இயற்கைத் துன்பங்களாலும் அழிய இருப்பதை முன்கூட்டியே மனிதன் உணரும் பேரறிவு மிகப் பெற்று மனித குலம் வாழ வழி வகுக்க வேண்டும் என்ற கருத்துப் படிமம்தான் 'மச்சாவதாரத்' தொன்மமாகும். சர்வாதிகாரப் போக்கு எந்தக் காலத்திலும் அழிக்கப்பட வேண்டிய ஒன்று என்ற மெய்ப்பொருளை மறைவாக உள்ளிறுத்திச் சொல்வது 'வாமனாவதாரம்'. இவ்வாறு தொன்மம் யாவும் சமய வழிப்பாதையில் நடந்து வாழ்க்கையின் மெய்ப்பொருளை உணர்த்தும் படிமமாய் விளங்கின.

### தொன்மம் - மாற்று வடிவங்கள் :

ஆன்மீகக் கனவுகளின், கற்பனையின் படிமமாகப் பழங்கதைகள் கருதப்பட்டாலும், இந்தப் பழங்கதைகளில் ஒன்று கூட சமூகவியலை விட்டுத் தொலை தூரம் செல்வதில்லை. மனிதப் பண்புகளை விமர்சிப்பதாகவும், மனித வாழ்க்கை பற்றி ஆய்வு செய்வதாகவும் உலகியலை ஊடுருவிப் பார்க்கும் ஞானக்கண்ணுடையதாகவும் தொன்மங்கள் தோற்றமளிக்கின்றன. மனித உளவியலையும், சமூகவியலையும் அடிநாதமாகக் கொண்டு பிறப்பெடுத்து வளர்ந்து வருகின்ற தொன்மம் மாற்று வடிவம் பெறுவதை வரலாற்றால் தடுத்து நிறுத்த முடியாது. வாழ்வியல் பண்புகள் மாறமாற, மக்களின் அறிவு, அறிவியலைச் சார்ந்தே வளர்ந்து வர தொன்மத்தின் வடிவமும் எழுத்தாளர்களால் மாற்றிப் புனையப்படுகின்றது. சமயம் சார்ந்தே வளர்ந்த தொன்மம், இன்று அறிவியலைச் சார்ந்தும், பகுத்தறிவின் துணையோடும் வளர முற்பட்டுள்ளது. இன்றைய சமூகவியலின் வளர்ச்சியையும் மாற்றத்தையும் வலிய ஆதாரமாகக் கொண்டு மாற்று வடிவப்படுத்திக் காட்டிய பெருமை புதுமைப்பித்தனுக்கும், பாரதிக்குமே உண்டு என்று சொல்லலாம்.

### பாரதியின் பாடல்களில் தொன்மம் :

பல்வேறு வடிவங்களில் பாரதி பக்திப் பாடல்களைப் பாடியிருப்பினும் எல்லா வடிவங்களுக்கும் மூலமாகச் 'சக்தி'யைக் கொண்டு வழிபட்டார். அந்தச் சக்தி பெண் வடிவமானதால் தன்னைச் சுற்றி வாழ்ந்த பாரத மக்களின் ஆன்மீக ஆசை என்னவென்பதற்கு வடிவங்களைத் தந்தார்; 'பாரத தேவி' என்றும், 'சுதந்திர தேவி'என்றும், 'பராசக்தி' என்றும், 'பாஞ்சாலி' என்றும் வடிவம் புனைந்து காட்டினார் பாரதியார்.

பக்திப் பாடல்கள் யாவும் பழைய தொன்ம நம்பிக்கைக்குப் புதிய மெருகூட்டுவனவாகும். பழைய தொன்மங்கள் முற்றிலும் தெய்வத்தையே நம்பிப் பேசப்பட்டவை; தெய்வம் என்ற உருவத்துக்குத் தன்னை மக்கள் அர்ப்பணித்துக் கொண்டதாகப் புனையப்பட்டவை. பாரதியின் பக்திப் பாடல்கள், "தூணிலும் இருப்பான்; துரும்பிலும் இருப்பான்" என்ற சமய மெய்ப்பொருளடிப்படையில் பாடப்பட்டனவாக இருந்தாலும், 'அன்பே சிவம்', 'அறிவே சிவம்', 'மக்கள் தொண்டே மகேசன் தொண்டு' என்ற அடிநிலைக் கருத்தின் பாற்பட்டதாகும். மறைபொருளாய் மெய்ப் பொருள் தொன்மத்தில் பேசப்படுகின்றது; பாரதியின் பாடல்களில் நேரடியாய் மக்களின் கருத்துப் படிமங்கள் உணர்த்தப்பட்டன.

கண்ணன் பாட்டு அனைத்தும், கண்ணனுக்குப் புதிய அவதாரங்களைக் கொடுத்துப் பேசுவதாய் உள்ளது. கிருதயுகம் தோன்றவும், கலியுகம் மாயவும் கண்ணன் 'எங்கிருந்தோ வந்தான்' என்கிற குறிப்பு ஒரு கருத்துப் படிமமாகும். கலியுகத்தை வீழ்த்தித் தொலைக்க வழிநடத்தும் தலைவன் எந்தக் குலத்திலும் பிறப்பெடுக்கலாம்; எந்த இடத்திலும் பிறக்கலாம்; அவன் தாழ்ந்த குலமென்றும், உயர்குல மென்றும் நம்மால் உறுதிப்படுத்த முடியாது என்பதைக் குறிப்பிடுகின்றார்.

சேவகன் உறவு, புதிய உறவாகப் பேசுகிறார் பாரதி என்பது நமக்குப் புரிந்தாலும், 'ஒரு மனிதன் பலனை எதிர்நோக்காது தொண்டு செய்கிற மனப்பண்பு உடையவனாதல் வேண்டும்' என்பதே அந்தப் புதிய உறவில் உணர்த்த வரும் உண்மையாகும். தேச விடுதலைத் தாகமே இதயத் துடிப்பாகக் கொண்ட மக்களின் உளவியலை, ஆழ்ந்த உள்ளுணர்வைப் புரிந்து கொண்டு, 'பாஞ்சாலி சபதம்' என்ற பகுதியை - பாரத தேவியாக்கிப் புதிய படிம நோக்கில் பாடியிருப்பது புதிய தொன்ம உத்தியாகும். புதுமைப்பித்தனைப் போல பாரதி தன் பாடல்களில், குறிப்பாகக் கண்ணன் பாட்டிலும், பாஞ்சாலி சபதத்திலும் தொன்ம உத்தியைப் பயன்படுத்தி அணுகியுள்ள விதமும் கருத்துக்களை உணர்த்துகின்ற ஆழமும் பாரதிக் கவிஞனுக்கே கைவந்த கலையாய் அமைந்துள்ளது.

### மூலவடிவம் :

அன்றாட வாழ்வின் சரியான உண்மைகளை, மக்கள் தேவைகளைப் புரிய வைக்கும் முயற்சியில் எழுத்தாளர் பலர் ஈடுபட்டனர். ஆயினும், அவற்றை ஒரு முகமூடி வடிவமாகக் கொண்டனரேயன்றி, உண்மை வடிவம்/மூலவடிவம் தொன்மம்தான் என்ற மக்கள் நம்பிக்கையை இன்றும் நம்மால் மாற்றமுடியாதவாறு உணர்விலிருந்து பிரிக்க முடியாதவாறு தொன்மம் மக்களை வலிமையாய்ப் பற்றியுள்ளது.

### அடிக்குறிப்புக்கள் :

1. கதிர் மகாதேவன், தொன்மம், ப.1
2. மேலது, ப.17

* * *

# TAXIDERMISTS ARE NEEDED



Dhenuga

Unfit to live in the modern times, the European Lions have enclisted themselves amongst the extinct species. How did these roaring jungle kings turn unfit? While the dog and fox keep barking and yelling why did the king perish? The modern man who does not even think of this extinction, has no regrets over it.

There are taxidermists. They even seem to know a special mime language to communicate with the dead animals. They even make, by frozen-dry process, the dead animals look alive. And the jungle kings, on this reanimation, appear to be challenging the modern man. The lions which were caged by man have stopped roaring and are on display in the museum. Now none could see the European lion alive. You could even announce a Nobel Prize for getting these species alive or dead.

Creatures anxious to be enlisted among the extinct species are countless. Modern man's eyes are now set on birds and animals which have crossed the endangered stage nearing the end. The recent explosion of knowledge which touched the peak in the present century is also the origin of the danger. These animals refuse to live with the self-seeking man who never gets tired of his shameless encroachment. They were charred to extinction by his so called act of conservation. This selfish man forced the royal power kneel down before him. They vanished. Not satisfied with this, he even clipped the fluttering wings of the hovering birds. While they still managed to survive, the vultures hounded them to death. Besides Andril[1]. and Annam[2] there are many birds and animals which are extinct today. Now the European lion has joined the list. Who forced them into extinction? who lamed them? Time or Man? Why could not these creatures win over man in the current of time? Even if they could not top the list, couldn't they atleast manage to find a place in the hierarchy like the dog or the fox. Were they ashamed of even being pitched against man? Or, is it that they sought an end, the way they lived - respectable to the core? As if not content with burying these species Time seems to be enjoying itself over burning their effigies. Why so cruel is this Time? It is then inevitable that the sad end which the European lions faced will come upon some men too. The lesson taught to man by these dead lions is,

Learn to live with the Time!
Don't swim against the current!!

Who is this man swimming against the current of Time? He is now and here, anywhere and everywhere; he roars on the so called conventions; is proud of keeping up the tradition.

If it is poetry, he demands grammar, meter and other aspects of prosody. Paradoxes find themselves pitched against his verbal jugglary.

If it is music, he mourns over the absence of a strictly regulated rhythmic beats; and he is severely critical of the misbeats and variant rythms even when found effective otherwise, for they deviate from the conventions.

In painting and sculpture, he considers aesthetic only the representational works which, by convention, compare feet to lotus and eyes to spear. He feels haunted on seeing Pablo Picasso and runs for life as if chased by a witch on seeing salvador Dali. The astounding abstract human figure of Henry Moore is just a disfigured one to him. Modern Art is to him nothing more than a lump of clay. This traditionalist who cannot keep aside the Bible or Geetha sees in all these innovative experimentations only

"An evening flower
Reaching God's shoulders
Without a bath
After a congress
With the bee"

(Neelamani - "Unarthodoxy")

Even the flowers meant for worshipping, he feels, are terribly stinking. Poor man!

He shuts his mind against the liberated forces of creativity! When Impressionism, Expressionism , Cubism, Surrealism and Futurism managed to reach the time's shores, why does he try in vain to swim against this all-consuming current? Time, out of sheer pity, has only sent him to the cage and not to the scaffolds yet. He will face the same end as the European lions, if he continues to keep mourning over the dead and the dying. Taxidermists are there to process them to be exhibits.

Annam,
Andril-
now the European Lion
with these, the hardcore traditionalists will also embellish the list.

Let this swimming-against-current be a severe and cold warning.

## Foot Notes

1. A bird of the SANGAM Age, known for an inseparable companionship with the mate .
2. A Swan of the SANGAM Age which could take in milk leaving out water.

* * *

# COMPARATIVE LITERATURE: ITS SCOPE AND OBJECTIVES

Dr. G. Subramaniyan

Ours is a woefully divided world and the divisive trends assume alarming proportions as days pass by. The emergence of parochial literature, besides numerous other factors, tends to divide people further. Even national literature is believed to aggravate the present conditions of disharmony among us. Commenting on its harmful effects, K.Chellappan writes, "The concept of a self-enclosed national literature is becoming outmoded as well as harmful even from the aesthetic point of view. It tends to blur our vision, atrophy our attitudes and conventionalise our responses."[1] Chauvinistic trends, though appearing to be wholesome, adversely affect the larger interests of the human race as a whole. They incite people to look for dissimilarities rather than of similarities between people geographically and culturally apart. The resulting consciousness of dissimilarities sows the seeds for disharmony and disintegration among human beings.

In a context like this, comparative studies of literature go a long way in bridging the various insular cultures and providing for a cultural confluence which might usher in the prospect of a united world. Besides being a tool for national and international integration, Comparative studies of literature are valuable from a cultural point of view also. They liberate literature from linguistic and cultural parochialisms and seek to establish the unity of literature and thereby the unity of man. Discussing the objectives of the study of Comparative Literature, Wellek and Warren maintain, "It (the study of Comparative Literature) asks for a widening of perspectives, a suppression of local and provincial sentiments, not easy to achieve. Yet literature is one, as art and humanity are one."[2] Great comparatists like Rene Wellek and Etiemble also believe so strongly in the unity of all literary creation and experience that they have approached Comparative Literature from an international perspective.

Assuming that the basic human traits are the same everywhere, the literature of one region can be considered essentially comparable to that of another. And it is this comparability that serves as the soul and sustenance of comparative literature as a discipline. Goethe's concept of a world-literature is an all - embracing one. The variations in places and times or origions of literary works are not to be allowed to interfere with any attempt to achieve homogeneity. The need for such an attempt is keenly felt all around, even as humanity is getting more and more divided because of fissiparous tendencies, parochial, regional, linguistic, political and cultural. Everyone finds himself acutely concerned with how different he is from others rather than with how much he has in common with them.

In a context like this, an awareness of the unifying features assumes significance and the need for an attempt toward an overall homogeneity is acutely felt everywhere. As A.A. Manavalan observes, "It is being realised everywhere and by every lover of

humanity that all nations with their various cultural spectra should come together, converge and merge into a more homogeneous whole . . . . . Many are the faculties of human pursuit that are now engaged in such cross-cultural activities. Literature is one of such human pursuits that can achieve such cultural synthesis . . . . "[3] Once such a synthesis is realized, comparisons between works would become more meaningful and effective at once.

Literary works cannot acquire significance so long as they are not treated as parts of the larger literary tradition which is a continuum. Such a formulation of the desired relationship of the individual literary piece to the literary tradition is not merely historical but essentially aesthetic. To quote T.S. Eliot, "No poet, no artist of any art has his complete meaning alone. His significance, his appreciation is the appreciation of his relation to the dead poets and artists. You cannot value him alone; you must set him, for contrast and comparison, among the dead. I mean this as a principle of aesthetic, not merely historical criticism."[4] Any fruitful study of a literary work is thus possible only when it is related to the literary continuum of which it is a part and also compared with the literary products not only of its age but of previous ages as well.

The study of Comparative Literature makes certain other demands as well. It calls for linguistic proficiencies of a high order. A comparatist has got to have command of several languages. Knowledge of the classical languages in particular will render his job more meaningful and rewarding. He should be able to overcome all kinds of provincialism and regional fanaticism. He should shed prejudices and he should be able to arrive at impartial judgements in a thoroughly objective way.

Being an inter-disciplinary subject, Comparative Literature transcends national and regional boundaries. It draws sustenance from the truth that producers of great literature do not live in isolation, but catch light and heat from each other's thought. As such the comparatist should keep an open mind in all his literary pursuits and remain directed toward the ideal of the unification of all literatures into "one great synthesis, where each nation would play its part in a universal concert"[5]. Even while taking note of the cultural variations portrayed in different literary works, he should trace and identify the unity-in-diversity which manifests itself in several forms.

Further, comparative studies need not be confined to instances of influence, historically evidenced; they can be analogical too. Such analogical studies also can identify and unearth affinities between works chronologically and geographically wide apart. Writing on the aesthetic rewards that such studies would bring in, V.Sachithanandan observes, "A comparative study of two authors or their works, belonging to two different cultures, separated by time and space with no imaginable influence on each other, can be aesthetically rewarding, provided it is done on the basis of accepted methodology and not easy impressionism".[6] A closer and methodical study of the apparently dissimilar cultures of different regions, like those of the East and the West, Sometimes leads to interesting findings. To quote K. Yamagiwa, ". . . . rich rewards may come from a comparison of the West, whose ways of thought and expression have largely developed out of Hebraic-Christian and Graeco-Roman traditions, and the East, which is shaped mostly by ways of thought that are Hindic - Buddhist or Confucian-Taoist in origin. . . . "[7]. Human values are basically the same, whether they pertain to the occident or the orient. As such, there can be nothing surprising about the affinities that are identified by the comparatist in the literary works that portray the

cultures of the different parts of the world. The secret of such affinities that exist eternally between great literary works is thus to be traced to the 'Universals' which are for ever free from the shackles of time and space.

* * *

## Foot Notes :

1, K. Chellappan, Shakespeare and Ilango as Tragedians : A Comparative Study (Thanjavur : Tamil University, 1985), 3.

2. Rane Wellek and Austin Warren, Theory of Literature (1949; rpt. Harmondsworth : Penguin, 1968), 50.

3. A.A. Manavalan, Epic Heroism in Milton and Kamban (Coimbatore : Kamban Trust, 1983), 1.

4. T.S. Eliot, "Tradition and Individual Talent," in 20th Century Literary Criticsm, ed. David Lodge (Essex : Longman, 1972), 72.

5. Rene Wellek and Austin Warren, 48.

6. V. Sachithanandan, "Comparative Literature : Definition, Scope and Method, "52. Unpublished Paper presented at the Summer Institute in Comparative Literature, held at Madurai-Kamaraj University in May-June, 1984.

7. Quoted by K. Chellappan, op. cit., 125.

* * *




ஏ.டி.எம். பன்னீர்செல்வம்.

தேவ நட்சத்திரங்கள்
தெருவோடு போனபோது
இந்த
வசந்த நிலா மட்டுமென்
வாசலுக்குள் வந்தது!

தென்னங் கீற்றுகளில்
காற்று
தலைவாரிக் கொண்டபோது
இந்தத்
தென்றல் மட்டுமென்
நெஞ்சைத் தொட்டது!

கலங்கரை விளக்குகள்
கதவடைப்பு செய்தபோது
இந்தத்
துறைமுகம் மட்டுமென்
நங்கூரமானது!

பாலைவனங்களில்
கால்கள் இடறிய போது
இந்தப்
பாவேந்தர் தோப்பில்தான்
பழரசம் கிடைத்தது!

எங்கள்
கோபுரங்களெல்லாம்
நிலைகுலைந்தபோது
இந்தக்
குறிஞ்சித் திட்டுதான்
குடியேற்றம் தந்தது.

இருட்டு மண்டபங்களின்
எழுத்துக்கள் விழித்தபோது
இந்த
அழகின் சிரிப்பே
அந்தகம் களைந்தது!

வசந்தச் சோலைகள்
வழிதவறிப் போனபோது
இந்தக்
குடும்ப விளக்கே
கூட்டிக் கழித்தது!

மான உணர்வுகள்
மௌனம்
அனுஷ்டித்தபொழுது
இந்தக்
கவிதை வேங்கைதான்
கர்ச்சிக்கத் தொடங்கியது!

வருடப் பஞ்சாங்கங்கள்
வாலிபமாய் இருந்தபோது
மொழி-
பாஷைகளின் கைத்தலத்தில்
வழி நடந்தது....

முடிவுக்குக் காத்திருந்த நாளில்
நல்லவேளை-
விடிவே வந்தது.....

அது
தமிழுக்கு அமுதென்று
பேர் சொல்லி
பேர் சொல்லி
தாலாட்டே பாடியது....

அடடா
தாலாட்டு வந்த பின்
நாமே
சத்தியத்தில் கண் திறந்தோம்!



ஆம்
இருபதாம் நூற்றாண்டுக்கு
மீசை முளைக்காத
முந்தாநாளில்....

பால்ய விவாகம்
பவனியின் தேரில்
பாடித் திரிந்த பொழுதில்.....

மாங்கல்யப் பந்தலில்
சிற்றில் சிதைக்கும்
சிறுபிள்ளை விளையாட்டு....

குருத்தோலைகளை
பழுப்பிலைகளோடு
ஒட்டுப்பதியவிடும்
குறும்புப் பந்தயம்....

ச்சீ....
நரைத்த தலைகளுக்கு
கறுத்த கூந்தல்
தலைகுனியும்
கைத்தல அதிசயம்.....

அய்யகோ....
இவைகளின் பரிணாமம்
இன்னொரு சந்ததியல்ல....
இறந்தவனுக்கொன்று
இருப்பவளுக்கொன்று....
ஆக
இரண்டு சமாதிகளின்
அடிக்கல் நாட்டு விழா!

அம்மம்மா....
விதவைப் பட்டத்தில்
பிஞ்சுகள்
உதிர்ந்து போனது.....

வெள்ளைக் கோயிலுக்குள்
ஆசைகள்
விக்கிரகமாய்....

விபரீதக் கோட்பாட்டில்
பெண்ணடிமை
நோய் வளர்ப்பு.....

குங்குமமில்லாத
அவலப்பொட்டுகளை
முதலாவதாய்ச் சொன்ன
புதுவை வாத்தியார்!

ஆம்
இந்தப் பீரங்கியின்
பல்லவியால்தான்
பலாவின் துயரம்
பலரை அடைந்தது.....
நிலாவின் குளிரில்
நிஜங்கள் தெரிந்தது....

விதவைக்
கதையைத் திருத்திய
இந்தக் காவியம்....
சட்டங்கள் சிரிக்கையிலும்
சமநீதி பாடியது!

ஆம்
இவரே
கைம்மைத் துயரம்
கரைத்த திராவகம்....
கட்டாயத்
தற்கொலைகள்
கலைத்த சங்கீதம்....
இடிமுழக்கங்களால்
ஏகாந்தம் இசைத்தவர்.....

தெய்வீகம்
கீர்த்தனைகளானபோது
மனிதர்களை
கவிதையாக்கியவர்.....

மூடப்பழக்கத்தின்
முடைநாற்றம் நீக்கவந்த
மூர்க்க நாயனார்!

ஒரு
ஞானச்சேரியில்
அந்தக்
கிறுக்குச் சூரியன்
கண்டெழுந்த
தெற்குநிலா!

* * *

# எங்கள் பாவேந்தன்

பாவலர் சி. இறையரசன்

புதுவையிலே பூத்திட்ட புரட்சிமலர்க் கொத்து!
புனைந்திட்ட பாவெல்லாம் பூந்தமிழ்த்தாய் சொத்து!
புதுமைகளை உருவாக்கப் புனைந்திட்டான் பாட்டு!
புன்மைகளைப் போக்கிடவே அதில் வைத்தான் வேட்டு!
எதுகையுடன் மோனையெலாம் எக்காளம் போடும்!
இனிதான அணிநயங்கள் ஏறியமர்ந் தாடும்!
மதுவுண்ட வண்டாவோம் அவன்பாக்"கள்" உண்டால்!
மறுப்பேதும் இதிலுண்டா? கூறுங்கள் கண்டால்!

பாரதிக்குத் தாசனெனப் பெயர்போட்டுக் கொண்டான்!
பாரதியார் கேட்டவுடன் இசைப்பாட்டை விண்டான்!
பாரதிரப் பகுத்தறிவுப் பாமுழக்கம் செய்தான்!
பாட்டென்னும் வாள்சுழற்றிப் பாழ்மைநெறி கொய்தான்!
ஈரோட்டுப் பாதையிலே ஏறுநடை போட்டான்!
இன்தமிழ்போல் மொழியுண்டா? என்றுலகைக் கேட்டான்!
கூரான அம்பினைப்போல் கொள்கைப்பா தந்தான்!
குள்ளநரிச் செயல்புரிவோர் குலையுருவ வந்தான்!

உலகப்பன் பாட்டுக்கோர் ஒப்பும்பாட் டுண்டா?
உலகத்தில் எவர்படைத்தார்? உள்ளதெனில் கொண்டா!
நலமிகுந்த இசையமிழ்தை நாளெல்லாம் பாடு!
நற்றமிழே இசையரசி எனத்துள்ளி ஆடு!
வலிவுடைய தொழிலாளத் தோழர்தம் பாட்டு!
வதைக்கின்ற முதலாளி வம்பருக்கே வேட்டு!
பொலிவுடைய பாத்தொகுதி முக்கனியின் சாறு!
புரட்சிப்பா வேந்தன்நம் தமிழினத்தின் பேறு!

சுப்ரமண்யர் துதியமிழ்து பாடியது முன்பு!
சுத்தப்பொய் தெய்வங்கள் எனக்கண்ட பின்பு;
அப்பனவன் தில்லைநட ராசனையும் தேடி
அரங்கத்தில் பள்ளிகொண்ட நாதனையும் ஓடி
தப்பாமல் பீரங்கி வேட்டாலே சுட்டுத்
தகர்க்கவென்றே முழக்கமிட்டான் பகுத்தறிவைத் தொட்டு!
ஒப்பில்லாப் புரட்சிவரி உலுத்தருக்கே அச்சம்!
ஓதியஇவ் வரிகளவன் பட்டறிவின் உச்சம்!

பொதுப்படையாய்ப் பிறமொழிச்சொல் கலந்திட்டான் முன்பு!
பூந்தமிழில் பிறமொழிச்சொல் களைந்திட்டான் பின்பு
எதுவேண்டும் அத்தனையும் அவன்பாட்டில் உண்டு!
எந்நூலைப் படித்தாலும் இனிக்கும்கற் கண்டு!
மதிபோலும் குளிர்நடையை மணித்தமிழில் ஏற்றி,
மாண்புடைய பாபடைத்தான் தனித்தமிழைப் போற்றி!
பொதுவுடைமை பூப்பதற்கே புதுப்பாக்கள் தந்தான்!
பொருள்பதுக்கித் தான்துய்க்கும் புல்லரினை நொந்தான்!

தன்மானம் பகுத்தறிவில் தாழாத வேங்கை!
தமிழரெலாம் படித்துயர்வீர் அவன்பாட்டின் பாங்கை!
தென்தமிழின் உயர்வுக்கே பாடுதமிழ் நாவான்!
தீந்தமிழர் நெஞ்சுக்குள் வாடாத பூவான்!
பெண்குழந்தை ஆண்குழந்தை தாலாட்டுப் பாட்டு!
பண்ணமைத்துப் பாடுங்கால் கிறுகிறுப்போம் கேட்டு!
பன்னூலும் பாவியமும் பார்வியக்கப் பாடிப்
படைத்திட்டான் மங்காத புகழ்மலர்கள் கோடி!

* * *

# ஒரு நாள்.... திரு நாள்:

பாவலர் இளஞ்சித்திரன்

புரட்சிக் கவிஞர் பாரதி தாசன்
கரடு முருடாய்ப் பார்வைக் கிருப்பரோ!
முரட்டுத் தனமாய்த் தான்நடை நடப்பரோ!
முன்சினக் காரரோ; முகம்கடுப் பவரோ!
நின்றெதிர் அவரைப் பார்க்கவும் கூடுமோ?
கருப்புச் சட்டைக் கட்சிய ராமே!
நெருப்பைக் குரலில் வைத்திருப் பாரோ!
அரைக்கால் அரைக்கைச் சட்டைப் பையனாய்
இருக்கையில், பத்தாம் வகுப்புப் படிக்கையில்
இப்படி எல்லாம் நினைப்பேன்! கவிஞரை
எப்படி யாகில் பார்க்கத் துடிப்பேன்!
வாய்ப்பும் கிட்டுமோ? என்றுயிர் ஏங்கும்!
வாய்ப்புக் காக ஏங்கித் தவிக்கையில்
ஒருநாள் வந்தது திருநாள் போல!
பெருநாள்! பெரியார் பிறந்த நாள்விழா!
கடலூர்த் தெருக்களில் கொடி! தோ ரணங்கள்!
அடலரும் பெரியார்க்கு அணிதேர் ஊர்வலம்!
புரட்சிக் கவிஞரும் வருகிறார் அதிலே!
அறிய மகிழ்ந்தேன்! பாவலர் அவரைப்
பார்க்கவும் பேசவும் விழைந்ததென் பாட்டுளம்!
அதனால்,
அறவுணர் வினனாய் அடியேன் தானே
திராவிடக் கழகச் செயலர் இல்லம்
வந்தேன்! என்னே! என்னே! ஆசூழ்!
செந்தேன் புலவர், செந்தமிழ் வேந்தர்
திண்ணையில் - குறட்டில் சம்மணம் போட்டுக்
கண்களை வீதியில் காற்றாட விட்டே
அமர்ந்திருந் தார்ஓர் அரிமா எனும்படி!

சுமந்தஎன் நினைவுச் சுமையை இறக்கிப்
பார்த்தேன்; பாவலர் அவரைப் பார்த்தேன்!
கூர்த்த விழிகளைஅகலத் திருத்திப்
பார்த்தேன்;அவரையே அள்ளி விழுங்கினேன்
வேர்த்தும் போனதென் உடல்முகம்! மெல்லப்
பக்கம் வந்தவர் பார்வையில் பட்டேன்!
மிக்கநல் மீசையும் மிடுக்காய்த் தெரிந்தது!
பீடுடன் பெருமிதம் பூத்துச் சிரித்தது;
நாடுடன் மொழியவர் கண்களில் இருந்தது;
சுற்றிச் சுற்றியே வந்தேன்; அவரைத்
தொட்டுப் பார்க்கவும் ஆசை வந்தது;
என்னை அவர்பார்த் திருக்க வேண்டும்
"என்னா? என்ன! வேண்டும்?"என் றார்காண்!
பூரித்தது! அடடா, தோள்கள் புடைத்தன!
ஏறிட் டவர்முன் என்கை யிருந்தகை
ஒப்பச் சுவடியில் ஒப்பம் கேட்டேன்!
ஒப்பமா? ஏன்உனக் கெதற்கது?" என்றார்!
திட்பமாய் நானும், "கவிதைகள் எழுதுவேன்!
ஒட்பமாய் உங்கள் போல்புகழ் பெறணும்!
கையொப் பமதை நெஞ்சினில் வைப்பேன்!
ஐயா, உங்களை யதில்பார்த் திருப்பேன்!"
என்றேன், என்னைப் பார்த்தவர் சொன்னார்!
நன்றே நானதை மறைபோல் கேட்டேன்.
"படிக்கும் வயதில் கவிதையா? நன்றாய்ப்
படிக்க வேண்டும்! கவிதையில் தமிழைத்
தமிழனை மறக்கா தெழுது! தம்பிநீ!
தமிழனின் விடுதலைக் குயர்வுக் கெழுதுக!
இந்தா என்கை எழுத்து! சுவடி
இந்தா!" என்றெனை அனுப்பினார்! அப்போ(து)
இருந்த என்மனமோ வானில் பறந்தது!
பொருந்தக் கடலுள் மூழ்கி வலம்புரிச்
சங்கெடுத் தான்போல் தற்செருக் கடைந்தது"
சங்கென முழங்கு பாவேந்தனின் வாழ்த்தில்
ஏவலன் ஆனேன் என்தமிழ்த் தாய்க்கு!
பாவல ரேறு பெருஞ்சித் திரனார்
கைப்பட் டொளிர்கின் றேன்;என்
மெய்த்தொண் டென்றும் தனித்தமி ழுக்கே!

* * *

# பாரதிதாசன் கவிதை
## பாரோங்கும் நாளதை
# வரவேற்பாய்! தமிழா!

பாட்டாளி ஆ. பழனியப்பன்.

கண்ணினில் புலியின் வீச்சாம்; கவிதைக்
கண்ணியில் கனலின் தெறிப்பு, கருத்தில்
எண்ணத்தில் எரியும் ஈட்டி, இழிவினைச்
சாடிடும் போதினில் ஏவுகணை; எங்கும்
மண்ணில் ஏழ்மையில் மடிவோர் நிலைகண்டே
புவியின் சீற்றம், மையலால், தமிழில்
பண்ணிய கவிதையில் மழையின் வீழ்ச்சி
பாரெங்கும் வாழ்ந்திடப் பாடியோன், பாவேந்தன்.

பாவேந்தர் பாட்டினைப் பாடியோர்
பாய்புலியாய் வென்றிடுவார், பாரினிலே!
பூவேந்தும் பூவையரும் கொடுமைகள்
தொலைந்திடப் பூகம்பமாய், வெடித்திடுவார்!
பாவேந்தும் நிலைவரினும், தமிழரென்றும்
தமிழேந்தும் நிலையாலே வென்றிடுவார்!
ஆவேந்தும் பால்போன்றே இனிக்கும் அவன்பா!
அவனிக்கே புரட்சிக் கவிஞனடா; போற்றிடுக!

பாரதி தாசன் என்பான் கவிதை
பாரோங்கும் நாளதை வரவேற்பாய் தமிழா!
ஊரதில் விழாக்கள் உருப்படா உரைகள்
உண்மையில் பயனிலை உணர்வாய் தமிழனே!
சுடாதிகம் உன்னறிவில் கொள்ளல் வேண்டும்
கொள்கைதனை வாழ்வதனில் ஏற்றல் வேண்டும்!
சீரேதும் வாங்காதே பெண்கொள் மணத்திற்கு
சீரதிகம் தமிழுக்குச் செய்யடா மடையனே.



புரட்சிக் கவிஞனுக்கு நூற்றாண்டு விழாக்கள்
புதுப்புது வகையாய் புவியினில் பூத்திடுக
மறத்தமிழ்க் கவிஞன் மாப்புலவன் புரட்சிக்
கவிதனை உள்ளூர்க் கனியென உரைத்திடுவார்;
மறுத்தே அவனையுலக மன்றினில் ஏற்றிடுவோம்,
மற்ற மொழிகளில் புரட்சியார் பாடல்களை
மறுக்கின்றார் அவனுக்கே நோபல் பரிசு முதல்
மண்ணுலகப் பரிசுகளாம் மக்கள்தாம் அவன் பரிசு;

கண்ணின் புரட்சியதால் காதலே தோன்றிடுமே!
கலையின் புரட்சியதால் காவியமே தோன்றிடுமே!
பெண்ணின் புரட்சியதே சிலம்பின் காவியமாம்
பின்னவளின் சிலம்பாலே பாண்டியனே மாண்டானே!
எண்ணின் புரட்சியதே இப்புவியின் அறிவியலாய்
ஏற்புடைய கணிப்பானாய், ஏவுகணையாய்ப் பாயுதடா!
பண்ணின புரட்சியதே பைந்தமிழர் பண்பாடாம்
பாமரனே, புரட்சிசெயில் பாரகமே பொதுமையடா!

* * *



# பாவேந்தர் வாழ்க

ந. இராஜாத்தி

ஓங்குபுகழ் புரட்சிக்கவி பாரதிதாசனே - உன் புகழை
ஈங்கு எடுத்தியம்ப விழைகின்றது - சிறியேன்
ஏங்கும் உள்ளத்து எண்ணங்கள் - மலர்ந்து ஒரு
பாங்கானதோர் பாமாலையாய் வடிவம் கொண்டது.

பாரதியினிடத்து ஈடுபாடு கொண்டது உன் கவிதைஉள்ளம் - நீ
பா ரதமேறி இலக்கியவீதியிலே பவனிவரும் வேளையிலே - உன்
பா அழகில் மயங்காதார் யாரே
பாரதிதாசனாய் கனகசுப்புரத்தினமே மாறியதில் வியப்பே இல்லை.

அடுக்கடுக்காய் உவமைகளை அள்ளி நீ வழங்கும்போது
மிடுக்கான 'அழகின் சிரிப்பு' அலைவீசும் அவனியெங்கும்
பாவலர்க்குப் பரிசு வழங்கிய மன்னருண்டு பாரினிலே
நாவலனாய் நானிலத்தில் நீ'பாண்டியனுக்குப்பரிசு' அளித்ததென்னே

நல்லதொரு குடும்பமே பல்கலைக் கழகமாகும் என்று
நல்லதொரு 'குடும்ப விளக்கினை' நீ ஏற்றி வைத்தாய்
விளக்கினை ஏற்றினால் இருளகலும் - குடும்ப
விளக்கினை ஏற்றி குடும்பப்பெண்களின் அறியாமை இருள் போக்கினாய்

புரட்சிக்கவி என்றுஉன்னைக் கூறியது உண்மை - உந்தன்
'புரட்சிக்கவி' யினிலே புதுமைகள் எத்தனை மலர்ந்தன
சமுதாயச் சிற்பியே சீர்த்திருத்தச்செம்மலே - நீ பாடிய

பாட்டாளியின் பெருமை முதல் குடியாட்சி மகிமை வரை
பெண்மையின் மென்மை முதல் காதலில் புதுமை வரை
கல்வியின் பெருமையும் கரும்பாய் இனித்ததால் தானோ

பல்கலைக் கழகமொன்று உன்பெயரால் அமைந்ததோ இந்நாளில்
பல்கலைகளும் வளர்ப்பதையே முதன்மையாய்க் கொண்டதோ
அன்று 'எங்கெங்கு காணினும் சக்தியிலே' தொடங்கியது உன் கவிதை
இன்று எங்கெங்கு பாக்களுண்டோ அங்கெல்லாம் பாவேந்தனின்
என்றென்றும் மங்காப்புகழ் கொண்ட கவிதைகளுண்டு
குன்றின் மேலிட்ட விளக்கென ஒளி வீசுவதுண்டு

ஆழ்மனதின் கருத்துக்களைப் பாவடிவில் எளிமையாய்
ஆணித்தரமாய் ஈங்கு எடுத்துரைப்பார் யாருண்டு உன்போல
ஆனாலும் நான் உரைப்பேன் என்றென்றும் உந்தன்
ஆணிப்பொன் பாமாலையில் மொய்க்கும் வண்டென்று.
வாழ்க பாவேந்தர்! வளர்க அவர்தம் புகழ்!

* * *

# நாவலனைப் பாடுகின்றேன்!

நீலாம்பிகை சுப்பய்யன்

செங்கரும்பின் சாறே! சுவைதேனே! செந்தமிழே!
சிந்தை மயங்க செவியினிக்க நினைவினிக்க
பாடித்துதித்தேன் பைந்தமிழே என்தாயே
பணிகிறேன் உன் பொற்பாதம்!

உடலிடை புற்றுத் தோன்றி ஊனினை அழித்தபோதும்
தமிழொன்றே அமுதமாகும் தமிழினால் சுரமும் போகும்
தமிழுக்கு நிகரேதுமில்லை - தனித்தமிழுக்கு இணையான உணவேது மில்லை
தமிழுக்கு அழிவேதுமில்லை - எழில் தமிழுக்கு நிகரான அழகேதுமில்லை
தமிழைப்போல் சுகமானதில்லை - அமுதத் தமிழுக்கு ஒப்பான சுவையேதுமில்லை
தமிழினும் உயர்வானதில்லை - தேன் தமிழுக்கு நிகர் இனிமை வேறேது மில்லை
தமிழ் பாடி தமிழ்மொழியைக் காத்து அமுதத் தமிழுக்காய் புவி வாழ்ந்த
பாவேந்தா! போற்றி!

தமிழுக்கு அமுதென்று பெயரைச் சூட்டி
தமிழர்க்கு வீரமெனும் உணர்வை ஊட்டி
பாண்டியன் பரிசு எனும் தேரை ஓட்டி
பாரதிக்கு தாசனாய் ஆனான் தமிழ் நாட்டில்.
காணிநிலம் பாடிவைத்த சுப்பய்யாவின்
கவிதை நய மயக்கத்தால் தாசனானான்
தோணியிலா நடுக்கடலில் துடித்து நின்ற
தூய தமிழ் மக்களுக்குத் துணையுமானான்
வேலியிலா தமிழ்ப்பயிரை வீணாய் மேய்ந்த
வீணர்களை தமிழ் முழங்கி வெற்றி கொண்டான்
பாலையையும் தென்றலையும் தமிழால் பாடி
பைந்தமிழின் புகழதனை புவிக்கே சொன்னான்.

அழகின் சிரிப்பு சொன்னான் அவலத்தின் கொடுமை கண்டான் - தமிழ்
அணங்கினைத் துணையாய்க் கொண்டான் அவனிக்கே பெருமை சேர்த்தான்.
புவியாளும் மன்னவனாய் பூவுலகில் பிறந்திருந்தால்
கவியாண்ட பெருமகனாம் கனக சுப்புரத்தினத்தை
பொற்றேர்மிசை அமர்த்தி பூவுலகம் சுற்றிவர
எற்றே இவன் மாண்பு எங்கணுமே இல்லையென
சுற்றோரும் மற்றோரும் கனகமணி மாலையிட
பெற்றோர்போல் உவகை பெற்று பேரின்பந்தனைக் கண்டு
இமயவடவரையை இருகரத்தால் ஏந்திவந்து
எழில் பதத்தில் பரிசாக ஏற்க எனப் பணிந்திடுவேன்.
சேற்றோடு உறவுகொண்டு செகம் உய்ய உழன்றுவாடும்
பாட்டாளி மக்கள் வாழ்வு பரிதாபம் அந்தோ! நாட்டும்
நாற்றோடு வளரும் அவர்தம் நலிவுதான் அவர்க்கு சொந்தம்
மாற்றுடையின்றி கந்தல் மானத்தைக் காக்கும் வெய்யோன்
கூற்றினும் கொடியதான கொடும் பசி அவரைச் சாருமென
பாட்டாளி மக்கள் வாழ்வைப் பாடிய புதுவைக் குயிலாம்
நூற்றாண்டு கண்டுவிட்ட பாவேந்தன் வாழ்க என்று
எதுகை மோனையெனும் ஏதுமிலா தனிப் பெருமை
கவிதை படைத்து, கனித்தமிழை நெஞ்சிருத்தி
நானனவனைப் பாடுகிறேன்! நற்றமிழால் வாழ்த்துகிறேன்!

* * *

# யார் இந்த பாரதிதாசன்?

சாமி. பாலையா

தந்தை பெரியாரின்
தத்துவக் கப்பலை
மனித மனங்களில்
செலுத்திய மாலுமி.

*

பாரதியின்
படைப்புகளிலேயே
தலையாய படைப்பு.

*

உணர்ச்சியின் உள்ளடக்கம்
வளர்ச்சியின் வார்ப்பு
எழுச்சியின் இதயம்
புரட்சியின் தாய்வீடு
பாவேந்தன் பாட்டென்றால்,
மறுமலர்ச்சிச்
சிந்தனையாளர்களும்
மறுப்பின்றி
ஏற்றுக்கொள்வார்கள்.

*

தாலாட்டுப் பாடலில்
தமிழுணர்வை மட்டுமல்ல,
தன்மான உணர்வையும்
ஊட்டியவன்.

*

சாதிக் கொடுமையைச்
சாடியதோடு மட்டுமல்ல,
கவிதைச் சாரதியாலே
ஓட்டியவன்.

*

பலாவின் சுவையையும்
பைந்தமிழ்ச் சுவையையும்
பாடலின்
சுவையுடன் கூட்டியவன்.

*

அனைவர் மனத்தையும்
ஆட்கொள்ளும் தகுதி
கவிதைக்கு உண்டென்று
காட்டியவன்.

*

கல்வியறிவைக்
கட்டாயமாக்கித்
தமிழ்க் கவிதைச் சட்டம்
இயற்றியவன்.
மற்றைய நாட்டு
கவிஞரை விடவும்
இயற்கையைப் பாடிட



எங்களால் முடியும்

என்பதை

நிலைநாட்டியவன்.

*

சீர்திருத்தக் கவிதைகளை

அவன் செய்தானில்லை

செதுக்கினான்.

*

இவன்

பாட்டில் குறைகாண

எவ்வளவு முயன்றும்

முடியவில்லையே

என்று ஒரு சாரார்

குறைப்பட்டுக் கொள்வதுண்டு.

*

சிலப்பதிகாரத்தின்

சீர்மையை யறிந்து

கண்ணகி புரட்சிக் காப்பியமும்,

மணிமேகலையின்

மகத்துவம் அறிந்து

மணிமேகலை வெண்பாவும்,

புரட்சியுணர்வுடன்

இவர்

படைத்த போர் முரசங்கள்.

*

காதலுக்கு

வழி வைத்துக்

கருப்பாதை சாத்த

அன்றே

சொன்ன அங்க மருத்துவன்.

*

சிந்திக்கத் தெரியாத

மனித மனங்களைச்

சிந்திக்க வைத்தவன்.

*

கோயில் தன்னைக்

கூடாரமாக்கிக்

கொள்ளையடிக்கும்

கும்பல் தன்னைச்

சந்திக்கிழுத்து

கவிதைச் சவுக்கால் அடித்து

சரித்திரம் படைத்தவன்.

*

போலி மாக்களின்

புகழ்பாடும் பழக்கத்தைக்

கனவிலும் கூட

கற்றுக்கொள்ளாதவன்.

* * *



